# இதழாளர் பெரியார்



பெரியார் பேருரையாளர்

அ. இறையன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

இதழாளர் சி.பா. ஆதித்தனார் அறக்கட்டளைச் சொற்பொழிவு
அறக்கட்டளை நிறுவியோர் :
சி.பா. ஆதித்தனார் கல்வி நிறுவனம்

வரிசை எண்: 5 நாள்: 9-12-1998

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Italāḷar Periyār |
| Author | : | A. Iraiyan<br>Maniyammaiyar Manai<br>Veeramani Street, Periyar Nagar<br>Madippakkam, Chennai - 600 091 |
| General Editor | : | Dr. M. Valarmathi<br>Research Assistant<br>International Institute of Tamil Studies<br>C.I.T. Campus, Chennai 600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Taramani, Chennai - 600 113.<br>Phone : 22542992 |
| Publication No | : | 542 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 2005 |
| Paper Used | : | 18.6 kg TNPL Map litho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | xii + 548 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs.160/- (Rupees One hundred and sixty only) |
| Printing | : | Venkateswara Offset Press<br>Aziz Mulk Street, Chennai - 6 |
| Subject | : | Journalism |

அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகட்கு நிறுவனம் பொறுப்பன்று.

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை-600 113.

## அணிந்துரை

இருபதாம் நூற்றாண்டில் தமிழக மக்களால் 'தந்தை பெரியார்' என்று அன்புடன் அழைக்கப்பட்ட ஈ.வெ. ராமசாமி வேறு எவரும் செய்யாத சமுதாயப் புரட்சியைச் செய்தவர். கடவுள், சாதி, மதம், சாத்திரப் புராணங்களை தமது அறிவுக் கண்கொண்டு ஆராய்ந்து மக்களுக்கு அச்சிந்தனையைத் தமது எழுத்தாலும், பேச்சாலும் புகட்டி வந்தவர். அவ்வகையில் 'சமுதாய விஞ்ஞானி' எனப் போற்றப் பட்டவர். மனிதனை மனிதன் தீண்டக்கூடாது என்ற சிந்தனை ஓங்கி இருந்த காலத்தில், பெண்ணடிமைத்தனம் பின்னிப் பிணைந்து கிடந்து கேட்பாரற்ற சமுதாயமாக இருந்த நிலையில் பெரியார் ஒருவர் மட்டும் எதற்கும் அஞ்சாமல் தமது பகுத்தறிவுப் பணியைத் தொடங்கினார். அவருக்குப் பின்னால் சுயமரியாதைக் கருத்துகளை ஏற்ற கொள்கையாளர்களின் பெரும் படை அணி வகுத்தது. தமிழக மக்களின் வாழ்விலும், நடப்பிலும் பெரும் மாற்றங்கள் உருவாயின. குழந்தை மண ஒழிப்பு, சுயமரியாதைத் திருமணம், விதவை மறுமணம், சாதி மத ஒழிப்புத் திருமணம், கருத்தடை செய்தல், தேவதாசி ஒழிப்பு, வகுப்புரிமை, இட ஒதுக்கீடு என நேரடியான பலன்களால் தமிழ் மக்களின் சிந்தனைப் பாதை விரிவானது.

தந்தை பெரியார் இம்மாற்றங்களையெல்லாம் உருவாக்கப் பல இதழ்களைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் நடத்தி வந்தார். குடியரசு, புரட்சி, பகுத்தறிவு, விடுதலை, உண்மை, திராவிடன் ஆகிய தமிழ் இதழ்களும் ரிவோல்ட், ஜஸ்டிசைட், தி மாடர்ன் ரேஷனலிஸ்ட் ஆகிய ஆங்கில இதழ்களும் நடத்திய பழுத்த அனுபவம் வாய்ந்தவர். 19ஆம் நூற்றாண்டிலும் 20ஆம் நூற்றாண்டின் தொடக்ககாலத்திலும் வெளியான பெரும்பாலான இதழ்களின் பெயர்கள் தமிழ்ப் பெயர்கள் அல்ல; லோகோபகாரி, தேசோபகாரி, தேஜோபிமானி, ஜனா நுகூலன் போன்ற பெயர்களாக இருந்தன. இந்நிலையில் பெரியார் 'குடிஅரசு' என்னும் பத்திரிகையை ஆரம்பிக்க வேண்டும் என்று 1922ஆம் ஆண்டு கோயம்புத்தூரில் சிறைவாசம் இருந்த போது நினைத்தார். அதுபோன்றே 1-5-1925ஆம் நாளன்று குடிஅரசைத் தொடங்கி விட்டார்.

"ஜனநாயகம் என்பது வடமொழிச் சொல். அதை வேண்டாமென்று ஒதுக்கி 'குடிஅரசு' என்ற பெயரை வைத்தேன்" என்று குறிப்பிட்டுள்ளார் பெரியார்.

"நமது நாடு அரசியல், பொருளியல், சமூகவியல், ஒழுக்கவியல் முதலிய எல்லாத் துறைகளிலும் மேன்மையுற்று விளங்கச் செய்ய வேண்டும். நாட்டு மக்களின் உடல் வளர்ச்சிக்காவும், அறிவு வளர்ச்சிக்காகவும், கலை வளர்ச்சிக்காகவும், மொழி வளர்ச்சிக்காகவும் இதன் மூலம் உழைத்து வருவோம். ஒவ்வொரு வகுப்பும் முன்னேற வேண்டும். இதை அறவே விடுத்துத் தேசம் தேசம் என்று கூக்குரலிடுவது எமது பத்திரிகையின் நோக்கமன்று. மக்களுள் தன்மதிப்பும் சமத்துவமும் சகோதரத்துமும் ஓங்கி வளரல் வேண்டும். மக்கள் அனைவரும் அன்பின் மயமாதல் வேண்டும்" (குடிஅரசு: 2-5-1925) என்று தமது இதழ்ப்பணியின் நோக்கத்தை குறிப்பிட்டுள்ளார்.

அவர் நடத்திய இதழ்கள் அனைத்தும் ஏழை, எளிய மக்களைச் சிந்திக்க வைத்தன. அவர் இந்த இதழ்களை நடத்திவரும் பொழுது சந்தித்த இடையூறுகள், எதிர்ப்புகள், சிறைவாசங்கள், தண்டனைத் தொகை செலுத்துதல் ஆகியவற்றை இக்கால இளைஞர்கள் அறிய வாய்ப்பில்லை. பெரியார் ஒரு மாபெரும் பத்திரிகையாளர் என்பதை எடுத்துக்காட்டும் வகையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இதழாளர் சி.பா. ஆதித்தனார் அறக்கட்டளையின் சார்பாக **இதழாளர் பெரியார்** என்ற தலைப்பில் ஒரு சொற்பொழிவு நடத்த முடிவு செய்தது. இம்முடிவினைக் கருத்தில் கொண்டு அப்போதைய இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களும் இந்த அறக்கட்டளைப் பொறுப்பாளர் முனைவர் மு. வளர்மதி அவர்களும் பெரியார் பேருரையாளர் அ. இறையனார் அவர்களை அழைத்து 9-12-1998 புதுக்கல்லூரித் தமிழ்த்துறை வழியாக இந்நிகழ்வை நடைபெறச் செய்துள்ளனர். சொற்பொழிவாளரான இறையனார் இத்தலைப்பை யொட்டி ஒரு மணிநேரம் சுருக்கப்பொழிவு வழங்கிச் சென்றுள்ளார். இதை முழுமையாக விரிவாக எழுதி வழங்கினால் ஆய்வாளர் களுக்கும், ஆர்வலர் பலருக்கும் பெரிதும் பயனுடையதாக அமையும் என நான் கேட்டுக் கொண்டதன் பேரில் இப்பணியை மிக விரிவாகவும் ஆழமாகவும் செய்து வழங்கியுள்ளார்.

இந்நூலை எழுதிக் கொண்டிருக்கும் பொழுது அவருக்கு நேர்ந்த விபத்தினால் ஏற்பட்ட கை முறிவு, மேலும் மேலும் தொடர்ந்த உடல்நலக்குறைவு ஆகியவற்றால் பெருந்தடைகள் ஏற்பட்டன.

இத்தடைகள் பலவற்றையும் கடந்து அவருடைய கடும் உழைப்பின் தொடர் முயற்சியின் விளைவாக இந்த அரிய நூல் இன்று வெளிவருகின்றது. சிறந்த பேச்சாளர், எழுத்தாளர், சிந்தனையாளர், பெரியார் பகுத்தறிவு ஆய்வு நூலகத்தின் இயக்குநர், பெரியாரின் பெருந்தொண்டர் ஆகிய சிறப்புகளைப் பெற்ற இறையனார் அவர்களின் இப்பெரும்பணி என்றென்றும் போற்றுதற்குரியது; பாராட்டுக்குரியது. இப்பணியை அவர் மிகச்சிறப்பாக செய்து வழங்கியுள்ளார். அறிவுலகிற்கும் ஆராய்ச்சி உலகிற்கும் இதழியல் உலகிற்கும் ஓர் ஆவணத்தைத் தயாரித்து வழங்கியுள்ளார். திராவிட இயக்க வரலாற்று வேகத்தில் தந்தை பெரியார் தொடர்புடைய அனைத்து நிகழ்வுகளையும், எழுத்தினையும், அவ்வண்ணமே இவ் ஆசிரியர் பதிவு செய்துள்ளார். இவை தந்தை பெரியாரைப் பற்றிய சிறந்த ஆவணமாக அமையும் என்பதோடு, இந்நூல் பெரிதும் பயனுடையதாக அமையும் என்பதிலும் ஐயமில்லை. இந்நூல் கடந்த கால நிகழ்ச்சிகள் பலவற்றை நம் கண்முன் நிறுத்தும். வியக்க வைக்கும் கருத்துகள், சிந்தனைகள் செயல்பாடுகள் பலவற்றையும், தமிழ்ச்சமுதாயத்திற்குப் பெரியார் பட்ட பாடுகளையும் எதிர்காலச் சமுதாயத்திற்கு இந்நூல் கைவிளக்காய் காட்டும். இந்நூலைச் சிறந்த முறையில் வெளிக்கொணரப் பணியாற்றிய இந்நிறுவன ஆராய்ச்சி உதவியாளர் முனைவர் மு. வளர்மதி அவர்களைப் பாராட்டி வாழ்த்துகிறேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற **நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி மற்றும் வணிகவரித்துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம்** அவர்களுக்கும், **தமிழ் வளர்ச்சி பண்பாடு-மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு பு.ஏ. இராமையா** இ.ஆ.ப., அவர்களுக்கும், **சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன்** இ.ஆ.ப., அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளி அச்சுக்கோப்புச் செய்த திருமதி இரா. வெண்ணிலாவிற்கும், அழகுற அச்சிட்டுத்தந்த வெங்கடேஸ்வரா அச்சகத்தார்க்கும் பாராட்டுகள்.

சென்னை
18-06-2005

**இயக்குநர்**



# ஆசிரியரைப் பற்றி...

பெரியார் பேருரையாளர் அ. இறையன் அவர்கள் 4-6-1930 அன்று மதுரையில் அழகர்சாமி - இராமுத்தாய் இணையரின் தலைமகனாய்ப் பிறந்தவர். அவரின் பொதுக்கல்வி இளங்கலை (தமிழ்); தொழிற் கல்வி கற்பிப்புப் பட்டமாகும் (தமிழ் & ஆங்கிலம்). ஆங்கில மொழிக் கற்பிப்புச் சிறப்புப்பயிற்சி, தமிழிசைப் பயிற்சி ஆகியவை இவரின் சிறப்புத் தகுதிகள்.

ஆசிரியராகவும் தலைமையாசிரியராகவும் கல்வித்துறை ஆய்வாளராகவும் அரசுப் பணிகள் ஆற்றியவர்.

தொடக்கக் கல்விக் கட்டத்திலிருந்து கல்லூரிக் காலம் முடிய மேடை மொழி, கட்டுரையாக்கம், இசைப் பொழிவு, நடிப்பாற்றல், பல்வகை விளையாட்டுத் திறன் ஆகியவற்றில் நூல்கள், பதக்கங்கள், கோப்பைகள் முதலியவற்றைப் பரிசுகளாக வென்றவர்.

பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியார் பற்றி 1982-இல் மூன்று தலைப்புகளில் மூன்று சொற்பொழிவுகள் பேரறிஞர்கள் முன்னிலையில் நிகழ்த்திப் '**பெரியார் பேருரையாளர்**' எனும் சிறப்பு விருதினைப் பெற்றவர்.

தந்தை பெரியாரின் கொள்கைகளில் ஆழ்ந்த ஈடுபாடுற்று, திருமகள் என்னும் புரட்சி நங்கையை 'சாதி' ஒழிப்பு மணம் புரிந்த இவருக்குப் பண்பொளி, இறைவி, மாட்சி எனும் செல்வியரும் இசையின்பன் என்னும் மகனும் உளர். மூன்று செல்விகட்கும் 'சாதி' ஒழிப்பு மணம் செய்து வைத்துள்ளமை இவரது கொள்கைப் பிடிப்பைக் காட்டும்.

சென்னை-பெரியார் பகுத்தறிவு ஆய்வகத்தின் இயக்குநராகப் பணிபுரியும் இறையன் அவர்கள் **சுயமரியாதைச் சுடரொளிகள், இல்லாத இந்து மதம், செப்டம்பரின் சிறப்பு** முதலிய நூல்களின் ஆசிரியர்; பெரியார் ஆயிரம், மஹாபாரத ஆராய்ச்சி ஆகிய தொகுப்புகளின் ஆசிரியர் குழு உறுப்பினர்.

# முன்னுரை

## 'பெரியாரியல்' பரப்புதற்குக் கிட்டியதோர் அரிய வாய்ப்பு!

எத்தனையோ ஆண்டுகள் கழிந்தோடி விட்டாலும் என் நினைவுப் புலத்திலிருந்து நீங்காமல் நிலைத்திருக்கும் - காலம் வென்ற ஞாலப் பெரியார் அவர்கள் வாழ்ந்த காலத்தில் நடந்த - அந்த நிகழ்வைப் பதிவு செய்கின்றேன் இங்கே.

உடுமலைப் பேட்டையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பொதுக்கூட்டத்திற்குப் பெரியாரவர்கள் ஊர்தியில் சென்று கொண்டிருந்தார். வண்டியுள் நானும் இருந்தேன். திடீரென வண்டி குலுங்கி நிற்க, அனைவரின் கண்களும் தெருவை நோக்கிய போது உடற்சட்டை யணிந்திராத உருவமொன்று வண்டியின் குறுக்கே பாய்ந்து, அய்யாவின் ஊர்திச் சாளரப்பகுதிக்கு விரைந்து கொண்டிருந்தது. அவரைக் கண்டிக்கும் முறையில் சினமொழிகளை, வீசிய எங்களைப் பற்றியெல்லாம் அந்த ஆள் கண்டு கொள்ளவே யில்லை!

மாறாக, அவ்வாள் ஊர்திச் சாளரத்தினூடே தன் கைகளை ஓச்சி, மிகவும் தளர்ந்திருந்த அய்யாவின் கைகளைப் பற்றித் தன் கண்களில் ஒற்றிக் கொண்டு, "எங்கப்பன் பெரியாரு, எங்கப்பன் பெரியாரு!" என ஓங்கிய குரலில் கூவி விட்டு, தொடர்ந்து, "ஊம், வண்டியை எடுங்கள். கூட்டம் நடக்கும் இடம் இந்தப் பக்கந்தான் இருக்கிறது" எனக் கட்டளையிட்டு விட்டு, ஊர்தியை ஒட்டியே ஓடிவந்தார்.

எங்கள் எல்லாரையும் கவ்விய அதிர்ச்சி தணிந்து, ஆறுதல் நிலையை நாங்கள் தழுவினோம். கீழிறங்கியவுடன் சட்டையணிந்து கொண்டிராத முண்டு மட்டுமே அரைக்கசைந்திருந்த - அப்பாட்டாளித் தோழரிடம் பலவற்றையும் உசாவியபோது அய்யாவைப் பற்றி நிறையப் பேசிய அவர் தான் ஒரு பளுதூக்கும் தொழிலாளி எனத் தெரிவித்தார்.

ஒரு பேரினத்தையே சுமந்து காக்கும் தொண்டறத்தை இயற்ற முன் வந்த பெரியாரின் அருமையையும் பெருமையையும் ஒரு சுமை தாங்கிப் பாட்டாளியால் ஏனையோரைக் காட்டிலும் எளிதாக,

விரைந்து புரிந்து கொள்ள முடிகிறது எனும் பேருண்மை புலப்பட்ட நிலையில் பெரும் உள்ள நெகிழ்ச்சிக்கு நான் இலக்கானேன். அன்றும் பிறகும் பல மேடைகளில் அந்நிகழ்வு பற்றிக் குறிப்பிட்டிருக்கிறேன். அடிக்கடி நான் அசை போட்டுப் பார்க்கும் அரும் பொருள்களில் 'எங்கப்பன் பெரியாரு'ம் ஒன்று.

அத்தகைய காத்தருளி (SAVIOUR)யின் கருத்துரைகள் மன்பதையில் நன்கு பரவி நன்மைகள் குவிக்கும் வண்ணம் நம்மால் இயன்றதைச் செய்தாக வேண்டுமே என என் இளமைக்காலத்தில் அடிக்கடி எண்ணியெண்ணிப் பார்க்கவும், என் நெருக்கமான தோழர்களோடு கலந்தாய்வு பண்ணவும் செய்திருக்கிறேன்.

ஆழ்ந்து ஆய்ந்தபின் தந்தை பெரியாரின் மூலச் சாதியழிப்புக் கொள்கை நிறைவேற்றத்திற்குத் துணைபோகும் முறையில் பிற'சாதி'ப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு விட வேண்டும் என்பதே நான் ஏற்ற நன்முடிவாகும். அரசுப்பணியில் இருக்கும் ஓர் இளைஞன் (அப்போது நான் கல்வித்துறை ஆய்வாளராக பணிபுரிந்து கொண்டிருந்தேன்) பெரியாரியலின் வெற்றிக்காக இதற்கும் மேல் சிறப்பானதாய் என்ன செய்து விட முடியும் என்பதாக எனக்குப் பட்டது.

என் வேணவாப்படியே என் வாழ்க்கை ஒப்பந்தம் தோழியர் திருமகளுடன் சாதியழிப்புப் பெரும் புரட்சியாக நடந்தேறியது. பாராட்டுகளும் வாழ்த்துகளும் என்னுள் இறும்பூதும் பெருமிதமும் சுரக்கச் செய்தன! விடாப்பிடியாக எங்கள் செல்வங்களுக்கும் சாதிமாய்க்கும் வாழ்க்கை ஒப்பந்தங்களையே செய்து வைத்து எடுத்துக் காட்டாய் அவர்களை வாழவைத்துப் பொந்திகையுற்றோம்.

ஆனால், இப்போது எவரும் எதிர்பார்த்திருக்க வியலாவண்ணம் மேற்குறித்தவற்றைவிடப் பன்மடங்கு மேலான சிறப்புடைய அருஞ்செயல் ஒன்று - விந்தை என வியக்கத்தக்க வகையில் நடந்தேறிவிட்டது! ஆம்; அய்யா அவர்களைப் பற்றிய அரிய செய்திகள் அடங்கிய "இதழாளர் பெரியார்" எனும் நூலினை நம் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளிக் கொணர்ந்துள்ளது. அதன் படைப்பில் என் பங்களிப்பு இருக்கிறது. பெரியாரியல் பரப்புதற்கு எனக்குக் கிட்டிய அரிய நல்வாய்ப்பு இதனை விட வேறென்ன அமைய முடியும்?

ஆதித்தனார் அறக்கட்டளையின் சார்பில் "இதழாளர் பெரியார்" எனும் சொற்பொழிவு நிகழ்த்த வேண்டுமென அப்போதைய இயக்குநர் என்னிடம் அன்புக் கட்டளை இட்ட போது,

நான் அதை எளிதாக நிறைவேற்றி விடலாம் என்றே நம்பினேன். ஆனால் நடப்பு அவ்வளவு எளிதாகவிருக்கவில்லை.

சரிபார்ப்புக்காக எனக்குத் தேவைப்பட்ட இதழ்களில் சில எனக்குக் கிட்டவில்லை. சில ஏடுகள் கிடைப்பதில் காலச்சுணக்கம் இருந்தது.

சில செய்திகளைப் பற்றி உறுதியாகப் பதிவு செய்வதற்கு நிறையக் காலச் செலவானது. எடுத்துக்காட்டாக, தாம் நடத்தி வந்த இதழ்களில் சில நிறுத்தப்பட்டு விட்டமைக்கான சூழ்நிலை - காரணம் பற்றி உடனடியாக அய்யா எதையும் குறிப்பிடாமல், பின்னர் ஒரு வாய்ப்பில் அதைப் பதிவு செய்துள்ளமையைக் கண்டு பிடிக்க உழைப்பு தேவைப்பட்டது.

அய்யா அவர்களால் நடத்தப்பட்ட 'JUSTICITE' எனும் ஆங்கிலக் கிழமை இதழின் ஒரு பக்கம் கூடச் சிலகாலம் முன்பு வரைக்கும் காணக் கிடைக்கவில்லை. தேடுதல் வேட்டையில் என்னுடன் உண்மையாகவும் முனைப்பாகவும் ஒத்துழைத்த பெரியார் நூலகப் பொறுப்பாளர் சீத ஜெயந்தியின் அரு முயற்சியால்தான் அரிய செய்திகள் நிறைந்துள்ள 'JUSTICITE' இதழ்களைக் கண்டுகளிக்க நமக்கு இப்போது வாய்த்திருக்கிறது..

யாவற்றையும் விஞ்சும் வகையில், பேருந்துப் பயணத்தின் போது ஒரு கடுமையான நேர்ச்சிக்குள்ளான நான் என் வலக்கை மணிக்கட்டின் எலும்பு முறிவைச் செம்மைப்படுத்திக் கொள்ள மேற்கொண்ட பண்டுவ நடவடிக்கைகள் நீண்ட காலத்தை விழுங்கின. இடக்கை விரல்கள் கொண்டு எழுதவும் நான் பயிற்சி பெறும்படி ஆயிற்று. அறக்கட்டளைப் பொழிவுக்கும் நூலாக்கத்திற்கும் இடைவெளி மிகுந்து விட்டமைக்கான உண்மைக் காரணங்கள் இவை. மன்னிப்பு வழங்க வேண்டிய அதிகாரம் - உரிமை உங்களிடம்.

நூல் பற்றி ஒரு சொல். இதழ்கள் தொடர்பாகப் பெரியாரின் முயற்சிகளைக் குறித்த திறனாய்வாக மட்டும் இது நின்று விடாமல், அவரால் வெளியிடப்பட்ட இதழ்களில் இடம் பெற்ற உள்ளடக்கச் செய்திகளும் ஓரளவுக்குப் பதிவு பண்ணப்பட்ட நூலாக விரிந்து விட்டதால் ஆய்வாளர்கட்கு நூல் நல்ல வண்ணம் பயன்படும் என நம்புகிறேன்.

அறக்கட்டளைப் பொழிவுக்கு என்னைத் தேர்ந்தெடுத்துப் பகுத்தறிவுப் பகலவனின் புகழ் பரப்பும் அரியவற்றுள் அரிய வாய்ப்பினை எனக்குத் தந்த ஆதித்தனார் அறக்கட்டளைப்

பொறுப்பாளர்கட்கும் இவன் முடிக்கும் என்றாய்ந்து அறக்கட்டளை நிறுவனர்களிடம் என்னைப் பரிந்துரை செய்து உலகத் தமிழர் அனைவரிடமும் நான் அறிமுகமாகும் வண்ணம் அடிப்படையிட்ட உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் அன்றைய இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்கட்கும் நான் என்றும் மறவாத நன்றியுடையேன்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநராகப் புதிதாகப் பொறுப்பேற்று, முனைப்புடன் பணியாற்றி வரும் முனைவர் சா. கிருட்டினமூர்த்தியவர்களை நான் சந்தித்து, நூலின் அளவு பற்றிக் கருத்தாடிக் கொண்டிருந்த போது, "பக்கங்களின் எண்ணிக்கை குறித்து நீங்கள் கவலை வேண்டாம். விரைவாக நூலை முடித்துக் கொடுத்து விடுவீர்களானால் பேருதவியாகவிருக்கும்" என ஊக்கினார் என்றால், அவருக்கு என் நன்றியுணர்வினை எவ்வாறு புலப்படுத்துவேன்?

பல்வேறு தடைச்சூழ்நிலைகளால் இப்பணியில் தொய்வுகள் தோன்றியபோதெல்லாம் 'ஆள்வினை உடைமை' அதிகாரத்தை எனக்கு நினைவூட்டி, நான் கடமையை நிறைவேற்றும் வண்ணம் என்னைத் தூண்டித் தூண்டி இயங்க வைத்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் பணிபுரியும் முனைவர் மு. வளர்மதியவர்கட்கு எப்படி என் நன்றிப் பெருக்கை உணர்த்துவேன்? இந்நூலின் மெய்ப்புப் படிகளை அவரே செப்பம் செய்து, துணைத்தலைப்புகளிட்டு, நூலை விரைவாகக் கொணரப் பெருந்துணையாக நின்றார் என்பது குறிப்பிடத்தக்கது.

தானே படைத்து வெளியிட்ட இதழியல் தொடர்பான அடிப்படை நூல்களைத் தந்துதவி ஊக்கிய மூதறிஞர் மா.சு. சம்பந்தனாருக்கு நனி நன்றி.

புதையல் என மறைந்து கிடந்த 'JUSTICITE' இதழ்களைக் கல்லிக் கல்லிக் கண்டுபிடித்து நூலகர் கீத ஜெயந்தி உதவியிரா விட்டால், 'இதழாளர் பெரியார்' முழுமை பெற்றிருக்க முடியாது. குற்றவுணர்வினால் உள்ளமுடைந்து போயிருந்தேன். இப்போது பழிக்கு இலக்காகாமல் காப்பாற்றப்பட்டு விட்டேன்! கீத ஜெயந்திக்கு இதைவிட வேறென்ன கூறி நன்றி பாராட்டுவேன்?

எனது தேடல் - திரட்டல் முயற்சிகளின் போது நான் அலைந்து திரிந்த இடங்களுக்கெல்லாம் என்னுடன் போந்து, இன்றியமையாதவற்றைப் படிகள் எடுத்துக் கொடுத்துதவிய தமிழிலக்கிய மாணாக்கி வே. எழிலரசி அறி.இ., க.மு., கல்.மு. அவர்களுக்கும், ஒல்லும் வாயெல்லாம் உதவிகள் புரிந்து

இன்றியமையா ஏந்துகள் உருவாக்கித் தந்த இசை. பசும்பொன் அவர்களுக்கும் என் நிலைத்த நன்றி உரியது.

இந்நூலில் இடம் பெற்றுள்ள செய்திகளிற் பெரும்பகுதி சென்னை பெரியார் பகுத்தறிவு நூலக - ஆய்வகத்திலிருந்து கிட்டியவை. அவ்வகையில் நூலகப் பொறுப்பாளர்கட்கும் பெரியாரியல் பரப்பும் நடவடிக்கைகளில் என்னைப் பெரிய அளவில் ஈடுபடுத்திப் பல்லாற்றானும் என்னை ஊக்கி வரும் திராவிடர் கழகத் தலைவர் மானமிகு கி. வீரமணி அவர்கட்கும் எப்போதும் நான் கடன்பட்டவன்.

இந்நூலை சிறந்த முறையில் ஒளியச்சுக்கோவை செய்து வழங்கிய திருமதி இரா. வெண்ணிலா அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றி.

பொதுவாக '**இதழாளர் பெரியா**'ரின் உலக உலாவிற்குக் காரணர்களாய் அமைந்த அத்தனை பேரும் பெருநன்றிக்குரியோர்.

**அ. இறையன்**

# பொருளடக்கம்

# வாய்மைப் போர் சாற்றினார்!

"வயதில் அறிவில் முதியார் நாட்டின்
வாய்மைப் போருக் கென்றும் இளையார்
உயரெண் ணங்கள் மலரும் சோலை
ஓதும் இராமசாமிப் பெரியார்!"

தமிழ் மக்களால் தந்தை பெரியார் என்று அகங்குளிர, ஆர்வம் நிரம்ப அழைக்கப்பட்ட - இன்றும் அழைக்கப்படுகின்ற - பெரியார் ஈ.வெ. இராமசாமி அவர்களைப் பற்றிப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் இப்படி மிகமிகப் பொருத்தமாகப் பாடினார்.

உண்மைகளை அறிதல், உண்மைகளைக் கண்டுபிடித்தல், உண்மைகளை உலகம் அறிய வெளியிடல், உண்மைகளை ஊன்றுவதற்காக உழைத்தல், உண்மைகளை நாட்டும் முயற்சியில் வெல்லுதல் முதலிய குறிக்கோட் கூறுகளைத் தன்னகத்தே கொண்டதுதான் வாய்மைப்போர் என்பது.

வாய்மைப் போர்க் கூறுகளில் ஒன்றுக்காகவோ சிலவற்றுக்காகவோ அத்தனைக்குமாகவோ பங்காற்றும் வாய்ப்பு உடையவை இதழ்கள் - தாளிகைகள். இன்பூட்டுதல், சுவை கூட்டுதல் என்பவை எல்லாம் இதழ்களை மக்களிடையே பரப்புவதில் கையாளத்தக்க உத்திகளே தவிர, இதழ்களின் அடிப்படைக் குறிக்கோள் உண்மை என்பதாகத்தான் இருக்க முடியும் - இருக்க வேண்டும்.

இதழ்களின் நிறுவனர், இதழ்களின் ஆசிரியர், இதழ்களின் வெளியீட்டாளர் என்னும் நிலைகளில் முழு வாய்மைப்போர் நிகழ்த்தியவர் தந்தை பெரியார். எனவே 'இதழாளர் பெரியார்' என்ற வகையில் பெரியார் பேசப்பட வேண்டியவரே! அவர்தம் இதழ்த் தொண்டுகள் திறனாய்வு - மதிப்பாய்வு செய்யப்பெற வேண்டியவையே!

## பெரியார் நடத்திய இதழ்கள்

தமிழ்க் கிழமை இதழ் 'குடியரசு', ஆங்கில மாதிகை 'ரிவோல்ட்' (Revolt), தமிழ்க் கிழமை இதழ் 'புரட்சி', தமிழ் நாளிதழ் 'பகுத்தறிவு', தமிழ்க் கிழமை இதழ் 'பகுத்தறிவு', தமிழ் மாதிகை 'பகுத்தறிவு', தமிழ்

நாளேடு 'விடுதலை', ஆங்கில மாதிகை 'ஜஸ்டிசைட்' (Justicite), தமிழ் மாதிகை 'உண்மை', ஆங்கில மாதிகை 'தி மாடர்ன் ரேஷனலிஸ்ட்' (The Modern Rationalist), 'நீதிக்கட்சி'யின் நாளேடு 'திராவிடன்' ஆகியவற்றின் பொறுப்புகளை மேற்கொண்டு நடத்திய நாற்பத்தியெட்டு ஆண்டுக் காலப் பட்டறிவுப் பழமாக விளங்கினார் பெரியார்!

## தமிழ் இதழியல் வரலாற்றின் தொடக்கம்:

தமிழ் இதழியல் வரலாறு சென்ற பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே தொடங்கிவிட்டது. கி.பி. 1802-ஆம் ஆண்டில் இலங்கையில் வெளியிடப்பட்ட 'The Ceylon Gazette' என்ற அரசிதழில் ஆட்சித் தொடர்பான செய்திகள் தமிழ்மொழியிலும் இடம்பெற்றன என்று தெரிந்துகொள்ள முடிகிறது.

தமிழகத்தில் 1831-ஆம் ஆண்டில் சென்னை-கிறித்துவ சமயப் பரப்புக் கழகம் என்றதோர் அமைப்பு 'தமிழ் மேகஸின்' (The Tamil Magazine) என்னும் பெயரில் ஒரு மாதிகையை முழுக்க முழுக்கத் தமிழிலேயே வழங்கியமைதான் தமிழிதழியல் வரலாற்றின் தொடக்கம் என்பது பொருந்தும்.

அடுத்து, சென்னையில் பெர்சிவல் என்ற பெயர் கொண்ட பாதிரியார் 1852ஆம் ஆண்டில் 'தினவர்த்தமானி' எனும் பெயரில் கிழமை இதழொன்றை நிறுவி நல்லார்வத்துடன் நடத்தினார். தொடர்ந்து, 1855-இல் 'இராஜவர்த்தினி போதினி' என்ற மாதம் மும்முறை இதழொன்று தோன்றியது. 1870-இல் துரைத்தனக் கல்விச் சங்கத்தாரால் 'ஜனவிநோதினி' என்ற மாதிகையும், 1876-இல் செங்கல்வராய முதலியார் ஆசிரியர்ப் பொறுப்பேற்க, 'ஞானபாநு' என்னும் மாதிகையும் சென்னையில் வெளியிடப் பெற்றன. 1878-இல் உயர்முறை மன்றங்களில் இடம் பெற்ற வழக்குகளின் செய்திகள் அடங்கிய 'சித்தாந்த சங்கிரகம்' என்ற மாதிகை வெளியாகத் தொடங்கியது. சேலத்தில் 1877-இல் 'சுதேச அபிமானி' என்னும் தமிழிதழ் நரசிம்மலு நாயுடு என்பவரை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்தது. 'சுதேசமித்திரன்' 1882ஆம் ஆண்டில் அதற்கு அய்ந்தாண்டுகள் முன்னால் 'ஹிந்து' என்னும் ஆங்கில நாளிதழைத் தொடக்கி வைத்த ஜி. சுப்பிரமணிய அய்யரால் கிழமையேடாகத் தோற்றுவிக்கப்பட்டு, ஏழு ஆண்டுகள் கழித்து நாளேடாக உருமாறியது.

ஆதிதிராவிடரின் அவலத்தை உலகுக்குணர்த்தும் வண்ணம் 1885-இல் 'திராவிடப் பாண்டியன்' ஏடும் 1893-இல் 'பறையன்' எனும்

இதழும் முறையே ஜான் ரத்தினம், இரட்டைமலை சீனிவாசன் ஆகியோரால் வழங்கப்பட்டன.

பிறகு 1887-இல் வி.கிருஷ்ணமாச்சாரியை ஆசிரியராகக் கொண்ட 'மஹாராணி' எனும் மாதமிருமுறை இதழும், அதே ஆண்டில், திராவிட ரத்னாகர அச்சகத்திலிருந்து 'கலாதரங்கிணி' என்னும் மாதிகையும் 1892-இல் சி.வி. சாமிநாதையரின் பொறுப்பில் 'விவேக சிந்தாமணி' என்ற மாதிகையும் சென்னையிலிருந்து வெளியாயின. 1893-இல் கே.என். ஈஸ்வரய்யாவை ஆசிரியராகப் பெற்று 'வித்யா பாநு' என்ற மாதிகை கோயம்புத்தூரில் தொடங்கப்பட்டது. தொடக்கப்பள்ளி ஆசிரியர்களின் நன்மைக்காகவென்று 'உபாத்தியாயர்' (The Village School Master) எனும் மாதிகையொன்று 1888-இல் நிறுவப்பட்டது.

'லோகோபகாரி' என்னும் இதழ் 1895ஆம் ஆண்டில் வி. நடராஜ அய்யரை ஆசிரியராகப்பெற்று சென்னையில் பதிப்பாயிற்று. மாதிகையாக முதலில் தொடங்கப்பட்ட அவ்விதழ் மக்களின் வரவேற்பைப் பெற்று மாதம் மும்முறையாகி, கிழமை இதழாக இரண்டே ஆண்டுகளில் வளர்ச்சியுற்றது. சில ஆண்டுகளில் பண்டித விசாலாட்சி என்ற அம்மையாரை ஆசிரியையாக ஏற்று, அவ்வேடு இதழியல் வரலாற்றில் புதுமை படைத்தது! இருபதாம் நூற்றாண்டின் முற்பாதி முடிய நீடித்தது அதன் வாழ்வு.

தமிழக எல்லையைத் தாண்டியும் 19ஆம் நூற்றாண்டில் தமிழ் மொழியில் இதழ்கள் வெளியிடப் பெற்றன. இலங்கையில் தமிழர்கள் வாழும் பல பகுதிகளிலிருந்து உதயதாரகை (1841), புதினலங்காரி (1873), இலங்கை நேசன் (1877), சைவ (1880), விஞ்ஞானவர்த்தினி (1881), முஸ்லீம் நேசன் (1882), சைவாபிமானி (1884), சன்மார்க்க போதினி (1885), இலங்கை தினவர்த்தமானி (1886), சர்வஜன நேசன் (1886), இந்து சாதனம் (1889), முஸ்லீம் பாதுகாவலன் (1890), சைபுல் இஸ்லாம் (1890), இஸ்லாம் மித்திரன் (1893), வைத்திய விசாரணி (1898), திராவிடக் கோகிலம் (1900) முதலிய ஏடுகள் வெளியாகின.

இந்துநேசன் (1888), பினாங்கு வர்த்தமானி (1897), உலகநேசன் (1897) தேஜோபிமானி (1897) ஆகிய இதழ்கள் மலாயாநாட்டுப் பெருநகரங்களில் வெளியிடப்பெற்றன. சிங்கப்பூரிலிருந்து சிங்கைநேசன் (1887) வெளிவந்தது.

ஏன், தென்னாப்பிரிக்காவிற்குச் சென்று வாழ்ந்த தமிழ் மக்களுங் கூட 17-ஆம் நூற்றாண்டில் தாய்மொழி உணர்வு

மங்காதவர்களாய், விவேகபானு, மெய்கண்ட மித்திரன், தமிழ்மணி ஆகிய ஏடுகளை நடத்தியிருக்கிறார்கள்.

இருபதாம் நூற்றாண்டின் முதல் கால்நூற்றாண்டில் தமிழ்நாட்டில் தோற்றமெடுத்த இதழ்களை, "இதழாளர் பெரியார்" என்னும் தலைப்பினை யொட்டி நாம் நினைவுபடுத்திக் கொள்ளுதல் பயனுள்ளதாய் இருக்கும் என நம்புகிறேன்.

1900-இல் எம்.எஸ். பூரணலிங்கம் பிள்ளையால் 'ஞானபோதினி' என்னும் மாதிகை சென்னையிலிருந்தும், அதே ஆண்டு டி.வி. கோவிந்தசாமிப் பிள்ளையால் 'யதார்த்தவசனி' எனும் கிழமை இதழ் தஞ்சையிலிருந்தும், அதே ஆண்டில் 'ஜனாநுகூலன்' என்ற கிழமை ஏடு பி.வி. கிருஷ்ணதாஸ் என்பவரால் சென்னையிலிருந்தும், அதே ஆண்டில் சென்னையிலிருந்து சகோதரி தாயாரம்மாவால் 'பெண்கல்வி' என்னும் மாதிகையும், அமிர்தம் சுந்தரநாத பிள்ளையால் 1911-இல் 'செந்தமிழ்ச் செல்வம்' என்ற மாதிகை திருச்சியிலிருந்தும், பிற்காலத்தில் 'அறிவுக் கடல்' என்று பெயர் மாற்றப்பட்ட 'ஞானசாகரம்' என்னும் மாதிகை 1902-இல் மறைமலையடிகளால் சென்னையிலிருந்தும் அதே ஆண்டில் மதுரையிலிருந்து ரா. ராகவையங்காரால் 'செந்தமிழ்' மாதிகையும், சென்னையிலிருந்து அயோத்தியதாஸ் பண்டிதரால் 'பைசாத்தமிழன்' என்ற ஏடும், 1907 ஆம் ஆண்டிலும், 1914-இல் ஜி.ஏ. வைத்தியராமன் என்பவரால் 'ஜனாபிமானி' என்ற மாதிகை சென்னையிலிருந்தும், ஆரணி குப்புசாமி முதலியாரால் 1915-இல் 'ஆனந்தபோதினி' மாதிகையும், அதே ஆண்டு சென்னையிலிருந்து 'கதா ரத்னாகரம்' என்னும் மாதிகை எம்.ஏ. நெல்லையப்பராலும், கோவையிலிருந்து 1916-இல் கே.எஸ். சுப்பிரமணிய பிள்ளையால் 'திருவள்ளுவர்' மாதிகையும், அதே ஆண்டில் டி. கிருஷ்ணசாமிப் பாவலரால் 'பாரதி' என்ற மாதிகை சென்னையிலிருந்தும் வெளியிடப்பட்டன. 1917-ஆம் ஆண்டில் சென்னையிலிருந்து 'திராவிடப் பத்திரிகை' எனும் கிழமை இதழ் வெளி வந்தது.

திரு. வி. கலியாணசுந்தரனாரை ஆசிரியராகக் கொண்டு 1917-ஆம் ஆண்டில் 'தேசபக்தன்' எனும் தேசிய நாளிதழ் சென்னையில் தோற்றுவிக்கப்பட்டது. திரு.வி.க. அவர்கள் இரண்டரை ஆண்டுக்காலம் தம் உள்ளக்கிடக்கைகளை வெளிப்படுத்த நிறைய எழுதி, தம் ஆற்றல் முழுவதையும் நல்ல தமிழில் உலகுக்குக் காட்ட அந்நாளேடு நன்கு பயன்பட்டது.

'தருமசீலன்' என்ற மாதிகை 1918-இல் தி. ஆதிநயினாராலும் முதலில் பிறை ஏடாகவும் பின்னர் மாதிகையாயும் நடத்தப் பெற்ற 'நவசக்தி' 1920-இல் திரு. வி.கலியாணசுந்தரனாராலும், 'ஒற்றுமை' என்னும் மாதிகை 1922-இல் பி.வி.கண்ணனாலும் 'செந்தமிழ்ச் செல்வி' எனும் மாதிகை 1923-இல் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாலும், 'செந்தமிழ்ச் சிந்தாமணி' என்ற மாதிகை 1924-இல் எம்.கே. ஜெயராம நாயுடுவாலும், 'பஞ்சாமிர்தம்' என்னும் மாதிகை அதே ஆண்டில் அ. மாதவய்யாவாலும் வெளியிடப்பெற்றன. இவை அனைத்தும் சென்னையில் அச்சேறியவை. சென்னையிலிருந்து 'தமிழ்நாடு' எனும் தேசிய நாளிதழ் அதே ஆண்டில் எஸ். வரதராஜுலு நாயுடுவால் நிறுவப்பட்டு அக்கால இதழ் உலகில் ஒரு குறிப்பிட்ட இடத்தை ஈட்டிக் கொண்டது.

1924-ஆம் ஆண்டிலேயே சேரன்மாதேவியிலிருந்து வ.வெ.சு. அய்யரால் 'பாலபாரதி' எனும் மாதிகையும், எஸ்.இ. பெட்போர்டின் 'தீனபந்து' இதழ் வேலூரிலிருந்தும் வெளியாகின. ஆரணியிலிருந்து 'சுகோதயம்' என்னும் கிழமையேடு 1921-இல் ரங்கசாமி அய்யங்காரால் வெளிவந்தது. 1925-இல் தஞ்சையிலிருந்து ரா. வெங்கடாசலம் பிள்ளையை ஆசிரியராகப் பெற்று 'தமிழ்ப் பொழில்' எனும் மாதிகை தோன்றியது.

இருபதாம் நூற்றாண்டின் இரண்டாம் கால் நூற்றாண்டுப் பகுதியில் 'ஆனந்த குணபோதினி' (1926), 'ஆனந்த விகடன்' (1926), 'கலைமகள்' (1932), 'பிரசண்டவிகடன்' (1933), 'குமாரவிகடன்' (1933), 'தமிழ்த்தாய்' (1937), 'ஹனுமான்' (1938), 'சக்தி' (1940), 'தமிழன்' (1942), 'குமரிமலர்' (1944), 'பொன்னி' (1945), 'முல்லை' (1947), 'மஞ்சரி' (1948), 'கலைக்கதிர்' (1948), 'மணிவிளக்கு' (1948), 'அமுதசுரபி' (1949) முதலிய முகாமையான மாதிகைகளும், 'மணிக்கொடி' (1938), 'கல்கி' (1941) ஆகிய பிறை இதழ்களும், 'ஹநுமான்' (1927), 'தமிழ்நாடு' (1927), 'நாரதர்' (1933), 'பாரததேவி' (1939), 'திராவிடநாடு' (1942), 'குயில்' (1940), 'வெள்ளிமணி' (1947), 'காண்டீபம்' (1946), தமிழ்முரசு (1946) முதலிய கிழமையேடுகளும், 'தினமணி' (1934), 'பாரததேவி' (1940), 'தினசரி' (1944), 'தந்தி' (1947) ஆகிய நாளிதழ்களும் பிறப்பெடுத்தன. அதாவது பெரியார் நிறுவிய பின் தோன்றியவை அவை.

## கிளம்பினார் பெரியார்!

தந்தை பெரியார் அன்றையக் காலக்கட்டத்தில் தேசிய காங்கிரஸ் தலைவர்களில் ஒருவராய் இருந்த நிலையில், இப்படிப்பட்ட வரலாற்றுப் பின்னணிக் களத்தில்தான் ஓர் இதழாளராகக் கடமையாற்றக் கிளம்பினார்.

19-ஆம் நூற்றாண்டிலும் 20-ஆம் நூற்றாண்டின் முதல் கால் நூற்றாண்டிலும் வெளியான இதழ்களில் விரல்விட்டு எண்ணக்கூடிய இதழ்களின் பெயர்களைத் தவிர, மற்ற அத்தனை இதழ்களின் பெயர்களும் தமிழ்ப்பெயர்கள் அல்ல; வேற்றுமொழிப் பெயர்களாகவே அவை இருந்தன. லோகோபகாரி, தேசோபகாரி, தேஜோபிமானி, ஜனாநுகூலன் போன்ற பெயர்கள் எளிதிலே உச்சரிக்கக்கூடியவையா? அந்த அளவிற்கு மொழி அடிமைத் தனத்துக்கு உள்ளாகியிருந்தனர் உலகத் தமிழ் மக்கள்!

அக்காலத்திய இதழ்களில் அடங்கிய செய்திகள் யாவை? கிறித்தவ சமயத்தைப் பரப்பும் நோக்கத்துடன் சில இதழ்கள் கருத்துகள் வெளியிட்டன; சில இதழ்கள் இஸ்லாம் மதக் காப்புக்காகவும் முஸ்லீம்களின் நலக்காப்புக்காகவும் மட்டுமே நடத்தப்பட்டன; சைவ சமயத்தின் பெருமைகளை அடுக்கின சில இதழ்கள். இவையெல்லாம் முழுக்க ஆத்திகக் கண்ணோட்டத்துடன் செய்திகள் தந்தவை.

சில இதழ்கள் இந்து சமயப் புராணக்கதைகள் - புண்ணிய சரித்திரங்கள் வெளியிட்டு 'ஆன்மீகம்' பரப்பும் கடமைக்கே தங்களை ஒப்படைத்துக் கொண்டன; பெண்களுக்குப் 'பதிவிரதாத்தன்மை' கற்பிக்கவும், அவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய 'விரதாதிகள்' பற்றி விரித்துரைக்கவும் பாடுபட்டன சில; சில அன்றாட இல்லற வாழ்வுக்கான நடைமுறைக் குறிப்புகள் வழங்கின; 'நீதிபோதனை' அளிக்கும் பணியேற்றன சில ஏடுகள்.

சிரித்துத் தள்ளுவதற்கென்றே சில இதழ்கள் 'விகடங்கள்' வெளியிட்டன; சில ஜீவகாருண்ய விளக்கங்கள் தரும் கடமையைச் செய்தன; அறிவியல் வளர்ச்சி பற்றிய செய்திகளையும் ஒன்றிரண்டு ஏடுகள் பரப்பின; சில இதழ்கள் பொதுத்தன்மை வாய்ந்த உலகச் செய்திகளை மக்கட்குத் தந்தன; சில இதழ்கள் தாம் பிறந்த மாவட்டங்கள் தொடர்பான செய்திகளுக்கு முதன்மை கொடுத்தன; ஆங்கிலச் சிறுகதைகளையும் நெடுங்கதைகளையும் தமிழில் மொழியாக்கம் செய்து அச்சேற்றின சில ஏடுகள்.

தமிழ்ப் பெயர்கள் தாங்கி, தாய்மொழியுணர்வினைப் புகட்டும் நோக்கம் மட்டுமே ஏற்று, சில இதழ்கள் கடமை புரிந்தன. ஆனால் அவற்றால் தமிழின் பழம்பெருமை, தமிழிலக்கிய நயங்கள், இறை நம்பிக்கை ஆகியவற்றை அடிப்படையாய்க் கொண்டுதான் பேச முடிந்தது. தாய்மொழியறிவு, தாய்மொழிப்பற்று என்னும் பயன்கள் அவ்விதழ்களால் விளைந்தன என்பது உண்மை.

அரசியல் - அதாவது வெள்ளையர் ஆட்சியிலிருந்து விடுதலை எய்தும் அரசியல் - எனும் குறிக்கோளுடன் நடத்தப்பட்டன சில ஏடுகள். 'இந்தியத் தேசியம்' என்பதில் நம்பிக்கை பெற்றிருந்தன அவை. எனவே தென்னக - திராவிட - தமிழின மக்களின் நலன்களை முற்றாகப் பிரித்துக் காண அவை முன்வரவில்லை. பார்ப்பனர் - பார்ப்பனரல்லாதார் எனும் சிக்கல், வகுப்புரிமை என்னும் வழிமுறை, தமிழரை அடிமை கொண்ட அயற்பண்பாடு, வடமொழியின் வல்லாட்சி ஆகியவை பற்றி ஆழமான அக்கறை காட்ட அவை முனையவில்லை. அரசியல் விடுதலைக்கும், இந்திய தேசிய ஒற்றுமைக்கும் மேற்குறிப்பிட்ட கருத்துகள் பாதிப்பை உண்டாக்கக் கூடியவை என்பதாக அவை கருதின. வகுப்புரிமைக் கோரிக்கையை வற்புறுத்தியோரை 'வகுப்பு துவேஷிகள்' என்று அழைக்கவும் அவை தயங்கவில்லை! எனவே அடிமைத் தன்மையின் பல்வேறு கூறுகளைப் பற்றி நன்கு ஆராய்ந்து மூலகாரணங்களைக் கண்டுபிடிக்க வேண்டியதைக் கடமையாக அவை ஏற்றுக் கொள்ளவில்லை. அங்கொன்றும் இங்கொன்றுமாக அவை சீர்திருத்தங்கள் பேசினாலும், அவற்றின் அணுகு முறைகளில் முழுமை இல்லாமற் போயிற்று!

## இதழியலில் பெரியாரின் தனித்தன்மை

தந்தை பெரியார் எந்தப் பொருளானாலும் அதன் வேர்வரை சென்று பார்க்க வேண்டும் என்னும் அறிவியல் அணுகுமுறையையே இயல்பாக்கிக் கொண்டவர். சான்றாக, பெண்ணின் பெருமை குறித்துப் பிற அறிஞர்கள் பேசினால், பெண் ஏன் அடிமையானாள் என்பதற்கான மூலங்களைக் கண்டு காட்ட வேண்டும் என்னும் திறனாய்வில் இறங்கியவர் அவர். உண்மை - செம்மை என்பதே அவர் மேற்கொண்ட வினைசெயல் வகை. முழுப்பகுத்தறிவு - முழுவுரிமை - முழுப்புரட்சி அவரின் இறுதி இலக்காய் இருந்தமையை நாம் உணர முடியும். ஏனைய ஏட்டாளர்களின் நோக்கும் போக்கும் மாறுபட்டும் வேறுபட்டும் இருந்தன.

மக்களிடையே நன்கு புழங்கிக் கொண்டிருந்த ஏடுகளில் ஒன்றான 'லோகோபகாரி' மக்களுடைய நன்மைக்காக எப்படிப்பட்ட கருத்தினை வெளியிட்டது?

> "(விநாயகனை) அருகம்புல்லினால் அருச்சிப்பதனால் இஷ்டசித்திகளைப் பெறுவதுடன், நம் தேகத்திலிருக்கும் உஷ்ணம் நீங்கித் தேகாரோக்கியம் உண்டாகும். கல்லு, செம்பு, பொன், வெள்ளி இவைகளில் அமைத்து விநாயகனைப் பூசிப்பது

சிறப்புடைத்து. சர்க்கரை, சந்தனம், மஞ்சள், விபூதி, பசுவின் சாணம் முதலியவைகளினாலும் அமைத்துப் பூசிக்கலாம். இவைகளும் ஒன்றைவிட ஒன்று சிறப்புடைத்தாம்."

19-01-1928-ஆம் நாளிட்ட 'லோகோபகாரி'யில் காணப்படும் வழிகள் இவை. அதற்கு முன்னும் பின்னும் அவ்விதழில் இத்தகைய செய்திகள் தவறாமல் வந்தன.

'ஜெயமுண்டு பயமில்லை மனமே என்றும் குமரன் கைக் கணை யுண்டு என்றும் உறுதியுடன் 'நவசக்தி' தன் கடனாற்றி வருகின்றான். ஆண்டவனுக்கு நமது வணக்கம்."

இவ்வரிகள் 'பத்தாம் ஆண்டு' என்னும் ஆசிரியவுரையின் இறுதிப் பகுதியாக 16-10-1926ஆம் நாளிட்ட 'நவசக்தி'யில் வெளியானவை. ஆசிரியவுரை "ஆரிய நாட்டினர் ஆண்மை யோடியற்றும் சீரிய முயற்சிகள் சிறந்து மிக்கோங்குக" என்ற வரிகள் அடங்கிய பாட்டுடன் முடிகிறது.

அந்தக் காலத்தில் நிலவிய இந்தத் தட்ப-வெப்பச் சூழ்நிலையில் பெரியாரால் வாளாவிருக்க முடியவில்லை. துணிவுடைமைத் திருவுருவம் அவர்!

'மனிதத்தன்மையும் பகுத்தறிவும் உடையவன் அன்புகாட்ட வேண்டிய இடத்தில் அன்பும், கோபம் காட்ட வேண்டிய இடத்தில் கோபமும், விருப்புக் காட்ட வேண்டிய இடத்தில் விருப்பும், வெறுப்புக் காட்டவேண்டிய இடத்தில் வெறுப்பும் காட்டித்தான் தீரவேண்டும்' (குடியரசு, 18-12-1927).

இது பெரியாரின் பண்பாடு.

சீற்றத்தோடு சிலிர்த்து நின்ற அவர், சாற்றினார் 'வாய்மைப்போர்'. "வாருங்கள், போருக்கு" என்று - தொடைதட்டி, தோள்தட்டியன்று - தூவலொரு கையிலும் தாளொரு கையிலுமாகத் தூக்கிக்காட்டி, மாந்தப் பற்றில்லாப் பழைமை வெறியர்கள், சுரண்டல் கயவர்கள், அடக்குமுறைக் கொடியவர்கள் அனைவரையும் அறைகூவி அழைத்தார் பெரியார்.

## இதழ் தொடங்கும் எண்ணம்

"தாய்த் திருநாட்டிற்கு யாம் இதுகாறும் இயற்றிவரும் சிறு தொண்டினை ஒரு சிறு பத்திரிகை வாயிலாகவும் எம்மால் இயன்ற அளவு ஆற்றிவரல் வேண்டுமென", (குடியரசு: 02-05-1925)

தம்மிடத்தில் பேரவா எழுந்ததாகப் பெரியார் குறிப்பிட்டுள்ளார்.

இப்பேரவா எதனால் - எப்படி எழுந்தது? நாட்டை வாட்டி வந்த சிக்கல்களைப் பற்றிப் பெரியாருக்கு மற்ற தலைவர்களிடமிருந்து வேறுபட்ட - மாறுபட்ட - முரண்பட்ட தனிப்பார்வையும் அணுகுமுறையும் ஆய்வும் தீர்மானிப்பும் இருந்தன. அவற்றை மக்களுக்குப் புலப்படுத்த வேண்டுமே! பிற இதழ்களின் வாயிலாக அது முடியுமா? முடியாதென்பதே அன்றைய நிலை. அவரின் உள்ளத்தில் ஊற்றெடுத்துப் பொங்கிப் பெருகி வழிந்த அத்தனை கருத்துகளையும் எல்லா ஏடுகளும் ஏற்று வெளியிடும் என்பதற்கு என்ன உறுதி? 'நவசக்தி' போன்ற இதழ்கள் பெரியாரின் கருத்துகளில் சிலவற்றை, சில வேளைகளில் மட்டுமே வெளியிட்டன.

> **"அனேக பத்திரிகைகள் நமது நாட்டில் இருந்தாலும், தங்கள் மனச்சாட்சிக்கு உண்மை என்று பட்டதைத் தெரிவிக்க அஞ்சுகின்றன" என்பதாக அன்றைய இதழ் உலகம்பற்றி அவரே விளக்கியிருக்கிறார் (குடியரசு: 10-5-1925).**

நடைமுறைப் பார்வையுடன் நோக்கினால், பெரியார் படு முனைப்பாகப் பங்கேற்ற தேசியக் கட்சியான தமிழகக் காங்ரஸ் என்னும் பேராயத்தின் சார்பில் நடந்த திருநெல்வேலி - திருப்பூர் - திருவண்ணாமலை மாநாடுகளின் செய்திகள் அத்தனையும் தமிழ் ஏடுகளில் இடம் பெற்றுவிடவில்லை என்பதுதான் உண்மை. அதுபோல வைக்கம் - சேரன் மாதேவிக் கிளர்ச்சிகள் பற்றிய செய்திகள் முழுமையாக வெளியிடப் படவில்லை.

> **"தென்னிந்தியாவுக்கு – தென்னிந்தியர்களுக்கு நம்பிக்கையும் யோக்கியமும் உள்ள ஒரு பத்திரிகை வேண்டுமா? வேண்டாமா? 'சுதேசமித்திரனி'ன் போட்டியையும் கெடுதியையும் சமாளிப்பது லேசான காரியமல்ல" என்று தேசியத்திற்கு என்றே தோன்றிய இதழ் என்பதாக முத்திரை குத்தப்பட்ட 'சுதேசமித்திரன்' ஏடு பற்றித் தேசியத் தலைவராகிய பெரியார் இப்படிக் குறிப்பிட வேண்டியிருந்தது (குடியரசு: 22-11-1925).**

அப்படியென்றால் தமிழருக்கு எப்படியெல்லாம் தேசியம் என்ற போர்வையில் சுதேசமித்திரன் தீங்கு செய்திருக்கும்?

நாட்டு மக்களுக்காகப் பாடுபட்ட தேசியத் தலைவர்கள் என்போரின் மனப்போக்கு அக்காலக் கட்டத்தில் எவ்வாறு இருந்தது?

"செக்கு ஆட்டுவோரும் வணிகரும் சலவையாளரும் மற்ற தொழிலாளர்களும் தங்கள் குலத்தொழிலை விட்டுவிட்டுச் சட்டசபைக்கு வருவதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவர்கள் சட்டத்திற்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டியவர்களே தவிர, சட்டத்தை இயற்ற வேண்டியவர்கள் அல்லர்; அதற்கு அவர்கள் ஆசைப்படக்கூடாது".

இத்தகைய அரிய பொன்மொழியை உதிர்த்தவர் யார்? திலகர் பெருமான் என்று மதிப்புடன் அழைக்கப்பட்ட தேசியத் தலைவர்தான். பொதுமக்கள் பல்லாயிரக்கணக்கில் திரண்டிருந்த கூட்டத்திலேயே துணிச்சலாக அவர் இப்படிப் பேசினார்!

'மகாத்மா' என்றும் 'தேசத்தந்தை' என்றும் போற்றப்படும் காந்தியாரோ,

"கிராமவாசிகள் செருப்புத் தைத்தல், ஆடுமாடுகளை மேய்த்தல் முதலிய தொழில்களைச் செய்ய வேண்டும். அவர்கள் பம்பாய் வணிகர்களைப் போலப் பணக்காரர்களாக இருக்க நினைக்கக் கூடாது" என்று கூசாமல் கூறினார்!

"ஒரு பிராமணப் பையன் பிறசாதிப் பையனோடு ஒன்றாக உட்கார்ந்து சாப்பிடுமாறு வற்புறுத்தப்பட்டால் நான் ஒரு மாதம் உண்ணாவிரதம் இருப்பேன். காந்தியே வந்து சொன்னாலும் நான் ஒப்புக் கொள்ள மாட்டேன்"

என்று உறுமினார் எம்.கே. ஆச்சாரி என்னும் தமிழ்நாட்டுத் தேசியப் பார்ப்பனத் தலைவர் ஒருவர்!

பண்டித மதன்மோகன மாளவியா என்ற மூத்த தேசியத் தலைவர் உடன் தோழர்கள் அமர்ந்திருக்கும் பொது மேடையிலேயே தன் முகத்தைத் துணியால் மறைத்துக் கொண்டு 'ஜலம்' அருந்தினார்!

மேலும் 'காங்ரஸ்' மாநாடுகளில் பார்ப்பனருக்கும் அல்லாதாருக்கும் தனித்தனிப் 'பந்திகள்' போடப்பட்டன! தேவதாசி முறை ஒழிக்கப்படக் கூடாது" என்று தீர்மானம் நிறைவேற்றுவதற்காக "வர்ணாசிரம மாநாடு" என்றே ஒன்றைத் துணிச்சலாக நடத்தினார்கள் ஆரியப் பார்ப்பனர்கள்!

பிற சாதியாரோடு சேர்ந்தமர்ந்து உணவு அருந்தியமைக்காக ஆதித் திராவிடத் தோழர்கள் மரத்திலே கட்டி வைக்கப்பட்டு நையப் புடைக்கப்பட்டனர்.

"தம் சாதிகளை விட்டுவிட்டு மற்ற சாதிகளைச் சேர்ந்தவர்களை மணம் செய்வோரை ஹிந்துக்கள் என்று ஏற்கவே முடியாது"

என 'Hindu Message' எனும் ஏடு வக்கனை பேசியது.

"சமபந்தி போஜனத்திற்குச் சாதகமான நிலைமை அக்காலத்தில் இல்லை. பிராமணரும் பிராமணரல்லாதாரும் சமபந்தி போஜனம் செய்வதென்பது சாத்தியமில்லாத காலமாய் இருந்தது. பிராமணரல்லாதாருக்கு வெளித்திண்ணையில் இலைபோட்டுத் தான் பிராமணர் வீடுகளில் சாப்பாடு போடுவார்கள்".

இது திரு.வி.க. அவர்களே தம் வாழ்க்கைக் குறிப்புகளில் பதிவு செய்திருக்கிற செய்தி.

பண்பாட்டில் சிறந்து விளங்கிய நம் நாட்டைப் பாழாக்கியவை மாந்த அன்பில்லா இப்படிப்பட்ட பிற்போக்குத் தன்மைகள் அல்லவா? பெரியாரின் உள்ளம் இவற்றை ஏற்கவில்லை. இவற்றைக் கொடுமைகள் என்றே அவர் கருதினார். எனவே அவரின் குருதி கொதித்தது!

"மாந்தன் மாந்தனாக இருக்க வேண்டும்; மக்களிடையே எந்த உருவத்திலும் – வடிவத்திலும் ஏற்ற – தாழ்வுகள் நிலவக் கூடா; மக்களாயத்தில் சமவாய்ப்பும் சமபங்கும் சமவுரிமையும் சமநுகர்ச்சியும் இருக்க வேண்டும். இக்குறிக்கோளை எய்துவதற்கு எதனையும் கொள்ளலாம், எதனையும் தள்ளலாம்".

இதுதான் பெரியாரின் கொள்கை - நெறி. பெரியாரியல் – பெரியாரியம் என்று இதைத்தான் குறிப்பிடுகிறோம்.

பிற்போக்குக் கருத்துகள் ஆட்சி செய்து கொண்டிருந்த மக்களாயத்தை உய்விக்கவல்ல பெரியாரியல் என்பது ஒரு பெரும் புரட்சிக் கொள்கை! அனைவரும் அப்படித்தான் கருதினார்கள்.

புரட்சிக் கருத்துகளை வெளியிடுவதற்கும் பரப்புவதற்கும் ஏனைய தாளிகைகளை எதிர்பார்க்கவோ நம்பவோ முடியாது. அந்நிலையில் தமக்கென்று ஒரு தாளிகை இருந்தாக வேண்டிய இன்றியமையாமையைப் பெரியார் ஆழமாக உணர்ந்தார்.

"தமிழ் மக்களுக்குத் தேவையான சில கருத்துக்களைச் சொல்லிப் பதிந்தாக வேண்டும். இன்று ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் நாளை ஒரு நாள் ஏற்றுக் கொள்ளும் நிலை வரும். இக்கருத்துகளை சொல்லும் நிலையில் நான்தான் இருக்கிறேன். சொல்ல வேண்டிய கருத்துகளை நானே எழுதி, நானே அச்சுக்கோத்து, நானே அச்சிட்டு, நானே படித்துக் கொள்ளும் நிலைக்குப் போனாலும் 'குடிஅரசை' வெளியிட்டு, என் கருத்துக்களை வரும் தலைமுறைகளுக்கு விட்டுச் செல்ல வேண்டியது எனது கடமை" (குடியரசு: 10–6–1929)

என்பது அவரின் கூற்று. அந்த அளவிற்கு வருங்காலத் தலைமுறைகள்பற்றிக் கவலையும் கடமை வெறியும் அவருக்கு இருந்தன!

அரசியல் விடுதலை என்ற ஒன்றை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டது பேராயக் கட்சி. அதன் தேசியத் தலைவர்களில் ஒருவர் என்னும் நிலையில் இருந்தார் பெரியார். அரசியல் விடுதலைக்கும் அப்பால் அதனைத் துய்க்கப் போகும் தலைமுறைக்ளைப் பற்றிய கவலை அவருக்கு எந்த அளவிற்கு இருந்தது என்பதைத் தெளிவாகப் புலப்படுத்தும் நிகழ்ச்சி யொன்றைக் காட்ட விரும்புகிறேன்.

> "தேசத்தின் முன்னேற்றத்தை உத்தேசித்தும் தேசிய ஒற்றுமையை உத்தேசித்தும், அரசியல் சம்பந்தமான சகல பதவிகளிலும் இந்து சமூகத்தின் பிராமணர், பிராமண ரல்லாதவர், தீண்டாதார் என்போர் ஆகிய இந்த மூன்று சமூகத்தார்க்கும் அவரவர் ஜனத்தொகையை அனுசரித்துப் பிரதிநிதிஸ்தானம் கிடைக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டுமாய் மாகாண மகாநாட்டைக் கேட்டுக் கொள்வதோடு, இத்தீர்மானத்தை மாகாண மகாநாடு மூலமாய், காங்கிரசையும் வலியுறுத்தும்படியும் தீர்மானிக்கிறது"

என்னும் தீர்மானத்தைக் காஞ்சிபுரம் பேராயத்தில் முன்மொழிந்து பெரியார் விளக்கியது என்ன?

> "நாம் ஒவ்வொருவரும் சுயராஜ்யம் அடையப் பாடுபடுவதாய்ச் சொல்கிறோம். அதற்காக எவ்வளவோ கஷ்டத்தையும் அனுபவிக்கிறோம். சுயராஜ்யம் கிடைத்தால் அது பொதுமக்கள் ராஜ்யமாய் இருக்க வேண்டாமா? நாட்டின் தற்கால நிலைமையைப் பார்த்தால் சுயராஜ்யம் என்பது பிராமண ராஜ்யம்தான் என்னும் பயம் இப்போது மக்களிடையே உண்டாகிவருகிறது. பிரிட்டிஷ் ஆட்சி புரிகிற இந்தக் காலத்திலேயே மனிதர்களைத் தெருவில் நடமாட விடக்கூடாது; குளம்-குட்டைகளில் தண்ணீர் எடுக்க விடக் கூடாது என்னும் பல கொடுமைகள் நடைபெறுகிறபோது, இராஜ்ய அதிகாரம் ஒரு வகுப்பார் கைக்கே வந்துவிடுமானால், இனி என்னென்ன கொடுமைகள் செய்வார்களோ என்று ஜனங்கள் பயப்படு கிறார்கள். 'வெட்கங்கெட்டவன் சொந்தக்காரன்' என்பதுபோல், விவஸ்தையற்ற ஒரு கூட்டத்தார் தேசத்தில் இருந்து கொண்டு தேசத்தைப் பாழ் பண்ணிக் கொண்டுவருவதை நாம் பார்த்துக் கொண்டே வருகிறோம். இப்படி ஏன் இருக்க வேண்டும்?".

இவை அரசியல் விடுதலைக்கும் மேலாக, 'சமூகநீதி' என்று இன்று பேசப்படுகின்ற மக்களாயப் பொதுவுரிமை எனும் குறிக்கோள் நெருப்பு அவருள் கனன்று கொண்டிருந்தது என்ற பேருண்மையை வெளிச்சமிட்டுக் காட்டும் துணிச்சல் நிரம்பிய சொற்கள். நாட்டின் இத்தகைய தட்ப-வெப்ப நிலையில்தான் பெரியார் ஓர் இதழாளர் ஆகும் நிலை விளைந்தது.

******

# 'குடியரசு' பிறந்தது!

> "குடிஅரசு என்னும் பத்திரிகையை ஆரம்பிக்க வேண்டும் என்பதாக முதன்முதல் நானும் எனது நண்பர் தங்கப்பெருமாள் பிள்ளையும் 1922–இல் கோயம்புத்தூர் ஜெயிலில் சிறைவாசம் செய்யும்போதே நினைத்தோம்"

என்று தெரிவிக்கும் பெரியார், மூன்றாண்டுகள் கழிந்தபின் தன் நினைப்பை நடப்பாக்கினார். ஆம் 2-5-1925 அன்று குடிஅரசு பிறந்தது, கொடுமைகள் களைய - புதுமைகள் விளைய!

தம் புரட்சிக் கருத்துகளை வெளியிட்டுப் பரப்புதற்கும் பயன்கள் குவிப்பதற்கும் கார்ல் மார்க்ஸ் அவர்களுக்கு ரைனிஷ் இதழ், ஜெர்மன் ஃப்ரெஞ்ச் வரலாற்றேடு ஆகிய இதழ்களும் லெனின் அவர்களுக்கு, இஸ்க்ரா, ஸார்யா, ரயோச்சயா கஸேத்தா ஆகிய இதழ்களும் ஹோ'ா-சி-மின் அவர்களுக்கு வியத்லாப் என்ற இதழும் அம்பேத்கார் அவர்களுக்கு ஜனதா, பகிஷ்கிரத், பாரத் ஆகிய இதழ்களும் பெருந்துணையாய் அமைந்திருந்தன என்பதையும் அவ்விதழ்களில் அச்சேறிய எழுத்துகள் இன்று வரை உலக மக்களுக்குப் பயன்பட்டு வருகின்றன என்பதையும் நாம் தெரிந்திருக்கிறோம்.

அவ்வாறே பெரியாருக்குக் 'குடிஅரசு' அமைந்தது. எனவே 'குடிஅரசின்' தோற்றம் முழுக்க முழுக்க ஒரு வரலாற்றுக் கட்டாயம்.

'குடிஅரசு' என்று தம் இதழுக்குப் பெயரிட்டது ஏதோ தற்செயலாக நடந்துவிட்ட ஒன்றல்ல. அது திட்டமிட்ட செயல். 19-1-1923 அன்றே அய்யா 'குடிஅர'சைப் பதிவு செய்து விட்டார். அது நடப்புக்கு வர 2 ஆண்டுகள் ஆயின. (குடிஅரசு: 1-5-1927).

> "ஜனநாயகம் என்பது வடமொழிச் சொல். அதை வேண்டாமென்று ஒதுக்கி, 'குடிஅரசு' என்ற பெயரை வைத்தேன்" என்று அவரே வெளியிட்டிருக்கிறார். தூய தமிழ்ப் பெயர் சூட்டுவதில் அவருக்கிருந்த நாட்டத்தை இது காட்டுகிறது.

சிறையிலிருந்தபோது திட்டமிட்ட வண்ணமே, ஈரோடு - கருங்கல் பாளையத்தைச் சேர்ந்த கற்றறிந்த வழக்குரைஞரும் பண்பாடு நிரம்பிய பேராயக் கட்சி முன்னோடியும் பெரியாரின் நடவடிக்கைகளுக்குத் தோள் கொடுக்கத் தயங்காதவருமாகிய

திரு தங்கப்பெருமாள் அவர்களையும் இதழ் தொடங்கும் தம் முயற்சிக்குத் துணையாக வைத்துக் கொண்டார். இதழாசிரியர்களாக ஈ.வெ. இராமசாமி நாயக்கர், வ.மு. தங்கப் பெருமாள் பிள்ளை என இருவர் பெயர்களும் சாதிப் பின்னொட்டுகளுடன் இடம் பெற்றிருந்தன.

மாலை-க; மலர்-க; குரோதன வருடம் சித்திரை மாதம் (2-5-1925) சனிக்கிழமை என்றும் இனி ஞாயிறுதோறும் வெளிவரும் எனவும் குறிப்பிடப்பட்டிருந்த முதற் 'குடிஅரசு' இதழின் முகப்பு அட்டையின் மேற்பகுதியில் துறவி ஒருவர், மூன்று மதங்களின் கோவில்கள், இந்தியத் தாய், நெசவு செய்யும் காந்தியார், உழவு இயற்றும் உழைப்பாளி, கைராட்டை சுழற்றும் பெண், மரத்தச்சுத் தொழிலாளி, மூட்டை சுமக்கும் பாட்டாளி ஆகிய படங்களும், "எல்லாருமோர் குலம் எல்லாருமோரினம் எல்லாருமோர் விலை, எல்லாரு மிந்நாட்டு மன்னர் (பாரதி)" என்றும், "சாதிகளில்லையடி பாப்பா - குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொலல் பாவம், நீதி உயர்ந்த மதி கல்வி - அன்பு நிறைய உடையவர்கள் மேலோர்' (பாரதி) என்றும் அச்சியற்றப்பட்டிருந்தது.

அட்டையின் கீழ்ப் பகுதியில், "சிறந்த தமிழ்ப் பத்திரிகை, வருட சந்தா மூன்றுதான்" என்றும், "தமிழ் மக்கள் எல்லாத் துறைகளிலும் முன்னேற்றமடைய உழைக்கும் பத்திரிகை இது. ஆகையால் இதனை ஆதரிக்க வேண்டியது உங்கள் முதற்கடன் ஆகும். உடனே சந்தாதாரராய்ச் சேருங்கள்" என்றும் பெரிய எழுத்துக்களில் குறிப்பிடப்பட்டிருந்தது. மேலும் முகப்பட்டையின் வலதுமேல் மூலையில் "தனிப்பிரதி விலை அணா ஒன்று" என்றும் ஆங்கிலத்தில் 'KUDI ARASU' என்றும் அச்சிடப்பட்டிருந்தது.

இதழின் உள்ளே ஆசிரியவுரைப் பக்கத்தின் முதற்கலத்தின் மேற்பகுதியில் கைராட்டையின் படமும், "பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமை யான்", "ஒழுக்க முடைமை குடிமை; இழுக்க மிழிந்த பிறப்பாய் விடும்", "வேலன்று வென்றி தருவது மன்னவன் கோலதூஉங் கோடா தெனின்" எனும் மூன்று குறட் பாக்களும் பொறிக்கப்பட்டிருந்தன.

சில காலஞ்சென்று 23-8-1925ஆம் நாளிட்ட 'குடிஅரசு' இதழிலிருந்து குறட்பாக்களுக்கு மாற்றாக, "அனைத்துயிர் ஒன்றென்றெண்ணி அரும்பசி எவர்க்கும் ஆற்றி மனத்துளே பேதாபேதம் வஞ்சகம் பொய் களவு சூது சினத்தையும் தவிர்ப்பா யாகில் செய்தவம் வேறொன் றுண்டோ? உனக்கிது உறுதியான

உபதேசம் ஆகுந் தானே" என்ற பாடல் இராட்டைப் படத்தின் கீழே இடம் பெற்றது. ஆசிரியர்களில் ஒருவராகத் தொண்டாற்றிய அறிஞர் தங்கப் பெருமாள் அவர்கள் உடல்நலப் பாதிப்புக்கு இலக்காகி, பொறுப்பிலிருந்து விலக நேரிட்டது. பின்னர் 26-7-25 ஆம் நாளையக் 'குடிஅரசி'லிருந்து ஆசிரியராகப் பெரியார் பெயர் மட்டுமே இருந்து வந்தது.

காலப்போக்கில், கைராட்டைப் படமும் 'அனைத்துயிர் ஒன்று' எனும் பாடலும் முறையே 16-2-30, 27-7-30ஆம் நாள்களில் நீங்கிவிட்டன. இன்னொன்றையும் இங்கே குறிப்பிட வேண்டும். 'குடிஅரசி'ன் முகப்பு அட்டையின் மேல்பகுதியில் இடம் பெற்றிருந்த படங்களும் சொற்களும் 25-12-97ஆம் நாளிட்ட இதழிலிருந்து எடுக்கப்பட்டுவிட்டன. அதே நாளிட்ட இதழிலிருந்து ஆசிரியர்: ஈ.வெ.இராமசாமி நாயக்கர் என்ற பெயரின் சாதிப் பட்டப் பின்னொட்டு இல்லாதொழிந்தது.

அக்காலத்தின் செய்தியேடுகளுக்கென உருவாக்கப்பட்ட தாளில்தான் 'குடிஅரசு' அச்சாகியது. பக்கத்திற்கு மூன்று கலங்களெனப் பத்தி பிரிக்கப்பட்டு, 12 பக்கங்கள் கொண்டதாய் ஒவ்வோர் இதழும் அச்சடிக்கப் பெற்றது. இதழின் அளவு 12" x 15" அக்காலத்திய அளவு முறை குறிப்பிடப்பட்டுள்ளது.

தலையங்கம் எனும் ஆசிரியவுரை, பல்துறைக் கட்டுரைகள், அரசியல் - குமுகாயம் - இலக்கியம் - பண்பாடு தொடர்பான நிகழ்ச்சிகளின் செய்திகள், பெட்டிச் செய்திகள், பிற இதழ்கள் பற்றிய திறனாய்வுகள், 'ஆசிரியர்க்கு மடல்கள்', சுயமரியாதை இயக்கத் தோற்றத்திற்குப் பிறகு - குறிக்கோள் மொழிகள், அவ்வப்போது கவிதைகள், விளம்பரங்கள் முதலிய பல்வகைக் கூறுகளும் அடங்கிய அழகிய அரியதோர் இதழாகக் 'குடிஅரசு' மிளிர்ந்தது.

'குடிஅர'சின் உயர்ந்த தரத்தினைப் பறைசாற்றவல்ல வேண்டுகோள் துண்டமொன்று இதோ:

> "குடிஅரசு நேயர்களுக்கு ஓர் வேண்டுகோள் – நிருபர்கள் குடிஅரசு 'பத்திரிகையில் பிரசுரிக்க வேண்டிய கட்டுரைகள் – செய்திகளைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் காகிதத்தின் ஒரு பக்கத்தில் இடது ஓரத்தில் ஓர் அங்குல இடம் (மார்ஜின்) விட்டு, வரிகட்கு இடையில் குறைந்தது. அரை அங்குல இடம்விட்டு எழுதியனுப்புவதுடன், தங்களின் முழு விலாசத்தையும் தெரியப்படுத்த வேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறோம். தனிப்பட்ட நபர்களைக் குறித்து அனுப்பப்படும் கண்டனங்

களும் 'ஊர்வம்பு விஷயங்களும்' பிரசுரிக்கப்படமாட்டா. பிரசுரிக்கப்படாத விஷயங்கள் திருப்பி அனுப்பப்படமாட்டா".

எப்படி, குடிஅரசின் தனிச்சிறப்பு - பார்த்தீர்களா? செய்தியாளர்கள் பொதுத்தன்மை வாய்ந்த செய்திகளையே முறைப்படி அனுப்ப வேண்டும். தனிப்பட்டவர்களைப் பற்றிய ஊர் வம்புச் செய்திகளுக்கு இடமில்லை. புரட்சிக் கருத்துக்களைத் தாங்கி வரும் தம் இதழ் தரம் வாய்ந்ததாகவும் இருக்க வேண்டும் என்பதில் குறியாய் இருந்தார் பெரியார். அவரின் பண்பாடே அதுதான்.

பக்கங்களைக் குறிக்கப் பெரியார் பயன்படுத்தி வந்த தமிழ் எண்களை மாற்றிவிட்டு 16-6-1929ஆம் நாளிலிருந்து 1, 2, 3, 4, ____ என்று எண்கள் இட்டார்.

சிறந்த அறிஞர்களின் உண்மை நாட்டும் கட்டுரைகளும் உண்மை காணும் கட்டுரைகளும் 'குடிஅர'சில் வெளிவருமாறு செய்தார் பெரியார். அடிநாள்களில் தாம் வெளிப்படுத்தக் கருதிய செய்திகள்பற்றி விரித்துரைக்கவே பெரியாருக்குத் தம் இதழில் இடம் போதவில்லை. "ஆரம்பத்தில் ஒவ்வொரு வாரமும் 12 பக்கமும் நாமே எழுதி வந்திருக்கின்றோம்" என்பது அவரின் கூற்று.

ஆனால் அதே நிலை தொடர்ந்து நீடிக்கவில்லை. பேராயக் கட்சியின் அக்காலத்திய நடவடிக்கைகள் தொடர்பாகவும், தாம் மேற்கொண்ட நிலைப்பாடுகள் பற்றியும் இன்றியமையா முகாமைச் செய்திகளையும் அடிப்படைக் கருத்துகளையும் 'நாட்டு மக்களின் முன் வைக்க வேண்டுமென்ற கடமையைப் பெரியார் நிறைவேற்றியதோடு, கற்றுத் துறைபோகிய கைவல்லிய சாமி, சந்திரசேகரப் பாவலர், ஈழத்துச் சிவானந்த அடிகள், சாமி சிதம்பரனார், பண்டித முத்துச்சாமி, கே.எம். பாலசுப்பிரமணியம், மா. சிங்காரவேலர், சீனி. வேங்கடசாமி முதலிய புலவர்களையும், ஆய்வுத்திறன் படைத்த கோவை அய்யாமுத்து, ஜனக சங்கர கண்ணப்பர், சா. குருசாமி, ப. ஜீவானந்தம் முதலிய அறிஞர்களையும் தரமுயர்ந்த முற்போக்குக் கட்டுரைகளைக் 'குடிஅர'சில் எழுத வைத்ததோடு, பாரதிதாசன், எம்.ஆர்.. மத்திரன், ஜீவானந்தம் ஆகியோரின் உணர்ச்சிப் பாக்களையும் பெற்று வெளியிட்டார். அறைகூவலாய் அமைந்த அவர்களின் படைப்புகள் ஆரிய வைதிகத்தை அலற வைத்தன; தேசியங்களைத் திணற அடித்தன.

கட்டம் கட்டி வெளியிடப் பெற்ற பகுத்தறிவு - இனமான முழக்கங்கள் சில:

"மனுநீதி போன்ற அதர்ம நீதி உலகில் மற்றொன்று இல்லை!"

"சூத்திரன் என்று உன்னைச் சொல்லிக் கொள்ளாதே!
சூத்திரன் என்றால் வேசிமகன் என்று பொருள்"

"இறந்தவர்களைத் திருப்தி செய்யப்
பார்ப்பனர் வயிற்றை நிரப்பாதே"

இதழின் அட்டைக்காகப் பச்சைநிற வழுவழுப்புத் தாளை 13-4-1930ஆம் நாளிலிருந்து பெரியார் பயன்படுத்தினார். அதிலிருந்து தமிழ் மக்கள் 'பச்சை அட்டை 'குடிஅரசு" என்றே வழங்கும் நிலை உருவானது.

## எழுத்துச் சீரமைப்பு

இதழாளர் என்ற முறையில், அச்சுப் பொறியில் பயன்படுத்தப்பட்டு வந்த தமிழ் எழுத்துகளில் சிலவற்றில் புரட்சித்தன்மை வாய்ந்த வடிவ மாற்றங்களை உருவாக்கிய பெரியார், செயற்கரிய செய்து, வள்ளுவரின் இலக்கணத்திற்கேற்ற இலக்கியமானார். தமிழ் எழுத்துகளின் வரிவடிவங்களில் தகுந்த மாற்றங்களை உண்டாக்கினால் எழுத்துகளின் எண்ணிக்கை பெருமளவுக்குக் குறைந்துபோய், அச்சுக்கலை மட்டுமின்றி, தமிழ்மொழி பயிலுவதும் மிகமிக எளிதாகிவிடும் என்று அவருக்குப் பட்டது.

தொடக்க நிலையில் நிறைய மாற்றங்களைப் புகுத்தாமல், ணா, னா, றா ஆகிய வரிவடிவங்களை, ணா, னா, றா என்றும் ணை, னை, லை, ளை ஆகிய வரிவடிவங்களை ணை, னை, லை, ளை என்றும் மாற்றம் பண்ணலாம் என முடிவெடுத்து, அதை 20-1-1935ஆம் நாளிட்ட 'குடிஅரசி'ன் ஆசிரியவுரையில் அறிவித்து, புதிய வடிவங்களை மக்களுக்கு அறிமுகப்படுத்தினார் பெரியார்.

> "தமிழ் எழுத்துகளில் செய்யப்பட வேண்டிய மாற்றங்கள் பல என்பதைப் பற்றிப் பலருக்கு அபிப்பிராயம் இருந்தாலும் எவரும் தைரியமாய் முன்வராமலே இருக்கின்றார்கள். இவ்வளவு பெரிய காரியத்திற்குப் பாஷை ஞானம், இலக்கண ஞானம், பொதுக்கல்வி ஆகியவை இல்லாத ஒரு சாதாரண மனிதன் முயற்சிக்கலாமா என்பது ஒரு பெரிய கேள்வியாக இருக்கலாம். ஆனால் தகுந்த புலமையும் பாஷா ஞானமும் இலக்கண அறிவும் உள்ளவர்கள் எவரும் முயற்சிக்காவிட்டால் என்ன செய்வது? தவம் செய்வதா? அல்லது ஜபம் செய்வதா?"

- பெரியார் இப்படிக் கேட்டார்.

தம் 'குடிஅரசு' ஏட்டில் மட்டுமல்லாமல், தாம் பொறுப்பேற்க நேர்ந்த 'விடுதலை' - நாளிதழிலும் துணிச்சலாகத் தமிழெழுத்துச் சீரமைப்பை அவர் கடைப்பிடித்தார்.

மேலும் ஒரு சீரமைப்பு நடவடிக்கையில் 12 ஆண்டுகளுக்குப் பின் பெரியார் இறங்கினார். அது ஐ, ஔ ஆகிய இரு தமிழெழுத்துக்கள் தொடர்பானது.

> **"உயிர் எழுத்துகள் என்பவைகளில் ஐ, ஔ என்கின்ற இரண்டு எழுத்துகளும் தமிழ் பாஷைக்கு அவசியமில்லை என்பதே நமது வெகுநாளைய அபிப்ராயமாகும். ஐகாரம் வேண்டிய எழுத்துகளுக்கு 'ை' என்ற அடையாளத்தைச் சேர்ப்பதற்குப் பதிலாக 'ய்' எழுத்தைப் பின்னால் சேர்த்துக் கொண்டால் ஐகார சப்தம் தானாகவே வந்து விடுகிறது. உதாரணமாகக் 'கை' என்பதற்குப் பதிலாகக் 'கய்' என்று எழுதினால் சப்தம் மாறுவதில்லை. அதுபோலவே 'ஔ'காரத்துக்கும், 'கௌ' என்பதற்குப் பதிலாகக் 'கவ்' என்றோ 'கவு' என்றோ எழுதினால் சப்தம் மாறுவதில்லை. கௌமதி-கவ்மதி கவுமதி என்கிற சப்தங்கள் ஒன்றுபோலவே உச்சரிப்பதைக் காணலாம்."**

என்று ஏற்கனவே எடுத்துக்காட்டியிருந்த பெரியார்,

> **"ஐ, ஔ ஆகிய இரண்டு எழுத்துகளையும் பொறுத்து முன்பு எடுத்துக்காட்டிய அளவுக்கு இப்பொழுது ஒரேயடியாக உயிர்மெய் எழுத்துகளிலும் நாம் மாற்றம் செய்ய விரும்பவில்லை என்றாலும் 'ஐ' என்பதை 'அய்' என்றும் 'ஔ' என்பதை 'அவ்' என்றும் சிற்சில சந்தர்ப்பத்தில் எழுதிக் கொண்டு வந்திருக்கிற போக்கில் அடுத்த இதழிலிருந்து 'அய்' என்றும் 'அவ்' என்றுமே வழங்குவதென முடிவுகட்டியிருக்கின்றோம்"**

என்பதாக 27-12-1947-ஆம் நாளிட்ட 'குடிஅர'சில் அறிவித்துவிட்டு, அப்படியே அதை நடைமுறைப்படுத்தினார்.

இதன் தொடர்பாக அவர் அவ்வறிக்கையிலேயே,

> **"ஐ என்பது, எழுத்துகளைப் பழகிக் கொள்கிற சிறு குழந்தைகளுக்கு எவ்வளவு வருத்தத்தை உண்டுபண்ணி வந்திருக்கிறது என்பதையும், 'ஐ' என்ற எழுத்தை எழுதத் தெரியாமல், ஆரம்ப ஆசிரியர்கள் அடிக்கும் அடிக்குப் பயந்து எத்தனை சிறுவர்கள் பள்ளிக்கூடத்தையே விட்டுவிட்டார்கள் என்பதையும், 'ஔ' என்ற எழுத்தை 'அவ்' என்று படிப்பதா 'வொள' என்று படிப்பதா எனத் தடுமாற வேண்டிய நிலையில் இருக்கிறது"**

என்பதாகக் குறிப்பிட்டிருப்பது பற்றி இன்றைக்கும் தமிழ் மக்களும் தமிழறிஞர்களும் தமிழக அரசும் முடிவுக்கு வராமல் இருக்கிற நிலைதான் விந்தையிலும் விந்தை!

> அறிஞர் சோம. லெ. அவர்கள், "பத்திரிகையின் தேவைக்கேற்ப, எழுத்துச் சீர்திருத்தம் செய்ய முன்வந்தவர் பெரியாரே. பெரியாரின் சிந்தனைப் போக்கினைத் தொடர்ந்து, இந்தியா, இலங்கை, இங்கிலாந்து, ஆகிய நாடுகளிலிருந்து வந்த பேராளர்கள் யாழ்ப்பாணத்தில் 1972 இறுதியில் நிகழ்ந்த உலகத் தமிழ் மாநாட்டில் கட்டுரைகள் வாசித்துள்ளனர். பெரியாருடைய எழுத்துச் சீர்திருத்தத்தை ஏற்பதே தமிழக அரசு அவருக்கு நாட்டக்கூடிய நினைவுச் சின்னமாகும்' என்று கருத்து வெளியிட்டார். (தமிழ் இதழ்கள் : சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு).

அவ்வாறே நடந்தது. தமிழக அரசு மட்டுமின்றி மலேசியா, சிங்கப்பூர் அரசுகளும் பெரியாரின் வழிகாட்டலை ஏற்றுக் கொண்டன!

## குடிஅரசின் நோக்கங்கள்

பேராயக் கட்சியின் தமிழ்நாட்டுத் தலைவராக மட்டும் நாட்டுத் தொண்டாற்றிக் கொண்டிருந்த பெரியார், ஓர் இதழாளராகவும் பணி புரிய வேண்டிய கட்டாயத்திற்கு இலக்கான சூழ்நிலைகளை அறிந்தோம்.

'குடிஅர'சின் நோக்கங்களாகத் தொடக்க இதழ்களில் பெரியார் குறிப்பிட்டவை வரலாற்றுச் சிறப்புடையவை.

முதற் 'குடிஅரசு' இதழிலேயே ஒளிவு-மறைவு எதுவுமின்றி அவர் தமது உள்ளத்தை நிரப்பிக் கொண்டிருந்த கருத்துகளை வெளியே கொட்டிவிட்டார்.

> "நமது நாடு அரசியல் பொருளியல் சமூகவியல் ஒழுக்கவியல் முதலிய எல்லாத் துறைகளிலும் மேன்மையுற்று விளங்கச் செய்யவேண்டும். நாட்டு மக்களின் உடல்வளர்ச்சிக்காகவும் அறிவு வளர்ச்சிக்காகவும் கலை வளர்ச்சிக்காகவும் மொழி வளர்ச்சிக்காகவும் இதன் மூலம் உழைத்து வருவோம். ஒவ்வொரு வகுப்பும் முன்னேற வேண்டும். இதை அறவே விடுத்து தேசம் தேசம் என்று கூக்குரலிடுவது எமது பத்திரிகையின் நோக்கமன்று, மக்களுள் தன்மதிப்பும் சமத்துவமும்

*சகோதரத்துவமும் ஓங்கி வளரல் வேண்டும். மக்கள் அனைவரும் அன்பின் மயமாதல் வேண்டும்" (குடியரசு: 2-5-1925).*

இச்சொல்லியங்களில் பெரியார் தம் வாழ்க்கையின் நோக்கங்களை - குறிக்கோள்களை அழகாக அடக்கிவிட்டார். தன்மதிப்பு குமுகவியல் குறிக்கோள்; சமத்துவம் பொருளியல் குறிக்கோள்; எல்லா வகுப்புகளின் முன்னேற்றம் அரசியல் குறிக்கோள்; அறிவு-உடல் வளர்ச்சி பகுத்தறிவு இயல் குறிக்கோள்; மொழி வளர்ச்சி தாய்மொழிஇயல் குறிக்கோள். இத்தகைய கோட்பாடுகள் அக்காலத்திய பேராயக்கட்சிக்கு இருந்தனவா? வெள்ளையர் ஆட்சியிலிருந்து நாடு விடுதலை பெற வேண்டும் என்ற ஒன்று மட்டுமே பேராயத்தின் நோக்கம். விடுதலைக்குப் பின் எப்படிப்பட்ட குமுகாயத்தை எவ்வகை அரசியல் முறையில் படைக்க வேண்டும் என்று தேசியத்தார் சிந்திக்க முற்படாத காலம் அது. ஆனால் பெரியாருக்கு மட்டும் தெளிவான குறிக்கோள்கள் இருந்தன. அக் குறிக்கோள்களைத்தாம் 'குடிஅர'சின் முகப்பட்டையின் படங்களிலும் பாடல்களிலும் அவர் அடக்கியிருந்தார். இன்னும் பல இதழ்களில் மேலும் விளக்கமாக எழுதினார் அவர்.

> *"மனித சமூகத்தில் சுயமரியாதை உணர்ச்சியும் சகோதரத்துவமும் தோன்ற வேண்டும். ஒருவன் உயர்ந்தவன், ஒருவன் தாழ்ந்தவன் என்ற எண்ணம் அகல வேண்டும். உலகுயிர் அனைத்தும் ஒன்றெனும் எண்ணம் உதிக்க வேண்டும். வகுப்புச் சண்டைகள் மறைய வேண்டும். மேற்சொன்ன கொள்கைகளையாவது நாம் சிறிதளவும் பயமின்றி எதிர்த்து, சிநேகிதர்-விரோதி என்ற வித்தியாசமில்லாமல் யாவரையும் கண்டிக்க நாம் பயப்படப் போவதில்லை" என்று 'குடிஅர'சின் முதல் இதழில் அவர் குறிப்பிட்டு அவரது அஞ்சாமையை அனைவர்க்கும் உணர்த்தினார் (குடிஅரசு: 2-5-1925).*

> *"தலைவர்களின் சொற்பொழிவுகளிலும் தமிழ்ப் பத்திரிகை களிலும் 'காங்ரஸ்' என்ற பேச்சையே காணோம். எல்லாம் சாதிமயமாகவே விளங்குகிறது. எல்லாரும் ஓர் குலம், எல்லாரும் இந்நாட்டு மக்கள் என்ற உயரிய கொள்கை – சிறந்த எண்ணம் மக்களை விட்டு அகன்றோடிப் போய்விட்டது. பிறப்பால் உயர்வு-தாழ்வு என்ற கீழ் எண்ணம் நாட்டில் பரவி- விட்டால் எல்லாரும் ஒன்றென்று எண்ணி, நாட்டின் நலத்திற்காக ஒன்றிய மனத்தினராய் நாட்டுமக்கள் உழைக்கும் நாள் என்னாளோ?" என்னும் அவரின் எழுத்துகளில் அவரது நோக்கமும் ஏக்கமும் புலப்படுகின்றன (குடிஅரசு: 25-5-1925).*

'குடிஅர'சை நிறுவிய அடுத்த மாதமே நடக்கவிருந்த உள்ளாட்சித் தேர்தல்கள் பற்றிப் பெரியார் துணிச்சலாக விடுத்த அறிக்கையில்,

> "சென்னை ஓட்டர்களும் வெளிஜில்லாக்களில் உள்ள ஓட்டர்களும் தேர்தல் காலங்களில் கட்சியின் பெயரைக் கண்டு (ஜஸ்டிஸ் கட்சி, சுயராஜ்யக் கட்சி) ஏமாந்து போகாமல், நிற்கும் கனவான்களின் யோக்கியதாபட்சத்தை அறிந்தும், அவர் நாட்டிற்கு என்ன செய்திருக்கிறார், என்ன செய்யக் கூடும் என்பதைக் கவனித்து, தங்கள் ஓட்டுரிமைகளை உபயோகிப்பார்களென்று நம்புகிறேன். தீண்டாமை விஷயத்திலோ சுயராஜ்யக் கட்சியாரின் மனோபாவத்தை நாம் சொல்லவே வேண்டியதில்லை?"

என்று வழிகாட்டினார். இது எதைக் காட்டுகிறது? 'சுயராஜ்யம்' எனும் ஏமாற்றுப் பெயரில் ஒளிந்து கொண்டு தீண்டாமையைக் கடைப்பிடிக்கும் 'தேசியங்கள்' ஒதுக்கப்பட வேண்டும் என்ற பெரியாரின் நோக்கத்தை யல்லவா?

பெரியாரின் வகுப்புரிமைக் கொள்கைப் பற்று விடாப்பிடி - வெறி - உலகமே அறிந்த ஒன்று. காஞ்சி மாநாட்டை யொட்டி அவர் விளக்கினார்.

> "வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் என்பது ஒரு தேசத்தின் ஆட்சியின் பொதுவுரிமையும், அந்நாட்டின் குடிமக்களின் உரிமை சகலமும் எல்லா வகுப்பாரும் ஏற்றத் தாழ்வின்றிச் சமமாய் அடைய வேண்டியது என்பதுதான். இதை அரசாங்கத்தாரும் குடிமக்களுக்குச் சரியாய் வழங்குவதாய் 1840-ஆம் வருடத்திலேயே ஒப்புக்கொண்டு (போர்டு பஸ்டாண்டிங் ஆர்டர் 125 மூலமாய்) வெளியிட்டிருக் கிறார்கள். ஆதலால் இந்தியர்களுக்குப் பெரிய உத்தியோகங்கள் ஏற்பட்டபிறகோ, சீர்திருத்தங்கள் ஏற்பட்டதன்பிறகோ, வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் என்ற பேச்சு பிறந்ததல்ல.
>
> இந்தியா ஒழிந்த மற்ற நாடுகளுக்கு வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் அதிக அவசியம் இல்லாத போதிலும் சிற்சில இடங்களில் தொகுதிகள் பேராலும், வகுப்புக்களின் பேராலும் இருந்து கொண்டுதான் வருகிறது. பிரிட்டிஷ் அரசாங்கம் ஏற்பட்டு 150 வருடங்களுக்கு மேலாகியும் இன்னமும் தீண்டாதாராகிய ஏழு கோடி மக்களுக்கு இராஜிய வாழ்வில் சுதந்தரம் பெற யோக்கியதையில்லை என்றுதானே சொல்ல

வேண்டியிருக்கிறது? அதன் பலனாய் அவர்கள் அத்தனை பேரும் அரசாங்கத்தைத்தானே நடத்திக் கொண்டிருக்க வேண்டியதாகிவிட்டது?

பிராமணரில்லாதார் என்னும் 24 கோடி இந்துக்கள் இராஜீய வாழ்வில் சமவுரிமை பெறுவதற்கில்லாமல், பிற்போக்கான வகுப்பில் சேர்க்கப்பட்டு அரசாங்கத்தாரையும் பிராமணர் களையும் நத்திக் கொண்டுதானே இருக்க வேண்டியதாய்ப் போய்விட்டது? இதற்குக் காரணமென்ன? பிறவியிலேயே அவர்களுக்கு இவ்வுரிமையைப் பெற யோக்கியதை இல்லாததா? அல்லது, அவர்கள் இவ்வுரிமையைப் பெறவொட்டாமல் உயர்பதவியில் இருக்கிறவர்கள் தங்கள் செல்வாக்கால் கொடுமைப்படுத்தி முன்னேற வொட்டாமல் அடக்கி வைத்திருப்பதா? குறைந்தது 50 வருடங்களுக்கு முன்பாவது பிராமணரல்லாதாருக்கும் தீண்டாதார் என்போருக்கும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் கிடைத்திருந்தால் இன்றைய தினம் இவர்களிருவரின் நிலைமையும் இப்படி இருக்குமா? ஆதலால் தேச நலத்திலும் சமூக நலத்திலும் அக்கறையுள்ள வர்கள் காஞ்சிபுரம் மாநாட்டில் வகுப்புவாரித் தீர்மானத்தைக் கொண்டு வந்து நிறைவேற்ற வேண்டுகிறோம்" (குடிஅரசு: 22-11-1925).

காஞ்சி மாநாட்டின்போது இவ்வறிக்கை வந்தது. என்றாலும் பெரியாருக்குப் படு ஏமாற்றமும் கடுஞ்சீற்றமுமே விளைந்தன! வகுப்புரிமைக் கொள்கையில் முன்னுரிமை எவருக்கு வழங்கப் பெறவேண்டும்? பெரியார் அதை 8-11-1925 - 'குடிஅரசி'ல் விளக்கினார்.

"பிராமணரல்லாத இந்துக்களுடைய வகுப்புவாரிப் பிரதிநிதித் துவத்தைவிட, தீண்டாத சமூகத்தின் வகுப்புவாரிப் பிரதி நிதித்துவம் மிகவும் முக்கியமானதென்பதை நாம் கோபுரத்தின் மீதிருந்தும் சொல்லுவோம். ஏனெனில் சமூகப் பெருக்கத்திற்குத் தக்கபடி கல்வியிலோ, உத்தியோகத்திலோ மற்றும் பல பொது வாழ்க்கையிலேயோ அவர்கள் முன்னேறவே யில்லை.

"சுமார் இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பாகவாவது இச்சமூகத்திற்கு வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் அளிக்கப் பட்டிருக்குமே யானால், இன்றைய தினம் இந்தியாவில் இருக்கும் இவ்வளவு அபிப்பிராய பேதங்களும் ஒற்றுமையின்மையும் பிரிட்டிஷ் கொடுங்கோன்மையும் பிராமணக் கொடுமையும் நமது நாட்டில் இருக்குமா? தெருவில் நடக்கக் கூடாத மனிதனும் கண்ணில் தென்படக் கூடாத மனிதனும் அவனவனின் மதத்தை

அறியக்கூடாத மனிதனும் அவனவன் தெய்வத்தைக் காணக்கூடாத மனிதனும் இந்தியாவில் இருக்கக்கூடுமா?"

இப்படி ஆசிரியவுரை தீட்டிய பெரியார் அதே இதழின் மற்றொரு பக்கத்தில் தீண்டாமைக் கொடுமை ஒழிக்கப்படவேண்டிய இன்றியமையாமை பற்றி வற்புறுத்தும் முறையில் 'தீண்டாமை' எனும் தலைப்பில் விளக்கமாக ஒரு கட்டுரையினையே தனியாக எழுதினார்.

தொடர்ந்து அடுத்த கிழமை 'குடிஅர'சில் காஞ்சிபுரம் மாநாட்டை யொட்டிப் பெரியார் கட்டங்கட்டி வெளியிட்ட அறிக்கையில்,

> "தீண்டாமையை ஒழிக்க வேண்டியது பிராமணரல்லாதாருக்கு மிகவும் முக்கியமானதொரு கடமையாகும். ஏனெனில் தீண்டாதார்களின் முன்னேற்றந்தான் பிராமணரல்லாதாரின் முன்னேற்றமாகும். தீண்டாமை ஒழிவது மூலமாய்த்தான் பிராமணரல்லாதார் கடைத்தேற முடியும். தீண்டாமை ஒழிவதன் மூலந்தான் நாடு சுயராஜ்யமடையும். ஆதலால் தீண்டாமை யொழிப்பில் கவலையுள்ளவர்களும் தீண்டாதாரென்று சொல்லப்படுவோரும் அவசியம் காஞ்சீபுரத்திற்கு வந்து, அதற்கென்று ஓர் மகாநாடு கூட்டி, காரியத்தில் பலன் தரத்தக்க திட்டங்களைக் காண வேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்" *(குடிஅரசு: 15-11-1925).*

என்று அனைத்துக் கட்சிகளையும் சேர்ந்த பார்ப்பனரல்லாதாரைக் கோரினாரென்றால், தீண்டாமை யொழிப்புக் குறிக்கோளில் அவருக்கிருந்த தலையாய பற்று நமக்கு விளங்குகிறது.

இன்னும் உண்மையான சுயராஜ்யம் என்பதற்கே தீண்டாமை நீக்கத்தை உள்ளடக்கித்தான் இலக்கணம் வகுத்தார் பெரியார்.

> "சுயராஜ்யக் கட்சியாரின் சுயராஜ்யம் தேசத்திற்கு உண்மையான சுயராஜ்யம் ஆகாது. இவ்வித சுயராஜ்யம் நமது நாட்டிற்கு வேண்டவே வேண்டாம். சுயராஜ்யக் கட்சியார் கேட்கிறபடி சர்க்காரால் கொடுக்கப்படும் சுயராஜ்யம் என்னும் சீர்திருத்தம் மறுபடியும் வருமானால் படித்தவர்களுக்கும் உயர்ந்த ஜாதியார் என்று சொல்லுபவர்களுக்கும் ஆயிரக்கணக்கான சம்பளமும் கிடைக்கும். மக்களுக்குள் உயர்வு தாழ்வு நிலைத்திருக்கும்........
>
> உண்மையான சுயராஜ்யமே நமக்கு வேண்டும். மகாத்மா சொல்லும் தீண்டாமையொழிப்பு என்னும் சுயராஜ்யத்திற்குப்

*பாடுபட்டு வெற்றி பெற்றால், மிருகங்களுக்கும் புழுக்களுக்கும் கேவலமாயிருக்கும் தீண்டாதாரென்று சொல்லப்படும் 7 கோடிப் பேர்கள் மனிதர்கள் ஆவார்கள். இந்திய மனித சமூகத்திற்கு 7 கோடி மனிதர் லாபமாகும். பிராமணல்லா தாருக்கிருக்கும் இழிவான, தாசி மக்கள், சூத்திரர் என்ற பெயரும் நீங்கும். ஆதலால் சுயராஜ்யக் கட்சியின் சுயராஜ்யம் வேண்டுமா? மகாத்மாவின் சுயராஜ்யம் வேண்டுமா?" (குடிஅரசு: 15.11.25)*

சுயராஜ்யம் வேண்டும் என்று பெரியார் கோரினார். ஆனால் உண்மை சுயராஜ்யம் எது என்பதில் வேறுபட்டார் என்னும் நிலைப்பாடு நமக்குத் தெளிவாய்ப் புரிகிறது.

காஞ்சிக் 'காங்ரஸ்' மாநாட்டை யடுத்து பெரியார் எடுத்த நிலை என்ன?

*"இந்தியர் ஒவ்வொருவரும் சுயமரியாதை அடைவதும், விடுதலை பெறுவதும் தனது முக்கிய நோக்கமாகக் கொள்ள வேண்டும், இந்நோக்கம் கொண்ட ஸ்தாபனம் எதுவோ அதுவெல்லாம் தேசிய காங்கிரஸ்தான் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்"*

என்ற நிலையெடுப்பை மேற்கொண்ட அவர் அதை விளக்கினார்.

*"ராஜீய விஷயத்தில் மற்ற கட்சிகளுக்கும் காங்கிரசுக்கும் வித்தியாச மிருந்ததெல்லாம் ஒத்துழையாமைத் திட்ட மொன்றினால்தான். அதுவும் பெல்காமில் எடுக்கப்பட்டாகி விட்டது. சட்டத்திற்குக் கட்டுப்பட்டு சுயராஜ்யம் பெறுவதையும் காங்கிரஸ் ஒப்புக்கொண்டதற்கு அறிகுறியாக, சட்டசபைப் பிரவேசத்தையும் அநுமதித்துவிட்டது..........*

*ஆதலால் தற்காலமுள்ள காங்கிரஸ் கொள்கைகளும் அதன் திட்டமும் ஜஸ்டிஸ் கொள்கைகளையே அநுசரித்து இருப்பதுடனல்லாமல் காங்கிரஸ் கொள்கையை விட ஜஸ்டிஸ் கொள்கையானது ஓரடி முற்போக்கு உடையதா யிருக்கிறதென்று கூடச் சொல்லலாம். எப்படியெனில் "காலதாமதமில்லாமல் சீக்கிரம் சுயராஜ்யம் வேண்டும்" என்ற ஓர் அவசர காலத்தையும் ஜஸ்டிஸ் திட்டத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. மற்றபடி சர்க்காரோடு ஒத்துழைப்பதிலும் சுயராஜ்யக் கட்சியினுடைய அநுபவமானது ஜஸ்டிஸ் கட்சி முதலியவைகளை ஒத்ததாகவே இருக்கிறது..........*

*இந்த நிலைமையில் இந்தியாவிலுள்ள ராஜீய ஸ்தாபனங்கள் சகலமும் காங்கிரஸ் உட்பட ஒரே கொள்கையைத்தான்*

*கொண்டிருக்கின்றன. தேச முன்னேற்றத்திற்குக் காங்கிரஸ் மகாசபை ஒன்றுதான் உள்ளது என்று சொல்வது இனி பொருளற்ற வார்த்தையாகும்" (குடிஅரசு: 20-12-1925).*

## சுயமரியாதை என்னும் மெய்மம்

சுயமரியாதையும் விடுதலையும் அடைவதுதான் ஒவ்வொருவரின் நோக்கமாக இருக்க வேண்டும் என்று பெரியார் விழைந்தார். சுயமரியாதைக்கு வாய்ப்பில்லாத சுயராஜ்யம் கூடாது என்பதாகத் துணிவுடன் உரத்த குரலில் பேசினார் அவர். அன்றையப் பேராயத் தலைவர் எவரும் இதுபோன்ற நிலையை எடுக்கவில்லை. அதுதான் பெரியாரின் தனித்தன்மை.

சுயமரியாதை என்னும் கருத்து - அந்த மெய்மம் - தத்துவம் பெரியாரின் உள்ளத்தில் தொடக்கத்திலேயே ஊன்றிக் கொண்டு விட்டது. மக்களுள் தன்மதிப்பு வளர வேண்டும் என்பதைக் குடிஅரசின் நோக்கமாகவே அதன் முதல் இதழிலேயே அவர் அறிவித்தார். பிறகு தொடர்ந்து அக்கருத்தினை வற்புறுத்திக் கொண்டே வந்தார்.

"..........அப்பொழுதுதான் தமிழர்க்குச் சுயமரியாதை ஏற்படும்" என்று 5-7-1925ஆம் நாளிட்ட குடிஅரசிலும், "பிராமணரல்லாதாரின் சுயமரியாதைக் கதவைத் திறந்துவிட்டவர் அவர்தான்'' என்று 'நீதிக்கட்சித் தலைவர் தியாகராயர் பற்றி 2-5-1925ஆம் நாளிட்ட 'குடிஅர'சிலும், ''தென்னாட்டுத் தமிழ் மக்கள் பெரும்பாலும் சுயமரியாதையற்று" என்றும், "சுயராஜ்யம் என்பது சுயமரியாதையுள்ள சமூகத்துக்குத்தான்'' என்றும், ''சுயமரியாதையுடன் வாழ வேண்டுமானால்" என்றும் 2-11-1925-ஆம் நாளுக்குரிய 'குடிஅர'சிலும், ''பத்திராதிபர்களின் உரிமைக்கும் சுயமரியாதைக்கும்'' என்று 13-12-1925ஆம் நாளுக்குரிய 'குடிஅர'சிலும் பெரியார் குறிப்பிட்டிருப்பது பெரிதும் கருதத்தக்கது. 'சுயமரியாதை' என்னும் அவரின் சொல்லாட்சிதான், பின்னர் அவர் நிறுவிய பேரியக்கத்திற்கே பெயராக அமைந்தது.

ஆறுமாதம் சென்று 'நமது பத்திரிக்கை' எனும் தலைப்பிட்டு எழுதப் பெற்ற ஆசிரியவுரையில்,

> ''குடிஅரசு குறிப்பிட்ட கருத்தைப் பிரசுரம் செய்யும் பத்திரிகையே அல்லாமல் வெறும் வர்த்தமானப் பத்திரிக்கை அல்லவாதலின்........ பிரதிவாரமும் 'குடிஅரசு' தனது தத்துவத்தை விளக்கும் போது கண்ணீர் கொட்டாமலிருக்க முடியவில்லை!"

என்று உருக்கமாகக் குறிப்பிட்டுவிட்டு, பார்ப்பனர்களுக்கும் தம் 'குடிஅர'சை நல்லவண்ணம் அறிமுகப்படுத்தினார் பெரியார்.

> **"உண்மையில் 'குடிஅர'சுக்கு எந்தப் பிராமணனிடத்தும் குரோதமோ வெறுப்போ கிடையாது; ஆனால் பிராமணன் உயர்ந்தவன், மற்றவர்கள் தீண்டாதவர்கள், தெருவில் நடக்கக் கூடாதவர்கள் என்பன போன்ற இழிவாக மிருக உரிமைக்கும் பாத்திரமில்லாதவர்கள் என்று எண்ணிக் கொண்டிருக்கும் எண்ணத்தினிடத்திலும், தங்கள் வகுப்பார்தான் முன்னணியில் இருக்கவேண்டும், மேன்மையுடன் பிழைக்க வேண்டும், ம்ற்றவர்கள் என்றென்றைக்கும் தங்களுக்கு அடிமைகளாக இருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டு அதற்காகச் செய்யும் சூழ்ச்சிகளிடத்திலும்தான் 'குடிஅர'சுக்குக் குரோதமும் வெறுப்பும் இருப்பதுடன், அவற்றை அடியோடு களைந்தெறிய வேண்டும் என்ற ஆவல் கொண்டு உழைத்து வருகிறது"**

என்ன தெளிவான அறிமுகவுரை இது!

மறுகிழமை 'குடிஅரசு' ஆசிரியவுரையிலும் தாம் இதழ் தொடங்கிய நோக்கம்பற்றி,

> **"நமது குடிஅரசு பத்திரிகை முக்கியமாய் நமது நாட்டுக்கு சுயராஜ்யமாகிய மகாத்மாவின் நிர்மாணத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வரவும், தமிழர்களாகிய தீண்டாதோர் முதலியோரின் முன்னேற்றத்திற்காக உழைக்கவுமே ஏற்படுத்தப்பட்டது" என்று பெரியார் வெளிப்படுத்தினார் *(குடிஅரசு: 15–11–1925).***

தொடர்ந்து அடுத்த கிழமை,

> **"இப்போது தமிழ்நாட்டின் பெரும்பாலாராகிய ஆதித் தமிழ் மக்களுக்கு மிகவும் முக்கியமாயும் அவசரமாயும் வேண்டியது பொது நோக்குடைய ஒரு தமிழ்த் தினசரிப் பத்திரிக்கையே...........**
>
> **"இதைப் பற்றித் தமிழ் மக்கள் யோசித்து ஒரு முடிவுக்கு வந்தால், தமிழ் மக்களுக்கு ஏதாவது சுயமரியாதை உண்டாகலாம் என்று விண்ணப்பித்துக் கொள்ளுகிறோம்" என்று வேண்டுகோள் வைத்தார் அவர் *(குடிஅரசு: 22–11–1925).***

இனி - சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரி 'நவசக்தி'யில் எழுதிய 'பொய்மான் வேட்டை' என்ற கட்டுரைக் கருத்துகளுக்கு மறுப்பளிக்கும் வகையில் பெரியார் எழுதிய நெடிய கட்டுரையில் தம் தமிழுணர்வையும் தமிழின உணர்வையும் நேராகச் சுட்டினார்.

"தமிழ்நாட்டு பாஷையாகிய தமிழைப் பற்றி அக்கறை யில்லாமல், தமிழர் கொடுக்கும் வரிப்பணத்தை அள்ளி, சமஸ்கிருத பாஷைக்குத் தான் செலவு செய்ய வேண்டும்; சமஸ்கிருதத்திற்குச் சமமாகக் கூடத் தமிழுக்கு யோக்கியதை கொடுக்கக் கூடாது என்று சொல்வதை ஒப்புக் கொள்ளா விட்டால் அது போட்டி போலும். தமிழ் அகராதி எழுதியதற்கு 10 வருடமாய் லட்சக்கணக்கான ரூபாய் செலவு செய்து பார்ப்பனரைத்தான் வைக்க வேண்டும்; அவர்கள்தான் தமிழுக்கு உரை எழுத வேண்டும்; பார்ப்பனரல்லாதார் அதில் இருக்கக் கூடாது என்பதை ஒப்புக் கொள்ளாவிட்டால் அது தமிழுக்கும் சமஸ்கிருதத்திற்கும் போட்டிபோலும். அப்படியானால் பள்ளியில் பாடங்களைத் தேசபாஷையான தமிழில்தான் கற்றுக் கொடுக்க வேண்டும் என்று சொல்வதுகூட இங்கிலீஷுக்கும் தமிழுக்கும் போட்டி போலும்" என்றும், "........... இவைதான் நாகரிகமானால் இவையல்லாத அநாகரிகமே மேலானது. இதைப் பரப்புவதால் தமிழ் மக்களுக்குக் கேடு வருவதோடு நரகம் வந்தாலும், அதற்காகப் பயப்படுபவன் மனிதனல்ல"

என அவர் இன மானம் பேசினார் (குடிஅரசு: 6-12-1925).

மேலுமொரு தலையாய செய்தியை நாம் புரிந்து கொண்டு, உள்ளத்தில் தேக்கிவைத்துக் கொள்ள வேண்டும். அதுதான் பெரியாரின் தமிழினப் பார்வை. இந்திய தேசியக் காங்கிரஸ் என்னும் அனைத்திந்தியக் கட்சியின் உயர்ந்த பொறுப்பினை ஏற்றிருந்தாலும்; அவரின் பொதுப்பார்வை இந்தியா-இந்தியர் என்றும் அவரின் சிறப்பு நோக்கு தமிழ்நாடு - தமிழர் என்றும் இருந்ததை நாம் மறைக்கத் தேவையில்லை.

'குடிஅர'சின் முதல் இதழின் அட்டையிலேயே

"தமிழ் மக்கள் எல்லாத் துறைகளிலும் முன்னேற்றமடைய உழைக்கும் பத்திரிகை"

என்று பெரிய எழுத்துகளில் பொறித்தார் பெரியார், அடுத்து

"தமிழ் நாட்டிலோ அரசியல் உலகத்தைச் சாதிச் சண்டை என்ற பாசம் மூடிக் கிடக்கிறது" (குடிஅரசு: 24-5-1925)

என்று தமிழக மக்களின் நிலை பற்றிய தம் ஏக்கத்தை வெளியிட்டார் அவர்.

அதே காலக்கட்டத்தில்,

> "எப்பொழுதும் எல்லாரையும் ஏமாற்ற முடியாது என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. இந்தப் பழமொழி சுயராஜ்யக் கட்சிக்காரர்களுக்கு ஞாபகத்திற்கு வரும் படியாகத்' தமிழர்கள் எப்போது நடந்து கொள்ளுகிறார்களோ, அப்பொழுதுதான் தமிழ்நாட்டுக்கும் தமிழர்க்கும் விடுதலையும் சுயமரியாதையும் ஏற்படும் என்பதைக் கோபுரத்தின் மீதிருந்து கூவுவேன்" என்று பெரியார் எழுதினார். (குடிஅரசு: 5-7-1925).

தொடர்ந்து கானாடுகாத்தானில் தமிழர் நிருவாக சபைக் கூட்டம் கூட்டி,

> "பிறவியினால் உயர்வு தாழ்வு இல்லை என்பதைப் பிரசுரங்கள், பிரசங்கங்கள் மூலமாகத் தேசமெங்கும் பிரசாரம் நடத்தி, தமிழ்நாட்டில் சமத்துவம், சகோதரத்துவம், சுதந்தரம் போன்ற அரிய உணர்ச்சிகளை வளர்க்க வேண்டும்" (குடிஅரசு: 17-6-1925).

என்று தீர்மானம் நிறைவேற்றினார்.

வரலாற்றுத் திருப்பு முனையாக அமைந்த காஞ்சி 'ராஜிய மகாநாடு' நிகழ்வதற்கு முன்னர் வரையப்பட்ட 'குடிஅரசு' ஆசிரியவுரைக்குத் "தமிழர் மாநாடு" என்றே தலைப்பிட்டார் பெரியார். அதில், "ராஜீய மகாநாடானது தென்னிந்தியத் தமிழ் மக்களுக்கு ஏற்பட்டிருக்கும் மிகவும் நெருக்கடியான சந்தர்ப்பத்தில் கூடுகிறது" என்றும், "தமிழ் மக்கள் பெரும்பாலும் சுயமரியாதையற்று சுயேச்சையற்று.... உழல்வதை யாரும் மறுக்க முடியாது" என்றும், "இதன் பலனாய் ஏற்பட்ட நிலையானது தமிழ் மக்களுக்கு, முன்னிலும் அதிக கேவலமான நிலையில் கொண்டுவந்து விட்டுவிட்டது" என்றும் குறிப்பிட்டார்.

காஞ்சிபுர மாநாட்டிற்கு ஆறுமாதம் முன்பாகவே 'குடிஅரசு' இதழினைப் பெரியார் ஈன்றெடுத்துவிட்டமை நல்வாய்ப்பாகிவிட்டது. (இதழினைப் பெரியார் 1923ஆம் ஆண்டிலேயே பதிவு செய்துவிட்டார்.) தமக்கென்றே ஓரிதழ் கிட்டியிருந்த நிலையில் காஞ்சி மாநாட்டுச் செய்திகள் அத்தனையையும் உலகிற்குத் தெரிவிக்க முடிந்தது. தமிழர் மகாநாடு, காஞ்சீபுரம் மகாநாட்டுத் தலைவர், காஞ்சீபுரம் தமிழர் மகாநாடுகள், காஞ்சீபுரம் மகாநாட்டுக்குத் தீர்மானங்கள், வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம், காஞ்சீபுரம் ராஜீய மகாநாடு, காஞ்சீபுரம் மகாநாடுகள், காஞ்சீபுரம் பிராமணரல்லாதார் மகாநாடு, காஞ்சீபுரம் தமிழர் மகாநாட்டுத் தலைவர் நடத்தையைப்

பற்றித் தமிழ்நாட்டுப் பத்திரிகைகளின் அபிப்பிராயங்கள், காஞ்சீபுரம் மகாநாட்டின் விஷயாலோசனைக் கமிட்டியின் கூற்று, ஆதி முதற் கொண்டு - சூழ்ச்சி, காஞ்சி மகாநாட்டுத் தலைவர், பிராமணர் - பிராமணர் அல்லாதார் வகுப்புவாரி உரிமை காங்கிரசுக்குப் புதிதா? ஸ்ரீமான் திரு.வி.கலியாணசுந்தர முதலியார், நம்பிக்கைத் துரோகம், பிராமணரல்லாதவர் மகாநாட்டைப் பற்றிப் பிராமணப் பத்திரிக்கைகளின் ஓலம், காஞ்சீபுரம் மகாநாட்டிற்குப் பிறகு கல்யாணசுந்தர முதலியாரின் புதிய பிறப்பு, ஒரு ராஜீயக் கொலை என்னும் தலைப்புகளில், 35 பக்கங்களுக்கு வெளியான அச்செய்திகள் பெரியார் பேராயத்தைவிட்டு விலகிப் புதியதோர் இயக்கம் காண வேண்டிய வரலாற்றுத் திருப்பச் சூழ்நிலையைத் தெளிவாக்குகின்றன.

'குடிஅரசு' காஞ்சி மாநாட்டின் ஆய்வுக்காகப் பெரியார் கொடுத்திருந்த கீழ்வரும் தீர்மானத்தை வெளியிட்டது.

> "தேசிய முன்னேற்றத்திற்கு இந்து சமூகத்தாருக்குள் பற்பல ஜாதியாருக்குள்ளும் பரஸ்பர நம்பிக்கையும் துவேஷமின்மையும் ஏற்பட வேண்டுமாகையால் ராஜீய சபைகளிலும் பொது ஸ்தாபனங்களிலும் பிராமணர், பிராமணரல்லாதவர், தீண்டாதார் எனக் கருதப்படும் இம்மூன்று பிரிவினருக்கும் தனித்தனியாக ஜனத்தொகை விழுக்காடு தங்கள் தங்கள் சமூகத்திலிருந்து பிரதிநிதிகள் தேர்ந்தெடுத்துக் கொள்ள உரிமை ஏற்படுத்த வேண்டும் என்று இம்மகாநாடு தீர்மானித்தது" (குடிஅரசு: 29-11-1925).

தீர்மானத்தை முன்மொழியும் வாய்ப்பே பெரியாருக்கு அளிக்கப்படாமல், தலைவர் திரு.வி.க. அவர்களால் அது தள்ளுபடி செய்யப்பட்ட நிகழ்ச்சியை விரிவாகக் 'குடிஅரசு' தருகிறது

அதன் தொடர்பாக,

> "வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தையும் விடுதலை யுரிமையையும் அடைய உத்தேசம் கொண்டு ஆரம்பித்த 'தேச பக்தன்' ஆசிரியரும், தொழிலாளர் நன்மைக்கென்று ஆரம்பித்த 'நவசக்தி' ஆசிரியருமான ஸ்ரீமான் திரு.வி.கலியாணசுந்தர முதலியாருக்குத் தகுமா? இது தர்மந்தானா? என்று கேட்கிறோம்"

எனப் பெரியார் "நம்பிக்கைத் துரோகம்" என்ற தலைப்பில் எழுதியதையும் 'குடிஅர'சில் படிக்க முடிகிறது.

## சுயமரியாதை இயக்கம் முளைத்தது!

அதன்பிறகு பெரியாரவர்கள் தாம் ஏற்கனவே அடிக்கடி குறிப்பிட்டு வந்த 'சுயமரியாதை' என்னும் குறிக்கோளையே கருவாக வைத்துப் பலவற்றையும் எழுதினார்; பேசினார்.

> *''மனிதனுக்கு அவனுடைய சுயமரியாதை என்னும் தன்மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளுவதுதான் பிறப்புரிமையே யல்லாமல், அரசியலான ராஜீயமென்னும் சுயராஜ்யம் ஒருக்காலும் பிறப்புரிமையாக மாட்டாது. சுயமரியாதை இல்லாத மனிதனுக்கு சுயராஜ்யம் அவசியமே இல்லாததாகும்; சுயராஜ்யம் இல்லாத எந்த மனிதனுக்கும்கூட சுயமரியாதை என்பது அவசியமானதேயாகும் (குடிஅரசு: 24-1-1926).*

> *"சுயராஜ்யம் கிடைக்குமுன் நம்மவர்களுக்குள் எவ்விஷயத்திலும் ஒற்றுமை, சமத்துவம், சுயமரியாதை ஏற்படக் கூடிய விதமான வேலைகளைச் செய்துகொள்ள வேண்டியது மிக்க அவசியமாய் இருக்கின்றது. சமத்துவம், சுயமரியாதை என்பது நமது நாட்டிலுள்ள யாவருக்கும் ஏற்பட்டாலன்றி அதற்கு முன்னர் கிடைக்கும் சுயராஜ்யம் ஒரு சாதியார் பிழைப்பிற்கு ஆதாரமாயிருக்குமே யல்லாது வேறல்ல" (குடிஅரசு: 31-1-1926).*

> *''மனித ஜீவனுக்கு எல்லாவற்றையும்விட முக்கியமான உணர்ச்சியாக, மான-அவமானம் என்னும் தன்மானமாகிய சுயமரியாதையைத்தான் பிறப்புரிமையாகக் கொள்ள வேண்டியிருக்கிறது" (குடிஅரசு: 9-1-1927).*

இவ்வண்ணம் 'சுயமரியாதை' என்ற கருத்தையே பரப்ப முனைந்தார் பெரியார். சுயமரியாதை எனும் சொல்லினைப் பெரியாரின் தொண்டுக்குத் தோள் கொடுத்த எழுத்தாளர்களும் தோழர்களும் பயன்படுத்தி அதன் அழகு பொருந்திய, அருமை வாய்ந்த நோக்கத்தையும் விளைவுகளையும் மக்களுக்கு விளக்கிய நிலையில் 'சுயமரியாதை இயக்கம்' என்பது முளைத்தது.

இங்கே நாம் ஒன்றைத் தெளிவுப்படுத்திக் கொள்ளுதல் நல்லது. தம் இதழ்களுக்குத் தனித்தமிழ்ப் பெயர்களையே சூட்டிய பெரியார் தம் இயக்கத்திற்குச் சுயமரியாதை என்று பெயரிட்டது எதனால்? தன்மதிப்பு, தன்மானம் எனும் சொற்களை அவரே பயன்படுத்தியிருக்கிறார். ஆனால் முக்கால் நூற்றாண்டுக்கு முந்தி வாழ்ந்த நம் மக்கள் அக்காலத்தில் நாட்டுப் புழக்கத்திலிருந்து வந்த சுயமரியாதை எனும் சொல்லினைச் 'சட்டென்று' உட்கொண்டதை

உணர்ந்து, கொள்கைப் பரப்பலின் விரைவு கருதி இச்சொல்லாட்சியைப் பெரியாரும் பிறரும் மேற்கொண்டனர். பிற்காலத்தில் தன்மானம் எனும் சொல் இயக்கத்தவரிடையே புழக்கத்திற்கு வந்துவிட்டது.

> *"குடிஅரசு ஏற்பட்டு ஆறுமாத காலமாகியும் இதுவரை ஆயிரத்துச் சில்லரைச் சந்தாதாரர்களே சேர்ந்திருக்கிறார்கள். அதனைப் படிக்க வேண்டிய அளவு ஜனங்கள் படிக்கவில்லை. பாமரஜனங்கள் சரியானபடி 'குடிஅர'சை ஆதரிக்கவில்லை யானால், அது தானாகவே மறைந்துபோக வேண்டியதுதான் அதன் கடமையேயல்லாமல், வியாபார தோரணையாய் மட்டும் நடந்து வராது" (குடிஅரசு: 1–11–1925).*

நிறையப் பேர் 'குடிஅர'சைப் படிக்கத் தொடங்கிவிட்டனர் என்றாலும், ஆண்டு உறுப்பினர் கட்டணம் செலுத்துவோர் போதிய அளவுக்கு அதிகமாக வேண்டும் என்பதில் பெரியார் குறியாக இருந்தார். ஆயிரத்துச் சில்லரை உறுப்பினர்கள் குறைவு என்று அவர் கருதினார். பாமர மக்கள்தாம் தம் இலக்கு என்பதை, அவர்களின் ஒத்துழைப்பு இல்லையென்றால் 'குடிஅர'சே நின்றுவிடும் நிலைமையுண்டாகும் என்று அழுத்தமாகக் கூறித் தெளிவாக்கினார். அப்படி அவர் எழுதியதற்குப் பயன் இருக்கவே செய்தது. அடுத்த ஆறுமாதக் காலத்தில் கட்டணம் செலுத்தும் உறுப்பினர் எண்ணிக்கை இரண்டாயிரத்திற்கு உயர்ந்தது'.

"ஒரு கொள்கை ஏடாகவே 'குடிஅரசு' இருந்து வரும் - இருக்க வேண்டும்'' என்பதில் பெரியார் மிகமிக உறுதியாயிருந்தார். இரண்டாம் ஆண்டுத் தொடக்கத்தின் 'குடிஅரசு' ஆசிரியவுரை நன்றாய் உணர்த்துகிறது.

> *''இதுவரை நமக்குள்ள 2000 சந்தாதாரர்களில் நால்வர் அதிருப்திக்கே ஆளாகிறோம். 'குடிஅரசு' எவருடைய தயவுக்கோ, முகஸ்துதிக்கோ, சுயநலவாழ்வுக்கோ, கீர்த்திக்கோ நடைபெற வில்லை. யோக்கியமாய் - உண்மையாய் நடக்கக்கூடிய காலம்வரை நடக்கும். அவ்விதம் நடக்க அதற்கு யோக்கியதை இல்லையானால், அது தானாகவே மறைந்துவிடுமே யல்லாமல், மானங்கெட்டு விலங்குகளைப் போல் வாழாது. 'குடிஅரசு' தோன்றிய பிறகு, அதனால் ராஜீய உலகத்திலும் சமூக உலகத்திலும் பெரிய மாறுதல் ஏற்பட்டிருக்கிறது என்று பலர் நமக்கு எழுதியிருப்பதை நாமும் உபயோகப்படுத்திக் கொள்ளுகிறோம்." (குடிஅரசு: 1–5–1926).*

மூன்றாம் ஆண்டுத் தொடக்கத்தில், 'குடிஅரசு' போதிய அளவுக்கு உறுப்பினர் எண்ணிக்கையை எய்தியிருப்பதாகப் பெரியாருக்கு நல்ல மகிழ்ச்சி இருந்தது.

> "இப்போது இரண்டு வருடங்கள் முடிந்து மூன்றாவது வருட ஆரம்ப இதழில் ஒரு குறிப்பு எழுத ஆசைப்படுகிறோம். முதலாவதாக, ஒரு விஷயத்தைத் தெரியப்படுத்துகிறோம். அதாவது 'குடிஅரசு'க்கு ஆறு மாதத்தில் ஆயிரம் சந்தாதாரர்களும், ஒரு வருஷத்தில் – இரண்டாயிரம் சந்தாதாரர்களும், இப்போது இரண்டு வருஷத்தில் நாலாயிரத்து அய்ந்நூறு சந்தாதாரர்களும் இருப்பதால், கூடுமான வரையில் தமிழ் மக்களின் ஆதரவைப் பெற்றிருக்கிறது என்பதைச் சந்தோஷத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்"

என்று தம் உளப்பூரிப்பை வெளியிட்டார் பெரியார்.

மேலும் அதே ஆசிரியவுரையில் 'குடிஅரசு' பற்றிய தம் எதிர்பார்ப்பினை -ஆசையை ஆர்வத்தோடு தமிழுலகுக்கு விளம்பினார்.

> "ஆரம்பத்திலிருந்து இதுவரை, முன்னால் குறிப்பிட்ட கொள்கைகளில் ஒரு சிறிதும் தவறாமல் அது ஏற்றுக் கொண்டபடி நடந்து வந்திருக்கிறது என்பதையும் மெய்ப்பித்துவிட்டோம். ஆகவே 'குடிஅரசு' குறைந்தது ஒரு பதினாயிரம் பிரதிகளாவது அச்சிட்டு வெளியாக வேண்டும் என்கிற ஆசை நமக்கு இருந்தாலும், இந்நாலாயிரம் அய்ந்நூற்றைக் கொண்டு நான் சந்தோஷம் அடைகிறேனே தவிர, ஒரு சிறிதும் அதிருப்தி அடையவில்லை.
>
> அன்றியும், எனது விருப்பத்தை நிறைவேற்ற அனேக நண்பர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதும் எனக்குத் தெரியும். 250 சந்தா தாரர்களை ஏற்படுத்திக் கொடுத்தும் இனியும் இருநூற்றைம்பது சந்தாதாரர்களை ஒரு மாதத்தில் சேர்ப்பதாய் வாக்களித்த சிங்கப்பூர் நண்பர்களுக்கும், மற்றும் 250 சந்தாதாரர்களை எதிர்பார்க்கும் மலேயா நண்பர்களுக்கும் எமது மனமார்ந்த நன்றியைச் செலுத்துகிறேன்.
>
> தமிழ்நாட்டிலும் ஊர்கள்தோறும் 'குடிஅர'சின் வளர்ச்சியையும் பரவுதலையும் எம்மைவிட அதிகக் கவலை கொண்டு எதிர்பார்க்கும் நண்பர்கள் பலர் இருக்கிறார்கள் என்பதும் எனக்குத் தெரியும். அவர்கள் 'குடிஅரசு'க்காக உழைத்து

வந்ததற்கும், சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொடுத்ததற்காகவும், 'குடிஅரசு'க் கொள்கைகளைப் பரப்பப் பாடுபட்டதற்கும் நான் மனப்பூர்வமாய் நன்றி செலுத்துகிறேன்".

இவ்வாறு நன்றி பாராட்டும் கடமையைச் செய்த பெரியார், அதே ஆசிரியவுரையில் தனது இன்னொரு விருப்பத்தையும் வெளியிட்டார்.

"குடிஅரசுக்கு இரண்டாவது வருஷத்தில் நஷ்டமில்லை; முதல் வருஷத்தின் நஷ்டம் அடைபட வேண்டும். ஆனால் இன்னமும் கொஞ்ச நல்ல இதழில் இன்னும் நாலுபக்கம் அதிகப்படுத்த வேண்டும் என்கிற ஆவல் இருந்து வருகிறது. இக்காரியங்களுக்கு இப்போது ஆகும் செலவைவிட இன்னமும் வருஷம் ஒன்றுக்கு ரூ. 2000 அதிகமாகச் செலவு பிடிக்கும். இனியும் கொஞ்சம் சந்தாதாரர்கள் அதிகமானால் இவைகளைச் செய்ய சவுகரியமாய் இருக்கும்."

எப்படி, பெரியாருடைய தூண்டும் ஆற்றல்! அவரின் எழுத்துக்குத் தக்க விளைவு ஏற்படவே செய்தது. அவரின் ஆவலைத் தமிழின உணர்வாளர்கள் நடைமுறைப்படுத்தவே செய்தார்கள். ஆறு மாதங்களில் 'குடிஅரசு' இருபது பக்கங்களை ஏற்றுச் செம்மாந்த முறையில் மக்களின் கைகளில் தவழ்ந்தது!

அதே ஆசிரியவுரையின் இறுதிப் பகுதி பெரியாரின் கொள்கை உறுதிப்பாட்டையும் அதே நேரத்தில் 'குடிஅர'சின் பற்றாளர்கள் மீதான தமது நம்பிக்கையினையும் ஊன்றிக்காட்டுவதாய் அமைந்தது.

"எதைப் பார்த்தாலும் புரட்டும் பித்தலாட்டமும் பெயரைப் பார்த்து ஏமாறத்தக்கதாயிருக்கிறதேயல்லாமல் – தத்துவங்கள் எல்லாம் நமக்கும் நமது நாட்டுக்கும் ஆபத்தை விளைவிக்கக் கூடியதாகவும், கொஞ்சங்கூட 'ரிப்பேர்' செய்வதற்கில்லாமல், அடியோடு அழித்து, மறுபடியும் புதிதாய் உண்டாக்க வேண்டியதாகவே இருக்கிறது. இக்கஷ்டமானதும், மனதுக்கு இன்பத்தைக் கொடுக்கக் கூடியதுமான காரியத்தில் இறங்கி விட்டோம். உலகம் ஒப்புக் கொண்டாலும் சரி, தள்ளிவிட்டாலும் சரி, நமக்கு அதைப் பற்றிக் கவலை இல்லை. நமது கடமையை எப்படி நாம் பிரதானமாய்க் கருதியிருக்கிறோமோ, அதுபோலவே பொதுஜனங்களும் – அதாவது இக்கடமையைச் சரி என்று எண்ணியவர்கள் – தங்கள் தங்களது கடமையையும் எண்ணி, அக்கடமையைச் செலுத்துவார்கள் என்று நம்புகிறோம்" (குடியரசு: 1-5-1927).

அதற்கு இரண்டரை மாதங்கழித்து "நமது வேலை" எனும் தலைப்பில் எழுதிய 'குடிஅரசு' ஆசிரியவுரையிலும் இதழ்ப் பணிகள் பற்றிப் பெரியார் குறிப்பிட்டார்.

> **"குடிஅரசு' பத்திரிகை தோன்றி 27 மாதங்கள் ஆகின்றதெனினும் அதன்மூலம் தேசத்திற்கும் சமூகத்திற்கும் நமக்குச் சரியென்று தோன்றிய வழியில் நம்மால் கூடிய தொண்டை ஆற்றி வந்திருக்கிறோம். எனினும் செய்யவேண்டிய வேலை எவ்வளவோ பாக்கி இருக்கிறது. 'குடிஅரசு' பத்திரிக்கை வேலை மாத்திரம் அல்லாமல், அதன் கொள்கையைப் பரப்ப – மக்கள் மனதில் பதியச் செய்ய, ஊர்ஊராய்த் திரிந்து பிரச்சாரமும் செய்ய வேண்டிய பொறுப்பு இனியும் எவ்வளவோ மடங்கு அதிகமாயிருந்து வருகிறது"** என இனி செய்யவேண்டிய வேறு பணிகள் பற்றியும் குறிப்பிட்டார்.

## பெரியாரின் எழுத்தாற்றல்

ஓர் அச்சிடுவோராக, ஒரு வெளியீட்டாளராக மட்டுமின்றி, பெரியார் ஓர் எழுத்தாளராகவும் இருந்தார். எழுத்தாளரென்றால் பெயரளவிற்கான வெற்று எழுத்தாளராக அன்று; வெல்லும் எழுத்தாளராக விளங்கினார் அவர். எழுத்தாற்றல் பற்றிய தன்னம்பிக்கை அவருக்கு இருந்ததால்தான் இதழ் தொடங்கும் துணிவு அவருக்கு ஏற்பட்டது.

கட்டுரைகளுக்குத் தலைப்புகள் இடுவதிலேயே அவரின் எழுத்துத் திறன் பளிச்சிட்டது.

"தமிழர்களே! உங்களுக்குப் புத்தி இல்லையா?"; "புராண ஆபாசங்கள்"; "ஆச்சாரியாரின் 10 கற்பனைகள்"; "தண்ணி மயக்கமா? ஆணவ மயக்கமா?", "சென்னையே! என்ன செய்யப்போகிறாய்?"; "கருப்புக் காங்கிரஸ்வாதி வெள்ளைக் காங்கிரஸ்வாதி"; "முத்தையா வாழ்க!"; "சீர்திருத்தமா? அழிவு வேலையா?"; "தீண்டாதார் தேற வழி என்ன?"; "கீழ் நாடும் மேல் நாடும்"; "இன்றைய ஆட்சி முறை ஏன் ஒழிய வேண்டும்?"; "எதிர்பார்த்த எதிர்ப்புகள்"; "அறிவும் மானமும் கெட்டது ஏன்?"; "இனி என்ன? ஒரு கை பார்க்க வேண்டியதுதான்!"; "தோழர் என விளியுங்கள்!"; "சாதித் தொழிலாளர் - கூலித் தொழிலாளி"; "போர் மூண்டுவிட்டது - தமிழர் ஒன்று சேர்க!"; "நம்பிக்கைத் துரோகம்"; "மகன் செத்தாலும் மருமகள் முண்டை ஆக வேண்டும்!"; "உதவாக்கரை இலக்கியங்கள்"; "சுயமரியாதைத் திதியும் புரோகிதர் கதியும்"; "நான் சொல்லுவது கட்டளையா?"; "இந்தியா ஒரு நேஷனா?"; "ஏன் காங்கிரசிலிருந்து வெளியேறினேன்?";

"தேவர்களின் காமவிகாரம்"; "பார்ப்பான் - சைவன் சம்பாஷணை"; "கேள்விகேட்கும் பழக்கம்"; "பிராமணர்களைவிட வெள்ளைக்காரரே மேல்!" - போன்ற பெரியாரின் கட்டுரைத் தலைப்புகள் எவரையும் படிக்கத் தூண்டும் கவர்ச்சி நிரம்பியவை.

இயல்பாகவே தந்தை பெரியார் ஒரு நகைச்சுவையாளர். நகைச் சுவையும் அங்கதப் பண்பும் வாய்ந்த கிண்டல் கட்டுரைகளை அவர் 'சித்திரபுத்திரன்' என்னும் மாற்றுப் பெயரில் எழுதினார். அப்பெயர்க் கவர்ச்சியும் பெரும்பாலும் உரையாடல் உத்தியைக் கையாண்டு அவர் வடித்த கட்டுரைகளின் உட்கருத்துகளும் படிப்போர் எண்ணிக்கையைப் பெருக்கவல்லவையாய் இருந்தன.

பிறவிப் பேரறிவாளராகப் பெரியார் இருந்தார். எனவே தொடக்கக் கல்வி மட்டுமே அவருக்கு வாய்த்தாலும், வணிகராக - நகராட்சி மன்றத் தலைவராக- புலவர்கள், 'சாமியார்கள்' முதலியவர்களோடு சொல்லாடல் புரியும் வாய்ப்புற்றவராக- பலதரப்பட்ட மக்களின் நட்புச் சுற்றம் படைத்தவராக - புராணங்கள் என்பவற்றில் பயிற்சி நிரம்பியவராக- அவர் ஈட்டிக் கொண்ட பெரும் பட்டறிவு, எழுத்தாற்றலை அவருக்கு ஊட்டி உதவிற்று; உயர்த்திற்று!

பெரியாரின் எழுத்தாற்றல் பற்றி அறிஞர் சோமலெ அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

> **"தமிழ்ப் பத்திரிகை இயக்கத்தின் தலைவர்களுள் அடுத்த படியாகக் குறிப்பிடத்தக்கவர் இவரே. இவரின் நடை லாவகமானது; பச்சையானது; நேரடியானது என்று கூடச் சொல்லலாம். கேட்பவர் – படிப்பவர் மனங்களில் ஆழமாய்ப் பதியக்கூடியது"**

என்பது சோமலெ அவர்களின் மதிப்பாய்வு. பெரியாரின் எழுத்துகள் சிலவற்றைப் பார்ப்போம்.

> **"ஒருவன் உழைப்பில் ஒருவன் நோகாமல் சாப்பிடுவது என்கிற தன்மை இருக்கிறவரையிலும், ஒருவன் தினம் ஒருவேளைக் கஞ்சிக்கு மார்க்கமில்லாமல் பட்டினிகிடந்து சாவதும், மற்றொருவன் தினம் அய்ந்து வேளை சாப்பிட்டுவிட்டுச் சாயுமான நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு வயிற்றைத் தடவிக் கொண்டிருக்கிறதும், ஒருவன் இடுப்புக்கு வேட்டி யில்லாமல் திண்டாடுவதும் மற்றொருவன் மூன்று வேட்டி போட்டுக் கொண்டு உல்லாசமாய்த் திரிவதுமான தன்மை இருக்கிறவரையிலும், பணக்காரர்கள் எல்லாம் தங்களது**

செல்வம் முழுமையும் தங்களுடைய சுகவாழ்வுக்கே ஏற்பட்டது என்று கருதிக் கொண்டிருக்கிற தன்மை இருக்கிறவரையிலும் சுயமரியாதை இயக்கம் இருந்தே தீரும்" (குடிஅரசு: 1-6-1930).

"சங்கராச்சாரி, மடாதிபதி என்று சொல்லப்படும் ஆட்கள் இரயில் ஏறுவது நீச்சத்தனம் என்றும்; மாட்டுவண்டி - குதிரை வண்டி ஆகியவைகளில் ஏறுவது ஜீவஹிம்சை என்றும் கருதிக் கொண்டு, மரக்கட்டையில் பல்லக்கு செய்து, அதற்குத் தங்கம் - வெள்ளி முதலிய தகடுகள் போட்டு, அதன்மீது தான் உட்கார்ந்து கொள்ள, தண்டு ஒன்றுக்கு நாலுபேர் வீதம் நாலு தண்டுக்குப் பதினாறுபேர் 'ம்கு, ம்கு' என்று முக்கிக் கொண்டு, மணிக்கு நாலு மைல்வீதம் தூக்கி ஓடுவதைப் பார்க்கிறோம். இந்த வாழ்வு காட்டுமிராண்டி யுலக வாழ்வா? அல்லது நாகரிக உலக வாழ்வா?" (குடிஅரசு: 14-12-1930).

"குடியிருக்க நிழல் இல்லாமல் மக்கள் திரியும்போது, மலைகளையும் பாறைகளையும் உடைத்துக் கோட்டைகள் போல் மக்கள் கோவில் கட்டுவதன் கருத்து என்னவென்று பாருங்கள்.

எவ்விதத் தொழிலும் செய்வதற்கு மூலதனம் இல்லாமலும், தொழில் இல்லாமலும் மக்கள் வயிறு வளர்க்கக் கப்பலேறி வேற்றுநாட்டுக்குக் கூலிகளாய்ப் போய், சொத்துப் பொத்தென்று மாண்டு மடிந்து கொண்டிருக்கும்போது, பொம்மைகளை வைத்து உற்சவம் செய்வதும், அவற்றிற்குப் பத்து இலட்சம் - ஒரு கோடி - பத்துக் கோடிக்கணக்கான நகைகளும் வாகனங்களும் பாத்திரங்களும் துணிகளும் சொத்துக்களும் சேர்த்து வைப்பதன் கருத்து என்னவென்று பாருங்கள்!

நாளுக்கு நாள் வாழ்க்கை துன்பகரமாக மாறி ஏழைகள் மலிந்துவரும் போது, ஆயிரக்கணக்காய் - ஏன் இலட்சக் கணக்காய்ச் செலவு செய்து கும்பாபிஷேகங்கள் செய்வதன் கருத்து என்னவென்று யோசித்துப் பாருங்கள்!"

"பொதுவாக நமது பிரசங்கத்தினாலும் 'குடிஅரசு'வினாலும் நான் செய்துவந்த பிரச்சாரத்தில் அரசியல் இயக்கங்கள் என்பவை களைக் கண்டித்திருக்கிறேன்; அரசியல் தலைவர்கள் என்பவர்களைக் கண்டித்திருக்கிறேன்; மதம் என்பதைக் கண்டித்திருக்கிறேன்; மதத் தலைவர்கள் என்பவர்களைக் கண்டித்திருக்கிறேன்; மதச் சடங்கு என்பவைகளைக் கண்டித்திருக்கிறேன்; குருக்கள் என்பவர்களைக் கண்டித்

திருக்கிறேன்; கோயில் என்பதைக் கண்டித்திருக்கிறேன்; சாமி என்பதைக் கண்டித்திருக்கிறேன்; வேதம் என்று சொல்வதைக் கண்டித்திருக்கிறேன்; சாஸ்திரம் என்பதைக் கண்டித்திருக்கிறேன்; புராணம் என்பதைக் கண்டித்திருக்கிறேன்; பார்ப்பனீயம் என்பதைக் கண்டித்திருக்கிறேன்; ஜாதி என்பதைக் கண்டித்திருக்கிறேன்; அரசாங்கம் என்பதைக் கண்டித் திருக்கிறேன்; உத்தியோகம் என்பதைக் கண்டித்திருக்கிறேன்; நீதிஸ்தலம் என்பதைக் கண்டித்திருக்கிறேன்; நியாயாதிபதி என்பவர்களைக் கண்டித்திருக்கிறேன்; நிர்வாக ஸ்தலங்கள் என்பவைகளைக் கண்டித்திருக்கிறேன்; ஜனப்பிரதிநிதித்துவம் என்பதைக் கண்டித்திருக்கிறேன்; பிரதிநிதிகள் என்பவர்களைக் கண்டித்திருக்கிறேன்; தேர்தல் என்பதைக் கண்டித்திருக்கிறேன்; கல்வி என்பதைக் கண்டித்திருக்கிறேன்; சுயராஜ்யம் என்பதைக் கண்டித்திருக்கிறேன்; கலியாணசுந்தர முதலியார், வரதராஜுலு நாயுடு, சி. இராஜகோபாலாச் சாரியார் முதலிய ஒரே துறையில் வேலை செய்துவந்த நண்பர்களைக் கண்டித்திருக்கிறேன்; இன்னும் என்னென்னவற்றையோ யார்யாரையோ கண்டித்திருக்கிறேன்; கோபம் வரும்படி வைதுமிருக்கிறேன்.

எதைக் கண்டித்திருக்கிறேன், எதைக் கண்டிக்கவில்லை, யாரை வையவில்லை என்பது என் ஞாபகத்திற்கு வரமாட்டேன் என்கிறது. இன்னமும் – ஏதாவது எழுதலாம் என்று பேனாவை எடுத்தாலும், பேசலாம் என்று வாயைத் திறந்தாலும், கண்டிக்கவும் வையவும் துக்கப்படவுமான நிலைமை ஏற்படுகிறதே யொழிய வேறில்லை. கண்டிக்கத்தகாத – வையத்தகாத இயக்கமோ திட்டமோ அபிப்பிராயமோ எனக்குப் படமாட்டேன் என்கிறது" (குடிஅரசு: 1.5.1927).

"ஒரு நாடு என்பது நாட்டிலுள்ள பல வகுப்பாரின் நலத்தையும் பொறுத்ததா? ஒரு வகுப்பாரின் நலத்தை மாத்திரம் பொறுத்ததா? உண்மையான நாட்டுநலத்தைத் தேடுவோர், தாழ்ந்த வகுப்பாருடைய நலத்தையும் பிற்பட்ட வகுப்பாருடைய நலத்தையும் தேடுவதைத்தான் நாட்டு நலமென்று நினைப்பார்கள். நாடு என்பது சகல வகுப்பாருக்குமே யொழிய, வலுத்த வகுப்பாருக்கென்று மாத்திரம் ஏற்பட்டதல்ல..............

நமது நாட்டில் பல வகுப்புக்கள் இருந்தபோதிலும் ஒவ்வொரு வகுப்பையும் கவனித்து, அதற்கு வேண்டிய சுயமரியாதை ஏற்பட்டிருக்கிறதா? தேசத்தில் வரும் ஆக்கம் பல வகுப்புக் களுக்கும் சரிவரப் போய்ச் சேர மார்க்கமிருக்கின்றதா?

என்பதைக் கவனித்து வேலை செய்தால், அது தேசத்தையே முன்னுக்குக் கொண்டு வந்ததாகும், அப்படிக்கின்றி, முன்னால் இருக்கிற வகுப்பாரை மாத்திரம் கூட்டிக் கொண்டு, அவர்கள் மெச்சும்படி, அவர்கள் பின்னால் திரிந்து கொண்டு நாட்டுநலம், நாட்டுநலம் என்று சொல்லிக் கொண்டும் வகுப்பு நலத்தைத் தேடினால் நாடு கெட்டுப் போகுமென்று சொல்லிக் கொண்டும் திரிந்தால் ஒரு நாடு எப்படி முன்னுக்கு வரும்?" (குடிஅரசு: 14-2-1926).

"முக்கிய எச்சரிக்கை என்னவென்றால், பார்ப்பனர்களில் சிலர் சீர்திருத்தக்காரர்கள் என்று சுலபத்தில் பட்டம் பெற்று விடுவார்கள். அதாவது கள்ளும் சாராயமும் குடித்தால் அதனாலேயே அவர் ஒரு சீர்திருத்தக்காரர் ஆகிவிடுவார். ஒருவர் ஆடு மாடு பன்றி சாப்பிட்டால் அதனாலேயே அவர் ஒரு சீர்திருத்தக்காரர் ஆகிவிடுவார். மற்றொருவர் வெட்டிச் சோறாக, யார் வீட்டிலும் கிடைத்ததை யெல்லாம் வயிற்றை நிரப்பிக் கொண்டு திரிந்தால் அதனாலேயே அவர் ஒரு பெரிய சீர்திருத்தக்காரர் ஆகிவிடுவார். மற்றொருவர் ஒழுக்கமில்லாமல் யாரையும் - எந்தப் பெண்ணையும் கலியாணமாகவோ வைப்பாட்டியாகவோ வேசியாகவோ அனுபவித்துக் கொண்டு திரிந்தால் அதனாலேயே அவர் ஒரு பெரிய சீர்திருத்தக்காரர் ஆகிவிடுவார். ஜனங்களும் முட்டாள்தனமாக அவர்களை வித்தியாசமற்றவரென்றும் சீர்திருத்தக்காரர் என்றும் நம்பிவிடுவார்கள். ஆனால் அவர்கள் சீர்திருத்தத்திற்கு மாத்திரமன்னியில் பார்ப்பனரல்லாத சமூகத்திற்கே பெரிய ஆபத்தானவர்கள் என்பதை மறந்து விடாதீர்கள்." (குடிஅரசு: 9-12-1928).

"இயற்கையைத்தான் கடவுள் - தெய்வம் - ஆண்டவன் - சாமி என்று சொல்லுகிறோம் என்பதாகவும், மற்றும் அந்த இயற்கைத் தோற்றங்களுக்கு ஏதாவது ஒரு காரணமோ அல்லது ஒரு சக்தியோ இருக்க வேண்டுமே என்றும், அந்தக் காரணத்திற்கோ, சக்திக்கோதான் கடவுள், சாமி, ஆண்டவன், தெய்வம் என்கின்ற பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதாகவும் சொல்லிக் கொண்டு மாத்திரம் இருப்பவர்களிடத்தில் நமக்கு இப்போது அவ்வளவாகத் தகராறு இல்லை.

ஆனால் அந்தக் கடவுளுக்குக் கண் மூக்கு வாய் கை கால் தலை பெயர், ஆண்-பெண் தன்மை, பெண்சாதி-புருஷன், குழந்தை-குட்டி, தாய்-தகப்பன் முதலியவைகளைக் கற்பித்து,

அதனிடத்தில் பக்தி செலுத்த வேண்டுமென்றும், அதற்குக் கோயில் கட்டிக் கும்பாபிஷேகம் செய்து, தினம் பல வேளைகள் பூசை செய்ய வேண்டும் என்றும் அச்சாமிகளுக்குக் கலியாணம் முதலியவை செய்வதோடும், தேவடியாள் வீட்டிற்குக் கடவுள் சென்றார் என்று அழைத்துக் கொண்டு போவதோடும், அந்தக் கடவுள் அப்படிச் செய்தார், இந்தக் கடவுள் இப்படிச் செய்தார் என்பதான திருவிளையாடல்கள் செய்துகாட்ட வருஷாவருஷம் உற்சவம் செய்ய வேண்டும் என்றும், அக்கடவுள்களின் பெருமைகளைப் பற்றியும் திருவிளையாடல்கள் பற்றியும் பாட வேண்டும் என்றும், இதுபோன்ற இன்னும் பல செய்தால், அக்கடவுள்கள் நமது இச்சைகளை நிறைவேற்றுவார்கள் என்றும், மற்றும் நாம் செய்த–செய்கின்ற–செய்யப் போகின்ற எவ்வித அக்கிரமங்களையும் அயோக்கியத்தனங்களையும் கொடுமைகளையும் மன்னிப்பார் என்றும் சொல்லப் படுபவைகளான மூடநம்பிக்கையும் வயிற்றுப் பிழைப்புச் சுயநலப் பிரச்சாரமும் ஒழிய வேண்டும் என்பதுதான் நமது கவலை" (குடிஅரசு: 1–7–1928).

இன்னும்-தமிழ்மொழியின் உயர்வு, தமிழ்ச் சங்க ஆண்டுவிழா போன்ற தாய்மொழி யுணர்வுக் கட்டுரைகளும் 'குடிஅர'சில் வெளியிடப் பெற்றன. இதுவரை நாம் அறிந்து கொண்ட செய்திகள் அனைத்தும் அரையாண்டுக்குள் 'குடிஅர'சில் இடம் பெற்றவை.

எனவே பெரியாரின் தமிழினத் தொண்டுபற்றிய புரிதல் சிந்திக்கும் பழக்கம்கொண்ட பலரிடத்திலும் உண்டாகிவிட்டது. அந்தத் தாக்கம் எப்படிப்பட்டதாய் இருந்தது என்பதற்கு இதோ ஓர் எடுத்துக்காட்டு:

"வைக்கம் வீரரே! தங்களைத் தமிழுலகம் கைகூப்பித் தொழுகின்றது.... பிராமணரல்லாதார் கொட்டத்தை அடக்கிவிட்டோம்; ஜஸ்டிஸ் கட்சியை வீழ்த்திவிட்டோம் என அய்யங்கார் கோஷ்டியானது மகிழ்ச்சி அடையலாம். ஆனால் அம்மகிழ்ச்சி நீண்டகாலம் நிலைபெறாது.

"வைக்கம் வீரரே! சென்ற வாரத்தில் தியாகராஜ நிலையத்தைத் தாங்கள் சேலத்தில் திறந்துவைத்தபொழுது நிகழ்த்திய சொற்பெருக்கைத் தமிழுலகம் போற்றுகிறது; தங்கள் பெயரையும் வாழ்த்துகிறது.

அஞ்சா நெஞ்சு படைத்த வீரரே! தமிழரைக் கைவிடாதீர். தமிழுலகம் தங்களை ஆதரிக்கிறது. வீரரே! தமிழர்களை

மீட்கவியலும் ஒரு வழி காண்பீராக. எவ்வழியாயினும் தமிழர் முன்னேறவேண்டும். தமிழரின் அடிமைத் தனம் நீங்க வேண்டும். வைக்கம் வீரர் வாழ்க! வாழ்க!".

இவ்வாறு உணர்ச்சி பொங்க எழுதியவர் ஓர் இதழாசிரியர்; தமிழ்நாட்டெல்லையைத் தாண்டிய திருவனந்தபுர மாநகரில் வெளிவந்து கொண்டிருந்த 'வஞ்சிகேசரி' என்னும் தமிழிதழ் ஆசிரியர் அவர்.

தமிழினத்திற்காக வழக்காட, தமிழினத்தை மீட்க, தமிழினத்திற்குப் புத்துயிர் தந்து காக்கப் பெரியாரவர்களால் முடியும் - பெரியாராலேதான் முடியும் என்ற அசைக்கவொண்ணா நம்பிக்கை 'வஞ்சிகேசரி' ஆசிரியருக்குத் தோன்றும் வண்ணம் பெரியாரின் நடவடிக்கைகள் இருந்தன என்பது புலனாகிறது.

இவ்வண்ணம் தன்மானம், தமிழியம், சமனியம், உடன்பிறப்பியம், தீண்டாமை மாய்ப்பு, பிறப்பிழிவுத் துடைப்பு, வகுப்புரிமை வாய்ப்பு. இவை அனைத்திற்கும் இடம் தரும் அரசியல் விடுதலை ஆகியவற்றையே பெரியார் 'குடிஅர'சின் நோக்கங்களாக மக்களின் முன்வைத்தார்.

இவ்வெல்லாக் குறிக்கோள்களையும் கொண்ட தமிழிதழ் எதுவும் அப்போது நாட்டில் இல்லை. அப்படி ஓர் இதழை வெளியிட வேண்டும் என்ற எண்ணத்தை ஏந்திய தலைவர் எவரும் அக்கட்டத்தில் தோன்றவில்லை. இவ்வகையில் 'குடிஅரசு'க்கு இணை காட்ட தமிழிதழியல் வரலாற்றில் எவராலும் முடியாது!

## பெரியார் ஒரு படைப்பாளி

நீளமான சொல்லியங்களைக் கொண்ட நெடிய கட்டுரைகளாக வரைவதுதான் பெரியாரின் எழுதுமுறை - பாணி என்று முடிவு கட்டிவிடக் கூடாது. ஆழமான கருத்துமண்டிய சிற்றளவுச் சொற்றொடர்கள் நிரம்பிய குறும்படைப்புங்கூட அவருக்குக் கைவந்த கலையாக இருந்தது.

ஒரு சோற்றுப் பதமாக ஒன்றைக் காணுவோம்:

"குழந்தை : என்னடி அம்மா, நேற்று என் கழுத்தில் போட்டிருந்த நகையைக் காணோமே! அதை யார் எடுத்தார்கள்?

தாயார் : அடிபாவி, அது நகையல்ல; தாலி. அதை ராத்திரி அறுத்தாய்விட்டது.

குழந்தை : எனக்குத் தெரியவில்லையே!

தாயார் : ராத்திரி 11 மணி இருக்கும். நீ அப்போது தூங்கிக் கொண்டிருந்தாய். ஆதலால் அது உனக்குத் தெரியவில்லை.

குழந்தை : அதை ஏன் அறுத்தார்கள்?

தாயார் : அத்தாலியைக் கட்டின உன் புருஷன் இறந்துபோய் விட்டானல்லவா? அதனால் அறுத்துவிட்டார்கள்.

குழந்தை : அவன் போனால் போகட்டுமே. வேறு யாரையாவது கட்டச் சொல்வதுதானே..........? அதை ஏன் எனக்குத் தெரியாமல் கழட்டிக் கொண்டாய்? அதை மறுபடியும் என்கழுத்தில் போட்டால் தான் சாப்பிடுவேன். ஊ..... ஊ...... ஊ......!

(குடிஅரசு: 1-4-1928)

"பாலிய விவாகம்" என்னும் தலைப்பில் இது வெளிவந்தது. இரக்கமும் அவலமும் புதைந்துள்ள இவ்வுரையாடல் ஓர் அங்கதம்* (Satire) அல்லவா? இத்தனைக்கும் இதில் நடைமுறைப் பேச்சுத் தமிழ் - கொச்சை மொழி கையாளப்படவில்லை; இலக்கிய நடையிலான நல்ல தமிழையே பெரியார் பயன்படுத்தியிருக்கிறார். அதற்கே நம் அகச்சான்றை அசைத்து உலுக்கும் ஆற்றல் இருக்கிறது என்னும் உண்மையை நாம் ஏற்றுக் கொண்டாக வேண்டும்.

இயல்பாகவே பெரியார் இலக்கிய உணர்வு படைத்தவரே. ஓர் இலக்கியப் படைப்பாளரே! ஆனால் அது விளம்பரப்படுத்தப் பெறவில்லை. இலக்கியச் சான்றோர்கள் பெரியாரின் எழுத்துகளை ஆய்வு செய்வார்களாயின் ஒரு மாபெரும் இலக்கியப் படைப்பாளரை அவருள்ளிருந்து அள்ளி எடுக்கலாம்.

இப்பொருள் தொடர்பாக, செவிகளால் கேட்டு வைப்பதற்கும் நெஞ்சப் பேழையில் போட்டு வைப்பதற்கும் என்று அவையின் முன்னர் ஒரு சிலவற்றை எடுத்துவைப்பதற்கு விழைகின்றேன். கேட்டதற்குப்பின் என் கருத்திற்கு ஏற்பு வழங்கத் தயங்க மாட்டீர்கள் என்று நம்புகிறேன்.

---

* நையாண்டி இலக்கியம்.

"எனக்கு ஏதாவது எழுதலாமா என்ற உணர்ச்சி வந்தது. உடனே என்ன எழுதலாம் என்று யோசித்தேன். காகிதம், பேனா எடுத்து எழுத ஆரம்பித்தேன்..........

நான் சிறிது 'சுறுசுறுப்பான சுபாவமுள்ள' சிறுவன்; அத்தோடு வேடிக்கையாக மற்றவர்கள் சிரிக்கும்படி பேசுகிறவன். மற்றவர் சிரிக்கும்படி பேசுவது இரண்டு விதம். ஒன்று பேச்சில் வேடிக்கை,

அதிசயக் கருத்து இருந்து, சிரிக்கப்படுவது ஒருவிதம். மற்றொன்று மானாவமானமில்லாமல் சங்கதிகளைக் கீழ்தரத்தில் பேசுவதில் சிரிக்க நேருவது மற்றொருவிதம். நான் அதிகமாக, வேடிக்கைக் குறும்புத்தனமாய் சங்கதி பேசுவது வழக்கம். அது இரண்டாம் ரகத்தைச் சேர்ந்தது........

இந்த நிலையில் என்னைப் படிக்கப் போட்ட பள்ளிக்கூடம் ஓர் ஓலைச்சாலைக் குடிசை. 16 அடி நீளம், 8 அடி அகலம் இருக்கும். அதில் சுமார் 50 பிள்ளைகள் படிப்பார்கள். 5 வயது முதல் 13 வயதுவரை வயதுள்ளவர்கள். வீட்டில் காலித்தனம்; தெருவில் வம்பளப்பு – கலகம், பள்ளியில் சுட்டித்தனம்; வளர்ப்பில் செல்லம். இவைகளால் நான் கற்றது வாயாடித்தனம். இந்த வாயாடித்தனம் வெட்கமில்லாமல் – பயமில்லாமல் செல்ல வழி கிடைத்துவிட்டால், அது எங்கு போய் நிற்கும்.....? சொல்ல வேண்டுமா?"

தன் வரலாறு - சுயசரிதை எழுதும் முயற்சியில் இறங்கிய பெரியாரவர்களின் தொடக்க வரிகள் இவை.

அடுத்து - சுமார் 60 ஆண்டுகளுக்கு முன் காதல் என்னும் பொருள் பற்றி ஆய்வு பண்ணிப் பெரியார் எழுதிய அழகான கட்டுரையின் சில பகுதிகளைப் படிக்கிறேன்.

காதல் என்றால் என்ன? அதற்குள்ள சக்தி என்ன? அது எப்படி உண்டாகின்றது? அது எதுவரையில் இருக்கின்றது? அது எந்தெந்தச் சமயத்தில் உண்டாவது? அது எவ்வப்போது மறைந்துவிடுகிறது? அப்படி மறையக் காரணம் என்ன?

ஆழ்ந்து யோசித்தால் காதல் என்பதன் சத்தற்ற தன்மை, பொருளற்ற தன்மை, உண்மையற்ற தன்மை, நித்தியமற்ற தன்மை, அதைப் பிரமாதப்படுத்துவதன் அசட்டுத்தனம் ஆகியவை எளிதில் விளங்கிவிடும்......

அழகைக் கொண்டோ, பருவத்தைக் கொண்டோ, அறிவைக் கொண்டோ, ஆஸ்தியைக் கொண்டோ, கல்வியைக் கொண்டோ,

சங்கீதத்தைக் கொண்டோ, சாயலைக் கொண்டோ, பெற்றோர் பெருமையைக் கொண்டோ அல்லது மற்றேதோ ஒரு திருப்தியை அல்லது தனக்குத் தேவையான ஒரு காரியத்தையோ குணத்தையோ கொண்டுதான் யாரும் எந்தப் பெண்ணிடமும் ஆணிடமும் காதல் கொள்ள முடியும்.

காதல் கொள்ளும்போது காதலர்கள் நிலைமை, மனப்பான்மை, பக்குவம், இலட்சியம் ஆகியவைகள் ஒருமாதிரியாக இருக்கலாம். பிறகு கொஞ்ச காலம் கழிந்த பின் இயற்கையாகவே பக்குவம், நிலைமை, இலட்சியம் மாறலாம். ஆசையை விட, அன்பைவிட, நட்பைவிடக் காதல் என்பதாக வேறொன்றும் இல்லை." (குடிஅரசு: 18-1-1931).

பெரியாரின் துணைவியார் நாகம்மையவர்கள் இயற்கை எய்தியபோது அவர் எழுதிய இரங்கற்கட்டுரையின் ஒரு சில துண்டங்களை இப்போது சுவைப்போம்.

"நாகம்மாள் உயிர் வாழ்ந்ததும், 'வாழ ஆசைப்பட்டதும் எனக்காகவே ஒழிய தனக்காக அல்ல' என்பதை நான் ஒவ்வொரு விநாடியும் நன்றாய் உணர்ந்து வந்தேன். .....

பெண்கள் சுதந்தர விஷயமாகவும் பெண்கள் பெருமை விஷயமாகவும் பிறத்தியாருக்கு நான் எவ்வளவு பேசுகிறேனோ – போதிக்கிறேனோ அதில் நூற்றில் ஒரு வீதமாவது என்னருமை நாகம்மாள் விஷயத்தில் நான் நடந்து கொண்டிருந்தேன் என்று சொல்லிக் கொள்ள எனக்கு முழு யோக்கியதை இல்லை..........

ஆகவே நாகம்மாள் மறைந்தது எனக்கு ஒரு அடிமை போயிற்றென்று சொல்லட்டுமா? ஆதரவு போயிற்றென்று சொல்லட்டுமா? இன்பம் போயிற்றென்று சொல்லட்டுமா? உணர்ச்சி போயிற்றென்று சொல்லட்டுமா? ஊக்கம் போயிற்றென்று சொல்லட்டுமா? எல்லாம் போயிற்றென்று சொல்லட்டுமா? எதுவும் விளங்கவில்லையே?" (குடிஅரசு: 14-1-1933).

மேற்குறித்த பெரியாரின் சொல்லியங்களில் அமைந்துள்ள சொல்லாட்சிகளைப் பார்த்தீர்களா? அவற்றுள்தான் எத்துணை அவலச்சுவை உறைந்து கிடக்கிறது!

'ELEGY' (இரங்கற்பா) என்பதான புலம்பற் பாடல்கள் படிக்கிறோமே, அவ்வகை இலக்கியத்தோடு வைத்து

எண்ணப்படுவதற்கு எல்லாத் தகுதியும் படைத்ததல்லவா பெரியாரின் இரங்கற் 'கட்டுரை'.

இலக்கியம் ஓர் இலக்கினைக் கொண்டதாய் இருக்க வேண்டும் என்பது இலக்கணம். சிற்றூர்களில் வாழும் பாட்டாளிகளுக்காகப் பரிந்து பெரியார் வழக்கு வைக்கிறார் இப்படி:

> "கிராமத்தானுக்குக் கல்வி இல்லாமல் இருந்தால்தானே பயிரிட்டு, உழைத்து, அறுத்து, மூட்டையாகத் தைத்து வண்டியில் போட்டு நகரத்துக்கு அனுப்பிவிட்டு, சாவியாய்ப் போன தானியத்தை வீட்டுக்கு எடுத்துக் கொண்டுபோய், கஞ்சியாய்க் காய்ச்சி, கலயத்தில் ஊற்றி, பிள்ளை குட்டிகளைச் சுற்றிலும் உட்கார வைத்துக் கொண்டு, "இன்று கடவுள் நமக்கு இவ்வளவு கொடுத்தார்" என்று வாழ்த்துப்பாடி, எருமை மாடு தவிட்டுத் தண்ணீர் குடிப்பதைப் போல் வயிறு முட்டக் குடிக்க முடியும்?.........
>
> கிராமம் என்ற ஒன்று – ஒரு குப்பைக்காடு – எதற்காக இருக்க வேண்டும்? ஆடு, மாடு, எருமை மேய்ப்பதும், அவைகளைக் காப்பாற்றிப் பால், தயிர், நெய், மோர் உற்பத்தி செய்வதும் கிராமத்தான்; அவ்வளவையும் அனுபவிப்பது நகரத்தான். கிராமவாசி கிராமத்தில் இரவு 3 மணிக்கு எழுந்து, மாட்டுக்குத் தண்ணீர் வைத்து, கொட்டத்தைக் கூட்டிச் சுத்தம் செய்து, 4 மணிக்குப் பால் கறந்துவிட்டு, கஞ்சி காய்ச்சிக் குடித்துவிட்டு, 5 மணிக்குப் புறப்பட்டு – 3, 4, 5, மைல் நடந்து 6–மணிக்கு வந்து நகரத்து மக்களை, 'அய்யா, பால்காரி நான்!' என்று சொல்லிக் கதவைத் தட்டி எழுப்பிவிட்டுப் பால் ஊற்றிவிட்டுப் போகிறார்கள். தங்கள் பிள்ளை குட்டிகளுககுப் பால், நெய் ருசியே தெரியாமல் செய்துவிடுகிறார்கள். இதற்கு 'நகரத்தார்' பணம் கொடுக்கிறார்கள் என்பது உண்மைதான். கிராமத்தான் கையில் கிடைத்த இந்தப் பணம்தான் என்ன ஆகிறது? போலீசுக்கு ஒரு பங்கு; முனிசிபல் சிப்பந்திகளுக்கு ஒரு பங்கு; கள்ளுக் கடைக்கு ஒரு பங்கு போனதுபோக, கனமாக ஏதாவது மீதி இருந்தால் அது வக்கீலுக்கும் அதிகாரிகளுக்கும் போகிறது.
>
> கிராமத்தான் பாடுபட்டுப் பயிராக்கி, தானியமாக்கி நகரத்துக்குக் கொண்டுவந்தால் நகர வியாபாரி, கிராமத்தானின் பயிர்ச் செலவு, முட்டுவழிச் செலவுக்குக் கூடப் பத்தும் பத்தாமல் கணக்குப் போட்டு விலைபேசி, ஒன்றுக்கு ஒன்றே காலாக ஏமாற்றி அளந்து வாங்கிக் கொண்டு, மொத்தக் கிரயத்தை, தரகு, மகிமை,

சாமிகாக, நோட்டு வட்டம், வாசல்காரிக்கு, கலாஸ்காரனுக்கு வெற்றிலை பாக்குச் செலவு' என்றெல்லாம் பல செலவுக் கணக்குப் போட்டுப் பிடித்தம் செய்து கொண்டு, மீதி ஏதோ கொஞ்சம் கொடுக்கிறான். பணத்தை மொத்தமாகக் கண்டறியாத கிராம விவசாயி, 'தன் மீது கருணைவைத்துக் கடவுள் இவ்வளவு ரூபாய் கைநிறையக் கொடுத்தார்' என்று கருதிக் கொண்டு வாங்கித் துணியில் முடிந்துகொண்டு, காப்பி சாப்பிட்டு, சினிமா பார்த்துவிட்டு ஊருக்குப் போகிறான். வியாபாரியோ இந்தச் சரக்கை வாங்கி, இருப்பு வைத்து அதிக விலைவரும்போது விற்று, இலாபமடைந்து இலட்சாதிபதியாகி, மாடமாளிகை கட்டிக் கொண்டு, கிராமவாசியை வண்டி ஓட்டவும், மாடு மேய்க்கவும், வீட்டு வேலை செய்யவும், உடம்பு பிடிக்கவும் வேலைக்கு அமர்த்திக் கொள்ளுகிறான்.......

கிராமம் என்பது தீண்டப்படாத மக்கள் நிலையில்தான் இருந்து வருகிறது; கிராமத்தாரல்லாத மற்றவர்களுக்கு உழைப்பதற்காகவே இருந்து வருகிறது" (குடிஅரசு: 11-11-1944).

இவ்வெழுத்துக்கள் உயர்தர இலக்கியமாகக் கருதப் படவேண்டும் என்பதை அறிஞர்கள் ஒப்புக்கொள்ளவே செய்வர்.

எத்தனையோ புரட்சி இலக்கியங்களைப் படித்திருக்கிறோம். பெரியார் எத்தகைய புரட்சி எழுத்தாளர் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு:

"45 மாத காலமாய் விசாரணை நடந்துவந்த 'மீரத் கம்யூனிஸ்ட் சதி வழக்கு' கேசு ஒரு வழியாய் முடிவடைந்துவிட்டது. அதாவது 27 எதிரிகளுக்கு 3 வருஷம் முதல் ஆயுள் பரியந்தம்வரை சிறைக்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது. இத்தண்டனையைப் பற்றி நாம் சிறிதும் கவலைப்படவில்லை. இந்த 27 பேர் மாத்திரமல்ல, இன்னும் ஒரு 270 பேர்களையோ, 2700 பேர்களையோ, 27000 பேர்களையோ, 270000 பேர்களையோ, 2700000 பேர்களையோ, சேர்த்துத் தூக்கில் போட்டிருந்தாலும் சரி, அதற்காகக் கவலைப்படப் போவதில்லை.

ஏனென்றால் இத்தோழர்கள் சிறையில் இருப்பதாலோ தூக்கில் கொல்லப்படுவதாலோ அவர்களது கொள்கையாகிய பொதுவுடைமைக் கொள்கை என்பது, அதாவது முதலாளிகளின் ஆதிக்க ஆட்சியைச் சிதைத்து, நசுக்கி, சரீரத்தால் பாடுபடுகின்ற மக்களுடைய ஆட்சிக்கு உலக

அரசாங்கங்களையெல்லாம் திருத்தியமைக்க வேண்டுமென்கிற கொள்கையோ உணர்ச்சியோ அருகிப்போய்விடும் என்கின்ற பயம் நமக்கில்லை. மீரத் கம்யூனிஸ்டுகள் ஜெயிலில் இருப்பதன் மூலம், அவர்கள் ஜெயிலில் வதியும் ஒவ்வொரு வினாடியும் அவர்களது கொள்கையானது அவர்களைப் போன்ற 1, 10, 100, 1000க் கணக்கான தொண்டர்களைத் தட்டி எழுப்பி ஊக்கப் படுத்திக் கொண்டேதான் இருக்கும்.

மீரத் முடிவை நாம் மேளதாளத்துடன் வரவேற்பதுடன், தண்டனை அடைந்த தோழர்களை மனமார, வாயார, கையாரப் பாராட்டுகின்றோம். இனியும், நமக்கும் நம் போன்ற வாலிபர்களுக்கும் – அதாவது நம் போன்ற மன வுணர்ச்சி கொண்ட வாலிபர்களுக்கும் – இந்த பெரும் பேறு கிடைக்கப்பெறும் நிலையை அடைய முடியவில்லையே என்று நமக்காகவும், எமதருமைத் தோழர்களான வாலிபர்களுக்காகவும் வருந்தி, மற்றுமொரு முறை வரவேற்கின்றோம்.

100க்கு 90 மக்களாய் உள்ளவர்களை வஞ்சித்து, வதைத்து, கொடுமைப்படுத்தி, அழுத்தி வைத்துக் கொள்ளை கொள்ளும் தன்மையை வெளியிடுவது பலாத்காரமானால், இவ்வித பலாத்காரத்தை மனிதத்தன்மை உள்ள ஒவ்வொர் ஆணும் பெண்ணும் வரவேற்க வேண்டுமென்றும் விண்ணப்பித்துக் கொள்ளுகிறோம்". (குடிஅரசு: 21-1-1933).

கிட்டத்தட்ட எழுபது ஆண்டுகளுக்கு முன்னரே பெரியார் மகப்பேற்றைக் கட்டுப்படுத்த வேண்டிய இன்றியமையாமைபற்றி எழுதினார்.

"ஒருவன் தன்னால் காப்பாற்றக் கூடியதற்கும் அதிகமாகப் பிள்ளைகளைப் பெற்றுக் கஷ்டப்பட்டு என்ன பயன் என்பது கவனிக்கத் தக்கதாகும். 'உலகம் விருத்தியாக வேண்டாமா?' என்ற சொல் சுத்த முட்டாள்தனமானது. சம்போக உணர்ச்சியுள்ள உயிர்களில் மனிதனைத் தவிர வேறு எந்த உயிருக்கும், குழந்தை பெறுவதற்காக என்ற எண்ணத்தின்மீது உணர்ச்சி தோன்றுவது கிடையாது. மனிதன் பகுத்தறிவுக்காரன் என்கின்ற ஆணவத்தால் அவனுக்கு ஏற்படும் அனேக முட்டாள்தனமான செய்கைகளைப் போல், குழந்தை பெற வேண்டும் என்கின்ற முட்டாள்தனமும் ஏற்பட்டு, அது ஆசையாகி, சொத்தாகி, மோட்சத்திற்கு உதவும் காரியமாகி, கடைசியாய் வீண் துன்பமும் பட்டு மற்றவர்களுக்கும் தொந்தரவு கொடுப்பதைத் தவிர வேறு ஒரு பயனும் இல்லை.

மேலும், பிள்ளை பெறுவதனாலேயே பெண்கள் சமூகம் அடிமையாகி, அனேக ஆபத்துகளுக்கும் வியாதிக்கும் உள்ளாகி, அற்ப ஆயுளுடன் துன்பமும் படவேண்டியதாகி, அவர்கள் வாழ்வே பரிதாபத்துக்குரியதாக முடிகின்றது. பிள்ளைகளைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு தங்களுக்கே என்று கருதுவதால் சுதந்தரமும் வீரமும் இன்றி, அடிமையானதுமான காரியங்களுக்கு ஆளாகிறார்கள்.

பெண்கள் துன்பம் இப்படி இருக்க, பொதுவில் வேலையில்லாத் துன்பத்தை நீக்கவும், மக்கள் கவலையும் தொல்லையும் இல்லாமல் இருக்கவும் பிள்ளைப் பேற்றைக் குறைப்பது என்பது தக்க வழியாகும்." (குடிஅரசு: 14-12-1930).

## எழுதினார்!........எழுதினார்!........

பேராயக்கட்சியின் காஞ்சி மாநாட்டிலிருந்து வெளியேறிய பெரியார், கட்சியின் அனைத்திந்தியர் தலைமை - காந்தியார் தம் பார்ப்பனரல்லார் நலக் கொள்கைக்கு ஏற்பளிக்கும் வாய்ப்பேற்படுமா என்று சற்று பொறுத்திருந்து பார்க்கலாம் என்று கருதினார். அந்த அரைகுறை நம்பிக்கையும் ஒரு சிறுகாலத்திற்குத்தான் இருந்தது. இக்கட்டத்தில் பெரியார் வாளாவிருக்கவில்லை; ஆரியப் பார்ப்பனரின் ஆணவக் கொடுமைகளையும் அவர்களுக்குத் துணைபோகும் பார்ப்பனரல்லா அடிமைகளையும் மக்களிடையே வெளிச்சமிட்டுக் காட்டும் பணியினை உந்தார்வத்துடன் தொடர்ந்து செய்தார்.

காஞ்சி - பேராயக் கட்சி மாநாட்டு நடவடிக்கைகளையும், அங்கேயே அப்போதே நிகழ்ந்த 'பிராமணரல்லாதார் மாநாடு' தொடர்பான செய்திகளையும் ஒன்றுவிடாமல் முழுமையாகக் 'குடிஅர'சில் எழுதினார். தொடர்ந்து பார்ப்பனரல்லார் உய்வு, வகுப்புரிமை, வர்ணாசிரம, அழிப்பு, தீண்டாமையொழிப்பு, குழந்தை மண எதிர்ப்பு, கைம்பெண் மறுமணம், புரோகித மறுப்பு, தொழிலாளர் நலன் என்ற பொருள்களில் தொடங்கி, பிறகு பெண் விடுதலை, கலப்பு மணம், சமதர்மம், பொதுவுடைமை, பொதுவுரிமை, கல்வியுரிமை, மொழியுரிமை, நாட்டுரிமை, இவற்றுக்கெல்லாம் தொடர்புடைய மூலகாரணிகளான கடவுள்-மத-வேத-சாஸ்திர-புராணங்களை விலக்குதல், அறிவியல், பகுத்தறிவு முதலிய பொருள்கள்வரை பெரியார் எழுதினார், எழுதினார். அப்படி எழுதினார். ஆயிரக்கணக்கான பக்கங்கள் - நூறாயிரக்கணக்கான வரிகள்! பெரியாரால் எப்படி முடிந்தது இப்படி எழுத? படிக்கப்

படிக்க - கருதக் கருத பெருமலைப்பே மிஞ்சுகிறது! அதிகமான பக்கங்கள் எழுதிய அறிஞர்களில் பெரியாருக்கு இணையாக எவரை நாம் வைக்க முடியும்? தேடிப் பார்த்து, தீர்மானிக்க வேண்டிய ஒன்று. அவருடைய எழுத்துகள் மட்டுமின்றி அவர்தம் சொற்பொழிவுகளும் 'குடிஅர'சில் அச்சேறுமாறு செய்தார். இவ்வண்ணம் அவர் தமது கருத்துகள் அனைத்தையும் அஞ்சாமல் அயராமல் 'குடிஅர'சில் வெளியிட்டுக் கொண்டேயிருந்தார். அவர் சிந்தித்து வெளிப்படுத்தாத மக்களாயச் சிக்கல் எதனையும் கண்டுபிடித்துக் காட்டுவது அரிய செயலாகவே நிற்கும்.

## நூற்றுக்கணக்கான பொருள்கள் ஆயிரக்கணக்கானத் தலைப்புகள்

வாழ்வியலின் அத்தனை கூறுகளையும் அவர் அளைந்து, ஆய்ந்து, அலசி, அசையிட்டு, அறுதியிட்டுத் தீர்வுகளைத் தெளிவாக உலகின் முன்பாக வைத்தார்.

நூற்றுக்கணக்கான பொருள்களைப் பற்றி ஆயிரக்கணக்கானத் தலைப்புகளிலே பெரியார் எழுதியும் பேசியுமுள்ளவற்றைத் தாங்கி இன்றைக்கும் நமக்கு வழங்குகின்ற பெருமைக்குரியது 'குடிஅரசு'. அத்தனை 'குடிஅரசு' இதழ்களிலும் அடங்கிய அனைத்துச் செய்திகளையும் நாம் கொண்டுவர வியலாது. குறிப்பிட்ட சில தலையாய கருத்துகளை மட்டும் இங்கே பகிர்ந்து கொள்ள முடியும்.

> **"மனிதனுக்கு மனிதன் தொடக்கூடாது; கண்ணில் படக்கூடாது; தெருவில் நடக்கக்கூடாது; கோயிலுக்குள் போகக் கூடாது; குளத்தில் தண்ணீர் எடுக்கக் கூடாது என்கின்றவை போன்ற கொள்கை தாண்டவமாடும் ஒரு நாட்டைப் பூகம்பத்தால் அழிக்காமலோ, எரிமலையின் நெருப்புக் குழம்பால் எரிக்காமலோ, சமுத்திரம் பொங்கி மூழ்கச் செய்யாமலோ, பூமிப் பிளவில் அமிழச் செய்யாமலோ, சண்டமாருதத்தால் துகளாக்காமலோ விட்டிருப்பதைப் பார்த்துங்கூட, கடவுள் ஒருவர் இருக்கிறார் என்றும் அவர் நீதிமான் என்றும் சர்வதயாபரர் என்றும் யாராவது சொல்ல வந்தால் அவர்களை என்னவென்று நினைப்பது?" (குடிஅரசு:7-12-1928).**

> **"பார்ப்பனர்கள் வைத்திருக்கும் ஒவ்வொரு காப்பிக் கடையிலும், சாப்பாட்டுக் கடையிலும், இரயில்வேக்களில் உள்ள காபி - சாப்பாட்டுக் கடைகளிலும், சத்திரம் - சாவடிகளிலும், கோயில்-குளங்களிலும் 'இது பிராமணர்களுக்கு', 'இது சூத்திரருக்கு', 'பஞ்சமர்களுக்கும் முகமதியர்களுக்கும்**

கிறிஸ்தவர்களுக்கும் இங்கு சாப்பாடு, பலகாரம், தண்ணீர் வகையறா கொடுக்கப்படமாட்டாது', 'இந்த இடத்தில் சூத்திரர் தண்ணீர் மொள்ளக்கூடாது', 'இந்த இடத்தில் சூத்திரர்கள் குளிக்கக் கூடாது', 'இந்தப் பள்ளிக்கூடத்தில் சூத்திரர்களைச் சேர்த்துக் கொள்ள முடியாது', 'சூத்திரர்கள் இந்த இடத்திற்குமேல் போகக் கூடாது', இந்த வீதியில் சூத்திரர்கள் குடியிருக்கக் கூடாது', 'இந்தத் தெருவில் பஞ்சமர்கள் நடக்கக் கூடாது' என்றும், இன்னும் பலவாறாக போர்டுகள் போட்டும் நிரப்பந்தங்கள் ஏற்படுத்தியும், பிரித்து வைத்தும், துவேஷத்தையும் வெறுப்பையும் இழிவையும் உண்டாக்கி வருவது நானா? அல்லது பார்ப்பனர்களா?" (குடிஅரசு: 15-8-1926).

"நாம் இப்போது பார்ப்பனர்களைக் கேட்பது எல்லாம் எங்களையும் சமமாகப் பாவியுங்கள்; எங்களைத் தாழ்ந்தவர்கள் என்று சொல்லி எங்களுடைய சுயமரியாதையைக் கொல்லாதீர்கள் என்பதேயன்றி வேறில்லை." (குடிஅரசு: 15-8-1926).

"வெள்ளையனுக்கு அடிமையானதால் அதிக நஷ்டம் இருந்தாலும், சிறிது இலாபமாவது பெற்று நாம் மனிதன் என்பதை உணர்ந்திருக்கிறோம். வடநாட்டானுக்குப் பூராவுமே அடிமையாய் இருந்தால் நாம் 'சூத்திரன்', 'ராட்சசன்', 'சண்டாளன்', 'அசுரன்', 'குண்டகன்', 'கோளகன்', 'பிரதிலோமன்', 'நரகன்' - என்பதாகத்தான் இருக்க நேரும். இப்பொழுதும் அப்படியே இருக்கிறோம் என்றாலும், அது ஓரளவுக்காவது ஆட்டம் கொடுத்துவிட்டது. திராவிடநாடு ஏற்பட்டவுடன் ஆட்டம் கொடுத்தவைகளைப் பிடுங்கி எறிந்து விடுவோம். பிறகு 6000 மைலை 60000 மைல் தூரமாக்கி, அவனையும் திராவிட நாட்டிற்கும் 'பாஸ்போர்ட்' வாங்கிக் கொண்டு வரும்படி செய்வோம்." (குடிஅரசு: 25-11-1944).

"இன்று மனிதனிடம் தன்னம்பிக்கை இல்லை. தன்னைத் தான் நடத்துவதாக அவன் நினைப்பதில்லை. தனது காரியத்திற்குத் தானே தான் பொறுப்பாளி என்பதில் அவனுக்கு நம்பிக்கை யில்லை. மனிதன் தான் கற்பித்துக் கொண்ட கடவுளையும் கடவுள் கட்டளையையும் கடவுள் சித்தாந்தத்தையும் வெகு குளறுபடி ஆக்கிக் கொண்டான். தலைவிதி முன்ஜென்மம், கர்மபலன் என்பவைகளைக் கற்பித்துக் கொண்டு தனது முட்டாள்தனத்துக்கும் அயோக்கியத்தனத்துக்கும் பரிகாரமாக்கிக் கொண்டான்.

மனிதன் முதன்முதல் தவறிப்போன இடம் இதுவேயாகும். கடவுளும் கருமமுமே மனிதனின் பகுத்தறிவைப் பாழ்படுத்தி, பகுத்தறிவற்ற ஜீவராசிகளைவிடக் கேவலமாக்கி, இன்று மனிதனைத் துக்கரூபமாகவும் கவலைக் களஞ்சியமாகவும் ஆக்கிவிட்டன. பகுத்தறிவுக்குக் கடவுளும் கருமமுமே நேர் விரோதிகளாகும்" (குடிஅரசு: *23–5–1935*).

"மனிதனின் உலக வாழ்க்கை நலத்திற்கு மதம் என்பதாக இல்லாமல், மதத்திற்காக மனிதன் ஏற்பட்டவன் என்றும், அந்த மதத்தைக் காப்பாற்றுவதே மனிதனின் கடமை என்றும் அது எப்படிப்பட்டதானாலும் அதைப் பற்றிக் குற்றம் சொல்லவோ, திருத்தவோ யாருக்கும் உரிமையில்லை என்றும் சொல்லும்படியான மதம் ஏதுவாயிருந்தாலும் அதை அழித்துத் தீர வேண்டியது மனித சீர்திருத்தத்தைக் கோருகிற ஒவ்வொருவருடைய கடமையாகும்" (குடிஅரசு: *25–1–1931*).

'நம்முடைய தமிழ் இலக்கண–இலக்கியங்களில் ஆகட்டும், அல்லது சங்கக்காலப் பழைய தமிழ் ஆதாரங்களில் ஆகட்டும் அல்லது ஆரிய பாஷை–ஆரிய நாகரிகப் பழக்க வழக்கங்களைக் கொண்ட வேதம், சாஸ்திரம், புராணம், சரித்திரம், கதை எவைகளிலாவது இந்து அல்லது இந்து மதம் என்கிற வார்த்தை இருக்கிறதா? ஒன்றுமே இல்லாமல் வெறும் உச்சரிப்பைத் தவிர யாதொரு பொருளுமற்றதான சப்தத்தைக் கொண்ட வார்த்தையை நமது மதத்திற்குப் பெயராக வைத்துக் கொண்டிருக்கிறோமா இல்லையா என்பதை யோசித்துப் பாருங்கள்!' (குடிஅரசு: *11–9–1927*).

"தமிழனுக்கு – நாதியற்ற தமிழனுக்கு என்ன வருஷம் இருக்கிறது– அதற்கு என்ன கருத்து இருக்கிறது என்று பார்ப்போமேயானால், தமிழர் என்று பெயர் வைத்துக் கொண்டு இந்த நாட்டில் வாழ்வதற்கு வெட்கமில்லையா என்று தோன்றும். தமிழ் வருஷப்பிறப்புக் கதை நாகரிகமுள்ள மக்களால் எழுதப்பட்டிருக்க முடியுமா?

இந்த 60 வருஷங்கள் 'பகவானும் ரிஷியும்' ஆன ஆணும் ஆணும், ஆண்–பெண்ணாகச் சேர்ந்து பிறந்த குழந்தைகள். இதற்காகத்தான் நாம் வருஷப்பிறப்பு கொண்டாடுகிறோம்." (குடிஅரசு: *8–4–1944*).

"ஆத்மா என்றால் அது சரீரத்திற்குள் இருக்கும் ஒரு நித்திய வஸ்து என்றும், அது சூட்சும வஸ்து என்றும், அதற்குப் பிறப்பு–

இறப்பு இல்லை என்றும், அது மனிதன் இறந்த பின்பு வெளிப்பட்டு மறுபடியும் சரீரம் எடுப்பது என்றும், மற்றும் அது சரீரத்தில் இருக்கும்போது செய்த காரியங்களாக அதன் பயனை-சரீரத்தை விட்டுப் பிரிந்தபின்பு கடவுள்மூலம் அனுபவிக்கிறதென்றும் மற்றும் எத்தனையோ விதமாகப் பல மதங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த நிலையில் 'நான்' என்னும் தன்மை உணர்ச்சி செய்த காரியங்களுக்காக, 'நான்' அல்லாத என் ஆத்மா என்பதான ஒரு வஸ்துவோ, ஒரு ஜீவனோ, ஒரு சக்தியோ ஆகிய சூட்சும ஜீவன் என்பது எப்படி அந்தப் பயனை அனுபவிக்க முடியும்? நான் செய்த காரியத்திற்காக என் ஆத்மாவைத் தண்டிப்பதோ கண்டிப்பதோ சன்மானமாகியவைகளைக் கொடுப்பதோ எப்படி கடவுளின் நீதியாகும்?" *(குடிஅரசு: 3-5-1931).*

"ஜீவன் பிறந்த காலத்தை ஆதாரமாக வைத்துப் பலன் சொல்லக் கூடுமா? பிறந்த காலம் என்பது வயிற்றுக்குள்ளிருக்கும்போது உயிர் ஏற்பட்ட காலமா? அல்லது அரைநாள் ஒரு நாள் அக்குழந்தை கீழே விழாமல் தாய் கஷ்டப்படும் காலத்தில் தலைவெளியாகி, நிலத்தில் பட்டு, கால் நிலத்தில் விழாமல் தாய் சரீரத்தில் பட்டுக்கொண்டிருக்கும் காலமா? அல்லது கால், தலை எல்லாம் மருத்துவச்சி கையில் விழுந்த காலமா?" *(குடிஅரசு: 6-7-1930).*

"மதம் மக்களுக்கு அபினி என்றார் ஒரு பெரியார். நான் மதம் மக்களுக்கு விஷம் என்கிறேன். மதக்காரனுக்குச் சுயமரியாதையும் சுய அறிவும் இல்லை. மனிதன் முற்போக்கையும் ஒற்றுமையையும் தடுப்பது மதம். மனிதனுக்கு மற்ற ஜீவன்களைவிட அதிகப் புத்தியிருந்தும் மனிதன் அடிமையாயிருப்பதற்குக் காரணம் மதம்" *(குடிஅரசு: 31-5-1936).*

"தமிழ்ப் பாஷையின் பெருமை பரமசிவனுடைய டமாரத்தி லிருந்து வந்ததென்றோ, பரமசிவன் பார்வதியிடம் பேசிய பாஷையென்றோ சொல்லி விடுவதாலும், 'தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்த'தாலும், 'முதலை உண்ட பாலனை அழைத்த'தாலும், 'எலும்பைப் பெண்ணாக்கிய'தாலும், 'மறைக் கதவைத் திறந்த'தாலும் தமிழ் மேன்மையுற்றதாகிவிடாது. இந்த ஆபாசக் கதைகள் தமிழ் வளர்ச்சியையும் மேன்மையையும் குறைக்கத்தான் பயன்படும்" *(குடிஅரசு: 26-1-1936).*

"மொழி என்பது உலகப் போட்டிப் போராட்டத்திற்கு ஒரு போர்க் கருவியாகும். போர்க்கருவிகள் காலத்திற்கேற்ப

மாற்றப்பட வேண்டும் அவ்வப்போது கண்டுபிடித்துக் கைக்கொள்ள வேண்டும்."

"தமிழ்நாட்டில் தமிழில் இசை இருக்கவேண்டும் என்பதற்காக ஓர் இயக்கமும், அதற்காக ஒரு கிளர்ச்சியும் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது என்பது ஒன்றே தமிழர்கள் எவ்வளவு தூரம் தங்கள் உரிமைகளை இழந்தவர்களாக இருக்கின்றனர் என்பதை எடுத்துக் காட்டுவதாய் இருக்கிறது. தமிழில் பாட்டுப் பாடவேண்டும் என்று கேட்கும் தமிழர்களை எதிர்த்து அடக்கும் துணிவு கொண்டவர்களுக்கும் தமிழ்நாடு இடம் கொடுத்துக் கொண்டிருக்கிறது.

தங்கள் தாய்நாட்டிற்கும் தாய்மொழிக்கும் எதிராகவுள்ளவர்களை எவரே ஆயினும் அவர்களை வீழ்த்த - விரட்டியடிக்கத் தமிழர் முன்வரல் வேண்டும். தமிழர்கள் இனியேனும் உணர்வு பெற்று உற்சாகமடைந்து, துணிவு கொண்டு, தங்கள் மொழியையும் நாட்டையும் நயவஞ்சகர்களிட மிருந்து பிரித்துக் கொள்ளும் துறையில் பணியாற்ற முன்வருவார்களா?" (குடிஅரசு: 25-12-1943).

"தமிழனின் ஈனநிலைக்குக் காரணம் இந்துமதத்தைத் தனது மதம் என்று கருதியதும், இந்தியா பூராவையும் தன் நாடு (தேசம்) என்று கருதியதும், இவ்விரண்டுக்கும் உழைக்கும் தொண்டே மக்கள் தொண்டு தேசத் தொண்டு (தேசாபிமானம்) என்று கருதி வருவதுமேயாகும்.

உதைக்கும் காலுக்கு முத்தமிட்டுப் பூசை செய்கிறோம்; மலத்தை மனமார முகருகிறோம்; மானமிழந்தோம்; பஞ்சேந்திரியங்களின் உணர்ச்சியை இழந்தோம்; மாற்றானுக்கு அடிமையாகி வணங்குகிறோம். இதற்குத்தானா தமிழன் உயிர் வாழவேண்டும்? எழுங்கள்! நம்மை ஏய்த்து அழுத்தி நம் தலைமேல் கால்வைத்து ஏறிமேலே போக, வடநாட்டானுக்கும் தமிழரல்லாதவனுக்கும் படிக்கல் ஆகிவிட்டோம்" (குடிஅரசு: 23-10-1938).

"ஆண்மை என்னும் பதமே பெண்களை இழிவுபடுத்தும் முறையில் உலகவழக்கில் உபயோகப்படுத்தப்பட்டு வருகின்றது என்பதைப் பெண்கள் மறந்துவிடக் கூடாது. அந்த 'ஆண்மை' உலகில் உள்ளவரையிலும் பெண்மைக்கு மதிப்பில்லை என்பதைப் பெண்கள் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். உலகத்தில் 'ஆண்மை' நிற்கும் வரையில் பெண்கள் அடிமையும்

வளர்ந்தே வரும். பெண்களால் 'ஆண்மை' என்ற தத்துவம் அழிக்கப்பட்டால் அல்லாது 'பெண்மை' விடுதலையில்லை என்பது உறுதி. 'ஆண்மை'யால்தான் பெண்கள் அடிமையாக்கப் பட்டிருக்கிறார்கள்" (குடிஅரசு: 12-8-1928).

"இந்த இழிநிலை பெண்களுக்கு அவமானமாய்த் தோன்ற வில்லை என்பதற்காகவே, ஆண்கள் பெண்களை இவ்வளவு அட்டூழியமாக நடத்தலாமா என்று கேட்கிறேன்" (குடிஅரசு: 21-9-1946).

"உலக இன்பத்தை நுகர்ந்து அலுத்துப் போயிருக்கும் 'பழுத்த கிழவனாயினும், தன் மனைவியார் இறந்துவிட்டவுடன் மறுமணம் புரிய முயலுகிறான் - அதுவும் வனப்பு எழில் பொருந்திய இளஞ்சகோதரிகளையே தன் மணத்திற்குத் தேர்ந்தெடுக்கிறான். ஆயின், ஒரு பெண்மகள் தன் கொழுநனை இழந்துவிட்டால் - அவள் உலக இன்பத்தையே சுவைத்தறியாதவளாயிருப்பினும் - தன் ஆயுட்காலம் முற்றும், அந்தோ, தன் இயற்கைப் புலனை இறுக மூடி, மனம்நொந்து வருந்தி மடிய நிபந்தனை ஏற்பட்டுவிடுகிறது. என்னே, அநியாயம்!" (குடிஅரசு: 27-10-1929).

"விவாகரத்து சட்டமானால் உடனே எல்லாப் பெண்களும் தங்கள் கணவன்மார்களை விட்டு ஓடிப் போய்விடுவார்கள். என்றும், 'கற்பு நிலை' அடியோடு கெட்டுப் போகுமென்றும் பலர் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். பாதுகாப்பிற்கும் அவசியத்திற்கும் ஒரு சட்டம் செய்தால், பொது ஜனங்கள் எல்லோரும் அதே வேலையாய் இருப்பார்கள் என்பது நியதியில்லை. அவசியமான சந்தர்ப்பங்களில் மாத்திரந்தான் ஜனங்கள் அதனைக் கையாளுவார்கள். ஏனெனில் அதனால் ஏற்படக்கூடிய கஷ்டநஷ்டங்களுக்குத் தாங்களே பாத்தியப் பட்டவர்கள் என்பது அனுபவத்தினால் மக்களுக்கு நாளடைவில் விளங்கிவிடும்".

"கலியாண விஷயத்தில் மணமக்களின் வாழ்க்கைச் சம்பந்தம் முக்கியமானது-இலட்சியமானது அல்லவென்றும், அதில் தெய்வீக சம்பந்தம் இருக்கிறது என்றும், அதுவேதான் திருமணத்தில் இலட்சியமென்றும், ஆதலால் அப்பெண்ணும் மாப்பிள்ளையும் அத்தெய்வீக சம்பந்தத்திற்காக ஒருவர் குற்றங்களையும் அநீதிகளையும் மற்றவர்கள் பொறுத்துக் கொள்ள வேண்டுமென்றும் அதிலும் சிறப்பாக மாப்பிள்ளை

செய்யும் கொடுமையையும் அநீதியையும் பெண் பொறுத்துக் கொண்டு வாழ்நாள் முழுதும் மாப்பிள்ளைக்குப் பெண் அடிமையாய் - பக்தியாய் இருக்க வேண்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் சுயமரியாதைக் கலியாணம் என்பது அப்படியில்லை. திருமணம் என்பது பெண்ணும் ஆணும் சேர்ந்து வாழ்க்கையை நடத்த ஏற்படுத்திக் கொள்ளும் 'ஒப்பந்தம்' என்றும், அந்த ஒப்பந்த விஷயம் பெண்ணையும் ஆணையும் மாத்திரமே பொறுத்ததே ஒழிய வேறு எவ்விதத் தெய்வீகத்திற்கோ அல்லது எவ்விதக் கட்டுப்பாட்டிற்கோ சம்பந்தப்பட்டதில்லை என்பதுமேயாகும்" (குடிஅரசு: 12-5-1935).

"பெண்கள் வியாதியஸ்தர்களாய் ஆவதற்கும் சீக்கிரம் கிழப்பருவம் அடைவதற்கும், ஆயுள் குறைவதற்கும் இந்தக் கர்ப்பம் என்பதே மூலகாரணமாய் இருக்கின்றது. மதுவிலக்குப் பிரச்சாரத்தைவிட, தொத்து வியாதிகளை ஒழிக்கும் பிரச்சாரத்தைவிட, கர்ப்பத்தடைப் பிரச்சாரம் மிகவும் முக்கியமானது என்பதே நமது அபிப்பிராயம். ஆதலால் இந்தக் கர்ப்பத்தடைக்கு நமது நாட்டில் ஒரு ஸ்தாபனம் ஏற்படுத்தி அதன்மூலம் பிரச்சாரம் செய்யப் பொதுமக்களில் சிலராவது இதுசமயம் முன் வர வேண்டும்" (குடிஅரசு: 6-4-1930).

"ஈரோட்டில் நிறைவேற்றப்பட்ட நமது இயக்கத்தின் புதிய சமதர்மத் திட்டமானது மக்களை ஏமாற்றிச் சோம்பேறி வாழ்க்கை நடத்தும் உயர்ந்த சாதிக்காரர்கள் என்போரையும், பாடுபடுவோரின் பலனை நோகாமல் அனுபவிக்கும் மிராசுதாரர்கள் - பணக்காரர்கள் -ஜமீன்தாரர்கள் - முதலாளிக் கூட்டத்தாரர்களையும் சரீரப் பிரயாசை இல்லாமலேயே, சூழ்ச்சியாகவே வாழ்க்கை நடத்தும் படித்த கூட்டத்தார் என்பவர்களையும், இவர்கள் எல்லோருடைய ஆதிக்கத்தையும் நடத்த இடங்கொடுத்திருக்கும் காங்கிரஸ் ஸ்தாபனத்தையும் மற்ற அரசியல் கட்சிகளையும் வேரோடு ஆட்டி அசைத்து, உயிரற்றவைகளாக்க முனைந்து நிற்கும் புரட்சிச் செய்தியை நம் வாசகர்கள் நன்கு அறிவார்கள்" (குடிஅரசு: 1-7-1933).

"வருணாசிரமத்தையும் பார்ப்பனீயத்தையும் பத்திரப்படுத்தி விட்டு, எப்படிப்பட்ட பொதுவுடைமையை ஏற்படுத்தி விட்டாலும், திரும்பவும் அந்த உடைமைகள் வருணாசிரமப்படி பார்ப்பானிடம் தானாகவே வந்துவிடும்" (குடிஅரசு: 25-3-44).

"சுயமரியாதை வீரர்களே! சமதர்மிகளே! தொழிலாளர்களே! தொழிலாளர்களின் தோழர்களே! இந்த வருஷத்தில்

மேதினத்தை மே மாதம் முதல் தேதியில் தமிழ்நாட்டின் ஒவ்வொரு ஜில்லாவிலும் உள்ள நகரங்கள்தோறும் ஆயிரக்கணக்கான தொழிலாளர்களைத் திரட்டி வெகு விமரிசையாகக் கொண்டாட வேண்டுகிறேன். தேசம் மதம் சாதி என்கின்ற தேசிய உணர்ச்சிகளை மறந்து உலகத் தொழிலாளர் எல்லாம் ஒரே சமூகமாய் ஒன்றுபட்டு, எல்லா தேச-மத-சாதி மக்களுக்கும் வாழ்க்கையில் சமஉரிமையும் சம சந்தர்ப்பமும் கிடைக்கும்படி கொண்டாட வேண்டும்" (குடிஅரசு: *28-4-1935*).

"பார்ப்பன அகராதி: தமிழில் தக்க ஆராய்ச்சியுடையார் என்றால் யார்? சமஸ்கிருதத்தில் இருந்துதான் தமிழ்வந்தது; தமிழன் சமஸ்கிருத வார்த்தைகளையும் சேர்த்துப் பேசுவதுதான் தமிழுக்கு அதிக யோக்கியதையைக் கொடுக்கும் என்று சொல்லுபவர்தான். தமிழில் கொஞ்சமும் ஆராய்ச்சியில்லாதவன் என்றால் யார்? தமிழ் தனிப் பாஷை; வேறு எந்தப் பாஷையின் உதவியில்லாமலே அது இருந்திருக்கிறது என்று சொல்லுபவன்தான். சமஸ்கிருதத் துரோகிகள் யார்? தனித்தமிழ் பேசுகிறவரும், எழுதுகிறவரும்தான்" (குடிஅரசு: *29-8-1926*).

"நான் தமிழில் எந்த அளவும் பள்ளியில் பயின்றவனல்லன். தமிழைப் பற்றி, தமிழ் மக்கள் நலம் - தமிழ் மக்கள் தன்மதிப்பு என்பதல்லாமல் வெறும் பாஷையைப் பற்றியே நான் எவ்விதப் பிடிவாதமும் கொண்டவனுமல்லன். தமிழுக்காக என்று எவ்விதத் தொண்டும் புரிந்தவனல்லன். முதலாவதாக, தமிழ் முன்னேற்றமடைந்து உலக பாஷை வரிசையில் அதுவும் ஒரு பாஷையாக இருக்கவேண்டுமானால், தமிழையும், மதத்தையும் பிரித்துவிட வேண்டும். தமிழுக்கும் கடவுளுக்கும் உள்ள சம்பந்தத்தையும் கொஞ்சமாவது தள்ளிவைக்க வேண்டும்.

"தமிழ்மொழியில் உள்ள புராணங்களின் ஆபாசங்களையும் சூழ்ச்சிகளையும் மக்கள் சுலபமாய் அறிந்து, ஆரிய மதத்திலிருந்து மக்கள் விலகி, அதை இழிவுபடுத்தி வருகிறார்கள் என்பதை உணர்ந்தே தமிழை ஒழிக்கவும் இந்தியைப் பரப்பவும் பார்ப்பனர் ஆட்சி முயலுகின்றது. சிறுவயதிலேயே குழந்தைகளின் பகுத்தறிவையும் ஆராய்ச்சி உணர்ச்சியையும் பாழ்படுத்த, எதிரியை இரத்தத்தில் செலுத்துவதுபோல் அல்லவா இந்தி படிப்பதன் பலன் ஏற்படக் கூடும்?" (குடிஅரசு: *22-8-1937*).

"காந்தியார் போன்ற பெரியார்கள் பார்ப்பனரால் படுகொலை செய்யப்பட்டது என்பது அதிசயமோ - சிறிதும் ஆச்சரியமோ -

அல்ல என்பதை உணருவோம். இதற்காகப் பார்ப்பனச் சாதியைக் குறை கூறுவது முற்றிலும் சரியானதாகிவிடாது. அவர்கள் தங்கள் சுயநல வாழ்வுக்காக ஏற்படுத்திக் கொண்டிருக்கும் மதக் கற்பனைகளே இப்படிப்பட்ட பார்ப்பனர்களை உற்பத்தி செய்யும் விளைநிலமாக இருந்து வருகிறது".

"நமது நாட்டிற்கும் இப்போது வெகு அவசரமாக உடையும் சாயலும் மாற்றப்பட்டு ஒன்றுபோல் தோன்றும்படி செய்யவேண்டியது. அவசியம், ஆனால் நம் நாட்டிலோ, எப்பேர்ப்பட்ட மாறுதலாயிருந்தாலும், அது எவ்வளவு சரியானதாயும் தேவையானதாயும் இருந்தாலும் பயனும் பொருளுமற்ற பழைய வழக்கம் என்னும் மூடபயத்திற்கு அடிமையாகி உடனே அதைக் குற்றம் சொல்லவும், உள் எண்ணம் கற்பிக்கவும், எதிர்ப்பிரச்சாரம் செய்யவும் புறப்பட்டு விடுகிறார்கள். ஆதலால்தான் ஆயிரக்கணக்கான வருஷங்களாக இந்திய மக்கள் மாத்திரம் வேற்றுமைப்பட்டுப் பிரிந்து, துவேஷங் கொண்டு அன்னியருக்கு அடிமையாய் இருக்க வேண்டியவர்களாகிவிட்டார்கள்." (குடிஅரசு: 9–11–30).

"பணத்தால் ஒரு மனிதனை மதிப்பதென்றால் ரிசர்வ் பாங்கியைத் தான் மதிக்க வேண்டும். படிப்பால் ஒரு மனிதனை மதிப்பதென்றால் பெரிய லைப்ரரியைத்தான் மதிக்க வேண்டும். அறிவால் ஒருவனை மதிக்க வேண்டுமென்றால் என்சைக்ளோபீடியா முதலியவைகளை மதிக்க வேண்டும். இப்படி அனேகவற்றை உயிரில்லாதவைகளிலும் காணலாம். ஆகையால் நாம் மதிப்பது, பேசுவது, நினைவுறுவது என்பவையெல்லாம் இவைகளை உத்தேசித்து அல்ல. மற்றெதற்காக என்றால் மனிதர்களாக – மனிதத்தன்மை உடையவர்களாக இருந்து மறைந்த மனிதர்களுக்காக இரங்கி, அவர்களது மனிதத்தன்மையை எடுத்துக் கூறி மற்றவர்களையும் மனிதர்களாக ஆகுங்கள் என்பதற்காகவே ஆகும்" (குடிஅரசு: 14–4–1945).

"அரசியலில் உழல்வதென்பது என்றைக்கிருப்பினும் ஒரு நாளைக்காவது தன்னை அயோக்கியனாக்கிக் கொள்ளாமலும், தேசத்தையும், சமூகத்தையும் காட்டிக் கொடுக்காமலும் வாழும்படி செய்யவே முடியாது. இது நமது அனுபோகத்திற்குச் சந்தேகமறத் தோன்றிவிட்டது" (குடிஅரசு: 31–7–1927).

"மனித உரிமையை அடைவதில் நாம் ஒருவருக்கொருவர் உயர்ந்தவர் – தாழ்ந்தவர் அல்ல என்கிற உணர்ச்சி ஏற்படுகிற

காலத்தில் வகுப்புரிமை பற்றிய கவலையே வேண்டியதில்லை. வகுப்பின் பெயரால் உரிமை கேட்க அவசியமும் ஏற்படாது" (குடிஅரசு: 14-2-1926).

"தூக்குமேடையில் இருந்துகொண்டு நான் நாஸ்திகன்தான் அதுவும் நல்ல பரிசுத்தமான நாஸ்திகன்தான் என்று கூப்பாடு போட்டுச் சொல்லிக் கொள்ளத் தயாராயிருக்கின்றேன்.

பிறவியின் காரணமாக மனிதனுக்கு மனிதன் ஒரு நீதியும் ஆணுக்கு ஒரு நீதியும் பெண்ணுக்கு ஒரு நீதியும் உள்ள எந்த மதமானாலும் சரி, அது 'கடவுளை' நேரே கொண்டுவந்து காட்டி, மோட்சத்திற்கு அழைத்துச் செல்லச் செய்யும் மதமாயிருந்தாலும் சரி, அல்லது நம்மையே கடவுளாக்கும் மதமாயிருந்தாலும் சரி, அதை அழிக்க வேண்டியதும் அழிக்க முடியாவிட்டாலும் அந்த அழிக்கும் வேலையில் உயிரை விடவேண்டியதும் உண்மையான மனிதனது கடமை என்றுதான் நான் தீர்மானித்துக் கொண்டிருக்கிறேன். இதில் சிறிதும் ராஜிக்கு இடமில்லை என்பதைக் கண்டிப்பாய்த் தெரிவித்துக் கொள்ளுகிறேன்." (குடிஅரசு: 19-5-1929).

"தாய்மார்களே! நீங்கள் எதையும் பகுத்தறிந்து பார்க்க வேண்டும். கல்வி அறிவில் விருப்பம் கொள்ளுங்கள். வீரத் தாய்மார்களாக ஆக விருப்பப்படுங்கள். நீங்கள் மாறினால் உங்கள் கணவன்மார்களும் மற்ற ஆண்களும் மாற்றம் அடைவது சுலபம். ஆண்கள் உங்களைத்தான் பிற்போக்காளிகள் என்று உங்கள் மீது பழி சுமத்தி வருகிறார்கள். அப்படிச் சொல்லுக்கு ஆளாகாதீர்கள். எதிர்காலத்தில், இவள் இன்னாருடைய மனைவி என்றழைக்கப்பட மாட்டாது; இவர் இன்னாருடைய புருஷர் என்று அழைக்கப்பட வேண்டும்." (குடிஅரசு: 5-6-1948).

"கேள்வி கேட்பதும் அதற்குப் பதில் கூறப்படுவதும் மேல்நாட்டுப் பழக்கம் அங்கு சொற்பொழிவாளர் தனது பேச்சை முடித்ததும், தலைவர் கேள்விக்குப் பத்து நிமிஷம் அல்லது ஒரு நேரம் ஒதுக்கப்பட்டிருப்பதாகக் கூறி, கேள்வி கேட்கும்படி சொல்வார். கூட்டத்தில் நடந்த சங்கதிகளைப் பற்றிக் கேட்பதுதான் ஒழுங்கான கேள்வி என்று கருதப்படும்.

உதாரணமாக இப்போது என் சொற்பொழிவு முடிந்தபின்பு, 'திராவிட நாட்டு சனத்தொகை அய்ந்து கோடி என்றீர்களே, நாலே முக்கால் கோடிதானே?' என்றும், திராவிடரை எப்படிப் பிரிப்பது?' என்றும் நீங்கள் கேட்கலாம். இது பொருத்த

மானதாகக் கருதப்படும். அல்லது, 'முன்பு கோவைக் கூட்டத்தில் திராவிடநாடு ஒரிஸ்ஸா மாகாணத்திலும் ஒரு பகுதியை உடையது என்று கூறினீர்களே, இன்று சென்னை மாகாணந்தான் என்று கூறுகிறீர்களே, எது சரி?' என்று கேட்கலாம். இதுவும் பொருத்தமான கேள்விதான். இதை விட்டு, 'உங்களுக்குத் தாடி ஏன்? அது ஏன் வெளுப்பு?' என்று இந்தக் கூட்டத்தில் கேட்பீர்களானால் அது பொருளற்றதாகவும் குறும்புத்தனமாகவும் கருதப்படும்." *(குடிஅரசு: 29-11-1947).*

"உலகக் கல்விவேறு; பகுத்தறிவு வேறு; பட்டம் வேறு. பெரிய டாக்டராய் இருப்பான், ஆனால் அவனும் மூத்திரமும் சாணியும் சாப்பிட்டால் ஒருவன் மோட்சத்திற்குப் போகலாம் என்று நினைப்பான். பெரிய வானசாஸ்திர நிபுணனாய் இருப்பான்; அவனும் பார்ப்பான் மூலம் தன் இறந்த தந்தைக்கு அரிசி, பருப்பு, காய்கறி, செருப்பு அனுப்புவான். ஒருவன் பெரிய உடற்கூறு சாஸ்திரியாய் இருப்பான்; அவனும் தன் மனைவியையும் மகளையும் வீட்டுக்குத் தூரம் என்று வீட்டுத் திண்ணையில் தள்ளி மூடிவைத்துவிட்டு, உள்ளே தாழ்ப்பாள் போட்டுத் தூங்குவான். ஆகையால், மனிதனுக்குப் பகுத்தறிவும் உலகக் கல்வியும் அறிய, பள்ளிக்கூடமும் பட்டமுமே போதுமானதாகி விடா" *(குடிஅரசு: 19-12-37)*

"இயக்கத் தோழர்களும் இயக்க அபிமானத் தோழர்களும் இனி ஒருவர்க்கொருவர் அழைத்துக் கொள்ளுவதிலும், பெயருக்கு முன்னால் மரியாதை வார்த்தை சேர்ப்பது என்பதிலும், ஒரே மாதிரியாக, 'தோழர்' என்கின்ற பதத்தையே உபயோகிக்கப் வேண்டுமென்றும், மகா-ள-ஸ்ரீ, திருவாளர், திரு, தலைவர், பெரியார், திருமதி, ஸ்ரீஜத் என்பன போன்ற வார்த்தைகளைச் சேர்த்துப் பேசவோ - எழுதவோ கூடாது என்றும் வணக்கமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்." *(குடிஅரசு: 13-11-1932).*

"வியாபாரம் செய்து இலாபம் சம்பாதிப்பவனை யார், எதற்காக மதிப்பார்கள்? ஓட்டல்காரன் 'அன்னதான பிரபு' ஆவானா? சம்பள உபாத்தியாயர் 'குருநாதன்' ஆவானா? தாசி 'காதலி' ஆவாளா? என்பது போலத்தான் தன்தன் நலத்துக்கு - தன்தன் பொறுப்புக்காகக் காரியம் செய்யும் எவனுடைய காரியமும் எப்படிப்பட்டதாயினும் அது சாதாரண ஜீவ சுபாவமே ஒழிய போற்றக் கூடியதாகாது. அப்படியில்லாத தன்மை, செய்கை, வாழ்க்கை கொண்ட மனிதர்கள் - அதாவது தன்னைப் பற்றிய கவலை இல்லாமல் பிறருக்கு என்று தன்னை ஒப்படைத்துத்

தொண்டாற்றுகிறவர்கள் மதிக்கப்பட்டே தீருவார்கள்" (குடிஅரசு: 14-4-1945).

"பொதுக்காரியம் என்பதே நமது நாட்டில் கோவில் கட்டுவது, கும்பாபிஷேகம் நடத்துவது, பழைய கோவில்களைப் புதுப்பிக்கும் திருப்பணி செய்வது, அந்த சாமிகளுக்கு வாகனம், ரதம், தேர், உற்சவங்கள் செய்வது, சத்திரங்கள் கட்டி, வருகின்ற பக்தர்களுக்கும் பார்ப்பனர்களுக்கும் சாப்பாடு போடுவது, வேத பாடசாலை - தேவாரப் பாடசாலைகள் கட்டுவது, இலட்சம் பிராமண சமாராதனை, இலட்சதீபம் முதலியவைகளைச் செய்விப்பது ஆகிய காரியங்களே பொதுத்தர்மங்களாக நடைபெறுகின்றன. இந்த நிலையில் இன்று இந்தியாவுக்கு வேண்டியது இன்னது என்று அறிந்தவர்கள் யாராவது இருக்கின்றார்களா?" (குடிஅரசு: 21-12-1930).

"பள்ளியில் படிக்கும்போது ஏதாவது தெரிந்து கொள்ளலாமா என்றால், அங்கு தமிழர்களைப் பற்றி ஒரு சேதியும் கிடையாது. தமிழன் ஆரியருக்கு முன் என்ன சமயத்தவனாய் இருந்தான், அவன்' கடவுள் எப்படிப்பட்டது, அவனது வாழ்க்கை முறை எப்படிப்பட்டது என்பன போன்றவைகளைக் காட்ட, சரியான ஆதாரம் ஒன்றும் காணப்படுவதில்லை. தமிழர்களின் படிப்புக்குக் கீழ் வகுப்புகளில் இராமாயண பாரதக் கதைகள் ஏன் சேர்க்கப்பட வேண்டும்?

இனியாவது தமிழ்ப் பண்டிதர்கள், தமிழ் உபாத்தியாயர்கள், உண்மைத் தமிழ்ப் பெற்றோர்கள் ஒன்று கூடி மாநாடு கூட்டி, இம்மாதிரி விஷயங்கள் பள்ளிப் படிப்பில் நுழையாமல் இருக்கும்படி செய்யக் கூடாதா? தமிழிலே, தமிழ்மொழி இலக்கியத்திலே, தமிழர் நல்வாழ்விலே, தமிழர் தன்மானத்திலே, தமிழர் தனியாட்சியிலே கவலையுள்ள நம் செல்வர்களுக்கு இந்த காரியமெல்லாம் முக்கிய கடமையல்லவா? நிலைகுலைந்த தமிழர்களைத் தட்டியெழுப்பி, உணர்ச்சி ஊட்டி, அவர்களுக்குத் தன்மான உணர்வும் ஊட்ட வேண்டாமா? தமிழ் மக்களைத் தமிழரல்லாதவர் அடிமைப்படுத்திச் சுரண்டிக் கொள்ளை கொள்வதைத் தடுக்க வேண்டாமா?" (குடிஅரசு: 12-2-1944).

நம் தமிழ்நாட்டிற்கும், தமிழ் மக்களுக்கும் மாபெருங் கேடாய் இருந்து வரும் மற்றொரு காரியம் சினிமா நாடகம் முதலிய நடிப்புக் காட்சிகளாகும். மானமுள்ள நாடாக மானத்தில் கவலையுள்ள மக்களைக் கொண்ட நாடாக இருந்திருக்கு

மானால், இந்த நாடகம், சினிமா முதலியவை ஒழிந்து கல்லறைகளுக்குப் போயிருக்கும்.

*நாடகம் எதற்கு? அது படிப்பிக்கும் படிப்பினை என்ன? புராணக் கதைகளை நடிப்பினால் அனுபவிப்பதால் மூடநம்பிக்கை, ஒழுக்க ஈனம், கட்டு திட்டமற்ற காம உணர்ச்சி, கண்ட மாத்திரத்தில் காம நீர் சுரக்கும்படியாகப் பெண் மக்கள் தங்களை அலங்கரித்துக் கொள்ளுதல் முதலியன பிடிபடுவதல்லாமல் வேறென்ன? இந்தப் பஜனைப் பாட்டும் இந்த புராண நாடகமும் இருக்கும்வரை நம் முட்டாள்தனமும், இழிவும் மானமற்ற கீழ்மையும், ஒழுக்க ஈனமும் ஒழிக்கப்பட முடியவே முடியாது". (குடிஅரசு: 19-2-1944).*

*"தர்மம் செய்வது அக்கிரமம் என்றும் ஜன சமூகத்துக்குத் தொல்லை என்றும், பணக்காரர்களின் அயோக்கியத்தனங்களை மறைக்க ஒரு சூழ்ச்சி என்றும் சொல்லுகிறேன்.*

*உலகத்தில் மனித சமூகம் தொல்லை இல்லாமல் வாழ வேண்டுமானால் பிச்சை கொடுப்பதும் பிச்சை எடுப்பதும் சட்டவிரோதமான காரியங்களாகக் கருதப்பட வேண்டும். பிச்சை கொடுக்கும் வேலையைச் சர்க்காரே ஏற்றுக் கொண்டு - அதற்கும் பணம் வேண்டுமானால் பணக்காரரிடமிருந்து பிச்சைவரி என்று ஒரு வரியை வசூலித்து, அந்தப் பிச்சையை தொழிற்சாலைகள் வைத்துப் பிச்சைக்காரர்களிடம் வேலை வாங்கிக் கொண்டு - சர்க்கார் விநியோகிக்க வேண்டும்." (குடிஅரசு: 21-4-1945).*

*"கிராமம், நகரம் என்ற பேதத்தை முதலில் ஒழிக்க வேண்டும். அந்தப் பேதம் கற்பித்துக் கிராம மக்களை நகரவாசிகள் மிக இழிவாக நடத்தி வருகிறார்கள். கிராமங்களையெல்லாம் ஒழித்து நகரமாக்க வேண்டும். நகர மக்களைப் போல் கிராம மக்களையும் சுகமனுபவிக்கச் செய்ய வேண்டும். கிராமம் - நகரம் என்று பிரித்துக் காட்டுவதே வருணாசிரம முறைதான்" (குடிஅரசு: 22-9-1940).*

பெரியார் என்ற பேரறிவாளரின் சிந்தனைப் பெருங்கடலில் முகந்தெடுத்த ஒரு சில கையள்ளல்களே இவை. நாம் பார்க்க, மாந்த வாழ்வியலின் இன்றியமையாத் துறைகள் எல்லாவற்றையும்பற்றி எப்பொழுதும் கருதிக் கருதிப் பார்த்துக் கொண்டிருந்தவர் பெரியார். அவர் இதழ்களில் வெளியாக்கிய எண்ணங்கள் எண்ணத் தொலையாதவை! எழுதினார், எழுதினார் 'பகுத்தறிவுப் பகலவன்'

பெரியார் பார் முழுவதற்கும் பயன்படும்வண்ணம் பல்லாயிரம் செய்திகளை!

## குடிஅரசில் இடம் பெற்ற குறிப்பிடத்தக்க செய்திகள்

பெரியாருடைய கருத்துகள், அறிஞர் பெருமக்களின் எழுத்தோவியங்கள் இவை மட்டுமன்றி, இயக்க நடவடிக்கைகள் நாடெங்கிலும் நடந்த நிகழ்ச்சிகள் ஆகியவை பற்றிய செய்திகளும் 'குடிஅர'சில் இடம் பெறலாயின. அவற்றுள் குறிப்பிடத்தக்க சிலவற்றைத் தேர்ந்தெடுத்துத் தொகுத்தளிக்கிறேன்.

வெள்ளுடைத் தியாகராயர் மறைவுற்றபோது மிக உயர்ந்த சொற்களால் பெரியார் வெளியிட்ட இரங்கல்;

ஆதிதிராவிட மக்களுக்குப் பாதி விலையில் 'குடிஅரசு' அனுப்பும் திட்டம்;

ஈரோடு, மதுரை, தென்காசி முதலிய ஊர்ப் பெருங்கோயில் களுக்குள் ஆதிதிராவிடர்களை அழைத்துக் கொண்டு இயக்க முன்னோடிகள் நுழைய மேற்கொண்ட முனைப்பான முயற்சிகள், அவை உருவாக்கிய பரபரப்புச் சூழ்நிலைகள்;

"பறையன் கண்ணப்பனும் சக்கிலியன் இராமசாமியும் ஆதிதிராவிடர்களைக் கூட்டிக் கொண்டு கோயிலுக்குள் நுழையப் போகிறார்களாம். கோயில் தீட்டாகப் போகிறது. பொதுமக்களே உஷார்! உஷார்!" என்று சீர்காழியில் தட்டி எழுதி வைக்கப்பட்டமை;

1926-தேர்தலில் 'நீதிக்கட்சி'யின் தோல்வியை அடுத்து, பெரியார் முயற்சியால் மதுரை, கோவை போன்ற பெருநகரங்களில் நடந்த பார்ப்பனரல்லாதார் மாநாடுகள், அவற்றில் வ.உ. சிதம்பரனார், திரு.வி.க., வரதராசுலு நாயுடு, சுரேந்திரநாத் ஆரியா முதலிய பேராயக் கட்சித் தலைவர்களும் பங்கேற்றமை;

பல ஊர்களில் ஆதி திராவிட மாணாக்கர்க்குப் பார்ப்பனத் தலைமையாசிரியர்கள் கொடுத்த தொல்லைகள்;

சென்னை மணலி விடுதியில் ஒரு பார்ப்பன மாணவனின் உண்டித் தூக்கினைத் தொட்டுவிட்டதற்காகப் பார்ப்பனரல்லாத மாணவன் ஒருவனுக்கு கிடைத்த தண்டனை;

திருநெல்வேலி, தூத்துக்குடி முதலிய தென்பாண்டி நாட்டுப் பகுதிகளில் பெரியாருக்குக் கிடைத்த வரவேற்பும் ஒத்துழைப்பும்;

சைவ மெய்யன்பர் மாநாட்டில் நாகர்கோவில் வழக்குரைஞர் சிதம்பரம் (பிள்ளை) நிகழ்த்திய சிந்தனையுரை;

சிறந்த புரட்சிக் கருத்துகளை வெளிப்படுத்திய நெல்லை அய்ம்பெரும் மாநாடுகள் (ஜஸ்டிஸ் மகாநாடு, வாலிபர் மகாநாடு, தொழிலாளர் மகாநாடு, சுயமரியாதை மகாநாடு, ஆதிதிராவிட மகாநாடு):

"வெளிநாட்டுப் பார்ப்பனரல்லாத் தோழர்களுக்கு வேண்டுகோள் விடுக்கிறோம்" என சவுந்தரபாண்டியனாரும் பெரியாரும் கையொப்பமிட்டு வெளியிட்ட அறிக்கை;

நாகப்பட்டினத்தில் இருப்புப் பாதைப் பணிமனைத் தொழிலாளர்கள் தொடங்கிய வேலை நிறுத்தத்தின் நெருக்கடியான கட்டத்தில் பெரியார் தம் தோழர்களுடன் வலியச் சென்று போராட்டத்தில் பங்கேற்றுச் சிறை சென்றமை;

அக்காலக் கட்டத்திலேயே (1927) போளூரில் நடந்த ஆரம்ப ஆசிரியர் மாநாட்டிற்குப் பெரியார் அழைக்கப்பட்டு, அவர் ஆற்றிய சிறந்த அறிவுரை;

1909-இல் கோயில்பட்டியில் நிறுவப்பட்ட 'திராவிட சங்க'த்தின் 18-ஆம் ஆண்டு விழாவில் வ.உ. சிதம்பரனார் பங்கேற்றுப் பெரியாரை, "நம் தலைவர்" எனப் பாராட்டியமை;

'இந்திய சட்டசபை' உறுப்பினர்களைப் பெரியார், "இந்துலாவில் இருக்கிற சூத்திரப்பட்டம் ஒழிவதில் கவலை இருக்க வேண்டாமா?" எனக் கோரியமை,

மன்னார்குடி நகராட்சி மன்றத்திற்கு அமர்த்தப்பட்ட ஆதி திராவிடர் திரு. கிருஷ்ணன் சாம்பானை ஊர்வலமாக இயக்கத்தினர் அழைத்துச் சென்று, இருக்கையில் அமர்த்தியமை;

காந்தியாரை இராமநாதனவர்களுடன் பெரியார் சென்று சந்தித்து மனம்விட்டு உரையாடி, இறுதிவிடை பெற்றுத் திரும்பியமை;

பேராயத்துடன் நீதிக்கட்சி சேரவேண்டும் எனத் 'தமிழ்நாடு' இதழ் கூறிய வழிகாட்டுதலை ஏற்கக் கூடாது எனப் பெரியார் எதிர்த்தமை;

மேல்நாட்டு - கீழ்நாட்டு மொழியறிஞரும் வரலாற்று ஆராய்ச்சி யாளருமான கோவை சி.எம். இராமச்சந்திரன் (செட்டியார்),

கோவில்பட்டிச் சந்திரசேகரப் பாவலர் ஆகியோர் தொடர் கட்டுரைகளைத் தாங்கி, 'குடி அரசு' இதழ் 20 பக்கங்கள் கொண்டதாக வெளிவரும் என்பதான அறிவிப்பு;

'அய்ந்தாம் ஜியார்ஜ் 'மன்னரைக் குணப்படுத்தியது யார்? ஆண்டவனா? மருத்துவர்களா? எனக் கேட்டு விடையளித்த லண்டன் 'ஃப்ரீ திங்கர்' இதழ்க் கட்டுரையின் தமிழ் மொழிபெயர்ப்பு;

'பார்ப்பனர் பிச்சை எடுக்கும் முறை' எனும் தலைப்பிட்ட, "சிங்கப்பூர் ராமஸ்வாமி அய்யர் சுப்பையா செட்டியாருக்கு அநேக கோடி அமோக ஆசீர்வாதம்" என்ற மடல்;

பார்ப்பனரல்லா இசைக் கலைஞர்களை ஊக்குவிக்கும் நோக்குடன் கோவையில் நிறுவப்பட்ட சரஸ்வதிகான சபா;

குடியாத்தம் சுயமரியாதைக் கூட்டத்தில் மனுஸ்மிருதி என்னும் கொடுமை வாய்ந்த சாத்திர நூல் கொளுத்தப்பட்டமை;

தூத்துக்குடியைச் சேர்ந்த சோமசுந்தரம் (பிள்ளை) என்பவர் பெரியாரின் நடவடிக்கைகள் பற்றித் திறனாய்வு செய்து எழுதிய கட்டுரைக்கு மறுப்பாக அதே இதழில் விளக்கம் எழுதிய நெல்லை சுந்தரம் என்பவர், "பெரியார் இராமசாமி நாயக்கர்" எனப் பெரும் மதிப்புடன் குறிப்பிட்டுச் சிறப்பித்தமை;

பெரியார் தலைமை தாங்கிய புகழ் பெற்ற தென்னிந்தியச் சீர்திருத்தக்காரர்கள் மாநாடு;

ஒழுங்குபடுத்தப்பட்டதொரு வகுப்புரிமைச் சட்டத்தை நடைமுறைக்குக் கொண்டுவந்து வகுப்புவாரிப் பிரதிநிதித்துவக் கொள்கையை நிலைநாட்டி விட்ட அமைச்சர் முத்தையா (முதலியார்) அவர்களைப் பெரியார், "இவ்வாண்டு பிறக்கும் குழந்தைகளுக்கு முத்தையா என்று பெயர் வையுங்கள்" என்று நெஞ்சினிக்கப் பாராட்ட, 'சுதேசமித்திரன்' இதழ், "வகுப்புப் பித்தம் தலைக்கேறிவிட்டதா?" என்று கடுமையாகக் கண்டித்தமை;

வகுப்புவாரியாக அரசுப் பணியாளர்களின் எண்ணிக்கை பற்றிய புள்ளி விவரங்கள்;

குடந்தையில் "யாகம்" என்ற பெயரால் எட்டு ஆடுகளைக் கொன்று தின்ற பார்ப்பனர் 'சோமபானம்' அருந்தியமை;

'மனுஸ்மிருதி' பற்றிய இராசகோபாலாச்சாரியாரின் சார்புக் கருத்துகள்;

துவாபர யுகத்தில் நடந்ததாகக் கதைக்கப்படும் 'நரகாசுரன்' பற்றிய கற்பனைப் புரட்டுகள்;

இளம்பெண்களுக்குப் பொட்டுக் கட்டிவிட்டுத் 'தேவதாசிக்'ளாக அவர்களை இழிந்த வாழ்க்கை வாழ வைக்கும் முறையினைச் சட்டப்படி ஒழிக்க, முத்துலட்சுமி ரெட்டி அம்மையார் மேற்கொண்ட முயற்சிகள்;

நாட்டின் வரலாற்றையே மாபெரும் திருப்பத்திற்குள்ளாக்கிய முதலாம் சுயமரியாதை மாநாட்டின் பல்வகைச் சிறப்புகள்;

> **"நாம் எவ்வளவு தூரம் கண்டித்துச் சொல்லியும் சிறிதும் கவனியாமல் நம்மைச் சூத்திரர் என்றும், நாலாவது வருணத்தார் என்றும், பஞ்சமர் என்றும் இழிவான பதங்களைத் திரு. மாளவியா முதல் வருணாசிரம மாநாடு, 'இந்து', 'சுதேசமித்திரன்' முதலிய பத்திரிகைகள் வரை உபயோகித்து வருவதால், இனியும் அம்மாதிரிப் பதங்களை எந்தப் பார்ப்பனராவது பார்ப்பனப் பத்திரிகைகளாவது உபயோகித்தால், நாமும் நிகண்டு – அகராதிகளில் உள்ளபடி, பார்ப்பனர்க்கு 'மிலேச்சர்கள்' என்ற பதத்தை உபயோகிக்க நேரிடும்"**

என்று தீர்மானம் நிறைவேற்றிய பட்டுக்கோட்டைச் சுயமரியாதைத் தொண்டர் மாநாடு;

சாதி முறையும் பெண்ணடிமைத் தன்மையும் நீடிக்க வேண்டும் என்று கூச்சமில்லாமல் வலியுறுத்திய வர்ணாசிரமமாநாடுகள்;

அகில திருவாங்கூர் இளைஞர் 'ரிவோல்ட்' முதல் மாநாட்டிற்குப் பெரியார் தலைமை ஏற்றமை;

மலையாள நாட்டின் கோட்டயத்தில் ஆர்வம் பொங்க நடத்தப்பட்ட சுயமரியாதை மாநாட்டில்,

> **"தீண்டாமை ஒழிய வேண்டுமானால் அதை வலியுறுத்தும் மதங்களும் கடவுள்களும் கோவில்களும் அவற்றுக்கு ஆதாரமான வேத–சாஸ்திர–புராணங்களும் அடியோடு ஒழிந்தாக வேண்டும். இவற்றில் ஒரு சிறிது மிச்சமிருந்தாலும் அது வளர்ந்துவிடும்"**

எனும் தீர்மானம் நிறைவேறியமை:

"மனு சாஸ்திரம் புராணங்கள் முதலிய நூல்கள் பறிமுதல் செய்யப்பட வேண்டும்'' எனும் தீர்மானம் நிறைவேற்றிய

'மகாராஷ்ட்ர சுயமரியாதை மாநாடு' புரட்சியாளர் அம்பேத்கர் தலைமையின் கீழ் நடந்தமை;

'குடிஅரசு' பதிப்பகத்தின் சார்பில் வெளியிடப்பட்ட 'கர்ப்ப ஆட்சி' (அல்லது சுவாதீன கர்ப்பம்) எனும் நூல் பற்றிய அறிவிப்பு;

வைக்கம் உரிமைப் போர், சேரன் மாதேவி குருகுல எதிர்ப்பு நடவடிக்கை, சுசீந்தரம் கோவில் நுழைவு ஏற்பாடு ஆகிய கிளர்ச்சிகள்;

புரோகிதத்தைப் புறக்கணித்தவர்களின் பெயர்கள், கைம்பெண் மறுமணம் செய்தவர்களின் பெயர்கள், சாதிக்கலப்பு மணங்கள் புரிந்து கொண்டோரின் பெயர்கள், தங்களின் பெயர்களுடன் இணைக்கப்பட்டிருந்த சாதிப் பெயர்ப் பின்னொட்டுகளைக் கைவிட்டவர்களின் பெயர்கள்;

ஈரோட்டில் ஏற்பாடு செய்யப்பட்ட இளைஞர் மாநாடு, பெண்கள் மாநாடு, மது விலக்கு மாநாடு, சங்கீத மாநாடு ஆகியவை அடங்கிய இரண்டாம் சுயமரியாதை மாநாட்டு நடவடிக்கைகள், அதன் தொடர்பாகத் திட்டமிடப்பட்ட நாடக நிகழ்ச்சிகளுக்காகத் தீண்டாமையொழிப்பு, கைம்பெண் திருமணம் போன்ற புரட்சிக் கருத்துகளைக் கொண்ட நாடகங்களை வரவேற்பதாக இடப்பட்ட அறிக்கை:

விருதுநகரில் எழுச்சியோடு நடந்த மூன்றாம் சுயமரியாதை மாநாட்டின் நடவடிக்கைகள்;

பொறாமையுள்ளம் படைத்தோரின் சூழ்ச்சிகளையெல்லாம் தகர்த்தெறிந்து தம் துணைவியார், தோழர்கள் ஆகியோருடன் பெரியார் கப்பலேறிச் சென்று, பினாங், ஈப்போ, கோலாலம்பூர், சிங்கப்பூர் ஆகிய பெருநகரங்களிலும் மேலும் பல ஊர்களிலும் ஏற்பாடு செய்யப்பெற்ற நிகழ்ச்சிகளில் பங்கேற்று நாடு மீண்டமை;

பட்டுக்கோட்டை கோயில் திருவிழாவில் பாட வந்த பார்ப்பன இசைக் கலைஞர் வேற்றுமொழியில் பாடல்கள் இசைக்க, தன்மான வீரர் மாப்பிளையன், தமிழில் பாடாவிட்டால் கொலை விழும்" என்று முழங்கிப் பாடங் கற்பித்தமை;

'பொருள்முதன்மை பொதுவுடைமை'க் கொள்கையின் படைப்பாளர்களான மார்க்சும் எங்கல்சும் இணைந்து 1874-இல் வரைந்த 'சமனிய அறிக்கை' யினை இந்தியாவிலேயே முதன்மையாகத் தமிழில் பெயர்த்துப் பெரியார் சமதர்ம அறிக்கை என்று வெளியிட்ட அரிய செயல்;

உடல் நலக் குறைவினால் ஓய்வெடுக்குமாறு மருத்துவர்களால் கட்டாயப்படுத்தப்பட்டிருந்தாலும் பெரியார் அய்ரோப்பிய சுற்றுப் பயணம் செய்து எகிப்து, கிரீஸ், துருக்கி, ரஷியா, ஜெர்மனி, இங்கிலாந்து, இத்தாலி, ஸ்பெயின், ஃபிரான்ஸ், போர்ச்சுகல் ஆகிய நாடுகளைக் கண்டறிந்து கொழும்பு வழியே தாயகம் திரும்பியமை;

பொதுவுடைமை முன்னோடி அறிஞர் சிங்கார வேலருடன் இணைந்து, 'சுயமரியாதை சமதர்மச் சங்கம்' எனும் பெயரில் ஓர் அமைப்பை உருவாக்கிய பெரியார், தமிழகத்திலும் மலையாள நாட்டிலுமாக பல நூறு கிளைகளை நிறுவியமை;

அனைத்திந்திய அரசியலில் பிறர்க்கென வாழ்ந்த பெருமான் செயப்பிரகாசர் ஈரோடு வந்து, தம் கட்சியில் சேர்ந்து விடுமாறு பெரியாரை அழைத்தமை;

இளைஞர் மாநாடு, பெண்கள் மாநாடு, 'அல்லாதார்' மாநாட்டு நடவடிக்கைகள்;

துணைவி நாகம்மையார் இறக்கும் தறுவாயில் படுக்கையில் கிடத்தி வைக்கப்பட்டிருந்த நிலையிலுங்கூட ஏற்கனவே திருப்பத்தூரில் ஏற்பாடு செய்யப்பட்டுவிட்ட சுயமரியாதைச் சமதர்ம மாநாட்டிற்குச் சென்று திரும்பிய பெரியார், துணைவியார்க்கு இறுதி விடை கொடுத்துவிட்டு, மறுநாளே திருச்சி சென்று, சட்டத்தை மீறி ஒரு திருமணத்தை நடத்திவைத்து தளை செய்யப்பட்டமை.

இவைபோன்ற நூற்றுக்கணக்கான நிகழ்ச்சிகளைப் பற்றிய செய்திகள் 'குடியர'சின் இதழ்ப் பக்கங்களில் காட்சி தந்தன. இவையெல்லாம் 'குடிஅரசு' தற்காலிகமாக ஓய்வெடுத்துக் கொள்ளும் நிலை உருவாகும் வரை-அதாவது 1933-ஆம் ஆண்டு முடிய வெளியானவை.

இப்படியாக, பெரியாரின் ஏரணப் பண்பும் எழுச்சி விசையும் அடங்கிய சொல்லோவியங்கள் 'குடி அரசு'க்குப் பகுத்தறிவு மணங்கூட்டின என்றால், கசடறப் பயின்ற கல்விமான்களும் பட்டறிவாளர்களும் படைத்தளித்த ஆய்வுத் தூண்டல்கள் அறிவுப் பசி கொண்டோர்க்கு அறுசுவை உண்டியாய் அமைந்தன. செய்தித் துண்டங்களோ உணர்வுகளைக் கிளறிவிடும் ஊக்கிகளாய் நின்றன.

### தூண்டல்–துலங்கல்–விளைவுகள்

'சீரிய குறிகோள்களின் அடிப்படையில் தோன்றிய 'குடிஅரசு' இதழ்களின் உள்ளடக்கங்கள் மக்களின் நெஞ்சங்களை

ஈர்ப்பாற்றலோடு இழுத்தன; படித்தோர் மூளைகளை மின்னாற்றலென அவை தாக்கி அவர்களுக்குப் புத்தறிவு கொளுத்தின. பயின்றோர் பிணிக்கவும் பயிலாதோருங்கூட வேட்கவும் அரும்பெரும் தாக்கங்களைப் படைத்துக் காட்டின.

தீண்டாமை யொழிப்பிலே 'குடிஅரசு' காட்டிய முனைப்பும் தொடுத்த தாக்குதல்களும் மெய்தொடாமைக்கும் கண்படாமைக்கும் இலக்காகியிருந்த பிரிவினர்களிடத்திலே வியப்பையும் மலைப்பையும் ஆர்வத்தையும் தூண்டின.

சூத்திரப் பட்டத்தின் இழிவு முற்றிலுமாகத் துடைக்கப்பட்டாக வேண்டும் என்று 'குடிஅரசு' வழியே பெரியாரும் அவரின் சுயமரியாதை இயக்கமும் வெளிப்படுத்திய வெறி, பிற்படுத்தப்பட்ட மக்களின் மானவுணர்ச்சியை வலிமையாகத் தாக்கி விழிப்பைத் தூண்டியது.

பார்ப்பன மேலாண்மையை எப்பாடுபட்டாகிலும் அடியோடு தகர்த்தெறிய வேண்டுமெனப் பெரியாரும் 'குடிஅரசும்' மேற்கொண்ட வஞ்சினம், அதன் தேவையைப் புரிந்துகொண்டு அதற்காகக் காத்துக் கொண்டிருந்த பார்ப்பனரல்லா மேனிலை மக்களைத் தூண்டியதால், அவர்களும் இயக்கத்துடன் இணைந்து ஒத்துழைக்க முன்வந்தனர்.

உழைக்கும் பாட்டாளி மக்களின் சார்பில் ஓங்கிய குரலில் இயக்கம் வழக்காடியதன் பயனாக, மக்களாய நலனுக்காகப் பல பிரிவுகளாய்ப் பாடுபடும் பல்துறைத் தொழிலாளர்களின் ஆர்வம் தூண்டப்பட்டு, அவர்களும் இயக்கத்தை நாடியோடி வந்தனர். வீழ்த்தப்பட்ட இனமான பெண்குலத்தின் உய்வுக்காக தம்மைப் பெண்ணாகவே பாவித்துக் கொண்டு தாய்மை யுணர்வு கொப்பளிக்கப் பெரியார் உரக்க வெளியிட்ட உயர்ந்த எண்ணங்கள் தமிழ் மகளிரிடையே உரிமையுணர்வைத் தூண்டவே, அவர்கள் நம்பிக்கையுடன் - ஊக்கமாக - இயக்கத்தில் பற்றுக் கொண்டனர். உயர் கல்வி பெற்றோரும் சரி, குறைவாகக் கற்றோரும் சரி, 'குடிஅர'சை எவ்வளவு தயக்கத்துடன் முதலில் தொட்டாலும், இதழைப் புரட்டி ஒரு பத்தியைப் படித்துவிட்டால், பிறகு இடையிலே நிறுத்த மறுத்தனர். அவ்வளவுக்கு அவர்களின் அறிவுப்புலன் தூண்டப் பெற்றது.

எதிர்த்தரப்பினருக்குக் 'குடிஅரசு' அரிமாக்கனவாக இருந்தாலும் அவர்களும் அதைப் படித்துத் தீர வேண்டிய கட்டாயத்திற்குள்ளானார்கள்.

**"படுக்கையிலிருந்து எழும்போது, இன்று உங்கள் சுயமரியாதைக்கு என்ன செய்வது என்று யோசியுங்கள். ஒன்றும் செய்யாத நாளை வீணாய்ப் போனதாக நினையுங்கள். ஒவ்வொரு வாலிபரும் தங்கள் கடமையை உணருங்கள். உங்கள் சுயமரியாதைக்கு உங்கள் உயிரைக் கொடுக்கும் பாக்கியத்தை அடையத் 'தபசு' இருங்கள்!"**

என்பதாகக் 'குடிஅரசில்' வெளியான பெரியாரின் உரையினைப் படித்த இளைஞர்களின் உணர்வுகள் தூண்டப்பட்டன. அதனால் வீரத்துடன் துலங்கிய நல்லிளைஞர்களால் நாட்டில் ஒரு புதிய புரட்சியான பண்பாட்டு வரலாறு தொடங்கியது.

ஆம், கைம்பெண் திருமணங்களும் கலப்புத் திருமணங்களும் நிகழ்த்தப்பட்டன. குஞ்சிதம்- குருசாமி, மரகதவல்லி - முருகப்பா, சிவகாமி - சிதம்பரனார், நீலாவதி - ராமசுப்பிரமணியம், விசாலாட்சி - இராம. சுப்பையா, மஞ்சுளாபாய் - சண்முகம், அன்னபூரணி - இரத்தினசபாபதி, சுலோசனா - பொன்னம்பலனார், காந்தம் - சுந்தரவடிவேலு, சுந்தரலீலா - சிங்கம், ரெங்கம்மாள் - சிதம்பரம் போன்ற இணைகள் உருவாயின. பின்னால் ஆயிரமாயிரம் புரட்சித் திருமணங்கள் கனிவதற்கு இவை விதைகளாயின.

"பார்ப்பனியச் சடங்குகளை விட்டுவிட்டோம்" என்றனர் பலர்.

"மதக்குறிகள் இட்டுக் கொள்வதை நிறுத்திவிட்டோம்" என்று அறிவித்தனர் பலர்.

ஆயிரமாயிரம் பேர், "எங்கள் பெயர்களின் சாதிப் பின்னொட்டுகளை விரட்டியே விட்டோம்" எனப் பெருமிதப்பட்டனர்.

எதிர்த்தரப்பினரும் வாளாவிருக்கவில்லை; அவர்களும் துலங்கினர். சட்டமன்றத்தில் தன்மான இயக்கத் தாக்கங்கள் பற்றித் தாறுமாறாகப் பேசினர். பொதுக் கூட்டங்களில் அவர்கள் கொடுத்த எச்சரிக்கைகளைப் பெரும்பான்மை மக்கள் ஏற்கவில்லை'.

பொறுமை இழந்த பார்ப்பனரும் தேசியத்தாரும் காந்தியாரை இறைஞ்சி அழைத்து வந்து தமிழகத்தில் பொதுக்கூட்டங்கள் நடத்தினர்.

**"அவரவர்க்கு விதிக்கப்பட்ட தர்மத்தை அந்தந்த வர்ணத்தார் செய்ய வேண்டும். பிராமணனுக்குச் சில தர்மங்கள் விதிக்கப் பட்டிருக்கின்றன. அவற்றை அவன் சரிவரச் செய்யும் போது**

**அவன் உயர்ந்தவனாகிறான். எளியவர்களைப் பாதுகாப்பது சத்திரியனுடைய தர்மம். அதை அவன் நிறைவேற்றும்போது, அவன் மற்றெல்லாரிலும் மேம்பட்டவனாகிறான். இம்மாதிரியே இதர வர்ணத்தாலும் தத்தமக்கு ஏற்பட்ட தர்மங்களை – கடமைகளைச் செய்கையில் அவர்கள் உயர்ந்தவர்களாகிறார்கள். இப்படியிருக்கையில், உயர்வு தாழ்வு எங்கிருந்து வருகிறது?"**

என்ற காந்தியாரின் வர்ணசிரமச் சார்புக் கருத்தைத் தமிழ் மக்கள் தள்ளுபடி செய்தனர்.

காந்தியாரின் கருத்துப் பரப்பலுக்குப் பின் தென்னகத்தில் எதிர் வினைகள் அதிகமாயின.

சென்னை, வடஆர்க்காடு, சேலம், தஞ்சை, நெல்லை, மதுரை முதலிய மாவட்டங்களில் நடந்த மாநாடுகளில் வர்ணாசிரமத்தைக் கண்டித்து, அதற்கு அடிப்படையான நூல்களைப் புறக்கணிக்க மக்கள் தீர்மானித்தனர். சில மாநாடுகளில் 'மனுசாஸ்திரம்' என்பதைத் தீயில் கொளுத்தி அதன் சாம்பலை நீரில் கரைத்தனர்!

மக்களாயத்தின் பலபிரிவினரும் பெரியாரை ஆங்காங்கே அழைத்துப் பெரும்பெரும் வரவேற்புகள் அளித்து, அவரின் தன்னலந்துறந்த தொண்டுகளை நெஞ்சார, வாய்நிறையப் பாராட்டினர்!

செங்கற்பட்டு மாநாட்டில் அரிய சுவையோடு அனைவர்க்கும் விருந்து படைத்த "தீண்ட - பார்க்கக்கூடா" நாடார் மக்களே தொடர்ந்து பல மாநாடுகளுக்கு அழைக்கப்பட்டனர்!

தீண்டாமையின் அருவருப்பான வெளிப்பாடாகிய மூங்கில் குழாயும் தென்னஞ்சிரட்டையும் சிற்றூர் - பேரூர் உணவுக் கடைகளிலிருந்து அஞ்சி ஒளிந்தன!

"சூத்திரச்சி, ஒத்திப்போ" என்று பெரும்பான்மை மகளிரை, 'மேல்குல'ப் பெண்கள் தாழ்ச்சி செய்யும் வாடிக்கை குன்றத் தொடங்கியது'.

காஞ்சி மடத்தின் சார்பில் நடந்த பள்ளியில் ஆதிதிராவிடச் சிறுவர்-சிறுமியரைச் சேர்க்க மறுக்கப்பட்டதால், அப்பள்ளிக்கு அளிக்கப்பட்டு வந்த அரசுதவித்தொகை நிறுத்தப்பட்டது!

தஞ்சை மாவட்டத்தில் பல்லக்கில் 'மடாதிபதி' என்னும் மாந்த உடலைச் சுமந்து சென்ற 'அடிமையாட்கள்' பாதிவழியிலேயே அவரைப் பல்லக்குடன் கீழே தூக்கிப் போட்டனர்'!

'இந்து' எனும் பெயர் கொண்ட மதம் உலகில் இல்லை என்ற பேருண்மையினைக் காந்தியார், பெரியார் - இராமநாதன் முன்னிலையில் ஒப்புக் கொள்ளும்படி ஆயிற்று!

தன்மான இயக்கத் தொண்டர்கள் திடீரென்று ஆதி திராவிடர்களை இட்டுக் கொண்டு நுழைந்து விடுவார்கள் என்று கருதி, பல ஊர்களில் கோவில்களை மூடிப் பூட்டி வைத்தனர்!

பொழுதுபோக்கு ஏடுகளைப் படிப்பவர்கள் என்ன செய்வார்கள்? அவற்றைப் பெரும்பாலும் பழைய தாளிகைக் கடைக்கு அனுப்பிவிடுவதோடு சரி. ஆனால் 'குடிஅரசு' இதழைப் படித்தோர்களின் நிலை அப்படியன்று. படித்தார்கள்; பகுத்தறிவுத் தூண்டலுக்கு ஆட்பட்டார்கள்; துடித்தார்கள்; உடனே துலங்கத் தொடங்கினார்கள்.

"நாங்கள் இப்போது பார்ப்பனர்களைக் கேட்பதெல்லாம், 'எங்களையும் மனிதர்களாக மதியுங்கள்; என்பதைத் தவிர வேறில்லை" என்ற பெரியாரின் உரையைப் படித்தபோதும், "சூத்திரன் என்று உன்னைச் சொல்லிக் கொள்ளாதே. சூத்திரன் என்றால் வேசி மகன் என்று பொருள்" எனும் கட்டமிட்ட கட்டளை மொழியைக் கண்டபோதும், "பெண்களைப் பள்ளிக் கூடத்திற்கு அனுப்பிக் கற்பித்தல் கூடாது; அப்படிச் செய்தால் அவர்கள் ஆண்களாகி விடுகிறார்கள்" என்பது போன்ற பார்ப்பனரின் வர்ணாசிரம மாநாட்டுக் கருத்துகளைக் கண்ணுற்றபோதும், செங்கற்பட்டுச் சுயமரியாதை மாநாட்டிற்கு எதிர்ப்பாகக் கருத்துப் பரப்பல் செய்வதற்கெனப் பேராயக் கட்சியின் சார்பில் குழுவொன்று அமைக்கப்பட்ட செய்தியைப் படித்தபோதும், படித்த அளவோடு 'குடிஅரசை'த் தூக்கிவைத்துவிட்டுத் தமிழ்மக்கள் தூங்கப் போய்விட வில்லை. இனிமேல் "சுதேசமித்திரன்" நாளிதழை வாங்குவதில்லை என்று முடிவெடுத்தார்கள் - அதாவது துலங்கினார்கள். அதன் விளைவாக, 'சுதேசமித்திர'னின் ஆண்டு உறுப்பினர்களின் எண்ணிக்கை 2000-க்கு மேல் குறைந்துபோனது!

"சுயமரியாதை எனது பிறப்புரிமை", "சுயமரியாதை வாழ்வே சுகவாழ்வு" என, ஒருவர்க்கொருவர் சந்தித்துக்கொண்டபோது கூறலாயினர்.

தமிழகத்தில் பல பகுதிகளிலும் நிறைய மதமாற்றங்கள் நிகழ்ந்தன. ஈ.வெ.ரா., 'ஈரோட்டு ராமசாமி" என்ற பெயர்கள் நாடெங்கிலும் ஒலித்தன.

சார்பாளர்கள், எதிர்ப்பாளர்கள் - இருதரப்பினரும் பெரியார் பற்றிச் சொல்லாடல் புரிந்தனர்.

பாட்டாளிகளும் படிப்பாளிகளும் அவர் செல்லுமிடமெல்லாம் அவரைச் சூழ்ந்து மொய்த்தனர்.

புரோகித விலக்குச் சங்கங்களைப் பலவிடங்களில் மக்கள் உருவாக்கினர்.

பலப்பல குடும்பங்களில் 'பண்டிகைகள்' கொண்டாடுவதையும் 'விரதங்கள்' மேற்கொள்ளுவதையும் துணிச்சலாகக் கைவிட்டனர்.

சூத்திரன், சூத்திரச்சி என்ற சொற்களால் எவர் அழைத்தாலும் அதை மக்கள் மானவுணர்வோடு மறுத்தெதிர்த்தனர்.

மாணவர்களும் இளைஞர்களும் தன்மான இயக்கத்தில் தங்களைப் பெருமிதத்துடன் ஒப்படைத்தார்கள்.

பதிவுத் திருமணங்களின் எண்ணிக்கை மளமளவென உயர்ந்து வருவதாக, திருமணப் பதிவாளர் அறிக்கையிட்டார்.

புராணங்கள் தொடர்பான பல்வகை நிகழ்ச்சிகளுக்கான மேடை அமைத்துக் கொடுத்துக் கொண்டிருந்த பொதுமக்களின் எண்ணிக்கை மிகவும் கீழ்நிலைக்குச் சென்றுவிட்டது!

புதுக்கோட்டை 'சமஸ்தான நிருவாக அக்ராசனர்' நிலையிலிருந்த திவான் பகதூர் டி ராகவய்யா, "இனிமேல் கோவில் களைக் கட்டுவதில் பிரயோசனமில்லை" என்று வெளிப்படையாக அறிவிக்கவே செய்தார்!

கப்பலோட்டிய தமிழரை, "என்னடா சிதம்பரம்?" என்று விளித்துப் பேசிக் கொண்டிருந்த 'இந்து' ஆங்கில நாளேட்டின் உடைமையாளர் கஸ்தூரி ரங்க அய்யங்கார், "வாங்கோ, பிள்ளைவாள்!" என்று அழைக்க வேண்டிய கட்டாய நிலைக்குள்ளானார்!

இந்தியப் பெருந்தலைவர் காந்தியார் அவர்களை முன்பு தன் வீட்டுத் திண்ணையிலேயே உட்காரச் செய்து அனுப்பிய பேராயக்கட்சியின் முன்னோடித் தலைவர் சீனிவாச அய்யங்கார், பின்பு அதே காந்தியாரைத் தன் இல்லத்திற்குள்ளே அழைத்துச் சென்று அமர வைக்கும் தட்பவெப்பநிலை தன் மதிப்பு இயக்கத்தால் ஏற்பட்டது!

சுயமரியாதை இயக்க மாநாடுகளில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களுக்கு உரிய மதிப்புக் கொடுத்து அவற்றை நடைமுறைப்படுத்த அன்றைய சென்னை மாநிலஅரசு ஆர்வங் காட்டியது!

இயக்கம் மக்களிடையே பரப்பிய பார்ப்பனரல்லார் உணர்வின் பெரும்பயனாக, நீதிக்கட்சி தேர்ந்தெடுக்கப்பட்டு 1930-இல் மீண்டும் ஆட்சிக்கு வந்தது!

## புலையர்களையும் உங்கள் கோவிலுக்குள் விடுவீர்களா?

மலையாள நாட்டின் பகுதிகளில் பல்வகை முற்போக்கு மாநாடுகளுக்குப் பெரியார் அழைக்கப்பட்டு, அவரின் பட்டறிவுக் கருத்துகள் மக்களால் அட்டியில்லாமல் அப்படியே ஏற்றுக் கொள்ளப்பட்டன!

ஓர் அருமையான நிகழ்ச்சி இங்கே குறிப்பிடல் தகும்.

கோட்டயத்தில் 1929 மே மாதம் ஈழவர்களின் 'எஸ்.என்.டி.பி. யோகம்' நடத்திய ஆலயப் பிரவேச மாநாட்டிற்குப் பண்டித மதன்மோகன் மாளவியா அழைக்கப்பட்டார். அவர் தமது தலைமையுரையில் சாதி வேறுபாட்டு முறையால் கெடுதியில்லை என்று கூற, அதே நொடியில் எதிர்ப்புக் கூச்சல்கள் எழுந்தன. "அதுதான் பெரிய கெடுதி; இந்தியாவை அடிமையாக்கியதே அதுதான்" என்னும் குரல்களைக் கேட்டு மாளவியாவின் முகம் சுருங்கியது.

தொடர்ந்து, நம் புருவங்களை மேலுயர வைக்கும் சொல்லாடல்கள் நிகழ்ந்தன. அவை ஒடுக்கப்பட்ட மக்களின் ஊக்கத்தை மட்டுமன்றி அவர்களின் தெளிவான அறிவையும் வெளிக்காட்டுபவை.

அவற்றின் அருமை கருதி முழுமையாகத் தருகிறேன் செய்தியை.

> **"இந்துமதம் சிறந்தது. அது உலகத்திற்கு எவ்வளவோ நன்மை செய்திருக்கிறது" என்றார் மாளவியா.**
>
> **வெடித்தன எதிர்ப்பொலிகள். "இந்துமதமே இந்திய தேசத்தைப் பாழாக்கியது".**
>
> **"இராமாயணம்" என்று அவர் கூறி முடிக்கவில்லை.**
>
> **"இராமாயணம் பிராமண நன்மைக்காக ஏற்பட்டது. எங்களுக்கும் அதற்கும் சம்பந்தமில்லை, நாங்கள் இங்கு ராமாயணக் காலட்சேபம் கேட்க வரவில்லை!" மக்கள் முழங்கினர்.**

"ராமன் எல்லார்க்கும் கடவுள்!"

''ராமன் கடவுளல்ல; அவனொரு பிராமண அடிமை. திராவிடர்களுக்கு அவன் எதிரி!"

"இங்கு ஆரியர்-திராவிடர் என்ற உணர்ச்சி இருப்பதாகத் தோன்றுகிறது. அது கூடாது. ராமன் விஷ்ணுவின் அவதாரம். அவனுக்குப் பிராமணர் - சூத்திரர் வேறுபாடெல்லாம் கிடையாது."

"சூத்திரன் என்ற சொல்லைத் திரும்பப் பெற வேண்டும். ராமனும் கிருஷ்ணனும் எங்களுக்கு வேண்டாம்!"

"ராமனுக்கு ஜே!" ஒரு முறைதான் மாளவியா இப்படிக் கூவினார். ஆனால் அய்ந்தாறு முறை "ராவணனுக்கு ஜே!" என்று எதிர் முழக்கம் கொடுத்தார்கள் மக்கள்!

"ராவணன் எங்கள் குலத்தவன்; ஈழ நாட்டரசன், ராமன் சூழ்ச்சி செய்து அவனின் தம்பியை வசமாக்கிக் கொண்டு கொடுமை செய்தான். ராச குடும்பத்தாரை அரக்கர் என்றும் மற்றவரைக் குரங்குகள் என்றும் இராமாயணம் சொல்கிறது. அது கொளுத்தப்பட வேண்டிய புத்தகம்!" - இப்படி ஒருவர்.

"உங்களுக்கு ராமன் எதிரியாக இருக்கலாம். நான் ராமனைக் கடவுளாகக் கருதுகிறேன். இராமாயண ராமன் அல்ல என்னுடைய கடவுள். மரத்திலும் கல்லிலும் ஒவ்வொருவருடைய ஆத்மாவிலும் பஞ்சபூதத்திலும் உள்ள ராமனைக் கடவுளாக எண்ணுகிறேன். என்முன் அந்த ராமன் தாண்டவமாடுகிறான்!" மார்தட்டினார் மாளவியா.

கூட்டத்தினர் விடவில்லை. "இராமாயண ராமனைத் தவிர வேறு ராமன் எங்கிருந்து வந்தான்? ஆதாரம் என்ன?" என வினவினர்.

பேச்சைத் திசை திருப்பிய மாளவியா, "பிற மதத்தினரை நம் மதத்தில் சேர்க்கலாம்" என்றார்.

"ஒரு கிறித்தவனை இந்து வாக்கினால் அவனை எந்த ஜாதியில் சேர்ப்பது?" - ராமவர்மா தம்பன் என்பவரின் அருமையான வினாவிது.

"சாஸ்திரம் பார்க்க வேண்டும். ஜாதி வித்தியாசம் என்பது அற்பமான விஷயம்" - மாளவியாவின் விடை இது.

"அதுதான் எங்களுக்கு முக்கியமானது. உங்கள் பனாரஸ் இந்து யூனிவர்சிட்டியில் ஈழவர்களைச் சேர்த்துக் கொள்ளுவீர்களா?

நீங்கள் புலையர்களையும் உங்கள் கோவிலுக்குள் விடுவீர்களா?" – கேள்விகளை அடுக்கினர்.

எந்த விடையும் மாளவியாவின் வாயிலிருந்து பிறக்கவில்லை".

"வெட்கம்! வெட்கம்! எழுந்திருங்கள் பண்டிட்ஜி; உங்களையும் புலையர்களையும் எங்கள் கோவிலுக்குள் கூட்டிச் செல்கிறோம்; ஒன்றாகச் சாப்பிடுகிறோம்!" என்ற மக்கள், "மலையாளத்திற்கு மாளவியா வேண்டாம்!" என்று விடை கொடுத்தனர்.

அன்றிரவு நடந்த பொதுக்கூட்டத்தில் மாளவியாவின் பேச்சைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றினர்.

இத்தகைய துணிச்சலை அவர்களுக்கு ஊட்டியவர் அதற்கு முந்திய நாள் அங்கு நடந்த சுயமரியாதை மாநாட்டுத் தலைவர் பெரியார் என்பது குறிப்பிடத்தக்கது.

"கோட்டயத்தில் நடைபெற்ற எஸ்.என்.டி.பி. மாநாட்டில் பத்தாயிரத்துக்கும் அதிகமான மக்களுக்கு இவர் சுயமரியாதை இயக்கத்தின் தத்துவங்களைப் பற்றிச் செய்த சொற்பொழிவை யான் கேட்டேன். அவரது வாயினின்றும் வந்த ஒவ்வொரு சொல்லும் உண்மை உணர்வோடு வந்தது. மிக்க கவனத்துடன் மக்கள் கேட்டனர். எனது நாட்டில் (மலையாளம்) சுயமரியாதை விதைகள் முளை கண்டிருந்தவை இவரால் போஷிக்கப்பட்டன. மிகுந்த விளைவு கட்டாயம் ஏற்படும்" என்று அந்தக் காலத்தில் நெல்லையில் நடந்த சுயமரியாதை மாநாட்டில் பெரியார் உருவப்படத் திறப்பு விழாவின்போது ஈழவர் சங்கச் செயலாளரும் முன்னாள் உயர்முறைமன்றத் தீர்ப்பாளருமாகிய எம். கோவிந்தன் அவர்கள் ஆற்றிய உரையினை இயைபுபடுத்திப் பார்த்தால், ஈழவரின் மனத்திண்மைக்கான காரணி நமக்குப் புலப்படும்.

இப்பேர்ப்பட்ட நிலவரம் எந்த அளவுக்கு மதத்தலைவர்களைப் பாதித்தது என்பதை நினைவுபடுத்திக் கொள்ளுவோம். இயக்கத்தின் தொண்டையும் பயனையும் குலைத்துக் குன்றச் செய்யும் பெரியதொரு சூழ்ச்சித் திட்டத்தின் அடிப்படையில் சிருங்கேரி மடத் தலைவர் ஜகத்குரு சங்கராச்சாரியார் பெரியாருக்கு 'ஸ்ரீமுகம்' ஒன்று அனுப்பினார்.

"அஸ்மத் பிரிய முக்கிய சிஷ்யரான ஸ்ரீமான் இராமசாமி நாயுடுவுடைய சமஸ்த்த அய்ஸ்வரிய ஆரோக்கிய அபிவிருத்தியின் பொருட்டு, திரிகால அனுஷ்டானத்திலும் பகவத் பிரார்த்தனையுடன் ஆசிர்வதித்து எழுதி வைத்தனுப்பிய ஸ்ரீமுகம்"

- என்று தொடங்கி, பெரியாரின் தன்னலமற்ற தொண்டினைப் பாராட்டிவிட்டு,

> **"விவேகியாகிய நீரும் உங்கள் தர்மபத்தினியும் அனாதியாய் உங்களுக்குச் சொந்த பாத்தியமான இந்த ஜகத் குருபீடத்தைச் சிறப்புவிப்பதற்காக இந்த சமஸ்தானத்திற்கு வந்து, ஸ்ரீசாரதாசந்திரமவுளீதர ஸ்வாமிகள் பிரசாத அனுக்கிரகம் பெற்று இப்போதிலும் அதிகமான சிரேயசை அடைவீர்கள் என்று நம்பி இந்த ஸ்ரீமுகம் எழுதிவைத்து அனுப்பலாயிற்று. விவேகிகளுக்கு என்ன எழுத வேண்டியிருக்கிறது?"**

என்று நிறைவு பெற்றிருந்தது அம்மடல்.

பெரியாருக்குப் புரியாததும் உண்டா? அந்த மடலில், "சனாதன தர்மத்தைக் கெடுக்காமல்", "கரும காண்டத்திலுள்ள அவரவர்கள் கடமைகளைச் செய்து", "சாஸ்திரங்கள் இடங்கொடுக்கும் வரையிலும்", அதற்கு விரோதமில்லாமல் சில சுதந்தரங்கள் அளிக்கப்படும்" என்கின்ற வாசகங்கள் காணப்படுகின்றபடியால் தாம் அங்கு செல்வதால் ஏதாவது பயன் ஏற்படுமா என்கின்ற விஷயம் தமக்குச் சந்தேகமாகவே இருக்கின்றது என்று கருதிய பெரியார், தம் நண்பர்களையும் கலந்து கொண்டு, சந்திப்புக்குத் தம் இயலாமையைச் சங்கராச்சாரியாருக்குத் தெரிவித்து விட்டார். இயக்கத்தின் வளர்ச்சியையும் வலிமையினையும் ஒளியிட்டுக் காட்டும் அருமையான நிகழ்ச்சி இது.

இவ்வளர்ச்சிக்கும் வலிமைக்கும் பெரிய காரணியாக அமைந்தது 'குடிஅரசு'தான் என்பதில் மறுப்புக்கு இடமில்லை. இயக்கத்தின் ஆயிரமாயிரம் கருத்துகள் 'குடிஅர'சில்தான் வெளியாயின. பாரின் பல பகுதிகளுக்கும் சென்ற தமிழர்களிடத்தில் 'குடிஅரசு'ம் சென்றடைந்தது. அதன்பொருட்டே பலவகையான விளம்பரங்களைக் 'குடிஅர'சில் பலரும் வெளியிட முன்வந்தனர்.

தமிழர்களின் குடியிடங்களிலெல்லாம் 'குடிஅரசு' என்ற பெயர் ஒலித்தது. நல்ல படிப்பாளிகளும் ஓரளவு படித்தோரும், எழுத்துக்கூட்டிப் படிப்பதற்கு மட்டுமே முடிந்தவர்களும் நிரம்ப ஆர்வத்துடன் 'குடிஅரசு' படித்தனர். விலை கொடுத்து வாங்கும் நிலையில் இல்லாருங்கூட, 'குடிஅரசு' வாங்கிப் படிப்போரிடம் சென்று, அதை வேண்டிப் பெற்று விரும்பிப் படித்தனர்.

'குடிஅர'சின் தாக்கம் - அதாவது தன்மான இயக்கத்தின் தாக்கம் நம் தமிழக மண்ணோடு மட்டும் நின்று விடவில்லை. கடல் கடந்து

வாழச் சென்ற அயல்நாடுகளுக்கும் இயல்பாகப் பரவியது. மலாயா, சிங்கப்பூர், இலங்கை முதலிய நாடுகளில் உறைந்த தமிழ்ப் பெருமக்களின் ஆர்வம் தாய்த் தமிழகக் குடிகளின் ஆர்வத்திற்குக் குறைந்ததன்று.

இந்தியத் துணைக்கண்டத்தில் எந்தெந்தப் பகுதிகளில் தமிழர்கள் வாழ்ந்து கொண்டிருந்தார்களோ அங்கெல்லாம் 'குடிஅர'சின் கருத்துகள் நுழைந்து தாக்கம் உண்டாக்கின.

எல்லாவற்றிற்கும் அப்பால், அக்காலக் கட்டங்களில் சென்னை மாநிலத்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்க நேர்ந்த அமைச்சரவை களிலும் 'குடிஅர'சின் எழுத்துகளின் தாக்கம் இருந்தமை குறிப்பிடத்தக்கது.

அக்காலத்திய பொதுவாழ்க்கை முன்னோடிகளின் கூற்றுகள் பெரியார் கொள்கையின் தாக்கத்திற்குச் சான்றாக விளங்கின.

> **"ஃப்ரெஞ்சு தேசத்தில் ரூசோ என்பவர் அந்நாட்டில் சுயமரியாதையைக் காப்பாற்ற உழைத்ததுபோல், நம் நாட்டின் சுயமரியாதையைக் காக்க உழைக்கும் நம்முடைய நாயக்கர் தமிழ்நாட்டின் ரூசோ ஆவார்...."**
>
> **"எங்கெங்கே தமிழ் உணர்ச்சி தவழ்கின்றதோ, எந்தெந்த இடத்தில் புரட்சி வாடை வீசுகிறதோ, எங்கெங்கே சமுதாய சீர்திருத்தம் பேசப்படுகிறதோ அங்கெங்கெல்லாம் ஈ.வெ.ரா.வின் பெயர் ஒளி வீசித் திகழ்கின்றது?!**
>
> **"அவருடைய பெயரும் புகழும் தமிழ்நாட்டில் மட்டுமின்றி, ஆந்திர தேசத்திலும், பம்பாயிலும், மத்திய மாகாணங்களிலும் பரவியிருக்கின்றன என்பதைப் பெருமிதத்தோடு நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.........**
>
> **"அந்தக் காலத்தையும் இந்தக் காலத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கிறேன். மக்களிடத்தே புது எழுச்சியைப் பார்க்கிறேன். நண்பர் ஈ.வெ.ரா. காலத்தையே மாற்றிவிட்டாரா என்ன?"**

- எழுபது ஆண்டுகளுக்கு முன்பே இப்படியெல்லாம் பறையறைந்தவர் பேரறிஞர் ஆர்க்காடு இராமசாமி அவர்கள்.

> அதே காலக்கட்டத்தில் வாழ்ந்த பனகல் அரசர் இராமராயநிங்காரு அவர்கள், **"சமூகச் சீர்திருத்தத் துறையில் பலர் அனேக ஆண்டுகள் பாடுபட்டுப் பயன்பெறாமற்போன வேலையைச் சில ஆண்டுகளில் மதிப்பு வாய்ந்த தோழர்**

இராமசாமி நாயக்கர் அவர்கள் பயனளிக்குமாறு செய்து விட்டார்!" என்று பாராட்டினார்.

"திரு இராமசாமி நாயக்கரைப் பற்றி அய்ரோப்பாவிலே பேசப்படுகிறது என்றால் நாயக்கரின் புகழைப் பற்றி நான் என்ன சொல்வது?" – இது புகழ் தோய்ந்த கப்பலோட்டிய தமிழர் வ.உ.சிதம்பரனாரின் மெய்யுரை.

"எனது நண்பர் திரு. ஈ.வெ.இராமசாமி நாயக்கர் அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட சுயமரியாதை இயக்கம் நன்றாக வேரூன்றி அசைக்க முடியாத நிலையோடு நிற்பதல்லாமல் அது பெரும்பான்மையான மக்களைத் தன்னுள் கவர்ந்துகொண்டு வருவதைக் காணக்கான நான் அளவிட முடியாத மகிழ்ச்சியடைகிறேன்" என்று உளம் பூரித்தவர் அன்றைய முதலமைச்சர் பி. சுப்பராயன் அவர்கள்.

"இவ்வியக்கம் தேசத்தில் எவ்வளவு பரவியிருக்கின்ற தென்பதற்குப் பம்பாய் முதலிய வெளிமாகாணங்களில் சுயமரியாதை மாநாடு கூடுவதும், அவற்றில் செய்யப்படும் தீர்மானங்களும் போதிய சான்றாகும்." இப்படிப் போற்றிப் புகழ்ந்தவர் சென்னையின் முன்னாள் அமைச்சர் குமாரசாமி (ரெட்டியார்) அவர்கள்.

ஈரோட்டில் நடந்த இரண்டாம் மாநிலச் சுயமரியாதை மாநாட்டுத் தலைமைப் பொறுப்பேற்ற – ஜாலியன்வாலாபாக் படுகொலை உசாவல் குழு உறுப்பினராய்க் கடமையாற்றிய – எம்.ஆர். ஜெயகர், "உங்களுடைய இயக்கத்தில் கத்தோலிக்கக் கிறிஸ்தவர்களும் முகமதியர்களும் சேர்ந்திருப்பது சிறப்பாகும். மதத்தலைவர்களும் காங்கிரஸ் தலைவர்களும் செய்ய முடியாத காரியத்தை நீங்கள் செய்து முடித்திருக்கிறீர்கள்!"

என்று வாயாரப் புகழ்ந்தார்.

"சமதர்மக் கடனாற்ற ஆரம்பிக்கப்பட்ட பார்ப்பனரல்லாதார் இயக்கம் மக்களிடையே செல்வாக்குப் பெற ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது. பெரியாரால் ஆரம்பிக்கப்பட்ட நமது இயக்கத்தின் சிறப்பை அதிகம் விவரித்துத் தற்பெருமை கொள்ள நான் விரும்பவில்லை"

செங்கற்பட்டில் நடந்த முதலாம் சுயமரியாதை மாநாட்டுத் தலைமையுரையில் புகழ் பெற்ற சவுந்தர பாண்டியனார் அடக்கமாக இப்படிக் குறிப்பிட்டார்.

'குடிஅர'சின் வாயிலாகப் பெரியார் ஆற்றிய குமுகாயத் தொண்டின் தாக்கம் பற்றிக் கோவை அய்யா முத்து அவர்கள் பொருத்தமாகத் தீட்டிய படம் இது:

> **"கிடைத்ததை உண்டு, சுகத்தைத் துறந்து, போகம் மறந்து, அயர்வறியாது அல்லும் பகலும் காங்கிரசில் உழைத்து வந்தது போலவே, பெரியார் 'குடிஅரசு' தொடங்கிச் சுயமரியாதைப் பிரசாரம் செய்த காலத்தும் அன்பும் அறிவும் ஆவேச உணர்வும் பொங்கிட உழைத்தார். அய்ம்பது ஆண்டுகளில் செயற்கரிய காரியத்தை அவர் அய்ந்தே ஆண்டுகளில் செய்து முடித்தது கண்டு வியப்படையாதோர் இலர்!"**

இச்சான்றுரைகள் யாவும் மிகையானவை அன்று; மெய்யானவை!

ஆக -குடிஅரசு' என்பது வெறும் இதழாக இல்லாமல் ஓர் இயக்கமாக விளங்கிற்று. சுயமரியாதை இயக்கந்தான் 'குடிஅரசு' இயக்கம்; 'குடிஅரசு' இயக்கந்தான் சுயமரியாதை இயக்கம். இரண்டும் ஒன்றுக்கொன்று மாற்றுப் பெயராக இலங்கின.

சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியாரே 'குடிஅரசு இயக்கம்' என்று குறிப்பிட நேர்ந்தது.

> **"பிராமணரல்லாதார் இயக்கம் உத்தியோகத்திற்கு ஏற்பட்டதென்று எண்ணிக் கொண்டு கவலையில்லாமல் இருந்துவிட்டோம். அது 'குடிஅரசு இயக்க'த்தில் சேர்ந்து கொண்டு, உரிமையை ஸ்தாபித்துக் கொள்ளுவதற்கு என்று சொல்லிக் கொண்டு, மத விஷயத்திலும் கோவில் விஷயத்திலும் புகுந்து நம்மை அடியோடு கவிழ்க்க ஆரம்பித்து, ஆயிரக்கணக்கான வருடங்களாய் நாம் அனுபவித்து வந்த உரிமையை இப்போது பலாத்காரமாய்ப் பிடுங்கிக் கொள்ள ஆரம்பித்திருக்கிறது. சுயமரியாதைக்காரர்கள் செய்து வரும் பிரசாரத்தின் கொடுமை ஊர் ஊராகச் சுற்றிப் பார்ப்பவர்களுக்குத்தான் தெரியும்". (குடிஅரசு: 26-8-1928).**

ஆச்சாரியாரின் கூற்றில் சுயமரியாதை இயக்கத்தின் பெருந்தாக்கம், அது "குடிஅரசு" இயக்கம் என்று அழைக்கப்பட்டமை ஆகிய இரண்டு உண்மைகளும் அடங்கியிருக்கின்றன. எப்படி தென்னிந்த நலவுரிமைச் சங்கத்தினர் நடத்திவந்த 'Justice' என்னும் இதழின் அடிப்படையில், 'Justice Party', நீதிக்கட்சி என்ற பெயர்கள் புழக்கத்திற்கு வந்தன எனும் உண்மையை நாம் அறிவோம். அதற்கு

முன்னோடிதான் சுயமரியாதை இயக்கம் 'குடிஅரசு' இயக்கம் என்று வழங்கப்பட்டமை.

"என் கருத்துகளை வரும் தலைமுறையினர்க்கு விட்டுச் செல்ல வேண்டியது என்னுடைய கடமை" என்னும் உறுதிப்பாட்டுடன் 'குடிஅர'சை ஈன்ற பெரியார், அதைப் பேணி வளர்ப்பதற்கான முறைகளைச் செம்மையாகக் கையாண்டார்.

முதற் 'குடிஅர'சின் முதற்பக்கத்தில், "சிறந்த தமிழ்ப் பத்திரிகை, வருட சந்தா'' மூன்றுதான் என்பதோடு, ''தமிழ் மக்கள் எல்லாத்துறைகளிலும் முன்னேற்றமடைய உழைக்கும் பத்திரிகை இது. ஆகையால் இதனை ஆதரிக்க வேண்டுவது உங்கள் முதற்கடன் ஆகும். உடனே சந்தாதாரராய்ச் சேருங்கள்" என்றும் பெரிய எழுத்துகளில் பொறித்து, தமிழ்கூறு நல்லுலகத்திற்கு இதழியல் வரலாற்றில் இணையில்லாப் பெருமை படைத்த "குடிஅர"சை அறிமுகம் செய்தார் பெரியார்.

## ஓய்வு - இல்லை

தாம் ஓய்வெடுத்துக் கொள்ளும் பொருள்பற்றிப் பெரியார் மிகவும் சுவையாக எழுதியிருக்கிறார்.

> "ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டிய சமயம் நமக்குத் தெரியும். அதாவது நமது தொண்டு நாட்டிற்கு உதவாது என்றாவது, நமது தொண்டை நாட்டார் ஏற்பதில்லை என்றாவது நமக்குத் தெரிந்தால் யாரிடமும் சொல்லாமல் நாமே ஓய்வெடுத்துக் கொள்வோம். அதுவரை எடுத்துக்கொள்ளும் ஓய்வு உண்மையான ஓய்வாகாது. அப்படிக் கடுமையாக ஓய்வெடுத்துக் கொண்டுதான் ஆகவேண்டும் என்கிற முறையில் நமது உடலில் கோளாறு ஒன்றும் இது சமயம் இல்லை என்றே நினைக்கிறேன்." (குடிஅரசு: 17-7-1927)

இப்படி அவர் எழுதியதற்குப் பிறகு எவரேனும் அவரை ஓய்வெடுக்குமாறு வற்புறுத்த முன்வர முடியுமா? தமது இறுதிப் படுக்கைக்குச் செல்லும்வரை பெரியார் ஓய்வெடுக்காமல் தமிழினத் தொண்டு செய்து கொண்டிருந்தார் என்பதை அனைத்துலகும் அறியும்.

## பத்திரிகை நடத்துவதில் உள்ள கஷ்டம்

நான்கு ஆண்டுகள் கழிந்து அய்ந்தாம் ஆண்டு தொடங்கியபோது ஓர் அறிவிப்பைக் 'குடிஅர'சில் பெரியார் வெளியிட்டார்.

"பத்திரிகை நடத்துவதில் உள்ள கஷ்டம் – அதுவும் ஒரு குறிப்பிட்ட இலட்சியத்தின் பிரசாரத்திற்காக நடத்தப்படும் பத்திரிகைகளுக்கு இருக்கும் கஷ்டம் அதை அனுபவித்தவர் களுக்குத்தான் தெரியும்!" என்று உணர்த்த முனைந்த பெரியார், "சுயமரியாதை இயக்க ஸ்தாபனமானது சென்னையில் பொது ஸ்தாபனப் பதிவுச் சட்டப்படி பதிவு செய்யப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து வரப்படுகின்றன. அது முடிந்தவுடன், 'குடிஅரசு', 'ரிவோல்ட்', ஆகிய வாரப்பத்திரிகை களும், 'பகுத்தறிவு' என்னும் மாதப் பத்திரிகையும் சுயமரியாதைச் 'சங்கச் சார்பாகவே பிரசுரிக்கப்படும். 'திராவிடன்' தினசரிப் பத்திரிகையும் அதன் நிர்வாகப் பொறுப்பும் நம்மிடம் இருக்கும்வரை இச்சங்கச் சார்பாகவே பதிப்பித்து வரப்படும்" என்ற ஒரு முகாமையான அறிவிப்பைச் செய்தார்.

தொடர்ந்து, "செல்வாக்குள்ள கொள்கைகளுக்கு எதிராகவும் ஆதிக்கமும் அதிகாரமும் சூழ்ச்சியுமுள்ள சமூகங்களுக்கு விரோதமாகவும் ஒரு பத்திரிகையைத் துவக்கினால் அதில் எவ்வளவு கஷ்டம் இருக்கும் என்பதை யோசித்தால் தெரியும். அத்தோடு மாத்திரமில்லாமல் சந்தாவும் வெகு சுருக்கமான தொகை. அதாவது வருஷத்திற்கு மூன்றே ரூபாய் 20 பக்கமுள்ள பத்திரிகையின் காகிதக் கிரயம், அச்சுக் கூலி, ஸ்டாம்பு ஆகியவைகளுக்குச் சந்தாத் தொகை போதும் – போதாத நிலையில் இருக்கின்றது. இதில் நிலுவை பாக்கி, வீண்செலவு ஆகியவைகளுக்கும் ஆசிரியக் கூட்டத்திற்கும், கணக்கு நிர்வாகத்திற்கும் கைப்பொறுப்பு என்றுதான் சொல்ல வேண்டும்." என்று விளக்கினார் (குடியரசு: 16–6–1929).

அடுத்து அக்கட்டுரையில்,

"இதுவரை – அதாவது கஷ்டமும் நஷ்டமும் உள்ளவரை நாம் நமது சொந்தப் பொறுப்பில் நடத்திவந்து, இப்போது இனிமேல் எந்த விதத்திலும் இதற்கு நட்டம் வராது என்பதோடு, கவனித்து நடத்தினால் சகல லாபமும் கிடைக்கும் என்கிற நிலையில் அதுவும் 9000 பிரதிகளுக்கு மேல் வெளியாகத் தக்க நிலைமையில் அதை ஒரு பொது ஸ்தாபனத்தின் பொறுப்பில் விடுவதைப் பற்றி யாரும் எவ்விதத் தப்பபிப்பிராயத்தையோ பலக் குறைவையோ கற்பிக்க முடியாதென்றே சொல்லுவோம். இப்படி நாம் ஒப்பிவிட்டதற்கு முக்கிய காரணம், சுயமரியாதை இயக்கம் ஒரு தனிப்பட்ட மனிதனுடைய இயக்கமாக இருக்கக் கூடாது என்கின்ற எண்ணமே தவிர வேறில்லை."

என்று பெரியார் அறிவித்தார். ஆண்டு உறுப்பினர்களே 9000-க்கு மேல் இருந்தனர் என்றால், அதைப் படித்தவர்கள் எத்தனை ஆயிரம்பேர் இருந்திருப்பார்கள் என்பதை நம்மால் கற்பனை செய்ய முடியும்.

## மலேசியா – சிங்கப்பூர்

இந்த அளவிற்குக் 'குடிஅர'சையும் இயக்கத்தையும் பேணி வளர்த்ததில் பெரியாருக்குப் பெருந்துணை நின்று நல்ல பங்காற்றிய பெருமை மலேசியா-சிங்கப்பூர்த் தமிழர்களுக்கு உண்டு. பர்மா இலங்கை போன்ற நாடுகளில் இருந்த தமிழர்களும் தன்மான இயக்கத்தை ஆர்வத்தோடு வரவேற்றனர் என்றாலும் சிங்கை-மலைநாட்டுத் தமிழர்கள் காட்டிய பற்றின் அளவு புகழ்ச்சிக்கும் பாராட்டுக்கும் உரியது!

இரு நாட்டவரும் பெரியாரையும் அவரின் துணைவியாரையும் தத்தம் நாட்டிற்கு அழைக்க, இருவரும் 1929-டிசம்பரில் இயக்க முன்னோடிகளுடன் நாகையிலிருந்து கப்பற் பயணம் செய்தனர். பினாங்குத் துறைமுகத்தில் அவர்களுக்கு - பண்பாடற்ற தன்னலக்காரர்களின் சூழ்ச்சித் திட்டங்களை வென்று - அய்ம்பதினாயிரம் மக்கள் கொடுத்த வரவேற்பின் அருமை குறித்துப் பினாங்குத் தாளிகைகளே வியந்து பாராட்டின!

மலாயாவில் வாழ்ந்த தமிழ்க்குடி மக்களால் பெரியாருக்கும் அவரது குழுவிற்கும் பல ஊர்களில் உயர்ந்த முறையில் வரவேற்பு விருந்துகள் அளிக்கப்பட்டன. காலையில் - நடுப்பகலில் - மாலையில் - நள்ளிரவில் என்று, வெவ்வேறு ஊர்களில் ஏற்பாடு செய்யப்பட்ட பல நிகழ்ச்சிகளில் பெரியார் பங்கேற்றார். அவரின் உணர்ச்சிப் பொழிவுகளை - எழுச்சிக் கருத்துகளை பகுத்தறிவு வீச்சுகளைத் தமிழர்கள் மாந்தி மாந்தி மயங்கினர்! ஈப்போவில் தமிழர் சீர்திருத்த மாநாட்டினைத் திறந்து வைத்துப் பெரியார் பேருரை நிகழ்த்தினார்.

தொடர்ந்து சிங்கப்பூர்த் தமிழர்களின் அழைப்பை ஏற்று, அங்கு சென்ற பெரியார் இந்தியச் சங்க மாநாட்டிலும் நகரமண்டப நிகழ்ச்சியிலும் இன்னும் பல பொதுக்கூட்டங்களிலும் சிந்தனையுரைகள் ஆற்றினார். அவரின் ஆழமான மொழிகள் அனைவரின் இசைவையும் வரவேற்பையும் பெற்றன.

ஒரு மாதம் முழுக்க அந்நாடுகளில் தங்கியிருந்த பெரியாரைக் கண்டு பேசுவதற்கெனத் தனித்தனியே முன்னணிப் பெருமக்கள் வந்தார்கள். செய்தியாளர்கள் பெரியாரைச் சந்தித்து, சுயமரியாதை

இயக்கம் பற்றிய செய்திகளை வினா-விடை முறை மூலம் பெற்றுச் சென்று தாளிகைகளில் வெளியிட்டனர்.

இவற்றிற்கெல்லாம் மேலாக இருநாட்டுத் தமிழர்களும் புரிந்த அரும்பெருஞ் செயல், இயக்கத்தின் மாற்றுப் பெயரான 'குடிஅரசு'க்கு ஆண்டு உறுப்பினர் திரட்டிக் கொடுத்ததுதான். சிங்கப்பூர் - 'தமிழ்முரசு' ஆசிரியர் சாரங்கபாணி மட்டுமே 1500 இதழ்களுக்கு ஆண்டுக் கட்டணம் பெற்றுக் கொடுத்துதவினார் என்றால் இயக்கத்தின்மீது அயலகத் தமிழ் மக்கள் கொண்டிருந்த 'ஆழமான பற்றையும் அசையாத நம்பிக்கையையும் நம்மால் விளங்கிக் கொள்ள முடிகிறது.

இந்த நிலவரம் பெரியாருடன் சென்றிருந்த நாகம்மையாருக்கு விம்மிதமும் பெருமிதமும் ஊட்டியது. ஆதலால்தான், தாயகம் திரும்பும் வேளையில் தம்மிடம், "தங்களுக்கு விருப்பமான - தேவையான - மலாய் நாட்டுப் பொருள்கள் எவை?" என்று கேட்ட தமிழர்களிடம்,

> "நீங்களெல்லாம் இங்கே சுயமரியாதை இயக்கத்தைப் பாடுபட்டுப் பரப்பியிருக்கிறீர்களே, அதுவே எனக்கு அருமையான பொருள்" என்று கூறிப் பாராட்டினார் நாகம்மையார். பெரியாரோ 'குடிஅரசு' இதழிலேயே சாரங்கபாணி, ஈப்போ அய்யாறு, சுவாமி அற்புதானந்தர், தாமோதரம் ஆகிய முன்னோடிகள், இன்னும் நிகழ்ச்சிகளைப் பெரும் பொருட்செலவில் ஏற்பாடு செய்திருந்த பெருமக்கள் முதலியவர்களின் பெயர்களைக் குறிப்பிட்டே தம் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்தார் (குடிஅரசு: 9-2-1930).

மலாய்த் தமிழர்கள் பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தின்மீது வைத்த பற்றையும் அதனால் அவர்களின் வாழ்க்கை முறையில் ஏற்பட்ட பெருமாற்றத்தையும் குறித்து, சீனப் பேராசிரியர் சி.எஸ்.ஸீ. அவர்கள் 60 ஆண்டுகளுக்கு முன்பு வெளியிட்ட கருத்து இங்கே நினைவுகூரத் தக்கது.

> "கடந்த பத்து ஆண்டுகளாக மலாய் நாட்டில் வாழும் தமிழர்கள் அதிதீவிர முன்னேற்றம் அடைந்திருப்பதைக் கண்டு முதலில் வியப்படைந்தேன். பிறகு அதற்குக் காரணம் பெரியார்தான் என்று அறிந்தேன்; மகிழ்ந்தேன். 1929இல் பெரியார் மலாய் நாட்டின் சுற்றுப் பயணஞ் செய்து, மலாய்த் தமிழர்களைத் தட்டி எழுப்பினார் என்பதையும், அவர் அப்போது ஆற்றிய சீர்திருத்த உரைகளால், மலாய்த் தமிழர்கள் பழைய பழக்க வழக்கங்களைக்

குழி தோண்டிப் புதைத்துவிட்டனர் என்பதையும், அவருடைய அரிய தொண்டின் விளைவாக மலாய்த் தமிழர்கள் கீழ்நாட்டின் சிறப்பை நிலைநாட்ட முன் வந்திருக்கிறார்கள் என்பதையும் நான் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்."

தன்மான இயக்கத்தில் மலாய்த் தமிழர்கள் காட்டிய ஈடுபாட்டிற்குச் சீனப்பேராசிரியரின் கூற்று நல்ல சான்றாய் நிற்கிறது!

## சுயமரியாதை இயக்கமே குடிஅரசு இயக்கம்

பெரியார் என்றால் சுயமரியாதை! சுயமரியாதை இயக்கமே 'குடிஅரசு' இயக்கம்; 'குடிஅரசு' இயக்கத்தின் விளைவுதான் தமிழின மான மீட்பு நிகழ்வு. இப்படியொரு வரலாறு படைக்கப்பட்டுவிட்டது இங்கே!

'குடிஅர'சின் அருமை பற்றித் தமிழ் ஆர்வலர் டி.கே. சிதம்பரநாதர் மிகப் பொருத்தமாய்க் குறிப்பிட்டுள்ளார்.

> **"சுயமரியாதை உணர்ச்சியைத் தமிழ்நாட்டில் துவக்கிவிட்டவர் நாயக்கர் ஆவார். பார்ப்பனரல்லாதார் இயக்கத்திற்குப் புத்துயிர் அளித்த பெருமையையும் அவருக்கே உரித்தானது. இன்று, இம்மாகாணம் மட்டுமல்ல, இந்தியா முழுவதும் நமது இயக்கம் கொண்டாடப் படுகிறது. அம்மகத்தான பெருமைக்கு அருகர் நாயக்கரே. 'குடிஅர'சின் பெருமை மிக ஆகும். ஆடாததையெல்லாம் ஆட்டி வைத்த பெருமை 'குடிஅரசு'க்கே உரித்தானதாகும். இதற்குக் காரணம் பெரியாரின் சொல்லும் எழுத்தும் வன்மை கொண்டதாக இருந்ததே அவருடைய 'குடிஅரசு' பத்திரிகையில் மக்கள் மனத்தைக் கவரத்தக்க அளவு கடந்த சக்தி இருப்பதற்குக் காரணம் தன் உள்ளக்கிடக்கையில் உள்ளதை அப்படியே எடுத்துச் சொல்வதுதான். உண்மையிலேயே எத்தகைய கல்வியாளரும் கோடிக்கணக்கான ஜனசமூகமும் திகைக்கத்தக்க பத்திரிகையை, இவர் நமக்குக் கொடுத்திருக்கிறார்!"**

இதைவிடச் சிறந்த சான்றிதழ் 'குடிஅரசு'க்கு வேறு என்ன இருக்க முடியும்?

ஆனால் ஆட்சியாளர் எனப்படுவோரின் போக்கு எப்போதும் ஒன்று போல இருப்பதில்லை. இது உலக வரலாறு நமக்குக் கற்றுத் தரும் பாடம். சமனியக் கொள்கையின் அடிப்படையில் வீரநடைபோட்டுக் கொண்டிருந்தது 'குடிஅரசு' இயக்கம். அதை அடக்கி வைக்க வேண்டுமென 'இரட்டை ஆட்சி' முறையில் அரசாள்வோர் திட்டமிட்டனர்.

வாய்ப்பாக 1933-டிசம்பரில் பெரியார் 'குடிஅரசி'ல், "இன்றைய ஆட்சிமுறை ஏன் ஒழிய வேண்டும்?" என்னும் தலைப்பில் ஆசிரியவுரை யொன்று எழுதினார். சமனியக் கொள்கைதான் கட்டுரையின் கரு, வாளாவிருப்பார்களா, வல்லாட்சி விரும்பிகள்? அக்கட்டுரை அரச வெறுப்புக் குற்றங்கொண்டது என்று கூறிப் பெரியாரைக் கைது செய்து சிறைப்படுத்தியது அரசு. 'குடிஅரசி'ன் பதிப்பாளர் என்ற முறையில் பெரியாரின் தங்கை கண்ணம்மாள் அவர்களையும் வெள்ளையர் ஆட்சி கைது செய்தது. எதிர்வழக்காடும் வழக்கம் பெரியாரிடம் கிடையாது.

பெரியாருக்கு ஒன்பது மாதச் சிறை வாழ்வு; ஒறுப்புத் தொகை 300 ரூபாய் செலுத்தாவிட்டால் மேலுமொரு மாதம் கடுங்காவல். கண்ணம்மையாருக்கு ஆறு மாதச் சிறை; 300 ரூபாய் ஒறுப்புத் தொகையைக் கட்டாவிடில் மேலும் ஒரு மாதக் கடுங்காவல். இவ்வாறு தீர்ப்பளிக்கப்பட்டுவிட்டது!

ஆங்கிலேய அடக்குமுறையாளர்கள் 'குடிஅரசு' - இதழுக்காகவும் அச்சகத்திற்காகவும் பிணையத் தொகை கட்டுமாறு பணிக்கும் முறையைக் கையாண்டார்கள்.

கடுமையான நெருக்கடிச் சூழ்நிலைக்கு இலக்காகிவிட்ட பெரியார் பலவற்றையும் சிந்தித்துப் பார்த்து, திட்டமொன்று வரைந்தார். அதன்படி 'குடிஅர'சுக்கு ஓய்வளிக்கப்பட்டது - மீண்டும் தோன்றி முனைப்புடன் தொண்டு செய்வதற்காக. ஆனால் அதன் இடத்தை நிரப்பும் வகையில் 'புரட்சி' தோற்றமெடுத்தது.

******

# பெரியார் பொறுப்பேற்ற 'திராவிடன்' இதழ்

'நீதிக்கட்சி' என்று அழைக்கப்பட்ட தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தின் சார்பாக நடைபெற்று வந்த 'திராவிடன்' - நாளிதழ் எதிர் பார்த்த நிலைக்குப் பலன் தரவில்லை. அக்கட்சியின் பொறுப்பாளர்கள் பார்ப்பனரல்லார் என்ற முறையில் பெரியாரோடு நல்லெண்ணங் காட்டிப் பழகிக் கொண்டிருந்த கட்டம் அது. அந்நிலையில், 'குடிஅரசு'-கிழமை இதழை அருமையான பயன்களை ஈட்டும் வண்ணம் நடத்தி வந்த பெரியாரிடம் உரிமையுணர்வுடன் ஒரு வேண்டுகோள் வைத்தனர். 'நீதிக்கட்சி'யின் 'திராவிடன்' - நாளிதழின் பொறுப்பினைப் பெரியார் ஏற்றுத் திறம்பட அதை நடத்த வேண்டும் என்பதுதான் அவர்களின் கோரிக்கை.

'திராவிடன்' - இதழ் பற்றி பெரியார் 22-11-1925ஆம் நாளிட்ட 'குடிஅரசு' -கிழமையேட்டில் கரவில்லாமல் தம் கருத்தினை ஏற்கனவே வெளியிட்டிருந்தார்.

> "தமிழ்நாட்டில் தற்காலம் உலவிவரும் தமிழ்த் தினசரிப் பத்திரிக்கைகள் மூன்று அதாவது 'சுதேசமித்திரன்', 'திராவிடன்', 'சுயராஜ்யா'ஆகிய இவைகளே. இவற்றில் 'சுதேசமித்திரன்' முதலில் தோன்றியது. இதன் முக்கிய கொள்கை அரசாங்கத்தினிடமிருந்து பதவிகளும் உத்தியோகங்களும் மக்கள் அடையக் கிளர்ச்சி செய்வதா யிருந்தது. இதன்படி, பதவிகளும் உத்தியோகங்களும் கிடைக்கக் கிடைக்க, அவை யெல்லாம் பிராமணர்களுக்கே கிடைக்கும்படியாகவும் பிராமணர்கள் தாம் உயர்ந்தவர்கள் என்றும், மற்றும் பிராமண மதம் ஆக்கம் பெறவும் உழைத்து வந்தது. இம்மட்டோடல்லாமல், வர வர பிராமணரல்லாதாருக்கு உயர்ந்த உத்தியோகங்களும் பதவிகளும் அந்தஸ்துகளும் கீர்த்திகளும் உண்டாவதைத் தடுத்துக் கொண்டேயும் வந்தது.
>
> இச்சூழ்ச்சி வெகுகாலமாய் பிராமணரல்லாதாருக்குத் தெரியாமல் இருந்து விட்டதால் சகல பதவிகளும் அரசாங்க உத்தியோகங்களும் பிராமணர்களுக்கே கிடைத்து, அரசாங்கமே பிராமண மயமாகிப் போய் விட்டதால் பிராமணரல்லாதார் தாழ்த்தப்பட்டது. அப்போது படித்திருந்த பிராமணரல்லாதார் சிலர் தாங்கள் ஏன் தாழ்த்தப்பட்டுக் கிடக்கிறோம் என்று யோசனை செய்து பார்த்ததில், பிராமணப் பத்திரிகைகளும்

கட்டுப்பாடான பிராமண சூழ்ச்சிகளுமே காரணம் என்று கண்டுபிடித்து, தாங்களும் முன்னேறுவதற்குத் தங்களுக்குள் ஒரு கட்டுப்பாடு இருக்க வேண்டும் என்றும், தங்களுக்கும் பிரச்சாரத்திற்கு ஒரு பத்திரிக்கை வேண்டும் என்றும் கருதி, ஒரு சங்கத்தையும் 'திராவிடன்', 'ஜஸ்டிஸ்' என்கிற பத்திரிக்கை களையும் ஏற்படுத்தினார்கள்.

இப்பத்திரிகைகளும் சங்கமும் சகல போக்கியங்களையும் தாங்களே ஏக போகமாய் அனுபவித்து வந்த 'சுதேசமித்திரன்' போன்ற பத்திரிக்கைக்கும் அதன் கூட்டத்தாருக்கும் போட்டியாய்க் கண்டதால் இவற்றைச் செல்வாக்கில்லாமலடித்து ஒழிக்கப் பல தந்திரங்களும் செய்ததினால், இத்தந்திரங்களுக்குத் தாக்குப் பிடிக்க, 'சுதேசமித்திரன்' போலவும் அதன் கூட்டத்தார் போலவும், 'திராவிட'னும் அதன் கூட்டத்தாரும் அரசாங்கத்தைத் தழுவ நேரிட்டது. என்ன செய்தும் 'சுதேசமித்திரன்' கூட்டத்திற்குள்ள தந்திரசக்தி 'திராவிடன்' கூட்டத்திற் கில்லாததாலும் பிராமணரல்லாதாரில் சிலருக்குத் தங்கள் தனிப்பட்ட சுயநலத்திற்கும் கீர்த்திக்கும் சுதேசமித்திரன் கூட்டம் இடம் கொடுத்ததாலும், இவர்களும் சேர்ந்து எதிர்ப்பிரச்சாரம் செய்ததாலும், 'திராவிட'னுக்குப் பாமர ஜனங்கள் உண்மையை உணரும்படிச் செய்யவும், பாமர ஜனங்களிடத்தில் செல்வாக்குப் பெறவும் முடியாமற் போய் விட்டதால், இது தக்க பலனைத் தென்னிந்திய மக்களுக்கு அளிக்க கூடியதாய் இல்லாமல் இருக்கிறது."

இதழாளர் பெரியாருக்குத் 'திராவிட'னின் நிலைபற்றி நன்றாகத் தெரியும். "ஜஸ்டிஸ், திராவிடன் பத்திரிகைகள் தென்னிந்திய நலவுரிமைச் சங்கச் சார்பாகச் சுமார் 12 வருஷத்திற்கு மேலாகவே நடந்து வருகின்றன. அதற்கு இந்த மாகாணத்திலுள்ள பெரிய பெரிய பிரபுக்களும் ராஜாக்களும் ஜமீன்தாரர்களும் மற்றும் 100–க்கு 97 வீதம் உள்ள பொது ஜனங்களும் ஆதரித்தும், பதினாயிரக் கணக்கான பணங் கொடுத்தும் வந்திருக்கிறார்கள். அச்சங்கத்தார் அதிகார ஆதிக்கம் பெற்ற காலத்திலும் அதாவது மந்திரிகளாக இருந்த காலத்திலும் மாதம் 1–க்கு 3000 ரூபா வீதம் உதவி வந்தார்கள். இந்த மாதிரி உதவி செய்ததன் மூலம் சுமார் 2 லட்ச ரூபாய்கள் வரை இப்பத்திரிகைகளுக்குப் பணவுதவி கிடைத்தும் இன்றைக்கும் தன் காலில் நிற்க முடியாமல், மாதம் 2000 ரூபா போல் நஷ்டத்தில் நடைபெற வேண்டியிருக்கிறது" என்று பெரியாரே பின்னர் ஒரு முறை எழுதினார். ('குடி அரசு': 16–6–1929).

நிலவரமெல்லாம் தெரிந்திருந்தாலும் பெரியார் நீதிக்கட்சியினரின் வேண்டலுக்குக் கட்டுப்பட்டார். அது அவரின் இயல்பு! தொண்டு செய்தே பழக்கப்பட்டுவிட்ட அவர் பிறரின் சுமையினை வாங்கித் தலையில் தாங்கிக் கொள்ளத் தயக்கம் காட்டவில்லை. ஆனால் 'திராவிடன்' பொறுப்பை ஏற்றால் தம் கொள்கைப்படி - விருப்பப்படியே அதை நடத்துவதற்கு 'நீதிக்கட்சி'ப் பொறுப்பாளர்கள் இசைய வேண்டும் என்று கண்டிப்புக் காட்டினார்.

அதன் தொடர்பான செய்திகள் சுவையானவை. முதலில் 'திராவிடன்' பத்திரிகையின் நிர்வாகத்தைத் தாம் ஏற்றுக் கொள்ளுவதா என்பது பற்றித் தமிழ் மக்களின் கருத்தைக் 'குடிஅர'சின் வாயிலாக விரும்பிக் கேட்டார் பெரியார். நாட்டின் பல பகுதிகளிலிருந்து 500க்கும் மேற்பட்ட பெருமக்கள் 'திராவிட'னைப் பெரியார் எடுத்துக் கொள்ளுமாறு ஊக்குவித்தும் தாங்களும் தங்களாலியன்றவரை உதவி செய்ய முன் வருவதாக உறுதியளித்தும் மடலிட்டார்கள். அனைத்தையும் கருதி, 'திராவிடன்' பொறுப்பினை ஏற்றுக் கொள்ளத் தீர்மானித்தார்.

## சென்னைக்குச் செல்கின்றோம்

அப்போது அவர் 'குடிஅர'சில் வெளியிட்ட **"சென்னைக்குச் செல்கின்றோம்"** என்ற அறிக்கையின் மூலம் தம் சுயமரியாதைக் கொள்கையில் தமக்கிருக்கும் விடாப்பிடியை ஒளிவில்லாமல் தெளிவாக்கினார்.

> **"திராவிடன் கொள்கைகள் 'குடிஅரசு'க் கொள்கைப்படியே தான் இருக்கும். 'குடிஅர'சின் கொள்கைகள் யாவரும் அறிந்திருப்பார் களேன்றே நினைக்கிறோம். அதாவது: பார்ப்பனரல்லாதாரை அழுத்திப் பார்ப்பன ஆதிக்கத்தை நிலை நிறுத்த, பார்ப்பனர்களுக்கு நமது நாட்டில் ஆயுதங்களாக இருக்கும் அரசியல் புரட்டையும் மதப் புரட்டையும் அடியோடு அழிப்பதுடன், பார்ப்பனியத்தையும் ஒழித்து மக்களுக்குச் சுயமரியாதை உண்டாகும்படிச் செய்வது என்பதுதான். இதற்குத் 'திராவிடன்' சொந்தக்காரர்கள் சம்மதிக்காதபோது நாம் விலகி விடுவோம் என்பது உறுதி. இது சமயம் இந்தக் கொள்கையை ஒப்புக் கோள்ளவோ ஆதரிக்கவோ ஒரு குட்டித் தலையாவது ஒரு குட்டிப் பத்திரிகையாவது இல்லை. ஆனாலும் அதற்காக நாம் பயப்படவில்ல. நம்மிடம் 'திராவிடன்' ஒப்புவிக்கப்பட்டால் இக்கொள்கைகளுடன்தான் அது நடத்தப்பெறும் என்பதாக இப்போதே சொல்லி விடுகிறோம்.........**

மற்றொரு விஷயத்தையும் அறிய வேண்டும். அதாவது 'திராவிட'னும் 'குடிஅரசு'ம் பார்ப்பனர்கள் கையிலிருக்கும் உத்தியோகங்களையும் பதவிகளையும் பிடுங்கிப் பார்ப்பனரல்லாத ஜமீன்தாரர்களும் மிராஸ்தாரர்களும் வியாபாரிகளும் லேவாதேவிக்காரருமான பணக்காரர்களுக்கும் ஆங்கிலம் படித்த வக்கீல்களுக்கும் கொடுப்பதற்காக நடத்தப்படுகிறது என்று நினைப்பார்களேயானால் அவர்கள் கண்டிப்பாய் ஏமாந்து போவார்கள். வெள்ளைக்கார ஆதிக்கம் ஒழிவதாயிருந்தால் நேரே அது ஏழை மக்களான தொழிலாளர்கள் கைக்கு வருவது தான் நன்மையே அல்லாமல், ஏழை மக்களுக்குப் பணக்காரர்களும் பார்ப்பனர்களும் வக்கீல்களும் தர்மகர்த்தாக்களாகவும் தரகர்களாகவும் இருக்கக் கூடாது என்றே சொல்லுவோம். இந்தக் கொள்கையின் பேரில்தான் பணக்காரர்கள் இப்பத்திரிகைக்கு உதவி செய்ய வேண்டும் என்பதையும் இப்போதே வெளிப்படையாய்ச் சொல்லி விடுகிறோம்.

அதுபோலவே மதஇயலில் நமக்கு உதவி செய்பவர்களும், 'இந்து மதம்' என்பதான பார்ப்பன மதத்துடன் போர் புரிந்து வெற்றி ஏற்படுமானால் சைவசமயத்திற்கு அனுகூலமாகும் என்றோ, வைணவ சமயத்திற்கு அனுகூலமாகுமென்றோ, கிறிஸ்தவ மக்களுக்கு அனுகூலமாகுமென்றோ, தாத்துவ மதத்திற்கு அனுகூலமாகுமென்றோ ஒவ்வொருவரும் தன் தன் சுயமத நலத்திற்கு என்று நினைத்துக் கொண்டார்களானால் அவர்களும் ஏமாற்ற மடைவார்கள் என்பதையும் இப்போதே சொல்லி விடுகிறோம்"

என்று அறிவிப்புச் செய்து விட்டே சென்னைக்குப் பெரியார் சென்றார்.

அந்த அறிக்கையைக் கண்ணுற்ற பெருமக்கள் சிலர், தாங்கள் முற்றிலும் அறிக்கையை ஒப்புக் கொள்ளுவதாகவும் அக்கட்டாயப் பாட்டுக்குக் கட்டுப்பட்டே தாங்கள் உதவி செய்து வருவதாகவும் உறுதி யளித்து மடலனுப்பினார்கள். அந்நிலையில் பராமரிப்புக் கணக்குகள் போன்றவை தென்னிந்திய நல உரிமை சங்கத்திலிருந்து பெரியாருக்குப் பிரித்துக் கொடுக்கப்பட்டு விட்டன. இவற்றை யெல்லாம் நினைவூட்டிப் பெரியார் வெளியிட்ட அறிவிப்பில்,

"இது சமயம் நமது நாட்டிலுள்ள சற்றேறக்குறைய எல்லாப் பத்திரிகைகளும் பார்ப்பனத் தலைமையின் கீழ்தான்

நடத்தப்படுகின்றன. பார்ப்பனர்களேதான் கொள்கைகளை உற்பத்தி செய்கிறார்கள். அதுவும் பார்ப்பனரல்லாத சமூகத்திற்குக் கெடுதி பயக்கத்தக்கதாகவே பார்த்துக் கண்டுபிடிக்கிறார்கள். அதை மீற யாருக்கும் தைரியமில்லை. ஏனெனில் அவர்களை விரோதித்துக் கொண்டால் எந்தப் பத்திரிகையையும் நடத்த முடியாதபடி செய்யத் தகுந்த அளவு செல்வாக்கு பார்ப்பனர்களுக்கு இருக்கின்றது" என்றும், "யோசித்துப் பார்ப்பவர்களுக்குத் 'திராவிட'னின் அவசியமும் அருமையும் தெரியாமல் போகாது. ஆதலால் பார்ப்பனரல்லாதார் சுயமரியாதையிலும் முன்னேற்றத்திலும் அபிமானமும் கருணையும் உள்ள கனவான்கள் 'திராவிட'னை முன்னிலும் அதிகமாக ஆதரிக்க முன்வர வேண்டுமாக வேண்டிக் கொள்கின்றோம். தக்க அளவு புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொடுக்க வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்" என்றும் கருத்தாழமிக்க சொற்களைப் பெய்து எழுதினார்.

அவருக்குத் 'திராவிடன்'- நாளிதழ் மேம்பாட்டில் எத்தகைய ஆர்வமும் அக்கறையும் முனைப்பும் இருந்தன என்பதை, பின்னொரு முறை சுயமரியாதை இயக்க நிறுவனம் சென்னையில் பொது ஸ்தாபனப் பதிவுச் சட்ட'த்தின்படி பதிவு செய்யப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருவதாயும் திராவிடன் - தினசரி சுயமரியாதை நிறுவனத்தின் சார்பாகப் பதிப்பித்து வரப்படுமென்றும் அறிவித்ததிலிருந்து நமக்கு விளங்குகிறது.

இதழின் மேற்பார்வைப் பொறுப்பு என்பதுடன் மட்டுமின்றி, ஜே.எஸ். கண்ணப்பர் அவர்களுடன் இணைந்து ஆசிரியப் பொறுப்பிலும் பெரியார் பங்கு கொண்டார். அவ்வகையில் அவரின் கருத்துகள் 'திராவிட'னில் வெளிவந்தன.

"இரயில்வேக்காரர்கள் திடீரென்று மூன்று - நான்காயிரம் பேர்களை வேலையிலிருந்து விலக்க வேண்டும் என்று சொல்லுகின்றார்கள். அது உண்மையான சிக்கனத்தை முன்னிட்டாவது அல்லது இலாபம் கட்டவில்லை என்பதற்காகவது அல்லது ஜனங்களின் நன்மைக்காக இரயில் சார்ஜைக் குறைப்பதற்கென்றாவது இத்திட்டத்தை அனுசரிப் பதானால் எனக்குச் சந்தோஷமே. அப்படிக்கில்லாமல், சீமையில் உள்ளவர்களுக்கு வேலை கொடுப்பதற்காக, அங்கிருந்து இயந்திரங்கள் தருவிக்கவும், வெள்ளைக்காரர்களுக்கும் அவர்கள் சார்பாருக்கும் வேலை கொடுப்பதற்கும் இம்மாதிரி சூழ்ச்சி செய்கிறார்கள். தென்னிந்திய இரயில்வேக்காரர் மற்ற எல்லா

*இரயில்வேக்காரர்களை விட அதிகக் கொள்ளை அடிக்கின்றார்கள். இந்த நிலைமையில் இவர்கள் சிக்கனமென்பது இந்தியர்கள் வாயில் மண்ணைப்போட்டு வெள்ளைக்காரர்கள் வயிறு வெடிக்கச் செய்யும் கொடுமையே யாகும்." (திராவிடன்: 30–7–1928).*

பெரியார் 'திராவிடன்' இதழின் பொறுப்பினை ஏற்றுக் கொள்ள இசைந்தபோது வலியுறுத்தியபடியே, சுயமரியாதை இயக்கக் கொள்கைகளையும் இயக்கச் செய்திகளையும் 'திராவிடன்' இதழில் இடம் பெறச் செய்யத் துணிந்ததில் வியப்பில்லை.

## 'திராவிடன்' இதழைப் பற்றி குடிஅரசு

'திராவிடன்' இதழின் உறுதியான நிலைபற்றிப் பெரியாரவர்கள் 24-6-1928ஆம் நாளிட்ட 'குடிஅரசு' கிழமை இதழிலே இப்படிக் குறிப்பிட்டுள்ளார்.

*"ஜஸ்டிஸ் கட்சி என்பதையும் 'திராவிடன்' என்பதையும் ஒரு காலத்தில் மக்களின் அறியாமையை உபயோகித்துக் கொண்டு, பல அயோக்கியர்கள் பொது மக்கள் அவற்றின் மீது வெறுப்படையுமாறு செய்து, அதனால் வயிறு வளர்த்து வந்தார்கள். ஆனால் அது எதற்கும் அஞ்சாமல் உறுதியுடன் நின்று உழைத்து வந்ததின் பயனாக இன்று மக்கள் உண்மை உணரும்படி செய்து, புரட்டர்களின் யோக்கியதையையும் வெளியாக்கி, அவர்களை எல்லாம் மூலையில் உட்கார வைத்து விட்டது என்பதை யார் மறுக்க முடியும்? எனவே ஒரு காலத்தில் பாமர மக்கள் ஏமாற்றப்பட்டாலும் ஒரு காலத்தில் உண்மை அறிந்தே தீருவார்கள் என்பது நமது உறுதி."*

'திராவிட'னுக்குக் கிடைத்த அரிய நற்சான்று இது!

*"சுயமரியாதை இயக்கத்தின் கொள்கைகளைச் சரியாய்த் தெரியாமலும் சுயமரியாதைத் தலைவர்களைக் குறை கூறுவது வழக்கமாய் இருந்து வருகிறது. இதைப் பொருட்படுத்தப் போவதில்லை.*

*சுயமரியாதை இயக்கமானது பரந்த கொள்கைகளை உடையது. ஒருவரால் உண்டாக்கப்பட்டாலும் பரந்த மக்களிடையே பரவிவிட்டபடியால் அசைக்க முடியாத நிலைமைக்கு வந்துவிட்டது. மக்களே அதைக் கவனித்துக் கொள்வார்கள். சுயமரியாதை இயக்கத்தில் தீவிரப் பற்றுள்ள ஒருவருடைய*

குடும்பத்தில் மற்றவர்கள் வேறு மாதிரியாக இருந்தால், அவர் ஒருவர் மட்டும் என்ன செய்ய முடியும்? அவர்களைத் திருப்ப முடியாவிட்டால் அவர்களை விட்டு விலக வேண்டும். இல்லையேல் அவர்களுடன் கலந்துதான் இருக்க நேரிடும். அதற்கு ஒரு குற்றமும் கூறக்கூடாது. படிப்படியாக வரவேண்டும்.

பழைய கால வழக்கங்களை அனுசரிப்பவர்களைத் திருப்பிக் கொண்டு வருவது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. எல்லோரும் ஒரே மாதிரியான கொள்கைகளை அனுஷ்டானத்தில் (நடைமுறையில்)' கொண்டு வரும் வரையில், மாறுதல்கள் இருந்தாலும், அதை ஒரு பெரிய விஷயமாகக் கொள்ளக் கூடாது." ('திராவிடன்': 5-9-1930)

பெரியாரின் மெய்யான அணுகுமுறை இதுதான். அவரின் உலகியல் அறிவும் நடைமுறைப் போக்கும் எவ்வளவு அருமை, பார்த்தீர்களா?

## பெரியாரின் மறுப்புரை

இங்கிலாந்து அரசின் சார்பில் இந்தியாவின் அரசியல் அமைப்பு எப்படி இருக்க வேண்டுமென்பது பற்றி இந்தியர்களின் கருத்துகளை அறியும் நோக்குடன் இங்கு வருகை தந்த சைமன் குழுவைப் புறக்கணிக்க வேண்டும் என்று பேசியவர்களுக்கு மறுப்புரைத்து, செங்கற்பட்டு மாநாட்டில் பெரியார் வழக்காடியதைத் 'திராவிடன்' வெளியிட்டது. அவர் பொழிவின் ஒரு பகுதி:

"சுயமரியாதைக்கு விரோதம் என்கிறார்கள். விடிந்தெழுந்திருந்தால் வெள்ளைக்காரன் முகத்தில் விழிக்கிறவர்கள் நீங்களே. அதிகாரிகளும் நீங்களே; அந்த ஆட்சிக்காக இருக்கிற சட்டசபையிலும் நீங்களே; அதை நடத்துவதற்கு ஒப்புக் கொண்டு, நடத்துவதற்குப் பாடுபடுகிறவர்களும் நீங்களே. இப்படியிருக்க, அந்த அரசாங்கத்துக்கு நம்முடைய இஷ்டங்களைச் சொல்லுவது சுயமரியாதை இல்லை என்று சொன்னால், ஒன்றுக்கொன்று உண்மை இருக்கிறதா? இப்படி இங்கு சொல்லிவிட்டு, கோர்ட்டில் சலாமிட்டு, 'துரையே' என்று சொல்லி ஒரு விண்ணப்பத்தைப் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். கவுன்சில்களிலும் இந்திய சட்டசபைகளிலும் மாகாண சட்டசபைகளிலும் உட்கார்ந்து, அரசாங்கத்தை நடத்துவதற்கு உதவியாக இருந்துவர அவர்களிடம் வாக்குக் கொடுத்து, 'நாங்கள் இப்போது போகிறோம்; நீங்கள் பிற்பாடு வாருங்கள்' என்று சொல்லுவதுதான் சுயமரியாதையோ?

*இப்போது பகிஷ்காரம் செய்ய வேண்டுமென்று சொல்லுகிறவர்களும் அங்கே போய், தங்கள் கொள்கைகளைச் சமர்ப்பிக்கவில்லையா? பெசண்ட் அம்மையார் காமன்வெல்த் பில் என்றும், நேரு கமிட்டியார் இந்தியாவின் பெயராலும் காங்கிரசின் பேராலும் ஒரு ரிப்போர்ட்டும் அளித்து, வருணாசிரம தர்மக்காரர்களும் சைமன் கமிஷன் முன்போய் தம் குறைகளைப் போக்க வேண்டிய முயற்சிகளும் செய்து கொண்டிருக்கிறார்கள். அப்படியே நாம் ஏன் வெளிப்படையாக நமது கஷ்டங்களைத் தெரிவிக்கக் கூடாது?" ('திராவிடன்': 20-2-1929).*

'திராவிடன்' இதழின் பொறுப்பினை ஏற்றுக் கொண்ட போது தாம் வெளிப்படுத்திய பாட்டாளி - உழைப்பாளி மக்கள் சார்புக் கொள்கையைப் பெரியார் தொடர்ந்து கடைப்பிடித்தார் என்பதை உறுதிப்படுத்தும் கருத்துரை 30-7-1928 ஆம் நாளைய 'திராவிடன்' இதழில் இடம் பெற்றது.

## தொழிலாளர்களுக்கு ஆதரவு

*"தொழிலாளர்கள் குறைகள் உண்மையானவை என்பது என் அபிப்பிராயம். இரயில்களில் நடந்த அபாயங்களுக்கெல்லாம் இரயில்வே அதிகாரிகளே காரணமாவார்கள். ஏனெனில் வேலைநிறுத்தம் செய்வதாக முன்னெச்சரிக்கை கொடுத்து விட்டுத்தான் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்திருக் கிறார்கள். அப்படி இருக்கும்போது இரயில்வேக்காரர்கள் எச்சரிக்கையாய் இருந்திருக்க வேண்டும். ஒரு வேலை நிறுத்தம் என்றால் என்னென்ன காரியங்கள் நேரும் என்பது அதிகாரிகள் அறிந்த விஷயந்தான். மேல்நாடுகளின் வேலைநிறுத்த அனுபவம் தெரிந்த வெள்ளைக்காரர்கள் அலட்சியமாய் இருந்தது மிகவும் கண்டிக்கத்தக்கது. கலகக்காரர்களும் காலிகளும் தொழிலாளர்களிடம் அனுதாபம் கொண்ட வாலிப இரத்த ஓட்டமுள்ளவர்களும் என்னென்ன செய்வார்கள் என்பது நாம் சுலபத்தில் முடிவு கட்டக் கூடியதல்ல. இதற்காகத் தொழிலாளர்கள் மீது குற்றம் சொல்லுவது அறியாமையே யாகும்.*

*144 போடுவதாலும் ஜெயிலில் வைப்பதாலும் என்ன காரியத்தைச் சாதிக்க முடியும்? 144-யை மீறுவது வெகு கஷ்டமான காரியமா என்று கேட்கிறேன். பலாத்காரமான காரியங்கள், யாரானாலும் சரி, நடந்ததாகக் காணப்படா*

திருந்தால் 144-யை மீறும்படியே கட்டளை இட்டிருப்பேன். ஜெயிலில் போடுவதால் யாரும் பயந்து விடமாட்டார்கள். ஜெயில் அனுபவம் நன்றாக எனக்குத் தெரியும். உள்ளே போய் வெளியில் வரும்போது உடல் எடை 10 இராத்தல் அதிகமாகவேதான் வருவேன். ஆதலால் அந்தப் பூச்சாண்டிக்கு யாரும் பயப்பட முடியாது. மரியாதையாகத் தொழிலாளர் கோரிக்கைகளுக்கு இணங்கியோ அல்லது அவர்களைச் சமாதானப்படுத்தியோ ஒரு முடிவுக்கு வருவதுதான் நலமாக முடியும்."

அக்காலத்தில் திருச்சியில் நிகழ்ந்த தேவேந்திரகுல மாநாட்டில் அய்யா தெரிவித்த கருத்துகளைத் 'திராவிடன்' முழுமையாக வெளியிட்டது. அவற்றுள் அறிவுரை கூறும் முறையில் பெரியார் துணிச்சலாகக் கூறிய சில கருத்துகள் இக்காலத்திற்கும் பொருத்தமானவை.

## முக்கிய குறிப்பு

"நமது பத்திரிகை" என்னும் தலைப்பின் கீழ் 23-12-'28 ஆம் நாளிட்ட 'குடிஅரசி'ல் முக்கிய குறிப்பு என்று இடம் பெற்ற அறிக்கை நமக்குச் சிலவற்றைப் புலப்படுத்த வல்லது.

"குடிஅரசுப் பத்திரிகையானது அபிமானிகளின் பெருக்கத்தால் வாரா வாரம் கிட்டத் தட்ட (10,000) பதினாயிரம் பிரதிகள் வரை பதிப்பிக்கப்பட வேண்டியிருப்பதாலும் சமீப காலத்திற்குள் பதினாயிரம் பிரதிகளுக்குமேல் அச்சுப் போட வேண்டியிருப்பதாலும் தற்போது நம்மிடம் இருக்கும் அச்சு இயந்திரம் அவ்வளவு பிரதிகள் அச்சியற்றப் போதுமானதாய் இல்லாததாலும் இதற்காக வாங்கப்பட்ட மற்றொரு பெரிய அச்சியந்திரம் 'திராவிடன்' பத்திரிகையின் வாசகர்களின் பெருக்கத்தால் 'திராவிட'னுக்கு வேண்டியிருந்ததாலும் கொஞ்ச நாளைக்கு, 'குடிஅர'சை 16 பக்கத்துடனே வெளிப்படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது.

என்றாலும், இதனால் வாசகர்களுக்கு அதிகமான குறை ஏற்படாதிருக்கும் பொருட்டு இப்போது விளம்பரத்திற்காக உபயோகப்படுத்தி வரும் சுமார் 7,8 பக்கங்களை இனி 3 அல்லது 4 பக்கங்களுக்குக் அதிகப்படாமல் செய்துவிட்டு, சற்றேறக் குறைய 12 அல்லது 13 பக்கங்களுக்குக் குறையாத விஷயங்கள் வெளியாக்க உத்தேசித்திருக்கின்றோம். இதனால் ஒரு சமயம் விளம்பர வியாபாரிகளுக்குச் சற்று அதிருப்தி இருக்கலாம்.

ஆனாலும் அவர்களையும் திருப்தி செய்யச் சீக்கிரத்தில் ஏற்பாடு செய்யப்படும்.

நிருப நேயர்களுக்கு இனி கண்டிப்பாய் இடம் ஒதுக்க முடியாததற்கு வருந்துகிறோம். அவசியம் என்று தோன்றியவை களுக்கு மாத்திரம் சற்று இடம் கொடுக்கலாம். ஆனாலும் நிருப நேயர்கள் வெறும் வர்த்தமானத்தை அனுப்பாமல் இருக்க வேண்டுகிறோம்."

'குடிஅர'சின் இந்த அறிக்கை, அச்சாகிய 'குடிஅரசு' இதழின் எண்ணிக்கைப் பெருக்கம், 'திராவிடன்' நாளேட்டின் வாசகர்களின் எண்ணிக்கை கூடியமை, 'குடிஅர'சில் வெளியாகிக் கொண்டிருந்த விளம்பரங்களைக் கூட இழந்து கொண்டு உருப்படியான கட்டுரைகளை மட்டும் வெளியிடப் பெரியார் தீர்மானித்தமை, புதிதாக வாங்கிய அச்சுப் பொறியைத் 'திராவிடன்' பயன்படுத்திக் கொண்டமை, எனவே இயற்கையாகவே இயக்கச் செய்திகளை நாளேடு என்ற முறையில் 'திராவிடன்' கடமையுணர்வோடு வெளியிட்டுத் துணை நின்றமை ஆகிய செய்திகளை நமக்குப் புரிய வைக்கிறது. தனித்தன்மை வாய்ந்த இந்த நடவடிக்கைகள் பெரியாரவர்களை ஒரு புதுமையான இதழாளராக நமக்குக் காட்டுகின்றன!

## முதலாவது சுயமரியாதை மாகாண மகாநாடு

முதலாம் 'சுயமரியாதை மாகாண மகாநாடு' செங்கல்பட்டில் நடத்தப் பெற வேண்டும் என்று பெரியாரும் அவரின் உடன்தோழர்களும் முடிவு பண்ணிய பிறகு, மாநாடு தொடர்பான செய்திகளை மக்களுக்கு வழங்குவதில் ஒரு புதுமையான உத்தியைத் 'திராவிடன்' கையாண்டது. அதாவது ஒவ்வொரு நாளும் மாநாட்டின் தொடர்புடைய குறிப்பிட்ட ஒரேயொரு - சில நாள்களில் ஒருசில - செய்திகளை மட்டும் அழகான முறையில் கவர்ச்சியாகத் 'திராவிடன்' கட்டம் கட்டித் தெரியப்படுத்தியது.

1-1-1929ஆம் நாளையத் 'திராவிட'னில்

"சுயமரியாதை மாகாண மகாநாடு, செங்கற்பட்டு. அறிக்கை-1. திரு. ஈ.வெ.இராமசாமி அவர்கள் சுயமரியாதைக் கொடியை ஏற்ற இணங்கியுள்ளார். திரு. சுரேந்திரநாத் ஆரியா அவர்கள் தொண்டர்படைத் தலைவராய் மிளிர்வார். திரு. ஜே.எஸ். கண்ணப்பர் அவர்கள் மகாநாட்டின் விளம்பர அதிகாரியாய் இருக்க இணங்கியுள்ளார். திரு. சௌந்திர பாண்டிய (நாடார்) எம்.எல்.சி. மகாநாட்டில் தலைமை வகிக்க இணங்கியுள்ளார்"

என்று அழகான கட்டம் கட்டி, அதனுள்ளே அச்சிட்டிருந்தார்.

தொடர்ந்து 2-1-1929ஆம் நாளிட்ட 'திராவிட'னில்,

"சுயமரியாதை மாகாண மகாநாடு, 2-வது அறிக்கை" என்று தலைப்பிட்டு, "திருவாளர் கோவிந்தராஜுலு நாடார் அவர்களைக் காரியதரிசியாய்க் கொண்டு பின்வரும் பெரியார்கள் அடங்கிய காரியக் கமிட்டி நியமனம் செய்யப்பட்டிருக்கின்றது"

என்று குறிப்பிட்டு, உறுப்பினர்களின் பெயர்ப்பட்டியலைத் தந்திருந்தனர்.

3-1-1929ஆம் நாளுக்குரிய 'திராவிட'னில்

"ராவ் பகதூர் எம்.கே. ரெட்டியாரவர்கள் வரவேற்புக் கமிட்டித் தலைவராகவும் திரு. எம்.வேதாசல முதலியார் (செங்கற்பட்டு முனிசிபல் சேர்மன்) வரவேற்புக் கமிட்டியின் காரியதரிசியாகவும் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கின்றார்கள்."

என்னும் மூன்றாம் அறிக்கை ஜே.எஸ். கண்ணப்பர், விளம்பர அதிகாரி என்ற பெயரால் கட்டம் கட்டி வெளியிடப்பட்டிருந்தது.

நான்காம் அறிக்கையாக 4-1-1929ஆம் நாளின் 'திராவிடன்',

"சென்னை அரசாங்கத்தின் முதல் மந்திரி கனம் டாக்டர் சுப்பராயன் மாநாட்டைத் திறந்து வைக்க அன்புடன் இசைந்துள்ளார்"

என்ற செய்தியைக் கட்டத்திற்குள் அடக்கித் தந்தது.

'திராவிட'னின் 7-1-1929ஆம் நாளிதழ்,

"திரு. கே.வி. மேனன் விஷயாலோசனைக் கமிட்டியின் தலைவராய் நியமனம் செய்யப்பட்டிருக்கிறார். மகாநாட்டில் நிறைவேற்ற, தீர்மானங்கள் அனுப்புவோர், திரு. கே.வி. மேனன், 14, மவுண்ட் ரோட் என்ற விலாசத்திற்கு அனுப்பக் கேட்டுக் கொள்ளுகிறோம்"

என்ற அறிவிப்பைப் பெட்டிச் செய்தியாகக் கொடுத்தது.

இதேபோன்று மாதம் முழுவதும் அறிக்கைகள் 'திராவிட'னில் வெளிவந்தன. அவற்றுள் -

"மகாநாட்டிற்கு வரும் பிரதிநிதிகளின் சௌகரியத்திற்காக, திருநெல்வேலி, கோயம்புத்தூர், சென்னை முதலிய இடங்களி லிருந்து தனி ரயில் வண்டிகள் விட ஏற்பாடுகள் செய்யப்பட்டு

வருகின்றன. வண்டிகள் புறப்படும் தேதிகளும் நேரமும் பின்னால் அறிவிக்கப்படும்" என்னும் அறிக்கை குறிப்பிடத்தக்கது. ('திராவிடன்': 12-1-1929).

இந்தத் தலைமுறையினருக்குக் கூட வியப்பூட்டும் செய்திகளைக் கேளுங்கள்.

"இந்த மஹாநாட்டிற்கு வரும் பல ஊர்ப் பிரதிநிதிகளுக்கு லேவாதேவி சவுகரியங்களைத் தரும்படி யாதொரு பிரதிபலனையும் கருதாமல் செங்கல்பட்டு கோவாப்பரேட்டிவ் அர்பன் பாங்கியின் டைரக்டர்கள் மேற்படி மகாநாட்டு மண்டபத்தில் ஒரு தற்காலிக பிராஞ்ச் ஆபீஸ் அமைக்கத் தீர்மானித்திருக்கிறார்கள்." ('திராவிடன்': 4-2-1929).

"முதலாவது சுயமரியாதை மகாநாட்டிற்கு விருதுநகரிலிருந்து ஸ்பெஷலாகப் புதிதாக அமைக்கப்பட்டிருக்கும் யாத்ரீகர் வண்டியை (Pilgrims Tourist Car) செங்கல்பட்டிற்கு விடுவதற்கு ரயில்வே கம்பெனியாருடன் ஏற்பாடு செய்திருக்கிறது. நபர் ஒன்றுக்குக் கூடியது ரூபா 7 செல்லுமென மதிப்பிடப் பட்டிருக்கிறது." ('திராவிடன்': 28-1-1929).

"செங்கல்பட்டில் நடைபெறப் போகும் சுயமரியாதை மகாநாட்டில் வாலண்டியர்களாக வேலை பார்க்க, சென்னையிலுள்ள பல கல்லூரிகளிலிருந்தும் மாணவர்கள் முன்வந்திருக்கிறார்கள். ஒவ்வொரு கல்லூரியின் விளம்பரப் பலகைக்கும் இதைக்குறித்த விவரம் அனுப்பப்பட்டிருக்கிறது." ('திராவிடன்': 5-2-1929).

இவ்வறிக்கைகள் மட்டுமின்றி, ஒவ்வோர் ஊரிலிருந்தும் செங்கை மாநாட்டுக்குத் தூதர்களாகப் பங்கேற்க வருவதாய்த் தெரிவித்தோரின் நீண்ட பெயர்ப் பட்டியல்களும் 'திராவிட'னில் வெளியிடப் பெற்றன.

### சுயமரியாதை மகாநாட்டு மலர்

'திராவிடன்' நமக்குத் தரும் சிறப்புச் செய்தி யொன்றைக் குறிப்பிட வேண்டும். தமிழ் மாகாண சுயமரியாதை மகாநாட்டு மலர்' என்ற பெயரில் சிறப்பு மலரொன்று வெளியிடப்பட்டது.

அதுபற்றி 15-2-1929ஆம் நாளிட்ட 'திராவிடன்' தெரிவிப்பது:

"செங்கல்பட்டில் நடக்கும் தமிழ் மாகாண சுயமரியாதை மகாநாட்டை உத்தேசித்து ஒரு மலர் வெளியிட்டிருக்கிறோம்.

இம்மலரில் மகாநாட்டு நடவடிக்கைகளில் சம்பந்தப்பட்ட தலைவர்களுடைய படங்களும், வரவேற்பு அக்கிராசனர், மகாநாட்டுத் தலைவர் முதலியவர்களது முகவுரைப் பிரசங்கங்களும், மற்றும் திருவாளர்கள் ஈ.வெ.ராமசாமி நாயக்கர், கைவல்யசாமியார், டாக்டர் முத்துலட்சுமி அம்மாள், தாவுத்ஷா சாயபு, கா. நமசிவாய முதலியார், கே.வி. மேனன், எஸ். குருசாமி, தக்கோலம் செல்லப்பன் முதலிய அறிஞர்கள் கட்டுரைகளும், சித்திரபுத்திரன் சம்பாஷணைகளும் சுயமரியாதைப் பாடல்களும் அறிவும் ஆச்சரியமும் தரத் தகுந்த பல சிறுகதைகளும் நிறைந்து பொலியும். ஆக மொத்தம் சுமார் 20 படங்களுடனும் மகாநாட்டுக்குச் சம்பந்தப்பட்ட பந்தல் அலங்காரக் காட்சி, நிகழ்ச்சிக் குறிப்பு முதலியவைகளுடனும் கொண்டு, சுமார் 100 பக்கங்களோடு உயர்ந்த வழவழப்புக் காகிதத்தில் அரை டிம்மி சைஸில் அழகிய புத்தக ரூபமாக வெளியிடப்பட்டிருக்கின்றது. மகாநாட்டுப் பந்தலில் பிரதிநிதிகளுக்கு மாத்திரம் வெகு குறைந்த விலையாகிய எட்டு அணாவுக்குக் கிடைக்கும்".

இவ்வாறு துணை ஆசிரியவுரை இடம் பெற்ற 'திராவிட'னின் 21-2-1929ஆம் நாளிதழில் வெளியான விளம்பரத்தில் அச்சிடப்பட்ட 20,000 மலர்ப் படிகளில், "மகாநாட்டில் விற்பனையானவை போக, சொற்பப் பிரதிகளே கைவசம் இருக்கின்றன'' என்ற செய்தி கொடுக்கப்பட்டுள்ளது என்றால், மாநாட்டின்பால் தமிழ்மக்கள் காட்டிய ஆர்வம் எப்படிப்பட்டது என்பதை நம்மால் கற்பனை பண்ண முடிகிறது.

முதலாம் சுயமரியாதை மாநாட்டின் நடவடிக்கைகளையும் தலைவர்களின் உரைப் பொழிவுகளையும் 'திராவிடன்' முழுமையாக வெளியிட்டது. மாநாட்டில் ஏற்றிவைக்கப்பட்ட கொடி, உரையாற்றிய பெருமக்களின் உருவங்கள், பெரியாருக்கு மக்கள் தந்த பெருவரவேற்பு முதலியவை நிழற்படங்களாக்கப்பட்டுத் 'திராவிட'னில் அச்சிடப்பெற்றன. மாநாட்டுத் தீர்மானங்களின் அருமை பற்றி ஆசிரியவுரைகள் 'திராவிட'னை அணி செய்தன.

## மகாராஷ்டிர முதல் சுயமரியாதை மாநாடு

செங்கற்பட்டுச் சுயமரியாதை மாநாட்டு நடவடிக்கைகளை விரிவாக மக்களுக்குத் தந்ததுபோலவே பம்பாயில் நடந்த மகாராஷ்டிர முதல் சுயமரியாதை மாநாட்டுச் செய்திகளையும் 'திராவிடன்' தமிழர்கட்கு நல்ல• வண்ணம் கொடுத்தது.

"நல்வாழ்க்கைக்குச் சுயமரியாதையும் ஆண்மையும் அத்தியாவசியமானவை ஒடுக்கப்பட்ட - பிற்போக்கான

வகுப்பார்கள்தாம் இதில் மிகவும் கேவல நிலையில் இருக்கின்றனர். அவர்கள் மிருகங்களிலும் கேவலமாக நடத்தப்படுகின்றனர். ஒடுக்கப்பட்ட மக்களுக்கு அரசாங்க உத்தியோகங்கள் கொடுக்கப்படுவதில்லை. இந்த வகுப்பாரின் சிறுமை நிலையை மாற்ற வேண்டுமாயின் அவர்களுக்குச் சுயமரியாதை உணர்ச்சி உண்டாகச் செய்து, அவர்கள் தங்கள் உரிமைகளை அனுபவிப்பதற்காகத் துணிந்து முயலும்படி அவர்களைத் தூண்டிவிடுவது அத்தியாவசியம். வர்ணாசிரமக் கட்டுப்பாட்டை அடியோடு அழித்தால்தான் நாம் மேன்மையடைய முடியும்!" இது 'திராவிட'னில் "பம்பாயில் சுயமரியாதை முழக்கம்; முதல் மகாராஷ்டிர சுயமரியாதை மகாநாடு; டாக்டர் அம்பெட்கார் தலைமைப் பேருரை" என்னும் தலைப்பில் வெளியாகிய அம்பெத்காரின் நீண்ட உரையின் ஒரு சிறு பகுதி. (திராவிடன்)

செங்கற்பட்டில் 1929இல் நடந்த முதலாம் சுயமரியாதை மாநாட்டுச் செய்திகளைத் 'திராவிடன்' நல்ல வண்ணம் விரிவாக வெளியிட்டது.

## பெரியார் ஆற்றிய உரை

மாநாட்டுத் தலைவரை முன்மொழிந்து பெரியார் ஆற்றிய உரையில் அடங்கியிருந்த சில கருத்துகள் அனைவரின் உள்ளங்களிலும் பதிவு பெற வேண்டியவை.

> "இதற்குச் சுயமரியாதை இயக்கம் எனப் பெயரிட்டது. மூடப்பழக்க வழக்கங்களை ஒழிக்க வேண்டியும், மதத்தைப் பொருத்தவரையிலும், வாழ்க்கையைப் பொருத்த வரையிலும் ஒழுங்குபடுத்த வேண்டியும்தான். எல்லா வாழ்க்கைக்கும் சுயமரியாதை வேண்டியதுதான். அரசியலில் அமிழ்ந்து கிடப்பதற்கு முக்கிய காரணம் சுயமரியாதை இன்மையே.
>
> உலகிடை இப்பொழுது உயர்வுக்கும் தாழ்வுக்கும் சண்டை நடக்கிறது. கொடுங்கோன்மை அரசாட்சி – சாதுக்களான குடியானவர்கள் சண்டை; இவர்கள் இரண்டுபேரும் ஒத்துவாழ வேண்டுவதே இதன் நோக்கம். அவர்களும் நாமும் சமம் என்ற உணர்ச்சி ஏற்பட வேண்டும். சீக்கிரத்தில் அது ஏற்படத்தான் கூடும். அதன் மூலம்தான் பார்ப்பனரல்லாதார் இயக்கம் பலமற்றுப் போகும். நாளைய தினம் இது வேண்டிய அவசியமிருந்தால் உங்கள் எல்லோரையும் விட நான் சந்தோஷப்படுவேன். ஆனால், இந்தச் சுயமரியாதை இயக்கம்

உலகத்தைச் சிரிட்டுக் கொண்டிருக்க வேண்டும். உலகத்திலுள்ள ஆணவம், அகம்பாவம், அறியாமையை ஒழிக்க வேண்டி யிருக்கிறது. அதன் மூலமாக எல்லா மக்களையும் சமத்துவமாகச் செய்வதற்குச் சாத்தியமாகும்.! ('திராவிடன்': 19-2-1929).

"வாலிபர்கள் தீவிரப் பிரச்சாரம் செய்ய வேண்டும். தற்சமயம் சிலருக்கு ஒவ்வொரு மயிர்க்காலிலும் சமயப் பித்து இருக்கிறது. சாதி-மத வேற்றுமைகளை ஒழிக்க வேண்டியது அத்தியாவசியம். எல்லாவற்றிற்கும் நம்பிக்கையோடு உழைக்க வேண்டும். ஒழுக்கம், அறிவு, ஆசை எல்லோருக்கும் உண்டென்பது உண்மை. இவைகளினால் இந்தியாவிலுள்ள 33 கோடி ஜனங்களுள் 16½ கோடிப் பெண்களும் அடிமையாய் இருந்து, சந்தைக்குப் போய் மாடு வாங்குவது போல் நடத்தப்படுவது ஒழிய வேண்டும். சிலருக்கு இக்காரியங்கள் செய்யச் சாத்தியப்படாவிட்டால் சும்மாவாவது இருக்க வேண்டும். சுயமரியாதை இயக்கம் வாலிபர்கள் கையில் இருக்கிறது. பெண்களும் இந்தப் பிரச்சாரத்தில் ஈடுபட்டுச் சுயமரியாதை உணர்ச்சியை உணர்த்த வேண்டும்."

21-2-1929 ஆம் நாளிட்ட 'திராவிடன்' இதழில் பெரியாரின் இவ்வுரை வெளியாகியது. சுயமரியாதை இயக்கத்தின் குறிக்கோளையும் அதை நிறைவேற்றும் பொறுப்பினை ஏற்க வேண்டியவர்கள் இளைஞர்களும் மகளிருமே என்பதையும் பெரியார் மாநாட்டில் தெளிவுபடுத்தினார் என்பது அறியக் கிடக்கிறது.

## மகளிர் கருத்தரங்கு

ஈரோடு நகரத்தில் 'உண்மை நாடுவோர் சங்க'த்தின் சார்பில் பெண்மணிகளே பொறுப்பேற்று நடத்தி வைத்த, சடங்குகள் பற்றியதொரு கருத்தரங்குச் செய்திகளை 20-5-1929ஆம் நாளுக்குரிய 'திராவிடன்' மிக விரிவாக வெளியிட்டது. தலைமையேற்ற இலட்சுமியம்மையார்

''நம் நாட்டில் செய்யும் சடங்குகள் வெறும் பைத்தியக்காரத்தனமே, சடங்குகள் செய்வதனால் நமக்குக் காசு நஷ்டம்; அலைவதனால் தேகத்திற்கும் கஷ்டம். ஒரு வீட்டில் குழந்தை பிறந்தால் பதினோராம் நாள் தீட்டுக் கழித்தல் என்ற சடங்கு செய்ய வேண்டுமாம். அதற்குப் பார்ப்பனன் வர வேண்டுமாம். பார்ப்பானுக்கு அரிசி - பருப்பு காணிக்கை கொடுக்க வேண்டுமாம். அதே சடங்கில் ஊராருக்கும் விருந்து

> செய்விக்க வேண்டுமாம். பின்னர் குழந்தைக்கு காது குத்த வேண்டுமாம். பிறகு சாமிக்கு மயிர் கொடுக்க வேண்டுமாம்!"

என்று தொடங்கி தொடர்ந்து பெண்பிள்ளைக்காகச் செய்யப்படும் சடங்குகள் பற்றி விரித்துரைத்தார்.

சின்னத்தாயம்மாள் என்பவரின் சுவையான பேச்சில் சுயமரியாதை மணத்தின் அருமை உணர்த்தப்பட்டுள்ளது.

> "நம் நாட்டில் கல்யாணம் என்பதன் பெயரால் சில சடங்குகள் உண்டு. அது சமயம் பலரிடத்திலும் இரவல் வாங்கிய நகைகளைக் கொண்டு பெண்களை அலங்கரிக்கின்றனர். இவ்வாறு பாரத்தைச் சுமக்கச் சொல்லிப் பெண்களைக் கஷ்டப்படுத்தக் கூடாது. போதாக்குறைக்கு, பாரமான புடவைகளையும் கட்டி விட்டு விடுகிறார்கள். இவ்வளவும் போதாதென்று மூச்சு விட வழியில்லாது முக்காட்டுப் புடவை என்று ஒன்று போர்த்தித் திணற வைக்கிறார்கள். இது கொடுமையான காரியம். இதற்கெல்லாம் மணப்பெண் ஏதாவது சொன்னால் ஜனங்கள், 'இந்தப் பெண் அதிகப் பிரசங்கி. பெரியோர்கள் வார்த்தைகளை நிராகரிக்கின்றது' என்று பழி சுமத்துகின்றனர். மனையில் யக்ஞம் வளர்த்துப் புகையுண்டாக்கி அதிகக் கஷ்டத்துக்குள்ளாக்குகிறார்கள். இம்மாதிரியான சடங்குகளை ஒழித்து, தாய்மார்கள் அனைவரும் தங்கள் பிள்ளைகளுக்கு ஒரு கஷ்டமுமில்லாத – செலவில்லாத – சுயமரியாதைத் திருமணம் செய்து வைக்கும்படி வணக்கத்துடன் கேட்டுக் கொள்ளுகிறேன்."
>
> "வேண்டுதலை என்று சொல்லிக் கொண்டு எவ்வளவோ பொருட் செலவு செய்கின்றார்கள். ஏதேனும் தற்செயலாக நாம் எதிர்ப்பார்த்த லாபத்தை அடைந்தால் சுவாமி கொடுத்தது என்ற சொல்லுகிறார்கள். என்னே அறிவீனம்! என்னே முட்டாள்தனம்!
>
> நாகரிகம் பெருகி வரும் இந்தக் காலத்தில் பழைய குருட்டு வழக்கங்களை ஒழித்து நாகரிகத்திற்கும் பகுத்தறிவிற்கும் ஏற்றவாறு நாம் நடந்து கொள்ள வேண்டும். இம்மாதிரியான சடங்குகளை ஒழிக்க வேண்டும். ஒவ்வொரு விஷயத்தையும் பகுத்தறிவு கொண்டு ஆராய்ந்தறிந்து முன்னணிக்கு வரவேண்டும். மக்களுக்கு முற்போக்கை அளிக்கவல்ல சுயமரியாதைத் திருமணம் செய்ய வேண்டும். பெண்களாகிய நாமும் முன்னின்று பிரசாரம் செய்ய வேண்டும்." இவ்வாறு வற்புறுத்தியவர் பங்காரு அம்மாள் என்பவராவார்.

பெரியாரின் தங்கையார் கண்ணம்மாள் தனது உரையில், “சீமந்தம் வளைகாப்பு என்பதன் பெயரால் கர்ப்பப் பெண்ணைப் பத்து நாள்கள் கஷ்டப்பபடுத்தும் கொடுமையைச் சொல்லி முடியாது. கர்ப்பஸ்திரிக்குப் பூ முடித்தல் என்பதன் பெயரால் ஊரிலுள்ள பூக்களையெல்லாம் சூட்டி, மேற்படி வாசனையால் தலைவலி வரச் செய்து விடுகிறார்கள். மேலும் பளுவான புடவைகள் கட்டி, 2–3 மணிநேரம் மனை இருத்தல் என்று சொல்லி இருக்க வைக்கின்றனர். இம்மாதிரியான கஷ்டமான– அநாகரிகமான – சடங்குகள் எதற்கு என்று கேட்டால், இவைகளெல்லாம் பெரியோர்கள் செய்தது; அதனால் அப்படியே நடக்க வேண்டும் என்று பதில் சொல்லி விடுகின்றனர்.

ஆனால் அந்தக் காலத்தில் பெரியோர்கள் இருபது – முப்பது மைல் தூரம் பிரயாணம் செய்வதாயிருந்தாலும் கட்டமுது கட்டித் தோள்மேல் போட்டுக் கொண்டு நடந்தே போய் வந்தனர். ஆனால் இக்காலத்திலோ, இரயிலென்றம் மோட்டார் என்றும் ஜட்கா என்றும் அனேக வாகனங்க்ள் இருக்கின்றன. ஊர்ப் பயணம் போக வேண்டுமாயின் ‘கொண்டு வா, மோட்டார்!’ என்கிறார்கள். இது விஷயத்தில் மாத்திரம் பெரியோர்கள் நடந்தபடி நடப்பதில்லையே! அதேபோலத் தற்கால நாகரிகத்திற்கு ஒவ்வாத சடங்குகளையும் ஒழிக்க வேண்டும். அனாவசியமானதும் அர்த்தமற்றதுமான சடங்குகளை ஒழித்து, அதற்குச் செலவிடும் பணத்தை ஏழை மக்களுக்குப் படிப்பூட்டினால் மிகவும் நன்மையானதும் பயனுள்ளதானதுமாக இருக்கும்.!” என்று குறிப்பிட்டார்.

பாப்பா அம்மாள் என்பவரின் உரை சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் அடக்கப்பட்டுக் கிடந்த பெண்ணினத்தின் பாழ்நிலையைப் படம் பிடித்துக் காட்டுவதாகும்.

“நாம் பெண்களைப் பொதுவாக உலக நடை இன்னதென்பதை அறியவொட்டாமல் நாசம் செய்கிறோம். பால்யத்தில் அவர்கள் வெளியே வந்து உலகானுபவத்தைச் சரியாக அறிந்து கொள்ளுமுன்னர் அவர்கள் பக்குவநிலை அடைந்து விடுகின்றார்கள். உடனே பெற்றோர்கள் அப்பெண்களை வீட்டிலேயே உட்கார அடைத்து வைத்துவிடுகின்றார்கள். இவ்வாறு செய்வதாலும் பெண்கள் பெரும்பான்மையோர் நோய்வாய்ப்படுகின்றனர். எல்லாவற்றிற்கும் காரணம் வழக்கங்களே. எனவே சடங்குகளின் பெயரால், பெண்மக்கள்

முன்னேற்ற மடைவதை நாம் தடை செய்வது கூடாது. ஆங்கிலேயர்கள் வந்த பிறகுதான் நாம் ஏதாவது முன்னேற்றம் அடைந்திருக்கிறோம்."

இவ்வுரைகளெல்லாம் 'திராவிடன்' நாளிதழின் முதற் பக்கத்திலும் இரண்டாம் பக்கத்திலும் "சடங்குகளினால் ஏற்படும் தீமைகள்" என்ற தலைப்பின்கீழ் மிக விளக்கமாக வெளியிடப் பட்டுள்ளன. முக்கால் நூற்றாண்டுக்கு முன்பே தன்மான இயக்கத்தின்பால் பற்றுக் கொண்ட மகளிர் எத்துணை முனைப்பாகவும் துணிவாகவும் தெளிவாகவும் கருத்துப் பரப்பால் செய்திருக்கின்றார்கள் என்பதையும் பெரியாரின் மேற்பார்வையில் நடந்த 'திராவிட' இதழ் அக்கருத்துக்களுக்கு எவ்வளவு முதன்மை தந்தது என்பதையும் நாம் புரிந்து கொள்ள முடிகிறது.

**'குடிஅரசு சென்னைக்கு வந்துவிட்டது'**

'திராவிட'னின் 4-6-1929ஆம் நாளிட்ட இதழில் "குடிஅரசு சென்னைக்கு வந்து விட்டது" என்ற தலைப்பில் வெளியான ஆசிரியவுரை குறிக்கத்தக்கது.

> "குடிஅரசு பத்திரிகை தோன்றி நான்கு வருஷம் நிறைந்து அய்ந்தாவது வருஷமும் தொடங்கிவிட்டது. வாசகர்களின் அபிமானத்தாலும், குடிஅரசின் நிலையான கொள்கையின் மேன்மையாலும் அது நாளுக்கு நாள் பெருகி, இன்றைய தினம் தென்னிந்தியாவில் நடைபெறும் எல்லாத் தமிழ் தினசரி வாரப் பத்திரிகைகளை விடப் பலமடங்கு அதிகமான சந்தாதாரர் களையும் வாசகர்களையும் கொண்டிருப்பதோடு, அரசியல் விஷயத்திலும் சமுதாய விஷயத்திலும் தென்னிந்தியாவிலுள்ள பார்ப்பனரல்லாத மக்களுக்குப் பெரிதும் வழிகாட்டியாய் இருந்து வருகின்றது.
>
> அப்பேர்பட்ட ஒரு முக்கிய பத்திரிகையானது இதுவரை ஈரோடிலிருந்தே நடைபெற்று வந்திருந்தாலும், செங்கல்பட்டு மாநாட்டுற்குப் பிறகு திடீர் திடீரென்ற பெருகி வரும் சந்தாதாரர்களையும் தேவைகளையும் ஈடுசெய்யப் போதிய வசதிகள் ஈரோடில் இல்லாத காரணத்தால், முடியாமல் இருப்பதால், அதை உத்தேசித்து, குடிஅரசை சென்னையில் பதிப்பிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு, அந்தப்படிக்கே அடுத்த வாரம் முதல் குடிஅரசையும் சென்னையில் இருந்தே வெளியாக்கத் தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. ஆதலால் ஒன்று அல்லது இரண்டு வாரத்திற்கு குடிஅரசு

வெளியாக ஏற்படும் தாமதத்தைச் சந்தாதாரர்களும் வாசகர்களும் தயவு செய்து பொறுத்துக்கொள்ள வேண்டுமென்றும் குடிஅரசில் ஒரு வேண்டுகோளும் வெளியிடப்பட்டிருக்கின்றது.

தவிர, இனி குடிஅரசானது 20 பக்கங்களுடன் சில சமயங்களில் 24 பக்கங்களுடனும் கெட்டியான வர்ணக் காகிதத்தை மேலுறையாகக் கொண்டு வெளிப்படுத்தப்படும். அன்றியும் குடிஅரசு 9000 பிரதிகளும் மேற்பட்டு 10,000 பிரதிகள் வரை பதிப்பிக்கப்படுவதற்கும் வியாபாரிகளுக்கு உத்தரவாதமும் செய்யப்படும். ஆதலால் வியாபாரிகள் விளம்பரங்களுக்கு முன்னெச்சரிக்கையுடன் தங்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டுமாய் வேண்டிக் கொள்ளப் படுகிறார்கள்.

தவிர, செங்கற்பட்டு மாநாட்டுத் தீர்மானப்படிக்கும் பட்டுக்கோட்டை தொண்டர்கள் மாநாட்டுத் தீர்மானப்படிக்கும் சுயமரியாதைச் சங்கத்தைச் சென்னையிலேயே பதிவு செய்து, 'திராவிடன்', 'குடிஅரசு', 'ரிவோல்ட்' முதலிய பத்திரிகைகளையும் சுயமரியாதைச் சங்கத்தின் சார்பாக வெளியிடும் பத்திரிகைகளாக்கவும் வேண்டிய ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

தவிர மேல்கண்ட பத்திரிகைகள் இனி பெரும்பாலும் சமய – சமுதாய சம்பந்தமாகவே பெரிதும் உழைத்து வரும். மற்றபடி தேர்தல் சந்தர்ப்பம் நெருங்கினால் மாத்திரம் அரசியல்களின் புரட்டுகளை வெளிப்படுத்த, சிறிது சிறிது அரசியலைப் பற்றியும் எழுத நேரிடலாம். சுயமரியாதை இயக்கமும் அதன் சார்பாயுள்ள பத்திரிகைகளும் சமயங்களின் பேராலுள்ள கெடுதிகளையும் சமுதாயத்துறையில் உள்ள கெடுதிகளையும் ஒழித்து, மக்களுக்கு அறிவையும் சமத்துவத்தையும் விடுதலையையும் உண்டாக்க வேண்டும் என்கின்ற எண்ணத்துடன் வெளிப்பட்டவைகளே தவிர, அரசியல் புரட்டுப் பிரச்சாரம் செய்து கொண்டு பத்திரிகையின் பேரால் ஜீவனமும் வாழ்க்கையும் நடத்துவதற்காக ஏற்பட்டவைகள் அல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

ஆதலால் வாசகர்கள் பத்திரிகைகளை முன்போலவே ஆதரிப்பதுடன் வேண்டிய ஆதரவளிக்கவும் விரும்புகிறோம்."

இவ்வாசிரியவுரையின் நடையையும் உள்ளடக்கத்தையும் கொண்டு தந்தை பெரியரால் இது வரையப்பட்டது என்பதைத்

தெளியலாம் எளிதாக. பெரியாரது வெளியிடும் ஆற்றலும் அவர் செய்யக் கருதியிருந்த திட்டமும் இதிலிருந்து நமக்கு விளங்கும்.

## பறையடித்த பொன்னம்பலனார்

திருவரங்கத்திற்கு அருகிலுள்ள திருவளர்சோலை என்னும் ஊரில் நடந்த சுயமரியாதைக் கூட்டமொன்றைப் பற்றிய செய்திகளை *29-6-1929*ஆம் நாளிட்ட 'திராவிடன்' வெளியிட்டது.

> **"இன்று இவ்வூர் வாசக சாலையாரின் அழைப்பின்படி பூவாளூர் திரு. அ. பொன்னம்பலனார் பகல் 3 மணிக்கு வந்து சேர்ந்தார். கிராம முன்சீப்பும் சில மிராசுதார்களும் கூடி, பறச்சேரிக்கு ஆளனுப்பி, பறையடிக்க எவரும் வரப்படாதென்றும், இவ்வூரில் எங்கும் கூட்டமே போடப்படாதென்றும், அப்படி மீறிப் பேசப் போகின்றவர்களைக் கட்டி வைத்து அடிக்கப் போகின்றோம்' என்றும் வீண், பொருளற்ற கூச்சலிட்டு, ஆதி திராவிடர்களின் சேரியில் பெரிய பயமுறுத்தி விட்டார்கள்.**
>
> **இந்நிகழ்ச்சிக்குப் பின் வாசக சாலையார் வழக்கம்போல் பறையடிக்கும் நண்பரைக் கூப்பிடப்போக, அவர் பயந்து கொண்டு வரமுடியாமல் திகைத்தார். இந்த நிலையில் அங்கு ஒரு வாலிபர் தான் பறையடிப்பதாகக் கூறி இரண்டணா பெற்று, பறைக் கருவியை எடுத்துக் கொண்டு வந்தார். அவருடன் நம் இளைஞர்கள் பலரும் பின் தொடர்ந்து வந்தார்கள். பறையடிப்பபவர் பறையடித்துக் கொண்டு வீதிவழியே போகும் போது திரு. கிருஷ்ணப்பிள்ளை என்பவர், 'இவ்வீதியில் அடிக்கக் கூடா'தென்றும் அதட்டி மிரட்டிப் பேசினார். அதுபோது நமது வாசகசாலை அன்பர்களும் பலபெரியார்களும் கூடி, அதே இடத்தில் நின்று கொண்டு, 'ஏன் இவ்வீதியில் பறையடிக்கப்படாது?' என்று பொறுமையுடன் கேட்டார்கள். அவர் மிக்க கோபத்தோடு, 'இங்கு கூடாதுதான். மரியாதையாகப் போய்விடுங்களென்று பயமுறுத்தினார். பறையடிக்கும் அந்த இளைஞர் திகைத்து நின்றார்.**
>
> **அதுபோது திரு. பொன்னம்பலனார் அவ்விடம் வந்து, 'இவ்வீதியில் அடிக்கக்கூடாது என்பது ஏன்? என்று கேட்டு, பறைக்கருவியை வாங்கித் தோளில் மாட்டிக்கொண்டு, பறையடித்துக் கொண்டு, 'பொதுக்கூட்டத்திற்கு எல்லாரும் வாருங்கள்' என்று சொல்லிக் கொண்டே வீதியைச் சுற்றி வந்தார். இந்த நிகழ்ச்சி கிராமவாசிகளிடையே பெரும் பரபரப்பையும் எழுச்சியையும் உண்டாக்கியதோடு, பறையடிக்கக் கூடாது**

என்றவர்களுக்குப் பெரும் இழிவையும் உண்டாக்கி விட்டது. இந்நிலையில் பெருந்திரளான ஆண்களும் பெண்களும் இளைஞர்களும் நூற்றுக்கணக்காக வந்து கூடினார்கள்."

'திராவிட'னில் பதிவான செய்திகளின் தொடக்கப் பகுதியே இது. நம் தமிழகத்தில் அக்காலத்தில் நிலவிய மக்களாயத் தட்ப வெப்ப நிலையையும், அக்கட்டத்தில் தன்மான இயக்கத் தொண்டர்கள் அடிக்க நேர்ந்த எதிர் நீச்சல்பற்றியும் நாம் கற்பனை செய்வதற்கு இப்பகுதி நல்ல ஊக்கியாய் வாய்த்துள்ளது.

## பள்ளர் - பறையர் என்று அழைப்பது மேல்

"உலகப் போட்டிப் பந்தயத்திற்கு நாம் லாயக்கற்றவர்களாய்ப் பிற்போக்கிலிருக்கிறோம். எல்லாரையும் வரிசையாய் நேராக நிறுத்தி வைத்துப் பந்தயம் விட்டால் நாம் ஒரு கை பார்த்து விடலாம். அதல்லாமல் ஒருவர் நிற்கும் வரிசையில் தேவேந்திரகுலத்தார் கடைசியில் இருக்கிறார்கள். நிர்ப்பந்தப் படுத்திப் போட்டிபோடச் சொன்னால், எவ்வளவுதான் முயன்றாலும், கடைசியில் இருப்பவர் கொஞ்சம் கடைசியில் தான் போவார். நமக்குக் கல்வி வசதியும், பொருளாதார வசதியும் குறைவாகவே இருக்கிறது. படிப்பதற்கு முயற்சியும் அறிவும் கவலையும் நமக்கு இல்லை என்பதாகச் சிலர் சொல்லக் கூடும். படிப்பதற்கு அறிவும் முயற்சியும் கவலையும் இல்லாதவன் எவனும் இருக்க மாட்டான். படிக்க முடியாமலும், அதன் மூலம் பொருளாதார வசதியைச் செய்து கொள்ள முடியாமலும் நம்மைக் கட்டிப் போட்டு வந்திருக்கிறார்கள். அந்தக் கட்டை அவிழ்த்துவிட்டால் போட்டியில் ஒரு கை பார்க்கலாம்.

தேவேந்திரகுல வேளாளர் என்போர் தொடக்கூடாதவர் என்று சிலர் நினைத்துக் கொண்டிருந்தாலும் அவர்களும் வேறு சிலரால் சூத்திரன் அதாவது விபசாரி மகன் - என்ற தள்ளி வைக்கப்பட்டுத்தான் இருக்கிறார்கள். யாரேனும் என்னைப் பள்ளன் - பறையன் என்று அழைப்பது மேலா, சூத்திரன் என்று அழைப்பது மேலா என்று கேட்டால், சூத்திரன் என்று அழைக்கவே கூடாது, பள்ளர் - பறையர் என்று அழைப்பதுதான் மேல் என்று சொல்லுவேன். ஏன் என்றால் சூத்திரன் என்னும் பெயர் அந்தப் பெயர் மிகமிக இழிந்ததாகும். ஜனத்தொகை எடுக்கும் போது நான் பள்ளர் - பறையர் என்றுதான் சொல்லுவேன். பள்ளர், பறையர் என்பவர்களாகிலும் சொந்தத் தாய் தகப்பன்மார்களுக்குப் பிறந்தவர்களாகிறார்கள்.

சூத்திரர்கள் என்பவர்களோ, பார்ப்பானின் வைப்பாட்டி மக்கள் என்று அமைக்கப்பட்டுப் போய் விட்டது.

தேவேந்திர குலம் என்பதும் எனக்கு இழிவாகத்தான் தோன்றுகிறது. தேவேந்திரனைப் பற்றிக் கூறும் புராணக் கதைகள் தேவேந்திரனை அவ்வளவு இழிவாகக் கூறுகின்றன. பிறந்த சாதியை இழிவாக மதித்து இன்னொரு சாதியை உயர்வாக மதித்து அதனிடம் அடைக்கலம் புகுவதை விட இழிவு வேறொன்றுமில்லை" (திராவிடன்: 5-10-29).

மதுரை திரு. ஆர். இராமய்யா பிள்ளை என்பவர் தன் ஆத்திக நண்பரொருவருக்கு எழுதிய மடலின் சுருக்கத்தை 4-6-1929ஆம் நாளைய 'திராவிடன்' ஏட்டில் இடம் பெற்றிருந்தது. அதன் ஒரு பகுதியைத் தெரியப்படுத்துகிறேன்.

"1910 முதல் அரசியலில் கவனங்கொண்டு ஆங்கிலமக்கள் இந்தியருக்கு இழைக்கும் கொடுமைகளைத் தெரிந்து அரசாங்கத்தின் மீது வெறுப்புற்று, 1920 முதல் பலவிடங்களில் அரசாங்கத்தைக் கண்டித்து, காங்கிரசே சரியான நிலையம் - சுயராஜ்யமே உயிர் - மகாத்மாவின் நாமமே தாரகமந்திர மென்று பேசியும் வந்தோம். நிற்க -

மகாத்மா சிறை சென்ற காலத்தில் சி.ஆர். தாசைத் தூக்கி விட்டு, சட்டசபைக்குச் செல்லலாம் என்று தீர்மானித்துக் காங்கிரசைப் பாழ்படுத்தியதிலிருந்தும், 'பரம்பரையில் நாங்களே கல்விக்குரியவர்கள்' எங்களுக்குத்தான் அரசியல் தெரியும்' என்று சொல்லுகிறவர்கள் காரியத்தில் எவ்வளவு தூரம் உண்மையென்று. நோக்குங்காலை, சூழ்ச்சியெனக் காண்பதாலும், பேதமற்று எல்லா மக்களும் அரசியல் துறையை நடத்தினால் சுயராஜ்யம் எளிதில் கிடைக்கும் என வெள்ளைக் காங்கிரசின் மீதிருந்த நம்பிக்கையை இழந்தோம்.

சமூகத் துறையில் சிறுபோதிலிருந்து பல வகுப்புகள் இருப்பதும், அதில் ஏற்றத் தாழ்வு கூறி மக்களுக்குச் செய்யப்படுகின்ற கொடுமையையும் பார்த்து, இறைவனொருவன் இருப்பானாகில் இப்படிக் கொடுமையும் நிகழுமா? இத்தீமை என்று ஒழியுமோ வென்று பலநாள் ஏங்குற்ற காலை திரு. ஈ.வெ. ராமசாமியார் தோன்றியது கண்டு மகிழ்ந்தோம். மத சம்பந்தமாக அவர் மாறுபட்டிருக்கிறார் என்று சிலர் சொல்லுவதையோ அன்றி அப்படியே கொண்டிருந்தாலும் அதைக் கவனிக்க வேண்டிய தில்லை. வைணவர்கள் சைவத்தைக் கண்டித்திருப்பதையும்,

சைவர்கள் வைணவத்தைக் கண்டித்திருப்பதையும், அதற்கு அவர்கள் உபயோகித்திருக்கும் ஆபாச வார்த்தைகளையும் நூல்களையும் ஒருவன் பார்ப்பானேயாகில் உடனே இறந்து போகவேண்டும்; அல்லது அம்மதங்களை ஒழிக்க வேண்டும்.

அப்படியெல்லாமிருக்க அவைகளையெல்லாம் ஏற்று அதற்காக பரிந்து பேசியும் வருகிறபோது, மதத்தைப்பற்றியும் சமயத்தைப் பற்றியும் எனக்குக் கவலையில்லை. எல்லா மக்களும் பேதமின்றிக் கொடுமையின்றி ஒற்றுமையுடன் வாழ வேண்டுமென்பதே எனது விருப்பமென்று சொல்லுகின்ற உயர்ந்த கருத்தை எல்லா மக்களும் உடன்பாடாகக் கொள்ள வேண்டும்.

ஒவ்வொருவனுக்கும் அறிவுண்டு. அறிவு வந்த எவனும் பிறருக்கு அடிமைப்பட்டிருக்க, தாழ்த்திச் சொல்லும் சொல்லைக் கேட்க ஒருப்படான்; நெஞ்சம் புழுங்குவான். இந்த அளவில் சமூக இயலில் நாமும் பல இடங்களில் நேரில் பார்த்தும், இழித்துக் கூறும் வார்த்தையைக் கேட்டும், மனந்துடித்து அவர்கள் வாயடக்கியும் வந்து அநுபவித்திருப்பதால், இக்கொடுமைகளை யெல்லாம் ஒழிப்பான் வேண்டியே சுயமரியாதை இயக்கத்தைப் போற்றுதல் அவசியம் என்கிறோம்".

இம்மடலில் காணப்படும் செய்திகள் அக்காலக் கட்டத்தில் சமயப் பற்றும் தேசியப் பற்றும் வாய்ந்த பார்ப்பனரல்லாத் தமிழ்ப் பெருமக்களின்பால் தன்மான இயக்கக் கொள்கைகள் ஏற்படுத்திய தாக்கத்தை - பாதிப்பை உணர்த்துகின்றன.

## ‘பம்பாயில் சுயமரியாதை இயக்கம்’

“பம்பாயில் சுயமரியாதை இயக்கம்” என்ற நீண்ட ஆசிரியவுரை 10-6-1929ஆம் நாளைய ‘திராவிட’னில் வெளியானது. அதில் அடங்கியிருந்த கருத்துகளில் சிலவற்றையாவது நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

“சுயமரியாதை இயக்கம் தோன்றி சுமார் நான்கு வருடங்கள் ஆகின்றன. இந்தச் சொற்ப காலத்திற்குள் அது தமிழ்நாட்டில் செய்திருக்கும் வேலை இன்னது என்பதை வாசகர்களுக்கு நாம் எடுத்துக் கூற வேண்டியதில்லை. அவ்வியக்கத்தின் முக்கிய கொள்கைகளாக மக்களுக்குச் சுயமரியாதை உணர்ச்சியை எழுப்பவும் மூடநம்பிக்கைகளை ஒழித்துப் பகுத்தறிவை உணரச் செய்யவும், மூடநம்பிக்கையை உண்டாக்கும் போலிக்

கொள்கைகளையும், அதனால் வாழ்கின்றவர்களையும் வெளிப்படுத்திக் கட்டுப்பாடுகளையும் உடைத்தெறியவுமான காரியங்களை முக்கியமாய் வைத்து அத்துறையில் வேலை செய்து வந்திருக்கின்றது.

இந்த வேலையானது சமூகத்துறையிலும் அரசியல் துறையிலும் எதிர்பாராத உணர்ச்சியையும் முற்போக்கையும் செய்து கொண்டு போகின்றது. தமிழ்நாட்டிலுள்ள மக்கள் எந்தக் கூட்டங்களிலும் பிரயாணங்களிலும் சந்திப்புகளிலும் இதே பேச்சாகவே இருந்து வருவதும் மக்கள் வாழ்க்கையில் இருந்து வந்த சாமி சம்பந்தமானதுமான மூட நம்பிக்கைகளும் போலிக் கட்டுப்பாடு களும் அனேகமாய் விடுபட்டும் மறைந்து கொண்டு போவதுமான காரியங்கள் தாராளமாய் நடந்து வருகின்றன.

இவை தவிர வெளியூர்களிலும் கிராமங்களிலும் பொது ரோடுகள், அக்கிரகாரத் தெருக்கள், கிணறுகள் எல்லாம் அனேகமாக தடங்கல்கள் நீங்கப்பட்டு, தாராளமாய் எல்லோரும் புழங்க அனுமதிக்கப்பட்டு வருகின்றது. பெண்கள் விஷயத்திலும் பல சட்டங்களும் கலப்பு மணங்களும், பார்ப்பனர் – சாயபு, பார்ப்பனர் – ஆதி திராவிடர் என்கின்றவர்களுக்குள் கலப்பு மணமும் தாராளமாக நடைபெற்று வருகின்றது.

தமிழ்நாடு மாத்திரமல்லாமல் கேரள நாட்டிலும் பரவி, அங்கும் பலத்த உணர்ச்சியை உண்டாக்கியிருக்கிறது. இவை தவிர, சென்னை மாகாணத்தில் மாத்திரம் இல்லாமல் சமீப காலமாக, பம்பாய் மாகாணத்திலும் சுயமரியாதை இயக்கம் பரவி, பிரபலஸ்தர்களால் மகாநாடுகள் கூட்டப்பட்டு, அய்ம்பதினாயிரக் கணக்கான ஜனங்கள் கூடி, தமிழ்நாட்டுச் சுயமரியாதை மகாநாட்டுத் தீர்மானங்களை விட மிகவும் முற்போக்கானதும் முக்கியமானதுமான தீர்மானங்களைத் தைரியமாகவும் தாராளமாகவும் நிறைவேற்றியிருக்கின்றார்கள்.

மகாநாட்டுத் தலைவர் டாக்டர் அம்பெட்கர் தனது பிரசங்கத்தில், 'இந்து சமூகத்தில் உள்ள உயர்வு – தாழ்வே மக்களின் சுயமரியாதையையும் ஆண்மையையும் பலத்தையும் கெடுத்து விட்டது. நல்வாழ்க்கைக்குச் சுயமரியாதை அவசியமானது. சாதிபேதம் வருணாசிரமம் ஆகியவைகளைச் சட்டம் மூலமும் அழித்தால்தான் மனிதத்தன்மை அடைய முடியும். இதற்குச் சுயமரியாதை இயக்கமே முக்கிய இயக்கமாகும்.

என்று கூறினார்.

## திராவிடன் இதழின் ஆசிரியவுரையின் சில பகுதிகள்

'திராவிடன்' நாளேட்டின் 18-6-1929ஆம் நாளுக்குரிய பதிப்பில் இடம் பெற்ற துணிச்சலான ஆசிரியவுரையின் சில பகுதிகள்-

"சென்னையில் சில நாட்களாக நடைபெற்று வந்த முகரம் பண்டிகையின் திருவிளையாடல்களை நாம் கவனித்து வந்தோம். இன்னும் இதர ஊர்களில் இப்பண்டிகை நடைபெறுகிறதையும் பார்த்திருக்கின்றோம். இவ்வூரில் மாத்திரம் சில விசேஷமான சம்பவங்கள் நடைபெறுவது குறிப்பிடத்தக்கது. முகரம் பண்டிகை முஸ்லீம்களுக்கே உரித்தாயினும் இந்துக்கள் எனப்படுவோரும் அதுவும் 100க்கு 80 பேருக்கு மேல் - இப்பண்டிகையைக் கொண்டாடுவதன் நிமித்தம் கரியையும் தாரையும் பூசிக்கொண்டு தெருத்தெருவாய்க் கத்திக் கொண்டு போகும் வழக்கம் சென்னையில் நடப்பதுபோல் அவ்வளவு மும்முரமாக எங்கும் நடப்பதில்லை.

இந்துக்கள் எனப்படுவோர் முஸ்லீம் பண்டிகையிலும் தலையிட்டு, அதிலும் தங்களுடைய மூடவழக்கங்களைப் புகுத்தி, அநாகரிகமான முறையில் ஆடுவதும், கத்துவதும், சாம்பிராணி தூபம் போட்டுச் 'சாமி' வரவழைப்பதும், குறிசொல்லுவதும், வேஷங்கள் போட்டுக் கொண்டு நடுத்தெருவில் நடமாடுகிற ஜனங்களுக்கு இடைஞ்சலாக மேலே வந்து விழுவதும் கடைகளில் கூச்சலிட்டுப் பயமுறுத்திக் காசு வாங்குவதுமான கேவலமான முறைகளை முஸ்லீம்கள் பொறுத்துக் கொண்டிருப்பது சரியல்ல.

முகமதியர்களால் கொண்டாடப்படும் முகரம் பண்டிகை பற்றியும் அதனுடைய அநாகரிகம் பற்றியும் முஸ்லீம் அறிஞர்களில் பல பெரியார்களும் தலைவர்களும் அனேக தடவைகளில் கண்டித்திருந்தும் சென்னையைப் போன்ற நாகரிகமான பெரிய பட்டணங்களில்கூட அப்பண்டிகைகள் மிகக் கொடுமையான முறையில் கையாளப்பட்டு வருவதைப் பார்த்தால் முஸ்லீம் தலைவர்களும் அறிஞர்களும் இதில் உடனே தலையிட்டு, இதை ஒழிக்கப் பிரயத்தனம் செய்ய வேண்டியது அவசியம். இக்கூட்டத்தாரால் பிறர் படும் இம்சைகளையும், கடைகளிலும் பெரிய ஆபீசுகளிலும் கூடப்புகுந்து வேலைக்குத் தடையாய்க் கூச்சல் போடுவதையும் போலீஸ்காரர்கள் விட்டுக் கொண்டிருப்பது சரியல்ல.

> தற்கால நாகரிக முறைக்குப் புறம்பான வழிகளில் நடைபெறும் எத்தகைய கொண்டாட்டங்களையும் நிகழ்ச்சிகளையும் நிறுத்த வேண்டியது ஒரு நாகரிக அரசாங்கத்தின் கடமையானபடியால் அத்தகைய கடமையையும் இனியாவது ஆற்றுவார்களென எதிர்பார்க்கின்றோம்."

'இந்து' வல்லாத ஏனைய மதங்களின் அநாகரிக நடவடிக்கைகளையும் தயங்காது கண்டித்து 'நீதிக்கட்சி' இதழான 'திராவிடன்' எழுதிற்று என்றால், அது தன்மான இயக்கத் தலைவர் பெரியாருக்கு இதழாளர் என்ற முறையில் கிட்டிய மாபெரும் வெற்றியே!

## சிறைச்சாலையில் வேற்றுமைகள்

"சிறைச்சாலையில் வேற்றுமைகள்" என்ற தலைப்பில் 8-11-1929ஆம் நாளுக்குரிய 'திராவிட'னில் வெளியான ஆசிரியவுரை ஓர் அரிய செய்தியை அறியாத உலகிற்குத் தெரிவித்தது.

> "சென்னை மாகாண அரசாங்கத்தார் சிறைச்சாலைகளில் இந்தியர் அய்ரோப்பியர் என்ற வேற்றுமை ஒழிய வேண்டுமென்று சிபாரிசு செய்திருப்பதாய் அறிகின்றோம். இதை நாம் வரவேற்கின்றோம். ஏனெனில் நமது சுயமரியாதைக் கட்சியின் கொள்கை நிறவேற்றுமையையும் பிறப்பு வேற்றுமையையும் அறவே ஒழிப்பதேயாகும் என்பதை யாவரும் அறிவர்.
>
> இந்தியாவில் சிறைச்சாலைகளில் அய்ரோப்பியர் – இந்தியர் என்ற வேறுபாடு மிகக் கொடுமையாய் இருக்கின்றது. ஓர் அய்ரோப்பியன் என்ன குற்றம் செய்த போதிலும், அவன் சிறைச்சாலைக்குச் சென்றால், தன் வீட்டில் கிடைக்கும் சவுகரியங்களெல்லாம் அனுபவிக்கின்றான். ஆனால் ஓர் இந்தியன் சிறு குற்றம் செய்திருந்தாலும் அவன் சிறைச்சாலைக்குள் செல்வானாயின் ஆடுமாடு முதலியவைகட்டும் கேவலமாய் நடத்தப்படுகிறார்கள். இதை நினைக்க நினைக்க நம் மனம் கொதிப்படைகின்றது.
>
> இந்திய நாட்டில் இந்திய மக்களின் செலவில் அய்ரோப்பியர்கள் சிறைச்சாலைகளில் மனிதர்களாய் நடத்தப்படுகின்றார்கள். இந்தியர்களோ மிருங்களாய் நடத்தப்படுவது என்ன கொடுமை! இந்த வேற்றுமையை ஒழிக்கச் சென்னை அரசாங்கத்தார் சிபாரிசு செய்திருப்பது பற்றி நாம் மகிழ்ச்சியடைவதோடு அவர்களைப் பாராட்டுகிறோம்.

இனி – சிறைச்சாலைகளின் நிறவேற்றுமை மட்டும் இருக்கின்றதன்று பிறப்பு வேற்றுமையும் உண்டு. அதாவது பார்ப்பனர் – பார்ப்பனரல்லாதார் என்ற வேற்றுமையுண்டு, சிறைச்சாலையில் பார்ப்பனருக்குத் தனிப் பார்ப்பனச் சமையல், பார்ப்பனரல்லாதாருக்கு வேறு சமையல் என்ற வேற்றுமையுண்டு. பார்ப்பனர் – பார்ப்பனரல்லதார் என்ற கொடிய வருணாசிரமப் போராட்டம் சிறைச்சாலைகளில் ஏன் தலை விரித்தாட வேண்டும்? இது அக்கிரமமல்லவா? இந்த வேற்றுமையை ஒழிக்க ஏன் சென்னை அரசாங்கத்தார் சிபாரிசு செய்யக் கூடாது?

நிறவேற்றுமையைக் காட்டிலும் பிறப்பு வேற்றுமை கொடிது என்பதை அரசாங்கத்தார் ஏனோ உணரவில்லை? ஆகையால் சிறைச்சாலையில் நிறவேற்றுமையை ஒழிக்கின்ற காலத்தில் பிறப்பு வேற்றுமையையும் ஒழிக்கக் கேட்டுக் கொள்ளுகின்றோம்."

ஆக, 'திராவிடன்' நாளிதழ் சுயமரியாதைக் கொள்கைகளை வலியுறுத்தும் புரட்சி ஏடாக உருப்பெற்றது!

## அண்ணாமலை பல்கலைக்கழகம் – காழிக்கண்ணனார்

"அண்ணாமலை யூனிவர்ஸிடி ஆரியர் பிழைக்கவா?" என்று தலைப்பிட்டு, 3-12-1929 ஆம் நாளைய 'திராவிட'னில் கட்டுரையொன்று வெளிவந்தது. அக்கட்டுரையில் அடங்கியிருந்த செய்திகள் பார்ப்பன வல்லாண்மை அக்காலத்தில் எப்படி யிருந்தது என்பதை நமக்குப் படமாகக் காட்டுகின்றன.

"அண்ணாமலை யூனிவர்ஸிடியில் தற்போது பார்ப்பனர் கூட்டம் பெருகிவிட்டதைக் கேட்டு மிக வருந்துகிறோம்; மிக அஞ்சுகிறோம். புகைபுகா வாயிலிலும் இப்பூரியர் புகுந்து விடுகின்றனரே! அய்யோ! செட்டியாரவர்கள் சிறிதேனும் கவனிக்க வேண்டாமா? செட்டியாரவர்களால் பொறுக்கப்பட்டு யூனிவர்சிடியில் ரிஜிஸ்தராராக விஸ்வநாத அய்யர் எனுமொருவர் வந்திருக்கிறார். டிரெய்னிங் ஸ்கூலில் உபாத்தியாயராக இருந்த பார்ப்பனர்கள் யாவரும் யூனிவர்ஸிடியில் புகுந்து விட்டனர். இன்னும் புகுவதற்கான வேலைகள் செய்யப்பட்டு வருகின்றன! பார்ப்பனரல்லாத மாணவர்களைக் காணும் பொழுதெல்லாம் எரிந்து விழுகின்றாராம் அய்யர்!

இந்த யூனிவர்ஸிடி பெரும்பாலும் கீழ்த்திசைப் பட்டப் பரீட்சைகளை விருத்தி பண்ண வேண்டியது அவசியமே தவிர, மேற்றிசைப்பட்டப் பரீட்சைகளுக்கு வேண்டும் துறைகளை

விருத்தி பண்ணுதல் அவ்வளவு அவசியமில்லை. ஒவ்வொரு நாட்டினரும் தம்முடைய மொழியை விருத்திபண்ணுதற்குப் பாடுபடுகின்றாரே தவிர பிற நாட்டு மொழியை விருத்தி பண்ணுவதை யாண்டும் காண்கிலோம்.

சங்கீத காலேஜ் போஜன சாலையில் பார்ப்பனர் போஜனம் முடிந்த பின்னரே அங்குள்ளவொரு பார்ப்பனரல்லாத பையனுக்குச் சோறு போடப்பட்டு வருகிறதென அறிந்த திரிகூடசுந்தரம்பிள்ளை என்னும் அறிஞர் செட்டியாரவர்களுக்கு இதன் விபரத்தைக் கடித மூலம் கேட்டிருந்தாராம்.

அண்ணாமலைச் செட்டியாரவர்களின் பணமெல்லாம் பார்ப்பனருக்கே சேருகிறதென்பதை யாவரும் அறிவார்களாக. சோறும் பிடியரிசியும் பார்ப்பனருக்கே! ஹைஸ்கூல், தேவாரப் பாடசாலை, சங்கீத காலேஜ், ட்ரெய்னிங் காலேஜ், டிரெயினிங் ஸ்கூல் எங்கு பார்த்தாலும் பார்ப்பன மயமே!"

திரு. காழிக் கண்ணனார் என்ற தமிழறிஞர் எழுதிய கட்டுரையின் ஒரு சில பகுதிகளே இவை.

இவற்றிலிருந்து, தமிழுயர்வுக்காகவே அண்ணாமலையார் தன் செல்வத்தைக் கொண்டு பல்கலைக்கழகம் உருவாக்கப்போய், அதிலும் பார்ப்பனர் புகுந்து கொண்டு தமிழுக்கோ பார்ப்பனரல்லாத் தமிழருக்கோ நன்மைகள் விளைய முடியாதபடி அடாவடித்தனம் செய்தனர் என்பது அறியக் கிடக்கின்றது.

### விக்கிரக வணக்கம் பிள்ளை விளையாட்டே

"விக்கிரக வணக்கம் பிள்ளை விளையாட்டே" என்ற தலைப்பில் 'திராவிடன்' நாளேட்டில் கொழும்பு சு. சங்கரசுப்பு என்பவர் எழுதிய கட்டுரை வெளியிடப்பட்டது. பயன் கருதி அதன் ஒரு பகுதியினைத் தருகிறேன்.

"ஜாதிகள் உருப்படுத்திப் பூசை செய்யும் விக்கிரகங்களும் அவைகளுக்குச் செய்யும் ஆராதனைகளும் சிறு பிள்ளைகளின் விளையாட்டைப் போலவே இருக்கிறது. எப்படியெனில் அற்பமான மண், கல், மரம் என்பவைகளால் ஆண் பெண் போன்ற சிலைகளாலும் மிருகம் – பட்சி – மீன் சாயலாகவும் விக்கிரகங்கள் செய்து, கடவுள் என்று வீடுகளிலும் கோயில்களிலும் அவைகளை நாட்டி, அவைகளுக்குப் பசியிருக்குமென்று பொங்கல், சுண்டல், தயிர், பால், நெய், பழம், தேங்காய் முதலியவைகளைப் படைத்து, கற்பூரப் புகையையும்

காட்டி, பின்பு தாங்களே அப்பதார்த்தங்களைச் சாப்பிட்டு விடுகிறார்கள். மேலும் அவைகள் உயிரடைந்து, விழித்து கண்களால் பார்த்து, காதுகளால் கேட்டு, மனதில் சந்தோஷம் கொள்வதாக நினைத்து மறுபடியும் அவைகளுக்கு வஸ்திராபரணங்கள் தரித்து, வாத்தியங்கள் முழக்கி, ஆடல் - பாடல்களோடு நடனம் பண்ணி, அவ்விக்கிரகங்களைத் தேர்களில் வைத்து வரிந்து கட்டி வீதிகள் தோறும் இழுத்துக் கொண்டு திரிகிறார்கள்.

ஆனால் பிரேதத்திற்கு என்ன அலங்காரம் செய்தாலும் அது ஒன்றும் அறியாதது போலவே, அந்த ஊமை விக்கிரகம் ஒன்றையும் அறியாமல், வைத்த இடத்தில் வைத்தபடியே கிடக்கின்றது. அவற்றுக்குப் பூசை செய்கிறவர்களும் தாங்கள் ஆராதிக்கிற விக்கிரகத்தின் தன்மையை உற்றாதாய்கிறதே யில்லை. நாம் கும்பிடுகின்ற இச்சிலைக்கு ஜீவன் இல்லையே, இது எப்படி கடவுளாகும்? உயிரற்றதாயிருக்கிற இந்த விக்கிரகம் சாப்பிடுமா? பார்க்குமா? சந்தோஷப்படுமா? கேட்குமா? ஆஹா! இவர்கள் எனக்கு இந்த பக்தர்கள் என்று ஒரு வார்த்தையாவது சொல்லுமா? என்று ஆலோசித்துப் பாராமல் தங்கள் மதியீனத்தில் பெருமை பாராட்டுகிறார்கள். இதை அறிவாளிகள் கண்டு நகைக்க மாட்டார்களா?.

விக்கிரக பக்திக்காரர்களே! ஒருமண் குதிரையானது சவாரிக்கு ஆகாததா யிருக்க, ஒரு விக்கிரகம் நாம் வணங்கத்தக்க சர்வ வல்லமையுள்ள 'கடவுள்' ஆவதெப்படி? ஜீவனும் சாமர்த்தியமும் புத்தியுமுள்ள நீங்கள் ஜீவனும் சாமர்த்தியமும் அறிவுமில்லாத விக்கிரகத்தை வணங்குகிறீர்களே, அது உங்களுக்கு வெட்கமாகத் தோன்றவில்லையா?

இனிமேலாகிலும் நீங்கள் இம் மூடப் பழக்க வழக்கங்களை விடுத்து, நம் வைக்கம் வீரரும் சுயமரியாதை மாபெருந் தலைவருமான திரு. ஈ.வெ. ராமசாமியார் நிலை நாட்டியிருக்கும் சுயமரியாதை இயக்கத்தை அனுசரித்து, உண்மை வழியை நாடுவீர்கள் என்று நம்புகிறேன்." ('திராவிடன்': 7-12-1929).

'குடிஅரசு' படிக்கிறதைப் போன்ற உணர்வு வருகின்றதா? 'குடிஅர'சில் வரவேண்டியதெல்லாம் 'திராவிட'னிலும் வந்தது.

'திராவிடன்' நாளிதழில் பெட்டிச் செய்திகளாக முதன்மை பெற்று வெளியான செய்திகள் சிலவற்றைக் குறிப்பிட விரும்புகிறேன்.

"சுயமரியாதைத் திருமண அழைப்பு: நாளது 8-12-29 ஞாயிற்றுக் கிழமையன்று ஈரோட்டில் நமது மாளிகையில் குருவிக்கரம்பை சாமிநாத முதலியார் குமார் 'ரிவோல்ட்' உதவி ஆசிரியர் திரு. எஸ். குருசாமி அவர்களுக்கும் திருவாரூர் திரு. டி. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் குமாரத்தி திருவளர் செல்வி டி.எஸ். குஞ்சிதம் மாணவி, பி.ஏ. சீனியர் அவர்களுக்கும் சுயமரியாதைத் திருமணம் நடைபெறும். அவ்வமயம் அன்பர்கள் பலரும் வருமாறு கேட்டுக் கொள்ளுகிறோம். தங்களன்புள்ள ஈ.வெ.ரா., ஈ.வெ.ரா. நாகம்மாள், தங்கள் மேலான வரவை எதிர்பார்க்கும். கார்குடி ஆர். சின்னையா, திருவாரூர் எஸ். கோபாலகிருஷ்ணபிள்ளை, மாயவரம் சி. நடராஜன்" ('திராவிடன்: 4--12-1929).

"அகில திருவிதாங்கூர் சமுதாய சீர்திருத்த மகாநாடு நாகர்கோவில் அறிக்கை 1. சுயமரியாதைச் சங்கத்தின் ஆதரவில் அகில திருவிதாங்கூர் சமுதாயச் சீர்திருத்த மகாநாடு நாகர்கோவில் நகரில் 1929 டிசம்பர் மாதம் 27ஆம் தேதி ஆரம்பிக்கப்படும். உயர்திருவாளர் பி. சிதம்பரம்பிள்ளை பி.ஏ., பி.எல். அவர்கள் வரவேற்புக் கமிட்டித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். செங்கற்பட்டு ஜில்லா போர்டு தலைவர் ராவ் பகதூர் எம். கிருஷ்ணசாமி அவர்கள் மகாநாட்டுக்குத் தலைமை வகிப்பார்." ('திராவிடன்': 11-12-1929).

"சுயமரியாதைத் தலைவர்களும் தொண்டர்களும் மலேயா நாட்டுக்குப் புறப்படுகின்றனர். மலேயா நாட்டில் நடைபெறும் அகில பிரிட்டிஷ் மலேயா தமிழர் மகாநாட்டைத் திறந்து வைக்கும் பொருட்டு, திரு. ஈ.வெ. ராமசாமிப் பெரியார் அவர்களும் அவர்களுடன் திருமதி நாகம்மாள், திருவாளர்கள் எஸ். இராமநாதன், சாமி சிதம்பரனார், பொன்னம்பலனார், சி. நடராஜன் முதலானவர்களும் 15-2-29இல் நாகப்பட்டணத்தி லிருந்து 'ரஜூலா' என்ற கப்பலில் புறப்பட்டுச் செல்லுகின்றனர்." ('திராவிடன்' 12-12-1929).

"திருக்குறள் - 1330 பாட்டுக்கும் உரையுடன் நல்ல கிளேஸ் காகிதத்தில் சுத்தப் பதிப்பாக அச்சிட்டது. எல்லா தமிழ்நாட்டுப் பத்திரிகைகளிலும் 'சுத்தப் பதிப்பு - குறைந்த விலை என்று பாராட்டப் பெற்றது. தமிழ் மக்கள் யாவரும் படித்து உணர வேண்டுமென்னும் நோக்கத்தோடு எட்டணா விலை ஏற்படுத்தியுள்ளது. இம்மாதம் 27, 28ஆம் தேதிகளில் நடக்கும் திருவாங்கூர் சமுதாய சீர்திருத்த மகாநாட்டுப் பந்தலில் கிடைக்கும். திராவிடன் பதிப்பகம்" ('திராவிடன்': 28-12-1929).

எல்லைக் கோடுகளுக்குள் தனிப் பெட்டிச் செய்திகள் அனைத்தும் சுயமரியாதை இயக்கத்திற்குத் தொடர்புடையவை. தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தின் நாளிதழ் 'திராவிடன்' எவ்வாறு பயன்பட வேண்டுமென்று பெரியார் விரும்பினார் என்பதை இப்பெட்டிச் செய்திகள் பேசுகின்றன.

*சாமி சிதம்பரனார்*

"சுயமரியாதைச் செழிப்பும் வைதீகர்களின் எதிர்ப்பும்" என்னும் தலைப்பின் கீழ் 12-12-1929ஆம் நாளைய 'திராவிடன்' ஏட்டில் வெளியான சாமி சிதம்பரனாரின் நீண்ட கட்டுரையின் பகுதிகளைக் கேளுங்கள்.

> "நமது சுயமரியாதை இயக்கத்தின் கொள்கைகள் ஒவ்வொருவர் மனத்திலும் அவர்கள் அறியாமலே பரவி நிலைபெற்று வரும் இக்காலத்தில் மேல்நிலையில் இருந்து கொண்டு மற்றவர்களை ஏமாற்றிப் பிழைத்துக் கொண்டிருந்த ஒரு கூட்டத்தார் இப்பொழுது மிகவும் அஞ்சி நடுநடுங்குகின்றனர். அவர்கள் எப்படியாவது இவ்வியக்கத்தைத் தொலைத்து விட வேண்டும் என்று முயற்சி செய்கின்றனர். அவர்களின் முயற்சியைக் காட்டுவதற்குச் சென்னையில் நடைபெற்ற அகில இந்திய சநாதன தர்ம மகாநாடு ஒன்றே தக்க உதாரணமாகும்.
>
> ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறுவகையான தொழில்களும் வருணாசிரம தரும முறைப்படி பார்ப்பனர்களின் தொழில்களாகும். இந்த ஆறு தொழில் களையும் பின்பற்றி நடக்கின்ற பார்ப்பனர்கள் எத்தனை பேர் இருக்கின்றார்கள்? மேற்கூறிய தொழில்களை ஒரு சிறிதும் அறியாமல் எச்சில் கோப்பை கழுவுவதும் விபசாரத் தெருவில் மாமா வேலை செய்வதுமாகிய பார்ப்பன வருணாசிரம தருமத்திற்குப் பொருந்தாத தொழில்களையெல்லாம் தாராளமாகச் செய்து கொண்டிருக்கின்றவர்களுங்கூட வருணாசிரம தருமத்தைப் பற்றிப் பேசுவதென்றால், அதை யோக்கியமான பேச்சென்று கூறுவதா? அயோக்கியத்தனமான பேச்சென்று கூறுவதா?
>
> சாரதா சட்டத்தினால் மதம் போயிற்று என்று இடும் கூக்குரலுக்கு ஏதாவது அர்த்தம் இருக்கிறதா என்று கவனியுங்கள். ஆங்கிலம் படித்து வெள்ளைக்காரனிடம் மண்டிபோட்டு உத்தியோகம் வாங்குவதனாலும், தம் வீட்டுப் பெண்களை உயர்ந்த உத்தியோகஸ்தர்களிடம் அறிமுகம்

> செய்விப்பதனால் உத்தியோகம் வாங்குவதனாலும் ஆங்கிலேயர்களைப் போல் (அவர்களாவது அழுக்கில்லா தவற்றை அணிந்திருப்பார்கள்) உடைதரித்து, உத்தியோக சாலைகளுக்குச் சென்று வீடு திரும்பி வந்து, அவ்வுடைகளைக் கழற்றி வைத்து விட்டு, பழைய காவி பிடித்த அழுக்கு உடையைத் தரித்துக் கொண்டிருந்து, மறுநாள் முன்தரித்த உத்தியோக உடையைத் தரித்துக்கொண்டு செல்வதனாலும், கப்பலேறி அன்னிய நாடு செல்வதனாலும், பன்றிக்கறி, ஆட்டுக்கறி, மாட்டுக்கறி ஆகியவைகளைத் தின்பதனாலும் கள், சாராயம் முதலியவற்றைக் குடிப்பதனாலும் போகாத மதம் சாரதா சட்டத்தினால் போய் விட்டது என்ற கூறுவது எவ்வளவு மதியற்ற தன்மையாகும்?
>
> சென்னையில் கூட்டம் கூட்டித் தீர்மானஞ் செய்த வைதீகக் கூட்டத்தினர் இனி வெளிப்படையாகப் பிரசாரஞ் செய்யப் புறப்படும் நாளை எதிர்ப்பார்க்கின்றோம்."

சாமி சிதம்பரனாரின் சாடலில் எத்தனை உண்மைகள் மண்டிக் கிடக்கின்றன! அவரின் இந்த நெடிய கட்டுரை பொடி எழுத்துகளில் 'திராவிடன்' நாளிதழில் அச்சேறியிருந்தன.

## சிதம்பரம் – கோயில் நுழைவு

'திராவிடன்' 16-12-1929ஆம் நாளிதழில் வெளியிடப்பெற்ற ஆசிரியவுரை குறிக்கத் தக்கது.

> "சிதம்பரத்தில் ஆதி திராவிடர்கள் கோயிலுக்குள் நுழைந்து விடுவார்களென்று தீட்சதர்கள் நடுக்கம் கொண்டிருக்கிறார்கள். அதற்காகப் போலீஸ் படையையும் வைத்திருக்கின்றார்களாம். சிதம்பரம் நடராஜர் கோயில் தீட்சதர்களின் அப்பன் வீட்டுச் சொத்தல்ல; அல்லது ஆத்தாள் வீட்டுச் சொத்தல்ல. தீட்சதர்களுக்கு அதில் நுழைய எவ்வளவு உரிமையுண்டோ அவ்வளவு உரிமையுண்டு ஆதிதிராவிடர்கட்கும். தீட்சதர்களைக் காட்டிலும் ஆதிதிராவிடர்கள் ஒழுக்கத்திலும் குணத்திலும் மேம்பட்டவர்கள்.
>
> ஆருத்திரா தரிசனத்தில் சத்தியாக்கிரகம் செய்தால், ஒரு பெருங் குழப்பம் ஏற்படும் என்பது திண்ணம். ஆகையால் சத்தியாக்கிரகத்தை இன்னும் ஒரு மாதம் கழித்து வைத்துக் கொள்ளலாம் என்ற முடிவுக்கு வந்துள்ளோம். தில்லை நடராஜரையும் அவர் கோயிலையும் அவர்களின் பாட்டன்

வீட்டுச் சொத்து என்று கருதிக் கொண்டிருக்கும் தீட்சதர்களையும் நாம் சும்மா விடப் போவதில்லை. ஒரு கை பார்த்துவிடுவது என்று தான் முடிவுகட்டியுள்ளோம். இந்தச் சத்தியாக்கிரகத்திற்கு ஆயிரம் ஆதித்திராவிடச் சிறுவர்கள் வருவதாகப் பல ஊர்களிலிருந்து எழுதியிருக்கிறார்கள்"

'திராவிடன்' நாளிதழின் மற்றோர் ஆசிரியவுரையில் காணப்படுவது "பினாங்கு இந்து சபையார் சுயமரியாதை இயக்கத்தை அடக்குவதற்காக இந்து மதப் பிரசாரம் செய்யப் போகின்றார்களாம். இது நன்றே! இந்து மதப் பிரசாரம் செய்தால்தான் சுயமரியாதை இயக்கத்தின் உண்மைகள் தானாகப் பரவும். அப்பொழுது நமக்கு வெற்றி ஏற்படும்.

அவர்களின் பிரசாரத்தால் அவர்கள் நம் இயக்கத்தின் ஒரு துரும்பைக் கூட அசைக்க முடியாது. நமது இயக்கத்தை ஒழிப்பதற்கு லோக குருக்களும் சங்கராச்சாரிகளும் மடாதிபதிகளும் அவர்களின் சீடர்களும் கூலிகளும், பிராமண வக்கீல்களும் உத்தியோகஸ்தர்களும், அவர்களின் கொழுத்த பத்திரிகைகளும் எவ்வளவோ பிரசாரமும் சூழ்ச்சிகளும் செய்தனர். இவ்வளவு செய்தும் நம் இயக்கம் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டுதான் போகின்றதே யொழிய குறைந்த பாடில்லை!

பினாங்கு இந்து சபையார் மலாய் நாட்டில் சுயமரியாதைப் பிரசாரம் நடைபெற எந்த இந்து சபையார் இடங்கொடுக்க கூடாது என்று தீர்மானம் நிறைவேற்றியிருக்கின்றார்கள். சுயமரியாதைக் காரர்கட்குப் பிரசங்கம் செய்ய வேறு இடம் இல்லையோ! என்ன அறியாமை!" ('திராவிடன்': 4-11-1929).

சுயமரியாதை இயக்கக் கருத்துகள் அடங்கிய கட்டுரைகள் 'திராவிட'னில் இடம் பெற்றன என்னும் உண்மையை உறுதி செய்யும் எடுத்துக் காட்டுகளே இவை.

'குடிஅரசு' இதழ்களில் இடம் பெற்றது போலவே, "ஜாதிப் பிரிவினில் தீ மூட்டுவோம்!", "கடவுள் கடவுளெனக் காசைத் தொலையாதே!" முதலிய சிறுசிறு ஒலி முழக்கங்கள் 'திராவிடன்' நாளேட்டிலும் இடம் பெற்றன. 'திராவிடன்' நாளிதழில் முதற்பக்கத்தின் மேற்பகுதியில் இடம்பெற்ற இதழ்ப் பெயராகிய 'திராவிடன்' என்பதற்கு இரண்டு பக்கங்களிலும் 'ஞானசூரியன்', இராமாயண ஆபாசம், சாமிகளின் அடிமைகள் போன்ற நூல்களின் விளம்பரங்கள் பெட்டிச் செய்திகளாக அச்சிடப்பெற்றன. அந்நூல்கள் 'திராவிடன் பதிப்பக' வெளியீடுகளாகக் காட்டப்பட்டன.

அதே போன்ற '14, மவுண்ட் ரோட், சென்னை' என்ற முகவரி கொண்ட 'திராவிடன் பதிப்பகம்' எட்டணா விலைக்கு (அரை ரூபாய்) திருக்குறள் நூல் வழங்குவதாகத் 'திராவிடன்' பெட்டிச் செய்தி வெளியிட்டது.

'திராவிடன்' நாளேட்டின் பதிப்புச் செய்தியாக (imprint). "Printed and Published by J.S. Kannappar at Dravidian Press, Madras" எனக் காணப்படுவதால் திராவிடன் பதிப்பகம் எது என்பது நமக்கு அய்யமின்றி தெளிவாகிறது.

முதலாம் சுயமரியாதை மாநில மாநாட்டின் போது எப்படி 'திராவிடன்' சிறப்பு மலரொன்று வெளியிட்டதோ, அப்படியே ஈரோட்டில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இரண்டாம் சுயமரியாதை மாகாண மகாநாட்டை யொட்டியும் 150 பக்கங்கள் கொண்ட சிறப்பு மலரொன்றை வெளியிடத் 'திராவிடன்' முனைந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

சுயமரியாதை இயக்க நடவடிக்கைகள் பற்றிய செய்திகள் அத்தனையையும் 'திராவிடன்' நாளேடு வெளியிடத் தயங்கவில்லை.

'திராவிடன்' இதழின் ஆசிரியராகப் பொறுப்பாற்றிய ஆற்றல் நிரம்பிய ஜனக சங்கர கண்ணப்பர் முழு ஒத்துழைப்புக் கொடுத்தார் என்பது நன்றாகப் புலப்படுகிறது.

இதழ் வெளியிடும் கடமையில் மட்டுமின்றி இயக்க நடவடிக்கைகளிலும் கண்ணப்பர் பெரியாருடன் இணைந்து ஈடுபட்டார். ஒரு முறை இருவரும் சீர்காழிக்குச் சென்றபோது, "கண்ணப்பன் பறையன், இராமசாமி சக்கிலியன். இருவரும் சீர்காழிக் கோயிலிருக்குள் நுழையப் போகிறார்களாம். கோயில் தீட்டாகிவிடும். பொதுமக்களே, உஷார்! என்பதாக வைதீகர்கள் எழுதி வைத்தார்கள் என்னும் செய்தி கண்ணப்பரின் பங்களிப்பைப் பற்றி உணர்த்துகிறது.

## 'திராவிடன்' இதழ் பொறுப்பிலிருந்து பெரியார் விலகல்

பெரியார் தம் விருப்பப்படியே 'திராவிடன்' ஏட்டை நடத்தினார் என்பது உண்மை. எனினும் இழப்பையே அவர் சுவைக்க நேர்ந்தது. பிறரின் சுமைகளை வலியச் சென்று வாங்கித் தம் தோள்களில் போட்டுத் தாங்கிக் கொள்ளும் பேருள்ளம் பெரியாருக்கு இருந்தது என்பதைக் காட்டுவதுதான் 'திராவிடன்' பொறுப்பினை அவர் ஏற்றுக் கொண்ட நிகழ்ச்சி. ஒரு கட்டத்தில் அப்பொறுப்பி லிருந்து அவர் விடுபட நேர்ந்தது. காரணத்தைப் பின்னாளில் பெரியாரவர்கள் குறித்துள்ளார்.

> *'திராவிடன்' பத்திரிகை நடத்தும்போது ஜஸ்டிஸ் கட்சியார் பத்திரிகை நஷ்டத்திற்கு மாதாமாதம் கொடுப்பதாக வாக்குக் கொடுத்த ரூபாயில் ஒரு காசு கூடக் கொடுக்கவேயில்லை. அதனால் சுமார் 20, 30 ஆயிரத்துக்கு மேல் வெளியாரும் ஈ.வெ.ரா.வும் கை நட்டப்பட வேண்டி வந்தது. அதற்காக ஆதியில் பெருந்தொகை வாக்குக் கொடுத்த சில தோழர்கள் அக்காலத்தில் 'திராவிட'னுக்குச் சுமார் 3,4 ஆயிரம் ரூபாய் மாத்திரமே கொடுத்தார்கள். இதைத் தவிர ஒருவரும் கொடுக்கவில்லை. ('குடிஅரசு': 29-3-1936).*

இதழினை நடத்தித் தரும் கடமையைச் சுமந்த பெரியாருக்குப் போதுமான அளவிற்குப் பொருளுதவி கிடைக்கவில்லை. உதவி செய்ய உறுதியளித்த தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தின் உறுப்பினர்களா யிருந்த செல்வர்கள் சொல்லியவண்ணம் உதவவில்லை! அறிவையும் உழைப்பையும் நல்கிய பெரியாருக்குப் பெரிய அளவில் பண இழப்பு ஏற்பட்டு வந்தது.

இன்னொரு காரணமும் வாய்ந்தது. பெரிய கற்பனைகளையும் அரிய திட்டங்களையும் உள்ளத்தே தேக்கிக் கொண்டு, பெருமுயற்சி யெடுத்து ஈரோட்டில் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டு வந்த, 'குடிஅரசு' 'ரிவோல்ட்' ஆகிய தம் ஏடுகளைச் சென்னைக்குக் கொண்டு வந்து அவ்விதழ்களின் புதிய முகவரிகளையும் வெளியிட்ட பெரியார், அவற்றை மீண்டும் ஈரோட்டிற்கே கொண்டு செல்லத் தீர்மானித்து, 1929ஆம் ஆண்டின் இறுதியில் அவ்வாறே செய்தும் விட்டார். இத்தகைய சூழ்நிலையில் சென்னையில் வெளியாகிக் கொண்டிருந்த 'திராவிடன்' நாளிதழ்ப் பொறுப்பையும் நிறைவேற்றுவது நடைமுறையில் இயலாத ஒன்றாக அந்தக் காலத்தில் இருந்தது.

தாம் நடத்தி வந்த கொள்கை இதழ்களுக்கோ அரசு அதிகாரிகளால் அடுக்கடுக்காகத் தொல்லைகள் விளைந்தபடி யிருந்தன. அவற்றையும் எதிர்கொண்டு வெல்ல நிறைய நேரம் தேவைப்பட்ட நிலையில், 'நீதிக்கட்சி'யின் இதழ் தொடர்பாகவும் செலவு செய்யப் போதிய நேரம் கிட்டவில்லை அவருக்கு. எனவே 'திராவிடன்' மேலாண்மைப் பொறுப்பிலிருந்து நாணயமாக விலகிக் கொண்டார் பெரியார்.

******

# ஆர்த்தது ஆங்கில 'ரிவோல்ட்'!

தமிழ்நாட்டில் 'குடிஅரசு' இயக்கம் - அதாவது சுயமரியாதை இயக்கம் - சுழன்று சுழன்டிறத்துக் கொண்டிருந்த போதிலும், பெரியாரவர்களின் உள்ளத்தில், 'நமது நிலைமை சென்னை மாகாணத்திலேயே தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய பாஷைகளை நாட்டு பாஷையாகக் கொண்ட பல ஜில்லாக்களுக்கே தெரியவில்லை என்றால், வெளி மாகாணங்களுக்கும் வெளிதேசங்களுக்கும் எப்படித் தெரிந்திருக்க முடியும்?" என்ற வினா அலையாக மோதமோத, 'நமது நிலைமையையும் கொள்கையையும் தமிழ் மக்கள் தவிர மற்ற மக்களுக்கும் தெரிவிக்க வேண்டும்' என்னும் ஆவல் சுரந்தது. ஆவல் அறிக்கை வடிவம் பெற்றது.

> "ஸ்ரீமான்கள் ராஜகோபாலாச்சாரியும் கே. நடராஜன் போன்றவர்களும் மற்றும் சில சுயநலக்காரர்களும் கூலிகளும் நமது பிரசாரத்திற்கு விரோதமாக ஆங்கிலத்தில் பத்திரிகை மூலியமாயும் வியாசங்கள் மூலியமாயும் பிரசாரம் செய்கிறபடியாலும், நமது பிரசாரமும் பத்திரிகையும் தமிழிலேயே இருப்பதாலும் அது தமிழ் நாட்டை விட்டு வெளியில் போக மார்க்கமில்லாமல் இருப்பதாலும் ஆங்கிலத்தில் ஒரு வாரப் பத்திரிகை 'குடிஅரசு'க் கொள்கையை ஆதாரமாகக் கொண்டு ஆரம்பிக்க வேண்டுமென்பதாக ஒரு யோசனை தோன்றியிருக்கிறது.
>
> அப்பத்திரிகைக்கு 'ரிவோல்ட்' (Revolt) எனப் பேர் கொடுப்பதென்றும் தீர்மானித்திருக்கிறோம். அப்பத்திரிகைக்குக் கௌரவ ஆசிரியர்களாக இருக்க, சில ஆங்கிலம் கற்ற நண்பர்கள் வாக்களித்திருக்கிறார்கள். பல அறிஞர்கள் அரிய விஷயதானம் செய்யவும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.
>
> அப்பத்திரிகையைத் தற்காலக் 'குடிஅரசு' அளவில் 8-பக்கம் கொண்டதாகவும் வருஷ சந்தா ரூபாய் 3 ஆகவும் வைத்து வெளிப்படுத்தத் தீர்மானித்துள்ளோம். சமீபத்தில் வெளியிட முயற்சித்துக் கொண்டிருக்கிறோமாதலால் நண்பர்கள் சந்தாதாரர்களாய்ச் சேரவும், மற்றும் கூடிய உதவிகள் செய்யவும் முன் வர வேண்டுமாய் வேண்டிக் கொள்கிறோம். ('குடிஅரசு': 25-3-1928).

இந்த அறிவிப்பிற்குப் பிறகு உடனடியாக இதழை வெளியிடப் பெரியாரால் இயலவில்லை. 7 மாதங்களுக்கும் மேலாக அவர் காத்திருக்க வேண்டியதாயிற்று. அதன் காரணங்கள் ஒரு பொறுப்புணர்வு நிறைந்த இதழாளர் எனும் வகையில் அவர் வெளியிட்ட ஓர் இடைக்கால அறிக்கையில் தெளிவாயின. 'ரிவோல்ட்' என்னும் ஆங்கில வாரப் பத்திரிகையின் பதிப்பாளராகவும் வெளியிடுவோராகவும் மேஜிஸ்ட்ரேட் முன்னிலையில் பதிவு செய்து கொள்ள ஸ்ரீமதி நாகம்மாள் 19-4-28இல் மறுபடியும் கோர்ட்டுக்குப் போனதில், மேஜிஸ்ட்ரேட் தான் இது விஷயமாய்ப் போலீசாரை ரிப்போர்ட் கேட்டு விட்டிருப்பதாகவும் அது வந்த பின்தான் பதிவு செய்து கொள்ள முடியும் என்றும் சொல்லி, பதிவு செய்து கொள்ள மறுத்து விட்டார்.

பிறகு போலீசார் 'ரிவோல்ட்' என்னும் பத்திரிகையின் கொள்கை என்ன என்பது பற்றியும் மற்றும் பல விஷயங்களைப் பற்றியும் இரகசியமாகவும் வெளிப்படையாகவும் வேவு விசாரித்து வருவதாகத் தெரிகிறது. இன்ஸ்பெக்டர் கேட்ட கேள்விகளுக்கு அடியிற் கண்ட ஸ்டேட்மெண்ட் எழுதிக் கொடுக்கப் பட்டிருக்கின்றது.

'ஈரோடு டவுன் கச்சேரி வீதியிலிருக்கும் உண்மை விளக்கம் பிரஸ் புரோப்ரைட்ரெஸ் ஸ்ரீமதி நாகம்மாள் எழுதிக் கொடுத்த ஸ்டேட்மெண்ட்:-

> இப்பவும் மேற்படி பிரசில் 'ரிவோல்ட்' என்கின்ற ஆங்கில வாரப் பத்திரிகை நடத்துவதின் கருத்து, இப்போது நான் பதிப்பாளராக இருந்து நடத்தும் 'குடிஅரசு' என்னும் தமிழ் வாரப்பத்திரிகையின் கொள்கைகளையே முக்கியமாகக் கொண்டு நடத்துவதற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. 'Revolt' என்ற வார்த்தைக்கு நான் எடுத்துக் கொண்ட அர்த்தம் கட்டுப்பாட்டை உடைத்தல் என்பது. அதாவது மனித தர்மத்துக்கும் மனித இயற்கைக்கும் விரோதமாக அரசியலினாலும் சரி, மத இயலிலானாலும் சரி, அதிகார இயலிலானாலும் சரி, முதலாளி இயலிலானாலும் சரி, ஆண் இயலிலானாலும் சரி மற்றும் எவைகளிலானாலும் சரி, அவைகளினால் ஏற்படும் இயற்கைக்கும் அறிவுக்கும் மாறுபட்ட கட்டுப்பாடுகளை உடைத்து, உலகமும் அதன் இன்பமும் எல்லோருக்கும் பொது என்பதும், மக்கள் யாவரும் சமம் என்பதுமான கொள்கையை மனசாட்சிப் படி சாத்தியமான வழிகளில் பிரசாரம் செய்வதே அதன் நோக்கம், இதற்கும்

பத்திராதிபராக என் கணவர் ஸ்ரீமான் ஈ.வெ. ராமசாமி நாயக்கர் இருப்பார்:

இதன் மேல் போலீசாரின் அறிக்கை இன்னது என்றும், மாஜிஸ்ட்ரேட் எப்பொழுது பதிவு செய்து கொள்வார் என்பதும் குறிப்பாய்த் தெரியவில்லை". ('குடி அரசு':)

இவ்விளக்க அறிக்கை, பெரியாரைக் கண்டும், 'ரிவோல்ட்' என்ற பெயரைக் கேட்டும் அன்றைய வெள்ளைக்கார அரசு எப்படி வெகுண்டது என்பதை ஆழமாக நமக்கு உணர்த்துகிறது.

இறுதியாக 'ரிவோல்ட்' வெளியாகிவிட்டது. அதன் வெளியீட்டு விழா 6-11-1928 அன்று பெருஞ்சிறப்போடு நடந்தேறியது.

விழாவிற்குக் கோவை இரத்தின சபாபதியார் தலைமை யேற்றார். 7-1-28 ஆம் நாளிட்ட 'ரிவோல்ட்' தாளிகையின் முதல் இதழை ஊ.பு.அ. சவுந்தரபாண்டியனார் வெளியிட்டார்.

வரவேற்புரை யாற்றிய பெரியார், "நம் பார்ப்பனரல்லாதார் கட்சி எவ்வளவோ முக்கிய அடிப்படையான நோக்கங்களுக்காக ஆரம்பிக்கப்பட்டிருப்பது நம் மாகாணத்தில் உள்ளவர்களுக்கு நன்கு தெரிந்ததே. ஆனால் வடநாட்டில் உள்ளவர்களுக்கு இந்த இயக்கத்தைப் பற்றி அறிந்து கொள்ளப் போதிய ஏது இல்லாததும் வட நாட்டினர் இவ்வியக்கத்தைப் பற்றிச் சிறப்பாக அறிந்து கொள்ளாமலிருப்பதும் அவ்வளவு ஆச்சரியமல்ல.

முக்கியமாக நமக்கு எதிரிகள் பார்ப்பனர்கள் என்று எண்ணியிருந்தோம். ஆனால் அவர்கள் கூடுமானவரை எதிர்த்துப் பார்த்தார்கள். பின்னர் தங்கள் பித்தலாட்டக் காரியம் இங்கே செல்லாது என்று கண்டு அவர்களே இவ்வியக்கம் அவசியம் வேண்டியதுதான் என்று வெளியளவிலாவது சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஆனால் நமக்கு எதிரிகள் நமக்குள்ளாகவே இருக்கிறார்கள்.

ஏறக்குறைய தென்னாட்டிலும் முக்கியமாக தமிழ் மக்களிடையேயும் நமது நோக்கம் எல்லாருக்கும் பிடித்திருக்கும். இது பிடியாதது யாருக்கென்றால் நம்மவர்களிலே மதப் பைத்தியம் பிடித்தவர்களுக்கும் பண்டிதர்கள் என்பவர்களுக்கும் 100க்கு 90 பங்கு பிடியாது. நம் இயக்கத்தின் முக்கிய நோக்கமானது பழைய மூடப் பழக்க வழக்கங்களை அடியோடு ஒழிப்பது, வேதம் புராணம் இவைகளின் புரட்டுகளை

> வெளியிடுவது, நம் பகுத்தறிவை உபயோகித்து, மேல் நாட்டார்களைப் போல, அநேக முன்னேறத் தக்க அற்புதங்களைக் கண்டு பிடிப்பதுமே யாகும்."

என்று விளக்கி, இந்த நோக்கத்தோடுதான் 'ரிவோல்ட்' வெளியாவதாகக் குறிப்பிட்டார்.

நன்றி நவின்ற கண்ணப்பர் கூறிய செய்தி எவருக்கும் உள்ளக் கிளர்ச்சியினை மூட்டவல்லது. 'ரிவோல்ட்' இதழினை வெளியிடுதற்குச் சவுந்தர பாண்டியனார் அழைக்கப்பட்டதன் நோக்கத்தை இப்படித் தெரிவித்தார் அவர்.

> "திரு நாடார் அவர்களை நீங்கள் எல்லாரும் இப்போது அறிவீர்கள். அவர்கள் இன்றைக்கு ஆண்டுக்கு ஒரு இலட்சத்திற்கு மேல் வருவாய் உள்ளவர். படிப்பிலோ போதிய வல்லமை யுள்ளவர். ஆறு வருடகாலமாகச் சென்னை சட்டசபையில் உறுப்பினராக இருந்து பொது மக்களுக்கு ஊழியஞ் செய்திருக்கிறார். இப்பேர்ப்பட்ட பெரியவரை மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி முதலிய இடங்களிலுள்ள கோவில்களில் உள் சென்று வழிபட முடியாதபடி செய்திருக்கும் நாடு எவ்வளவு கேவலமானது! அதற்காகவே அப்பெரியாரைக் கொண்டே 'ரிவோல்ட்' திறப்பு விழாவை நடத்த வேண்டுமெனக் கொண்டோம்".

## ரிவோல்ட் இதழ் குறித்து குடியரசில் பெரியாரின் அறிக்கை

'ரிவோல்ட்' இதழ் 1928 நவம்பரில் வெளியான நிலையில், பெரியார் 'குடிஅரசி'ல் அறிக்கை யொன்று வெளியிட்டார். அதன் ஒரு சில பகுதிகளையேனும் குறிப்பிடுதல் தகும்.

> 'ரிவோல்ட் என்னும் ஆங்கில வாரப் பத்திரிகை ஒன்றைச் சென்ற ஆறாம் தேதி செவ்வாய்க் கிழமை பட்டிவீரன்பட்டி திரு சவுந்தர பாண்டிய நாடார் அவர்களைக் கொண்டு திறப்பு விழா நடத்தி, 7ஆம் தேதி புதன்கிழமை முதல் இதழ் வெளிப்படுத்திவிட்டோம். இனி அதை ஆதரித்து, அதன் கொள்கைகளை வெற்றி பெறச் செய்து வைக்க வேண்டியது பொதுமக்களின் கடமையாகும்.
>
> ஒரு சமயத்தில் இந்தியா மந்திரியுடன் நமது திரு. டாக்டர் டி.எம். நாயர் அவர்கள் பேசிக் கொண்டிருந்த போது, 'சென்னைப் பார்ப்பனரல்லாதாருக்காகப் பெரிய உத்தியோகங்கள் அளிக்கப்படவில்லை' என்று சொன்ன போது, 'திரு. B.N. சர்மா

என்பார் இந்திய அரசாங்கத்தில் நிர்வாக சபை மெம்பராயிருந்து 6500 ரூபாயும் சம்பளம் வாங்குகிறாரே அது போதாதா? என்று இந்தியா மந்திரி சொன்னாராம். அதற்குத் திரு. டாக்டர் நாயர் அவர்கள், “நான் இந்தியாவை விட்டுப் புறப்படும் வரை திரு B.N. சர்மா அவர்கள் பார்ப்பனராயிருந்தார்; நான் புறப்பட்ட பிறகு அவர் ஏதாவது பார்ப்பனரல்லாதாராய் விட்டாரோ என்னவோ எனக்குத் தெரியவில்லை. தயவு செய்து அவர் பார்ப்பனரல்லாதாராக ஆகியிருப்பதாகத் தங்களுக்கு வந்த செய்தியைக் காட்டுகிறீர்களா?” என்று கேட்டாராம். அதன்பிறகு அந்த இந்தியா மந்திரி திடுக்கிட்டு, ‘நான் இத்தனை நாளாக அவரைப் பார்ப்பனரல்லாதார் என்று தான் நினைத்துக் கொண்டிருந்தேன்; இப்போது தாங்கள் சொல்வது எனக்கு ஆச்சரியமாய் இருக்கின்றது!” என்று சொன்னாராம்.

அதுபோலவே சென்னையில் சென்ற வருடம் நடந்த காங்கிரசுக்காக, கல்கத்தாவிலிருந்து வந்த முக்கியஸ்தர்களில் ஒருவரான திரு கோஸ்வாமி என்கிறவரோடு நாம் பேசிக் கொண்டிருந்த போது, ‘சென்னை மாகாணத்தில் தெருவில் நடக்கக் கூடாதவர்களும் கோயிலுக்குள் போகக் கூடாதவர்களும் தொடக் கூடாதவர்களும், நிழல் மேல்படக் கூடாதவர்களும் இருக்கின்றார்களே, அவர்களைப் பற்றித் தங்கள் அரசியல் திட்டத்தில் என்ன கவலை எடுத்துக் கொண்டிருக்கிறீர்கள்?’ என்று கேட்டபோது, அவர் ஆச்சரியப்பட்டு, ‘அப்படி ஒன்றும் இருப்பதாக எனக்கு இதுவரை தெரியவே தெரியாது. இது உண்மையா?’ என்று பக்கத்தில் இருந்த திரு. ஆர். கே. சண்முகம் செட்டியாரைக் கேட்டார். அதற்குத் திரு. சண்முகம் செட்டியாரவர்கள் சிரித்துக் கொண்டே, ‘இதற்குச் சாட்சிக்காக அதிக தூரம் போகாதீர்கள். நானே சில கோயிலுக்குள் போகக் கூடாத சாதி என்பதைச் சேர்ந்தவன். அய்க்கோர்ட் வரையில் விவகாரம் செய்து பார்த்தும், எங்களை அந்தக் கோயிலுக்குள் போகக் கூடாத சாதியிலேயே சேர்த்துத் தீர்ப்புப் பெற்றுவிட்டார்கள். எனவே, இனி உங்களுக்கு ஏதாவது சந்தேகமுண்டா?’ என்று கேட்டார். பிறகு திரு. கோஸ்வாமி பட்ட ஆச்சரியத்திற்கு அளவே இல்லை.

இதுபோலவே, பல உதாரணங்கள் எடுத்துக்காட்டலாம். எனவே நம் நிலையையும் தேவையையும் வெளிநாட்டார்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தெரியப்படுத்த வேண்டுமானால் தாட்சண்யமும், பயமும், சுயநலமும் அற்ற

தன்மையில் தைரியமாய் வெளிப்படுத்தக்கூடிய ஒரு சாதனம் இருந்தாக வேண்டும் என்ற கருத்தைக் கொண்டே, 'ரிவோல்ட்'டை ஆரம்பித்து விட்டோம். அதன் கொள்கை பற்றி நாம் அதிகமாகச் சொல்லிக் கொள்ள வேண்டியதில்லை என்றே நினைக்கின்றோம்........

இதற்கு முக்கிய பத்திராதிபராக திரு. எஸ். இராமநாதன் எம்.ஏ., பி.எல். அவர்கள் இருந்து வருவார். நாமும் அதில் பங்கெடுத்து வருவோம். எனவே இதை வாலிப உலகம் ஆதரிக்க வேண்டும், என்று கேட்டுக் கொள்ளுகின்றோம். எம் வாலிப நண்பர்கள் ஆங்காங்குள்ளவர்கள் ஒவ்வொருவரும் தாங்கள் சந்தாதாரராய்ச் சேருவதுடன், ஒவ்வொருவரும் இது சமயம் மூன்று சந்தாதாரர்களுக்குக் குறையாமல் சேர்த்து விட்டு மறுகாரியம் பார்ப்பது என்கின்ற உறுதியைக் கொள்ள வேண்டுகின்றோம்." ('குடிஅரசு': 11-11-1928).

## 'ரிவோல்ட்' இதழின் அமைப்பு

ஓர் ஆங்கில இதழை வெளியிட வேண்டிய இன்றியமையாத சூழ்நிலையை நல்ல முறையில் விளக்கியும், அதற்கு ஒத்துழைப்புத் தருமாறு இளைஞர்களுக்கு வேண்டுகோள் விடுத்தும், பெரியார் இட்ட அறிக்கை அவரைச் சிறந்த இதழாளராக உறுதிப்படுத்துகின்றது.

'ரிவோல்ட்' இதழின் முகப்புப் பக்கத்தில் இடம்பெற்ற இதழின் பெயர் அச்சிடப்பட்டிருந்த முறையே அனைவரின் கவனத்தையும் ஈர்க்கும் வண்ணம் அமைந்திருந்தது. 'REVOLT' என்று முற்றிலும் பருத்த எழுத்துகளாலோ, அல்லது 'Revolt' என்பதாக முதலெழுத்து மட்டும் பெருவெழுத்தைக் கொண்டதாகவோ பொறிக்கப்படாமல், 'revolt' என்று முழுக்கச் சிற்றெழுத்துகளைக் கொண்டு கூட்டெழுத்தாக வரையப் பெற்றும், அப்பெயர் மட்டும் சிவப்பு வண்ணம் அணிந்தும் கவர்ச்சி காட்டியது!

தொடக்கத்தில் "Edited by E.V. Ramasamy, S. Ramanathan" என்று இதழின் முதற்பக்கத்து வலது மேல் மூலையில் அச்சிடப்பட்டிருந்தாலும், ஒரு கட்டத்திற்குப் பிறகு பெரியார் பெயர் மட்டுமே இடம் பெற்றது. இதழின் துணையாசிரியராகக் (குத்தூசி) குருசாமி பொறுப்பேற்று, தன் முழு ஆற்றலையும் ஆங்கிலப் புலமையையும் பயன்படுத்திப் பெரியாருக்கு உதவி செய்திருக்கிறார்.

முதலில் புதன் கிழமைதோறும், பின்னர் ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையன்றும், வெளிவந்த 'ரிவோல்ட்' சக்கைப் போடு

போட்டு, ஆங்கிலம் பயின்றவரிடையே நல்ல மதிப்பை ஈட்டியது. உள்நாட்டில் மட்டுமின்றி வெளிநாடுகளிலும் அதற்கு வரவேற்பு இருந்தது என்பதை இதழின் ஆண்டுக் கட்டணக் குறிப்புகள் காட்டுகின்றன. தொடக்கத்தில் ஈரோட்டிலிருந்தும், இடையிலே சென்னையிலிருந்தும், பின்னர் மீண்டும் ஈரோட்டிலிருந்தும் 'ரிவோல்ட்' வெளியாகியது. விலை அக்காலத்து ஓரணா. அதாவது அன்றைய ரூபாயின் பதினாறு கூறுகளில் ஒன்று.

## 'Eaviyar'

பெரியார் அவர்கள் 'Eaviyar' எனும் பெயரில் 'ரிவோல்ட்' இதழில் எழுதினார். அவரின் வன்மை நிரம்பிய எழுத்துக்கு ஓர் எடுத்துக்காட்டு: திருவில்லிப்புத்தூர் வட்டார மாநாட்டில் பேசிய அரசியல் பார்ப்பனத் தலைவர் சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரி அவர்கள், "நம்முடைய முந்தையர் அனைவருமே அறிவிலிக் கூட்டமாயும் போக்கிரிக் கூட்டமாயும் இருந்தார்கள் என்று நாம் கற்பனை செய்யாதிருப்போமாக! அவர்கள் அவ்வாறு இருந்திருப்பார் களேயானால் அவர்களின் வழித்தோன்றல்கள் தெய்வீக ஆற்றலுடையோராகவும் நலமார்ந்தோராகவும் இருக்க முடியாது" என்று குறிப்பிட்டதற்கு, 'THE CHOTA GANDHI' என்று தலைப்பிட்டு விடை எழுதினார் பெரியார்.

"முட்டாள்களாலும் கயவர்களாலும் தெய்வீக ஆற்றலும் நலமும் வாய்ந்த மக்களை ஈன்றெடுக்க முடியாது என்னும் கருத்தை அவர் (இராசகோபாலாச்சாரி) கொண்டிருக்கிறார். நேரெதிரான இவ்விரட்டை அடைத் தொடர்களிடையே அமைந்துள்ள கூர்மையான முரண்பாடுகள் ஒருபுறம் இருக்க, நம்மால் ஒன்றைப் புரிந்து கொள்ள இயலவில்லை!

ரிஷிகளின் வழித்தோன்றல்கள் (பார்ப்பனர்) - அவர்களின் மூதாதையர் செய்திருப்பதாகச் சொல்லப்படுவதுபோல - எல்லாம் வல்ல கடவுளோடு தெய்வீகச் செய்தித் தொடர்பு கொள்ளுவதில் மனமாழ்வதை விட்டு விட்டு, உணவுக் கடைகளையும் சலவையகங்களையும் நடத்துகின்ற தேவைக்குக் குன்றிப் போய்விட்டது ஏன்?"

**("He is of opinion that fools and rogues cannot beget wise and good people. Apart from the sharp differences between the pairs of these opposite epithets, we are at a loss to know why the descendants of the Rishis are reduced to the**

**necessity of keeping coffee hotels and laundries without indulging in devine communication with the omnipotent God, as their forefathers are said to have done".) - REVOLT, Vol.1. No. 51 dated 3-11-1929.**

பெரியாரின் இவ் வினாவிற்கான விடையை எவரால்தான் தர முடியும்? 'குடிஅரசி'ன் கொள்கையே ஆங்கில வரிவடிவம் கண்டது.

இப்படிப்பட்ட புரட்சிக் கருத்துகளைத் தாங்கிய கட்டுரைகளைக் கொண்டு கிழமைதோறும் வெளிவந்து, எதிரிகளைப் பெரிதும் கலக்கியது! பெரியார் விரும்பிய வண்ணம் ஆசிரியர்ப் பொறுப்பேற்ற, நல்ல படிப்பாளியும் அறிவாளரும் 1930-களில் பெரியாரின் வெளிநாட்டுச் சுற்றுப் பயணங்களின் போது உடன் சென்றவருமான எஸ். இராமநாதனவர்கள் 'ரிவோல்ட்' முதல் இதழில் வடித்த 'OURSELVES' என்னும் ஆசிரியவுரை, இதழின் இலக்கையும் அதனை வெளிப்படுத்தும் அவரின் புலமைத் திறத்தையும் காட்டுவதாகும். எடுத்துக்காட்டுக்கு இரண்டு பத்திகள்:

**"In unhappy India today there is an orgy of oppression. A cloud engulfs the mass mind. The vision is blurred and action is motivated by unrealities. The dead past is eating like a canker into the vitals of the Nation. Parasites are sucking the very life blood. Blind tradition holds undisputed sway. Love, intelligence and the finer sensibilities are hushed. There is a crying need for the clear formulation and the courageous execution of a programme of social reconstruction that will not be satisfied with mere lip loyalties but will insist on the transformation of the fundamentals of the people's lives".**

**"The wish to declare emphatically that we are for peace, Non-violence is our very creed. We shall not hurt a single living being. We wish well of our adversaries. To the Wrongdoer we have not antipathy but compassion. We seek to destroy tyrannies. Our fight is against systems. We befriend men and women. A messenger of peace is loath to raise the standard of Revolt. But he falsifies his creed if he**

**permits wrong to go forth unchallenged. The inner voice points to our duty. We dare not hesitate any longer. We unfurl the flag and we will not lower it until our hands are smitten into the dust. We will not compromise. We will be heard."**

இப்பகுதியின் தமிழ் மொழியாக்கம் பின்வருமாறு:

"அவலம் மண்டிய இந்தியா இன்று ஒடுக்கல் கொடுமையின் கேளிக்கை வெறியாட்டத்திற்கு இலக்காகியுள்ளது! அறியாப் பொதுமக்களின் அவலமெல்லாம் ஒரு புகைமேகப் படலத்தால் விழுங்கப்பட்டுக் கிடக்கின்றன. அவர்தம் பார்வை மங்கலாக்கப்பட்டு விட்டது. அவர்களின் நடவடிக்கை போலித்தோற்றங்களால் தூண்டப் பெறுகின்றன.

கடந்த காலப் பழமை நாட்டின் உயிர் நிலைகளைத் தொடர்ந்து அரித்துக் கொண்டிருக்கின்றன. மன்பதையின் குருதி புல்லுருவிகளால் குடிக்கப்படுகிறது. குருட்டு மரபு முறைதான் நாட்டாண்மையைத் தன் பிடியில் வைத்துள்ளது. அன்பு, அறிவுத் திறம், பண்பட்ட உணர்வுக் கூறுகள் ஓசையொடுங்கிக் கிடக்கின்றன.

ஒரு தெளிவான ஒழுங்குமுறைப்பாடு வேண்டும். வெறும் வாய்ச் சொல் பற்றுறுதிககளால் நிறைவடைந்து விடாத – மக்களின் வாழ்வியல் அடிப்படைகளின் மாற்றத்தை ஊன்றி வற்புறுத்துகின்ற – திட்டமொன்றைச் செய்து முடிக்க வேண்டும். உரத்து அழைக்கும் நாட்டுத் தேவை இதுவே."

* * *

"அழுத்தமாக அறிவிக்க விழைகிறோம். அமைதிக்காக இருக்கிறோம் நாங்கள். வன்மையின்மையே எம் கோட்பாடு. வாழுமுயிர் ஒன்றுக்குக்கூட நாங்கள் தீங்கிழையோம். எம் விழைவு எதிரிகளும் நலமாக இருக்க வேண்டுமென்பதே. தவறிழைப்போரின்பால் நாம் கொள்ளுவது வெறியன்று. பரிவே. நாம் நாடி உழைப்பது அடக்கு முறை வல்லாட்சிகளை அழிப்பதற்காக. நிலவுகின்ற அமைப்பு முறைகளை எதிர்த்தே எங்களின் போர்.

இருபாலரிடமும் நாங்கள் நண்பு பாராட்டுவோம். நட்பமைதி விரும்புவோன் புரட்சியின் போக்கு கடுமையாக வேண்டு மென்பதை வெறுக்கவே செய்வான். ஆனால் எதிர்ப்பே

**யில்லாமல் தவறுகள் முன்னேற விடுவானாயின் அவனின் கொள்கையையே பொய்த்துப் போக விடுகிறான். எம் உள்ளொலி எம் கடமையினைச் சுட்டிக் காட்டுகிறது.**

**இனிமேலும் தயக்கம் காட்டத் துணிய மாட்டோம் நாம். எங்களின் கொடியினை விரித்துப் பறக்கச் செய்து விட்டோம். இனி எம் கைகள் துணிக்கப்பட்டுப் புழுதிக்குள் புதையுண்ணும் வரை, கொடி கீழிறங்குமாறு விடமாட்டோம். இணங்குவ தென்பது இனி என்றுமில்லை. நம் கூற்றுக்குச் செவி கொடுக்கப்பட்டே தீரும்!"**

நெஞ்சத்துள் நேராக ஊடுபாய்ந்து வெல்ல வல்ல எத்துணை அருமையான ஆசிரியவுரை!

## ரிவோல்ட் இதழின் எழுத்தாளர்கள்

இவ் வாசிரியவுரை மட்டுமன்று; 'ரிவோல்ட்' வெளியிட்ட அனைத்துக் கட்டுரைகளுமே தரமான ஆங்கிலத்தில் கருத்தும் சுவையும் செறிந்தவையாகவே அமைந்திருந்தன. பெரியார், இராமநாதன் ஆகிய ஆசிரியர்களும், துணையாசிரியர் ச. குருசாமி, நாகர்கோவில் வழக்குரைஞர் பி. சிதம்பரம் பிள்ளை, செல்வி ஞானம் ஆகியோரும் தொடர்ந்து எழுதினர் 'ரிவோல்ட்'டில். வழக்குரைஞர் இலட்சுமிரதன், பி.ஜி (B.G), ஜி.ஆர். (G.R.), கிர்க் (Kirk) , ஜி. சுமதிபாய், மருத்துவர் முத்துலட்சுமி ரெட்டி ஆகியோர் அடிக்கடி எழுதினர். ஜி.ஜே. (Jeejay), செல்வி இந்திராணி, ஆர்.கே. சண்முகம், வழக்குரைஞர் கே.எம். பாலசுப்பிரமணியம், சக் (Sak), விசுவநாதன், வெங்கட்டராம சாஸ்திரி, எம்.வி.விகே. ரெங்காச்சாரி ஆகியோர் அவ்வப்போது எழுதினர்.

இவர்களேயன்றி, எஸ்.எஸ். பாரதி, எஸ்.கே. நாயர், செல்வி டி.எஸ். குஞ்சிதம், கே. சிவஞானம், எ. உத்தண்ட நாடார், நய்னா, ரைட்டஸ், அகஸ்த்யா, போத்தி, பி. திருகூடசுந்தரம், எ.ஆர். ஜெயவேலு, கே.சி. இராமன், பேரா. ஜோஷி, எஸ்.எம். மைக்கேல், தியா, ராமவர்மா தம்பன், என். இலட்சுமணன், திரு. ஃபவ்ண்டன் பென் (Mr. Fountainpen), பாஹு-லேயன், ஹர் பகவான், டி.வி. பிரதான், பி. கிருஷ்ண அய்யர், கே.எம். பாலன், ப்ளெய்ன்ஸ்பீக்கர் (Plain Speaker), சத்தியசாது ஆகியோரின் கட்டுரைகளும் 'ரிவோல்ட்'டில் இடம் பெற்றன.

அயல்நாடுகளில் வெளியான 'The Literary Guide'. 'Truth Seeker', 'Free Thinker' ஆகிய இதழ்களிலிருந்து பொறுக்கியெடுத்த பகுத்தறிவுக்

கட்டுரைகள் மீள்பதிப்பாய் 'ரிவோல்ட்'டில் வழங்கப்பட்டன. இந்தியாவின் பிற மாநில இதழ்களிலிருந்தும் பொருள்கள் எடுத்துப் போடப் பெற்றன.

இங்கு ஒரு சிறப்புச் செயலை நாம் கவனித்து ஏற்பிசைவு தர வேண்டும். செல்வி ஞானம், செல்வி இந்திராணி, செல்வி குஞ்சிதம், மருத்துவர் முத்துலட்சுமி ஆகிய பெண்மணிகள் 'ரிவோல்ட்'டில் பங்களிப்புச் செய்திருக்கின்றனர். பங்களிக்குமாறு செய்யப் பட்டுள்ளனர். இதற்கு ஒப்பாக மகளிர்க்கு மதிப்பளித்த ஆங்கில ஏடு வேறெதுவுமில்லை. 1928-29ஆம் ஆண்டுகளிலேயே இப்படியொரு புரட்சி செய்து காட்டிய தனிப்பெருமை பெரியாருக்கு உரியது!

இன்னொன்றும் கவனித்தற்குரியது. பார்ப்பனர்கள் 'ரிவோல்ட்'டில் எழுதுவதற்கும் இடம் தரப்பட்டது. சாஸ்திரியும் ஆச்சாரியும் அய்யரும் தங்களின் கருத்துகளை இதழில் வெளியாக்கப் பெரியார் வாய்ப்பளித்தார். 'ரிவோல்ட்'டின் ஆசிரியவுரைகள் ஆரியத்தையும் பழமைவாசிகளையும் ஆட்டி உலுக்கி அலற வைத்தன! இராமநாதனவர்கள் பனகல் அரசர் மறைவு குறித்து எழுதிய "Take Courage!"ஆஃப்கன் அரசர் அமானுல்லா ஆட்சியரியணையைத் துறந்தபோது எழுதிய, "Reformer or King?", 'ரிவோல்ட்'டில் குருசாமியால் எழுதப்பட்டு வந்த இதிகாசங்கள் பற்றிய கட்டுரைத் தொடரின் தேவை குறித்து எழுதிய "Exposure" ஆகிய ஆசிரியவுரைகளும், பெரியார் பார்ப்பன நாட்டாண்மை பற்றி விளக்கி எழுதிய "Is this Nationalism" வர்ணாசிரமிகளின் கொடுமையை விரித்துரைத்த "What about Our Dyers?" பம்பாயில் இயங்கி வந்த பார்ப்பனரல்லாதார் அமைப்பு "Peasants Party" என்ற புதிய பெயர் ஏற்ற போது, எவ்வண்ணம் பெயர் மாற்றம் நிகழ்ந்தாலும் பார்ப்பனரை மட்டும் உறுப்பினராக ஏற்கக் கூடாது என வலியுறுத்தும் வகையில் வரைந்த "No Brahmin, Please", குழந்தை மணங்களை ஒழித்துக் கட்டும் வண்ணம் 'சாரதாச்சட்டம்' நிறைவேற்றப்பட்டதைப் பேருவகையுடன் வரவேற்றுத் தீட்டிய "Farewell, Orthodoxy" ஆகிய ஆசிரியவுரைகள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை.

ச. குருசாமியவர்களால் பெரியாரின் இராமாயணக் கட்டுரைகளைத் தழுவி ஆங்கில மொழியாக்கம் பெற்ற கட்டுரைகள் "Ithihasas" எனும் தலைப்பில் வெளியாகின. இவையன்றி "Esji" என்ற பெயரிலும் அவர் அவ்வப்போது அரிய ஆய்வுக் கட்டுரைகள் எழுதினார்.

அவ்வப்போது திருவாங்கூர் அரசின் ஆட்சிக்குட்பட்டிருந்த நாகர்கோவிலிலிருந்த வழக்குரைஞரும் பேரறிஞருமான பி. சிதம்பரம் பிள்ளையால் கோவில் நுழைவு உரிமை பற்றிய ஏராளமான செய்திகள், மேற்கோள்கள் அடங்கிய "The Right of Temple Entry" என்னும் தொடர் கட்டுரை 'ரிவோல்ட்'டில் எழுதப்பட்டு வந்தது.

இன்னும், துருக்கியிலும் ஆஃப்கானிஸ்தானிலும் நிகழ்ந்து கொண்டிருந்த பண்பாட்டுப் புரட்சி, கையால் நூற்கப்பட்டுக் கையால் நெய்யப்படும் 'கதர்'த் துணிக் கைத்தொழில் பற்றிய விரிவான கருத்துப் போர், பிறப்புக் கட்டுப்பாடு குறித்த விளக்கங்கள் பெரியார் தலைமையின் கீழ் நடந்த தென்னிந்தியச் சீர்திருத்தக்காரர்கள் மாநாட்டு நடவடிக்கைகள், பன்மொழிப்புலமை, அடக்கம், அரசியல் நிகழ்வுகளில் கூர்த்த நுட்பம், மேலாண்மைத் திறன், சட்டக் கல்வி,மாந்தப் பற்று அனைத்தும் நிரம்பப் பெற்ற சென்னை மாநில அரசு முதல்வர் பனகலரசர் இராமராய நிங்காரின் மறைவு, 'போல்ஷவிசமும் மேற்கும்' என்னும் தலைப்பில் இருபெரும் சமனிய அறிஞர்களான பெர்ட்ரண்ட்ரஸல், ஸ்காட் நியரிங் ஆகியோரின் ஆழமான சொல்லாடல், ஆஃப்கானிஸ்தான் மன்னர் அமானுல்லாவின் அரசாட்சித் துறவின் அருமை, கோவில் நுழைவுக்கான கோட்டயம் மாநாட்டில் பங்கேற்க வருகை தந்த பண்டிதர் மதன் மோகன் மாளவ்யாவின் பழமைப் பற்று பற்றிய திறனாய்வுகள், நடுவணரசின் திட்டத்தில் இருந்த திருமண (அகவை)ச் சட்டம் குறித்த பல்வகை அலசல்கள், மகளிர் உரிமைக்காகவும் 'தேவதாசி முறை' ஒழிப்புக்காகவும் துணிவார்ந்து குரல் கொடுத்த மருத்துவர் முத்துலட்சுமி ரெட்டியின் சிறப்பான பெண்ணியச் சிந்தனைகள், அடக்கு முறைக்கு ஆட்பட்ட ஆராய்ச்சியாளர் - அறிவுப் பற்றாளர் தொடர்பான குறிப்புகள், ஆரியத்தாக்கம் மேலிட்ட திருவாங்கூர் அரசாட்சியின் நடவடிக்கைகள், மணவுறவைத் தானாகவே இந்தியப் பெண் ஏற்க இசைவளிக்கும் சட்டத்தைத் தீர்மானிக்கும் நோக்குடன் அமைக்கப்பட்ட 'இணக்கவுரிமை அகவை' ஆய்வுக்குழு முன்னர் அளிக்கப்பட்ட சான்றுரைகள், அரசர் ஜியார்ஜின் நோய் நீங்கியமை மருத்துவராலா? கடவுளாலா? - என்று பல அருமையான ஆய்வுக் கருத்துகள், சைவசமயத்தின் மறைப்பு நீங்கிய உண்மைத் தோற்றம் பற்றிய தெளிவான ஆராய்ச்சி, சுயமரியாதை இயக்கத்தின் இன்றியமையாமை குறித்த, பல்வகைக் கருத்துகள் ஆகிய பொருள்கள் விரிவான முறையில் 'ரிவோல்ட்'டில் தரப்பட்டுப் பயன் கூட்டின.

மேலும், "Afraid to Think", "A spell", "The Gospel of Reason", "Law of Karma and Idol-Worship", "Religious Instruction in Primary Schools", "One Thousand Names", "How the Puranas Came into Existence", "What does 'Revolt' Revolt Against?" முதலிய பகுத்தறிவுக் கட்டுரைகளும், "The Self Respect Movement", "Beggar Problem", "The Self Respect Movement will and Must Trumph", The Sahodara Sangam", "Bane of Consanguineous Marriage", "The disgraceful Deputation", "Wanted a Social Revolution", "Brahminism Exploded" முதலிய மக்களாயக் கட்டுரைகளும்,

"Widows and Widowers", "The Position of Indian Woman", "Woes of Indian Womanhood", "Double Moral Standard" ஆகிய பெண்ணியக் கட்டுரைகளும்,

"Some Implications of Democracy", "National Language Vs Common Langauage", "Temperance Propaganda," "The Political Philosophy of the Self-Respect Movement", "All is Not Well That Ends Well", "Leaders! What Have you Done?" ஆகிய அரசியற் கட்டுரைகளும் 'ரிவோல்ட்'டில் வெளியிடப்பட்டு ஆங்கிலம் பயின்றோரிடையே பெரும் தாக்கம் விளைவிக்கப்பட்டது.

**'Fallen Thorns'**

அயலகப் பகுத்தறிவாளர்களின் சிந்தனை மொழிகள் நிறைய இடம் பெற்றன. 'ரிவோல்ட்'டில் பெரியாரின் பொன்மொழிகளாக, "Fallen Thorns" எனும் தலைப்பில் இடிப்புரைகள் வெளியிடப் பட்டன.

சிறப்பாகக் குறிப்பிடத் தக்கதொரு செய்தி, பெரியார் கருத்தாழம் கொண்ட ஆங்கிலப் பாக்களையும் 'ரிவோல்ட்'டில் அச்சிட்டார் என்பது. "Inconsistency", "Odeum Theologicum", "The Atheist", "Life and Art". "Science and Her Critics", "To the Un of Dharma", "The Light of Reason", "Rite", Epigrams of Marriage", "The Question", "A Hymn of Love", ஆகிய கவிதைகளும், "யோக வசிஷ்டா" நூலிலிருந்தும் காளிதாசரின் படைப்பிலிருந்தும் தேர்ந்த வரிகளின் ஆங்கில ஆக்கமும் தன்மான இயக்கக் கொள்கையின் விளக்கங்களாகவே அமைந்து, மீண்டும், மீண்டும் படித்துப் பயன்பெறத் தூண்டும் ஆற்றலைக் கொண்டிருந்தன. இதிலிருந்து இதழாளர் பெரியார் பாடல்களின் பயன்பாட்டுத் தன்மையில் வைத்திருந்த நம்பிக்கை நன்கு புலனாகிறது.

"Because he gave their priest no revenue
His peers adjudged his scheme of things all wrong/
And knowing not, they called him Atheist"

எனும் வரிகளும்

"Yet the food the crude priest dies
When the rites are done"

என்ற வரிகளும்,

பெரியாரின் தன்மான இயக்கத்தின் புரோகித ஒழிப்புக் கோட்பாட்டிற்கு அணி சேர்க்கும் சிறப்புப் படைத்தவை.

இவையன்றி, நாட்டில் அக்காலக் கட்டத்தில் நடந்த பல்வகையான மாநாட்டு நடிவடிக்கைகள் பற்றிய செய்திகளையும் 'ரிவோல்ட்'டில் வெளிப்படுத்தினார். சுயமரியாதை மாநாடுகள் மட்டுமல்லாமல், பொறையாற்றில் நிகழ்ந்த நாடார்கள் மாநாடு, திருச்சிராப்பள்ளியில் நடந்த தேவேந்திர குல வேளாளர் மாநாடு, காரைக்குடியில் நடைபெற்ற ஆதி திராவிடர் மாநாடு, கோவையில் நிகழ்ந்த தேவாங்க மகளிர் மாநாடு, சென்னையில் நடந்த மகளிர் சமூகச் சீர்திருத்த மாநாடு, திருநெல்வேலியில் நடைபெற்ற சைவர்கள் மாநாடு, மதுரையில் நிகழ்ந்த பார்ப்பனரல்லா இளைஞர் மாநாடு, நெல்லூரில் நடைபெற்ற சமுதாய மாநாடு, நாகர்கோவிலில் ஏற்பாடு செய்யப்பட்ட அனைத்துத் திருவிதாங்கூர் சமுதாய மாநாடு, திருநாவளியில் நிகழ்ந்த அனைத்துக் கேரள இந்துப் பெண்கள் மாநாடு, நாசிக்கில் ஏற்பாடு செய்யப்பட்டு அம்பேத்கார் அவர்களின் தலைமையின் கீழ் நடந்தேறிய தன்மான மாநாடு, லாகூரில் நிகழ்ந்த ஜட் பட்தோரக் மண்டல் மாநாடு, இலட்சுமணபுரியில் நடைபெற்ற குமுகாயப் பேராயம், புனாவில் நிகழ்ந்த இந்துச் சட்ட ஆய்வு - சீரமைப்பு மாநாடு இலங்கையில் நடந்த இளைஞர் மாநாடு முதலிய மாநாடுகளின் தொடர்பான செய்திகள் நல்லவண்ணம் வெளியிடப் பட்டன.

சாதி மறுப்பு - கைம்பெண் மறுமணம் எனும் பெருமைக்கு உரித்தான மரகதவல்லி - முருகப்படி இணையரின் வாழ்க்கை ஒப்பந்தம், துணிவு நிரம்பிய சாதி ஒழிப்புத் திருமணம் என்ற பேர் படைத்த குஞ்சிதம் - குருசாமி இருவரின் வாழ்க்கை ஒப்பந்த விழா ஆகிய இருபெரும் தன்மான இயக்க முன்னோடி மணவினைகள் பற்றிய முகாமையான செய்திகள் 'ரிவோல்ட்'டில் இடம் பெற்று, சுயமரியாதை இயக்கத்திற்குப் புரட்சிப் புகழ் கூட்டின! சிறு சிறு மக்களாயச் செய்தித் துண்டங்களும் அச்சேறி, இதழுக்குச் சுவை சேர்த்தன.

'ரிவோல்ட்' ஏடு ஆங்கிலம் பயின்றோரின் பார்வைக்கும் தேர்வுக்குமென வழங்கிய பொருள்களும் செய்திகளும் தரமுயர்ந்தவையாகவும் கருத்தாழம் படைத்தவையாகவும் அறிவுப் புரட்சிக்கு வித்தூன்றுபவையாயும் இருந்தன என்பதற்கு எடுத்துக்காட்டாகச் சிலவற்றைப் பார்ப்போம்.

## ஆஃப்கானில் நடந்த நிகழ்ச்சி

"கல்வியறிவற்று மூட நம்பிக்கைகளில் ஆழ்ந்து கிடந்த ஆஃப்கானியப் பழங்குடியினிடையே எதிரெழுச்சியை உருவாக்கி ஆஃப்கன் மன்னர் அமானுல்லாவை வீழ்த்தும் முயற்சியில் இறங்கிய சமயத் தலைவர்களான முல்லாக்கள் அரசரின் முன்வைத்த ஒப்பந்தக் கட்டுப்பாடுகள்: 1) மருத்துவப் படிப்புக்காகத் துருக்கிக்கு அனுப்பப்பட்ட பெண்கள் திரும்ப அழைக்கப் பெற வேண்டும். 2) பெண்களுக்குக் கடுமையான முகத்திரை முறை மீண்டும் அறிமுகப்படுத்தப் பெற வேண்டும். 3) பெண்கள் அய்ரோப்பிய முறையில் உடையணிவது தடை செய்யப் பெற வேண்டும். 4) பள்ளி மாணவர்கள் மணம் செய்து கொள்ளுதற்கு உரிமையளிக்கப் பெற வேண்டும். 7) இந்தியாவின் அறநிலைக் கல்லூரி மதத் தலைவர்கள் ஆஃப்கானிஸ்தான் நாட்டுக்குள் நுழையக் கட்டற்ற உரிமை அளிக்கப் பெற வேண்டும். 5) மகளிர் கல்வி நிறுத்தி வைக்கப் பெற வேண்டும். 6) ஆண்கள் ஆடையணியும் முறையில் உரிமை பெற்றவர்களாய் இருக்க வேண்டும். 7) வெள்ளிக் கிழமையே விடுமுறை நாளாக அறிவிக்கப் பெற வேண்டும். 8) வழக்குரைஞர்கள் அறிமுகப்படுத்தப் பெற வேண்டும். 9) முல்லாக்களின் நடமாட்டம் கட்டற்ற தாய் இருக்க வேண்டும். 10) படைத்துறைக்குக் கட்டாய ஆள் சேர்ப்பு முறை கைவிடப் பெற வேண்டும். 11) திருநிலைப் பெம்மான்களுக்குச் செலுத்தப் பட்டு வந்த வணக்க முறை மீண்டும் நடைமுறைக்கு வர வேண்டும். 12) பணக் கடன் வழங்கும் முறையில் ஈடுபட மக்கட்கு உரிமை தரப் பெற வேண்டும். 13) முல்லாக்களின் மீது போடப்பட்ட அத்தனை கட்டுப்பாடுகளும் ஒழிக்கப்பட்டு, எந்தக் குடிமகனையும் நிறுத்தித் திருச்சட்ட நூல் பற்றிக் கேள்வி கேட்கவும் ஒறுப்பு ஆணை இடவுமான உரிமை ஏற்கப் பெற வேண்டும். 14) அரசனும் அரச குடும்பமும் முஸ்லீம் பழக்க மரபுகட்கு இணங்க நடக்க வேண்டும். பெரும்பாலும் முல்லாக்களும் மீதம் புகழ் வாய்ந்த பெருமக்களும் அடங்கிய ஆட்சி மன்றம் அமைக்கப்பெற்று, படைகள், குடிகள், சமயம், ஆகியன தொடர்பான அனைத்திலும்

உயர் அதிகாரம் கொண்டதாய் அது இயங்குமாறு செய்யப் பெற வேண்டும்." முல்லாக்களின் இக்கட்டுப்பாட்டுப் பட்டியல் ஆஃப்கான் மன்னர் அமானுல்லாவின் ஆட்சி எப்படி இருந்தது என்பதை நமக்குப் படமாகக் காட்ட வல்லவை ('ரிவோல்ட்': 23-1-1929).

## தேசிய இயக்கத்தில் தீண்டாமை

அக்காலத்தில் தேசியம் பேசிய பார்ப்பனர்தம் மனப்பான்மை பற்றி, "SELF RESPECT MOVEMENT MUST TRIUMPH" எனும் தலைப்பில் 'ரிவோல்ட்' - 17-4-1929ஆம் நாளைய இதழில் வெளியான கட்டுரையின் ஒரு பகுதி:

'இந்தியத் தாயின் நலம் நாடுவோராக உண்மையில் நீங்கள் இருந்தால், சுயமரியாதை இயக்கம் வெல்லுமாறு செய்தல் உங்கள் கடமை, சிந்திக்கும் இந்தியன் எவரும் இத்தேவை பற்றி வினா வெழுப்ப மாட்டார்.

1910 டிசம்பரில் இலட்சுமணபுரியில் நடந்த காங்கிரஸ் மாநாட்டிற்குச் சென்றேன் நான். அங்கு உணவு வழங்கும் நோக்கத்திற்காக ஒரே மண்டபத்தை இரு பிரிவாக்கியிருந்தனர். என்னுடைய பார்ப்பன நண்பர்கள் முதலில் உணவு உட்கொண்டபின் மிச்சமிருந்தது எங்கட்குப் பரிமாறப்பட்டது. இரண்டு அறைகள் இருந்த நிலையில் ஒரே நேரத்தில் அனைவருக்கும் ஏன் உணவளித்திருக்கக் கூடாது?

இரண்டாம் நாள் மிகமிக அச்சமூட்டும் அதிர்ச்சிக்கு இலக்கானோம். பார்ப்பனர்கள் உண்ணுவதற்குப் பயன்பட்ட இலைகள் எங்கட்குரிய அறையினுள் குவிக்கப்பட்டிருந்தன. அவை முடை நாற்றத்தைப் பரப்பிக் கொண்டிருந்தன. இலைகளிலிருந்து வெளியேறிய ஒழுகுநீர் அவ்வறை நீள அகலம் முழுமையிலும் பரவிக் கொண்டிருந்தது. அத்தகைய கூடாத அருவருப்புச் சூழ்நிலையில் நாங்கள் உணவருந்துமாறு கேட்டுக் கொள்ளப்பட்டோம்.

ஒரு தேசிய இயக்கத்தில் இவ்வளவு நேர்மைக் கேடாக நாம் நடத்தப் பெற வேண்டுமென்றால், எவர்தான் எதிர்த்துக் கிளர்ந்தெழாமல் இருக்க முடியும்? நாங்கள் அனைவரும் மொத்தமாக வெளியேறி - உணவிற்காக அங்கே கட்டணம் செலுத்தியிருந்தாலும் - வேறோர் உணவகத்திற்குச் சென்று சாப்பிட்டோம். சோமசுந்தரம் பிள்ளை உள்ளிட்ட

பார்ப்பனரல்லா நண்பர்கள் சிலர் அந்த மாநாட்டையும் புறக்கணித்ததோடு 'காங்கிரஸ்' கட்சியை விட்டே வெளியேறி விட்டனர்!' "திரு. ஆர். எஸ். (Mr. R.S.) என்பவர் எழுதியது இது.

## சுபாஷ் சந்திரபோஸின் கருத்துரை

சுபாஷ் சந்திர போஸின் தலைமையில் ஜெஸ்ஸூரில் 22--6-1929 அன்று நிகழ்ந்த இளைஞர் மாநாட்டில் அவர் வழங்கிய கருத்துரை அதன் அருமை கருதி 'ரிவோல்ட்'டில் வெளியிடப்பட்டது.

"இந்தியாவின் கடைத்தேற்றத்திற்குக் குறுக்கே தடைகளாய் இருப்பவை குமுகாய ஒப்பின்மை, பொருளியல் மேடு-பள்ளங்கள், அரசியல் உயர்வு-தாழ்வு நிலை ஆகிய மூன்றுமே. மக்களிடத்தில் நன்கு புலப்படும் வண்ணம் ஆண்-பெண் வேறுபாட்டுத்தன்மை இருக்கிறது. ஒரு குறிக்கோள் நிரம்பிய குமுகாயம் என்பது சமநிலை, உடன்பிறப்பியம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். ஆண்-பெண், செல்வர்-வறியர், இளைஞர்-முதியோர் வேறுபாடு எதுவுமின்றி வளர்ச்சி பெற அக்கருத்து வெளியிடவும் உரிமையும் வாய்ப்பும் கொண்டவர்களாய் இருக்க வேண்டும். எனவே இந்நாட்டில் உள்ள இன்றைய நிலவரங்களை இனிமேலும் தாங்கிக் கொண்டிருக்க முடியுமா என்பதை நாம் கருத வேண்டியது நம் கடமை.

நம் மக்களாயக் கட்டமைப்பு இன்னும் விரிந்த அளவில் செம்மையான முழு நல அடிப்படையைக் கொண்டதாய் இருக்க வேண்டும். தீண்டாமை, மகளிர் நிலை ஆகியவை பற்றிய சிந்தனை இங்கே எழுகிறது. இத்தகைய குமுகாயப் பாகுபாடுகள் துடைத்தெறியப்படாத வரையில் நம் கடைத்தேற்றத்திற்கான நம்பிக்கைக்கு இடமே கிடையாது. ஓர் அடிப்படை மாற்றமே இப்போது இன்றியமையாதது. இப்படிப்பட்ட தட்ப வெப்ப நிலைகளில், எல்லா வகையான கொடுங்கோன்மைகளையும் அடக்கு முறைகளையும் எதிர்த்து நம் உள்ளம் கிளர்ந்தெழவேண்டும் என்பது இயற்கைக்கு மாறாகாது". ('ரிவோல்ட்': 30-6-1929). எத்தகைய அரிய முன்னறிவிப்பு இது!

## கோவில் நுழைவு உரிமை

கோவில் நுழைவு உரிமை பற்றிய கட்டுரைத் தொடரில் காணப்படும் ஃப்ரெஞ்சு நாட்டு ஆபிடுபாவின் சில குறிப்புகள் நம்மை வியப்பிலும் அதிர்ச்சியிலும் ஆழ்த்துவன:

"ஒரு பரத்தையுடனோ மணமாகாத பெண்ணொருத்தியுடனோ உறவு கொள்ளுவது பார்ப்பனர்களின் நெறியில் பழிப்புக்குரிய இழி செயலாகக் கருதப்படுவத்தில்லை. மிகவும் நொய்தானதொரு மரபுநிலையை மீறுவதைக் கூடக் கடுங்கொடிய பாவமாக நோக்கும் இப்பார்ப்பனர் தங்களின் மட்டு மீறிய அருவருப்பான காமஞ் சான்ற மிகையான செயல்களில் தீங்கிருப்பதைப் பொருட்படுத்துவதில்லை. கோவில் பணிகளோடு இணைக்கப்பட்டுள்ள ஆடலணங்குகளும் பரத்தை மகளிரும் மூலத்தில் அமர்த்தம் பெற்றதே இவர்களின் பயன்பாட்டுக்குத்தான். ஒரு பரத்தையைக் காணுவதே பாவத்தை நீக்கவல்லதொரு நற்செயலாகும் என்னும் பொருள் படைத்த 'வேஸ்ய தரிசனம் புண்யம், பாபநாசனம்' என்ற அவதூறு நிரம்பிய வரிகளை இவர்கள் இசைப்பதை நாம் அடிக்கடி கேட்கலாம்.

தேவதாசிகள் என்றழைக்கப்படும் அரசுப் பரத்தையரும் ஆடல் மகளிரும் பார்ப்பனரின் இன்பத் துய்ப்புக்கென்றே ஒதுக்கப்பட்டவர்கள் என்றே தோன்றுகிறது. தம் அழகுகளை இழிந்த உறவுக்குப் படைக்கும் இந்தப் பொது மகளிர் கடவுள் வழிபாட்டுப் பணிக்கென ஒரு தனிமுறையில் தெய்விகத் தன்மை ஏற்றப்பெறுகின்றனர். ஒவ்வொரு முகாமையான கோவிலுக்கும் எண்மர் அல்லது பன்னிருவர் காலையிலும் மாலையிலும் ஆடுவதற்கும் பாடுவதற்குமெனத் தேவதாசிகளாக அமர்த்தப்பட்டனர்" (ரிவோல்ட்: 11-8-1929).

இந்தத் தலைமுறை இளைஞர்கட்கு இச்செய்தி திகைப்பும் நகைப்பும் ஒரு சேர உண்டாக்கும்!

## ரிவோல்ட் இதழுக்குப் பாராட்டு

'ரிவோல்ட்' இதழ் தமிழகத்திற்கு மிகத் தொலைவிலுள்ள மாநில மக்களிடமிருந்தும் பெரும் வரவேற்பையும் பாராட்டினையும் பெற்றது. இன்று பாகிஸ்தான் எல்லைக்குள் இருக்கும் லாகூர் நகரிலிருந்த மக்களாய முற்போக்கு அமைப்பான ஜட்பட்தோரக் மண்டலின் செயலாளர் 221-6-1929ஆம் நாளிட்டு எழுதியனுப்பிய மடல் இது.

"அன்பார்ந்த அய்யா,

'ரிவோல்ட்' இதழ் எங்கட்குப் பெரிய அளவில் ஆர்வம் மூட்டியுள்ளது. சாதி முறையின் பாகுபாடுகளுக்கு

இரையாகியுள்ள பார்ப்பனரல்லாதார் உட்கொள்ள வேண்டிய தன்மதிப்புக் கோட்பாட்டின் உண்மையான கிளர்ச்சியுணர்வினை இதழின் கட்டுரைகள் படமாக்கிக் காட்டுகின்றன. வர்ணாஸ்ரமம் அல்லது சாதிமுறை எனும் இன்றைய நிறுவனத்திற்கு எதிராக மெய்ப்பபடியான போரினைச் சுயமரியாதை இயக்கம் தொடுக்கிறது என்பது குறித்து உவகையடைகிறோம். 'ரிவோல்ட்'டின் கட்டுரைகள் இரண்டு உருது மொழியில் பெயர்க்கப்பட்டு 'கிரந்தி' இதழில் வரும் மாதம் வெளியிடப்படவிருக்கின்றன.

பிறப்பின் அடிப்படையிலான பெருமை – சிறுமைகளை நொறுக்கித் தள்ளும் அரிய பணியில் வடக்கையும் தெற்கையும் ஒன்றிணைக்கும் முயற்சியாக இந்தி மொழியில் ஒரு பிறை இதழை நிறுவ உள்ளோம். அது 'ரிவோல்ட்' போலவே இருக்கும்.

மிகச் சிறந்த உறவுகளுடன் – செயலாளர்"

என்பதாக அமைந்த ஆங்கில மடல் 30-6-1929ஆம் நாளுக்குரிய 'ரிவோல்ட்'டில் இடம் பெற்றுள்ளது.

"இந்தியாவில் பகுத்தறிவு" (Rationalism in India) என்று தலைப்பிட்டு, 'The Bombay Chronicle' என்ற இதழின் 30–10–1929ஆம் நாளைய வெளியீட்டில் எழுதப்பட்ட ஆசிரியவுரையையும் குறிப்பிட வேண்டும். அதன் பகுதிகள் சில:

"கவனமிக்க மக்களுக்கு, இந்தியாவில் மக்கட் சிந்தனையாளுகையினுள் வந்தடைந்துள்ள புதியதோர் இயக்கத்தினைக் கண்டுணராது இருக்க வொண்ணாது. அதை நாம் 'பகுத்தறிவு இயக்கம்' என்றே இயல்பாய் அழைக்கலாம். மாதங்களுக்கு முன் மாசற்ற பகுத்தறிவைப் பரப்புவதற்கென்றே பஞ்சாபில் 'ரேஷனலிஸ்ட்' என்றோர் இதழ் தொடங்கப்பட்டதை அறிந்தோம். பிறகு விரைவிலேயே வங்காளத்தில் முஸ்லீம் முல்லாக்களிடைய நிலவிய மத வெறியையும் மூட நம்பிக்கைகளையும் எதிர்த்துச் சமர் புரிவதற்காக 'முல்லா இயல் எதிர்ப்புப் பேரவை' (League against Mullaism) எனும் கூட்டமைப்பு உருவாக்கப்பட்டது.

சென்னை மாநிலத்தில் இதே போன்ற தொண்டு 'ரிவோல்ட்' என்னும் பெயரிய கிழமையேட்டினால் மேற்கொள்ளப்பட்டு வருகிறது. இவ்விதழினால் பரப்பப்படும் கோட்பாடுகளின் தகுதிகளேயன்றி, காரண அறிவு நெறிக்கு நிற்க முடியா

*ஒழுகலாறுகள் மதக் கொள்கைகள் ஆகியவற்றுக்கு எதிரான எழுச்சியுணர்வும் தூண்டலை இவ்விதழ் வெளிப்படுத்துகிறது!" ('ரிவோல்ட்': 10-11-1929)*

நியூயார்க்கிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த "உண்மை நாடி" Truth Seeker என்னும் பகுத்தறிவு ஏடு, 'ரிவோல்ட்' நீடு வாழ வேண்டும் என அதன் 16-3-1929 ஆம் வெளியீட்டில் வாழ்த்தியது.

*"தென்னிந்தியாவின் ஈரோட்டில் உள்ள உண்மை விளக்கம் அச்சகத்திலிருந்து வெளியாகும் 'ரிவோல்ட்' என்ற அடிப்படை மாற்றம் விழையும் கிழமையிதழின் இரண்டு படிகள் எடுத்துக்காட்டாகக் கிடைத்துள்ளன. ஆங்கில மொழியில் அச்சிடப் பெறும் ஏடிது.*

*மத எதிர்ப்பு இதழாகிய இதில், 'ட்ரூத் சீக்கர்', 'இலண்டன் ஃப்ரீ திங்க்கெர்', இங்கிலாந்தின் 'ரேஷனலிஸ்ட் ப்ரெஸ்' ஆகியவற்றிலிருந்து கட்டுரைகள் மீள்பதிப்பாகின்றன. உரையாடல் முறையில் அமைந்துள்ள அதன் மூலப் படைப்புகள் வெளிப்படையாக நாத்திகம் பரப்பும் பான்மையின. பெர்ட்ரண்ட்ரஸ்ஸல் போன்றோரின் புத்திலக்கியப் படைப்புகளும் இதில் மதிப்பாய்வு செய்யப் பெறுகின்றன.*

*இந்தியாவுக்கு இது பெரும் நன்மை விளைக்கும் என்பதில் அய்யமில்லை. 'ரிவோல்ட்' நீடு வாழ்க". ('ரிவோல்ட்': 17-4-1929).*

இவ்வண்ணம் இந்தியத் துணைக்கண்டத்திலும் வெளிநாடுகளிலும் தன்மான இயக்கக் கொள்கைகளின் மணம் பரப்பிய 'ரிவோல்ட்' இதழ்ப் பதிப்புகளிலிருந்து பின்வரும் செய்திகளையும் நாம் தெரிந்து கொள்ள முடிகிறது.

*"1928-இல் அன்றைய பம்பாய் மாநகராட்சி உறுப்பினர்கள் கூட்டத்தில், 'மாநகராட்சிப் பள்ளிகளில் குடிநீர்ப் பானைகள் வைப்பது. தொடர்பாக, சாதிப் பாகுபாடு காட்டப்படக் கூடாது' என்பதாகத் தீர்மானம் நிறைவேறியபோது, அதை எதிர்த்துக் கண்டனம் தெரிவிக்கும் முறையில் பம்பாய்ப் பங்குச் சந்தையையே மூடினார்கள் ('ரிவோல்ட்': 7-11-1928).*

*நம் நாட்டு எதிர்காலத் தலைமுறையினர் சிறந்த உள்ள – உடல் வளம் செறிந்தவர்களாக அமையும் வண்ணம் பிறப்புத் தடுப்பு முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டும் எனப் பரிந்துரைத்து, 'இன ஆக்க மேம்பாட்டியல் (Eugenics) என்ற லியோனார்டு*

டார்வின் என்பாரின் நூற்கருத்தினை விளக்கும் கட்டுரையைப் பெரியார் வெளியிட்டார். ('ரிவோல்ட்': 12-12-1928).

சீனத்து ஷாங்காய் நகரத்துச் செய்தித் தாள்களில் 30-12-1928 அன்று வெளியான வாழ்க்கைத் துணைவர்களாகி விட்ட இருவரின் அறிக்கை: "பெரியவர்களின் இசைவு பெறுதல், பல பேர்களைச் சாட்சி வைத்தல் என்றெல்லாம் ஏன் அலட்டிக் கொண்டு தொல்லைப்பட வேண்டும்? நேற்று நாங்கள் மணம் புரிந்து கொண்டு, கணவன் மனைவி ஆகிவிட்டோம் என்பதை இதோ அறிவிக்கிறோம்" இந்தப் பண்பாட்டுப் புரட்சிச் செய்தி 23-1-1929ஆம் நாள் 'ரிவோல்ட்'டில் இடம் பெற்றது.

"இந்தியக் கல்விமான்கள் கூட்டம் இப்போதிருந்தே மாநில-நடுவண் அரசுகளின் நடவடிக்கைகளை மேற்கொள்ளும் கடமையை ஏற்க வேண்டும். அப்படியானால் இந்தியச் சட்டப் பேரவையின் ஆய்வுகளம் நடுவனரசு மாநில அரசு அதிகாரிகளின் அலுவலறிக்கைகளும் ஆங்கில மொழியில் மேற்கொள்ளப்பெற ஒப்ப முடியுமா? குடியாண்மை அரசில் அது முடியாத ஒன்று" ('ரிவோல்ட்': 13-2-1929).

என்று இராசகோபாலாச்சாரியார் அன்றே இந்தி மொழியை வரவேற்றமையைச் சுட்டிக்காட்டிக் கண்டிக்கும் கட்டுரையை வெளியிட்டார் பெரியார்.

## முடிவடையாத ஆராய்ச்சி – குத்தூசி குருசாமி

நம்முடைய நாட்டின் ஆராய்ச்சிகள் எவற்றைப் பற்றியன? நம் மக்கள் எப்படிப் பட்ட செய்திகளில் ஆர்வங் காட்டுகின்றனர்? "Our Country" என்று தலைப்பிட்டு 'Esji' எனும் பெயர் கொண்டு 'குத்தூசி' குருசாமி வரைந்த எழுத்தோவியம் சுவையானது.

"இந்தக் குளத்தில் 'பஞ்சமன்' ஒருவனை நீர் எடுத்துச் செல்ல விடலாமா? கூடாதா?; இந்தக் கோவிலில் ஒரு நாடாரை நுழைய விடலாமா? கூடாதா?; பார்ப்பனரல்லாத ஒருவனுக்குச் சமஸ்கிருதம் கற்றுக் கொடுக்கப் படலாமா? கூடாதா?; ஆரியக் கடவுளின் தேர் எட்டுக் குதிரைகளால் இழுக்கப்படுகிறதா? பதினாறு குதிரைகளால் இழுக்கப்படுகிறதா? தீபாவளி புரட்டாசித் திங்களில் வருகிறதா? அய்ப்பசி மாதத்தில் இடம் பெறுகிறதா?; கடவுளின் நெற்றியில் இருக்கும் நாமம் 'u' குறியைக் கொண்டதா? 'y' குறியினைச் சுட்டுவதா?; இட்டுக் கொள்ளப் பெற வேண்டியது ஈரமான திருநீறா? உலர்ந்த திருநீறா?; சீதை

*தலைமுடியைத் தூக்கி எடுத்துச் செல்லப்பட்டாளா? அன்றித் தரையோடு பெயர்த்தெடுத்துச் செல்லப்பட்டாளா? கடவுளுக்கு ஆடல் மகளிர் எழுவர் மட்டும் போதுமா? அதற்கு மேலும் தேவையா? இந்தப் புராணந்தான் உண்மையானதா? அந்தப் புராணம் உண்மையானதா?; இந்தவொரு செய்யுட் பத்தி இடைச் செருகலா? மூலமா?; ஞானசம்பந்தர் சமணர்களைக் கழுவிலேற்றினார் என்பதற்கு அகச்சான்றுகள் – புறச்சான்றுகள் உண்டா? இல்லையா?; இந்த ஆளிடமிருந்து நாம் எவ்வளவு தொலைவு நாம் விலகியிருக்க வேண்டும்? அந்த ஆளிடமிருந்து எவ்வளவு விலகியிருக்க வேண்டும்? சாவுக்குப் பின்னர் தீட்டு நாள்கள் பத்தா? பனிரெண்டா? கடற் பயணம், தொடர் வண்டிப் பயணம் – இரண்டையும் ஒட்டி எவ்வளவு காலத்திற்குத் தீட்டு நீடிக்கும்? சைவம் உயர்ந்ததா? வைணவமா? 'பிரசாதங்கள்' வழங்கப்படவேண்டியது தேவாரம் பாடிய பிறகா? வேதம் ஓதிய பின்பா? இன்னும் இவை பற்றிய ஆராய்ச்சிகள் முடிந்த பாடில்லை!" ('ரிவோல்ட்': 16–1–1929)*

*"பார்ப்பனர்கள் தங்களுக்குத் தாங்களாகவே உரிமை கற்பித்துக் கொள்ளுகின்றனர் என்பதைக் காட்டும் ஒரு சிறிய நிகழ்ச்சி. ஒரு பார்ப்பன உணவகத்திற்குள் நான் நுழைந்ததும் 12 அகவை கொண்ட பார்ப்பனச் சிறுவன் ஒருவனை, 'அடே' என்று அழைத்தேன். சினக்குறியுடன் என்னை முறைத்துப் பார்த்து விட்டு, நான் கேட்டவற்றை எடுத்து வரச் சென்று திரும்பிய அப்பையன் அங்கிருந்த 10 ஆண்டுடைய மலையாளச் சிறுவனை 'அடே' என்று விளித்தான். 'நீ மட்டும் அப்பையனை 'அடே' என்றழைத்தாயே, ஏன்?' என நான் அப்பார்ப்பனச் சிறுவனைக் கேட்ட போது அவன் உடனே, 'அம் மலையாளிப் பையன் எனக்கு இளையவன்' என்றான். நான் மீண்டும், 'அப்படியானால் மூத்தவனாகிய நான் உன்னை அவ்வாறு அழைப்பதை ஏன் பொருட்படுத்த வேண்டும்?' என்று வினவினேன். 'நான் ஒரு பிராமணன்; என்னை அப்படி அழைக்கக் கூடாது' என்றான். நான் திரும்பவும் வேண்டுமென்றே 'அடே' என்ற சொல்லைப் பயன்படுத்தி 'எனக்கு உன் சாதி பற்றிக் கவலையில்லை. தொடர்ந்து நீ உன் சாதிவுயர்வுபற்றிப் பேசுவாயே யானால், அறை விழும் உன் கன்னத்தில்' என்ற பின் அவன் அடங்கினான்" – இச் செய்தியினை 'B.G' என்ற பெயர் கொண்டவர் 'ரிவோல்ட்' 15–5–20–ஆம் நாளுக்குரிய இதழில் குறித்துள்ளார்.*

ஒரு புதுமையான - உண்மையான நிலவரத்தை உலகுக்கு உணர்த்தும் வண்ணம் - விளம்பரம் 13-2-1929ஆம் நாளிட்ட 'ரிவோல்ட்'டில் காட்சி தந்தது.

'ஸ்ரீரங்கத்து ரங்கநாதனின் முறையீடு' என்னும் தலைப்புடன் வெளியாகிய அவ்விளம்பரம் அறிவித்தது இப்படி: "பகட்டில்லா என் பக்தர்களே, என்னுடைய பழமை வாய்ந்த உடைமைகளின் மீது உருவ அழிப்புக் கொள்கையரான சுயமரியாதைக் காரர்களின் உடனடிப் படையெடுப்புக்கான வாய்ப்பு இருப்பதாலும், பொதுமக்களின் உடைமையாக்குவதற்காக எனது வாழ்விடத்தையும் என் உறவினர்தம் வாழ்விடங்களையும் அவர்கள் கையகப்படுத்தி விடுவார்கள் என்று நான் அஞ்சுவதாலும், என் சார்பிலும் எண்ணிறந்த என் உறவினர்கள் சார்பிலும், பற்றும் பணிவும் நிரம்பிய என் பக்தர்களுக்கு இம்முறையீட்டினை விடுக்கிறேன்.

பெரிய அளவில் இறுதிப் பரிசுத் திட்டமென்று ஏற்பாடு செய்து, அஞ்சத்தக்க விரைவுத் தன்மையுடன் வலிமையடைந்து வரும் தன்மானத்தானையின் தாக்குதலிருந்து நானும் என் குடும்பமும் தப்பி இவ்விடம் விட்டு நீங்கியோடுவதற்குப் போதிய பொருளைத் திரட்டியுதவுங்கள். வெள்ளைக் கார அரசின் கீழ் நாங்கள் புகலிடம் நாடிப் பெற்று, பரிசுத் திட்டத்தின் வழி கிட்டுகின்ற பொருளைக் கொண்டு நாங்கள் களிப்புடன் காலங் கழிப்போம். இருப்புப் பாதைத் துறையிலும் பிற அரசுப் பணிகளிலும் வேலை செய்யும் 'முகத்தில் தோன்றிய' என் மக்கள் பணந்திரட்டும் பரிசுத் திட்டத்தினை வெற்றியடையச் செய்ய மெய்வருத்தம் நோக்காது உழைப்பர் என்று நம்புகிறேன். இவ்வண்ணம் ஆக்கலும் காத்தலும் புரியும் உங்கள் இறைவன் எல்லாம் வல்ல ரங்கநாதன்".

தன்மான இயக்கத்தின் தாக்கம் எந்த அளவிற்கு இருந்தது என்னும் சூழ்நிலையைப் பதிவு செய்யும் உத்தியாக இக்கற்பனை விளம்பரம் வரையப்பட்டது.

மத நம்பிக்கையின் அச்சுறுத்திக் கொடுமை பண்ணும் தன்மை பற்றி, The Incubus of Religion' எனும் தலைப்பில் வெளியான வில்லியம்சன் என்பவரின் கட்டுரையில் அடங்கிய சில வரிகள். "மத நம்பிக்கை இங்கிலாந்தில் அதன் கெடு நோக்குடைய பங்கினை ஆற்றியுள்ளது. எதிர்ப்பாளர்கள் (Protestants) ரோமன் கத்தோலிக்கப் பிரிவைச் சார்ந்தவர்களால் வதக்கப்பட்டதையும் எரித்துக் கொல்லப்பட்டதைப் பார்த்துள்ளோம். அடுத்த ஆட்சியின் கத்தோலிக்கப் பிரிவாளர்கள் எதிர்ப்பாளர்களால் வதையுண்டமையும் எரியுண்டமையும் நிகழ்ந்தன. ஆனால் அவர்கள் தங்களைக் கிறிஸ்தவர்கள் என்றே அழைத்துக்

கொண்டனர். துறவிகள் என்னும் சமயக் குரவர்களால் உருவாக்கப்பட்ட உளவியல் நிலை அது! பக்ள் என்பவரது கூற்றுப்படி, கி.பி. ஆறாம் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டு வரை அய்ரோப்பா முழுவதிலுமாகச் சிந்திக்கத் துணிந்தவர்கள் மூன்று அல்லது நான்கு பேருக்கு மேல் இருக்க வில்லை". ('ரிவோல்ட்': *28-7-1929*).

தந்தை பெரியாரின் உருவப் படத் திறப்பு விழாவின் தலைமையேற்ற ஓய்வுபெற்ற உயர்மன்றத் தீர்ப்பாளர் எம். கோவிந்தன் அவர்கள் திருநெல்வேலியில் ஆற்றிய உரைப்பொழிவின் சில பகுதிகளை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

"மேற்குத் தொடர்ச்சி மலைக்கு இப்பால், இந்தியர்களின் தீமைகளுக்கெல்லாம் அடிப்படைக் காரணி சாதிமுறையே என்னும் பேருண்மையின் அருநுட்பத்தை வேறெவரைக் காட்டிலும் முழுமையாக உணர்ந்து, அந்த அஞ்சத் தக்க பேருருவத்துடன் மல்லாடுவதற்கென்றே தன் வாழ்க்கை முழுமையையும் ஒப்படைத்து விட்டவராய் நண்பர் ஈ.வெ. இராமசாமியவர்கள் இருக்கிறார். எங்கள் அறிமுகம் வைக்கம் அறப்போராட்ட நாள்களில் நடந்தது. அவர் எத்துணை வலிமை படைத்தவர் என்பது உங்களெல்லாருக்கும் தெரியும். உரிமைக்காகப் போராடுவதில் சிறந்த வீரர் அவர். வைக்கம் போராட்டத்தின் உயிராயும் உள்ளமுமாகவும் அவர் இருந்தார். நீண்ட காலமாக நடந்த அப்போராட்டத்தை வெற்றி பொருந்திய முடிவுக்குக் கொண்டு வந்தபிறகு திரு. இராமசாமி சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்தார்.

அவரின் உள்ளம் இப்போது முழு முதன்மையான மக்களாயப் பணியின் மீதுதான் இருக்கிறது. எஸ்.என்.டி.பி. மாநாடு கோட்டயத்தில் நிகழ்ந்தபோது 10,000க்கு மேற்பட்ட மக்களிடம் அவர் தனது இயக்கத்தின் கோட்பாடுகளை விளக்கிக் கூறியதைக் கேட்டேன். அவரின் பேச்சு எளிமையாகவும் நேரடியாகவும் இருந்தது. அவரின் இதழ்களிலிருந்து தெறித்த ஒவ்வொரு சொல்லிலும் உண்மையின் மணியடிப்பு ஒலித்ததால், மெய்மறந்து மக்கள் செவிமடுத்தனர். எங்கள் மண்ணில் தளிர்த்துக் கொண்டிருந்த தன்மான விதைகளுக்கு அவர் உயிர்ச்சத்து ஊட்டினார். அதன் விளைவாக சிறந்த அறுவடை காத்துக் கொண்டிருக்கிறது.

நாகரிக உலகத்தின் பழிப்புப் பொருள் என்னும் இழிந்த நிலைக்கு இலக்காவதிலிருந்து இந்தியாவைக் காப்பாற்றவென்று அவர்

*தன் மதிப்பு இயக்கத்தைத் தோற்றுவித்துள்ளார். அதற்காக அவரைப் போற்றுவோமாக! அவரின் தொண்டு வெற்றியோடு நிறைவேறுவதற்கும், அவர் எதிர்நோக்கும் இந்திய மக்களின் வருங்கால வளம் என்பது நடப்புண்மையாவதைக் கண்டு களிப்பதற்கும் அவருக்கு நல்ல உடல்நலமும் உள்ள உரமும் நெடுங்காலம் கிட்டட்டும்! அவரைக் காட்டிலும் உண்மையான நண்பன் இந்தியாவுக்கும் அதன் பல்வகை மக்களுக்கும் வேறு எவரும் இலர்." ('ரிவோல்ட்': 28-7-1929).*

*"மனைவிமார்களுக்கு மலையாள நாடு கழிபேரின்ப நாடாகும். உலகிலேயே மலையாள மகளிர்தாம் அதிக அளவில் உரிமை நுகர்கின்றனர். தங்கள் கண்வன்மார்களைப் பெண்களே தேர்வு செய்கின்றனர். உடைமைகளின் உரிமையாளர்கள் பெண்களே. பணப்பையின் சுருக்குக் கயிறு பெண்களின் கைகளில் இருப்பதால் கணவன்களின் மேல் அவர்கள் ஆட்சி செலுத்து கின்றனர். திருமணத்திற்குப் பிறகு கணவன் தகுதியானவன் இல்லையென்று அவள் தீர்மானித்தால், இல்லத்தை விட்டு அவனை வெளியேற்றுகிறாள் – மிக இயல்பாக!" ('ரிவோல்ட்': 11-8-1929).*

## மதக் கொடுமைகள்

அய்ரோப்பாக் கண்டத்தில் உரிமையோடு சிந்திக்கத் துணிந்தவர்கள் எத்தகைய கொடுமைகளை ஏற்க வேண்டியிருந்தது என்பது பற்றிய பட்டியலொன்று 7-7-1929ஆம் நாளிட்ட 'ரிவோல்ட்'டில் வெளியானது.

*புதிய சிந்தனைகளை வெளியிட்டமைக்காகப் பண்டைய கிரேக்க அறிஞர் பித்தகோரஸ் பழமை வெறியர்களால் பாய்ந்து துரத்தப்பட்டு, கடலில் ஆழ்ந்து அமைதி தேடிக் கொண்டார்.*

*இளைஞர்களை அரசு ஏற்றுக் கொண்ட 'கடவுளர்' களிடமிருந்து பிரித்தார் என்று குற்றஞ் சுமத்தப்பட்டு, நஞ்சருந்தி இறந்தார் சாக்ரட்டீஸ்.*

*கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் மத நிறுவனத்தைத் துணிவாக எதிர்த்த ப்ரெஷ்யாவின் ஆர்னால்டு தூக்கு மரத்தில் தொங்கவிடப்பட்டார்.*

*சமய நிறுவனத்தின் தீயபண்புகளை 15ஆம் நூற்றாண்டில் எதிர்த்த புகழ் தோய்ந்த இத்தாலியச் சீர்திருத்தக்காரர் சவோன ரோலாவை வேட்டையாடி எரித்தனர்.*

16–ஆம் நூற்றாண்டில் அறிவு விடுதலை வேண்டிப் போராடிய பாவியாவின் உல்ரிச் வான் ஹட்டன் உடைமைகள் அனைத்தையும் இழந்து விட்ட நிலையில் தன்னைக் காத்துக் கொள்ளும் பொருட்டு அடிமட்டப் பணியாளர் படையில் சேருமாறு நேரிட்டது.

அதே நூற்றாண்டில் வெளியோடிவிடுமாறு விடப்பட்ட சீர்திருத்தக்காரர் தாமஸ்முவென்ஸர் எதிரிகளால் விரட்டுப் பட்டுக் கொலையுண்டார்.

அறிவுநூல் பதிப்பாளர் எட்டியர் டோலட் சமய எதிர்ப்பாளனாகக் கருதப்பட்டு எரிக்கப்பட்டார்.

தான் முதலில் கூறியதை மாற்றிக் கூற மறுத்து விட்ட புகழ்பெற்ற மருத்துவர் மிக்கேல் செர்வட்டஸ் சாவைத் தழுவினார்.

ரபெலா என்னும் கற்பனைத் தெய்வ நம்பிக்கையாளர் தான் வாழ்ந்த ஃப்ரான்ஸிஸ்கள் மடத்தில் உரிமைச் சிந்தனையாளராக மாற, சிறைக்கு அனுப்பப் பட்டார்.

17–ஆம் நூற்றாண்டில் உரியேல் அகோஸ்டா என்ற மதமெய்ப்பொருளாளர் தொடர்ந்து துன்புறுத்தலுக்கு இலக்காகி இறுதியில், தானே சுட்டுக் கொண்டு மாண்டு போகுமாறு செய்யப்பட்டார்.

மத நம்பிக்கைக்கு எதிரான அறிவியற் கருத்து வெளியிட்ட ஜியார்டனோ ப்ரூனோவை உயிரோடு எரித்துக் கொன்றனர்.

கருத்துரிமை எழுத்தாளர் லூசிலியோவை நாத்திகக் கருத்துகளைப் பரப்பினார் என்று தீர்ப்பளித்து ஈம விறகடுக்குக்கு அனுப்பி வைத்தனர்.

கலிலீயோவை இருண்ட நிலவறையில் போட்டு வாட்டி யெடுத்தனர்.

முற்போக்கு எழுத்தாளர் மாலியர் மாண்டு கிடந்த போது முறைப்படி அவரை அடக்கம் செய்ய மறுத்து விட்டனர். இரவின் நிழலில் மடமந்தைகளின் பழிப்புரைகட்கிடையே சடல அடக்கம் நிகழ வேண்டியிருந்தது.

ஸ்பையினாஸா என்ற ஸ்பானிய யூத அறிஞர் மதக் கொள்கைக்கு மாறுபட்ட கோட்பாட்டை வெளிப்படுத்தியமைக்காக ஒதுக்கி வைக்கப்பட்ட நிலையில் ஹாலந்துக்கு ஓடிப்போய் வறிய வாழ்வு மேற்கொள்ள நேர்ந்தது.

புகழ் நிரம்பிய ஃப்ரெஞ்ச் எழுத்தாளர் பாய்ல் உரிமைச் சிந்தனையாளர் என்னும் குற்றம் சுமத்தப்பட்டதுடன் அவரின் உடைமைகள் அனைத்தும் பறிமுதல் செய்யப்பட்டன.

வேதியியல் வல்லுநர் ஜோஹன் கொன்ராட்டிப்பேல் பலமுறை ஓடியொளியவும் ஏழாண்டுகள் சிறைவாழ்வு ஏற்கவும் நேர்ந்தது.

ஃப்ரெஞ்ச் மெய்ப்பொருளாளர் லாமெட்ரியின் நூற்களெல்லாம் எரிக்கப்பட்டன. நாட்டை விட்டே ஓடியொளிய வேண்டியிருந்த அவர் இரண்டாம் ஃப்ரெடரிக் மன்னரிடம் புகலிடம் தேடிக் கொள்ள வேண்டியிருந்தது.

ஜெர்மானியப் பதிப்பாளர் ஜோஹன் ஜேகப் மோசர் அய்ந்தாண்டுகள் கடுங்காவலில் வைக்கப்பட்டார்.

நாத்திகக் கருத்துகளை எழுதினாரென அறிவிக்கப்பட்டு, டைடராட் என்ற அறிஞர் சிறை வாழ்வு வாழ வேண்டியிருந்தது.

டான் சூபார்ட் எனும் ஜெர்மானிய நூலாசிரியர் சமய எதிர்ப்பாளராகத் தீர்ப்பளிக்கப்பட்டு, விளக்கம் கூற வாய்ப்பளிக்கப்படாமல், 10 ஆண்டுகள் கடுங்காவலில் இருக்குமாறு செய்யப்பட்டார்.

'மார்ஸேல்ஸ்' எனும் நூலாசிரியரான ரோஜர் டிலைல் தனது இறுதிக் காலத்தைச் சிறைக்கூடத்தில் கழிக்க நேரிட்டது.

19ஆம் நூற்றாண்டில் கருத்துரிமைக்குப் போராடிய மெசன் ஹாசர் சட்டப்படியே வெளிப்படையாகச் சுட்டுக் கொல்லப் பட்டார்.

அதே போன்று ஜெர்மன் குடியாட்சிக் கொள்கையரான ராபர்ட்ப்ளம் சுட்டுக் கொல்லப்பட்டார்.

ஃப்ரெஞ்ச் இசைக்கலைஞர் பெராங்கர் 10,000 ப்ராங்க் ஒறுப்புத் தொகை கட்டியதுடன் ஒராண்டு சிறை வாழ்வும் மேற்கொண்டார்.

மடமையொழிப்பு முயற்சியில் ஈடுபட்ட ஃப்ரான்ஸிஸ்கோ ஃபெரர் இயேசுநாதர் சங்க உறுப்பினர்களின் தூண்டலின் விளைவாகச் சுட்டுக் கொல்லப்பட்டார்.

இந்நீண்ட பட்டியலின் அடியில் ஆசிரியர் குறிப்பாகப் பின்வருமாறு எழுதினார் பெரியார்:

"இந்தியாவிலும் அதே நிலவரந்தான் இருக்கிறது. சுயமரியாதைக்காரர்கட்கும் அவ்வாறே ஏற்பட்டால் வியப்படைய மாட்டோம். மாந்த இனத்தைக் குறைந்த அளவுக்கேனும் சிந்திக்கத் தூண்டிவிட்ட மனநிறைவுடன் சாவோம் என்பதால் எதுவாயினும் நாம் அதற்கு அணியமாக விருக்கிறோம்!"

மக்களைத் திருத்துவதற்காக எப்படிப்பட்ட கொடுமை களையும் ஏற்றுக் கொள்ளக் காத்திருந்த பெரியாரின் ஈகப் பண்பும் தன்மான இயக்கத்தவர்களின் தொண்டறத்தின் அருமையும் இவ்வாசிரியக் குறிப்பு வழி தெளிவாக நமக்குப் புலப்படுகின்றன. அத்துடன், இதழாளர் பெரியார் என்றைக்கும் ஒரு கொள்கைச் சான்றோராகவே இலங்கினார் எனும் பேருண்மை உறுதிப் படவும் செய்கிறது.

பெரியாரவர்கள் தம்மால் தோற்றுவிக்கப்பட்ட சுயமரியாதை இயக்கம் மட்டுமே மக்களாயப் புரட்சிக் கருத்துகள் வெளியிடவும் அவற்றை நிறைவேற்ற நடவடிக்கைகள் மேற்கொள்ளவும் உரிமை படைத்தது என்றெல்லாம் கருதியவர் அல்லர். இதனை 14-7-1929 ஆம் நாளிட்ட 'ரிவோல்ட்' இதழில் துணை ஆசிரியவுரையில் உணர்த்திக் காட்டினார்.

## Nothing in Names

'பெயர்களில் ஒன்றுமில்லை' (Nothing in Names) என்ற தலைப்பில் ஆசிரியவுரையாக அவர் வெளியிட்ட கருத்துக்கள்

"கூடல்கள், கூட்டிணைவுக் குழுமங்கள், அவையங்கள் (Associations, Leagues and Samajams) என்ற வெவ்வேறு பெயர்களில் மாநிலத்தின் பல்வேறு பகுதிகளிலும் அமைப்புகள் தொடங்கி வரப் பெறுகின்றன. அண்மையில் காஞ்சியில் அத்வைத சமாஜ் எனும் பெயரில் ஓர் அமைப்பு தோன்றியுள்ளது. சாதி வேற்றுமைகளையும் பால் வேற்றுமைகளையும் களைந்தெறிதல், கைம்பெண் மறுமணத்தினை ஏற்றுக் கொள்ளுதல், சிறு பருவத் திருமணங்களை ஒழித்தல், மதத்தைக் குறிக்கும் புறச்சின்னங்களைக் குற்றப்படுத்துதல், வழிபாட்டுக்காகக் கோவில் அல்லது தேவ அகம் போன்றவற்றின் தேவையை மறுதளித்தல் ஆகியவை சமாஜத்தின் பொதுக் கொள்கைகளாகத் தெளிவுபடுத்தப் பெற்றுள்ளன. சென்னையில் அண்மையில் பெரும்பாலும் இந்நோக்கங்களைக் கொண்டே தமிழ்ச் சங்கம் என்னும் ஓர் அமைப்பு நிறுவப்பட்டுள்ளதாக அறிகிறோம்.

பெயர்கள் என்னவாக இருந்தாலும் நமது கொள்கைகளைப் போன்றவற்றுக்காகவே அவை உழைக்கும் வரையிலும், நம் குமுகாயத்தின் உடனடியாக மறுகட்டுமானம் தொடர்பாக அவை உண்மையாய் இருக்கும் வரையிலும் நமக்கு நல்ல மகிழ்ச்சியே. தற்போதைய மக்களாய அமைப்பினை முற்றாகச் செப்பனிட நம் குருதிவுறவுக் கழகங்களாகிய இவை பணியாற்றுகின்றன என்ற அளவில் நமது சார்பையும் ஒத்துழைப்பையும் இவற்றுக்குத் தரல் நமது கடமை யெனக் கருதுகிறோம். அவற்றின் நோக்கங்களை நடப்பாக்கும்வண்ணம் முனைப்பான வேலைத்திட்டத்தை அவை மேற்கொள்ள வேண்டுமென விரும்புகிறோம். இவை போன்ற குமுகாய மறுகட்டமைப்புப் பதாகையைத் துணிச்சலோடு ஏந்தி, நம்முடன் களம் நோக்கி நடைபோட இன்னும் வரக்கூடிய கழகங்களை மனமார வரவேற்கிறோம்". பெரியாரின் பேருள்ளம் இது!

## குழந்தை மணக் கொடுமை

எவரையும் நெகிழ்த்திவிடும் நிகழ்ச்சி யொன்றைக் குறிப்பிட்டு மருத்துவர் முத்துலட்சுமி ரெட்டி அம்மையார் எழுதிய கட்டுரை, 'A Heartrending Rape' எனும்' தலைப்பில் 1-9-1929ஆம் நாளுக்குரிய 'ரிவோல்ட்' இதழில் வெளியானது. என்ன அந்நிகழ்ச்சி?

> "மலர்ச்சி எய்தாத 11 அகவையே கொண்ட – நெல்லூரைச் சேர்ந்த – ஒரு சிறுமியை ஆசிரியப் பணியிலிருந்த தகாத ஒருவனுக்கு மனைவியாக்கி விட்டார்கள். சில மாதங்களில் பெற்றோரிடமிருந்த அச்சிறுமியை ஏதேதோ சாக்குகள் காட்டித் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று விட்ட கணவன் இரண்டு மாதம் கழிந்தபின், அச்சிறுமி பூப்பெய்திவிட்டதாக மாமனாருக்குத் தெரிவித்தான். மகளைக் காணச் சென்ற அன்னைக்கு அவள் இயற்கையாகப் பூப்பெய்தவில்லை என்றும் மாறாகச் சிறுமி வன்புணர்ச்சிக்கு இலக்காகி விட்டாள் என்றும் உறுப்புக் காயங்களினால் புலப்பட்டுப் போயிற்று!
>
> அங்கு சென்று தங்களின் மகளைத் தம் இல்லத்திற்கு மீட்டுக் கொணர்ந்த தந்தை, காவல் துறை – மருத்துவத் துறை அலுவலர்களின் துணையுடன் மருமகன் மீது வழக்குத் தொடர மாவட்டக் குற்றவியல் நடுவர் கணவனுக்கு ஓராண்டுக் கடுங்காவல் சிறை வாழ்வுத் தீர்ப்பளித்தார். ஆயினும் மேல்முறையீட்டில் அவன் விடுவிக்கப் பட்டான்! இனிமேல்

மனையறத்தில் ஈடுபடமுடியாத அளவிற்கு அச்சிறுமி பாதிப்புக்குள்ளாகி விட்ட நிலையில், வாழும் வகை தேடிக் கொள்ளுதற்கானதொரு தொழிற்பயிற்சிக்கு ஏற்பாடு பண்ணி யுதவுமாறு தந்தை முத்துலட்சுமி அம்மையாரைக் கோரினார்.

இதுபோன்ற நிறைய நிகழ்வுகளைத் தான் சந்தித்திருப்பதாய்க் குறிப்பிட்ட அம்மையார் இப்படிக் கோரிக்கை வெளியிட்டார். "இப்போது அரசு, இந்தியச் சட்ட மன்ற உறுப்பினர் ஆகியோரின் கடமை இன்னதென்று முற்றிலும் தெளிவாகி விட்டது. தாங்களே தேர்ந்தெடுத்த (குழந்தை மணத் தடைச்சட்டக்) குழுவின் பரிந்துரைகளின்படியே அவர்கள் வழி நடத்தப்படவேண்டும். பழமைப் பற்றாளரின் கருத்துகளை அரசு கேட்டாக வேண்டுமென்றால், குழந்தைகளுக்கும் மகளிர்க்கும் மாபெரும் நயன்மைக்கேடு விளைவிக்கின்றனர் என்பது மட்டுமன்று – நாட்டின் முன்னேற்றத்திற்கே தடையிடுகின்றனர் என்பதுவுமாகும்."

குழந்தைகள் மணச்சட்டம் நிறைவேற்றப்பட்டு விட்ட நிலையிலும் வைதீக வெறி பிடித்த பார்ப்பனர் வாளாவிருக்க விரும்பாமல், சட்டத்தை நடப்புக்கு வராமல் தடை செய்யும் முயற்சிகளில் இறங்கினர். இங்கிலாந்துக்கே சென்று முறையிடத் தூதுக்குழு வொன்றை உருவாக்கினர். அக்கட்டத்தில் தமிழகத்தைச் சேர்ந்த 'தேசிய'ப் பார்ப்பனராகிய எம்.கே. ஆச்சாரியார் நண்பர்கள் சிலருக்கு, சிம்லாவிலிருந்து எழுதியனுப்பிய மடலை, 'ரிவோல்ட்' வெளியிட்டது. அதைப் படிக்கிறேன்.

"இம்மடல் உங்களை எய்துவதற்கு முன்னரே, பொறுக்குக் குழு வடிவமைத்த வண்ணமே குழந்தைகள் மணச்சட்டம் நிறைவேற்றப்பட்டிருக்கும். அடுத்து என்ன? நேற்று என் திருத்த முன்மொழிவின் போது இந்தியச் சட்டமன்றத்தில் மதநடுநிலைமைக் கருத்தை வலியுறுத்தினேன். ஆனால் என் திருத்தத்திற்கு ஏழு ஒப்போலைகளே கிட்டின! மதம் தொடர்பான பொருள்களில் சட்டமன்ற இடையீடுகள் இருப்பதை இந்துக்களாகிய நாம் ஏற்றுப் பணிந்து விடுவதா? இந்துக்களின் தூதுக்குழுவொன்று இங்கிலாந்து செல்லல் என்ற உங்களின் எண்ணம் உரம் வாய்ந்ததுதான். ஆனால் போதிய அளவுக்கு ஒத்துழைப்பும் சார்பும் பெற்று விட முடியுமா? இங்கிருக்கும் நண்பர்களுடன் பேசிப் பார்த்துவிட்டு உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

> எனினும் நமக்கு என்று ஒரு நாளிதழ் கட்டாயம் தேவை. சென்னையில் 'டெய்லி எக்ஸ்ப்ரஸ்' கிடைக்கக் கூடியது. அதை நம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர ஏற்பாடு செய்ய முடியுமா? உடனடியாக நமக்கு ஒரு லட்ச ரூபாய் வேண்டும். வைதீகத் தென்னிந்தியா அதற்காக நாடி ஈடுபடுமா? இப்போது அரசு நாம் வெறும் வாய்ப்பேச்சுக்காரர்களே தவிர, முனைப்புக் கொண்டவர்கள் அல்லர் என்றே கருதுகிறது. மாளவியா ஊசலாட்டத்தில் உள்ளார். தனது தலைமையே வெற்றி தோல்வி உறுதியற்ற போராட்ட நிலையில் இருப்பதாக அவர் உளப் பாதிப்புக்கு உள்ளாகியிருக்கிறார். பிர்லா, ஜெயகர் போன்றவர்கள் அளிக்கும் நன்கொடைத் தொகைகளில்லாமல் அவர் கட்சி நடத்த முடியாது. நன்கொடையாளர்களோ சீர்திருத்தத்தின் எல்லை முனையில் இருப்பவர்கள்! அவர்களின் கைகளுக்குள் மாளவியா அடங்கிக் கிடக்கிறார்".

எம்.கே. ஆச்சாரியாவின் இம்மடல் கிடைக்கப் பெற்ற இரண்டு நாட்களுக்குள் தமிழ்நாட்டுப் பார்ப்பன வைதீகப் பற்றாளர்களான என்.டி. லட்சுமிநாராயண அய்யர், என்.எல். துரை, வி. ஜயராம அய்யர், டி.கே. பாலசுப்பிரமணிய அய்யர், எஸ். மகாலிங்க அய்யர், எம்.கே. வைத்தியநாத அய்யர் முதலியோர் ஒன்றிணைந்து கலந்து பேசி, வைதீகக் காப்பு நோக்கத்திற்காகத் திருச்சிராப்பள்ளியைத் தலைமையகமாகக் கொண்டு நாளிதழ் ஒன்று தொடங்குவதென்றும் பங்கொன்றுக்கு 100 ரூபாய் மேனி 1000 பங்குகள் திரட்டுவதெனவும் முடிவு செய்தனர். இச்செய்திகள் அனைத்தும் 'ரிவோல்ட்'டின் 6-10-1929ஆம் நாளைய இதழில் இடம் பெற்றன.

## செல்வி இந்திராணி கட்டுரை

திருநெல்வேலியில் நடந்த சுயமரியாதை மாநாட்டில் மூவலூர் இராமாமிர்தத்தம்மையார்,

> "கணவனை இழந்த கைம்பெண் எத்தகைய இரங்கத்தக்க கொடுமைகட்கு உள்ளாகிறாளோ அதுபோன்ற கொடுமை களுக்கு மனைவியை இழந்த ஆண்மகனும் இலக்காகுமாறு குமுகாயச் சூழ்நிலையும் சட்டக் கட்டாயமும் உண்டாக்கப் பட்டாலொழிய வைதீக இந்துக்களின் மங்கிய பார்வை செம்மையாகாது" என்று கருத்தறிவித்ததைக் குறிப்பிட்டு, அதன் தொடர்பாகச் செல்வி இந்திராணி கட்டுரை யொன்று 'ரிவோல்ட்'டில் 22-9-1929 அன்று எழுதினார். தென் அமெரிக்காவிலுள்ள 'பிரிட்டிஷ் நியு கினியா' நாட்டின்

மெக்கேயோ மாவட்டத்து மக்களின் வாழ்க்கை முறைபற்றி எழுத்தாளர் ஃப்ரேஸர் பதிவு செய்த செய்திகள் அக்கட்டுரையில் இடம் பெற்றன. ஆர்வத்தைத் தூண்டக் கூடிய சுவையான செய்திகள் அவை.

"மெக்கேயோ மண்ணில் மனைவியை இழந்தவன் மக்களாய வாழ்வின் உரிமைகளையும் இழந்துவிடுகிறான்; அதாவது குடியொதுக்கம் செய்யப்பட்டு விடுகிறான். அச்சத்திற்கும் அதிர்ச்சிக்கும் உரிய பொருளாக அவன் கருதப்பட்டுப் பிறரால் தவிர்க்கப்படும் பொருளாக மாறிவிடுகிறான். பயிர் விளைவிக்க முடியாது அவனால். மக்களின் முன்னிலையில் வெளிப் படையாக எந்த இடத்தையும் கடக்கவோ, வழிகளிலும் சாலைகளிலும் நடக்கவோ மாட்டான் அவன். காட்டு விலங்குகளைப் போலப் புற்களினூடேயும் புதர்களினூடேயும் பதுங்கிப் பதுங்கித்தான் அவன் நடமாட வேண்டும். எவரேனும் – குறிப்பாக ஒரு பெண் – அவன் கண்ணில் பட்டால், ஒரு மரம் அல்லது புதர் மறைவில் ஒளிந்து கொள்ள வேண்டும். மீன் பிடிக்கவோ வேட்டையாடவோ அவன் விரும்பினால் தன்னந்தனியாக அதுவும் இரவில்தான் செல்ல வேண்டும். எவரிடமாவது ஏதேனும் கலந்து பேச வேண்டியிருந்தால் – அது பாதிரியாக விருந்தாலும் – இரவில் கரவாகக் கலந்துரை யாடுகிறான்; அதுவும் குரலொலியையே இழந்து விட்டவனாகக் கிசுகிசுப்பு முறையில்தான் பேசுகிறான். தற்காப்புக்காக எப்போதும் போர் மழு ஒன்றைச் சுமந்து கொண்டே திரிய வேண்டிய நிலை அவனுக்கு!"

இச்செய்திகளை நம்ப முடியவில்லை யல்லவா? ஆனால் இவற்றை, **'Golden Bough'** என்ற நூலில் எழுதியிருப்பவர் மக்கள் மரபாராய்ச்சியில் வல்லுநர் என்னும் புகழ் தோய்ந்த ஃப்ரேஸர். அவரை மேற்கோளாகக் காட்டிய 'ரிவோல்ட்' கட்டுரையாளர், ஏன் நம் நாட்டு வைதீக உடன்பிறப்பாளர்களை ஒரு பயிற்சித் திட்டமாகப் பிரிட்டிஷ் நியூ கினியாவுக்கு அனுப்பிவைக்கக் கூடாது?"

என்ற வினாவுடன் முடித்துள்ளார்.

## பம்பாய் கோவில் நுழைவுப் போராட்டம்

அண்ணல் அம்பேத்கர் அவர்களின் தலைமையின் கீழ் அக்காலத்தில் பம்பாயில் மேற்கொள்ளப்பட்ட இரண்டு

நடவடிக்கைகளுக்குக் கிட்டிய வெற்றிகள் பற்றிய அரிய செய்திகள் 'ரிவோல்ட்'டில் காணக் கிடக்கின்றன.

குமுகாயச் சமநிலை கோரும் நோக்குடன் பிஆர். அம்பேத்கர் அவர்களைத் தலைமையாகக் கொண்ட 'சமாஜ் சமதாசங்' என்ற அமைப்பு பம்பாய் - தாதர்ப் பகுதியில் அமைந்த கணபதி கோவிலுள் சென்று வழிபடும் உரிமை தீண்டத்தகாதோர்க்கும் வேண்டும் என்றும் கேட்டுக் கிளர்ச்சித் திட்டமொன்றை அறிவித்தது. குறிப்பிட்ட நாளில் அக்கோவிலின் முன்பாக 2000 'தீண்டத்தகாதோர்' எனப்படுவோர் திரண்டனர். அதிகார வெறிக் கும்பலோ பார்ப்பனியம் சார்ந்த வலிமைகள் அனைத்தையும் திரட்டியிருந்தது. அயலவர் ஆட்சியின் காவல் துறையின் துணையுடன் அது அணியமாகி நின்று கொக்கரித்தது. என்றாலும் கிளர்ச்சியாளர்கள் பின் வாங்காது திண்ணியராக நிலையூன்றி நின்றனர். ஏழு மணி நேரம் இழுவைப் போர் நீடித்தது. இறுதியில் உடன்பாடு ஏற்பட்டு, 'தீண்டத்தகாதோர்' வெற்றியோடு கோவிலுக்குள் நுழைந்தனர் என்பது மட்டுமன்றி பூசனைப் பொருள்கள் வைத்து வழிபடவும் செய்தனர். இது நடந்தது 1928இல்.

மறு ஆண்டு, தீண்டத் தகாதோர்க்குக் கிட்டிய உரிமை நிலையினைப் பொறுத்துக் கொள்ள ஒருப்படாத, பித்துப் பிடித்த பார்ப்பனியம் கோவில் ஆட்சி மன்றக் குழுவில் "ஒடுக்கப்பட்ட பிரிவினர்க்கு வழிபடும் உரிமை வழங்கப்படக் கூடாது" என்னும் தீர்மானம் நிறைவேறுமாறு செய்தது. மேலாண்மைக்குழுத் தலைவராக விருந்த பார்ப்பனரோ தீண்டத்தகாதோரைக் கோவிலுக்குள் புகவே விடக்கூடாது என்னும் அளவிற்குச் சென்று விட்டார். அந்த அறைகூவலை அம்பேத்கரின் கழகம் ஏற்றது.

7-9-1929 அன்று ஆயிரம் ஒடுக்கப்பட்ட மக்கள் கூடினர்; உயர்தரமான முறையில் மல்லாடல் நடத்தினர். இவ்வாண்டும் ஓர் ஆங்கிலேயக் காவலதிகாரியின் தலைமையில் பெரிய அளவில் காவல் படையினர் குவிக்கப்பட்டிருந்தனர். ஓர் 'இந்து'க் கடவுளை 'இந்து' மக்களின் கற்பனையான தீட்டிலிருந்து காப்பாற்றுவதற்கு ஓர் ஆங்கிலேயன் தேவைப்பட்டமை முரண் நகைச் சுவைத் தன்மை வாய்ந்ததல்லவா? ஒன்பது மணி நேரம் போராடிய அம்பேத்கர் படைக்கே இறுதி வெற்றி! 'தீண்டத்தகாத' மஹர்-மங்க் பிரிவுகளைச் சேர்ந்த இரண்டு பழங்குடிப் பெருமக்கள் பீடு நடைபோட்டுக் கோவிலுக்குள் நுழைந்தனர்; மலர்கள் தூவி வழிபாடு செய்து திரும்பினர்.

இச்செய்திகளைப் பதிப்பித்து வெளியிட்ட பெரியார், போராட்டக் குழுவினரின் பெயர்களைக் குறிப்பிட்டு, அவர்களுக்குத் தம் பாராட்டுக்களையும் புலப்படுத்தினார். ('ரிவோல்ட்': 29-9-1929)

## சைமன் குழுவிடம் கொடுக்கப்பட்ட கோரிக்கை

சர்ஜான் சைமன் தலைமையில் அரசர்க்குரிய குழு இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு வந்தபோது பிரிட்டிஷ் மலாயாவில் வாழ்ந்த தமிழ்நாட்டு ஆதி திராவிடர்களின் சார்பில் கொடுக்கப்பட்ட கோரிக்கை மடல் முழுமையும் அப்படியே 17-4-1929 ஆம் நாளுக்குரிய 'ரிவோல்ட்'டில் வெளியிடப்பட்டது. அதன் சில பகுதிகளையேனும் எடுத்துக் காட்டுவது இன்றியமையாதது.

"அய்யா, தற்போது பிரிட்டிஷ் மலாயாவில் குடி வாழ்ந்து கொண்டிருக்கும் தமிழக ஆதி திராவிடர்களாகிய நாங்கள், இந்தியாவில் இரண்டாம் முறைப் பயணம் மேற்கொண்டிருக்கும் தங்கட்கு எம் நெஞ்சார்ந்த வரவேற்பினை நல்குகிறோம்.

ஆதி திராவிடர்களாகிய நாங்கள் 'சாதி' என்பதில் சேர்க்கப் படாதவர்கள் அதாவது சாதிக்கப்பாற்பட்டவர்கள். வாழ்நாள் முழுவதும் அடிமைகளாகத் தொண்டு செய்வதே எங்களின் தொழில்.

எங்கள் பெண்கள் வயல்களில் பாடுபடுவதற்கும் உரம் திரட்டுவதற்கும் அனைத்து வகைப் புழுக்கை வேலைகள் ஆற்றுவதற்கும், எங்கள் குழந்தைகள் மந்தை மேய்ப்பதற்கும், ஊர்த் தலைமகன் தரும் ஆணைகளைத் தமுக்குகளின் மூலமாகப் பிற இடங்களுக்கு எடுத்துச் செல்லும் தோட்டிகளாகத் தொண்டாற்றுதற்கும், செத்துப் போனவர்களைப் புதைப்பதற்கும், பறைகள், தமுக்குகள், ஊது குழல்கள், பதாகைகள், விளக்குகள் முதலியவற்றைக் கையாண்டு, காட்சிகள், திருவிழாக்கள், ஊர்வலங்கள், சடங்குகள், திருமணங்கள், நீத்தார் கடன்கள் ஆகியவை நடைபெறச் சாதிகளின் மக்களுக்குத் தொண்டு புரியவும், உயிர் நீங்கிய சடலங்களைப் புதைக்கவும் எரிக்கவும், ஒப்பந்தக்காரராய்ப் பொறுப்பாற்றவும், செய்திகள் கொண்டு செல்லுவோராய் தொண்டு செய்வும் நாங்கள் பயன்படுகிறோம். செய்திகள் சேரவேண்டிய இடங்களுக்குப் பயணம் செல்லுகையில் சில சமயங்களில் தாங்க முடியா வெப்பத்தில், இருட்டில், மழையில் பல பகலிரவுகளை நாங்கள் கழிக்க வேண்டியிருக்கிறது. மேலும் திருடர்கள், விலங்குகள், பாம்புகள்

முதலியவற்றை எதிர்கொண்டு போராடும் எதிர்பாரா இடர்ப்பாடுகளையும் நாங்கள் சந்திக்க வேண்டும். ஒவ்வொரு முறையும் 'பறச்சேரி'யைச் சேர்ந்த ஓர் ஆண் பணியேற்க வேண்டும், ஆண்கள் இல்லா நேரங்களில் பெண்களோ ஆண் பையன்களோ பட்டினி கிடந்தாவது அப்பொறுப்பை நிறைவேற்ற வேண்டும்.

மாந்தத் தன்மையே இல்லா இப்படிப்பட்ட கொடுமைகளின் தாக்கத்தாலும் படுவறுமையினாலும் வாட்டி வருத்தும் சூழ்நிலைகளினாலும், வேற்று மதங்களைத் தழுவி அமைதி பெறும் நிலைமைக்குத் தள்ளப்படுகின்றனர். பிறந்த நாட்டைத் துறந்து ஆங்கிலேயப் பேராட்சிக்குட்பட்ட ஆஃப்ரிக்கா, பர்மா, இலங்கை, மலாயா போன்ற பிற நாடுகளில் வாழ்விடம் தேடுகின்றனர். இத்தகைய குடிப் பெயர்ச்சி ஒருவகையில் நல்லதாயிற்று. பிற நாட்டு மண்ணில் கால்பதித்த நொடியே அஞ்சத்தக்க சாதியென்னும் விலங்கிலிருந்தும் சுமையிலிருந்தும் விடுதலையாகி விடுகின்றனர்.

இந்தியாவிலோ எங்களின்பால் கொலைச் செயல்களே மேற்கொள்ளப்படுகின்றன. இயற்கையின் சட்டங்களின்படி உரிமைகளை மறுப்பது என்பதுவும் கொலை நடவடிக்கை தானே? தன்னாட்சி என்பது எந்த வடிவத்தில் இந்நாட்டுக்குக் கிட்டினாலும், எங்களின் கடைத்தேற்றத்திற்கு அது வழி செய்யுமானால், அதை நாங்கள் வரவேற்கிறோம். அதற்கு முதற்படியாக, ஆதிதிராவிடர்களின் சீரமைப்புக்கென்று தனியானதொரு சிறப்புத் துறையை உருவாக்க வேண்டுமென்று இறைஞ்சுகிறோம். கீழ்க்காணும் நடவடிக்கைகள் அத்துறையினால் மேற்கொள்ளப்பட வேண்டும்.

1. அடிமைகட்குரிய புழுக்கை வேலை செய்யக் கட்டாயப் படுத்துதல், தீண்டத்தகாதோர் எனப் பாகுபடுத்தும் பொல்லாப் பெருங்கேடு, நெறிப்படியான உரிமைகளைக் கூடத் தடை செய்தல், செத்துப்போன விலங்குகளை உட்கொள்ளச் செய்தல் ஆகியவை ஒறுப்புக்குரிய குற்றங்கள் என ஆக்கப்பட வேண்டும். 2. குடியிருப்புக்கும், வேளாண்மைக்கும் சடல அடக்கத்திற்கும் விலையில்லா மனைகள் வழங்கப்பட வேண்டும். 3. சாதிப் பஞ்சாயத்துமுறை, மது விற்பனை, வழக்குமன்ற – காவல்துறை – பிறதுறைகளின் பதவிகள் குறிப்பிட்ட உயர்சாதியினரின் தனியுரிமையாக இருக்கும் நிலை, மனுஸ்மிருதி போன்ற சாதி முறையை வற்புறுத்தும் அதிகார நூல்கள் ஆகியவை

ஒழிக்கப்பட வேண்டும். 4. ஒடுக்கப்பட்ட குடிகளின் இருபால் குழந்தைகட்குக் கட்டணமற்ற கட்டாயக்கல்வி வழங்கப்பட வேண்டும். 5. காவல்துறை, அஞ்சல் துறை, ஆட்சித் துறை போன்றவற்றில் ஆதிதிராவிடர்களை அமர்த்துவ்தற்கான ஏந்துகள் செய்யப்பட வேண்டும். 6. வட்ட – மாவட்ட நாட்டாண்மைக் கழகங்கள், மாநில வாரியங்கள், தீர்ப்பு மன்றம், கருத்துக் கூறவையம் ஆகியவற்றில் ஆதி திராவிடர்களை உறுப்பினர்களாக அமர்த்துதல். 7. அஞ்சலகங்களைச் சார்ந்து அவற்றின் அதிகார எல்லைக்குட்பட்ட சிற்றூர்களுக்கென ஒரு காவல் நிலையம், கூட்டுறவு நிறுவனங்கள், தீர்ப்பாயம் முதலியவை அமைக்கப்பெற வேண்டும்.

முடிவாக உளச்சான்றுப்படி நாங்கள் தங்களை இறைஞ்சுவ தெல்லாம் இந்தியாவின் வருங்காலத்தை வடிவமைக்கும் வண்ணம் தாங்கள் மேற்கொள்ளும் ஆழ்ந்தாய்வுகளில் சாதியால் பீடிக்கப்பட்ட இந்தியாவில் நீண்ட காலமாக நிலவி வரும் மாந்தத்தன்மையற்ற கொடுமையான பழக்க வழக்கங்களை நாங்கள் குறிப்பிட்ட உண்மைச் செய்திகள்தாம் வென்று மேலோங்கி நிற்க வேண்டுமென்பதே!"

"இங்கிலாந்துப் பெண்கள் அரசியலில் மதிப்பிற்குரிய உயர்நிலையினை அடைவதற்கு முன்னர் மிகக் கடுமையாகப் போராடி, மக்களாய உரிமைகளை எய்திக் கொண்டு விட்டனர். மணவிலக்கு, திருமண உரிமை, உடைமைகளில் உரிமை, இவை போன்ற பிற உரிமைகள் ஆகியவற்றை அரசியல் உரிமைகளையும் சலுகைகளையும் எய்துவதற்கு முன்பாகவே பெற்றுக் கொண்டனர். எனவே இந்தியப் பெண்களும் தங்களின் அக்கறையை அவர்தம் குமுகாயச் சிக்கல்களின்பால் காட்ட வேண்டும். முதலில் அவர்களை ஆண்களின் கொடுங் கோன்மைக்கு உட்படுத்தும் வல்லாட்சிகளிலெல்லாம் வல்லாட்சியிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ள வேண்டும். – கே.எம். பாலன்." ('ரிவோல்ட்': 27–10–1929).

சைனாவின் பல்வேறு பகுதிகளில் கோவில்கள் அரசாட்சியினால் மூடப்பட்டு விட்டன. சமய பிக்குகள் அதிகாரம் இழந்து விட்டனர். பிக்குகளில் குற்றச் செயல்களில் ஈடுபடக் கூடியவர்களும் தகுதியே யில்லாச் சோம்பேறி மாக்களும் உண்டு என்பது ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மையாகிவிட்டது. மடங்களுக்கு உரிமையா யிருந்த அரசு பறிமுதல் செய்து, அவற்றை விற்றுக் கிடைத்த பணத்தைக் கல்வி நோக்கங்

களுக்காகச் செலவிட்டு வருகிறது. கோவிலிலிருந்து உருவப் படிமங்கள் தகர்த்தெடுக்கப்பட்டு உடைக்கப்படுகின்றன. கோவில்கள், சமயக் குரவர்கள், கடவுள்கள் ஆகியவை மீது மக்கள் கடும் வெறுப்பு கொண்டுள்ளமை புலப்படுகிறது" ('ரிவோல்ட்': 27-3-1929).

பொருட் பெண்டிர் ஒழிப்புச் சட்டம் கொண்டு வர அரசு முயற்சி மேற்கொண்ட போது, சான்றுரை அளித்த தேவதாசிகள் சிலர், "இந்து மத வழக்காறுகளுக்கு இணங்கவே தொழில் புரிந்து வரும் எங்கட்கு இச்சட்டத்திலிருந்து விலக்களிக்கப்பட வேண்டும். நாங்கள் இந்து சமயத்தின் திருமண நெறிகளில் ஒன்றான காந்தர்வ முறைப்படி மணம் புரிந்து கொண்டவர்கள். எனவே எங்களைப் பரத்தையர் என்னும் பிரிவில் சேர்க்கக் கூடாது" என்றனர். ('ரிவோல்ட்': 17-4-1929).

## கைம்பெண்களின் எண்ணிக்கை

1921ஆம் ஆண்டு எடுக்கப்பட்ட குடிக்கணக்கின்படி நம் நாட்டில் இருந்த கைம்பெண்களின் எண்ணிக்கைப் புள்ளிகள் 8-5-1929ஆம் நாளிட்ட 'ரிவோல்ட்'டில் எடுத்துப் போடப்பட்டன. இந்தியா முழுவதிலும், சென்னை மாநிலத்தில் மட்டும் என்ற இருவகைப் பட்டியல்கள் தரப்பட்டன.

"ஓராண்டு அகவையே ஆன கைம்பெண்களின் எண்ணிக்கை - 497 பேர்; 2 ஆண்டுக்கு உட்பட்டோர் - 494 பேர்; 3 ஆண்டுக்குட் பட்டோர்- 1257; 4 ஆண்டுக்குட்பட்டோர் - 2837; 5 ஆண்டுக்குட் பட்டோர் - 6707; 10 ஆண்டுக்குட்பட்டோர் - 85,037; 15 ஆண்டுக்குட்பட்டோர் - 2,32,447; 20 ஆண்டுக்குட்பட்டோர் - 1,74,20,820; ஆக மொத்தம் - 1,77,49,796 பெண்கள். அனைத்திந்தியாவுக்குமான கணக்கு இது.

சென்னை மாநிலத்திற்கு மட்டுமான எண்ணிக்கை இதோ: மக்கள் தொகையில் பெண்களின் மொத்த எண்ணிக்கை - 1,92,46,104 பேர். அவர்களுள் கைம்பெண்களாகி விட்டவர்கள் - 37,13,695 பேர். இளங்கைம்பெண்கள் என்ற வகையில், 5 ஆண்டுக்குட்பட்டோர் - 1,211; 10 ஆண்டுக்குட்பட்டோர் - 5,692; 15 ஆண்டுக்குட்பட்டோர் - 22,337; 20 ஆண்டுக்குட் பட்டோர் - 54,699; 25 ஆண்டுக்குட்பட்டோர் - 1,42,267; 30 ஆண்டுக்குட்பட்டோர் - 2,02,651: ஆக மொத்தம் - 4,28,757 பேர்".

இச்செய்திகளைத் 'திகைக்க வைத்து அச்சுறுத்தும் எண்ணிக்கைகள்' என்னும் தலைப்பிட்டுக் கொடுத்த 'ரிவோல்ட்' கவலையுணர்வு பொங்க, "உலகில் எந்த நாட்டிலாவது எந்த மதமாவது இத்துணை பெரிய பாழ்நிலைக்கு வழி செய்திருக்கிறதா?" என்று மதமரபுகளில் வெறி கொண்டோரை நோக்கி வினா எழுப்பியது. கைக்குழந்தைகள் கூடக் கைம்பெண் பட்டம் பெறுகின்ற அவலத்திற்குத் தள்ளப்பட்டமை கொடுமைகளில் மாபெருங் கொடுமையல்லவா?

1929இல் சென்னை மாநில நலவாழ்வுத் துறை அமைச்சராக விருந்த மாண்புமிகு எஸ். முத்தையா முதலியார் அரசியலில் தனக்கு எதிராக விருந்தவர்களின் சூழ்ச்சிகளையெல்லாம் வென்று, மக்களிடையே மதுக்குடி யொழிப்புக் கருத்துகளைப் பரப்பும் நடவடிக்கைகளுக்காக அரசிடமிருந்து 4 இலட்ச ரூபாய் ஒதுக்கீடு பெற்றமையைப் பாராட்டியது 'ரிவோல்ட்'.

> "நம்நாடு – குறிப்பாக நம் மாநிலம் – நம் அமைச்சருக்கு நன்றி செலுத்தப் பெருங்கடன் பட்டிருக்கிறது. பிற அரசியல் தொண்டர்கள் பின்பற்ற வேண்டிய குடித்துறப்புக் கொள்கை பரப்பும் திட்டமொன்றை முதன் முதலாக நம் அரசு துணிவோடு மேற்கொண்டுள்ளது!" என்று எழுதிய 'ரிவோல்ட்', குடித்துறப்புக் கொள்கைப் பரப்புக்கான அறிவுரை வழங்கும் குழுவில் பெரியார் அவர்கள் இடம்பெற்றிருந்தார் எனும் செய்தியையும் குறிப்பிட்டிருந்தது" ('ரிவோல்ட்': 15–5–1929).

இலண்டனில் ஆண் - பெண் பாலியல் சமநிலை உரிமை மாநாடு ஆங்கிலேய சரிசமத் தனியுரிமைக் கூட்டரசுப் பேராயத்தின் (British Common Wealth League) சார்பில் நடைபெற்ற போது திருவாட்டி ஜீனாராஜாதாசா இந்தியாவில் நிலவும் தேவதாசி முறை, பொருட் பெண்டிர் முறை ஆகியவற்றினால் விளையும் மாபெரும் கேடுகளைக் குறிப்பிட்டு, பெரும்பான்மையான பொது மக்கள் குமுகாயச் சீரமைப்பை விரும்பினாலும், சட்ட மன்றங்களில் சீர்திருத்தச் சட்ட- திட்டங்கள் அறிமுகப்படுத்தப்படும் போதெல்லாம் அரசுத் தரப்பிலேயே எதிர்ப்புக் கொடுக்கப்படுவதால் பிரிட்டிஷ் பேரரசின் கீழுள்ள நாடுகளின் பெண்கள் அமைப்புகள் இந்தியாவுக்கான செயலாளருக்கும் இந்தியாவினை ஆளும் அரச நிகராண்மையருக்கும் தீர்மானங்கள் இயற்றி அனுப்ப வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அங்கேயே அப்பொழுதே சென்னைச் சட்டமன்றத்தில் தேவதாசி முறையையும் இந்துக் கோவில்களுக்கு மழலைச் சிறுமிகளை உரிமையாக்கும் முறையையும்

ஒழிக்கும் வகையில் சட்ட வரைவினை அறிமுகம் செய்துள்ள மருத்துவர் முத்துலட்சுமியவர்களைப் பாராட்டித் தீர்மானமொன்று நிறைவேற்றப்பட்டது. இச்செய்தியினை 'ரிவோல்ட்' 23-6-1929இல் வெளியிட்டது.

1929இல் திருவாங்கூர் அரசின் 'திவானாக' அமர்த்தப்பட்ட திரு. வி.எஸ். சுப்பிரமணிய அய்யர் உடனடியாக மேற்கொண்ட முதற்செயல் என்ன, தெரியுமா? அதிகார முறையில் அவருக்கு ஒதுக்கப்பட்ட 'பக்திவிலாஸ்' என்னும் வளமனையில் பணி செய்து கொண்டிருந்த பார்ப்பனரல்லா அலுவலர்கள், பணியாளர்கள் அனைவரையும் அங்கிருந்து நீக்கிவிட்டமைதான். அத்துடன் அவர்களுக்கு மாற்றாகப் பார்ப்பனர்களையே அலுவலர்களாகவும் பணியாளர்களாகவும் அமர்த்திக் கொண்டார்! "இது அவரின் விரிந்த மனப்பான்மையையும் எல்லாரையும் ஏற்கும் பண்பையும் சாதீயத்திற்கு அப்பாற்பட்ட தகைமையையும் மெய்ப்பிக்கிறதல்லவா?" என்று 4-8-1929ஆம் நாளிட்ட 'ரிவோல்ட்' சாடியது!

> **"காரைக்குடியில் 1929 ஆகஸ்ட் மாதம் நடந்த ஆதி திராவிடர் மாநாட்டில், 'ஆதி திராவிடர் இல்லம்' ஒன்று நிறுவ, 15 ஏக்கர் நிலம் நன்கொடையாக வழங்கிய சிவகங்கை மன்னருக்கும், 10, 000 ரூபாய்த் தொகையை நன்கொடையாக அளித்த திரு. எம்.ஆர். சுப்பையா செட்டியாருக்கும் நன்றி தெரிவிக்கும் தீர்மானமென்று நிறைவேற்றப்பட்டது. ஆதி திராவிடர் நலனில் இருபெருமக்களுக்கும் எத்துணை அக்கறை!" ('ரிவோல்ட்': 18-8-1929).**

## மூவலூர் அம்மையார் மீது வழக்கு

மூவலூர் இராமாமிர்தம் அம்மையாருக்கு எதிராகத் தொடுக்கப்பட்ட வேடிக்கையானதொரு வழக்கு பற்றிய செய்தியை 'ரிவோல்ட்'டில் அறிகிறோம்.

> **"மூவலூரில் 'தேவதாசி' குடும்பத்தில் பிறந்து வாழ்ந்து கொண்டிருந்த 'தங்கம்' என்னும் இருபது ஆண்டகவை இளம் பெண்ணை இராமாமிர்தம் அணுகி, தாசி குலத்து ஒழுக்கக் கேடான வாழ்க்கையைத் துறந்து முறையான இல்லறத்தில் அப்பெண் ஈடுபட வேண்டுமென்றும், ஒரு பண்புள்ள கணவனை அப்பெண்ணுக்குக் கிடைக்கத் தான் உதவுவதாகவும், சுயமரியாதை இயக்க நடவடிக்கைகளின் பயனாக நூற்றுக்கணக்கான தேவதாசிக் குடும்பப் பெண்கள் இல்வாழ்வை ஏற்றுள்ளார்கள் என்றும் அறிவுறுத்தினாராம்.**

*அவ்வளவுதான்! தன் பெண் மண வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்து விட்டால் தங்களின் குடும்ப வருங்கால வளம் என்னாவது என்று சீறினார் செல்வியை ஈன்ற அன்னை விளைவாக வாயாடலும் கையோச்சுதலும் நிகழ்ந்தன. குற்றவியல் நடுவர் மன்றத்தில், தன் மகளைத் தூக்கிச் சென்று விட முயற்சி மேற்கொண்டு தன்னையும் தன் மகன்களையும் வன்முறையில் தாக்கினர் என்று இராமாமிர்தம் மீது பெண்ணின் தாய் குற்றச்சாட்டுப் பதிந்து விட்டார்! ('ரிவோல்ட்': 15-9-1929).*

*“திருவாட்டி பெர்ட்ரண்ட்ரஸல், ஹாவ்லக் எலிஸ், பெர்னார்ட் ஷா, எய்ச்.ஜி.வெல்ஸ், அல்டஸ் ஹக்ஸ்லி போன்ற புகழார்ந்த பெருமக்களின் வழிகாட்டலிலும் மேற்பார்வையிலும் இயங்கும் பாலியல் சீர்திருத்தப் பேராயத்தின் அனைத்துலக மாநாட்டில், அவ்வமைப்பின் நோக்கம் பாலியல் நெறிகளும் குமுகவியலும் மதநூல் சார்ந்ததாக இல்லாமல் உடல்-உள்ளம் சார்ந்த அறிவியல் அடிப்படையைக் கொண்டதாகச் செய்ய வேண்டும் என்றும், அவ்வமைப்பு பணிவான அணுகுமுறையைக் கடைப்பிடிக்கப் போவதில்லை என்றும் ஒழுக்கம் பற்றிய பண்டைய கருத்துகள் அனைத்தும் முடி முதல் அடிவரை தவறானவை என்று கூறத் தயங்கப் போவதில்லை" என்றும் அறிவிக்கப்பட்டது ('ரிவோல்ட்': 3-11-1929).*

## ஜவர்ஹர்லால் நேருவின் கருத்து

*கல்கத்தா இளைஞர்களிடையே பேசிய ஜவஹர்லால் நேரு, “நாம் பண்டைய வழக்காறுகளுடன் பிணைக்கப்பட்டிருக்கையில் அரசியலிலோ பொருளியலிலோ நாம் எந்த முன்னேற்றமும் பெற முடியாது என்பதே என்னைப் பற்றியவரை கருத்தாகும். அய்யத்திற்கிடமின்றி இவ்வுலகம் மாறியுள்ளது; ஒவ்வொரு நாளும் படு சடுதியாக அது மாறிக் கொண்டிருக்கிறது. நாம் அதைக் காணாமலிருப்பதோ அம்மாற்றத்திற்கு தக நம்மை மாற்றிக் கொள்ளத் தவறுவதோ மடமையாகும். வாழ்வியல் ஓட்டத்தில் நாம் மிகவும் பின்தங்கி விட்டோம் என்பதை நாம் உணர வேண்டும். இந்தியா முற்றிலும் நலங்கெட்டுத் தேக்க நிலையில் இருக்கிறது. நாட்டில் விசையார்ந்த மாற்றத்தைக் கொண்டு வருதல் இளைஞர் கடமை" என்று உரைத்ததை எடுத்துப் போட்ட பெரியார், ''சத்தியமூர்த்தி போன்ற கலப்படமற்ற தேசபக்தர்கள்' இந்திய இளைஞர்களின் வழிகாட்டி ஜவஹர்லாலிடமிருந்து நிறையக் கற்றுக் கொள்ள*

வேண்டும்" என்று இடித்துக் காட்டிக் குறிப்புரை எழுதினார். ('ரிவோல்ட்': 1-9-1929).

கைம்பெண்கட்குத் திருமணம் செய்து வைக்கும் நோக்கத்துடன் நிறுவப்பட்ட விதவா விவாஹ் சஹிக் சபா எனும் அமைப்பின் சார்பில் மணமகன்கள் வேண்டும் என்று கோரி அனுப்பி வைக்கப்பட்ட பட்டியல்களை, 'ரிவோல்ட்'டில் பெரியார் வெளியிட்டார். 21-7-1929 ஆம் நாளைய இதழில் வெளியான 'WANTED' என்னும் அறிவிப்பில் இடம் பெற்ற சென்னை, மைசூர், பெங்களூர், ஓங்கோல், திருவாங்கூர் ஆகிய ஊர்களைச் சார்ந்த ஒன்பது பெண்களில் அறுவர் பார்ப்பனக் கைம்பெண்கள் என்பது சிறப்பாகக் குறிக்கத்தக்கது.

இப்போது நான் தரப்போகும் செய்தி தற்கால இளைஞர்களுக்குப் பெரும் வியப்பைக் கூட்டும் செய்தியாக இருக்கும். "மக்களால் மிகவும் விரும்பப்படும் கிறித்தவக் கோவில்கள், முடிமன்னர், திருமணமுறை, இவை போன்ற ஏனைய நிறுவனங்கள் ஆகியவற்றை ஒழித்துக்கட்டியதோடு சோவியத் தலைவர்கள் மனநிறைவடையவில்லை. ஆணுக்கும் பெண்ணுக்கும் மிகமிக ஆசையான முத்தமிடுதலையும் எதிர்த்து முனைப்பான கருத்துப் பரப்பலில் சீற்றத்துடன் ஈடுபட்டுள்ளனர். 'முத்த எதிர்ப்புப் பேரவை' எனும் பெயரில் சிற்றூர் - பேரூர்கள் எல்லாவற்றிலும் அமைப்பு ஏற்படுத்தியிருக்கின்றனர். 'முத்தமிடல் எனும் வெட்கப்படத்தக்க, அச்சத்திற்குரிய வழக்காற்றை விரட்டி யோட்டுங்கள்' என்று மக்களை வற்புறுத்தும் விளம்பரக் கம்பங்கள் எல்லா இடங்களிலும் எழுப்பப்படுகின்றன. 'முத்தமிடல் ஒழிக!' என்ற ஒலி முழக்கம் எங்கும் கேட்கிறது. வளரும் இளைஞர்கட்கு அறியாமையினால் விளையும் தீங்குகள் பற்றிக் கற்பிக்கப்படுகிறது. அஞ்சல் துறையும் இதில் பங்காற்றுகிறது. அரசின் ஒலி முழக்கமாகிய 'முத்தமிடுவதற்கு முன் சிந்தித்திடுக. ஒவ்வொரு முத்தமும் 40,000 நுண்ணுயிர்களை ஈனுகின்றன!' என்பது அஞ்சலாகும் ஒவ்வொரு மடலின் மீதும் பொறிக்கப்படுகிறது.'

இச்செய்தியை அய்ரோப்பிய இதழொன்றிலிருந்து எடுத்து, 17-11-1929 அன்று 'ரிவோல்ட்'டில் பெரியார் வெளியிட்டார்.

> "காஞ்சிபுரத்தில் 'பசுபதி யாகம்' என்ற பெயரில் ஏழு நாள்கள் மதச்சடங்குகள் பேரார்வத்துடன் மேற்கொள்ளப்பட்டன. வேள்வி நடந்த இடத்தின் வாயிற்புறத்தில் தென்னிந்திய மாந்தப் பற்று இயக்கம் உயிர்க்கொலையை வேள்வியின் போது நடத்தக்

கூடாது என்று எதிர்ப்புக் காட்டியுங் கூட எட்டு வெள்ளாடுகள் 'பலி' கொடுக்கப்பட்டன! நன்கொடையாக 3000 ரூபாய் திரட்டி, கே. இராமஸ்வாமி சாஸ்திரிகள் வேள்வியை நடத்தி முடித்தார். ('ரிவோல்ட்': 23–6–1929).

நம்பத்தகாத – பகுத்தறிவுக் கொவ்வாத 'மன்னர் மன்னன்' (The King of Kings) என்னும் விவிலியம் சார்ந்த படத்தினை ஊதாரித்தன செலவில் உருவாக்கிய செசில் டி.மில் என்ற புகழ் வாய்ந்த இயக்குநர், அவ் விவிலியப் படத்தின் பின்தொடர்ச்சி இறுதி முடிபாக, 'கடவுள் வேண்டாத கன்னி' (The Godless Girl) என்னும் படத்தினைப் படைத்துள்ளார். அமெரிக்காவில் 'கடவுள் மறுப்புக் கழகத்தில் சேர்வீர்' விவிலியத்தைச் சிதைப்பீர்!' என்று முழங்கும் இளைஞர்களின் நாத்திகப் பண்பாட்டை ஆய்வு செய்யும் இப்படம் இலண்டன் திரைப்படத்துறையினருக்குப் போட்டுக் காட்டப் பெற்றது. ('ரிவோல்ட்': 24–11–1929).

"இந்தியாவினுடைய கொடும்பாவி கொளுத்தும் நாள் விழா சென்ற மாத இறுதியில் வந்தது. இராமனுடைய மனைவி சிதையைத் தூக்கிச் சென்று இராமனுடைய வீரச் செய்கையால் சாவைத் தழுவிய இராவணனக்குத் தொடர்புடையது இவ்விழா. இராவணன் மறைந்தமை பற்றிய இந்நினைவு விழாக் கொண்டாட்டத்தில் பத்துத்தலை அரக்கனாகிய இராவணனுடைய 'கொடும்பாவி' என்னும் போலி உருவத்தைப் பொது மக்கள் களியாட்டத்துடன் கொளுத்துகின்றனர். அக்கொண்டாட்டத்தின் படங்கள் 'டைம்ஸ் ஆஃப் இண்டியா' நாளிதழிலும் இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி ஆஃப் இண்டியா' – கிழமை இதழிலும் வெளியிடப்பட்டுள்ளன."

இச்செய்தியை, 'COMMENTS' என்ற தலைப்பின் கீழ் 17-11-1929 ஆம் நாளுக்குரிய 'ரிவோல்ட்'டில் எடுத்துப் போட்ட பெரியார் இப்படிக் குறிப்புரை எழுதினார்: "தென்னிந்தியாவில் நிலவுகின்ற இராமாயண விளக்கமோ முற்றிலும் வேறுபட்டது. இராமனை விட இராவணன் நன்னோக்கம் கொண்ட உயர் குடிப் பெருமகன் என்பது மெய்ப்பிக்கப்பட்டு விட்டதால் இராம வழிபாடு படிப்படியாகக் குறைந்து தேய்ந்துவிட்டமை தெளிவு. நம் இதழ் படிக்கும் வாடிக்கையாளர் கேட்கலாம், 'நாமும் நம் பகைவனான இராமனின் போலியுருவத்தை எரிப்பதா?' என்று. இரண்டும் கூடாதென்போம் நாம். ஆனால் இராவணப் பற்றாளர்களின் உணர்வுகளைப் புண்படுத்தும் செயல் விடாப்பிடியாகத் தொடரப்படுமானால், இங்கு

எதிர்வினை உருவாவது தவிர்க்க முடியாதது". ஆக, எழுபது ஆண்டுகட்கு முன்னரே வரும் பொருளினைத் தம் இதழிலேயே பதிவு பண்ணி விட்டார் பெரியார்!

> *புதிய சோவியத் உலகைப் படைக்கும் நடவடிக்கைகளில் ஒன்றாக, சோவியத் ஒன்றியத் தலைமை அதிகாரத்திலிருந்த அமைச்சர்களின் ஆட்சிக் குழு ஞாயிற்றுக்கிழமையும் அலுவல்கள் நடக்க வேண்டுமென்றும், எந்த நாளும் விடுமுறை நாளாக இராது என்றும், நடைமுறையிலிருந்த ஆண்டுக்கு 300 நாள்கள் வேலை நாள்கள் என்பது 360 நாள்களாக உயர்த்தப்படுவதாகவும், அதன்படி தொழில் மனைகள், கடைகள், கூட்டுறவு முனைவகங்கள் அனைத்தும் இடைவெளி எதுவுமின்றி ஒவ்வொரு நாளும் திறந்திருக்கும் என்றும் ஆணை பிறப்பித்தது. பணியாளர் ஒவ்வொருவருக்கும் கிழமைக்கு 36 மணிநேர விடுமுறை சுழற்சி முறையில் வழங்கப்படும் என்றும் உறுதி செய்யப்பட்டது.*

> *துணிச்சலான இத்திட்டம் வேலையின்மைச் சிக்கல் பொருளியற் சிக்கல் ஆகியவற்றில் முன்னேற்றம் காண வல்லது என்பதுடன், ஓய்வு நாள் விழா என்னும் சமயக் கருத்துகளின் மீது தொடுத்த கொல்லும் தாக்குதலாகும் என்று புகழார்ந்த இதழான 'ப்ராவ்தா' விளக்கியமை குறிப்பிடத்தக்க வொன்று. ('ரிவோல்ட்': 3-11-1929).*

> *"அண்மையில் கேம்பிரிட்ஜ் பகுதியில் நடத்தப்பட்ட அகழ்வாய்வுகளின் ஒன்றில் மதத்துறவிகளின் மடத்தினையும் மதக் கன்னிகளின் மடத்தினையும் இணைக்கும் நிலத்தடிச் சுருங்கை யொன்று கண்டுபிடிக்கப்பட்டது."*

இச்செய்தியினை 'ரிவோல்ட்'டில் 17-11-1929 அன்று வெளியிட்ட பெரியார், "மணத்துறவு இயற்கைக்கு எதிரானது என்பதை மட்டும் நம்மால் கூறமுடியும்" என்று குறிப்பெழுதினார்.

### அறிஞர்களின் கருத்துகள்

'ரிவோல்ட்'டில் ஆங்காங்கே அறிஞர்களின் நன்மொழித் துண்டங்களும் இடம் பெற்றன. அறிவியக்கத்தின் கொள்கைகட்கு அவை அணி செய்பவையாய் அமைந்தன. சிலவற்றை எடுத்துக்காட்டுவது பொருந்தும்.

> 'பெண்முகத்தையும் இடுப்புவரை பெண்ணுடலையும் அதற்குக் கீழே மீன் துடுப்பு போன்ற பகுதியையும் படைத்த கடற்கன்னி

(Mermaid), சிறகுடைக் கன்னி முக அரிமாச் சூரணங்கு (Sphinx), குதிரையுடலும் கால்களும் மாந்த உடலும் கைகளும் வாய்ந்த உருவம் என்று சொல்லப்படும் உயிர்கள் வாழ்ந்திருக்கவே கிடையாது என்பதை மெய்ப்பித்துக்காட்டல் எவ்வளவு எளிமையானதோ, அவ்வளவுக்கு கிறிஸ்து என்பவர் வாழ்ந்ததே இல்லை என்பதை மெய்ப்பிப்பதும் முற்றிலும் எளிதானதே! – ஜெரால்ட் மாஸி" ('ரிவோல்ட்': 30–6–1929).

கி.பி. முதலாம் நூற்றாண்டிலேயோ கிறித்து பிறந்ததாய்ச் சொல்லப்படும் நூறு ஆண்டுகளுக்குள்ளாகவோ அல்லது அவர் இறந்ததாகச் சொல்லப்படும் காலத்திலிருந்து எழுபது ஆண்டுகளுக்குள்ளேயோ எழுத்துப் படைப்புகள் ஆக்கிய எந்த நூலோரும் இயேசு கிறிஸ்து எனப்பட்ட ஒருவரைப் பற்றி எந்தவொரு குறிப்பும் பதிவு செய்யவில்லை! – ரிச்சர்ட்கார்லைல்" ('ரிவோல்ட்': 23–6–1929).

"மறுமலர்ச்சியும் முதிர்வும் அடைய முனையும் மாந்த இனத்தின் உரிமைக் கோரிக்கைகளுக்கு எதிர்ப்பாயுள்ள எந்த நிறுவனத்தையும் சீர்திருத்தவும், தேவைப்பட்டால் அதனை அழித்தொழிக்கவும் போரழைப்பு விடுக! – வில்லியம் பெப்பரல் மாண்டேக்" ('ரிவோல்ட்': 26–7–1929).

"ஆய்வு வினா என்னும் 'குற்றம்' மதத்தினால் என்றைக்கும் மன்னிக்கப்பட்டாத ஒன்றாகும். அய்யுறாத நம்பிக்கையும் அச்சமற்ற ஆய்வும் எல்லாக் காலங்களிலும் ஒன்றுக்கொன்று விட்டுக் கொடாமலேயே இருந்து வந்துள்ளன – ஷெல்லி" ('ரிவோல்ட்': 6–2–1929).

"மத முன்னோடிகளும் மதப் பரப்பாளர்களுமே மாந்த இனத்தின் வேறு எந்த வகுப்பினரைக் காட்டிலும் அதிகத் தொல்லைகட்கும் போர்களுக்கும் உண்மையான காரணர்களாக இருந்து வந்திருக்கின்றனர் – எட்கார் ஆலன் போ." ('ரிவோல்ட்': 27–3–1929).

"பெரிய மாற்றங்களெல்லாம் சிறிய எண்ணிக்கையுள்ள மக்களால் உறுதிப்பாடும் அஞ்சிப் பின்வாங்காமையும் விருப்பார்வமும் படைத்த குறைந்த மக்களாலேயே நிறைவேற்றப் பட்டிருக்கின்றன; பெரும் எண்ணிக்கையுள்ள மக்களால் அன்று – நியூமன்" ('ரிவோல்ட்': 19–1–1929).

"தென்னிந்திய பார்ப்பனர்கள் ஆங்கிலேயர்களைப் போலவே தற்பெருமை கொண்டவர்களாயும், தருக்கித் திரிகிறவர்களாயும் இருக்கின்றனர் – சரோஜினி நாயுடு" ('ரிவோல்ட்': 13–2–1929).

"ஒரு நூறு மதத் தலைவர்களை விட ஒரேயொரு நல்லாசிரியர் அதிகப் பயன்பாடு உள்ளவர் – தாமஸ் பெய்ன்." ('ரிவோல்ட்': 13–10–1929).

"ஒப்பீட்டு நோக்கில் – மாந்தப் பட்டறிவு வரலாற்றில் முறைப்பட்ட சிந்தனை என்பது மிகவும் பிற்காலத்திய வளர்ச்சியே என்பது தெளிவு. மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பு வரை மாந்த வாழ்வியலில் முறையான சிந்தனை எந்தப் பெரிய பங்களிப்பையும் செய்யக் கிடையாது. இன்றுங் கூடத் தங்களின் எண்ணங்களை வரைமுறைப் படுத்துவோர் என்போர் மாந்த இனத்தின் மிகச் சிறு பகுதியினரே. உலகின் பெரும் பகுதி கற்பனையிலும் உணர்ச்சியிலுமே இப்போதும் வாழ்ந்து கொண்டிருக்கிறது. – எய்ச்.ஜி.வெல்ஸ்." ('ரிவோல்ட்': 29–9–1929).

"கடவுள் நம்பிக்கையாளனே அய்யுறவுக் கோட்பாட்டாளனை விட அதிகக் களிப்புடன் இருக்கிறான் என்னும் கூற்று, நல்ல குடிகாரன் அறிவுத் தெளிவுற்று அடங்கி யிருப்போனை விடக் களிப்போடு இருக்கிறான் எனும் நிலைமைக்கும் மேலாக வேறு எதையும் குறிப்பாக உணர்த்தவில்லை. ஏமாளித்தனத்தினால் விளையும் இன்பம் மிக மலிவானதும் இடர் நிரம்பியதுமாகும். – பெர்னாட் ஷா." ('ரிவோல்ட்': 21–7–1929).

"இல்லை; அது பொதுவான மாந்தனின் குற்றமில்லை. சமயத் தலைவர்கள், அரசர்கள் ஆகியோரின் ஏமாற்று வேலைகள்தாம் எல்லா விடங்களிலும் உண்மையை அழித்தவை. அவர்கள் தாம் கடவுள் வழிபாட்டைக் கண்டு பிடித்தவர்கள்! – டலிராண்டு" ('ரிவோல்ட்' 13–10–1929).

'The Light' என்னும் பெயரில் லாகூரிலிருந்து வெளியிடப்பட்ட ஆங்கிலக் கிழமை இதழ் 'ரிவோல்ட்'டை மிடுக்கான குட்டி இதழ் என்று குறிப்பிட்டுப் பாராட்டியது!

"அஞ்சல் பையில் நிரம்பி வரும் அனைத்திலும், நாம் நோக்குகின்ற அந்த நொடியிலேயே நம் கவனத்தைக் கவர்ந்து நிறுத்தும் ஒரு பொருளுண்டு, 'ரிவோல்ட்' எனும் பெயரிய ஒளியார்ந்த குட்டிக் கிழமையிதழாகிய அது சென்னையிலிருந்து வெளியாகிறது. அதன் பெயரே செவிடன் ஒருவனைக் கூடச்

செவிமடுக்கத் தூண்ட வல்லது. அதை மேலும் ஒலி நிரம்பியதாக்குதற்குப் பொருத்தமாகத் தற்காலக் குறிப்பு மொழியில் எச்சரிக்கைச் சின்னமாக ஏற்கப் பெறும் சிவப்பு நிறத்தில் அச்சிடப்பட்டுள்ளது. இதழ்ப் பெயர் சுட்டிக் காட்டுவது போன்றே, ஓர் உயர்ந்த குறிக்கோட் பணித் திட்டத்தை மேற்கொண்டு அது நிற்கிறது. மாந்தனுக்கு மாந்தன் காட்டும் மாந்தத் தன்மையற்ற புன்மை, மாந்தனையே மாந்தன் சுரண்டும் கொடுமை, மாந்தன்பால் மாந்தன் மேற்கொள்ளும் விலங்கியல்பான்மை, மாந்தன்மேல் மாந்தன் செலுத்தும் மேலாட்சி என்பவையே பாலகாலமாக மக்களினத்தின் வெம்பழியாக இருந்து வருகிறது. அதற்கு எதிராக எழுச்சியைத் தோற்றுவிப்பதை விட வேறு உயர்ந்த மெச்சத் தகுந்த தொண்டறம் எதுவாக இருக்க முடியும்? இதழின் பெயரும் அதற்கான வண்ணம் உண்மையாகவே நன்கு தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளன" (*'ரிவோல்ட்': 27-10-1929*).

*19-1-1930* ஆம் நாளிட்ட 'ரிவோல்ட்' இதழில் சமகாலத்திய இதழ்களின் பாராட்டுரைகளின் சுருக்கங்கள் தரப்பட்டுள்ளன.

"நாத்திகக் கொள்கையின் சார்பாகவும், புரோகிதத் தன்மைக்கும் முல்லாவியலுக்கும் எதிராகவும் ஆற்றல் நிரம்பிய கருத்துப் பரப்பலில் ஈடுபட்டுள்ளது. தென்னிந்தியாவில் வெப்பமிக்க நல்லதொரு குமுகாயச் சீர்திருத்தக்காரன் என்ற முறையில் அருமையானதொரு பணியினை இவ்விதழ் செய்து கொண்டிருக்கிறது." என்பது பம்பாயிலிருந்து வெளியாகிக் கொண்டிருந்த **'The Young Liberator'** எனும் ஏட்டின் பாராட்டு.

"இதழின் பெயரே குறிப்பாக உணர்த்துவதைப் போன்று, 'இந்துக் கொள்கையில் நிலவும் அனைத்துக் குமுகாயப் பழக்க வழக்கங்களையும் தீங்குகளையும் எதிர்த்து இது கிளர்ச்சி செய்கிறது. காரண ஆய்வுக்கு வழியினை அமைத்துக் கொடுக்கிறது. பார்ப்பனரல்லாதாரின் குறிக்கோள் உணர்வின் குமுகாயக் கூறுகளையும் பெண்கள் அடிமைத்தன்மையிலிருந்து விடுவிக்கப்படுதலின் இலக்கையும் இதழ் வெளிக்காட்டுவதுடன் கைம்பெண் தன்மை ஒழிக்கப்பட வேண்டுமென வெளிப் படையாகப் பரிந்துரைக்கிறது. ஆண்-பெண் பாலியல் சமனியம் சாதி வேறுபாடின்மை ஆகியவற்றைப் பரப்புவதன் மூலம் ஒற்றுமை நிலைக்கான வழியினை முன்னமைத்துக்

கொடுக்கிறது. இவ்விதழினைப் பொதுமக்களுக்குப் பரிந்துரைக்கிறோம்." இப்படி மலையாள நாட்டின் 'The Guardian' இதழ் எழுதியது.

ஓர் இதழாளர் என்னும் முறையில் பொறுப்புணர்ச்சியோடு 'ரிவோல்ட்'டின் இடப் பெயர்ச்சிகள் பற்றி முன் கூட்டியே முறையாக அறிக்கையிட்டார் பெரியார்.

ஈரோட்டிலிருந்து அலுவலகம் ஓர் இடைக்கால ஏற்பாடாகச் சென்னைக்கு மாற்றப்பட்டபோது, 5-6-29 அன்றைய 'ரிவோல்ட்'டில், "எம்அலுவலகம் இந்தக் கிழமையில் சென்னைக்குப் பெயர்த்து மாற்றப்படுவதால் 'ரிவோல்ட்'டின் வெளியிடு ஒன்றிரண்டு கிழமைகள் சுணக்கமாகலாம். காலத்தாழ்ச்சியினைப் பொறுத்துக் கொள்ளுமாறு வாடிக்கைப் படிப்பாளர்களை வேண்டிக்கொள்ளுகிறோம்" என்னும் அறிக்கை வெளியானது.

## 'Revolt' இதழ் நிறுத்தப்பட்டது

ஆறு மாதங்கள் கழிந்தபின் 'ரிவோல்ட்' மீண்டும் ஈரோட்டுக்கே பெயர நேர்ந்ததால், அடுத்த இதழ் வெளியாவதில் ஏற்பட்ட காலத் தாழ்வுக்கு வருத்தம் தெரிவிக்கும் முறையில் ஓர் அறிவிப்பு வெளியிடப்பெற்றது. 'An Apologia' எனும் தலைப்பில், "பெருமளவிற்கு அலுவலகம் சென்னையிலிருந்து ஈரோட்டுக்கு மாற்றலாவதில் விளைந்த கடின நிலைமைகளின் பொருட்டு, 'ரிவோல்ட்' வெளிவருவதில் ஏற்பட்ட தவிர்க்கவியலாத காலத் தாழ்வுக்காக வருந்துகிறோம்" என்று அவ்வறிவிப்பு கூறியது. இதழ் நாகரிகம் செம்மையாய்ப் பேணப்பட்டது.

நன்கொடையாக இரண்டு ரூபாய் கிடைக்கப் பெற்றதைக் கூட, 'Thankfully Received' என்று தலைப்பிட்டுச் செய்தி போட்டு நன்றி பாராட்டினார் பெரியார்.

அறிவு கொளுத்துதல் என்னும் குறிக்கோளுடன் இதழ் நடத்திய பெரியார், எல்லா மதங்கள் பற்றிய ஆய்வுக் கட்டுரைகளையும் 'ரிவோல்ட்'டில் வெளியிட்டார். எந்தப் பாகுபாடும் காட்டாத நேர்மையான இதழாளராக அய்யா நடந்து காட்டினார்.

நீதிக்கட்சிப் பெருந்தலைவர்களின் ஒருவராக விளங்கியவரும் சிறந்த கல்விமான் எனும் புகழோடு வாழ்ந்தவரும் தம்பால் பெருமதிப்பும் பற்றும் கொண்டிருந்தவருமான ஆர்க்காட்டு இராமசாமியவர்களின் கருத்தை மறுத்து எழுதியும், தம் புரட்சித்

தன்மை வாய்ந்த கொள்கைகளை ஏற்றுக் கருத்து வெளியிட விரும்பிய பார்ப்பனர்கள் 'ரிவோல்ட்'டில் எழுத இடமளித்தும் பெரியார் தம் அறிவு நாணயத்தை உணர்த்திப் பிறர்க்கு வழிகாட்டினார்.

சிறந்த ஆங்கிலப் புலமை படைத்த எஸ். இராமநாதன் ஆசிரியர்ப் பொறுப்பிலிருந்து விலகிக் கொண்ட நிலையிலும், எஸ். குருசாமி ('குத்தூசி') யின் அரும்பெருந் துணை அய்யாவுக்கு இருந்ததால், தொடர்ந்து 'ரிவோல்ட்' முனைப்பு மங்காது வெளிவந்து வரலாறு படைத்தது. மக்களின் வரவேற்பும் நிறைய இருந்தது. எனினும் பல்வேறு சூழ்நிலைகளால் 'ரிவோல்ட்' 1930ஆம் ஆண்டில் முடிவெய்த நேரிட்டது. அது வாழ்ந்த காலம் குறுகிய காலமே என்றாலும் அதன் வாழ்வு பிற்போக்காளரை உலுக்கிக் குலுக்கி ஆர்த்திட்ட வீரப் பெருவாழ்வே என்பதை எவரும் மறுக்க முடியாது!

******

# "புரட்சி" மூண்டது!

'குடிஅரசு' இதழுக்கு ஆங்கிலேய அரசு கொடுத்த கடுமையான நெருக்கடியின் பாதிப்பினால், பெரியார் 'குடிஅர'சை நிறுத்த வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆனால் 'குடிஅரசு'க்கு விடை கொடுத்து விட்டு வீட்டில் வாளா முடங்கிக் கிடக்கவில்லை பெரியார். திட்டமிடுவதில் மிகப் பெரிய அளவுக்கு வல்லமை படைத்த அவர் அதே மூச்சில் அளவிலும் அமைப்பிலும் 'குடிஅர'சைப் போன்றே தோற்றம் காட்டிய 'புரட்சி' என்னும் அருமையான பெயர் கொண்ட கிழமை இதழை வெளியிட்டார்.* அதன் தொடர்பாகப் பெரியாரவர்களே வெளியிட்ட விளக்கம் இதோ:

> 'குடிஅரசை ஒழிக்கச் செய்த முயற்சியால் 'புரட்சி' தோன்ற வேண்டியதாயிற்று. உண்மையிலேயே பிறமதமக்களின் – அதாவது பெரும்பான்மையான மக்களின் ஆட்சியாகிய குடிஅரசுக்கு உலகில் இடமில்லையானால், கண்டிப்பாகப் புரட்சி தோன்றியேதான் ஆக வேண்டும்.
>
> நமது முதலாளி வர்க்க ஆட்சியானது தனது காவலாளியாகிய படித்த வர்க்கத்திற்கு அடிமையாக இருக்க வேண்டியிருப்பதால், 'குடிஅர'சை அதன் முதுகுப்புறத்தில் குத்திவிட்டது. இந்தக் குத்தானது, 'படித்த' வர்க்கத்தை ஒழித்தால்தான், முதலாளி வர்க்கத்தை அழிக்க முடியும்' என்ற ஞானபோதத்தை உறுதிப்படுத்தி விட்டது.
>
> ஆதலால் நமது 'புரட்சி'யானது 'குடிஅர'சைக் காட்டிலும் பதின்மடங்கு அதிகமாகப் படித்த வர்க்கத்தை அதாவது மதப்பிரச்சார வர்க்கத்தை அடியோடு அழிப்பதையே கங்கணமாய்க் கொண்டு வெளிவர வேண்டியதாகி விட்டது.
>
> இதன் காரணமாய், 'புரட்சி' எந்த நிமிஷத்திலும் குத்துப் பட்டாலும் படலாம்; எந்த வினாடியில் கொலையுண்டாலும் உண்டாகலாம். ஆனால், 'சுயமரியாதைப் புரட்சி'யானது இனி ஒரு நாளும் மறையாது; அது வெற்றி பெறும் வரை ஒரு க்ஷணமும் ஓய்வு கொள்ளாது என்பது மாத்திரம் உறுதி.

---

* 'அடுத்த வாரம் 'குடிஅரசு' பத்திரிகை வரத் தவறும் பட்சத்தில் வேறு பத்திரிகை வெளிவரும்" என்று 19-11-1933ஆம் நாளிட்ட 'குடிஅர'சிலேயே அறிவித்திருந்த வண்ணம் மறுகிழமையே 'புரட்சி' பூத்தது.

மதமே மனிதனுடைய சுயமரியாதைக்கு விரோதி;
மதமே மனிதனுடைய சுதந்தரத்திற்கு விரோதி;
மதமே மனிதனுடைய அறிவு வளர்ச்சிக்கு விரோதி;
மதமே மனித சமூக சமதர்மத்திற்கு விரோதி;
மதமே கொடுங்கோலாட்சிக்கு உற்ற துணை;
மதமே முதலாளி வர்க்கத்திற்குக் காவல்;
மதமே சோம்பேறி வாழ்க்கைக்கு ஆதரவு;
மதமே உழைப்பவனை தரித்திரத்தில் ஆழ்த்தி, உழைக்காதவனை உச்சத்தில் வைப்பதற்கு உதவி;

என்கிற முடிவின் பேரிலேயே 'புரட்சி' தோன்றியிருக்கிறது என்பதில் யாருக்கும் அய்யம் வேண்டாம்.

சோம்பேறித்தனமாய் வாழ நினைத்து, சுயமரியாதை இயக்க நிழலில் திரிந்தவர்களுடையவும், பட்டம், பதவி, அதிகாரம், செல்வம் ஆகியவைகள் அடையக் கருதி, சுயமரியாதை இயக்கப் போர்வை போட்டுக் கொண்டிருந்தவர்களுடையவும் ஆதரவு நம் 'புரட்சி'க்கு இனி சிறிதும் எதிர்ப்பார்க்க முடியாது என்பதை நன்றாய் உணர்ந்தே 'புரட்சி' தோன்றியிருக்கிறது. ஆதலால் பாடுபட்டு உழைத்து ஊரானுக்குப் போட்டு விட்டு பட்டினியாயும் சமூக வாழ்வில் தாழ்மையாயும் வாழும் மக்களின் ஆதரவையே 'புரட்சி' எதிர்பார்த்து நிற்கிறது.

வெள்ளை முதலாளிகளை ஒழித்துக் கறுப்பு முதலாளிகளைக் காக்கும் வேலைக்கு இன்று 'புரட்சி' வெளிவரவில்லை. இந்து மதத்தை ஒழித்து, இஸ்லாம்–கிறிஸ்து மதத்தைப் பரப்பப் புரட்சி தோன்றியதல்ல. அதுபோலவே இஸ்லாம்–கிறிஸ்தவ மதத்தை ஒழித்து, இந்து மதத்தை நிலைநிறுத்தப் 'புரட்சி' வெளி வரவில்லை.

சகல முதலாளி வர்க்கமும், சர்வ சமயங்களும் அடியோடு அழிந்து, மக்கள் யாவரும் சுயமரியாதையுடன் ஆண் பெண் அடங்கலும் சர்வ சமதத்துவமாய் வாழச் செய்ய வேண்டும் என்பதற்காகப் புரட்சி செய்யவே 'புரட்சி' தோன்றியிருக்கிறது.

அது உயிருள்ளவரையும் அதன் கடமையைச் செய்து கொண்டுதான் இருக்கும். ஆதலால் புரட்சியில் ஆர்வமுள்ள மக்கள் 'புரட்சி'யை ஆதரிக்க வேண்டுகிறோம்." ('புரட்சி': 26–11–33)

'புரட்சி'யின் முதல் இதழின் இவ்வாசிரியவுரை பெரியாரின் உள்ளக் கிடக்கையைத் தெளிவாகப் பறைசாற்றுகிறது.

பெரியார் அவர்கள் 29-10-1933ஆம் நாளைய 'குடிஅர'சில் தீட்டிய ஆசிரியவுரையின் விளைவாக வெள்ளையர் ஆட்சி அவர்மீது 'இராஜநிந்தனை'க் குற்றம் சுமத்தி வழக்குத் தொடுத்த போது, அய்யா அளித்த வரலாற்றுத் தனிச் சிறப்பு படைத்த 'கூற்று' 21-1-1934ஆம் நாளிட்ட 'புரட்சி'யில் வெளியாயிற்று.

"அதில் எழுதப்பட்டிருக்கும் விஷயங்களுக்காவது, வாக்கியங் களுக்காவது இராஜதுவேஷக் குற்றம் சாட்டப்படுமானால், இன்றைய அரசாங்க முறை முதலியவைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்து குறைகளை எடுத்துச் சொல்லவோ, அவற்றால் மக்களுக்கு ஏற்படக் கூடிய கஷ்டங்களை விலக்கப் பரிகாரம் நேர ஏற்பாடு செய்யவோ யாருக்கும் சுதந்திரம் கிடையாது என்று தான் முடிவு செய்யப்பட்டதாகும்.

நான் 7, 8 வருஷ காலமாய்ச் சுயமரியாதை இயக்க சமதர்மப் பிரச்சாரம் செய்து வருகிறேன். சமூக வாழ்விலும் பொருளாதாரத்திலும் மக்கள் யாவரும் சமத்துவமாய் வாழ வேண்டுமென்பது அப்பிரச்சாரத்தின் முக்கிய தத்துவமாகும்.

அரசாங்கமானது முதலாளித்தன்மை கொண்டதாய் இருப்பதால், அது இத்தகைய சமதர்மப் பிரச்சாரம் செய்யும் என்னையும் எப்படியாவது அடக்க வேண்டுமென்று முயற்சி எடுத்துக் கொண்டிருப்பதில் அதிசயமில்லை.

பல நூற்றாண்டுகளாக உலக வாழ்க்கையில் கடவுள் செயல் என்றும், இயற்கை என்றும் கருதும்படியாகச் செய்து நிலைநிறுத்தப்பட்டு நடைபெற்று வரும் சமூக அமைப்பையும், பொருளாதார முறையையும் மாற்றுவது என்பது சிலருக்கு இஷ்டப்படாத காரியமாய் இருந்தாலும், அவற்றை மாற்றி அமைத்தாலொழிய மக்கள் வாழ்க்கையிலுள்ள அனேக கஷ்டங்களும் குறைகளும் நிவர்த்தியாகி, சவுக்கியமாகவும் திருப்தியாகவும் வாழ முடியாது என்பது உறுதி. ஏதாவது ஒரு கொள்கைக்குப் பிரச்சாரம் பரவவேண்டுமானால் அக்கொள்கையில் நம்பிக்கை கொண்டவர்கள் அக்கொள்கைக்கு இடையூறு செய்பவர்களால் அடக்கு முறைக்கு ஆளாக வேண்டியதும் அவசியமேயாகும். அதற்காக நாமே வலுவில் போய்க் கஷ்டத்தைக் கோரி எடுத்துக் கொள்ளக் கூடாது; என்றாலும் தானாகவே ஏற்பட்ட ஒரு நல்ல சந்தர்ப்பத்தை இழந்துவிடக் கூடாது. இந்தப் பிரச்சாரத்தைத் தடுக்க வேண்டுமென்று கருதி இந்த வழக்கைக் கொண்டு வந்திருக்கிறார்கள். ஆதலால்

அவர்கள் எப்படியாவது எனது விஷயத்தில் துவேஷம், வெறுப்பு, பலாத்காரம் முதலியவைகள் இருப்பதாகக் கற்பனை செய்து தீர வேண்டியவர்கள் ஆகிவிட்டார்கள்.

இந்நிலையில் சர்க்கார் என்னைத் தண்டித்தாலும் சரி, அல்லது இந்தப் பிராதுக்குப் போதிய ஆதாரமில்லை என்று நியாயத்தையும் சட்டத்தையும் இலட்சியம் செய்து வழக்கைத் தள்ளிவிட்டாலும் சரி, இப்படிப்பட்ட அடக்குமுறையை வரவேற்குமாறு எனது தோழர்களுக்கு வழிகாட்ட எனக்குக் கிடைத்த சந்தர்ப்பத்தைப் பற்றி மகிழ்ச்சியடைகின்றேன்."

கோவை மாவட்ட ஆட்சியராக விருந்த வெள்ளைக்காரத் தீர்ப்பாளரிடம் பெரியார் தாக்கல் செய்த கூற்றின் பகுதிகள் இவை. கரவின்மை, தறுகண்மை, சான்றாண்மை ஆகியவற்றைத் தன்னகத்தே தேக்கிக் கொண்டுள்ள இலக்கியப் பண்பு மிளிர்கிறதல்லவா, பெரியாரின் கூற்றில்?

## 'இன்றைய ஆட்சி ஏன் ஒழிய வேண்டும்?'

"நான் ஒரு சுதந்திர மனிதன். எனக்குச் சுதந்திர நினைப்பு, சுதந்திர அனுபவம், சுதந்திர உணர்ச்சி உண்டு. அதை உங்கள்முன் சமர்ப்பிக்கிறேன். நீங்கள் என்னைப் போலவே உங்களது சுதந்திர நினைப்பு, அனுபவம், உணர்ச்சி ஆகியவைகளால் பரிசீலனை செய்து, ஒப்பக் கூடியவைகளை ஒப்பி, தள்ளக்கூடியவைகளைத் தள்ளி விடுங்கள் என்கின்ற நிபந்தனையின் பேரிலேதான் எதையும் தெரிவிக்கிறேன். எப்படிப்பட்ட பழமை விரும்பிகளானாலும் இதற்கு இடங் கொடுக்கவில்லையானால், அது நியாயமும் ஒழுங்குமாகாது."

பொருள் பொதிந்த - புகழ் வாய்ந்த இக்கூற்றினை பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியார் 17-12-1933-ஆம் நாளிட்ட 'புரட்சி'யில் பதிவு செய்தார். கருத்துரிமை என்பது மாந்தன் என்பவனுக்கு எவ்வளவு இன்றியமையாதது என்பதனை வலியுறுத்தும் அருமையான கூற்று இது.

"இன்றைய ஆட்சி ஏன் ஒழிய வேண்டும்?" என்னும் ஆசிரியவுரை 'குடிஅரசி'ல் வெளி வந்தமைக்காகப் பெரியாரும் அவரின் தங்கையும் வெள்ளைக்காரத் தீர்ப்பாளரால் ஒறுப்புக்காளான செய்தி 28-1-1924ஆம் நாளிட்ட 'புரட்சி'யில் வெளியிடப்பட்டது. அதன் சில பகுதிகள்:

*"சுயமரியாதை இயக்கத் தலைவரும், 'குடிஅரசு', 'புரட்சி' - ஆசிரியருமான தோழர் ஈ.வெ. இராமசாமி அவர்கள் மீதும், அவருடைய சகோதரியும் பத்திரிகையின் பப்ளிஷருமான தோழர் எஸ்.ஆர். கண்ணம்மாள் அவர்கள் மீதும் தொடுத்திருந்த ராஜ நிந்தனை' வழக்கில் 24-1-34 காலை 11 மணிக்கு கோவை ஜில்லா மாஜிஸ்ட்ரேட் கனம் ஜி. டபிள்யூ. வெல்ஸ் அய். ஸி. எஸ். தீர்ப்பு கூறினார்.*

*சென்ற அக்டோபர் மாதம் 24-ஆம் தேதி 'குடிஅரசு' - பத்திரிகையில் வெளியான, 'இன்றைய ஆட்சி ஏன் ஒழிய வேண்டும்?' என்ற தலையங்கத்திற்காகவே அவர்கள் மீது வழக்குத் தொடர்ந்ததின் முக்கிய கருத்தாகும். மாஜிஸ்ட்ரேட் தீர்ப்பில் இருவர்களும் குற்வாளிகளெனக் கூறி, தோழர் இராமசாமி அவர்களுக்கு 6 மாதம் வெறுங்காவல் தண்டனையும் 300 ரூபாய் அபராதமும் அபராதம் செலுத்தத் தவறினால் மீண்டும் 1 மாதம் சிறை தண்டனையும் விதித்தார். தோழர் கண்ணம்மாளுக்கு 3 மாதம் வெறுங்காவல் தண்டனையும் 300 ரூபாய் அபராதமும், அபராதம் செலுத்தத் தவறினால் மீண்டும் 1 மாதம் வெறுங்காவல் தண்டனையும் விதித்தார். 12.30 மணிக்குச் சிரித்த முகத்துடன் தலைவர்கள் வண்டியில் சிறைக்குப் பிரயாணமானார்கள். இனி 'புரட்சி'யைத் தொடர்ந்து நடத்தும் பெரும் பொறுப்பைத் தோழர் ஈ.வெ. கிருஷ்ணசாமி அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள்."*

*'புரட்சி' இதழின் மீதும் அன்றைய அரசு வழக்குத் தொடுத்தது. "புரட்சி பத்திரிகையில் ஆசிரியர் பெயரில்லாது வெளியிட்டதற்காக அதன் பிரசுரகர்த்தா தோழர் எஸ்.ஆர். கண்ணம்மாள் அவர்கள் மீது போலீசாரால் டிப்டி கலெக்டர் முன் வழக்குத் தொடர்ந்து, சுமார் 7, 8 வாயிதாக்கள் வரை நடந்து, சென்ற 29-5-34ஆம் தேதி பெருந்துறை முகாமில் ஈரோடு டிப்டி கலெக்டர் சி. துரைராஜ் அவர்கள் தோழர் கண்ணம்மாள் அவர்களுக்கு 100 ரூபாய் அபராதமும் செலுத்தத் தவறினால் ஒரு மாதத் தண்டனையும் விதித்திருப்பதாகத் தீர்ப்பளித்தார்"*

என்னும் செய்தி 3-6-1934ஆம் நாளிட்ட 'புரட்சி'யில் காணக்கிடைக்கிறது.

அத்தீர்ப்பைப் பற்றிய திறனாய்வுகள் அக்காலத்தில் பல்வேறு தமிழ் ஏடுகளில் வெளிவந்தன. அவற்றுள் சிலவற்றைக் குறிப்பிடுதல் பொருந்தும்.

"கடைசியாகப் பப்ளிக் பிராசிகியூட்டர் தனது ஆர்குமெண்டைப் பேசும்போது பார்க்க வேண்டுமே இவரது (பெரியாரது) குறும்புத் தனத்தை! அவர் பேசும் போது பத்திரிகை வாசகங்களைப் படித்துக் காட்டி, இந்த இந்த இடத்தில் ராஜதுவேஷம் இருக்கிறது. இந்த இந்த இடத்தில் பொதுவுடைமைப் பிரச்சாரம் இருக்கிறது என்று எடுத்துக் காட்டும்போது தோழர் ராமசாமி ஸ்பிரிங் பொம்மையைப் போலத் தலையை அசைத்து அசைத்து ஆட்டிக் கொண்டு, அதற்குத் துணையாக ஆட்காட்டி விரலையும் பலகையில் அடித்துக் கொண்டு, பப்ளிக் பிராசிகியூட்டர் சொல்லுவ தெல்லாம் வாஸ்தவம் எனச் சொல்லுவது போலத் தலையாட்டி வந்தார். தீர்ப்புக் கூறியதும் அவரது முகப்பொலிவு படம் பிடிக்கக் கூடியதாக விருந்தது." இது மணவை திருமலைசாமி என்னும் ஆர்வந்தூண்டும் தமிழ் எழுத்தாளர் தம் 'நகரதூதன்' என்ற இதழில் எழுதிய கட்டுரையின் ஒரு பகுதி. பெரியாரின் உள்ள வலிமையைப் புலப்படுத்துகிறது இப்பகுதி. ('புரட்சி': 11-2-1934)

புகழ் வாய்ந்த பேராயக்கட்சித் தலைவர் வரதராஜுலு (நாயுடு) நடத்திக் கொண்டிருந்த 'தமிழ்நாடு' இதழில் இடம் பெற்ற ஆசிரியவுரையில் உணர்ச்சி நிரம்பியிருந்தது.

"ராமசாமி நாயக்கர் 1915-ம் வருஷம் முதற்கொண்டு, தேசிய இயக்கத்தில் ஈடுபட்டார். கோயமுத்தூர் ஜில்லா மகாநாட்டிற்கும் சென்னை மாகாணச் சங்க மகாநாட்டுக்கும் 1915, 1917 ஆகிய வருஷங்களில் வரவேற்புத் தலைவராயிருந்து நாயக்கர் செய்த சேவைகளை யாரும் அறிவார்கள். பிறகு காங்கிரசில் சேர்ந்து ஒத்துழையாமைப் போராட்டத்தில் முன் அணியில் நின்று அவர் தொண்டாற்றியதை நாம் எடுத்துக் காட்ட வேண்டியதே இல்லை. 1924-ம் ஆண்டில் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக்குத் தலைவராகவும், அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியில் மெம்பராகவும் இருந்து நாயக்கர் நல்ல வேலைகளைச் செய்துள்ளார். தீண்டாமையைத் தொலைக்க, வைக்கத்தில் சத்தியாக்கிரகம் செய்து சிறைப்பட்ட பாக்கியம் பெற்ற தமிழ்த் தலைவர் நாயக்கர் ஒருவரேயாவார். அரசியல் போராட்டத்தில் அவர் சிறைபட்டுக் கோயமுத்தூர் சிறையில் 1922-ம் ஆண்டில் தவம் செய்தார்."

'குடிஅரசு' இதழ் ஆசிரிவுரைக்காகச் சிறை வாழ்வு ஏற்று மீண்ட பிறகு, பெரியார் அதுபற்றி அளித்த விளக்கம் 'புரட்சி'யில் வெளியாயிற்று.

"குடிஅரசு பத்திரிகையில் என்னால் எழுதப்பட்ட ஒரு சாதாரணமானதும் சப்பையானதுமான வியாசத்திற்காகத்தான் நான் சிறைக்குப் போக நேரிட்டதே தவிர, மற்றபடி செல்லத் தக்க ஒரு சரியான காரியம் செய்து விட்டுச் சிறைக்குப் போகவில்லை. சர்க்கார் இந்தக் குடிஅரசுப் பத்திரிகையின் பழைய இதழ்களைப் புரட்டிப் பார்த்தால் என்னை வருடக் கணக்காய் தண்டிக்கக்கூடியதும், நாடு கடத்தக் கூடியதுமான வியாசங்கள் நூற்றுக் கணக்காகத் தென்படலாம். ஆனால் அந்தக் காலத்திலெல்லாம் கவனித்ததாக எனக்குத் தெரியவில்லை. அவர்கள் ஏன் கவனிக்கவில்லை என்பதை இப்போது நான் கவனித்துப் பார்த்தால், நமது வியாசங்களைப் பொதுஜனங்கள் லட்சியம் செய்ய மாட்டார்கள் என்கிற தைரியத்தால் சர்க்கார் அப்போது சும்மா இருந்தார்கள் என்று தோன்றுகிறது.

ஆனால் இப்பொழுது இப்படிப்பட்ட சிறிய வியாசங்களையும் கண்டு, இவ்வளவு வல்லமை பொருந்திய சர்க்கார் பயப்படும் படியான நிலைமை ஏற்பட்டு விட்டது என்பது நன்றாய்த் தெரிகிறது. நமது அபிப்பிராயத்தை மக்கள் மதிக்க ஆரம்பித்துவிட்டார்கள் என்றும் சுயமரியாதைக் கொள்கையை ஜனங்கள் ஆதரிக்கிறார்கள் என்றும், மற்றும் பல புதிய புதிய தீவிரக் கொள்கைகளையும் ஜனங்கள் வரவேற்கிறார்கள் என்றும் சர்க்கார் இப்போது உணர்வதாகத் தெரிகிறது.

நான் ஜெயிலுக்குப் போய் கொஞ்ச வருஷங்களாகிவிட்டன. சிவில் விவகாரத்துக்காக அரஸ்ட் செய்யப்பட்டேன். ஆனால் காயலா நிமித்தம் இரண்டு மாதத்திற்குள்ளாகவே விடுதலை செய்யப்பட்டேன். 'தேசபக்தன்' என்ற பெயர் எடுக்க முடிய வில்லை. இப்போது சர்க்கார் அந்தக் குறையை நிவர்த்தி செய்து விட்டார்கள். இப்பொழுதுள்ள நிலையில் ஜெயிலில் அதிகக் கஷ்டமில்லை." ('புரட்சி': *20-5-1934*)

பெரியாரின் நெடிய விளக்கத்தின் ஒரு பகுதி இது. நிறையச் சிந்திப்பதற்குத் தூண்டுகின்ற விளக்கம் இது என்பதோடு கூட, வெள்ளைய அரசுக்குத் துணை நின்றவர் என்னும் பழியைச் சுமந்து கொண்டிருந்த சூழ்நிலையில், அது தகாத குற்றச்சாட்டு என்பதைத் தெளிவாக்க வல்ல நிகழ்ச்சியாகத் நாம் சிறையேகிய வாய்ப்பைப் பெரியார் கருதினார் என்பதை நாம் புரிந்து கொள்ளுகிறோம்.

## நாஸ்திகர் மாநாடு

நம் நாட்டு வரலாற்றில் முன் எப்போதும் நடந்திராத புதுமையானதொரு மாநாடு சென்னை எழும்பூரில் அமைந்த 'ஒயிட்ஸ்

மெமோரியல் ஹால்' என்ற மண்டபத்தில் 31-12-1933 அன்று வெற்றியாக நடந்தேறியிருக்கிறது. நாஸ்திகர் மகாநாடு என்று அழைக்கப்பட்ட அம்மாநாட்டின் நடவடிக்கைகள் பற்றிய செய்திகளை விரிவாகப் 'புரட்சி' ஏடு தந்தது. நாடெங்கிலுமிருந்து கணக்கற்ற எண்ணிக்கையில் மக்கள் வந்து கலந்து கொண்டார்கள். குறிப்பாக, படிப்பறிவு பெற்ற நிறையப் பெண் வீராங்கனைகள் மாநாட்டில் பங்கேற்ற செய்தியைப் படிக்கும்போது பெருமையாக விருக்கின்றது.' இம்மாநாட்டில் கருத்துரைகள் ஆற்றிய சான்றோர்தம் சுவையான சில சொற்பொழிவுத் துண்டங்கள் படிப்பவர் எவருக்கும் உணர்ச்சி யூட்டும் என்பதில் அய்யமில்லை.

வரவேற்புரை நிகழ்த்திய சி.கே. குப்புசாமியின் கருத்துரை ஒவ்வொருவருக்கும் சிந்தனை விருந்தாகும்.

> "நாஸ்திகர்களெல்லாம் ஒன்று சேர்ந்து சென்னை மாகாணத்தில் முதன் முதலாக மாகாண நாஸ்திகர் மகாநாட்டைக் கூட்டியிருக்கிறோம். இதிலிருந்து உலகத் தொழிலாளர்களுக்கும் விவசாயிகளுக்கும் பாமர மக்களுக்கும் நாஸ்திக உணர்ச்சி அதிகரிக்கும் என்பதில் சந்தேகமில்லை.
>
> நாஸ்திகம் என்றால் என்ன? சர்வசக்தி, சமகுணம், தயாளகுணம், சிவகாருண்யம், அன்பு, சமதர்மம் இவ்வித குணங்கள் நிறைந்த ஒரு கடவுள் உண்டென்று ஆஸ்திகர்கள் கூறுவதை அறிவுள்ளவர்கள் மறுப்பதே நாஸ்திகம். தயாளகுணங்கள், ஜீவகாருண்யம், பூர்ண சக்தியுள்ள கடவுள் உலகத்தவர்களுக்கு வறுமையையும் பிணியையும் சச்சரவுகளையும் குரோத புத்தியையும் ஏன் சிருஷ்டித்திருக்க வேண்டும்?
>
> உலகத்தில் முதலாளி, தொழிலாளி, உயர்ந்தவன், தாழ்ந்தவன், பணக்காரன், ஏழை, ஜமீன்தாரன், குடியானவன், உழைப்பாளி, சோம்பேறி இவ்வித வித்தியாசங்கள் நிறைந்திருக்கின்றன. இவ்விதக் கொடுமைகளைக் கடவுள் சிருஷ்டித்திருந்தால், கடவுளை யோக்கியமற்றவன் என்றும் நீதியற்றவன் என்றும் உலக துரோகி என்றும் பாரபட்சமுடையவன் என்றும் கொலையாளி என்றும் நயவஞ்சகமுடையவனென்றும், தீயகுணங்கள் நிறைந்த திருடனென்றும் உலக முட்டாள் என்றும் அறிவுள்ளவர்கள் கூறினால் அவர்களை நாஸ்திகர்களென்று ஆஸ்திகவாதிகள் கூறுகிறார்கள்.
>
> உலக ஆஸ்திகப் பூண்டுகளை அடியோடு ஒழித்தாக வேண்டும். கடவுள் என்ற பதத்தை அகராதியினின்று எடுத்து விட வேண்டும்" ('புரட்சி': 7-1-1934).

நாத்திகக் கருத்துகள் நாட்டு மக்களிடையே பரப்பப்பட வேண்டியதன் இன்றியமையாமை மிகவும் துணிச்சலுடன் வற்புறுத்தப்பட்ட இச்செய்தியினை 7-1-1934ஆம் நாளிட்ட 'புரட்சி' தாங்கி வெளிவந்தது.

## எஸ். நீலாவதி அம்மையாரின் திறப்புரை

நாத்திகர் மாநாட்டினைத் திறந்து வைக்கும் பொறுப்பு பெண்மணி ஒருவருக்கு அளிக்கப்பட்டமை இவ்வியக்கத்தின் தனித்தன்மையினைக் காட்டுவதாகும். திருச்சி எஸ். நீலாவதி அம்மையாரின் திறப்புரை சூடு நிரம்பியதாயிருந்தது.

> "இங்கு கூட்டப்பட்டிருக்கும் நாஸ்திக மகாநாடானது ஒரு நூதன மகாநாடென்று கூறப்படுவதற்கு உரித்தாகும். இம் மகாநாட்டிற்கு மூலகாரணமாயுள்ள சுயமரியாதை இயக்கம் சுமார் ஒன்பது ஆண்டுகளாகச் செய்து வந்த வேலைகளின் பயனாகவே இன்று இச் சென்னையில் முதன் முதலாக இந்த மகாநாடு கூடுவதற்குக் காலம் கிடைத்தது. இன்றைய நாஸ்திக மகாநாட்டிற்கு இடையில் இன்னும் பல நூதன மகாநாடுகளைக் கூட்டினோம்.
>
> ஜமீன்தாரர் அல்லதார் மகாநாடு, பண்க்காரர் அல்லாதார் மகாநாடு, லேவாதேவிக்காரர் அல்லாதார் மகாநாடு முதலிய அல்லாதார் மகாநாடுகளையும் கூட்டுவித்து நமது அபிப்பிராயங்களைப் பொதுமக்கள் பலரும் அறியுமாறு செய்தோம். அதிலிருந்து இன்னும் ஒரு படி அதிகமாகப் பச்சை நாஸ்திகர் மகாநாடு துவக்கிவிட்டோம். நமது இயக்கம் உலக மக்கள் யாவருக்கும் பொது.
>
> நமது இன்றைய மகாநாட்டின் நோக்கம் மதம்-கடவுள் ஒழிய வேண்டும்; அதை மெருகு கொடுத்துப் புகழுபவர்களின் மதிப்பை அழிக்க வேண்டும் என்பதே. நம்மை என்ன வேண்டுமானாலும் திட்டிக் கொள்ளட்டும். உலகத்திலேயே நாஸ்திகனுக்குத்தான் அதிகப் பொறுப்பு இருக்கிறது. நான் தப்பு செய்து விட்டேனானால் அதற்கு உண்மையில் நான் உதித்தாரார் ஆகிறேன். உடனே திருத்திக் கொள்ள வேண்டுமென்று உணருகிறேன். ஆஸ்திகன் அப்படியல்ல. என்ன தப்பு வேண்டுமானாலும் செய்யலாம். ஆனால் ஒரு தேங்காயோ பாவசங்கிர்த்தனப் பெட்டியோ அவ்வயோக்கியத் தனங்களை நிவர்த்தி செய்து விடும்." ('புரட்சி': 7-1-1934).

## தோழர் ம. சிங்காரவேலரின் தலைமையுரை

தாய்க்குலத்தில் தோன்றிய நீலாவதி அம்மையாருக்குத்தான் நாத்திகத்தின் பெருமையினை வெளிப்படுத்துவதில் எத்துணை ஆர்வம்! எவ்வளவு துணிவு! மாநாட்டின் தலைவராகப் பொறுப்பேற்ற அறிஞர் பொதுவுடைமைத் தோழர் ம. சிங்காரவேலர் அரியதொரு தலைமையுரை வழங்கினார் என்பதைப் 'புரட்சி' தெரிவிக்கிறது.

"இந்தியா முழுமைக்கும் இந்த மகாநாடே முதல் நாத்திக மகாநாடு என்று சொல்லலாம். இந்த மகாநாட்டால் நமது இந்திய தேசத்திற்கு நன்மை உண்டாகுமே யல்லாமல், கெடுதியாதொன்றும் விளையாது. ஆனால் அறியாதோர் சிறுபிள்ளைத்தனமாக இம்மகாநாட்டைப் பரிகாசம் செய்வார்கள்.

மூட உலகம் நன்மை அளிக்கும் இயக்கங்களை முதலில் பழித்தே வந்திருக்கிறது. பழிப்பதோடு நில்லாமல் இம்சித்தும் வந்திருக்கிறது. நாஸ்திக போதகரான இங்கர்சாலை அமெரிக்க நாடு முழுமையும் பழித்தது. இன்று அவரின் நூறாம் ஆண்டுப் பெருநாளைக் கொண்டாடுகிறது. அய்ம்பது வருஷத்துக்கு முந்தி, ஆங்கில நாஸ்திகரான ப்ராட்லாவை ஆங்கில நாடு சிறையிலிட்டது. இன்று அவருடைய ஜுபிலியைக் கொண்டாடுகிறது. இன்று நாஸ்திகர்களாகியவர்கள் பழிக்கப்படுவார்; இம்சிக்கப்படுவார். ஆனால் இந்த மகாநாட்டைப் போன்ற அரிய பெரிய நாஸ்திக மகாநாடுகள் தேசமுழுமையுமே நாஸ்திகத்தைப் பரவச் செய்யும். காலப்போக்கில் இந்த மகாநாட்டை உண்டாக்கியவர்களை உலகம் மறந்து விடும். ஆனால் அவர்கள் நாஸ்திக விஷயமாகக் கொண்ட எண்ணங்கள் மக்களை மூட நம்பிக்கைகளிலிருந்து விடுவித்து சுகப்படுத்தும் என்பதற்குத் தடை இல்லை.

உலகில் நாஸ்திகம் ஒரு பழமையான சித்தாந்தம். ஆஸ்திகம் உண்டான போதே நாஸ்திகமும் உண்டானது. கடவுள் உண்டு என்ற சொல் கிளம்பியதும் கடவுள் இல்லை என்ற சொல்லும் கிளம்பியது. ஆதி மனிதன் பேசுவதற்கு முந்தி ஆஸ்திகம் என்பதே அறியான். பேசத் தெரிந்த பிறகே 'கடவுள்', 'தெய்வம்', 'பேய்', 'பிசாசு', 'உயிர்', 'ஆத்மா' என்ற சொற்களை உச்சரிக்க ஆரம்பித்தான்.

காட்டுமிராண்டிகளில் சிலர் 'கடவுள்' என்ற சொல்லே தங்களுக்குத் தெரியாது என்று தெரிவித்திருக்கிறார்கள். சில

பாதிரிமார்கள் அன்னோரிடம் கடவுளைப் பற்றிக் கேட்டபோது அந்தச் சொல்லே தங்கள் பாஷையில் இல்லை என்றார்களாம்! இவர்களை ஆதி நாஸ்திகர்கள் Primitive Atheists- என்று எண்ணலாம். எனவே ஞாயமுறையில் நாஸ்திகன் என்ற பதத்தில் யாதொரு இழிவுமில்லை. ஆனால் மதஸ்தர்கள் தங்கள் மூட வைராக்கியத்தாலும் மூடதுவேஷத்தாலும் நாஸ்திகர்களை இகழ்ந்தும் இம்சித்தும் வந்திருக்கின்றனர்."

சிங்காரவேலரின் இந்த உரை எவரைத்தான் சிந்திக்கத் தூண்டாது. "நாஸ்திகப் பிரசாரம் ஏன்?" என்று வினா எழுப்பிக் கொண்டு அதன் விடையாக அப்போது சென்னை மாகாண நாஸ்திக சங்கக்காரியதரிசியாகப் பொறுப்பேற்றிருந்த தோழர் ப. ஜீவானந்தம் வெளியிட்ட விளக்கம் 21-1-1934ஆம் நாளிட்ட 'குடிஅரசு' இதழில் வெளியானது. அதன் ஒரு பகுதி இதோ:

"நமது இலட்சியத்தை நோக்கிச் செல்லும் பாதையில் காணப்படும் முட்டுக்கட்டைகளும் தடைக்கற்களும் பற்பல. அவற்றில் முக்கியமானவற்றில் இரண்டு மதமும் கடவுளும். சென்ற காலச் சீர்திருத்த வீரர்கள் இவற்றின் எதிர்ப்புக்கு ஆளாக அஞ்சினர். மக்கள் மனப்பான்மையில் புரட்சி உண்டு பண்ண அவர்கள் பயந்தனர்.

நமக்கோ நமது கோரிக்கைதான் பிரதானமே யொழிய ஏற்படும் இடையூற்றை யொட்டிய பரிகசித்தப் பெயர்களைப் பற்றிக் கொஞ்சங்கூடக் கவலையில்லை. இக்காரணத்தால்தான், பொதுஜனங்கள் தாங்களாகவே யோசித்துத் தீர்மானிக்கத்தக்க நிலைமையை உண்டாக்க முயற்சிக்கிறோம். பொதுஜனங்கள் சுயேச்சையாகச் சிந்திக்கும் மார்க்கம் ஏற்படாதவரையில் கோரிய பலனை அடையலாமென்பது வீண். ஒரு முறை பொது ஜனங்கள் தாங்களாகவே சிந்திக்கத் தொடங்கிவிட்டால், பின், முன்னேற்றப் பாதை திறக்கப்பட்டு விடும்.

அறிவியல்வாதிக்கு ஆஸ்திக வாதம் ஒத்துவராது. மனித வர்க்கத்தைத் தக்க வழியில் செலுத்த வேண்டுமென்று விரும்பும் சீர்திருத்தக்காரர்கள், புரட்சிக்காரர்களெல்லோரும் அஞ்சா நெஞ்சர்களாய் இருக்க வேண்டும். அவர்கள் அஞ்சா நெஞ்சராய் இருக்க வேண்டுமானால் அவர்கள் அறிவியல்வாதிகளாகி, சுயேச்சா சிந்தனா சக்தியை வளர்க்க வேண்டும். விதிவிலக்கின்றி சகல அறிவியல்வாதிகளும் (Free Thinkers) மனித வர்க்கத்தை நேசிப்பவர்களே. எத்துறையில் அஞ்சாது சீர்திருத்தம் செய்ய

வேண்டுமானாலும் ஆஸ்திகம் குறுக்கே படுத்து வழியை மறிப்பது நமக்கு நன்றாகத் தெரியும். ஆகவே பிறரைப் புண்படுத்தவல்ல, மக்களின் சுயேச்சை சிந்தனா சக்தியை வளர்க்கும் பொருட்டு நாம் நாஸ்திகம் பிரசாரம் செய்து தீர வேண்டியவர்களாய் இருக்கிறோம்."

ஜீவாவின் விளக்கம் சிந்திக்கும் எவரையும் ஏற்றுக் கொள்ளச் செய்யவல்ல எத்துணை அருமையான சொல்லாடலாய் இருக்கிறது!

## தமிழன்பர் மாநாடு

அதே 1933ஆம் ஆண்டு டிசம்பர் 23, 24 -ஆம் நாள்களில் சென்னையில் நிகழ்ந்த 'தமிழன்பர் மகாநாடு' குறிப்பிடத்தக்க சுவையான ஒன்றாகும். அதுபற்றி 10-12-1933ஆம் நாளிட்ட 'புரட்சி' முன் கூட்டியே மதிப்பாய்வு செய்தது.

"சென்னையில் நடைபெற இருக்கும் தமிழ் அன்பர் மகாநாட்டைப் பற்றி இரண்டொரு சுயமரியாதை மகாநாடுகளிலும், பல சுயமரியாதைச் சங்கங்களிலும், அம்மகாநாடானது பார்ப்பனர்கள் தமிழர் மீது ஆட்சி செலுத்தவும் தமிழ்ப் பண்டிதர்களை அடிமை ஆக்கிக் கொள்ளவும் பார்ப்பனரல்லாத உபாத்தியாயர்களை அடக்கி வைக்கவும் பார்ப்பனர்களில் பலருக்கு உத்தியோகமும் வருமானம் ஏற்படுத்தவும் செய்யப்படும் ஒரு சூழ்ச்சி என்பதோடு, தமிழ்க் கல்வி என்பதையே தங்கள் இஷ்டப்படி மாணாக்கர்களுக்கு ஊட்டுவதற்கு ஏற்ற தந்திரம் என்றும் பேசி, அதைப் பகிஷ்கரிக்கத் தீர்மானித்திருப்பது யாவரும் அறிந்திருக்கலாம். அந்தப்படியே ஒரு பலமான உணர்ச்சியும் தமிழ் மக்களுக்குள் இருந்து வருவதையும் பார்க்கலாம்".

மாநாட்டின் ஏற்பாட்டாளர்கள் பார்ப்பனர் என்பதையும் அவர்களின் உள்நோக்கம் இன்னதென்பதையும் இம்மதிப்பாய்வு நமக்கு உணர்த்துகிறது.

பார்ப்பனரின் தீய உள்நோக்கத்தை நிறைவேறவிடாமல் தடுக்க வேண்டும் என்ற முயற்சியில் தன்மான இயக்கத்தின் துடிப்பான இளைஞரும் பிறவகைத் தமிழ்ப் பற்றாளர்களும் முனைப்பாக இறங்கினர். முன்னேற்பாடாக முற்போக்கான தீர்மானங்களை மாநாட்டாளர்களுக்கு முதலில் அனுப்பி வைத்தனர்.

"தமிழ்நாட்டிலுள்ள சைவ-வைணவ ஆலயங்களில் தமிழிலேயே ஓதுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்."

"பாடப் புத்தகங்களில் பகுத்தறிவுக்கும் தன்னம்பிக்கைக்கும் முரணான கடவுள் வாழ்த்து கூடாது."

"தமிழ் நெடுங்கணக்கிலுள்ள வேண்டாத எழுத்துகளை நீக்கி, வேண்டிய எழுத்துக்களைச் சேர்க்க வேண்டும்."

என்பன போன்ற கருத்துகள் அடங்கிய தீர்மானங்கள் பல மாநாட்டுப் பொறுப்பாளர்களின் அலுவலகத்தைப் படையெடுத்தன.

மாநாட்டு மண்டபத்தினுள் மாநாட்டின் தொடக்க நாளன்று தன்மான இயக்கத் தோழர்களும் தோழியரும் முன்கூட்டியே நுழைந்து அமர்ந்துவிட்டனர்.

மாநாட்டுத் தலைவராக அன்றைய கல்வியமைச்சர் மாண்புமிகு எஸ். குமாரசாமி ரெட்டியார் முன்மொழியப்பட்டு வழிமொழியப்பட்டார். அதாவது அக்கால மரபுப்படி பிரேரேபிக்கப் பட்டு ஆமோதிக்கப்பட்டார்! அவ்வளவுதான்; உடனடியாக தன்மான இயக்கத்தைச் சேர்ந்த தோழர் டி.எம். பார்த்தசாரதி அம்முன்மொழிவினை எதிர்ப்பதாகப் பேசத் தொடங்கினார். அவர் உட்கார வேண்டுமெனச் சிலர் கூச்சல் எழுப்ப, பார்த்தசாரதி அவர்கள் தான் வெளிப்படுத்த வந்ததைக் கூறியே ஆக வேண்டுமென்று உறுதியாய் நிற்க, எதிர்ப்பாளர்கள் அடங்கி விட்டனர்!

அடுத்து அக்காலத்தில் சாதியொழிப்புப் புரட்சித் திருமணம் செய்து காட்டிய முன்னோடிகளில் ஒருவரான தோழர் சா. குருசாமி எழுந்து, தான் மாநாட்டின் பொறுப்பாளர்களுக்கு அனுப்பி வைத்த தீர்மானங்கள் மாநாட்டார் வெளியிட்டிருக்கும் வரைவுத் தீர்மானத் தொகுப்பில் ஏன் இடம் பெறவில்லை என்ற கடும் கண்டனம் தெரிவித்து, தன் தீர்மானங்களுக்கு இடம் அளிப்பதோடு, பொருளாய்வுக் குழு (விஷயாலோசனைக் கமிட்டி)யில் தங்கள் தரப்புக்கும் இடங்கள் தருவதாய் இருந்தால், முன் மொழியப்பட்ட கல்வி அமைச்சர் அவர்களின் மகாநாட்டின் தலைவராய் அமரலாம் என்பதாக ஊன்றி நின்றார்.

தொடர்ந்து டி.வி. சுப்பையா என்ற மற்றொரு தன்மான இயக்க வீரர் எழுந்து காவல்துறையினர் மகாநாட்டு மண்டபத்திற்குள் இருக்கக் கூடாதென்றும் அவர்கள் உடனே அப்புறப்படுத்தப்பட வேண்டியது இன்றியமையாதது என்றும் வலியுறுத்தினார்.

இத்தகைய சூழ்நிலையில் என்ன நடந்தது என்பதை எவராலும் கற்பனை பண்ண முடியாது. ஆம்; எதிர்ப்பார்க்க வியலாத ஒன்று நிகழ்ந்தது. காவல் துறையினர் வெளியேற்றப்பட்டனர். மேலும் மாநாட்டுத் தலைவர் இரு தரப்பாரையும் அழைத்து, ஒவ்வொரு தரப்புக்கும் ஏழு உறுப்பினர் மேனி மொத்தம் பதினான்கு உறுப்பினர்களைக் கொண்ட 'விஷயாலோசனைக் கமிட்டி'யை அமர்த்தி விட்டார்.

மாநாட்டுத் தலைவரின் இந்த நடவடிக்கை பெரும் விளைவினை உண்டாக்கிவிட்டது!

## தமிழில் வேண்டும்

**"நவீன சாஸ்திர நூல்கள் தமிழில் எழுதப்பட்டுப் பள்ளிகளில் தமிழிலேயே கற்பிக்கப்படவேண்டும்"; ஜாதி வேற்றுமைகளை உண்டு பண்ணக் கூடிய நூல்களைப் பள்ளிக்கூடங்களிலிருந்து ஒதுக்கி வைக்க வேண்டும்"; "சங்கீதக் கச்சேரிகளில் பெரும்பான்மையான பாடல்கள் தமிழிலேயே பாடப்பட வேண்டும்"; "எஸ். எஸ். எல். ஸி. வரையிலாவது (ஆங்கிலம் தவிர) எல்லாப்பாடங்களையும் கட்டாயமாகவே தமிழில் கற்பித்துப் பரிட்சிக்க வேண்டும்; "தமிழ் நெடுங்கணக்கில் உள்ள வேண்டாத எழுத்துக்களை நீக்கி, வேண்டிய எழுத்துகளைச் சேர்ப்பது பற்றி ஆலோசனை செய்து அறிக்கை தரக் குழு வொன்று அமைக்க வேண்டும்"**

போன்ற முற்போக்கான தன்மான இயக்கக் கொள்கைகள் அடங்கிய தீர்மானங்களும் மாநாட்டில் நிறைவேற்றப்பட வேண்டியதொரு நெருக்கடி - கட்டாயச் சூழ்நிலை உருவாகிவிட்டது. இது அறிவியக்கத்தாருக்குக் கிட்டிய மாபெரும் வெற்றி என்பது எவராலும் மறுக்கப்பட முடியாத வரலாற்றுண்மை!

## 'புரட்சி' தந்த விளக்கம்

"ஏன் சுயமரியாதை இயக்கத்தில் சேரவேண்டும்?" என்னும் தலைப்பில் 21-1-1934ஆம் நாளிட்ட 'புரட்சி' இதழின் முதல் பக்கத்தில் கட்டம் கட்டி ஒரு விளக்கம் வெளியானது. அது பின்வருமாறு:

"ஏன் சுயமரியாதை இயக்கத்தில் சேரவேண்டும்?

1. அது ஒன்றேதான் மக்கள் சமூக வாழ்வில் ஒருவருக்கொருவர் எவ்வித உயர்வு தாழ்வும் இருக்கக்கூடாது என்ற சமதர்மத்துக்குப் போராடுகின்றது.

2. அது ஒன்றேதான் மனித சமூகம் பொருளாதாரத் தன்மையில் ஒருவருக்கொருவர் பணக்காரன் ஏழை என்கின்ற வித்தியாசம் இல்லாமல் எல்லாப் பொருளும், பூமியும் எல்லோருக்கும் சரிசமமாய் இருக்க வேண்டும் என்ற சமதர்மத்துக்குப் போராடுகிறது

3. அது ஒன்றேதான் மனித சமூகத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் எவ்வித வித்தியாசமும் இல்லாமல், சகல துறைகளிலும் சரிசமத்துவம் இருக்க வேண்டும் என்ற சமதர்மத்துக்குப் போராடுகின்றது.

4. அது ஒன்றேதான் மனித சமூகத்தில் ஜாதி, மதம், வருணம், தேசம், கடவுள் ஆகிய அபிமானங்களை அறவே ஒழித்து, உலக மனித சமூகத் தோழமை வேண்டும் என்ற சமதர்மத்திற்காகப் போராடுகின்றது.

5. அது ஒன்றேதான் உலகில் உழைப்பாளி, முதலாளி என்பது போன்ற பிரிவினையே இல்லாமல், சகல தேவைகளுக்கும் சகல மனிதர்களும் சரிசமமாகப் பாடுபட்டு அவற்றின் பயனை எல்லோரும் சரிசமமாய் அனுபவிக்க வேண்டும் என்ற சமதர்மத்துக்குப் போராடுகின்றது.

6. அது ஒன்றேதான் ஒவ்வொரு மனிதனும் எவற்றிற்கும் எவ்விதத்தும் அடிமையாகாமல், அவனவன் அறிவு, ஆராய்ச்சி, அனுபவம் ஆகியவைகளுக்கு இணங்கி நடக்க, சர்வ சுதந்திரம் இருக்க வேண்டும் என்ற தர்மத்துக்குப் போராடுகின்றது.

இவ்விளக்கத்தைப் படிக்கும் மாந்தப் பற்றுள்ள எவரும் சுயமரியாதை இயக்கத்தின் இணையற்ற அருமையினைப் புரிந்து கொள்வாரென்பது உறுதி.

## நீதிமன்றம் வழங்கிய தீர்ப்பு

ஆர்வத்தைத் தூண்டவல்ல ஒரு வழக்கின் தீர்ப்பு பற்றிய செய்திக் கட்டுரையினைப் 'புரட்சி' 11-2-1934 அன்று வெளியிட்டது. கத்தோலிக்கர் முஸ்லீம்களுடைய மனத்தை வேண்டுமென்றே புண்படுத்தும் நோக்கத்தில் 'ரீசன்' (Reason) என்ற ஆங்கில இதழின் ஆசிரியர் சி.எல். டிசாயின் என்பவர் கட்டுரைகள் எழுதினார் என்று தொடரப்பட்ட வழக்கில் பம்பாய் மாநில முதன்மை நடுவர் சர். ஹோர் முஸ்டியர் தாஸ்துர் என்பார் அளித்த தீர்ப்பினைக் குறித்த கட்டுரையே அது. அத்தீர்ப்பு மிக நீண்டதாகையால் அதன் குறிப்பிடத்தக்க பகுதிகளை மட்டும் இங்கு தருவது போதுமானதாக இருக்கும் என நம்புகிறேன்.

"பகுத்தறிவு வாதத்திற்கு ஒத்துவராத எல்லா மதங்களையும் சமூக நம்பிக்கைகளையும் எதிர்த்து நின்று போராடுவதே இந்தியப் பகுத்தறிவுக் கழகத்தின் நோக்கம். ஆதலால் அவசியம் மதங்களின் சில சமுதாய நம்பிக்கைகளை எதிர்த்துத்தான் ஆகவேண்டும். பகுத்தறிவின் பிரகாசமான இந்தக் காலத்திலும் இன்னும் லட்சக்கணக்கான மக்கள் பரிசுத்த பழைமை யானவற்றை நம்புகின்றனரே என்று நினைக்கும் பொழுதுதான் நகைப்புக் கிடமாக இருக்கிறதென்று குற்றம் சுமத்தப்பட்டவர் கருதுகிறார்.

அவர் உபயோகித்துள்ள வார்த்தைகளைக் கொண்டும், அதைப் படிப்போரின் மனத்தில் உண்டாக்கியிருக்கும் முடிவான விளைவைக் கொண்டுதான் எழுத்தாளருடைய நோக்கத்தைத் தீர்மானிக்க வேண்டும்.

பள்ளிக் கூடங்களிலும் கல்லூரிகளிலும் மதக்கல்வியை உற்சாகப்படுத்துதல் என்றதொரு பிரேரேபனையை பம்பாய் சர்வகலாசாலையார் நிராகரித்ததையொட்டிக் குற்றம் சுமத்தப்பட்டவர் கட்டுரைகள் எழுத உணர்ச்சியால் தூண்டப் பட்டார். இக்காரியத்திற்காக செனட்டை அவர் போற்றியுள்ளார். மனிதனுக்கு நீதிபோதனைகளை மத அறிவு உண்டாக்கு கிறதென்று நம்புவது தவறு என்பதே எழுத்தாளரின் துணிபு.

கற்றறியாப் பாமர வகுப்பார்களுடைய மத நம்பிக்கைகளினால் எழும் ஒழுக்கக் கேடுகளையே அவர் காட்டுகிறார். ஒரு பகுத்தறிவுக்காரர் என்ற முறையில் சில மதங்களையும் சமூக நம்பிக்கைகளையும் தாக்கி எழுதுவது எந்த விதமான அவதூறு எண்ணமும் கொண்டதல்ல".

இப்படித் தீர்ப்பளித்த மாநில முதன்மை நடுவர் இதழாசிரியர் சி.எல். டிசாயின் அவர்களை விடுதலை செய்தார். இத்தீர்ப்பு இந்தியா அரசியல் விடுதலை எய்துவதற்கு முன்பு இருந்த தீர்ப்பு மன்றங்களிடையே நிலவிய முற்போக்கு மனப்பான்மையை நமக்குத் தெளிவுபடுத்துகின்றது.

இத்தீர்ப்பு பற்றிப் 'புரட்சி'யின் 11-2-1934ஆம் நாளையப் பதிப்பில், "இத்தகைய நீதிவான்களின் பாரபட்சமற்ற நடுநிலைமையாலும், சட்ட நிபுணத்துவத்தாலும், விசாரித்தறியும் புத்தி நுட்பத்தாலுமேதான் அரசாட்சி என்னும் பதத்தின் உண்மையான பொருள்களால் மக்களுக்குள்ள இன்னல்களாகி, சிறியதைப் பெரியது நலிதல் முதலியன விலகி, சமாதான

முறையில் வாழ்விக்க முடியுமேயல்லாது, நோக்கம் போலும் ஆளைப்போலும் தீர்ப்பளித்தால், மக்கள் என்ன பலனை அடைய முடியும்? ஆகையால் இவ்விதத் தீர்ப்பை நாம் மனமார வாழ்த்துகிறோம்"

என்பதாக ஆசிரியவுரை வெளியாயிற்று.

அறிவியலாளர் சர். சிவி. இராமன் அவர்களின் உரைத்துண்டமொன்று 11-3-1934ஆம் நாள் 'புரட்சி'யில் காணப்படுகிறது. அது இது:

"டாக்டர் சி.வி. இராமன் சென்ற 18-ஆம் தேதி இரவு மங்களூர் இராமகிருஷ்ண ஆசிரமத்தில் மோட்சம் நரகம் மறுபிறப்பு உண்டென்ற நம்பிக்கையைக் குறிப்பிட்டுப் பின் வருமாறு கூறுகிறார்:-

மோட்சம் என்பதும் நரகம் என்பதும் கிடையாது. மறுபிறப்பும் இல்லை. மனிதன் பிறக்கிறான்; உயிரோடு வாழ்கிறான்; பிறகு செத்துப் போகிறான். இதுதான் உண்மையேயன்றி வேறில்லை. ஆகையால் மனிதர் ஒழுங்காக நடந்துகொள்ள வேண்டும். மறுபிறப்பு உண்டென்ற நம்பிக்கையே சன்மார்க்க வாழ்க்கைக்கு இடையூறாக இருக்கிறது. இந்தப் பிறப்புதான் – இப்போது வாழ்கிற வாழ்வுதான் முக்கியமானது என்று ஜனங்கள் நம்புவார்களானால் அவர்கள் பகுத்தறிவுடன் நடந்து கொள்ளுவார்கள்."

பெரியாரின் அறிவியக்கத்திற்கு வலுச்சேர்க்கின்ற அரிய கருத்து இந்திய அறிவியலாளரிடமிருந்து கிடைத்தது என்றால், அது நல்வாய்ப்பல்லவா?

விளம்பர வடிவத்தில் ஓர் அருமையான - சிந்தனையைத் தூண்டவல்ல - செய்தி 18-3-1934 நாளிட்ட 'புரட்சி'யில் நமக்குக் கிடைக்கிறது. "திருச்சியில் சமதர்ம ஹோட்டல்" எனும் தலைப்பில், கட்டம் கட்டப்பட்டு, வருமாறு அவ்விளம்பரம் வெளியிடப் பட்டுள்ளது.

"திருச்சி ஸ்ரீரங்கம் சமதர்மத் தோழர்களின் பெருவிருப்பத்திற்கிணங்க, திருச்சி டவுனில் குறைந்த செலவில் உணவு கிடைக்குமாறு, நவீன முறையில் ஓர் சமதர்ம உண்டிச்சாலை ஸ்தாபிக்கத் தீவிரமான ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. அதன் நிர்வாகத்திற்குப் பங்கு ஒன்றுக்கு ரூ.10– வீதம் இதுவரை 150 பங்குகள் சேர்ந்து விட்டன. எஞ்சிய 150 பங்குகளில் பெரும் பகுதி வெளியூர்த் தோழர்களுக்கு ஒதுக்கி வைக்கப் பெற்றிருக்கின்றன. ஒருவர் இரண்டு பங்குகளுக்கு மேல் எடுத்துக் கொள்ள இயலாது. பங்கு தேவையானவர்கள் தங்கள்

*விலாசம் தெரிவித்தால், மனு பாரம் அனுப்பி வைக்கப்பெறும். ஆர்கனைசர் ராமசுப்பிரமணியம், 41-திப்ரான் தொட்டி தெரு, திருச்சிராப்பள்ளி".*

இவ்விளம்பரம் நம்மிடம் பலப்பல பேசக்கூடும். அவற்றில் குறிப்பாக அக்காலக்கட்டத்தில் உணவு விடுதிகளில் நிலவிய பாகுபாட்டுக் கொடுமைகள், அந்நிலையை மாற்றும் முயற்சியாகச் 'சமரசம்' உள்ளம் படைத்தோர் கூட்டுறவு முறையில் ஒன்றிணைந்து எடுத்துக்காட்டான உண்டிச்சாலை யொன்றை நிறுவுவதற்காக மேற்கொண்ட முனைப்பான நடவடிக்கை ஆகியவை உடனே புலப்பட்டுவிடும்.

'புரட்சி' தோன்றியபின் 10-12-1933ஆம் நாளிட்ட அதன் மூன்றாம் மலரில் இயக்க முன்னோடியான எஸ்.வி. லிங்கம் அவர்கள் வெளியிட்ட ஓர் அறிக்கையில் அடங்கிய ஒரு பகுதி நம் நாட்டினர் இன்றைக்கும் கருத வேண்டியதாகும். இதோ அப்பகுதி:

> *"நமது நாட்டில் என்றைக்காவது சமதர்மம் வெற்றி பெற வேண்டுமானால், அதற்கு முன்னணியில் நின்று பாடுபட வேண்டியவர்கள் தற்சமயம் தாழ்த்தப்பட்டவர்களெனக் கருதப்படும் ஜனசமூகமாகும். சமதர்மத் தொண்டுக்கு வேண்டிய சகல குணங்களும் இந்தத் தாழ்த்தப்பட்ட தொழிலாளரிடம் இயற்கையாகவே குடிகொண்டிருக்கின்றன. இவர்களுக்குச் சொத்து-சுதந்தரமென்ற எவ்விதத் தடங்கலுமில்லை. கோவில்-குளங்களில் இவர்கள் அனுமதிக்கப்படாமையால், மதமென்னும் போதை இவர்களை அதிகமாகப் பாதிக்கவில்லை. ஆயிரக்கணக்கான வருஷங்களாக மிருகங்களிலும் கேவலமான நிலையில் இவர்களை அமுக்கி வைத்திருக்கும் கடவுளுக்கு இவர்கள் நன்றி செலுத்த வேண்டிய அவசியமில்லை. ஆகையால் தட்டுத் தடங்கலில்லாமல் சமதர்ம இயக்கத்தில் சேரக்கூடிய லாயக்கு இவர்களுக்கே உள்ளது".*

தன்மான இயக்கம், தாழ்த்தப்பட்டவர்களாக நேர்ந்துவிட்ட இந்நாட்டுப் பழங்குடி மக்களாகிய - எல்லாவற்றிலும் முதலுரிமைக்கு உரியவர்களான ஆதி திராவிட மக்களையே முன்னிலைப்படுத்த முனைந்தது என்பதற்குப் 'புரட்சி' வெளியிட்ட இவ்வறிக்கை சான்றாய் நிற்கிறது.

'சமதர்ம'க் கருத்துகள் நாட்டில் நன்கு பரப்பப்பட வேண்டிய இன்றியமையாமையைக் கருதிப் பெரியார் உழைத்து வந்த காலக்கட்டத்தில் 'புரட்சி' இதழ் தோன்றிய நிலையில், சமதர்மக்

கொள்கைகளை அடக்கிய கட்டுரைகள் 'புரட்சி'யில் நிறைய இடம் பெற்றன.

அக்காலத்தில் நாடகங்களுக்கு மக்களிடமிருந்து நல்ல வரவேற்புக் கிடைத்தது என்பது குறிப்பிடத்தக்க உண்மை. அந்த அடிப்படையில் 'தமிழ்நாடு சமதர்ம நாடக சபா' என்ற பெயரில் ஓர் அமைப்பு உருவாக்கப்பட்டமை பற்றிய செய்தி 'புரட்சி'யில் காணக் கிடக்கிறது. பாரதிதாசன், கி.ஆ.பெ. விசுவநாதம், சென்னை 'ராவ்பகதூர்' பி. சம்பந்தம், டாக்டர் பி. வரதராஜுலு, மதுரை பாஸ்கரதாஸ், சேலம் சித்தையன், ப. ஜீவானந்தம், மாயவரம் சி. நடராசன், சென்னை டி.எஸ். சொக்கலிங்கம், கே.எம். பாலசுப்பிரமணியம், சாமி சிதம்பரனார், கொடுமுடி கே.பி. சுந்தராம்பாள், விஸ்வநாத தாஸ், சி.ஏ அய்யா முத்து, நாகர்கோவில் பி. சிதம்பரம் முதலிய பெருமக்கள் எல்லாம் பங்கேற்ற அந்நாடகக் குழுவின் அமைப்பாளராக ஈரோடு அ. இரத்தினசபாபதியவர்கள் பொறுப்பாற்றியுள்ளார்.

அமைப்பாளரின் பெயரால் 'புரட்சி'யின் 4-2-1934ஆம் நாளிட்ட இதழில் வெளியான அறிக்கை, "மக்களுக்குள் சமூக, அரசியல், பொருளாதாரத் துறைகளில் காணப்படும் பல திறப்பட்ட வேற்றுமைகளையும் ஏற்றத்தாழ்வுகளையும் நீக்கி எல்லாரும் சரி, நிகர், சமம் என்னும் நேரிய நியதி நிலை நின்று செழித்தோங்குமாறு நீதி புகட்ட வல்ல உண்மைகளை நாட்டில் பரப்புவதற்கு நாடக மேடைகளை ஆதாரமாகக் கொண்டு தொண்டாற்றுதல் என்பதைத் தமிழ்நாடு சமதர்ம நாடக சபாவின் நோக்கமாகக் காட்டுகிறது.

சுயமரியாதைக்காரர்களின் சமதர்மக் கொள்கை பரப்பும் முயற்சிக்கு நாடக உலகப் பெருமக்கள் மட்டுமல்லாமல் தேசிய அரசியலில் பேர்பெற்றவர்களும் ஒத்துழைப்பு நல்க அணியமாகவும் இருந்தனர் என்னும் சூழ்நிலையினை நமக்குத் தெரியப்படுத்தும் இச்செய்தி சுவையாக இருக்கிறது!

**'சோஷலிசம்'**

"சோஷலிசம் (சமதர்மம்)" என்னும் தலைப்பில் 13-5-1934ஆம் நாள் 'புரட்சி' இதழில் 'சோஷலிஸ்ட்' என்ற புனைபெயர் கொண்டவரால் கட்டுரைத் தொடர் ஒன்று தொடங்கப்பெற்று, பல்வேறு நாடுகள் மக்களின் நல்வாழ்வுக்கென மேற்கொண்ட ஆட்சிமுறைகள் விளக்கப்பட்டன.

"சோஷலிசம் பல்வேறு அமைப்பில் இருக்கின்றது. அதன் பொருள் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு விதமாக விளக்கப் பட்டிருக்கிறது. ஆகவே 'சோஷலிசம்' என்பதற்குக் குறுகிய வார்த்தைகளால் வியாக்கியானம் சொல்லி விளங்கி வைப்பதென்பது அவ்வளவு சுலபமானதல்ல. சமுதாயத்தின் ஏகோபித்த கூட்டு அமைப்பு முறையைக் குறிக்கோளாகக் கொண்ட ஸ்தாபனமே சோஷலிசமென்று நாம் சொல்லக்கூடும். அது தனிப்பட்டவர்களின் சொத்துரிமைக்கும் தனிப்பட்டவர்கள் உற்பத்திப் பொருள்களின் ஆக்கத்திற்கும் அதன் வினியோகத்திற்கும் எதிரிடையானதாகும்."

இவ்வாறு விளக்க முற்பட்ட கட்டுரையாளர்,

"பல்வேறுபட்டவர்களும் மிகக் கீழாகக் கொடுமை செய்யப்பட்டவர்களுமான தொழிலாளர்களை ஒன்றுபடுத்த எடுத்துக் கொள்ளும் முயற்சியில் தோழர் ஈ.வே.ராமசாமி இறந்து படலாம்"

என்று குறிப்பிட்டுள்ளமை பெரியார் எந்த அளவுக்குப் பாட்டாளி மக்களின் நலன்களுக்காக உழைக்க மனங் கொண்டிருந்தார் என்பதை மிகத் தெளிவாகப் புலப்படுத்துகிறது.

## புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்

"தங்களைப் பரிதாபமாகக் கெஞ்சுகிறேன். ஒவ்வொருவனுடைய இருதயத்தையும் இதுவரைக்கும் தடவிப் பார்த்ததில் சர்க்கார் எதிர்ப்புகள் தட்டுப்படுவது தவிர, அதன் பக்கத்திலேயே ஏழை மக்களின் பசித்துன்பம் தட்டுப்பட்டதே கிடையாதா? அல்லது உழைப்புக்குத் தக்க பயன் கிடைக்காமல் கொதிக்கும் இதயத்தை – உடையும் நெஞ்சத்தை – உணரும் உணர்ச்சி அற்றுப் போனீர்களா? "

என்று காவல் துறையினரை நோக்கி அறை கூவுகின்ற சொற்கள் அடங்கிய புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் "ஏழைகள் சிரிக்கிறார்கள்" என்ற சிறுகதை 11--2-1934ஆம் நாளிட்ட 'புரட்சி'யில் இடம் பெற்றது.

பல கோடிப் பாட்டாளி மக்களின் உழைப்புத் துன்பம் பற்றி அவர் வடித்த "வியர்வைக் கடல்" என்னும் நெடிய ஆசிரியப் பா 'புரட்சி'யின் 18-1-1934ஆம் நாளிட்ட இதழில் அச்சேறியது.

"பொதுவுடைமைக் கொள்கை திசையெட்டும் சேர்ப்போம்" "இது என தென்னுமோர் கொடுமையைத் தவிர்ப்போம்", "ஒரு

பொருள் தனியெனும் மனிதரைச் சிரிப்போம்" என்னும் வரிகள் அடங்கிய புதியதோர் உலகம் செய்வோம்" என்ற புகழ் மேவிய பாடல் 'புரட்சி'யில்தான் வெளியாயிற்று. ('புரட்சி': 25-3-1934).

சமதர்மம் பற்றியும் பொதுவுடைமை குறித்தும் தோழர் ப. ஜீவானந்தம் எழுதிய கட்டுரைகளும், அவர் யாத்த பாடல்களும் 'புரட்சி'யில் நிறைய வெளி வந்தன அவர் படைத்த,

**"கோடிக்கால் பூதமடா – தொழிலாளிக்**
**கோபத்தின் ரூபமடா"**

என்ற புகழ் பெற்ற தொழிலாளர் எழுச்சிப் பாடல் 29-4-1924ஆம் நாளிட்ட 'புரட்சி' இதழிலும்,

**"ஆண்டை அடிமை யெனும் அவச் சொல் அங்கில்லை**
**ஆண் பெண்பே தம்பாராட்டும் அழிகிறுக்கில்லை"**

என்ற வரிகள் அடங்கிய "கனவு கண்டேன்" என்னும் பாடல் 26-8-1934ஆம் நாளுக்குரிய 'புரட்சி'யிலும்,

**"ஏழைத் தொழிலாளர் வாழ்வு இன்பம் சூழ்கவே!**
**இன்பம் சூழ்கவே – புவித் துன்பம் வீழ்கவே!"**

என்ற பாடல் 18-2-1934ஆம் நாளையப் 'புரட்சி'யிலும் வெளியிடப்பட்டன.

அவைபோலவே சாமி சிதம்பரனாரின் கட்டுரைகளும் பாடல்களும் 'புரட்சி'யில் இடம் பெற்றன.

**"பக்தியெனும் பாழுரையைக் கொண்டே – இங்கு**
**பாழும் வினை செய்தலைந்தோம் பண்டே"**

எனும் பாடல் 25-3-34ஆம் நாளிட்ட 'புரட்சி'யிலும்,

**"சாதியழிந்தோடுகின்ற காலம் வந்ததே – கெட்ட**
**சமயமழிந்தோடுகின்ற காலம் வந்ததே**
**அறிவுவளர்ந் தோங்குகின்ற காலம் வந்ததே"**

என்ற வரிகள் அடங்கிய 'சுதந்தரக் கூத்து'ப் பாடல் 8-4-34ஆம் நாளுக்குரிய 'புரட்சி'யிலும்

**"அறிவே விடுதலை என்போம் – அதுவே**
**அனைவர்க்கும் இன்பம் அளித்திடும் என்போம்"**

என்ற பாடல் 12-5-34ஆம் நாளையப் 'புரட்சி' இதழிலும் வெளிவந்தன.

இன்னும் பலரின் கவிதைகளும் அடிக்கடி இடம் பெற்றன எனும் உண்மை 'புரட்சி' கிழமை இதழைப் புரட்டிப் பார்ப்போருக்கு நன்கு புரியும்.

இவ்வுண்மை நமக்கு வேறோர் உண்மையையும் புலப்படுத்துகிறது. பாக்கள் கொள்கைகளை மக்களிடையே பரப்புதற்குரிய உத்திகளில் ஒன்று என்பதை உணர்ந்திருந்த பெரியார் அவற்றுக்குத் தம் இதழில் உரிய இடமளித்து, தம்மை முறையான நல்லதோர் - இதழாளர் என்பதைக் காட்டியுள்ளார் என்ற உண்மையே அது.

## 'மே' தினம்

பார் முழுவதும் பாட்டாளிகள் நாளாகக் கொண்டாடப் பட்டு வரும் 'மேநாள்' அன்று தமிழ் மண்ணிலும் சிறப்பாக விழா எடுத்துப் பயன் கூட்ட வேண்டுமென்பதில் பெரியாரின் 'சுயமரியாதை இயக்க'மும் அதன் கொள்கை வெளியீட்டு ஊடகமாம் 'புரட்சி'யும் ஆர்வமும் அக்கறையும் நிறையக் காட்டின.

"**தொழிலாளர் பண்டிகை மே தினம் ஒன்றே**" என்ற முழக்கம் 'புரட்சி' இதழில் கொட்டை எழுத்துக்களில் கட்டங்கட்டி அச்சிடப்பட்டது.

> **"மே தினம் உலகமெங்கும் உழைப்பவர்களால் பெருநாளாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டுக் கடைசியில் அமெரிக்க தேசத்தில் தொழிலாளர், விவசாயிகள் அடங்கிய மக்கள் 8 மணி நேரத்திற்கு மேல் தொழிற்சாலை களிலும் வயல்களிலும் நிலங்களிலும் வேலை செய்வது அநீதி என்றும், அதை வற்புறுத்துவது அதனினும் அநீதி என்றும், 8 மணிநேர உழைப்பே போதுமென்ற ஒரு கிளர்ச்சி புறப்பட்டது. அக்கிளர்ச்சியை முதலாளிகள் அடக்க முயன்றனர். அவ்வடக்குமுறை மே மாதம் முதல் நாள் கொடூரமாக முதிர்ந்ததன் பயனாக, எளிய தொழிலாளர் – விவசாயிகள் இரத்தம் சிந்தியபடியால், அந்நாளைத் தொழிலாளர்களின் மாபெரும் தியாக ஞாபகார்த்தமாகக் கொண்டு உலக முழுமையும் அத்தினத்தைக் கொண்டாடிக் கொண்டு வருகின்றார்கள்.**
>
> **உடலுக்கு உணவு வேண்டுமானால், அறிவுக்குக் கல்வி வேண்டுமானால், தியாகம் அன்னியில் எதையும் அடைய முடியாது. சுகம் துக்கம், துக்கம் – சுகம் வாழ்வில் பிணைந்து**

கொண்டிருக்கிறபடியால், தியாக மூர்த்திகள் செய்து வரும் தியாகம் உலக ஞாபகத்தில் இருந்து கொண்டே யிருக்கும். இவ்விதத் தியாக மூர்த்திகளின் ஞாபகத்தைக் கொண்டாடும் தினம் இந்த மே மாதம் முதல் தேதியாகும். உலகத் தொழிலாளர்கள் பட்ட கஷ்டங்களை யெல்லாம் ஞாபகப் படுத்தும் தினம் மே மாதம் முதல் தேதியாகும்."

இவை 29-4-1934ஆம் நாளுக்குரிய 'புரட்சி'யின் நீண்ட ஆசிரியவுரையின் சில பகுதிகளாகும்.

## செ.தெ. நாயகத்தின் அறிவுரை

இன்னும் - தென்னிந்திய இருப்புப்பாதைத் தொழிலாளர் சங்கத்தினர் 1-5-1934 அன்று பொன்மலையில் நடத்திய மே நாள் விழாவின் போது தலைமையுரை நிகழ்த்திய தன்மான இயக்க முன்னோடி செ.தெ. நாயகமவர்களின் அரிய நெட்டுரையில் ஒரு பகுதியைச் சுவைப்போம்

"தொழிலாளரிடம் நாம் காணும் ஒரு பெருங்குறை ஒற்றுமை யின்மை. ஒற்றுமையை உண்டு பண்ண, ஒன்று பட எண்ணும் உள் முயற்சியோடு நம்மை ஒன்றுபடுத்தும் வெளிமுயற்சியும் வேண்டியுள்ளது. அவ்வெளி முயற்சிதான் நமது ஒற்றுமைக் குறைவின் காரணமாக நமக்குப் பிறரால் வரும் இடுக்கண்கள்.

அவ்விடுக்கண்களை விலக்க, இதுவரை ஒன்றுபடாத குறுகிய திறம் படைத்த மக்கள் பலர் ஒன்று பட வேண்டி வருகிறது. மரத்தின் தூரும் கிளைகளும் பல்கோடிக்கணக்கான நுண்ணிய அணுக்கள் வற்புறுத்தி ஒட்டுவிப்பாரின்றி உன்முயற்சியால் ஒன்றுபட்டு, வலுத்த கோடாரியாவது, வாளாவது கத்தியாவது இல்லாமல் பிரிக்கப்பட முடியாத நிலைமையை அடைகின்றன.

மரங்களை வெந்நீரில் கொதிக்க வைத்துச் சீவிப் பிரித்துப் பலகைகளாக ஒட்டுவிக்கப்பட்டுப் 'பிளைவுட்' என்ற பெயருடன் வருவதையும் பார்க்கிறோம்.

பிட்டால் வேறுபட்டு விடக்கூடிய மண்துண்டுகள் – சிறு காற்றில் பறக்கிற மண் தூசுகள் – தண்ணீருடன் கலந்து பிசைந்து கட்டியாக்கப்பட்டு, சுடப்பட்டு ஒன்று கூடி வலுவடைந்து, வேகத்துடன் வீசினால் மண்டையை உடைக்கும் செங்கல்லாகவும், யானையையும் தாங்கக்கூடிய பாலமாகவும் உருப்படுவதை நாள்தோறும் பார்க்கிறோம்.

கற்பாறைகளில் பலவும் ஒரு காலத்தில் குழம்பாகக் கொதித்துக் கட்டப் பட்டவை எனச் சொல்லுகிறார்கள்.

மக்களின் ஒற்றுமைப்பட உள்முயற்சி போதியதாக இல்லா விட்டால் வெளிவற்புறுத்தல் இல்லாமல் முடியாது என்ற நிலைமை வந்துதான் தீரும். தொழிலாளருக்கு இடுக்கண் செய்து அவர்களை ஒற்றுமைப் படுத்தினவர்களையும் சோம்பித் தூங்கியிருந்தவர்களைத் தட்டி அடித்து எழுப்பி உடல், உறுப்பு, உள்ளம் முதலியவை உரம் பெற வேலை செய்யச் செய்தவர் களையும் இந்நன்னாளில் வாழ்த்துவோமாக". ('புரட்சி': 13-5-1934)

அறிஞர் நாயகத்தின் அறிவுரையில் ஆழ்ந்துள்ள கருத்து பாட்டாளிகளிடையே எத்துணை பாதிப்பினை உண்டு பண்ண வல்லது!

"பசிக்கிறவனுக்கு ஆகாரம் தேவை. தாகமெடுக் கிறவனுக்குத்தான் பானம் தேவை. கஷ்டக் கொடுமையில் அகப்பட்டுக் கண்கலங்குகிறவனுக்குத் தான் கஷ்ட நிவாரணம் உடனடியாக வேண்டும். இன்றையத் தொழிலாளர் உலகம் இல்லாமைக்கு இரையாகி நெருப்பில் விழுந்த புழுப்போல் துடிதுடித்துக் கொண்டிருப்பது மனித வர்க்கத்திற்கே மானக்கேடு. தொழிலாளர் கவலைக் கடலிலிருந்து கரையேறுவது அவசியமும் அவசரமுமாகும்.

தேனீக்களும் சிற்றெறும்புகளும் சேர்ந்து வாழ்ந்து, எதிரிகளைத் தோற்கடித்து, சமதர்ம ராஜ்யத்தில் வாழ்ந்து வருகின்றன. மிருகங்களிலும் பறவைகளிலும் பல கூடி வாழ்ந்து வருகின்றன. தொழிலாளிகளும் ஒன்றுபட்டு முதலாளிகளின் கொடுமை களிலிருந்து விடுதலை பெற வேண்டும். சமதர்மிகளே! தொழிலாளர்களே! மே தினத்தைத் தொழிலாளர் ஒற்றுமை நாளாகக் கொண்டாடுங்கள்" - இது 22-4-1934ஆம் நாளிட்ட 'புரட்சி'யில் 'காம்ரேட்' எழுதிய கட்டுரையின் ஒரு பகுதி.

## 'கோஷா' முறை ஒழியவேண்டும்

பெண் விடுதலை என்பது தன்மான இயக்கக் குறிக்கோள்களில் தலையாய ஒன்று. இக் குறிக்கோள் 'புரட்சி' இதழில் கட்டுரைகளாக வடிவம் பெற்றது. 25-3-1934ஆம் நாளிட்ட 'புரட்சி'யில் அப்துல்லா என்பார் எழுதியுள்ள "கோஷா முறை" எனும் கட்டுரை துணிவான கருத்துகளை வழங்கியது.

"இந்திய நவீன கோஷா முறை இஸ்லாம் மதத்தில் இல்லை. இது உண்மையான விஷயமாகும். பூகுத்தறிவு உள்ளவர் இந்த கோஷா முறையை ஒழிக்க ஒப்புக் கொண்டே தீருவர் என்பதில் சந்தேகமில்லை. எவ்வளவு நாளைக்கு நம் பெண்களை மூடத்தனமான பழக்கத்தில் வைத்திருக்கப் போகின்றீர்கள்? நம் இந்திய நாட்டு முஸ்லீம் மாதர்களைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் மனம் வருந்துகிறது. துருக்கி தேசத்தில் கோஷா முறையை ஒழித்துப் பெண் மக்கள் வெளிக்கிளம்பி, கல்வி கற்று, முன்னேற்றம் அடைந்து வருகிறார்கள். இந்தியப் பர்தா முறையினால் சர்மரோக வியாதி உற்பத்தியாகின்றது என்று பெரிய பெரிய டாக்டர்கள் கூறியிருக்கிறார்கள். நமது மாதர்கள் தகுந்த கல்வி அறிவு பெற்று விட்டார்களானால் தாங்களே அனாவசியமான இந்தப் பர்தா முறையை ஒழித்து முன்னேற்றமடைந்து விடுவார்களென்பதில் சந்தேகமில்லை. இனியாவது நம் பெண் குழந்தைகளுக்குத் தகுந்த கல்வி கற்க ஏற்பாடு செய்து நமது மதத்திலிருக்கிற மூடப்பழக்க வழக்கங்களையும் ஆபாசங்களையும் ஒழித்து, சமூகத்தை முன்னுக்குக் கொண்டு வர வழி தேடுவீர்களா?"

## சமதர்ம உலகில் பெண்கள்

"இன்று வேலை செய்யாத பெண்கள் யார்? ஆபீஸ்களிலும் கச்சேரிகளிலும் ஸ்டோர்களிலும் பண்டக சாலைகளிலும் டாக்டர்களிலும் தொழிற்சாலைகளிலும் கலாசாலைகளிலும் கல்லூரிகளிலும் சர்வகால சாலைகளிலும் வித்யாபீடங்களிலும் சமையலறைகளிலும் போஜன சாலைகளிலும் வயல்களிலும் தோட்டம் துரவுகளிலும் – சுருங்கச் சொன்னால் – தனி வாழ்விலும் பொது வாழ்விலும் இன்று பெண்கள் பாடுபட்டுத் தான் வருகிறார்கள். மனித வர்க்கம் முளைத்த நாள் முதலே உழைத்து வருகிறார்கள். ஆண்களுக்கு முன்பே பெண்கள் பாட்டாளிகள். சமுதாய வாழ்வின் பரிணாமத்தில் ஒவ்வொரு காலத்திலும் தொடர்ச்சியாகப் பெண்ணும் தொழிலும் பிரிக்க முடியாதபடி பின்னிப் பிணைக்கப்பட்டிருந்து வருவதைக் காணலாம்.

"சமதர்ம உலகில் பெண்கள்" என்ற தலைப்பில் 29-4-1934ஆம் நாளில் 'புரட்சி'யில் வெளியான ஜெயகேசரி என்பாரின் கட்டுரையில் இடம் பெற்றுள்ள இவ்வரிகள் வாழ்வியலில் பெண்களின் பங்களிப்பு எவ்வளவு பெரியது என்பதைத் தெளிவாக உணர்த்துகின்றன.

## சென்னியம்மாளின் வீரவுரை

'புரட்சி'யின் 6-5-1934ஆம் நாளைய இதழில் பெண்களின் நிலை பற்றி வெளியான உரையொன்றின் ஒரு பகுதியைக் கேளுங்கள்.

*"பெண்களில் வேசி என்ற சொல்லப்படுபவள் கூட ஆண்களைத் தேடிப்போவது அரிது. ஆனால் ஆணோ பெண்டாட்டி இருக்கையில் பின்னும் இச்சிக்கிறான். மனைவி இறந்து போனால் வேறொரு பெண்ணைக் கட்டிக் கொள்ளுகிறான். அதுவும் போதாதென்றால் இன்னும் சிலரை மணக்கிறான்! அதுவும் போதாதென்று மலந்தேடியலையும் பன்றிகளைப் போல, குச்சுக்காரிகள் தெருவெல்லாம் சுற்றிச் சுற்றி அலைகிறான்.*

*இப்படியிருந்தும் 'சட்டகர்த்தாவாகிய மனு' பிர்மா பெண்களை விபசார தோஷத்தோடேயே பிறப்பித்தார் என்று திருவாய் மலர்ந்தருளுகிறார்.*

*குடத்திலும் குதிரையிலும் மீனிலும் தூணிலும் செடியிலும் கொடியிலும் பிள்ளைகளைப் பெற்றிருக்கும் ஆண்கள் பெண்களை விபசாரிகளென்பது அயோக்கியத்தனமல்லவா?*

*உலகப் போக்கைக் கண்டு, பெண்ணுரிமைப் போராட்டத்தை யுணர்ந்து, பெண்களும் மனிதர்கள்தாம் என்றும் அவர்களைச் சுதந்தரப் போரில் விட்டு விடுங்கள். இன்றேல் அயலாரைச் சுதந்தர வீரர்கள் எதிர்ப்பது பேலவும் மதக்கொடுமையைச் சுயமரியாதை வீரர்கள் எதிர்ப்பது போலவும் ஆண்களைப் பெண்கள் எதிர்க்கும் காலம் வந்து விடும்!"*

உரத்த முறையில் உரிமைக்குரல் இவ்வாறு எழுப்பியவர் சென்னியம்மாள் என்னும் செல்வி! பெரியாரின் தன்மான இயக்கத்தின் தாக்கம் எந்த அளவிற்கு நாட்டில் விளைந்திருந்தது என்பதைக் காட்டும் அளவுகோல் சென்னியம்மாளின் செம்மாப்புரை.

## ஆண், பெண் பேதத்தன்மை குறைய வழி

இனி, நம் இயக்க மகளிர் முன்னோடிகளில் ஒருவரான வீராங்கனை நீலாவதியவர்களின் வழக்குரைப்பினைக் கேட்போம்.

*"ஆண்கள் செய்யும் எல்லாத் தொழில்களையும் பெண்கள் செய்ய முடியாது என்ற வாதத்தைப் பற்றிப் பேசுவோம். முன்னேற்ற மடைந்த நாடுகள் என்ற எண்ணிக்கையில் சேர்க்கப்பட்ட நாடுகளிலெல்லாம் எல்லாத் தொழிலும் ஆண், பெண் இருபாலரும் கலந்தே வேலை செய்து வருகின்றார்கள்.*

*நமது நாட்டிலும் அந்த நிலை ஓரளவு இல்லாமலில்லை. ஆலைகளிலும் ஆஸ்பத்திரிகளிலும் வயல்களிலும் ஆண் பெண் இருபாலரும் கலந்து வேலை செய்து வருவதைப் பார்க்கிறோம். தையல், நெசவு, வீடு கட்டுதல், சிறு கடைகள் வைத்து வியாபாரம் செய்தல் ஆகிய தொழில்களில் பெண்கள் ஈடுபட்டிருக்கின்றார்கள். கல்வி முறையிலும் தற்காலத்தில் பெண்கள் படித்து, டாக்டர்களாகவும் ஆசிரியர்களாகவும் பத்திரிகை நடத்துவோர்களாகவும் இன்னும் இதுமாதிரி பல தொழில்களில் கலந்து வேலை செய்து வருவது கண் கூடு. இந்நிலை மேலும் விருத்தியடைய வேண்டுமென்பதே சமதர்மிகளின் பேரவாவாகும்.*

*தொழில் தன்மையில் பெண்கள் சகலவற்றிலும் சரிசமமாகக் கலந்து வேலை செய்யத் தொடங்கி விட்டால், அப்புறம் ஆண் உயர்வு, பெண் தாழ்வு என்னும் பேதத்தன்மை குறைய ஆரம்பித்து விடும். இதை உத்தேசித்தே ஜெர்மனியில் ஹிட்லர், லட்சக்கணக்கான பெண்களைத் தொழில் புரிவதினின்றும் தடுத்து, வீட்டுக்கு அனுப்பி, 'வீட்டோடு பெண்கள் சரி, வெளியில் ஏறெடுத்தும் பார்க்காதீர்கள்' என்று அடக்கி, ஆண்கள் ஆதிக்கத்திற்கு விதை போட்டு வளர்த்து வருகிறார்! ('புரட்சி': 29-4-1934)*

நீலாவதியாரின் நீண்ட கட்டுரையின் ஒரு பகுதியே இது. அறுபத்தாறு ஆண்டுகட்கு முன்பே நம் பெண்கள் இப்படியெல்லாம் கருத்து வெளியிட முடிந்ததென்றால் தன்மான இயக்கத்தின் பயன் அது.

## பெண் போலீசு வேண்டும்

22-4-1934ஆம் நாளிட்ட 'புரட்சி' வெளியிட்ட துணிவான கருத்தொன்றைக் காணுவோம்.

*"நேற்று ஈரோட்டில் விபசார விடுதி வைத்து நடத்தியதற்காக வீரம்மாளுக்கு ஒரு வருஷத் தண்டனை டிப்டி கலெக்டர் விதித்தார். பெண்களுக்குப் பொருளாதாரச் சுயேச்சையில்லாமையும் குடும்பத்தில் சமத்துவமின்மையுமே பெண்களில் சிலரை இந்நிலைக்கு ஆளாக்கியிருக்கிற தென்பதை யாரும் மறுக்கவே முடியாது. விபசாரத்தில் ஈடுபட்டுள்ள பெண்களுக்குத் தக்க தொழில் முறையைக் கற்றுக் கொடுத்து விட்டால் அவர்கள் ஒருக்காலும் இன்றைய விபசாரத்தில் ஈடுபடமாட்டார்கள்*

என்பது உறுதி. ஆகவே விபசாரப் பெண்களுக்கு அவர்களுடைய வயிற்றுப் பாட்டுக்குத் தக்கது செய்ய முன் வர வேண்டும்.

டிப்டி கலெக்டர் அவர்கள் மேற்படி கேசில் 1 வருஷ தண்டனை விதித்தது மிகவும் கடுமை என்பதே நமது வாதம். முதல் தடவையாக நன்கு எச்சரித்து விட்டு அனுப்பியிருக்கலாம். அல்லது மிகச் சிறிய தண்டனையைக் கொடுத்திருக்கலாம். மற்றும் ஒரு விஷயத்தை டிப்டி கலெக்டருக்குத் தெரிவிக்க ஆசைப்படுகிறோம். அதாவது விபசாரத்தை ஒழிக்க ஆண் போலீசைவிட, இந்நிலையில் பெண் போலீசே சிறந்ததென்ற ஓர் முடிவிற்கு வந்து பல முற்போக்கு நாடுகள் பெண்களை நியமித்திருக்கின்றன. பெண்களின் பல வழக்குகளில் ஆண் போலீசார் சரியாக நடந்து கொள்ள வில்லை என்பதே மெக்ஸிகோ, பிரான்ஸ், சைனா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளின் துணிந்த முடிவு. குற்றத்திற்கு ஆளான வாலிபப் பெண்களை ஆண் போலீசார் தக்கவாறு நடத்த இயலுமா? அன்றி பெண் போலீசாரால் சாலுமா என்பதைக் கலெக்டர் தீர ஆலோசனை செய்து பார்க்கட்டும்.

இன்றைய இந்தியச் சீர்கேடான அமைப்பிலும் பெண்களின் வறுமைத் தன்மையிலும் சிறிது கவனம் செலுத்தி இனி டிப்டி கலெக்டர் தக்கவாறு நடத்தை எடுத்துக் கொள்வார் என்ற துணிவில் இத்தோடு முடிக்கின்றோம்".

பெரியார் எதற்காக இதழ் நடத்த விரும்பினார் என்பதைத் துல்லியமாகப் புரிந்து கொள்ள முடிகிறதன்றோ?

## பரோடா மன்னரின் புதிய சட்டம்

அக்காலத்திய பரோடா மன்னரின் தனியாட்சியில் மகளிர் முன்னேற்றம் கருதிச் செய்யப்பட்ட ஓர் அரிய சட்டம் பற்றிய செய்தியைப் 'புரட்சி'யின் 4-2-1934ஆம் நாளிட்ட இதழ் நமக்குத் தருகிறது.

"பரோடா சமஸ்தானத்திலுள்ள இந்துப் பெண்களின் உரிமைகளைப் பாதுகாப்பதற்காக இந்து சமுதாயச் சட்டத்தைப் பின் வருமாறு திருத்திப் புதிய சட்டம் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். புதிய சட்டப்படி ஓர் இந்துப் பொதுக் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் இறந்து போனால் அவருடைய விதவை குடும்பத்தில் ஒரு பங்காளியாகி விடுகிறார். விதவைகளின் முந்தின நிலைமையில் இந்தச் சட்டம் ஒரு பெரிய மாறுதலை உண்டு பண்ணிவிட்டிருக்கிறது.

முந்தியெல்லாம் ஒரு விதவைக்குப் புருஷன் குடும்பத்திலே சோறும் உடையும்தான் கிடைக்கும். இந்தச் சட்டப்படி ஒரு விதவை தன் புருஷன் குடும்பத்தில் மற்ற நபர்களைப் போல் ஒரு சம பங்காளி ஆகிவிடுகிறார். இந்தப் புதிய சட்டத்தினால் மகன் பேரன் முதலியவர்களைப் போலவே விதவையான பெண்ணுக்கும் சமபங்கு கிடைக்க உரிமை ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. விதவையான ஒரு மருமகளுக்கு மாமியாருக்கு அடுத்தபடியான அந்தஸ்து ஏற்படுகிறது.

முந்தின சட்டப்படி பெண்கள் தங்களுக்குக் கிடைக்கிற சொத்துக்களை அனுபவிக்க மாத்திரம் செய்யலாம்; விற்பனை செய்ய முடியாது. இப்போது பெண்கள் தங்கள் சொத்துக்களை விற்பனை செய்யவோ அல்லது வேறு விதமாக விநியோகிக்கவோ புதிய சட்டம் பூரண உரிமை அளிக்கிறது".

இந்தப் புரட்சியான செய்தியினைத் தந்தது மட்டுமின்றி, பெரியாரின் 'புரட்சி' இதழ், "இந்தப் புதிய சட்டத்தினால் பரோடா நாட்டுப் பெண்களுக்கு அதிக உரிமைகளும் பாதுகாப்புகளும் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன" என்று பாராட்டி "இவ்விதமே பிரிட்டிஷ் இந்தியாவிலும் மற்ற சமஸ்தானங்களிலும் இந்தச் சட்டம் திருத்தப்படுமாயின் பெண்களின் முன்னேற்றத்திற்குப் பெரிதும் அனுகூலமாயிருக்கும்" என்பதாகத் தன் பெயருக்கேற்ற வகையில் கருத்து வெளியிட்டது!

அளவில் சிறிதான இச்செய்தி நமக்குப் பலவற்றை உணர்த்த வல்லது. நிலவுடைமைச் சமுதாய அமைப்பில் ஆட்சி செய்யும் அதிகாரத்தில் இருந்த மன்னர் என்பவர் மக்களாயச் சிந்தனையும் மகளிர் இனத்தின்பால் நல்லுணர்வும் படைத்தவராய் இருக்க முடியும் என்பது; தன்னாட்சி நடத்திக் கொண்டிருந்த சுதேச சமஸ்தான மன்னர்கள் எண்ணற்றோரில் இந்துச் சட்டத்தினைத் திருத்தும் அளவுக்கு மாபெருந்துணிச்சல் வாய்க்கப்பெற்றிருந்தவர் பரோடா மன்னரே என்பது; இந்தியாவைக் கட்டியாண்ட வெள்ளையர் களுக்குப் பரோடா மன்னர் முன்னோடியாகத் திகழ்ந்தார் என்பது; இத்தகைய இந்துச் சட்டத் திருத்தத்தினை வலியுறுத்தியது பெரியாரின் 'புரட்சி' இதழ் என்பது - ஆகிய உண்மைகளை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

### ஒரு மிதியடியின் சுயசரிதை

தோழர் இ. சிவம் என்பவரால் சிறுகதை வடிவத்தில் புனையப்பட்டு, 'புரட்சி'யின் 29-4-1934ஆம் நாளிட்ட இதழில்

வெளியிடப்பட்ட "ஒரு மிதியடியின் சுயசரிதை" என்னும் படைப்பு அருமையான சீரமைப்பு நோக்கங் கொண்ட "அங்கத" (Satire) இலக்கியம் எனலாம்.

'ராமன் அன் கோ' உரிமையாளர் வற்புறுத்தலின் பேரில் வீரராகவபுரம் மிதியடிப் படைப்பாளியின் பதிமூன்று நாள் உழைப்பின் பயனால் உருவான மிதியடியும் அதன் இணையும் கதைத்தலைமைப் பாத்திரமாக இடம் பெற்றுள்ளன. படைப்பாளி தன் கைவண்ணம் முழுமையையும் காட்டியிருந்ததால் 'சுப்பீரியர்க்வாலிட்டி' என்னும் முத்திரையுடன் ஏழரை ரூபாய் விலையிடப் பெற்று, தனது துணையுடன் ஒரு கண்ணாடிக் கூண்டினுள் அடைக்கப்பட்டுக் காட்சிப் பொருளாயிற்று கதைத் தலைமைப் பாத்திரம்.

ஒரு நாள் நாதமூர்த்தி என்ற நாடகக்காரன் இம்மிதியடிகளை வாங்கித் தற்பெருமையோடு அணிந்து கொண்டு 'பந்தா'க் காட்டிக் கொண்டு திரிகையில், முதலியார் என்பவரின் மூன்றாம் தாரமாய் வாய்த்த மங்கையர்க்கரசி என்ற இளம் பருவ மங்கையைச் சந்திக்க நேர்ந்து, அதன் விளைவாய் ஓர் இரவு திருட்டுத் தனமாய் மங்கையர்க்கரசியின் வீட்டிற்குச் சென்று, குடிவெறியில் அவளின் காலில் விழுந்தெழுந்து, வள்ளி திருமண வேடன் போல நடித்து, 'மானே உனக்குண்டோ நிகர்' என உரத்த குரலில் பாடத் தொடங்க, கத்தல் கேட்டு உறங்கிக் கொண்டிருந்த அநவரதக் கிழவரும் அவரின் பணியாட்களும் எழுந்து விரைந்து வர, தப்பியோடிய நடிகன் அந்தப் பரபரப்புச் சூழ்நிலையில் மிதியடியை அறையிலேயே போட்டு விட்டான்.

ஓடிப்போன நாதமூர்த்தி குற்றச்சாட்டிலிருந்து தப்பித்துக் கொள்ள, தான் முந்திக் கொள்ள வேண்டு மென்று திட்டமிட்டு, தன் நாடகக்குழு வேலைக்காரனை விட்டு நடுவர் மன்றத்தில் வழக்குத் தொடுக்க வைத்தான். பணம் கேட்கப் போன இடத்தில் தன்னை முதலியாரும் பணியாளர்களும் அடித்துத் துன்புறுத்தி மிதியடியையும் பிடுங்கிக் கொண்டனர் என்பது வழக்கு.

நெடுங்காலம் நடந்த வழக்கின் இறுதிக்கட்டத்தில் 'சாட்சி'யாய் வைக்கப்பட்டிருந்த மிதியடியினுள் வழக்குத் தொடுத்த நாதமூர்த்தியின் கையாளினுடைய காலை நுழைக்க முடியாமற் போகவே, வழக்கு தள்ளுபடியாக, மக்களுறவு இல்லாமல் ஒரு பெட்டிக்குள் வழக்கின் போதும் வழக்கின் பின்னரும் கிடந்த மிதியடி தன் இணையுடன் மெலிந்து அழகிழந்தது.

ஆறுமாதங்கழித்து நடுவர் மன்ற ஏவலர் அவற்றைத் திருடிப் பயன்படுத்திக் கொண்டிருந்த நிலையில், ஒரு நண்பர் வீட்டு வாயிலில் அவற்றை அவர் கழற்றிப் போட, நாயொன்று அதைத் தலைமைப் பாத்திரம் ஏற்ற மிதியடியைக் கவ்விக் கொண்டு ஓடுகையில் மிதியடி நழுவி இரந்துண்டு வாழும் சாமியாரொருவரின் மார்பின் மேல் விழ, உறக்கத்திலிருந்து விழித்த சாமியார் ஆண்டவனே மிதியடியை அனுப்பிவைத்ததாகக் கருதி, பக்தி மேலிட, அதைத் தன் தலையின் மீதேற்றிக் கூத்தாடினான். பின்பு குறிப்பிட்ட 'நன்னா'ளில் மேளதாளத்துடன் மிதியடியை பசுபதி ஆலயத்திற்கு எடுத்துச் சென்று ஆண்டவனுக்கு, அர்ப்பணித்தான். அங்கு அதைப் புனிதமாகக் கருதினார்கள். கண்களில் அதை ஒற்றிக் கொண்டனர் பலர். சிலர் காலணா அரையணா கொடுத்துச் செருப்படியும் ஏற்றனர்! ஒரு காலத்தில் எந்த ராமன் அன் கோ உரிமையாளர் அம்மிதியடியைச் செய்யச் செய்தாரோ, அதே உரிமையாளர் அதே மிதியடியிடம் ஒன்றரையணாவுக்கு அடி வாங்கிக் கொண்டார் என்பது குறிப்பிடத் தக்கது. இதுவரை மூவாயிரம் இந்துக்கள் மிதியடி வாங்கியிருப்பர்!

இந்தக் கதையை மிதியடி தானே நேரடியாக - தன்மை இடத்தில் இருந்து கொண்டு உரைப்பதாக அழகான சொல்லாட்சி களுடன் புனைந்த எழுத்தாளர் சிவம், "நினைக்க நினைக்க நகைப்பு வருகிறது. நானிருந்த நிலை என்ன? இப்போது தெய்வீகத் தன்மையுடன் இருக்கிறேன்! என் சரித்திரத்தால் இந்து மதத்தின் நிலைமையையும் வைதீக மூடத்தனத்தையும் உணருங்கள்" என்று மிதியடி அறிவுறுத்துவதாக முடித்துள்ளார்.

மடமை யொழிப்புத் திட்டத்தில் இந்த உத்தி எப்படிப்பட்ட பயன் விளைக்கும் நன்முயற்சி! இக்கதை ஆங்கிலத்தில் எழுதப் பட்டிருக்குமானால் சிறந்த அங்கத இலக்கியமாகப் புகழ் பெற்றிருக்கும்.

பெரியார் இதழாளர் என்ற முறையில் இது போன்ற பகுத்தறிவுப் படைப்புகளை நன்கு ஊக்கப் படுத்தினார்.

## இசுலாமியத் தோழர்களின் துணிவு மிக்க கட்டுரைகள்

'புரட்சி' இதழில் வெளியிடப்பட்ட கட்டுரைகளை மேலோட்டமாகப் புரட்டிப் பார்த்தால் கூட, குறிப்பிடத்தக்க பொதுப்போக்கு ஒன்று புலப்படும். இசுலாமியத் தோழர்கள் பலர் சுயமரியாதை இயக்கத்தின் வலுவான வீச்சுகளின் தாக்கத்தால் பாதிக்கப்பட்டு, பல்வேறு தலைப்புகளில் முற்போக்கும் துணிவும்

நிறைந்த தங்களின் கருத்துகளை வெளியிட முன் வந்தனர் என்னும் நிலவரந்தான் அது.

அ.மு. முகமத் காசிமின் **'கர்ப்பத்தடையும் நபிகள் நாயகமும்'** ('புரட்சி'- 24-12-1934), கா. அப்துல் ஹமீதுவின் **'உண்மை சமத்துவம் எது?'** ('புரட்சி' - 31-12-1933), காதரின் **'மதக்கொடுமை'**, (7-1-1934), கொழும்பு டி.எம். இப்றாஹிமின் **'மதவெறியால் சீரழியும் மனித சமூகம்'** ('புரட்சி'- 14-1-1934), அலி அக்பரின் **'கடவுளும் மதவாதிகளும்'** ('புரட்சி'-14-1-1934), சு.பா.கு. மொஹிய்யதீனின் **'இஸ்லாமும் ஏழை முஸ்லீம்களின் துயரமும்'** ('புரட்சி'-4-2-1934), கொழும்பு ஏ.எல். முகமத்தமீமின் **'மனித சமூக ஒற்றுமைக்கு மதம் முட்டுக்கட்டை'** ('புரட்சி'-11-2-1934), எஸ். சையது அஹமதுவின் **'ரூஸோவின் சரிதம்'** ('புரட்சி'-18-2-1934), அ. இ. ரஹ்மானின் **'இஸ்லாமும் சமதர்மமும்'** ('புரட்சி'-4-3-1934), எஸ். சையது அஹமதுவின் **'நாஸ்திக நாட்டு ஒழுக்கம்'** ('புரட்சி'-18-3-1934), கொழும்பு எம் இப்றாஹிமின் **'கொலை, களவு, விபசாரம் தற்கொலை நிகழ்வதேன்?'** ('புரட்சி'-1-4-1930), கொழும்பு எம். கே.எம். காதரின், **'சமதர்ம உலகைக் காண யுவர்காள் வம்மின்'** ('புரட்சி'-8-4-1924), அதே கட்டுரையாளரின் **'சமதர்மத்திற்குப் பெண்கள் விடுதலை அவசியம்'** ('புரட்சி' - 15-4-1934), கொழும்பு டி.எம். இப்றாஹிமின் **'கடவுளும் பகுத்தறிவும்'** ('புரட்சி'-22-4-1934), கொழும்பு ஏ.எல். முகமது தமீமின் **'மதம் மதம் இஸ்லாம் மதம்'** ('புரட்சி'-13-5-1934), கே. அப்துல் ஜப்பாரின் **'மனிதனின் பெருமையும் வறுமையும்'** ('புரட்சி'-13-5-1934), டி.எம். இப்றாஹிமின் **'கடவுளும் பகுத்தறிவும்'** ('புரட்சி'-17-6-1934) ஆகிய சிந்தனைக்கு விருந்தாய் அமைந்த பொருட் செறிவான கட்டுரைகளும் முஹமத் தமீமின் **'புரட்சியின் மூலமே இரட்சிப்பு'** ('புரட்சி'-20-5-1934), டி. அப்துல் சுபஹானின் **'நாகம்மாள் பாட்டு'** போன்ற தாக்கம் கூட்டும் பாக்களும் அக்காலக்கட்டத்தின் மக்களாயத் தட்ப வெப்ப நிலைகள் பற்றி நமக்கு நிறைய உணர்த்துகின்றன. அக்கால இஸ்லாமானவர்கள் தன்மான இயக்கத்துடன் உறவாடி தங்களை இனங்காட்டிக் கொள்ள உந்தார்வம் கொண்டிருந்த நடப்புண்மை ஆய்வுக்குரியதொரு பொருளாகும்.

மேற்குறித்த கட்டுரைகள் எந்த அளவுக்குப் பகுத்தறிவுத் தன்மை படைத்தவை என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு.

> "இப்பிரபஞ்சம் மனிதனுக்கடிமை. கிராமபோன் போன்ற இன்னிசைக் கருவிகளென்ன! ஓடும் ரயில், மோட்டார், டிராம் போன்ற இயந்திர வாகனங்களென்ன! டெலிபோன்,

கம்பியில்லாத் தந்தி முதலியவைகளென்ன! கடல் கடந்து செல்லும் கப்பல்களென்ன! ஆகாய மண்டலத்தில் சஞ்சரிக்கும் விமானங்களென்ன! மின்னி மறையும் மின்சாரங்களென்ன! ஒலி பரப்பும் கருவிகளென்ன! இப்பேர்க்கொத்த அபூர்வ, ஆச்சரிய செய்கைகளுக்குக் காரணகர்த்தா மனிதனே என்பது வெள்ளிடைமலை.

இம்மட்டோ! இறப்பு-நிகழ்-எதிர் ஆகிய திரிகாலங்களையும் உணரக் கூடிய தீர்க்கதரிசியும் மனிதனே. இந்நிலவுலகத்தின் சகல சொத்துக்களும் மனிதனுக்கே உரியதாகும். நீல நிற வானத்திலே மேகமண்டலங்களை, உண்டாக்கி மழைபொழியச் செய்யும் சக்தி பொருந்தியவன் மனிதனே! உலகத்திலுள்ள மனிதனுக்கு அடங்கியிருக்க, அவற்றை மனிதன் தன் இஷ்டப்படி தனது அறிவுக்கேற்பக் கையாளுதல் விந்தையோ?

இத்தகைய பெருமைவாய்ந்த, இவ்வாறு மேன்மை பொருந்திய அபார அறிவுப் பொக்கிஷம் வாய்ந்த அரும் பெருஞ் செயல்களைத் தன்னுள்ளே அடக்கியுள்ள மனிதனைப் 'புலால் பொழியுடல்' என்றும், மனிதன் வீண் படைப்பே என்றும் துன்பக் கூடு என்றும் இகழ்ந்துரைப்பின் அக்கூற்று இயற்கை இலட்சியத்திற்குச் சற்றும் பொருந்தாது".

எப்படிப்பட்ட வலுவான வழக்காடல் இது!

## இரங்கற் பாடலுக்குத் தடங்கல்

இனி, 'நாகம்மாள் பாட்டு' என்பது பற்றிய செய்தியைத் தெரிந்து கொள்ளுவோம்.

'தோழர் ஈ.வெ.ரா. நாகம்மாள் அவர்கள் காலஞ்சென்றது குறித்துத் தோழர் டி. அப்துல் சுபஹானால் ஒரு அநுதாபப்பாடல் பாடப் பெற்று வெளியிடப்பட்டது. அதன் காரணமாக இவ்வூரில் (சுங்கப்பட்டாணி) சில கத்தோலிக்க - முஸ்லிம்கட்கு விரோத உணர்ச்சி ஏற்பட்டு, போலீஸ் கமிஷனரிடம் விண்ணப்பித்துக் கொண்டதன் பேரில், கமிஷனர் தோழர் சுபஹானை அழைத்து, அப்பாடலில் துவேஷமாயுள்ள வாக்கியங்கள் அடங்கியிருப்பதாகவும், அதனால் பொது ஜனங்கள் பரபரப்படைந்ததாகவும் சொல்லி, மேற்படி பாடலின் பிரதிகளை வாங்கி மேலதிகாரிகளுக்குத் தெரிவித்துத் தருவதாகச் சொன்னார். ஆனால் மேற்படி பிரதிகளைத் தடங்கல் செய்தது

நியாயமல்ல வென்றும் எவ்வித ஆட்சேபகரமான குறிப்பு அப்பாடலில் இல்லை என்பதாகவும் தோழர் சுபஹான் கெட்டா கவர்ன்மெண்ட் லீகல் அட்வைஸர் போலீஸ் கமிஷனர் முதலியோர்கட்கு விண்ணப்பம் செய்து கொண்டதன் குறிப்புகள் வருமாறு.

"பிரஸ்தாபப் பாடல் எனது சுயமுயற்சியின் பேரில் எழுதப் பட்டதாகும். அப்பாடலைப் பொதுமக்கள் பார்க்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டதற்கிணங்க, சுமார் 500 பிரதிகள் அச்சிட்டேன். ஒரு மாபெருந் தலைவரின் மனைவியார் காலஞ் சென்றதைக் குறித்துப் பாடப்பட்ட அநுதாபப் பாடலே யாகும். ஈ.வெ.ராமசாமிப் பெரியாரைப் பற்றி நான் அறிந்திருக்கிறேன். அன்னாரின் முக்கிய கொள்கை என்ன வெனில், உலக மக்கள் யாவரும் சமூக-பொருளாதார வாழ்க்கையில் சமத்துவமாய் இருக்க வேண்டும் என்பதே. இவ்வியக்கம் ஏழெட்டு வருடங்களாக இந்தியாவிலும் தமிழர்கள் குடியேறியுள்ள நாடுகளிலும் பலத்த பிரசாரம் செய்யப்பட்டு வருகிறது. அரசாங்கத்தார் எனது பிரதிகளை வாபஸ் செய்ய வேண்டியதுடன் இனிமேலும் இவ்வித முரண்பாடுகள் நடக்காதிருக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

எத்தகைய சுவையான செய்தி பார்த்தீர்களா? இரங்கற் பாடலையே பரவ விடாமல் பறிமுதல் செய்திருக்கிறார்கள்! ஆனால் இன்றைக்கு நாடாளும் அரசே நாகம்மையார் பெயரால் திட்டங்கள் அறிவிக்கும் அளவிற்கு, அவரின் புகழ் நிலைத்து நிற்பதைக் காண்கின்றோம்.

## 'புரட்சி'யில் ஆதிதிராவிடர் தொடர்பான செய்திகளும் கட்டுரைகளும்

அண்ணல் அம்பேத்கார் அவர்களாலேயே வியந்து போற்றப்படும் அளவிற்கு ஒடுக்கப்பட்ட தீண்டத்தகாதோர் என்று ஒதுக்கப்பட்ட - இந்நாட்டுக்கு உடைமையாளரான - முதற்குடிமக்களாகிய - ஆதி திராவிட மக்களுக்காக உலகோர் முன் உரத்த குரலில் வழக்குரைத்தவர் தந்தை பெரியார். அவர்தம் இயக்கத்தின் அடிப்படையான முதற்கொள்கையே சாதி முறையை ஒழிப்பது தான்.

எனவே அவர் நிறுவிய 'புரட்சி' இதழில் ஆதி திராவிடர் தொடர்பான செய்திகளும் கட்டுரைகளும் முதன்மை பெற்றன.

ஆதி திராவிட வாலிபர் சங்கம் (7-1-34); ஆதி திராவிட நாஸ்திக வாலிபர் சங்கம் (14-1-34); ஆதி திராவிட மகாஜன சபை (21-1-34); தாழ்த்தப்பட்ட மக்களுக்கோர் எச்சரிக்கை (21-1-34); ஆதி திராவிட பகுத்தறிவு வாலிபர் சங்கம் (28-1-34); மலாக்கா ஆதி திராவிட சங்கம் (28-1-34); திருவண்ணாமலை ஆதி திராவிட வாலிப சங்கம் (28-1-34); ஏமப்பள்ளி ஆதி திராவிட இளைஞர் சங்கம் (4-2-34); புத்தூர் ஆதி திராவிட பெற்றோர்கள் சங்கம் (4-2-34); சேலம் ஜில்லா ஹரிஜனக் கமிட்டிக் கூட்டம் (18-3-34); தாழ்த்தப்பட்ட மக்கள் விடுதலை அடைவது எப்போது? (25-3-34); ஆதி திராவிடர் தொண்டர் படை மகாநாடு (1-4-34); பரிதாபத்துக்குரிய பஞ்சமர்கள் (1-4-34); ஆதி திராவிடருக்கு உத்தியோகம் வழங்கும் நீதி (8-4-34); ஹரிஜன சேவா சங்கம் (15-4-34); ஆதி திராவிடத் தோழர் முத்து (22-4-34); ஆதி திராவிட மகாநாடு (27-5-34) ஆகிய தலைப்புகள் 'புரட்சி'யின் முனைப்பான நோக்கையும் போக்கையும் உணர்த்த வல்லவை அவற்றில் இடம் பெற்ற எழுத்துகள் எத்தன்மை வாய்ந்தவை? ஒரு சோற்றுப் பதமாக ஓர் எடுத்துக்காட்டு.

> **"தாழ்த்தப்பட்ட மக்களின் விடுதலை, முன்னேற்றம், சுதந்திரம் என்னும் சொற்கள் ஒரு புறம் முழங்குகின்றன. மறுபுறும் அடி, உதை, மிரட்டு, துரத்து என்னும் சொற்கள் 'படீர் திடீர்' என்று வெடிக்கின்றன. இக்கோர வெடிகளை அல்லும் பகலும் அறுபது நாழிகையும் கேட்டு அவதிப்பட்டுக் கிடக்கும் மக்களுக்கு, பசியும்பட்டினியுமாகக் கிடக்கும் மக்களுக்கு, கிட்ட வராதே, தொடாதே, என்று சொல்லப்படும் மக்களுக்கு, வருஷம் முந்நூற்று அறுபத்தைந்து நாட்களும் பண்ணைகளில் பெண்டு பிள்ளைகளுடன் குடும்ப சகிதமாய் வெட்டி வேலை செய்து, ஊற்றுகிற கஞ்சியைக் குடித்து, கொடுக்கிற மானியத்தைப் பெற்று, நாம் என்ன செய்வது? எல்லாம் நம் தலைவிதி' என்று மெல்லச் சொல்லி ஆறுதலடையும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு விடுதலை என்பது எக்காலம்?" ('புரட்சி': 25-3-1934).**

ஈங்குர் மனுவேல் என்பவர் தாழ்த்தப்பட்ட மக்கள் விடுதலையடைவது எப்போது? என்ற தலைப்பில் குமுறி குமுறி வெளியிட்ட கருத்துகளில் ஒரு பகுதியே இது.

ஆதி திராவிடப் பெருங்குடியின் அவலத்தை உலகிற்கு உணர்த்துகின்ற தொண்டினைப் 'புரட்சி' இவ்வாறு புரிந்தது.

'புரட்சி'யில் வெளியான நினைவிற் கொள்ளத்தக்க கருத்துரைகளும் செய்திகளும் இன்னும் எத்தனையோ உண்டு. அவற்றுள் சிலவற்றை இங்கு குறிக்கலாம்.

'மணிக்கொடி' தலையங்கம்

தமிழ்மொழி இதழியல் வரலாற்றில் 'மணிக்கொடி' இதழுக்குக் குறிப்பிடத்தக்கதோர் இடமுண்டு. ஆனால் பெரியாரின் சுயமரியாதைக் கொள்கைகள் அத்தனையும் ஏற்றுக் கொண்ட இதழ் அன்று அது.

எனினும், 20-12-33 அன்று 'ராஜநிந்தனை'க் குற்றத்திற்காகவெனத் தளை செய்யப்பட்டு 24-1-34 அன்று ஆறுமாதச் சிறைத் தண்டனை ஏற்ற பெரியார் பற்றி 'மணிக்கொடி'யின் 1934 ஃபெப்ருவரி இதழில் இடம் பெற்ற ஆசிரியவுரை இதோ.

> "ராஜத் துவேஷத்திற்காகக் குற்றம் சாட்டப்பட்டு ஸ்ரீராமசாமி நாயக்கர் ஆறுமாதம் வெறுங்காவல்தண்டனை அடைந்திருக்கிறார். அவர்தங்கை ஸ்ரீமதி கண்ணம்மாளுக்கு, 'குடிஅரசை' அச்சிட்டவர் என்னும் முறையில், மூன்று மாதம் காவல். இருவருக்கும் 300, 300 ரூபாய் அபராதம். நாயக்கர் எதிர் வழக்காடவில்லை. தாம் கொடுத்த வாக்கு மூலத்தில் தமது மனோநிலையையும் லட்சியத்தையும் திடமாக வற்புறுத்தினார். கோரியுள்ள லட்சியத்தை மக்களிடம் பரப்ப வேண்டுமானால் சர்க்காரோடு போராட்டம் ஏற்பட்டுத்தான் தீரும். இத்தகைய போராட்டத்தில் ஈடுபடுவர்களை, சர்க்கார் தங்கள் சட்டத்தின் மஹிமையைக் காப்பாற்றுவதற்காகத் தண்டிக்க வேண்டி வரும். சுதந்திரத்திற்காகப் போராடும் நாடுகளில் இத்தகைய நிகழ்ச்சிகள் சகஜம்.
>
> ஒரு லட்சிய இயக்கம் வலுவடைவது இத்தகைய எதிர்ப்பினால்தான். இதில் ஒன்று கவனிக்க வேண்டியது 'குற்றம்' என்று சர்க்கார் சொன்னதற்குப் பொறுப்பை ஏற்றுக் கொண்டு நாயக்கர் தண்டனையை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டனர். தைரியமும் தீவிர உணர்ச்சியும் கொழுந்துவிட்டெரியும் லட்சியமும் கொண்ட ஜனத் தலைவரைத் தண்டிப்பதில் சர்க்கார் அதிகாரிகளுக்கு மகிழ்ச்சி இருக்குமா?
>
> இந்த விசாரணையாலும் தீர்ப்பினாலும் சர்க்கார் கட்சி வலுத்திருக்கிறதா? நாயக்கர் லட்சியம் வலுத்திருக்கிறதா? ஓயாத உழைப்பினால் உடல் தளர்ந்திருக்கும் நாயக்கருக்கு இந்த எதிர்பாராத முறையில் கிடைத்திருக்கும் ஓய்வு பயனளிக்கும். நாயக்கரை ஜெயிலில் அடைத்து, அவருடைய லட்சியங்களைக்

கிள்ளி எறிந்து விடலாம் என்று சர்க்கார் நினைப்பார்களானால் அவர்கள் தப்பிதம் அவர்களுக்கே சீக்கிரத்தில் தெரியும்".

'மணிக்கொடி தலையங்கம்' என்று 'புரட்சி'யின் 4-2-1934ஆம் இதழில் இது வெளியிடப்பட்டிருக்கிறது. 'மணிக்கொடி'யின் ஆசிரியவுரை நயமான அறைகூவல் அன்றோ?

## கண்டிப்புடன் வழிகாட்டுதல்

வைனாகரம் சு. சண்முகம் சேரன்மாதேவி குருகுலப் போராட்டக் காலத்திலும் தன்மதிப்பியக்க அடிநாள்களிலும் பெரியாருக்கு அருந்துணையாக நின்ற சான்றோர் ஆவார். அவரைப் பற்றிச் சிங்கப்பூர் 'தமிழவேள்' கோ. சாரங்கபாணியவர்களால் 6-5-1934ஆம் நாளிட்ட 'புரட்சி' இதழில் எழுதப்பட்ட கட்டுரையொன்றில் இப்படி வருகிறது.

"சுயமரியாதை இயக்கம் தோன்றிய நாள் தொட்டு நாளது வரை அவ்வியக்கத்தின் நிர்வாக அங்கத்தினராய் இருந்து வை.சு. அவர்கள் அவ்வியக்கத்தில் ஆங்காங்கு நிகழும் குறைகளைக் கண்டித்துத் திருத்துவதில் முன் நிற்பவர்கள். உதாரணமாக, சுயமரியாதை இயக்கத்தில் ஈடுபட்டவர்களைக் குறை கூறி நிந்திப்பதையே குறியாகக் கொண்டவர்கள், 'சூனாமானாக் காரர்கள்' என்று அவர்களைக் குறிப்பிட்டுப் பேசுவதையும் எழுதுவதையும் வழக்கமாகக் கொண்டபோது, அதற்குப் பதிலளிக்கும் வகையில் அவர்களைப் 'பூனாமானாக்காரர்கள்' என்று சுயமரியாதைக் காரர்கள் எழுதவும் பேசவும் வேண்டுமென ஆசைப்பட்டதைத் தோழர் வை.சு. அவர்கள் கண்டித்த சந்தர்ப்பங்கள் உண்டு. ஜாதி மதப் பேதக் கொடுமைகளை ஒழிக்க முன்னிற்கும் சுயமரியாதை இயக்கத்தினர்கள் பகைமையை வளர்க்கும் வசனங்களையும் சொற்களையும் உபயோகிக்கக் கூடாதென விளக்கிக் காட்டிய வை.சு. அவர்களை யாரும் எளிதில் மறந்து விட முடியாது".

இச்செய்திகளால் அக்காலத் தன்மான இயக்க முன்னோடிகள் வலியுறுத்த வேண்டிய செய்கைகளில் கண்டிப்புக் காட்டி வழிகாட்டினார்கள் என்பது நமக்கு நன்றாகப் படுகிறது.

## சிறப்பு நிகழ்ச்சிகள்

'புரட்சி'யில் வெளியிடப்பட்ட செய்தித் துண்டங்களால் அரிய - சுவையான - சிறப்பு நிகழ்ச்சிகளைப் பற்றி நாம் அறிந்து கொள்ள முடிகிறது.

## குழந்தைப் பிறப்பு

"கொழும்பில் முதன்முதலாகச் சுயமரியாதைத் திருமணம் செய்து கொண்டவர்களான குஞ்சிதம் - சிதம்பரம் தம்பதிகளுக்கு ஓர் ஆண் மகவு பிறந்து, கடந்த 8-4-34 அன்று தோழர் ஏ.எம். துரைசாமி அவர்களால் சீர்திருத்த முறைப்படி ஸ்டாலின் நவரட்ணம் என்ற பெயர் இடப்பட்டது. திரளாகச் சுயமரியாதைத் தோழர்கள் பிரசன்னமாகியிருந்தார்கள். சுயமரியாதைச் சங்கீதக் கச்சேரியும் நடைபெற்றது." ('புரட்சி' 29-4-1934)

## திருமணம்

"1934ஆம் வருடம் மே மாதம் 13ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை காலை 10 மணிக்கு சுமத்ரா - டோனில் அமைந்துள்ள பக்கியூன் என்னும் தோட்டத்தில் உத்தியோகத்திலிருக்கும் தோழர் பா. சு. கண்ணன் அவர்களின் புதல்வியாகிய கன்னி மாரிமுத்து அவர்கட்கும் மிடான் தோழர் பி. கண்ணப்பன் என்ற வாலிபருக்கும் மேற்படி தோட்டத்திலேயே திருமணம் நடைபெற்றது." ('புரட்சி': 10-6-1934).

இவ்விரு செய்திகளும் சுயமரியாதைத் திருமணங்கள் கடல் கடந்து பிழைக்கச் சென்ற தமிழர்களாலும் நடத்தப் பெற்றன என்பதைத் தெரிவிப்பவை.

## எதிரிகள்

"இதுவரை நமது நாட்டில் வெள்ளைக்காரர்களுக்கு இந்நாட்டில் என்ன வேலை, அவர்களுக்கு ஏன் ஆயிரக்கணக்கான ரூபாய் சம்பளம், கறுப்பு மனிதனுக்கு ஏன் நூற்றுக்கணக்கான, பத்துக்கணக்கான ரூபாய்கள் சம்பளம், அவர்களுக்கு ஏன் பெரிய அதிகாரம், நமக்கு ஏன் சின்ன அதிகாரம் - என்பன போன்ற பிரச்சினைகளே தேசியம் என்னும் பெயரால் முக்கியமாக இருந்து வந்தன. இதன் பயனாய் அரசாங்கத்தார்களும் இங்குள்ள பணக்காரர், படித்தவர், மேல் சாதிக்காரர் ஆகிய ஒரு சிறு கூட்டத்தார்க்கு மாத்திரம் ஏதாவது வாய்பூசி, மக்களின் 'தேசிய அபிலாஷைகளைத் திருப்தி செய்து வந்து கொண்டும் இருந்ததால் பாமர மக்களின் எண்ணம், உணர்ச்சி, ஊக்கம் எல்லாம் அதிலேயே ஈடுபட்டுக் கிடந்தன. ஆனால், இப்பொழுதோ நாட்டில் வரவர அந்த எண்ணங்கள் மறையத் தொடங்கிவிட்டன. அவை வேறு விதமாய்ப் பரிணமிக்க ஆரம்பித்து விட்டன.

*எப்படியென்றால், வெள்ளையனுக்கு ஏன் 1000, 5000 ரூபாய் சம்பளங்கள்? கறுப்பனுக்கு ஏன் 100, 50, 10, 5 ரூபாய் வீதம் சம்பளம்? என்பது போய் - மனித சமூகத்தில் யாராயிருந்தாலும் ஒருவனுக்கு ஏன் 5000, 10,000 ரூபாய் சம்பளம்? மற்றவனுக்கு ஏன் 5 ரூபாய், 10 ரூபாய் சம்பளம்? - என்கின்ற உணர்ச்சி தோன்றி, எல்லா மக்களும் சாதி, மதம், தேசம் என்கின்ற பேதமும் பிரிவும் இல்லாமல் சகலரும் சமமாய்ப் பாடுபட வேண்டும், பயனைச் சமமாய் அடைய வேண்டும் என்கிறதான ஒரு சமதர்ம உணர்ச்சியில் திரும்பி விட்டது. இந்த நிலைமையானது ஆட்சிக்காரருக்கு மாத்திரமோ அல்லது அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு மாத்திரமோ விரோதமானதென்றோ, அடக்கி விட வேண்டியதென்றோ தோன்றாமல், நம் நாட்டிலுள்ள எல்லாப் பணக்காரர்களுக்கும் எல்லா மேல் சாதிக்காரர்களுக்கும் படித்தவர்கள் என்கின்ற கூட்டத்திற்கும் தோன்றிவிட்டதுடன், இவர்களால் வாழ்ந்து வந்த மதப்புரோகிதர்கள் என்பவர்களுக்கும் தோன்றிவிட்டது. ஆதலால் இந்தக் கூட்டத்தார்கள் எல்லாருமே அக்கொள்கைக்கு எதிரிகளாய் இருப்பதில் நான் அதிசயப்படவில்லை" ('புரட்சி': 20-5-1934).*

அக்காலத்தில் நாட்டு மக்கள் எத்தகைய மனப்பாதிப்புக்கு இலக்காகியிருந்தார்கள் என்னும் நிலவரத்தை இது படம்பிடித்துக் காட்டுகிறது.

## பெரியார் மீண்டும் மீண்டும் மக்களிடம் தெரிவித்தது

*"நான் ஒரு சுதந்திர மனிதன்; எனக்குச் சுதந்திர நினைப்பு சுதந்திர அனுபவம், சுதந்திர உணர்ச்சி உண்டு. அதை உங்கள் முன் சமர்ப்பிக்கிறேன். நீங்கள் என்னைப் போலவே உங்களது சுதந்திர நினைப்பு, அனுபவம், உணர்ச்சி ஆகியவைகளால் பரிசீலனை செய்து, ஒப்பக்கூடியவைகளை ஒப்பி, தள்ளக் கூடியவைகளைத் தள்ளி விடுங்கள் என்கின்ற நிபந்தனையின் பேரிலேதான் எதையும் தெரிவிக்கிறேன். எப்படிப்பட்ட பழமை விரும்பிகளானாலும் இதற்கு இடம் கொடுக்கவில்லையானால் அது நியாயமும் ஒழுங்கும் ஆகாது" ('புரட்சி': 17-12-1933).*

இதே கருத்தினைப் பெரியார் பல்லாயிரக்கணக்கான தடவைகள் மக்களிடம் தெரிவித்திருக்கிறார். தாம் வாழ்ந்த காலம் முழுவதும் கலந்து. கொண்ட நிகழ்ச்சி ஒவ்வொன்றிலும் பெரும்பாலும் தவறாமல் இதைக் கூறி, ஈடுகாட்ட முடியாத வண்ணம் தனித்தன்மை படைத்த பெருமகனாம் பெரியார்! அறிவு பரப்பும் தொண்டில் உயர்ந்து விளங்கினார்.

## இயக்க நடவடிக்கைகள்

"22-5-34 செவ்வாய்க் கிழமை காலையிலிருந்து குடந்தை நகரத்திலும் சுற்று வட்ட கிராமங்களிலும் யாகக் கண்டன அறிக்கைகள் சுமார் 10000 வரை விநியோகிக்கப்பட்டது. மாலை 6 மணிக்கு காங்கேயம் காந்தி பார்க்கில் பிரமாண்டமானதோர் கூட்டம் கூடியது. பல தோழர்கள் கீதங்கள் பாடிய பின் சி. சாமிநாதன், ஆர். சக்கரவர்த்தியைத் தலைமை வகிக்குமாறு கேட்டுக் கொண்டார்.

தலைவர் தான் நேரில் யாகசாலையில் கண்ட காட்சிகளை வெகு விரிவாகவும் தெளிவாகவும் பேசுகையில் யாகசாலைக்குள் சில மூட வைதிகர்கள் செய்யும் ஆர்ப்பாட்டங்களைப் பற்றியும் ஆட்டைச் சகிக்க முடியாத சித்திரவதை செய்து விதையை எடுத்த காட்சியையும் கண்டித்துப் பேசினார்" ('புரட்சி': 3-6-1934).

"ருஷியாவிலுள்ள பக்டோ ஸ்ராவ்லித்தியா சங்கத்தைச் சேர்ந்த டாக்டர்கள் செயற்கை இருதயம் செய்யும் முறையைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். ஒரு மனிதனுடைய இருதயத்தில் கோளாறுகள் ஏற்பட்டபோது அதனைச் சிகிச்சை செய்வதற்காக வெளியில் எடுத்து விட்டு, அதே சமயத்தில் செயற்கை இருதயத்தை அம்மனிதனின் உடம்பில் வைத்து உயிருடன் இருக்கச் செய்யலாமென அவர்கள் கூறுகிறார்கள்.

அவர்கள் இம்முறையை மிருகங்களிடத்தில் செய்து பார்த்து வெற்றியடைந்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. பிரஸ்தாப டாக்டர்கள் ஒரு நாயின் இருதயத்தை வெளியில் எடுத்து அதனை அனேக இடங்களில் ஆப்ரேஷன் செய்து 17 இடங்களில் தையல் போட்டு மறுபடியும் நாயின் திரேகத்தினுள் வைத்து விட்டார்கள். இதற்கு மத்தியில் செயற்கை இருதயத்தின் மூலமாகவே நாயின் திரேகத்தினுள் இரத்தம் சுற்றி வந்தது".

இன்றைக்கு மிகவும் இயல்பாய்ப் போய்விட்ட இச்செயற்கை நெஞ்சகம் பொருத்தும் பண்டுவம் பற்றிய தொடக்கக்காலச் செய்தி 25-3-1934ஆம் நாளிட்ட 'புரட்சி'யில் காணப்படுகிறது. 'நம்ப முடியாத' செய்தி என்று 14-1-1934 க்குரிய 'புரட்சி'யில் காணக்கிடக்கிறது.

## எஸ்.எஸ். வாஸன் தொடுத்த வழக்கு

"சுதேசமித்திரன் ஆசிரியர் மீது வழக்கு" என்று தலைப்பிடப் பெற்று, பின்வருமாறு செய்தி அமைந்துள்ளது.

"சுதேசமித்திரன் ஆசிரியர் மீது ஆனந்த விகடன் பத்திரிகை ஆசிரியரும் சொந்தக்காரருமான தோழர் எஸ்.எஸ். வாஸன் மான நஷ்ட ஈடு வழக்குத் தொடர்ந்துள்ளார். ஆனந்த விகடனில் வெளியாகும் போட்டிப் பந்தயங்கள் சம்பந்தமாக ஆட்சேபகரமான கட்டுரைகளைப் பிரசுரித்திருந்ததாகவும், எனவே தமக்கு மான ஈடாக 35000 ரூபாய் கொடுக்க வேண்டுமென்று தோழர் வாஸன் வழக்குத் தொடர்ந்திருக்கிறாராம்".

விந்தையான செய்தியல்லவா இது?

## முத்துச்சாமி வல்லரசு

கோவில்பட்டியில் 27-1-1934 அன்று நிகழ்ந்த சுயமரியாதை மாநாட்டின் தலைமையேற்ற முத்துச்சாமி வல்லத்தரசு அவர்கள் தனக்கு அளிக்கப்பட்ட வரவேற்புப் பத்திரம் பற்றி வெளியிட்ட கருத்துரை குறிக்கத் தகுந்ததாகும்.

"எனக்கு வாசித்தளித்த வரவேற்புப் பத்திரத்தில் நான் ராஜ வம்சத்தைச் சேர்ந்தவன் என்று கூறப்பட்டிருக்கிறது. ராஜவம்சம் என்று சொல்லிக்கொள்வது ஓர் இழிவான விஷயமாகும். ஆதலால் இம்மாதிரியான வார்த்தைகளை நாம் புறக்கணிக்க வேண்டும். மனிதனின் உயர்வு தாழ்வு கற்பிப்பதைப் போல் மக்களுக்கு ஏற்படும் அனர்த்தம் வேறு ஒன்று வேண்டாம். இது ஒன்றிருந்தால் அது தானே எல்லாவற்றையும் ஆக்கிக் கொள்ளும். ஆகவே நாம் அம்மாதிரி வித்தியாசங்களைப் போக்க வேண்டும்." ('புரட்சி': 4-2-1934).

அருமையான இதுபோன்ற நற்சிந்தனை தன்மான இயக்கத்தவர்களுக்கு மட்டுமே பெரும்பாலும் தோன்ற முடியும்.

## க.அ. புன்னைமுத்து

அருப்புக்கோட்டையில் 27-5-1934 அன்று நடந்த பகுத்தறிவு நிலையத் திறப்பு விழாவின் போது க.அ. புன்னைமுத்து அவர்கள் ஆற்றிய திறப்புரையின் ஒரு துண்டம்.

"பொய்களால் உலகை ஏமாற்றுவதற்கும், அடிமைப்படுத்தி அதிகாரம் செலுத்துவதற்கும் வஞ்சகர்களாலும் மோசக்காரர் களாலும் அவர்களை நம்பிப் பின்பற்றியவர்களாலும் எழுதப்பட்ட வேத புராணங்கள் சாஸ்திர இதிகாசங்களை யொட்டிய குட்டிக்கதைகள் ஆகிய புத்தகங்களையும், மூடநம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டு வேற்றுமைக்கு

மூலதாரமான குருட்டுப் பக்தியையுடைய வைதீகத்தை நிலைநாட்டவும், ஈரருத்தம், இருவகைக் கருத்து, முன்னுக்குப் பின் முரண், பசப்புதலான போலிப் பதங்கள், விளக்கெண்ணெய் அபிப்பிராயங்கள் முதலிய சத்தற்ற செய்திகளைப் பிரசுரிக்கும் பத்திரிகைகளையும் வைத்து வம்பளந்து காலத்தை வீணாக்காமல், உண்மையாகவே உலக மக்களின் வாழ்க்கையைச் சீர்தூக்கும் இயல்புடைத்தான கல்வி, அறிவு, ஒழுக்கம், விவசாயம், கைத்தொழில், விஞ்ஞானம் முதலிய புஷ்டியுள்ள புஸ்தகங்களையும் மக்களை இடர்ப்படுத்தியுள்ள துன்பக் கொள்கைகளின் வேரை அறுப்பதற்குப் பகுத்தறிவோடும் உறுதியோடுமுள்ள கூர்மையான கருத்துகளையும் அபிப்பிராயங்களையும் பிரசுரிக்கும் பத்திரிகை களையுமே இந்த நிலையத்தில் வைத்திருக்க வேண்டும்."

எப்படி தொடக்கக் கல்வி வரை மட்டுமே படித்திருந்த பகுத்தறிவாளர் புன்னை முத்து அவர்களின் துல்லியமான நேரடியான வலிமையான ஆனால் எளிமையான தெளிவுறுத்தும் உரை வீச்சு.

இவ்வண்ணம் 'புரட்சி'யில் தமிழினம் சிறந்து விளங்குதற்குத் தடையாக வாய்த்து விட்ட பெருநோய்களான சாதிமுறை, கடவுள்-மத-மூடநம்பிக்கைகள், பொருளியல் ஏற்றத் தாழ்வுகள், மொழியியல் அடிமை நிலை, பெண்ணடிமை அவலங்கள், தீண்டாமைக் கொடுமை முதலியவற்றை அழித்தொழிக்கும் முறையில் இதழின் பெயருக்கேற்ப - புரட்சி மணங்கமழும் கருத்துகளை இடம்பெறச் செய்தார் இதழாளர் பெரியார்.

'குடிஅர'சைப் பெரியார் நிறுத்தி வைக்க வேண்டிய அளவிற்கு நெருக்கடிகள் ஏற்பட்ட நிலையிலும், அக் 'குடிஅரசு' ஏட்டில் அவர் எழுதிய ஆட்சி முறை பற்றிய கட்டுரைக்காக வெள்ளையர்களின் சீற்றத்திற்கு இலக்காகிச் சிறைவாழ்வை அவர் ஏற்க நேர்ந்த நிலையிலும், அவர் தோற்றுவித்த 'புரட்சி' இதழில் சமதர்மச் சமுதாயம், பொதுவுடைமை ஆட்சி, தொழிலாளர் மேம்பாடு பற்றிய கருத்துகள் அடங்கிய கட்டுரைகளும் கவிதைகளும் மிகத் துணிச்சலாக நிறைய வெளியிடப்பட்டன. 'குடிஅர'சின் கொள்கைதான் 'புரட்சி'யின் கொள்கை என்பது மெய்ப்பிக்கப்பட்டது.

பெரியாரின் அந்த நிலைப்பாட்டினை ஆங்கிலே முதலாளிய அரசு தாங்கிக் கொண்டு வாளாவிருக்குமா? அடக்கு முறையும் அச்சுறுத்தலும் கட்டவிழ்த்துவிடப்பட்டன.

## 'புரட்சி' இதழுக்கு ஏற்பட்ட தொல்லைகள்

பெரியார் தளை செய்யப்படும் வரை வெளியான 'புரட்சி' இதழ்களில் அதாவது 24-12-1933ஆம் நாளிட்ட 'புரட்சி' வரை அவற்றின் முதற் பக்கப் பச்சை அட்டைகளின் மேற்பகுதியில் "ஆசிரியர் - ஈ.வெ. இராமசாமி" என்றும், இறுதிப் பக்க அட்டைகளின் அடிப்பகுதியில், "உண்மை விளக்கம் பதிப்பகத்தில் அச்சிடப்பட்டு தோழர் சா.ரா. கண்ணம்மாள் அவர்களால் வெளியிடப்பட்டது" என்பதாகவும் பொறிக்கப்பட்டு வந்தது. அடுத்த கிழமையில் வெளியான அதாவது 31-12-1933 நாளைய - 'புரட்சி' இதழிலிருந்து வழமை போல முதற்பக்கதில் "ஆசிரியர் - ஈ.வெ. கிருஷ்ணசாமி" என்றும் கடைசிப் பக்கத்தில், "உண்மை விளக்கம் பதிப்பகத்தில் அச்சிடப்பட்டு, தோழர் சா.ரா. கண்ணம்மாள் அவர்களால் வெளியிடப்பட்டது" என்றும் பொறிக்கப்பட்டது. அதற்கு முன்னர் நூறு மாதங்கட்கு மேலாக நடந்து வந்த 'குடியரசு' இதழில் 'இம்பிரிண்ட்' எனப்படும் பெயர்கள் அச்சிடுவதில் என்ன நடைமுறை கையாளப்பட்டு வந்ததோ அதே முறையைப் பின்பற்றித்தான் 'புரட்சி'யிலும் பெயர்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன.

ஆயினும் 'புரட்சி' தொடங்கப்பட்டு நான்கு மாதங்களுக்குப் பிறகு ஆசிரியர் பெயரில்லாமல் வெளியிட்டதற்காக என்ற காரணங்காட்டி, காவல் துறையினர் 'புரட்சி'யின் வெளியிட்டாளரான கண்ணம்மாள் அவர்களின் மீது வழக்குத் தொகுத்தனர். ஏழெட்டு முறை வழக்கு தள்ளி வைக்கப்பட்டு 29-5-1934 அன்று கண்ணம்மாள் அவர்கள் 100 ரூபாய் ஒறுப்புத் தொகையாகக் கட்ட வேண்டுமென்றும், தவறினால் ஒரு மாதம் சிறை வாழ்வு ஏற்க வேண்டுமென்றும் மாவட்ட உதவி ஆட்சியரால் தீர்ப்பளிக்கப்பட்டது.

வெளியீட்டாளர் கண்ணம்மாள் அவர்கள் சட்ட நடவடிக்கைக்கு ஆட்படுத்தப்பெற்ற நிலையில் ஆசிரியராக மட்டும் 'புரட்சி'யின் வெளியீட்டாளர்ப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டு விட்டார். 4-2-1934ஆம் நாளிட்ட இதழிலிருந்து 25-3-1934ஆம் நாளையப் 'புரட்சி' வரையிலும், "உண்மை விளக்கம் பதிப்பகத்தில் அச்சிடப்பட்டு, தோழர் ஈ.வே. கிருஷ்ணசாமி அவர்களால் வெளியிடப்பட்டது" என்னும் வரி இறுதிப்பக்கத்தின் அடியில் இடம் பெற்றது. இன்னும் 1-4-1934ஆம் நாள் 'புரட்சி'யின் முதற்பக்க மேற்பகுதியில் "ஆசிரியர் - ஈ.வெ. கிருஷ்ணசாமி" என்று தமிழிலும், கடைசிப்பக்க அடிப்பகுதியில், " Printed Published and Edited at Unmai Vilakkam Press by E.V. Krishnasamy" என்று ஆங்கிலத்திலும்

பதிவு செய்யப்பட்டது. அடுத்த இதழிலிருந்து 'Edited' என்னும் சொல் முதன்மை பெற்றது.

என்றாலும் 'புரட்சி' இதழ் நாட்டில் உலா வரக் கூடாது என்பதே அரசின் குறிக்கோளாக இருந்ததால் தொல்லை தொடர்ந்தது. ஆசிரியர் கிருஷ்ணசாமி நடவடிக்கைக்கு உட்படுத்தப்பட்டார். இது தொடர்பாகப் 'புரட்சி'யின் பக்கங்கள் சில செய்திகளைத் தருகின்றன.

*10-6-1934ஆம் நாளைய இதழில் காணப்படுவது:*

*'புரட்சி'யில் பிரசுரமான ஒரு வியாசத்திற்காக அதன் ஆசிரியர் மீது மன்னார்குடியில் தொடரப்பட்டிருந்த ஒரு மான நஷ்ட வழக்கில் எதிரிக்கு அரஸ்ட் வாரண்ட் அனுப்பப்பட்டதற்குக் காரணம் முதலில் சம்மன் அனுப்பப்பட்டதாகவும் அதன்படி ஆஜராகததினால் வாரண்ட் அனுப்பப்பட்டதாகவும் மன்னார்குடி கோர்ட்டில் விபரம் தெரிய வந்ததாம்.*

*ஆசிரியருக்கு அந்தப்படி எவ்வித சம்மனும் வரவில்லை. ஆசிரியர் ஈரோட்டிலேயே இருந்திருக்கிறார். ஆதலால் சம்மன் எப்போது – யார் மூலமாய் அனுப்பப்பட்டதென்றும், அது என்ன காரணத்தினால் சேர்வு செய்யப்படவில்லை என்றும் சம்மன் மீது என்ன எழுதித் திருப்பி அனுப்பப்பட்டதென்றும் சம்மந்தப்பட்ட மேலதிகாரிகள் விசாரித்து நீதி செலுத்தத்தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்வார்களா? வழக்கு குறிப்பிட்டபடி 4-ஆம் தேதி தோழர் ஈ.வெ. கிருஷ்ணசாமி அவர்கள் மன்னார்குடி சென்றிருந்தார். விசாரணை 12ஆம் தேதிக்கு வாய்தா போடப்பட்டு விட்டது".*

*3-6-1934* 'புரட்சி' ஆசிரியர் ஈ.வெ.கி. அவர்கள் தளை செய்யப்பட்ட இன்னொரு செய்தியினைத் தெரிவிக்கின்றது.

*'புரட்சி' மீது மன்னார்குடி அடிஷனல் மாஜிஸ்திரேட் கோர்ட்டிலிருந்து தோழர் ஈ.வெ. கிருஷ்ணசாமி அவர்களுக்கு அரஸ்ட் வாரண்ட் வந்து 2-6-34 மாலை 5 மணிக்குப் போலிசாரால் அரஸ்ட் செய்யப்பட்டு ஜாமீனில் விடப்பட்டார். 4ஆம் தேதி வழக்கு விசாரணை நடைபெறும்".*

இச்செய்திப்படி ஈ.வெ.கி. அவர்கள் தளை செய்யப்படும் அளவிற்கு இலக்கானார் என்பதும், பிணையில் விடுவிக்கப்பட்ட நிலையில் கடமை தவறாது மன்னார்குடிக்குச் சென்றார் என்னும் சூழ்நிலை நமக்கு விளங்குகிறது. 'சமன்' எனப்படும் நடுவர் மன்ற அழைப்பு அவருக்குக் காட்டப்படாமலேயே அவரைக்

குற்றவாளியாகக் காட்டி அவரைக் கொச்சைப்படுத்தியது அன்றைய காவல்துறை என்ற உண்மையும் நமக்குப் புலப்படுகிறது. வேடிக்கை என்னவென்றால் பின்னர் மன்னை மாவட்ட உதவி ஆட்சியரால் அவ்வழக்கே தள்ளுபடி செய்யப்பட்டு விட்டது. இச்செய்தியை 21-10-1934ஆம் நாளிட்ட 'பகுத்தறிவு' - கிழமை இதழ் தெரிவிக்கிறது.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் பெரியார் அவர்கள் 'புரட்சி'யை நிறுத்தி விட வேண்டிய நெருக்கடிக்கு ஆளானார். நமக்குக் கிடைக்கும் 17-6-1934ஆம் நாளிட்ட 'புரட்சி' வரை எந்த இதழிலும் அது பற்றிய அறிக்கை எதுவும் காணப்படவில்லை. ஆயினும் 9-12-1934ஆம் நாளிட்ட 'பகுத்தறிவு' - கிழமை யேட்டில், "இந்த வருஷத்தில் மாத்திரம் 3 தடவை பத்திரிகை நிறுத்தப்பட்டு விட்டதாலும், 2,3 தடவை ஜாமீன் கட்டும்படி உத்தரவு செய்யப்பட்டதாலும் 3 கேசுகள் ஏற்பட்டு அபராதங்களும் தண்டனைகளும் விதிக்கப்பட்டதாலும் எதிர் வழக்காடியதாலும் 5000 ரூபாய்க்கு மேற்பட்ட நஷ்டங்கள் ஏற்பட்டது" என்னும் அறிக்கை இடம் பெற்றிருப்பதை வைத்து, பெரியார் அவர்களுக்கு விளைந்த கட்டாய நிலைகள் பற்றி நம்மால் கற்பனை பண்ண முடிகிறது.

இவ்வண்ணமாக அரும்பெரும் தன்மான - சமனிய - பகுத்தறிவுக் கருத்துகளை அள்ளியள்ளித் தமிழினத்திற்கு ஊட்டிக் கொண்டிருந்த 'புரட்சி' இதழின் வீரவரலாறு 'புரட்சி' தோன்றிய அன்றே, 'புரட்சி' எந்த நேரத்திலும் குத்துப்பட்டாலும் படலாம்; எந்த வினாடியும் கொலையுண்டாலும் உண்டாகலாம் என்று பெரியாரவர்களால் எதிர்ப்பார்க்கப்பட்டவாறே திடீரென்று முடிவுக்கு வரவேண்டியதாயிற்று!

******

## 'பகுத்தறிவு' – மூவகை முயற்சி

இதழாளர் பெரியார் 'பகுத்தறிவு' என்ற பெயரில் நாளேடு, கிழமையிதழ், மாத இதழ் என்பதாக மூன்று வகைகளிலும் இதழ் நடத்திய பட்டறிவு படைத்தவர்.

"பேதமிலா அறிவுடைய அவ்வுலகத்திற்குப்
பேசுசுய மரியாதை உலகெனப்பேர் வைப்போம்!"

எனப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் கற்பனை செய்த வண்ணம் தன்மதிப்பு உலகம்' என்னும் பெயர் சூட்டப்பட்ட ஒன்று உருவானால் அது அறிவு நிரம்பப் பெற்ற உலகாகத்தான் இருக்கும்.

அதனை முன்கூட்டியே கருதிய பெரியார் மானமும் அறிவும் வாய்ந்த மக்களாயம் சமைப்பதற்குப் 'பகுத்தறிவு' என்னும் சொல் மக்களிடையே புழக்கமாகிப் பழக்கமாகிவிட வேண்டும் என்று ஆர்வப்பட்டார். எனவே 'பகுத்தறிவு' என்னும் பெயரில் இதழொன்று மக்கள் கைகளில் தவழ வேண்டும் என்று திட்டமிட்டார். அவரின் 'புரட்சி' - கிழமையிதழில் ஓர் அறிவிக்கை வெளியானது.

"பகுத்தறிவு - சுயமரியாதை தினசரி பத்திரிகை - ஈரோட்டிலிருந்து வெளிவரும்" என்று தலைப்பிட்டு,

"தோழர்களே! தமிழ்நாடெங்குமுள்ள நமது சங்கங்களின் வேலைகளையும் நமதியக்கப் பிரசாரத்தையும் இன்னும் பலப்படுத்துவதற்காக, தமிழ் காலணா தினசரி பத்திரிகை மேற்கண்ட பெயரால் ஆரம்பிக்க முடிவு செய்திருக்கிறோம். மார்ச் மாதத்தில் ஈரோட்டிலிருந்தே இது வெளிவரும். தமிழ்நாடெங்கும் முன்பணம் கட்டக்கூடிய ஏஜண்டுகள் தேவை. தாராளமான கமிஷன் உண்டு. குறைந்தது நூறு காப்பிகள் எடுத்துக் கொள்ள வேண்டும்.

மற்றும் மேற்படி பத்திரிகை சம்மந்தமாக விபரமறிய விரும்புகிறவர்கள் அடியிற் கண்ட விலாசத்திற்கு எழுதவும். மானேஜர், 'பகுத்தறிவு' காரியாலயம், ஈரோடு" என்று விளம்பரம் வெளியிட்டார் பெரியார். ('புரட்சி': 25-2-19334).

"பகுத்தறிவு - சுயமரியாதை தினசரி பத்திரிகை" என்ற வண்ணம் தலைப்பிடுவதன் மூலம் பகுத்தறிவும் தன்மானமும் ஒன்றோடொன்று உறவு கொண்டவை என்பதையும் இவ்விரண்டும்

நம் மக்களுக்கு இன்றியமையாதவை என்பது பெரியாரால் உணர்த்தப்பட்டது. கால்அணா என்பது அக்காலத்து ஒரு ரூபாய்க்குரிய 192 சல்லிக்காசுகளில் மூன்றுக்கு இணையானது வியப்பாக இருக்கிறதல்லவா?

இந்த அறிவிக்கைக்குப் பிறகு 8-4-1934ஆம் நாளிட்ட 'புரட்சி' - இதழில் கட்டம் கட்டி விளம்பரம் ஒன்றைப் பெரியார் வெளியிட்டார்.

> "பகுத்தறிவு – சுயமரியாதை தினசரி நாளது 15ந்தேதி ஞாயிறு முதல் பகுத்தறிவு – தினசரி வெளிவரும். சமய – சமூக – அரசியல் 'விடுதலை'க்குப் பரிந்து போராடும் தமிழ் தினசரி இது ஒன்றே. சர்வதேச சம்மந்தமான விடுதலைப் போராட்டச் செய்திகள் உடனுக்குடன் தெரிவிக்கப்படும். விடுதலை வழிகாட்டிகளாகிய வீரர்களின் வாழ்க்கைச் சரித்திரங்கள் அடிக்கடி வெளிவரும். ஆணித்தரமான அபிப்பிராயங்களும், அழுத்தமான கண்டனங் களும் அவசியம் காணலாம். தனிப்பிரதி காலணா. தபாலில் மாத சந்தா ஒரு ரூபாய். எல்லா இடங்களுக்கும் டிபாசிட் கட்டக்கூடிய ஏஜண்டுகள் தேவை. மானேஜர், 'பகுத்தறிவு', ஈரோடு"–

என்ற விளம்பரம் 15-4-1934ஆம் நாளிலிருந்து 'பகுத்தறிவு' - நாளிதழ் வெளிவரும் செய்தியை நமக்குத் தருகிறது.

பிறகு 22-4-1934 - ஆம் நாளிட்ட 'புரட்சி'யின் இறுதிப் பக்கத்தில் வெளியான முழுப்பக்க விளம்பரம் 'பகுத்தறிவு' - நாளிதழ் வெளியாகி நடந்து வந்ததை நமக்குத் தெரிவிக்கிறது.

> "பகுத்தறிவு – சுயமரியாதை தினசரி. சமய சமூக அரசியல் விடுதலைக்குப் பரிந்து போராடும் தமிழ் தினசரி இது ஒன்றே. சர்வதேச சம்மந்தமான விடுதலைப் போராட்டச் செய்திகள் உடனுக்குடன் தெரிவிக்கப்படும். ஆணித்தரமான அபிப்பிராயங் களும் அழுத்தமான கண்டனங்களும் அவசியம் காணலாம். எங்கும் கிடைக்கும். தனிஇதழ் காலணா; தபாலில் மாத சந்தா ஒரு ரூபாய். ஆறு மாதச் சந்தா ரூ. 5. வருடச் சந்தா ரூ. 9. விலாசம் – மானேஜர், 'பகுத்தறிவு', ஈரோடு" என்பதே அவ்விளம்பரம்.

இந்த அளவிற்கு முனைப்புடன் தொடங்கப்பெற்ற 'பகுத்தறிவு' நாளேடு 27-5-1934ஆம் நாளோடு நிறுத்தப்பட நேர்ந்தமை மிகவும் அவலத்தக்க செய்தி. இது குறித்து அன்று நாளேட்டின் வெளியீட்டுப் பொறுப்பினை நிறைவேற்றிக் கொண்டிருந்த அய்யாவின் தோழர் 'மாயவரம்' நடராசன் அவர்கள் ஓர் அறிக்கை கொடுத்தார்.

"நமது தலைவர் ஈ.வெ.ரா. அவர்கள் 'குடிஅரசு' பத்திரிகையில் வெளி வந்த ஒரு வியாசம் சம்மந்தமாகக் கைது செய்யப்பட்டதும் நமது இயக்க எதிரிகள் இந்தச் சந்தர்ப்பத்தை உபயோகிக்கப் படுத்திக் கொண்டு தங்கள் விஷமப் பிரசாரத்தை மும்முரமாக நடத்தி நம்மைப் பலமாக எதிர்க்க ஆரம்பித்ததாலும் சுயமரியாதைச் சங்க மத்ய கமிட்டியின் தீர்மானமானது சுயமரியாதை இயக்கப் பிரசாரம் மாகாநாடுகள் கூட்டி, ஒரு அளவிற்காவது நமது கொள்கைகளைப் பிரசாரம் செய்ய இருந்து வந்த சந்தர்ப்பங்களையும் தடுத்து விட்டதாலும், இதர தினசரி பத்திரிகைகள் நமது பிரசாரங்களைத் திரித்துக் கூறி எழுதி வந்த விஷமப் பிரசாரங்களைத் தடுக்க நமக்கென ஒரு தினசரி வேண்டுமென்று கருதிப் பல கஷ்டங்களுக்கிடையே ஆரம்பிக்க வேண்டியதாயிற்று. இந்த விஷயம் பூராவும் நமது தோழர்களும் வாசகர்களும் நன்கறிந்ததே.

எனினும் நமது முதல் விளம்பரத்தைப் பார்த்தவுடன் நமது சகவர்த்தமானிகள் பலர் தங்கள் விலையைப் பகுதிக்குக் குறைத்துக் கொண்டதாலும் நமது தலைவர் ஈ.வெ.ரா. அவர்கள் நமது இயக்கத்திற்கென ஒரு தினசரி நடத்துவதில் செலவாகும் பணத்தையும் நேரத்தையும் ஊக்கத்தையும் ஒரு ஆங்கில வாரப் பத்திரிகையை நடத்துவதிலோ அல்லது பிரசாரத்திலோ செலவழிப்பது மிகச்சிறந்ததென அபிப்பிரயாப்படுவதாலும் இன்றுடன் நமது 'பகுத்தறிவு' பத்திரிகை நிறுத்தி வைப்பதென முடிவு செய்யப்பட்டு விட்டது.

என்றாலும் நமது வாசகர்களுக்கும் பத்திரிகையின் சிறந்த அமைப்பிற்காக அல்லது அதன் கொள்கையே பிரதானமெனக் கருதி ஆதரித்து வந்த நமது அபிமானிகளுக்கும் நமது மனப்பூர்வமான நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்."

சி. நடராஜன் என்னும் பெயரில் 27-5-1934ஆம் நாளிட்ட 'புரட்சி'யில் வெளியானது. அதே இதழில் பெரியார் அவர்கள் 'பகுத்தறிவு' எனத் தலைப்பிட்டு, விரிவானதொரு விளக்கத்தினைத் தந்திருந்தார்.

"பகுத்தறிவு பத்திரிகை தொடங்கி, சற்று ஏறக்குறைய ஒரு மாத காலமே ஆகின்றது. நடந்த வரை லாபமும் இல்லை; நஷ்டமும் வெகு சுருக்கமே ஆகும். இந்தச் சிறிது காலத்தில் சொல்ப நஷ்டத்தில் மக்களுக்கு ஏதோ ஒரு அளவில் குறிப்பிடத்தக்க ஒரு பலனைக் கொடுத்திருக்கிறது என்று தைரியமாய்ச் சொல்லலாம்.

என்றாலும் இனியும் இது நடத்தப்பட வேண்டியது அவசியமில்லை என்றே கருதுகிறோம்.

பத்திரிகைகள் மனித சமூகத்திற்கு அவசியமானது என்பதில் நமக்குச் சிறிதும் அபிப்பிராய பேதமில்லை. ஆனால் அவை இரண்டு காரியங்களுக்கே முக்கியமான தேவையாகும். ஒன்று உலக வர்த்தமானங்களை மக்களுக்கு அறிவித்து, மக்களது அறிவை உலக இயலை உணர்ந்து நடந்து கொள்ளச் செய்வது. இரண்டு புதிய அபிப்பிராயங்களை வெளிப்படுத்தி, மனித சமூகத்தை முற்போக்கடையச் செய்வதாகும்.

ஆனால் இன்றைய பத்திரிகை உலகமானது இந்த இரண்டு காரியங்களின் பெயராலேயே பெரிதும் நடத்தப் படுவதாகச் சொல்லப்படுமானாலும் உண்மையில் பார்க்கப் போனால் ஒரு சில பத்திரிகைகளே இக்கொள்கைக்கேற்ப நடத்தப்படுவதாகக் காணப்படும்.

பத்திரிகை நடத்துவது என்பது ஒன்று நடத்துபவரின் ஜீவனத்தை முக்கிய குறிக்கோளாகக் கொண்டது. இரண்டு, தனது சுயநலத்தையும் கீர்த்தியையும் உத்தேசித்து, தன் வாழ்க்கைப் பெருமையையே குறிக்கோளாகக் கொண்டு நடத்தப்படுவது. இப்பொழுது நடைபெறும் பத்திரிகைகளில் அனேக பத்திரிகைகளைப் பின் சொல்லப்பட்ட இந்த இரண்டு தலைப்பு களுக்குள்ளாகவே சேர்க்கலாம் என்றாலும், முன் சொல்லப்பட்ட கருத்துகளுடன் நடைபெறும் பத்திரிகைகள் இல்லை என்று சொல்லிவிட முடியாது.

பரலோகத்தையும் சுவர்க்கலோகத்தையும் காட்டி வயிறு வளர்க்கும் தொழில் புரட்டை விட, பத்திரிகை நடத்தி வயிறு வளர்க்கும் தொழில் கேவலம் என்று சொல்லி விட முடியாது.

இன்றைய தினம் அரசியலில் தலையிட்டு சிறிது நாளாவது வேலை செய்து அதன் பயனாய் ஒருவர் தேசபக்தன் என்றோ அல்லது தேசியத் தலைவர் என்றோ அழைக்கப்பட நேரிட்டு, அப்படிப்பட்டவருக்குத் தகுதியான ஜீவனோபாயத்திற்கு மார்க்கம் இல்லாதிருக்குமானால் அவர்கள் கண் முன்னும் மனதின் முன்னும் சதா இருந்து கொண்டிருப்பது 'ஒரு பத்திரிகை' நடத்த வேண்டும் என்கின்ற ஆசையும் உற்சாகமுமேயாகும். இதைக் குற்றம் என்று நாம் சொல்ல வரவில்லை. இயற்கையின் ஆட்சி என்றே சொல்லுகிறோம். சில வன்மனம் படைத்தவர்கள்

இந்த இயற்கை ஆட்சியிலிருந்து தப்பி இருக்கிறார்கள். சிலர் தப்ப முடியாமல் இயற்கை எய்தி விடுகிறார்கள்.

இதன் பயனாகத்தான் இந்தப் பத்துப் பதினைந்து வருஷ காலத்தில் ஆயிரக்கணக்கான பத்திரிகைகள் தோன்றி மறைய ஏற்பட்டன. அதில் ஒன்று நம் பகுத்தறிவாய் இருக்கலாமா என்று யாராவது கேட்டால், இல்லை என்று அடியோடு மறுத்துச் சொல்லுவதற்குப் போதிய ஆதாரம் இருப்பதாகச் சொல்ல முடியாது.

பகுத்தறிவு டிக்ளரேஷன் அய்ந்து வருஷத்துக்கு முன்னாலேயே பெற்றிருந்தது. தினசரியாக நடத்துவதற்காக அல்ல. அதை ஒரு மாத வெளியீடாகவும் வருட சந்தா 8 அணாவில் நடத்துவதாகவும் உத்தேசித்து, சிறு புத்தக அளவில் கோர்வையாகத் தொடர்ந்து நடத்த உத்தேசப்பட்டு டிக்ளரேஷன் வாங்கப்பட்டு, பல காரணங்களால் நடத்த முடியாமல் போய்விட்டதென்றாலும் அதைப் பகுத்தறிவு நூற் பதிப்புக் கழகத்தின் சார்பாக ஒரு மாத வெளியீடாக முயற்சி செய்து, சமீப காலத்தில் டிக்ளரேஷன் புதுப்பிக்கப்பட்ட தென்றாலும், சில வாலிபர்களின் உள்ளத்தெழுந்த அதிருப்தியும் ஆத்திரமும் இவ்வளவு சடுதியில் தினசரியாக நடத்தச் செய்து விட்டது. அதாவது சுயமரியாதை இயக்கத்திற்கு ஒரு தினசரி தேவை என்றும், இப்பொழுது நாட்டில் நடமாடும் தினசரிகளில் பெரும்பான்மையானவை சுயமரியாதை இயக்கத்திற்கு உதவி செய்யாவிட்டாலும், இடையூறும் பழியும் உண்டாகும்படி செய்யவே முயற்சிக்கின்றன என்றும் நினைத்து, ஆதலால் 'நமக்கென்று ஒன்று இருக்க வேண்டும்' என்ற கருத்தால் ஏற்பட வேண்டியதாயிற்று.

இக்கருத்து சரியா தப்பா என்பதைப் பற்றி இப்போது நாம் ஏதும் சொல்ல ஆசைப்படவில்லை. அன்னியர்கள் அதுவும் நமது கருத்துக்கு மாறுபட்டவர்கள், அவ்வளவோடு மாத்திரம் இல்லாமல் தங்கள் தனிப்பட்ட நலனுக்கோ தங்கள் சமூகத்திற்கோ கடும் விரோதி என்று நம்மையும் நமது கொள்கைகளையும் கருதியவர்கள், நம்மால் தயவாகவோ தாட்சண்யமாகவோ நடத்தப்படாதவர்கள் நமது கொள்கை களுக்கும் நடவடிக்கைகளுக்கும் இடம் தராததும் பத்திரிகை ஒழுங்கு முறைப்படி நடந்து கொள்ளாததும் குற்றம் என்று நாம் கருதுவோமேயானால் அது முட்டாள்தனமும் சுயமரியாதை அற்ற தனமும் நமது தோல்வியை ஒப்புக் கொண்ட தனமும் ஆகுமே தவிர வேறில்லை.

அன்றியும் அப்படிப்பட்ட பத்திரிகைகள் நமக்கு எவ்வளவு கெடுதி செய்தது என்றாலும் அனுகூலம் செய்யவில்லை என்றாலும் நமது கொள்கைகளோ இயக்கமோ ஆரம்பத்தி லிருந்து நாளதுவரை முற்போக்கிலும் மேம்பாட்டிலும் இருந்து வருகின்றனவே ஒழிய, பிற்பட்டு விடவில்லை. ஆதலால் அன்னியர்கள் மீது ஆத்திரம் கொள்ளவும் இடமில்லை. அன்றியும் அவரவர்கள் வாழ்க்கைக்குத் திட்டம் கோலிக் கொள்ளத் தனிஉடைமை உலகத்துக்குச் சுதந்திரமுண்டு.

சுயமரியாதை இயக்கத்துக்கு இதுசமயம் ஒருபத்திரிகைக்கு மேல் அதுவும் வாரப் பத்திரிகையாக அல்லாமல் மற்றெவ்விதத்திலும் நடத்த நாட்டில் இடம் இல்லை. எப்படியென்றால் சுயமரியாதை இயக்கத்திற்காக இயக்கச் சார்பாய் என்று இதுவரை சுமார் 20 பத்திரிகைகள் வரையில் தினப்பதிப்பு வாரப்பதிப்பு மாதப் பதிப்பு என்பதாக ஏற்பட்டு அவை பெரிதும் மறைந்து போயிருக்கின்றன. அதனால் இயக்கத்திற்கும் கெட்ட பெயர் ஏற்பட்டும் இருக்கிறது. இந்த உண்மைகளையும் அனுபவங்களையும் கண்ட பிறகும் நாம் இனியும் இயக்கத்தின் பெயரால் பத்திரிகைகளைப் புதிது புதிதாகத் தொடங்குவது என்பது மனதாரத் தெரிந்தே தப்பான காரியத்தைச் செய்கின்றோம் என்பதேயாகும்.

அன்றியும் இது சமயம் பத்திரிகை உலகம் நெருக்கடியில் இருக்கிறது. செல்வாக்குள்ள பத்திரிகைகள் கூடப் பெரிதும் பாதிக்கப்பட்டு விட்டன. சிலவற்றுக்கு, 100க்கு 50 வீதம் சந்தாதாரர்கள் குறைந்து விட்டனர். சில பத்திரிகைகளின் விலைகளும் நூற்றுக்கு அய்ம்பது வீதம் குறைக்கப்பட்டு விட்டன. இந்த நிலையில் சில பத்திரிகைகள் எவ்வித உற்சாகமும் அவசியமும் இல்லாமல், 'ஆரம்பித்துவிட்டோமே, இனி நிறுத்தினால் அவமானமே' என்கின்ற தத்துவத்திற்காகவே நடைபெறுகின்றன. இந்த நிலையில் 'பகுத்தறிவு' தினசரி நடத்துவது என்பது வேண்டுமென்றே தொல்லையையும் நஷ்டத்தையும் ஏற்றுக் கொள்வதாகும் என்று தோன்றுகிறது.

நிற்க, இது சமயம் 'தமிழ்நாடு' பத்திரிகை ஏதோ ஒரு அளவுக்காவது சுயமரியாதை இயக்கச் செய்திகளைப் பிரசுரித்து வருவதை அறிகிறோம். அது மாத்திரமல்லாமலும் அது மிகக் குறைந்த விலையாகிய அரை அணாவுக்கு இறக்கப்பட்டும் விட்டது. கொள்கை விஷயத்திலும் சமீப காலமாக அதன்போக்கு நமக்கு விரோதமானது என்று கருதுவதற்கு இல்லாமலும்

இருக்கிறது. ஆகவே நமது கொள்கையைப் பரப்பப் 'புரட்சி'யையே ஆதாரமாகவும் சேதியைத் தெரிவிக்கத் 'தமிழ்நாடு'வின் சகாயத்தையே அனுகூலமாகவும் கொள்ளலாம் என்று நினைக்கிறோம்.

'தமிழ்நாடு' பத்திரிகை 8 பக்கங்கள், 10 பக்கம், 12 பக்கம் வியாசங்களுடனும் தக்க சேதிகளுடனும் தாராளமாய் எங்கும் அரை அணாவுக்குக் கிடைக்கும்படியாக நடைபெறும்போது, நாம் அரை அணாவுக்குத் தினசரி – அதில் 4–ல் ஒரு பாக அளவு பத்திரிகைச் சேதிகள் அதிகமில்லாமல் நடத்துவது என்றால் எப்படி நடத்தப்பட முடியும் என்கின்ற பயம் ஒரு புறம் இருந்தாலும், இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிக்கையானது அரை அணாவுக்குப் போடப்பட்டதால் 2 அணா பத்திரிகைகளாகிய 'மெயிலும்' 'இந்துவும்' ஒரு அணவாகக் குறைக்கப்பட்டு விட்டது.

அதுபோலவே காலணா – அரையணாப் பத்திரிகைகளாலேயே ஒரு அணாப் பத்திரிக்கைகளும் விலை குறைக்கப்பட வேண்டியதாய் விட்டது என்று கருத வேண்டி இருப்பதால் அவைகளோடு போட்டிபோட்டுக் கொண்டு நமது ஊக்கத்தை வீணாக்குவது நமக்கு அவசியமில்லாத காரியம் என்று நினைத்து, நமக்கு எதிர்ப்பு இல்லாததும் கூடியவரை அனுகூலமாய் இருப்பதாகக் கருதுவதுமான 'தமிழ்நாடு' பத்திரிகையை நமது கொள்கைக்காக இல்லாவிட்டாலும் சேதிக்காகவாவது அதைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்கின்ற எண்ணத்தின் மீதே 'பகுத்தறிவு' தினசரி பத்திரிக்கையை இன்று முதல் நிறுத்தி வைக்கலாம் என்று தீர்மானிக்க வேண்டிய அவசியத்தில் இருக்கிறோம்.

இதுவரை 'பகுத்தறி'வை ஆதரித்தவர்களுக்கும் அதற்கு உதவி செய்தவர்களுக்கும் மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்".

பெரியாரின் அறிக்கையில் நிறையச் செய்திகளைப் பற்றி விளக்கப் பட்டிருக்கிறது. அன்றைய இதழுலக நெருக்கடியில் நாளிதழ் நடத்துவதென்றால் பணப் பாதிப்புக்கும் மனப்பாதிப்புக்கும் தப்பவே முடியாது .என்பதுதான் பட்டறிவு நிரம்பிய பெரியார் வெளியிட்ட தெளிவுரையின் பிழிவு. இயக்கத்திற்கென்று நாளிதழ் ஒன்று இருக்க வேண்டிய இன்றியமையாமையைப் பெரியார் நன்கு உணர்ந்திருந்தார் என்றாலும், தாம் தொடங்கிய இதழை நிறுத்தி வைத்தாக வேண்டிய

அளவிற்கு அப்போதைய நிலவரங்கள் இருந்தன என்பதை நாம் புரிந்து கொள்ள முடிகிறது. பின்னர் அவர் ஏற்றுக் கொண்டு தொடர்ந்து வாழ்நாள் முழுதும் நடத்தி வந்த 'விடுதலை' - நாளேடு எண்ணத் தொலையா வெற்றிகளைக் குவித்தது என்றாலும் பொருளிழப்பில்தான் அது நடந்தது என்னும் உண்மை குறிக்கத் தக்கது.

'பகுத்தறிவு' நாளேட்டை ஆர்வத்துடன் வரவேற்கும் தமிழர்கள் இருக்கவே செய்தார்கள். நாளிதழ் நிறுத்தப்பட்டு விட்டது என்பது அறிவிக்கப்பட்ட பிறகுங்கூடச் சிலர் உறுப்பினர் கட்டணம் அனுப்பினார்கள் என்று அறிய முடிகிறது.

### பகுத்தறிவு

"பகுத்தறிவு நிறுத்தப்பட்டுள்ளது" என்னும் தலைப்பில்,

**'புரட்சிக் காரியாலயத்தில் பிரசுரித்து வந்த 'பகுத்தறிவு' தினசரிப் பத்திரிகை சென்ற வாரம் முதல் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. அப்போதே இதைப் 'புரட்சி'யில் தெரிவித்திருந்தும் சந்தாதாரர்களும் ஏஜண்டுகளும் முன்பணமாக மணியார்டர்கள் அனுப்பி வருகின்றார்கள். அவற்றை அப்படியே வாபீஸ் செய்யப்பட்டு வருகிறது. இனி யாரும் அதற்காக ஆர்டர் அனுப்பாமலும் பணம் அனுப்பாமலும் இருக்க வேண்டுகிறோம்"**

என்று 'புரட்சி' மானேஜர் பெயரால் 3-6-1934ஆம் நாளிட்ட 'புரட்சி'யில் அறிவிப்பு ஒன்று வெளியாகியுள்ளது.

'பகுத்தறிவு' நாளேட்டின் தாள் எதுவும் கிடைக்கவில்லை யாதலால் அவ்வேட்டில் இடம் பெற்ற செய்திகள், ஆசிரியவுரைகள், கட்டுரைகள் ஆகியவை பற்றிக் குறிப்பிட முடியாத நிலை ஏற்பட்டுள்ளமை ஒரு பெருங்குறையே!

'பகுத்தறிவு' நாளேடு நிறுத்தப்பட்டுப் போனாலும், 'பகுத்தறிவு' என்னும் பெயரில் ஒரு கிழமையிதழினை மூன்று மாத இடைவெளிக்குப் பிறகு பெரியார் கொண்டு வந்து விட்டார்!

### 'பகுத்தறிவு' – கிழமை இதழ்

'பகுத்தறிவு'- நாளிதழ் நிறுத்திவைக்கப்பட்ட நிலையில், 'பகுத்தறிவு' என்ற பெயராலேயே கிழமை இதழ் ஒன்றைப் பெரியார் நிறுவ முன் வந்தார். ஏற்கனவே அவர் நடத்திக் கொண்டு வந்த கிழமை இதழான 'புரட்சி'க்கு ஏற்பட்ட தொல்லைகளால், அதற்கு ஓய்வு

கொடுத்த பெரியார், பச்சை அட்டைக் 'குடிஅரசு' போலவே, பச்சை அட்டைப் 'புரட்சி' போன்றே, பச்சை அட்டை போர்த்திய 'பகுத்தறிவு' - கிழமை இதழை 26-8-1934 அன்று வெளியிட்டார். 20 பக்கங்கள் கொண்ட அவ்விதழுக்கு ஓர் அணா என்றே விலையிட்டார்.

"PAHUTHARIVU பகுத்தறிவு - ஞாயிறு தோறும் வெளிவரும் - ஆசிரியர் ஈ.வெ. கிருஷ்ணசாமி" என்று மட்டும் அட்டையின் மேற்பகுதியில் அச்சிடப்பட்டு, கீழ்ப்பகுதியில் "இனாம்! இனாம்! அருமையான புத்தகங்கள் இனாம்! நமது 'பகுத்தறிவு' பத்திரிகைக்கு செப்டம்பர் மாதம் 1-தேதியிலிருந்து அக்டோபர் 1-க்குள் முன்பணம் மணியார்டரில் அனுப்பி, புதுசந்தாதாரராய்ச் சேருகிறவர்களுக்கு 8 அணா விலையுள்ள அடியில் கண்ட புஸ்தகங்களில் எது இஷ்டமோ அதை இலவசமாய் புக்போஸ்டில் அனுப்பிக் கொடுக்கப்படும் என்று அச்சியற்றப்பட்டிருந்தது.

மாலை-1, மலர்-1, முதல் மாலை-1, மலர்-4 முடிய அதே விளம்பரந்தான் முகப்பட்டையில் இடம் பெற்றிருந்தது. 5-ஆம் மலரிலிருந்து ஒவ்வொரு கிழமையும் தன்மான - பகுத்தறிவு - சமனியக் கருத்துகள் செறிந்த பாடலொன்று அச்சேறியது. தொடர்ந்து பாடல்களே முகப்பட்டையை அணி செய்தன என்னும் தனித்தன்மை குறிப்பிடப்பட வேண்டிய ஒன்று.

## பகுத்தறிவு – இதழின் கொள்கைகள்

'பகுத்தறிவு' முதலாம் இதழில் பெரியார் வெளியிட்ட கருத்து வேறெந்த இதழாளரும் வெளியிடத் துணியாதது!

> "பகுத்தறிவு – வாரப் பத்திரிகையின் முதல் மாலை முதல் மலர் 26–8–1934 ஞாயிறு வெளியாகின்றது என்றாலும் அதன் கொள்கைகளைப் பற்றிக் 'குடிஅரசு', 'ரிவோல்ட்', 'புரட்சி', 'பகுத்தறிவு' (தினசரி) ஆகிய பத்திரிகைகளின் அபிமானிகளுக்கும் வாசகர்களும் எடுத்துக் கூற வேண்டியதில்லை.
>
> சுருக்கமாக ஒரு வாக்கியத்தில் சொல்லித் தீர வேண்டுமானால், 'பகுத்தறிவு' தோன்றலானது. இன்றைய உலக வழக்கில் இருந்து வரும் காரியங்களில் பெரும்பான்மை மக்களால் முதன்மை யானதாகவும் இன்றியமையாதனவாகவும் கருதப்படும். எங்கும் நிறைந்த இறைவனை வழுத்தவோ, எல்லாம் வல்ல மன்னனை வாழ்த்தவோ, 'யாதினும் மேம்பட்ட' வேதியனை வணங்கவோ, 'ஏதும் செய்ய வல்ல' செல்வச் சீமானை வாழிய செப்பவோ கருதி அல்ல என்பதேயாகும்.

மேலும் மனித சமூகத்தில் மவுடீகத்தால் ஏற்பட்ட துரபிமானங்களாய கடவுள், ஜாதி, மதம், தேசம், நான், எனது என்பன போன்ற அபிமானங்களை அறவே ஒழித்து மனித சமூக ஜீவாபிமானத்தையும் ஒற்றுமையையும் பிரதானமாய்க் கருதி உழைத்து வரும் என்று சொல்லுவோம்.

இத்தொண்டாற்றுவதில் 'பகுத்தறிவு' வேதத்திற்கோ, விமலத்திற்கோ, சரித்திரத்திற்கோ, சாத்திரத்திற்கோ, பழக்கத்திற்கோ, வழக்கத்திற்கோ, பழமைக்கோ, புதுமைக்கோ, அடிமையாகாமல், கொள்வன கொண்டு தள்ளுவன தள்ளி, தானே சுதந்தரமாய், தன்னையே நம்பி, தனது அறிவையும் ஆற்றலையுமே துணைக்கொண்டு, தன்னாலான தொண்டாற்றி வரும்.

முடிவாய்க் கூறுமிடத்து, பகுத்தறிவு மனித ஜீவாபிமானத்து மக்களை நடத்திச் செல்லுமே ஒழிய எக்காரணம் கொண்டும் மக்கள் பின் நடந்து செல்லும்படியான அடிமை வாழ்வில் உயிர் வாழாது என்பதேயாகும்." (பகுத்தறிவு: 26-8-1934).

வேறு எந்தவொரு தமிழிதழாவது இப்படியொரு துணிவான அறிக்கையை வெளியிட்டதாக நாம் அறிந்தவரை செய்தி கிடையாது.

பெரியார் மக்களை வழி நடத்தும் இதழாளராக விளங்கினாரே யொழிய, மக்கள் வழி நடக்கும் இதழாளராக ஒழுகக்கருதினாரல்லர் என்பதற்கு இவ்வாசிரியவுரை பெருஞ் சான்றாகும்.

தாம் அறிவித்த வண்ணமே நடைமுறையிலும் மக்களுக்குப் பகுத்தறிவுத் தூண்டலை விளைவிக்கவல்ல செய்திகளைப் 'பகுத்தறிவு' - கிழமை இதழில் இடம்பெறச் செய்தார் பெரியார். மக்கள் அச்செய்திகளை ஆர்வம் மேலிடக் கற்றனர்; சிந்தனைத் தூண்டல் பெற்றனர்; பகுத்தறிவுப் பயிற்சியில் நல்ல பயன் உற்றனர்.

## 'பகுத்தறிவு' கிழமை இதழ் வெளியிட்ட சிந்தனைகள்

பெரியார் 'பகுத்தறிவு' கிழமை இதழில் வெளியிட்ட பொருள்களில் எடுத்துக் காட்டாகச் சிலவற்றை அறிவோம்.

*7-10-1934*ஆம் நாளிட்ட 'பகுத்தறிவு' பெரியாரின் "சுயமரியாதைத் திருமணமும் புராண மரியாதைத் திருமணமும்" என்ற விளக்கத்தை மக்களுக்குத் தந்தது.

"மனிதனுடைய பகுத்தறிவுக்கு மரியாதை கொடுப்பதுதான் சுயமரியாதையின் முக்கிய தத்துவம் என்பதை ஞாபகத்தில் வையுங்கள். உங்கள் பகுத்தறிவினாலும் அனுபவ உண்மையாலும் உங்களுக்கு ஒன்று தோன்ற, உலகப் பழக்க வழக்கத்திற்கு - சாஸ்திரத்துக்கு - மதக்கட்டுப்பாட்டுக்கு என்கின்ற நிர்பந்தத்தின் மீது அதற்கு மாறாய் நீங்கள் நடக்க வேண்டிய அடிமைத் தன்மை ஏற்பட்டால் அதைத்தான் சுயமரியாதைக்கு விரோதம் என்று சொல்லுகின்றோம்.

ஆதலால் எந்தக் காரியத்தையும் உங்கள் பகுத்தறிவையும் அனுபவ பலனையும் அனுசரித்துப் பார்த்து நடக்க வேண்டும் என்கின்ற முறையிலேதான் இந்தச் சுயமரியாதைக் கல்யாணம் என்பதும். உங்களுடைய புராண மரியாதைக் கல்யாணத்தைச் சற்று சிந்தித்துப் பாருங்கள்.

புராண மரியாதைக் கல்யாணத்தின் முதல் தத்துவமே பெண்கள் ஆண்களுக்கு அடிமைகள் - சுதந்தர மற்றவர்கள் - மனிதத் தன்மைக்கு அருகதையற்றவர்கள் என்பவைகளை நிலைநிறுத்து வதற்காகச் செய்யப்படும் சடங்கு என்பது எனது அபிப்பிராயம். கன்னிகாதானம், பெண் கொடுத்தல், தாலிகட்டுதல் முதலிய வார்த்தைகளாலும், புருஷனுக்குக் கொண்டவன், கொண்டான் என்று சொல்லப்படுகிற வார்த்தைகளாலும் பெண் அடிமையாகப் பாவிக்கப்படுவது என்பதை உணரலாம்.

சுயமரியாதைக் கல்யாணம் என்பதன் முக்கிய தத்துவம் கூட்டு வாழ்க்கையில் ஆணுக்கும் பெண்ணுக்கும் எவ்வித வித்தியாசமோ உயர்வு தாழ்வோ இல்லை என்பதும் சகல துறைகளிலும் சமசுதந்தரம் அளிக்கப்படவேண்டும் என்பதேயாகும்.

புரோகிதன் அதிகாலையில் 'முகூர்த்தம்' வைத்துக் கொடுத்து விடுகிறான். இதனால் இரவெல்லாம் தூக்கமில்லாமல் கல்யாணத்துக்கு வந்த ஜனங்கள் அவஸ்தைப் படுகிறார்கள். பல் விளக்காமலும், கால் கை கழுவாமல் நித்திய கடன்களைக் காலாகாலத்தில் கழிக்க முடியாமல் மக்கள் அவஸ்தைப் படுவதும், மற்றும் பழக்க வழக்க மென்னும் சடங்கு ஆடம்பரம் முதலியவைகளால் கல்யாணக்காரர்களுக்குச் சகிக்க முடியாத தொல்லைகளும் தாங்கமுடியாத கடன்களும் ஏற்பட்டு, அக்குடும்பங்கள் ஒன்றிரண்டு வருஷங்களுக்கு - சில சமயங்களில் வாழ்நாள் முழுவதும் கடனில் மூழ்கி வேதனைப்படுவதுமாக இருந்து வருகிறது.

> சுயமரியாதை கல்யாணத்தில் எல்லோருக்கும் சவுகரியமான நேரமும் மிகவும் சுருக்கமான செலவும் கொண்டு நடத்தப் படுவதோடு, அனாவசியமான அர்த்தமற்ற சடங்குகளையும் ஒழித்து நடத்தப்படவேண்டும் என்று கற்பிக்கப்பட்டு வருகிறது. எல்லோரும் இதனைக் கவனித்து நன்றாய்ச் சிந்தித்துப் பாருங்கள். நன்மையைக் கைக்கொண்டு பகுத்தறிவு வளர்ச்சிக்கும் விடுதலைக்கும் உதவி புரியுங்கள்."

'பகுத்தறிவு' கிழமை இதழில் வெளியிடப்பட்டதில் ஒரு பகுதியே இது. இதை இரண்டு முறை படித்துப் பார்ப்போர் பகுத்தறிவுத் தாக்கம் பெற்று, தன்மான மணமுறையையே தேர்ந்தெடுப்பர் என்பது உறுதி.

## திருவிழாக்களும் பண்டிகைகளும்

> "நமது நாட்டில் மக்கள் கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கிற பணமெல்லாம் பெரும்பாலும் மதத்தின் பெயரால் கோவில் களுக்கும் அவைகளில் நடக்கும் திருவிழாக்களுக்கும், இன்னும் பண்டிகைத் தினங்களுக்கும் பழைய மூடப் பழக்க வழக்கங்களுக்கும், ஆபாசமான சாஸ்திரங்களுக்குமே ஏராளமாகச் செலவழிக்கின்றனர். அந்தச் செலவினால் நாட்டிற்கோ மக்களுக்கோ கடுகளவாவது பயனுண்டு என்று கூற முடியாது.
>
> அனேக வருஷமாகத்தான் பல தேர் திருவிழாக்கள், பூசை நைவேத்தியங்கள், தீர்த்த யாத்திரைகள், அமாவாசைப் புண்ணிய தினங்கள் கொண்டாடினோம். பலன் என்ன? யாருக்கேனும் ஒரு வேளை உணவு கிடைத்ததா? இருக்க இடமளித்ததா? உடுக்க உடையளித்ததா? ஒன்றையும் காணோம்! ஆனால் இந்தப் பலனெல்லாம் பூணூல் தரித்த பெருச்சாளிகளே சாப்பிடுகின்றனர் என்பதில் கொஞ்சங்கூட சந்தேகம் இல்லை.
>
> நம் நாட்டுப் பொருளெல்லாம் அனேகமாக பிரயோஜனமில்லாத துறையிலேயே செலவழிகின்றன. பயனற்ற செலவுகள் இந்து மதத்தில்தான் மிகுதி. சாதாரணமாக வாழ்க்கை நடத்துவதற்கு ஆணும் பெண்ணும் ஒப்பந்தம் செய்து கொள்ளும் கலியாணம் என்பதற்கு ஏராளமான பணத்தைச் செலவிடுகின்றனர். இதைப்போலவே இறப்பு கருமாதி முதலிய காரியங்களுக்கும் ஏராளமாகச் செலவு செய்கின்றனர். யாதொரு பிரயோஜனமும் இல்லாத திருவிழா - பண்டிகை நாட்களைக் கொண்டாடும் வகையிலும் ஏராளமாகச் செலவு செய்கின்றனர். இன்னும், நோய் அடைந்தவர்கள் தக்க மருந்தைச் சாப்பிட்டு நோயைத் தீர்க்க

வழி தேடாமல் வீட்டுத் தெய்வங்களையும் ஊர்த் தெய்வங்களையும் வேண்டிக் கொள்ளும் வகையிலும் ஏராளமாகச் செலவு செய்கின்றனர். இச்செலவுகள் யாவும் ஒவ்வொரு தனிக்குடும்பத்தினரால் செலவழிக்கப்படுவதாயினும், அதனால் நாட்டுச் செல்வம் குறையும் என்பதில் சந்தேகமேயில்லை. குடும்பங்களின் செல்வமே குவலயத்தின் செல்வம் என்பதை ஒவ்வொவரும் நினைக்க வேண்டுகிறோம்." ('பகுத்தறிவு': 4-11-1934).

இக்கருத்துகளைத் 'திருவிழாக்களும் பண்டிகைகளும்' என்னும் தலைப்பிலான கட்டுரையில் திருச்சி டி.எஸ். சாம்பசிவம் என்பவர் வெளியிட்டு மக்களைச் சிந்திக்க வைத்தார்.

## பிறநாட்டு அறிஞர்களின் மடமையொழிப்புக் கட்டுரைகள்

பிறநாட்டுப் பேரறிஞர் மடமையொழிப்புக் கருத்துகளும் 'பகுத்தறிவு' இதழில் மொழிபெயர்ப்புக் கட்டுரைகளாக வெளியிடப் பட்டன. அவற்றுள் ஜோசஃப் மெக்காபி என்ற மேல்நாட்டுப் பேரறிஞர் எழுதிய 'மதமொழிக்கும் உலகப் புரட்சி' என்னும் நூற் கருத்துகள் அருமையானவை.

"மனித உரிமைகளைக் காப்பதே நமது தர்மம். உலகில் மயக்கமும் மடமையும் மலிந்து கிடப்பதால் புராதன காலந்தொட்டு வழக்கமா யிருப்பவைகளையே நீதியென்றும் நெறியென்றும் மக்கள் நம்பி வருகிறார்கள். உண்மையும் ஊழியமுமே எமது விருதுக் கொடி. இவற்றை நிறைவு செய்ய முடியாத எந்தப் பண்டைக்கால ஒழுங்கு முறைகளையும், குற்றவாளிகளைக் கொல்லும் பொருட்டுப் பொதுச் சதுக்கத்தில் வைக்கப்பட்டுள்ள 'சிரச்சேத' இயந்திரத்தில் போட்டுத் 'துவம்சம்' செய்ய வேண்டுமென்று விரும்புகிறோம்.

இன்று மதத்தை ஒழிக்க உலகமே புரட்சியில் ஈடுபட்டிருக்கிறது. துருக்கியின் புதிய ஆட்சித் தலைவர் முகமதிய மதத்தின் வைதீகத்தைக் குழி வெட்டிப் புதைக்கத் தீவிரமாகப் போராடிக் கொண்டிருக்கிறார். இந்தியா, சீனா, ஜப்பான், எகிப்து முதலிய தேசங்களுள்ள மாணவர்கள் தங்கள் சமயக் கோட்பாடுகளைப் பற்றியும் தெய்வீக நூல்களைப் பற்றியுமுள்ள சரித்திரங்களைக் குறித்து விவாதம் செய்து வருகிறார்கள். இன்று நாங்கள் மதப் புரட்சியைப் பற்றிப் பெயரளவில் பறைசாற்றி வருகிறோம் என்பது உண்மை. ஆனால் நாளைக்கு இப்புரட்சி இயக்கம் நுழையாத ஆப்பிரிக்கா தேசத்துக் கருப்பு மனிதன் குடிசையோ

அல்லது சைபீரியாப் பனிக்காட்டுக் குச்சோ இருக்க முடியாது என்பதே எங்களின் திடமான கருத்து. இத்தகைய கொந்தளிப்பை மக்கள் சரித்திரத்தில் ஒரு புதிய சக்தியின் எழுச்சி என்றே சொல்ல வேண்டும்.

கிரேட் பிரிட்டனில் உள்ள திருச்சபைகளால் கொடுக்கப் பட்டுவரும் புள்ளி விவரங்களிலிருந்து, கோவிலுக்குப் போகிறவர்களின் எண்ணிக்கை மொத்த ஜனத்தொகையில் மூன்றில் ஒரு பாகமே என்று தெரிகிறது. பிரிட்டன் தேசம் முழுவதும் கிறிஸ்தவர் நிறைந்த இடமென்றாலும் இன்று அது கிறிஸ்தவ நாடாகயில்லை!

பிரான்ஸை எடுத்துக் கொண்டால் அங்குள்ள 3 கோடியே 80 லட்சம் ஜனத்தொகையில் 40 அல்லது 50 லட்சம் ஜனங்கள் தாம் எப்போதாவது கோவிலுக்குப் போய் வருகிறார்கள். ஆறு மாதங்களுக்கு முன்பு நான் பாரிஸ் நகரத்திற்குச் சென்றிருந்தேன். ஜனங்கள் கோவிலுக்குப் போய்வருகிறார்களென்பது சுத்தப் பொய்; பிரான்ஸ் கிறிஸ்தவ நாடாகவே இல்லை!

அய்ரோப்பியாவிலுள்ள மிகப்பெரிய வல்லரசுகளில் ஜெர்மனி மூன்றாவதாகும். இதுவும் பிரிட்டனைப் போலவே இருக்கிறது. லண்டன், பாரிஸ், பெர்லின் ஆகிய மூன்று நகரங்களும் அய்ரோப்பாக் கண்டத்தில் மிகப் பெரிய நகரங்கள். நகரங்களி லிருந்து பட்டணங்களுக்கும் கிராமங்களுக்கும் புரட்சி இயக்கம் பரவத் தொடங்கி விட்டது. இங்கிலாந்திலிருந்தும் ஜெர்மனி யிலிருந்தும் அப்புரட்சி இயக்கம் அயர்லாந்துக்கும் போலந்திற்கும் வியாபகமாகிக் கொண்டிருக்கிறது.

இந்த மக்களுக்குப் புரட்சிக் காலம் வரையில் பாதிரிக் கூட்டங்களும் ஆசைநாயகிகளை வைத்திருந்தார்கள் என்ற செய்தி தெரியவில்லை. ஜெஸ்யூட் பாதிரிகள் அரசர்களுடைய பலமற்ற மனசாட்சிகளையும் அவர்களுடைய ஆசை நாயகிகளையும் பல தலைமுறைகளாகக் கொலை செய்து கொண்டிருந்தார்கள். பாரிஸிலுள்ள கன்னிகா மடங்கள் காதலர்கள் கூடும் இடங்களாக இருந்தன.

மோலியர் என்னும் பெரிய பிரெஞ்சு விகடகவி ஒரு பகுத்தறிவுக் கொள்கைக்காரன். வால்டேருடைய மதக்கண்டனங்களும் தமாஷாக்களும் படிப்பில்லா மக்களிடம் மெதுவாய் பரவலாயின. வேலைக்காரர்களும் குதிரைக்காரர்களும் தெருக்களில் அத்தமாஷாக்களையும் கண்டனங்களையும்

எடுத்துக் கூறினார்கள். வால்டேர் எழுதிய நூல்கள் லிஸ்டான், மாத்ரிட், நேப்பிள்ஸ், வியன்னா, இங்கிலாந்து, ஸ்வீடன் முதலிய விடங்களின் நீதிமன்றங்களில் வாசிக்கப்பட்டன. மனிதக் கூட்டத்தில் எந்த வகுப்பாரும் எதிர்பாரா அவருடைய கண்டனங்களுக்குத் தப்பியதில்லை. அதற்கு முந்தி உலக சரித்திரத்தில் அவரைப் போன்ற மிகப் பெரிய செல்வாக்குப் பெற்ற நூலாசிரியர் ஒருபோதும் இருந்ததில்லை!

அவர் காலத்தில் இருந்த ஒரு சிறந்த பெரியார் ஜீன் ஜாக்குஸ்ரூஸோ என்பவர். அவர் கிறிஸ்துவை ஒரு சாதாரண மனிதனாகவே மதித்துச் சொற்பொழிவாற்றி வந்தார்; அவரைத் தெய்வீகப் புருஷனாக மதிக்க வில்லை! தாமஸ்பேனி, ரூஸோ, வால்டேர் ஆகிய மிகுந்த சக்தி வாய்ந்த மூன்று நாஸ்திக நூலாசிரியர்களும் ஏகீச்சுவரக் கொள்கையினர். பிரான்ஸில் அரசியல் புரட்சி தோன்றுவதற்கு முந்தி நாஸ்திகத்துக்குப் புதிய தலைமுறைகள் தோன்றின. அவர்கள் கடவுளைப் பற்றிச் சந்தேகம் கொண்டர்வகளாகவும் கடவுள் இல்லையென சாதிப்பவர்களாகவும் இருந்தனர். நாஸ்திகமும் லோகாயுதமும் தோன்றின!

இவைகளைப் பின்பற்றியவர்கள் கற்றுத் தேர்ந்த அறிஞர்களும் மிகப் புகழ் பெற்றவர்களும் ஆவார். ட்டிராட், ஹோல்பர்க், கோண்டர்செட், ஹெல்விடியஸ் முதலியவர்கள் புதிய இயக்கத் தலைவர்களாக இருந்தார்கள். 'என்ஸைக்ளோபீடியா' என்னும் பெரிய நூல் எழுதப்பட்ட போது மேலே கூறப்பட்டவர்கள் தங்களுடைய கருத்துகளைப் பிரதானமாய்க் கூறியதால் அவர்களுக்கு 'என்சைக்ளோபீடிஸ்ட்'கள் என்ற பெயரும் உண்டு.

கற்றறிந்த செல்வரிடமிருந்தும் மத்திய வகுப்பினரிடமிருந்தும் 'புரட்சி' லட்சாதி லட்சம் ஜனங்களிடையே பரவலாயிற்று. கல்வி அபிவிருத்தியும் புத்தக மலிவும் மகாஜனங்களின் புரட்சியைப் பூர்த்தி செய்யலாயின.

17ஆம் நூற்றாண்டில் கோபர் நிக்கஸ் வேலைபற்றியோ கலிலீயோ வேலை பற்றியோ எத்தனைபேர் அறிந்திருந்தார்கள்? அக்காலத்தில் எழுதப் படிக்க தெரிந்த 100க்கு 10 ஜனங்களுக்கும் கலிலீயோவைப் பற்றியும் புதிய வான சாஸ்திரத்தைப் பற்றியும் அதிகம் தெரியாதிருந்தது. ஆனாலும் கலிலீயோ புதிதாய்க் கண்டுபிடித்த செய்தி அய்ரோப்பாவின் முக்கிய இடங்களி லெல்லாம் காட்டுத் தீபோல் பரவலாயிற்று.' அக்காலத்தில்

ஆகாயத்தைப்பற்றி மனிதர்கள் கட்டிப்பொருள் என்று எண்ணியிருந்தார்கள். இப்போது அவ்வெண்ணம் உடைந்து சுக்கல் சுக்கலாக்கிவிட்டது!

இதே சமயத்தில் சரித்திரம் விஞ்ஞான வழி பற்றியதாயிற்று. கியாதி வாய்ந்த ஆங்கில சரித்திர ஆசிரியர்களான ஹ்யூம், கிப்பன் ஆகிய இருவரும் எழுதிய சரித்திரப் புத்தகங்கள், முந்தி வெளிவந்த சரித்திரங்களையெல்லாம் குழந்தைக் கதை களாக்கின. கிப்பன் கடைசியில் நாஸ்திகனாகிவிட்டார். அவர் சரித்திரத்தில் கடவுளுடைய ஒரு விரலும் வேலை செய்யவில்லை என்று கண்டார். பிரசித்தி பெற்ற வான சாஸ்திரியான லாப்லேஸ் என்பவர் 'வானமண்டலங்கள் என்று நம் கடவுள் செய்ததாக நம்பக் கூடிய அடையாளம் ஒன்றையுமே காண முடியவில்லை' என்றார்.

பரிணாமக் கொள்கையால் ஏற்பட்ட பலன் மிகவும் அபாயகரமானதாக இருந்தது. மனிதன் கீழான பிராணியிலிருந்து உயர்ந்தவன் என்றால் ஆத்மாவுக்கு அதிகமான இடமில்லை. இங்கிலாந்தின் ஹக்ஸ்லேயும் ஜெர்மனியின் ஹெகல்லும் டார்வினின் கொள்கையை மனிதனுக்குச் சம்பந்தப்படுத்தி ஆராய்ச்சி செய்தார்கள். உலகம் மிகுந்த பரபரப்பை அடைந்தது. டார்வின் மதத்திற்கிழைத்த பெரிய குற்றம் பரிணாம சித்தாந்தத்தை முதன் முதலாக வெளியிட்டதுதான். அந்தச் சிந்தாந்தம் படிப்பாளிகளுக் கெல்லாம் முன்பே தெரிந்துதான் இருந்தது. டார்வின் அதுபற்றி முப்பது வருஷம் அமைதியாய் உழைத்துப் பின்பு அதற்கான அஸ்திவாரத்தை அமைத்தான்.

நவீன சரித்திரம் சமநிலையை உண்டாக்கிற்று. கிரீஸிலும் ரோமிலும் உள்ள பெரிய நீதி சாஸ்திர நிபுணர்களெல்லாம் புதிய சரித்திரத்தில் தங்களுக்கும் பிரமாணம் தேடிக் கொண்டனர்.

'உள்ளது சிறத்தல்' என்னும் பரிணாமக் கொள்கை உலகமெங்கும் பரவலாயிற்று. வான சாஸ்திரம் முன்னேற்றமடையவே உலகங்கள் 'உள்ளது சிறத்தல்' என்னும் விதிப்படியே இயங்குகின்றன என்ற உண்மை மிகவும் விளக்கமாயிற்று. மக்களிடத்தில் புதிய அறிவு வளரலாயிற்று. விஞ்ஞானம் வெகு நன்றாய்ப் பிரகடனஞ் செய்யப்பட்டது. பாதிரிகளின் சமுதாய ஒழுக்கத் தவறுதல் காரணமாக அவர்கள் எதிர்க்கப்படுவதை ஜனங்கள் ஆதரித்தார்கள்."

## மதம் ஏன் ஒழிய வேண்டும்

பெரியாரவர்கள் 9-9-1934 ஆம் நாளிட்ட 'பகுத்தறிவு' இதழில் வெளியிட்ட ஆசிரியவுரை மூன்று பக்கங்களை நிரப்பியது. "மதம் ஏன் ஒழிய வேண்டும்.?'' என்ற தலைப்புக் கொண்ட அவ்வாசிரியவுரையில் குறிப்பிடத்தக்க சில பகுதிகளைப் எடுத்துக் காட்டுகிறேன்.

> "இந்த மதம் ஒன்றிரண்டு என்றில்லாமல் நூற்றுக்கணக்காய் இருந்து கொண்டு, பலவித கடவுள்களைச் சிருஷ்டித்து, பலவித மேலுலகங்களையும் மோட்சங்களையும் கற்பித்து மக்களை மயக்கி வருவதோடு வாழ்க்கை, ஒழுக்கம், நடத்தை என்பவைகளும் அவரவர் மதத்திற்கு ஒவ்வொரு விதமாய்க் கற்பிக்கப்பட்டு நடந்து வருவதும் அறிஞர்கள் அறியாததா?
>
> எந்த மதக்காரனும் தன்தன் மதத்தைப் பற்றிய ஆதாரங்களும் கொள்கைகளுமே எந்த தேசத்துக்கும் எந்தக் காலத்திற்கும் பொருத்தமானது என்றும் தன்தன் மதத்துக்குத் தலைவன் என்பவன் எவனோ, அவனே உலக மதத் தலைவனாக இருக்க வேண்டுமென்றும் செய்யப்படும் பிடிவாதங்களும் முரட்டுத் தனங்களும் எந்த மதத்தையும் மனித சமூக வாழ்வுக்கு வழிகாட்டி என்று ஒப்புக் கொள்ள முடியாமல் செய்கின்றது.
>
> இல்லாத வஸ்து தத்துவமில்லாத – மனதுக்குப் புரியாத விஷயத்துக்காக (ஆத்மா), இவ்வுலகப் பிரத்தியட்ச வாழ்க்கையையும், அடையும் இன்ப துன்பங்களையும் பற்றிய கவலை கூடாது என்றோ அல்லது இக்கவலையைவிட 'ஆத்மா' கவலையே பிரதானமென்றோ பெரிதென்றோ சொல்லப் படுமானால் அப்படிப்பட்ட மதத்திற்கு உலகில் மனித ஜீவன்கள் இடம் கொடுக்கலாமா என்று தான் கேட்கின்றோம்.
>
> இந்து மதமும் இஸ்லாம் மதமும் ஒழுக்கத்தைப் பற்றிப் போதிப்பதில் ஒன்றுக் கொன்று போட்டி போடுகின்றன. குற்றங்களில் எல்லாம் மிக இழிவான குற்றமாகக் கருதப்படும் குற்றமாகிய பெண்களைப் பலாத்காரம் செய்து கற்பழித்தல் – மானபங்கம் செய்தல் என்னும் குற்ற விஷயத்தில் இரு மதஸ்தர்களும் வங்காள மாகாணத்தில் எப்படி நடந்திருக் கின்றார்கள்? 'மாடர்ன் ரிவ்யூ' பத்திரிகை முஸ்லீம் மூர்க்கர்களால் 1931ஆம் ஆண்டு பலாத்காரம் செய்யப்பட்ட பெண்கள் (இரு மதங்களையும் சார்ந்த) எண்ணிக்கை 698 என்றும் அதே ஆண்டில் இந்து மூர்க்கர்களால் பலாத்காரம் செய்யப்பட்ட (இரு

மதப்) பெண்களின் எண்ணிக்கை 200 என்றும் வெளியிட்டுள்ளது. மதம் ஒழுக்கத்தை கூட்டு வாழ்க்கை ஒழுங்கு முறையை எங்கே எப்படி கற்பித்து இருக்கின்றது என்று மத பக்தர்களைக் கேட்கிறோம்.

கிறிஸ்தவ மதத்தைப் பற்றி எழுதினோம் என்பதற்குக் 'குடிஅரசு' பத்திரிகை நிறுத்தப்பட்டுப் போயிற்று. மகமதிய மதத்தைப் பற்றி எழுதினதற்காகப் 'புரட்சிப் பத்திரிகை நிறுத்தப்பட்டு போயிற்று. இந்து மதத்தைப் பற்றி எழுதுகிறோம் என்பதற்காகத் தினந்தோறும் நிமிஷந்தோறும் அடைந்து வரும் தொல்லை கணக்கு வழக்கில் அடங்காது".

பெரியாரின் கரவின்மை, வாய்மை, துணிவுடைமை ஆகிய பண்புகளை இவ்வெழுத்துகள் காட்டுகின்றன.

## மத ஆராய்ச்சி

"மத ஆராய்ச்சி" எனும் தலைப்பில் 'பகுத்தறிவு' 30-9-34ஆம் நாள் பதிப்பில் வெளியான நடப்புண்மைகளை எவராலும் மறுக்க வொண்ணாது.

"ஹிந்துக்களிடையே கிஞ்சிற்றும் "சகோதரத்துவம்" இல்லை என்று விளக்க இப்போது நடந்து வரும் ஹரிஜன இயக்கமும் ஹிந்துக்களிடையில் முதன்முதலாக சகோதரத்துவத்தை உண்டாக்கப் பாடுபடும் காந்திஜியை ஹிந்து மதத் தூண்களாகிய சனாதன தர்மிகள் அடித்து உயிருடன் தோலை உரிக்க எண்ணுவதுமே போதிய சாட்சியாகும்.

கிறிஸ்தவ கோவில்களில் கருப்புக் கிறிஸ்தவர்களிடையே பறைக் கிறிஸ்தவனென்றும் வேளாளக் கிறிஸ்தவனென்றும் வித்தியாசம் பாராட்டி, அவர்களுடைய கடவுள் சாட்சியமாக இருக்க மண்டைகளை உடைத்துக் கொள்ளுவதும், கருப்புக் கிறிஸ்தவனை வெள்ளைக் கிறிஸ்தவன் நிறங் காரணம் பற்றி உயிருடன் தோலை உரிப்பதும் கிறிஸ்தவ சகோதரத்துவத்தின் அளவைக் காட்டிக் கொண்டிருக்கிறது.

முஸ்லீம்கள் தாம் அகில உலக சகோதரத்துவ சம்பந்தமாக வெகு பெருமை பாராட்டிக் கொள்ளுகின்றார்கள். ஆனால் உண்மையில் இவர்களின் சகோதரத்துவமெல்லாம் இவர்களுடைய மஸ்ஜித்துக்குள்ளேதான். வெளியே பரமவிரோதிகளைப் போல

ஷியாவும் ஸுன்னியும் வஹாபியும் அஹமதியும் என்று பாவிக்கும் சகோதரத்துவமே.

ஏனைய மதத்தினரைவிட ஒரு பங்கு முஸ்லீம்கள் சமூக சகோதரத்துவத்தில் மேம்பட்டவர்களே. என்றாலும் இது போதுமானதாகி விடாது. 192 காசுகள் கொண்ட ஒரு ரூபாய் தேவைப்படும் இடத்தில் ஒரு சில காசுகள் ஒரு ரூபாய் மதிப்புப் பெற்று விடுமா? உள்ளதை உள்ளபடி உத்தேசித்திடும் நாம் உண்மையை வெளியிட்டால் முஸ்லீம்கள் ஒப்புக் கொள்ள வேண்டியதுதான். மசூதிகளுக்குள்ளும் சகோதரத்துவம் கிடையாது என்பதை நிரூபிப்போம், ஷியா மஸ்ஜித்தில் ஸுன்னிகள் போனால் மண்டை உடைந்து விடுகிறது. ஸுன்னிகளிடையிலேயே ஷாபி மசூதியில் ஹனபிக்கு உரிமைகள் கொடுக்கமாட்டார்கள். அஹமதிக்கு எந்த இதர முஸ்லீம் மஹ்ஜிதிலும் அவமரியாதைதான். வஹாபி முஸ்லீமுக்கு ஒரு காபிருக்குள்ள சகோதர வாஞ்சைதான்!

சமதர்மத்துக்கு அடிப்படையாகிய சகோதரத்துவமே மதம் பிடித்தவர்களால் இவ்வாறு கையாளப்பட்டு வருமானால் எந்த மதம் சமதர்மத்தைக் கடைப்பிடிக்கிறது என்று கண்டு கொள்ளுவது?"

மாலுக் என்பவர் எழுதி, பெரியாரால் 'பகுத்தறி'வில் வெளியாரால் வெளியிடப்பட்ட கருத்துகள் முற்றிலும் உண்மையே என்பதை மறுப்பதற்கில்லை.

இலட்சுமணபுரி பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் ஆர்.பி. பராஞ்சிபை அவர்கள் கல்கத்தா பல்கலைக்கழகத்தில் 'பகுத்தறிவு' என்னும் பொருளில் நிகழ்த்திய சொற்பொழிவின் கூறுகள் சிலவற்றைப் பெரியாரின் 'பகுத்தறிவு' கிழமையிதழ் அவரின் நிழற் படத்துடன் வெளியிட்டது. அக்கூற்றுகளில் .குறிப்பிட்ட சிலவற்றைக் காண்போம்.

"எந்தப் பிரச்சினை மீதும் சீர்தூக்கிப் பார்க்கும் சிந்தனையை மேற்கொள்ளுவதே உண்மையான பகுத்தறிவுவாதியின் கடமையாகும். தனது பகுத்தறிவின்படி மனப்பூர்வமாக வாழ்வது எளிதன்று. சிறுவிஷயங்களில் கூட ஒருவன் தனக்குச் சரியென்று பட்டபடி நடக்கும்போது பிறரால் பைத்தியக்காரப் பட்டம் சூட்டப்படுவது மட்டுமின்றி வேறு பல துன்பங்களுக்கும் ஆளாகின்றான். பண்டைக்காலத்தில் மதத்துவேஷம் நிகழ்த்திய கொடுஞ் செயல்களெல்லாம், ஏற்கனவே ஒப்புக்

கொள்ளப்பட்டிருந்த அபிப்பிராயங்களை மீறித் தங்கள் மனச் சாட்சிப்படி சிலர் நடக்கத் துணிவாக முன்வந்ததால் ஏற்பட்டவையே. இந்தக் காலத்திலுங் கூட மனச்சாட்சிப்படி நடப்பவர்களுக்குக் கஷ்ட நஷ்டங்கள் இல்லாமற் போகவில்லை. கடவுள், ஆத்மா, கர்மா முதலிய விஷயங்களில் விரோதமான அபிப்பிராயங்கள் கொண்டவரை சமீப காலம் வரை உலகம் பல கொடுமைகளுக்கு உட்படுத்தி வந்தது.

பெரும்பாலான மக்கள் மனமார ஆராய்ந்து பார்ப்பதை விட்டு, பொதுவாகத் தங்களைச் சுற்றிலும் பரவியுள்ள அபிப்பிராயங்களை அப்படியே ஒப்புக் கொண்டு விடுகிறார்கள். தனி மனிதர்களுடைய சாதாரணச் செய்கைகளைக் கவனித்தால் அவை பெரும்பாலும் மற்றவர்களைப் பார்த்து ஏற்றுக் கொண்டவையாகவே இருக்கின்றன. மனமார ஆராய்ந்து பார்ப்பதற்கு அங்கு சிறிதும் இடமில்லை. அபிப்பிராயங்களை முடிவு செய்து வெளியிடும்போதும், அவற்றைக் கையாளும் போதும் சீர்தூக்கிப் பார்ப்பது எவ்வளவோ முக்கியமானது. மனித சமூகம் இம்முறையைக் கைக்கொள்ளக் கற்றுக் கொள்ளும்போதுதான் அது விரைவாக முன்னேற முடியும்." ('பகுத்தறிவு': 16-12-1934).

இயன்ற மட்டும் சகல விஷயங்களிலும் சுயேச்சையான அபிப்பிராயத்தைக் கொள்ளுவதே கடமையாகுமென நான் வற்புறுத்தி வந்திருக்கிறேன். ஆனால் அதே சமயம் இந்த உரிமை மற்றவர்களுக்கும் அளிக்கப்பட வேண்டும். தனக்கு மட்டும் உரிமை வேண்டுமென்று மற்றவர்களுக்கு உரிமை மறுப்பவன் பகுத்தறிவுவாதியே அல்ல.

இதர அபிப்பிராயங்களுக்கும் ஒரு பகுத்தறிவுவாதி இடங்கொடுக்க வேண்டும். விவாதத்தின் மூலம் பிறரும் தனது கொள்கைகளை ஒப்புக் கொள்ளும்படிச் செய்வதும் மற்றவர்களுடைய வாதங்கள் பகுத்தறிவுக்குப் பொருத்த மானவையாகத் தோன்றும் பொழுது தனது கொள்கைகளைச் சீர் தூக்கிப் பார்ப்பதுவும் அவனது கடமையாகும்.

'பகுத்தறிவு'-கிழமையிதழ் துணிச்சலாக ஆற்றிய மடமையொழிப்புப் பணிகளில் தலைச்சிறந்ததாய்க் குறிப்பிடப்பட வேண்டியது டெக்கமாரன் அல்லது விகடக் கதைகள் என்னும் தலைப்பை ஏந்தி, அது வெளியிட்ட மதத்தலைவர்களின் மாபெரும் கொடுஞ்செயல்கள் பற்றிய தொடர்தான்.

1313ஆம் ஆண்டில் ஃப்ரான்ஸ் நாட்டில் பிறந்த பொக்காஷியோ என்பவர் தொடக்க நிலைப் பாதிரியாராகப் பயிற்சி பெற்று, மத நூல்களைப் பற்றிய ஆய்ந்தறிவும் மத நடவடிக்கைகள் தொடர்பான பட்டறிவும் நன்கு எய்தி பின், டெக்கமாரன் என்ற நூலினை எழுதி வெளிக்கொணர்ந்தார். மத நிறுவனத் தலைவர்களுக்குப் பேரிடியாய் வாய்த்த அந்நூலினைப் பாதிரிமார்கள் தீயிட்டுக் கொளுத்தினார்கள். ஆங்கிலத்தில் அந்நூலை மொழியாக்கம் செய்யக்கூடாது என்று இங்கிலாந்து காண்டர்பரி 'ஆர்ச் பிஷப்' கட்டளையிட்டுத் தடுத்தார். எனினும் ஷேக்ஸ்பியர், டெனிசன், லாங்ஃபெலோ முதலிய பெரும்புலவர்கள் அந்நூலைப் படிக்க நேர்ந்து தாக்கம் பெற்றனர் என்பது உண்மை வரலாறு. அறியாமையிலும் அடிமைத் தனத்திலும் அய்ரோப்பா எவ்வளவு ஆழ்ந்து கிடந்தது என்னும் நிலவரங்களை உலகுக்கு உணர்த்தும் அந்நூலை உடுமலை கனகராஜன் அவர்கள் மொழிபெயர்த்து வழங்க, பெரியார் தொடர்ந்து 'பகுத்தறி'வில் அச்சேற்றினார்.

1934 நவம்பரில் நடந்த இந்திய சட்டசபைத் தேர்தலில் ஜஸ்டிஸ் கட்சிக்கு வெற்றி கிட்டாமைக்கான காரணத்தை விளக்கும் கட்டுரையொன்றைப் பெரியார் 'பகுத்தறி'வில் வெளியிட்டார். 'வழிகாட்டி' என்னும் இதழின் ஆசிரியராகிய கல்லூரணி க.அ. புன்னைமுத்து அவர்களால் எழுதப்பட்ட அக்கட்டுரைத் தொடர் 2-12-1934ஆம் 'பகுத்தறிவு' இதழில் அச்சேறி, தொடர்ந்து வெளிவந்தது.

## பகுத்தறிவு கிடையாது

நம் மக்களின் பகுத்தறிவின்மையைக் குறிக்கின்ற அக்கட்டுரையின் ஆழம் கருதி, சில பகுதிகளை உங்களுக்குக் காட்டுகிறேன்.

> "இந்தியாவில் 100க்கு 92 பேர்கள் எழுதப் படிக்கத் தெரியாத தற்குறிகள். படித்தவர்கள் என்பவர்களிலும் 100க்கு 95பேருக்குப் பகுத்தறிவு கிடையாது. குருட்டுப் பழக்க வழக்கமும் பார்ப்பன மதக்கட்டுப்பாடுகளையொட்டிய வீண் சடங்குகளும் இந்தியர்களுக்குச் சிறந்த ஆசாரம்!
>
> மனிதனை மனிதன் ஏமாற்றி, மனிதனை மனிதன் அல்லல்பட வைத்து, மனிதனுக்கு மனிதன் பிறப்பினால் உயர்ந்தவன் - தாழ்ந்தவன், தொடக்கக் கூடாதவன், பார்க்கக் கூடாதவன், என்பவை போன்ற சூழ்ச்சியின் கொள்கையுடைய இயக்கத்தை ஆதரித்துப் போற்றிப் பேசி விருப்பங் கொள்வார்கள்!

வருஷமெல்லாம் உழைத்துப் போடும் ஊழியக்காரனுக்குக் கூலி கொடுக்கும் போது வயிற்றெரிச்சலோடு ஒன்று முக்காலாய் கடுகடுப்பாய்க் கொடுப்பார்கள். பஞ்சாங்க தட்சணை, அய்யர் தட்சணை, குருக்கள் கட்டளை, அர்ச்சனைக் கட்டளை, பரமண்டல யாத்திரைக் கனுப்புவோர் தட்சணை, குறிகாரர் தட்சணை, கோடாங்கி தட்சணை, அம்மன் கொண்டாடி - தட்சணை, ராமாயணக் காலட்சேப வரி, கோவில் வரி, திருவிழா வரி, பொங்கல் வரி, பண்டிகை வரி, ஜயந்தி வரி, உண்டியல் தட்சணை என்று வீணான வெறும் ஏமாற்றுக்காரர்களுக்குக் கொள்ளை கொள்ளையாய் அள்ளி அள்ளிக் கொடுத்துத் திருப்திப்படுத்துவார்கள்.

ஏழுபிள்ளைக்காரி வருகிறாள் என்றவுடன் வீடுதோறும் வேப்பிலையைக் கட்டுவார்கள். உண்மையை விளக்கி, அதை எடுக்கச் சொல்பவர்களைக் குறும்புத் தனமாய்ப் பழித்துப் பேசுவார்கள். இத்தன்மையாய் இந்தியர்களின் நிலைமையும் புத்தியும் இருந்து வருவதற்கு இந்தியப் பார்ப்பனர்களின் ஆதிக்கமும் அதிகாரமுமே காரணமாகும். இந்தியர்களுடைய குருட்டுப் பழக்க வழக்கங்கள், மூட நம்பிக்கைகள், வகுப்பு வேற்றுமைகள், வீண் சடங்குகள் முதலிய எல்லாக் காரியங்களும் பார்ப்பனியச் சாதிகள் - மதங்கள் என்பதிலிருந்து விளைந்து வருவதாகும்."

அக்காலத்தில் நாட்டு நிலவரங்களை நல்ல வண்ணம் படம் பிடித்துக் காட்டும் வாய்மை வழிகள் இவை.

## ஆதிதிரர்விடர் நலன் - நீதி கட்சியின் முனைப்பு

தமிழ்நாட்டுப் பார்ப்பனரல்லாதார் - குறிப்பாகத் தாழ்த்தப்பட்ட இந்நாட்டு முதற்குடி மக்களாம் ஆதிதிராவிடர் நலத்துக்காக நீதிக்கட்சி ஆட்சி எவ்வளவு அக்கறையும் முனைப்பும் காட்டியது என்பதை எடுத்துக்காட்டும் ஆசிரியவுரை யொன்று 23-12-1934 ஆம் நாளைய 'பகுத்தறிவு' இதழில் காணக்கிடைக்கிறது.

"பார்ப்பனரல்லாதார் இயக்கம் ஏற்பட்ட பிறகு இந்த நாட்டு 100க்கு 97 பேர்களாய் உள்ள பார்ப்பனரல்லாதார் சமூகத்திற்கு சிறப்பாகத் தாழ்த்தப்பட்ட சமூகத்துக்கு - எவ்வளவு பயன் அளித்து வருந்திருக்கிறது என்பதை உணர்ந்தால், பார்ப்பனர்களின் சூழ்ச்சியும் அவர்களுக்கு உதவி செய்யும் மூடர்களுடையவும்,

கூலிகளுடையவும் குலத்துரோகிகளுடையவும் யோக்கியதையும் சிறிதாவது விளங்காமல் போகாது.

இதற்கு சமீபத்தில் நடந்த ஒரு விஷயத்தைச் சின்ன உதாரணமாகக் காட்ட ஆசைப்படுகிறோம்.

இவ்வருஷம் போலீஸ் சப்இன்ஸ்பெக்டர் உத்தியோகத்துக்கு 87 பேர்கள் சர்க்காருக்குத் தேவை இருந்ததால், அதைப் பூர்த்தி செய்ததில், பார்ப்பனர்களுக்கு 16 ஸ்தானங்கள் மாத்திரம் கொடுக்கப்பட்டு விட்டு பாக்கி 71 ஸ்தாபனங்கள் பார்ப்பன ரல்லாதவர்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது. ஆங்கிலோ இந்தியருக்கு 1, தாழ்த்தப்பட்டவர்களுக்கு 11, கிறிஸ்தவர்களுக்கு 13, முகமதியர்களுக்கு 15 ஸ்தானமும் வழங்கப்பட்டு மற்ற ஜாதி இந்துக்கள் என்போருக்கு 31 ஸ்தானமும் வழங்கப்பட்டிருக்கிறது.

ஜனகணித விகிதாசாரப்படி பார்த்தால் பார்ப்பனர்களுக்கு அவ்வளவு (16) ஸ்தானங்கள் வழங்கியது மிகமிக அதிகமானாலும், ஜஸ்டிஸ் கட்சி என்பதாக 'உத்தியோக வேட்டைக் கட்சி' யொன்று இல்லாதிருக்குமானால் இந்த 87 ஸ்தானங்களும் அந்தத் திருக்கூட்டத்தாருக்கே போயிருக்கக் கூடும் என்பதில் ஏதாவது சந்தேகம் இருக்க முடியயுமா என்று கேட்கிறோம்.

ஜஸ்டிஸ் கட்சி ஏற்படுவதற்கு முன்பு தீண்டப்படாதார் நிலை எப்படி இருந்தது என்பது 40 வயதுக்கு மேல்பட்ட பார்ப்பனர் - பார்ப்பனரல்லாத 'தேசபக்தர் எவரும் அறிந்ததே. சர்க்காருடையவும் ஜஸ்டிஸ் கட்சியாருடையவும் ஆதிக்கத்தில் உள்ள ஸ்தலங்களாகிய உத்தியோகம், சட்டசபை, ஸ்தலஸ்தாபனம், ரயில்வண்டி, கச்சேரிகள், ரோடுகள், பள்ளிக்கூடங்கள் முதலாகிய இடங்களிலெல்லாம் தாழ்த்தப் பட்ட மக்களுக்கு உரிமை வழங்கி அவர்களது சுயமரியாதை காப்பாற்றப்பட்டிருப்பதை எவராவது மறுக்க முடியுமா என்று கேட்கிறோம். எந்தப் பார்ப்பனர் பள்ளிக்கூடத்திலாவது ஒரு ஆதி திராவிடருக்கு வாத்தியார் வேலையாவது கொடுத்தார்களா? மாணாக்கனாகவாவது சேர்த்துக் கொண்டார்களா?

நமது பார்ப்பனரல்லாதார் சமூகம், அவர்களது ஜனத்தொகைக்கு ஏற்ற விகிதாச்சாரம் உத்தியோகத்தில் பெறும் வரையிலும் அல்லது பார்ப்பனர்கள் தங்கள் விகிதாசாரத்துக்கு மேல்பட்ட விகித உத்தியோகம் தங்களுக்கு வேண்டாம் என்று சொல்லும்

வரையிலும் ஜஸ்டிஸ் கட்சி இருந்து தீர வேண்டியதே என்பது நமது அபிப்பிராயமாகும்.

அது "தேசத் துரோகக் கட்சி' ஆகினும் சரி, 'சர்க்கார் தாசர்கள் குலாம்கள் கட்சி' ஆகினும் சரி, அதனுடைய பிறப்புரிமையைப் பெற்ற பிறகு தான் அது வேறு வேலையில் இறங்க வேண்டுமே தவிர, அதை விட்டு விட்டுப் பார்ப்பனர்களுக்குப் பயந்து கொண்டு, 'எங்களுக்கு வகுப்புரிமைத் திட்டம் வேண்டிய தில்லை; யாரோ ஒருவர் இருவருக்கு மந்திரி பதவியோ பெரிய சர்க்கார் உத்தியோகமோ மாத்திரம் இருந்தால் போதும்; நாங்களும் பெரிய தேசபக்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்தான்' என்றால், அதைவிட ஈனத் துரோகமான கட்சி உலகில் வேறு இல்லை என்றுதான் சொல்லுவோம்."

'பகுத்தறிவு' ஒன்றரைப் பக்கத்திற்கு எழுதப்பட்ட நீண்ட ஆசிரியவுரையின் இந்தச் சில பகுதிகளே போதும் நீதிக்கட்சியின் நிறைவேற்றல்களையும் பெரியார் புரிந்த காவற் பணியையும் உணர்த்த.

## ஏழைகள் துயரம் நீங்க வழி

"ஏழைகள் துயரம் நீங்க வழி" என்னும் தலைப்பில் பெரியாரின் கருத்துகள் 9-9-1934ஆம் நாளிட்ட 'பகுத்தறி'வில் அச்சேறியிருக்கின்றன. அவற்றுள் சில பகுதிகளை நோக்குவோம்.

"இந்த தேசத்தில் ஏற்பட்டிருக்கும் ஜன சமூக அமைப்பின் அஸ்திவாரமே சரியாய் இல்லாமல் இருக்கிறது. இந்த அஸ்திவாரத்தின் மீது கட்டக் கூடிய எந்த அமைப்பும் ஜன சமூகத்திற்கு நன்மை அளிக்கக் கூடியதல்ல. ஒரு தகப்பன் பெற்ற பிள்ளைகளுக்கு எப்படி சம அந்தஸ்தும் சம உரிமையும் உண்டோ, அப்படியே ஒரு தேசத்தில் பிறந்தவர்களுக்கும் இருக்க வேண்டியது அவசியமாகும். அப்போதுதான் மக்கள் சுகமாக வாழ முடியும். ஏதோ தான் பிறந்த வேளையின் பலன் கஷ்டத்தை அனுபவிக்க வேண்யதுதான்; மற்றொருவன் சுகத்தை அனுபவிக்கப் பாத்தியதை யுடையவன் என்னும் சோம்பேறி எண்ணமே மக்களை அழித்து வருவதற்கு முக்கிய கருவியாய் இருக்கிறது.

இந்த எண்ணம் மாறுபட வேண்டியது அவசியமாகும். இதற்காக எவ்வளவு தியாகம் செய்தாலும் அது வீணாகாது. ஜனங்களின் மனோபாவமும் வாழ்க்கையை நடத்தும் முறையும் மாறினா லொழிய வேறொரு முறையாலும் நன்மை உண்டாகாது என்பது

திண்ணம். தற்போதிருக்கும் நிலைமையில் சுயராஜ்யம் வந்தால் குருட்டு நம்பிக்கையும் வைதீகமும்தாம் வலுக்கும். ஆகையால் ஏழைகள் துயரத்தைப் போக்க இந்திய சுயராஜ்யம் என்று இப்போது சிலரால் கருதப்படும் முறையில் யாதொரு நன்மையும் கிடைக்கப் போவதில்லை என்பது நிச்சயம்.

சமதர்மத்தையும் பொதுவுடைமையையும் அஸ்திவாரமாகக் கொண்ட ராஜாங்க அமைப்பொன்றே மக்கள் சமவாழ்க்கைக் குரிய வழியாகும் இதற்காக ஏன் நாம் தியாகம் செய்யத் தயாராயிருக்கக் கூடாது என்று கேட்கிறேன். மக்களின் உன்னத வாழ்க்கை அமைப்பை உத்தேசித்துச் சிலரோ பலரோ உயிரைத் தியாகம் செய்வது கூடப் பெரிய காரியம் ஆகுமோ வென்று கேட்கிறேன்.

மனிதனுக்கு மனிதன் எதற்காக வித்தியாசங்கள் காண்பிக்கப்பட வேண்டும்? அறிவுள்ள எவரும் இனி இந்நிலைமையைச் சகித்துக் கொண்டு ஒரு க்ஷணமாவது வாழமுடியாது. பலாத்காரம் கூடாது. இம்முறைகளை மாற்றப் பலாத்காரம் மாற்ற ஒரு பொழுதும் வெற்றியடைய முடியாது. பலாத்காரம் பலாத்காரத்தையே பெருக்கும்; உண்மை மறந்து விடும். ஆகையால் ஜனங்களுடைய மனதை மாற்றப் பாடுபட வேண்டியதுதான் முறை. நமது மக்களுக்கு விஷயத்தை அறியக்கூடிய பகுத்தறிவு விருத்தி யடைந்தாலொழிய மற்றெந்த ராஜிய முறையாலும் ஒரு நன்மையும் விளைந்து விடப்போவதில்லை".

பெரியாரின் இக்கருத்துகளை ஆர்வத்துடன் படித்து ஆழமாய்ச் சிந்திப்போருக்கு எவ்வளவு தெளிவும் தீர்ப்பும் கிட்டும்!

## அகில ரஷிய நூலாசிரியர் மகாநாடு

"அகில ரஷிய நூலாசிரியர் மகாநாடு" என்ற தலைப்பில் மொழிபெயர்ப்புக் கட்டுரை யொன்றை 28-10-1934ஆம் நாளிட்ட 'பகுத்தறிவு' தாங்கி வெளிவந்துள்ளது. சோவியத் யூனியன் என்னும் ஒரு புத்துலகு கட்டப்பட்டுக் கொண்டிருந்த காலத்தில் மாஸ்கோவில் புகழ் தோய்ந்த எழுத்தாளர் மாக்ஸிம் கார்க்கியின் தலைமையின் கீழ் கூட்டப்பட்ட அம்மாநாட்டை நேரில் கண்டறிந்த இங்கிலாந்து நூலாசிரியர் வில்லியம்ஸ் எல்லிஸ் எழுதிய கட்டுரையின் சில பகுதிகள்:

"அந்த நூலாசிரிய மகாநாடு ஒரு சாதாரண மகாநாடல்ல. ஜனக்கூட்டமோ சொல்ல முடியாது. புகழும் செல்வாக்கும் பெற்ற

பல ரஷிய எழுத்தாளர்களே அரங்கினுள் நுழைய முடியாமற் போய்விட்டதைக் கண்டபோது எனக்கு இடம் கிட்டியதை நல்வாய்ப்பு என்றே உணர்ந்தேன். மகாநாட்டுக்குள் மட்டுமல்ல, பந்தலுக்கு வெளியேயும் சுற்றியுள்ள பல தெருக்களிலேயும் ஒரே மக்கள் திரள்! மகாநாட்டுக்குள் செல்ல முடியாவிட்டாலும் நூலாசிரியர்களையாவது கண்டு மகிழலாமென்று வழியில் மக்கள் ஆர்வத்துடன் நின்று கொண்டிருந்தனர்.

சுரங்கத் தொழிலாளர், விவசாயிகள், சிப்பாய்கள், கப்பல் தொழிலாளர் முதலிய பல்வேறு தொழிலாளர்களால், முகவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு அனுப்பப்பட்டிருந்தனர். அவர்கள் மட்டுமல்ல; பனிரண்டு முதல் பதினாறு வயதுக்குட்பட்ட இளைஞர்களைக் கொண்ட 'பயனீர்ஸ்' என்னும் படையின் சார்பாகவும் தூதுவர்கள் வந்திருந்தனர். அவர்களில் பதினான்கு வயது நிரம்பாத ஓர் இளம் பெண் உரையாற்றிய பின், அவ்விளைஞர் குழுவினர் அனைவரும் ஒரே குரலில், நூலாசிரியர்களே! கவனியுங்கள். கிழக்கு சைபீரியாவைப் பற்றியும் அங்கே நாங்கள் செய்யும் பணியைப் பற்றியும் எங்கள் வாழ்க்கை முறை பற்றியும் நீங்கள் சரிவர எழுதுவது கிடையாது. எங்கள் வாழ்க்கை அங்கு எவ்வளவு சுவையாக இருக்கிறது, தெரியுமா? என்றனர். மகாநாட்டுத் தலைவரிடம் அவ்விளைஞர் படையினர் தங்களாலேயே எழுதப்பட்ட சிறுசிறு நூல்கள் அடங்கிய தொகுப்பைக் காட்டினர். அவர் அவற்றை நன்கு நோக்கிவிட்டு, சில குறைகளைச் சுட்டிக் காட்டி, அவற்றை நீக்குதற்கு வழிகாட்டினார்.

மகாநாட்டுத் தலைவர் கார்க்கி சிங்கம் போலத் தோன்றிய ஒரு சுறுசுறுப்புடைய கிழவர். அவரின் நீலக்கண்விழிகள் விண்மீன்களைப் போல மின்னின. குழந்தைகளிடம் அவர் அதிக அன்பும் கவனமும் காட்டினார்.

குழந்தைகளுக்கான எழுத்தாளர் மார்ஷாக் என்பவரைக் கண்டு நீண்ட நேரம் பேசிக் கொண்ருந்தேன். குழந்தைகளுக்கும் இளையவர்களுக்கும் வேண்டிய நூல்கள் எழுதுவதில் அவர் வல்லவர். அவர் படைத்த நூல்கள் அனைத்திலும் நகைச்சுவை நிரம்பியிருக்கும். குழந்தைகளுக்கான புத்தகங்கள் மிகப் பெரும் எண்ணிக்கையில் அங்கு விற்பனையாகின்றன!"

இச்செய்திகளால் சிறுவர்களுக்கும் அவர்களின் படிப்புக்கும் சிறப்புக் கவனம் அந்நாடு காட்டிய அறிவுடைமையை நாம் உணருகிறோம்.

## ஸ்டாலினும் எய்ச்.ஜி. வெல்ஸூம்

அக்காலத்தில் நடைமுறையில் இருந்த சோவியத் ஒன்றியத்தின் நல்லாட்சித் தலைவராக விளங்கிய ஸ்டாலினுக்கும் உலகப் பேரறிஞர் எய்ச்.ஜி. வெல்ஸூக்கும் நடந்த உரையாடல் ஒன்று 'பகுத்தறி'வில் வெளியிடப்பட்டது. அதன் பிழிவினைச் சுவைப்போம்.

**வெல்ஸ்:** நான் சமீபத்தில் அமெரிக்கப் 'பிரஸிடெண்ட்' ரூஸ்வெல்ட் அவர்களைச் சந்தித்துப் பொருளாதாரக் கொள்கைகள் பற்றிப் பேசினேன்.

**ஸ்டாலின்:** முதலாளித்துவத்தினாலேயே அமெரிக்காவில் அடிக்கடி பொருளாதார நெருக்கடிகள் ஏற்படுகின்றன. முதலாளிமார்களின் ஆதிக்கத்திற்கு இடங்கொடாததொரு பொருளாதாரத் திட்டத்தினை அமெரிக்க அரசு வகுக்க வேண்டும்.

**வெல்ஸ்:** பொருளாதாரத் திட்டத்தைத் தாங்கள் கூறுவது போல் மாற்றியமைத்தால், பொதுவுடைமை இயக்கத்திற்கு அரசே உடந்தையாக இருப்பதாக அல்லவா குற்றச்சாட்டு ஏற்படும்?

**ஸ்டாலின்:** பொதுவுடைமை இயக்கத்தை அமெரிக்க அரசு ஆதரிக்க வேண்டுமென்று நான் சொல்லவில்லை. ஏழைகள் - பணக்காரர் என்ற வித்தியாசம் நிலவும் நாட்டில் பொருளாதாரக் கஷ்டம் இருந்தே தீரும்.

**வெல்ஸ்:** பணக்காரர் - ஏழைகள் என்ற வேறுபாடு மனித சமூகத்தில் புகுத்தப்பட்டிருப்பது வருந்தத் தக்கது. இவ்வேற்றுமையை நான் முற்றாக வெறுக்கிறேன்.

**ஸ்டாலின்:** தங்களுடைய அபிப்பிராயங்கள் மேனாட்டு அறிஞர்களின் அபிப்பிராயங்கள் அனைத்தினும் முற்போக்கு வாய்ந்தவையாக இருக்கின்றன.

**வெல்ஸ்:** பலாத்காரத்தில் தங்களுக்கும் தங்களின் தோழர்களுக்கும் நம்பிக்கை இருக்கிறதா?

**ஸ்டாலின்:** எனக்கும் என்னுடைய கட்சியைச் சேர்ந்தவர்களுக்கும் பலாத்காரத்தில் நம்பிக்கை இருக்கிறது. ஆனால் காரணமின்றியும் சந்தர்ப்பம் தெரியாமலும் பலாத்காரத்தை உபயோகிக்க மாட்டோம். சில சந்தர்ப்பங்களில் பலாத்காரம் மிகவும் அவசியமென்று கருதுகிறோம்.

**வெல்ஸ்:** நான் பலாத்காரத்தின் தேவையை வெறுக்கவில்லை. ஆனால் சட்டத்திற்கு கட்டுப்பட்ட முறையிலேயே பலாத்காரத்தை உபயோகிக்க வேண்டுமென்பதே என்னுடைய கருத்து.

**ஸ்டாலின்:** சோவியத் ருஷ்யா பற்றி சிலர் கொண்டுள்ள தவறுதலான கருத்துகளைப் போக்கத் தாங்கள் பத்திரிகைகள் மூலமாக முயற்சி செய்ய வேண்டும்.

**வெல்ஸ்:** தாயகம் திரும்பியதும் சோவியத் ருஷ்யாவின் சிறப்பியல்புகள்பற்றிக் கட்டுரைகள் எழுதத் தீர்மானித் திருக்கிறேன். எனக்குப் பேட்டியளித்து விளக்கங்கள் கூறிய தங்கட்கு என் மனமார்ந்த நன்றி.

**ஸ்டாலின்:** அனைத்தையும் பொறுமையாய்க் கேட்ட தங்கட்கென் நன்றி. *('பகுத்தறிவு': 25-11-1934).*

*9-12-1934*ஆம் நாளிட்ட 'பகுத்தறிவு' இதழில் உலக மாத்தலைவர்களில் ஒருவரான தோழர் இலெனின் பற்றிய பேரறிஞர் வெல்ஸ் அவர்களுடைய கருத்து இடம் பெற்றுள்ளது.

"டெய்லி ஹெரால்ட்" பத்திரிகையில் கீழ்க்கண்டவாறு தன் கருத்தை எச்.ஜி.வெல்ஸ் வெளியிட்டிருக்கிறார்.

> **14 வருடங்களுக்குமுன் லெனினை விடப் பெல்போர் சிறந்தவர் என்று கருதிக் கொண்டிருந்தேன். ஆனால் இப்போது லெனினுடன் ஒப்பிடத் தகுந்த தகுதி பெல்போருக்குக் கிடையாதென்றே நான் கூறுவேன். க்ரெம்லினிலுள்ள சிறிய பேர்வழி பெல்போரை அறிவாலும் செயலாலும் மிஞ்சி விட்டார்! அய்ந்து வருடங்குட்பட்ட காலத்திலேயே இடையறாது அரும்பணியாற்றிச் செல்வாக்குப் பெற்றார் இலெனின். பெருந்தொல்லைகளுக்கிடையே ஆக்க வேலையை வெகுதிறமையோடு செய்தார்.**
>
> **பொதுவுடைமைக் கட்சியை அவர் தோற்றுவிக்காது இருந்திருந்தால், ருஷ்யப் புரட்சியினால் இராணுவ ஆட்சி தலைவிரித்தாடி, சமுதாயமே பாழ்பட்டுப் போயிருக்கும். அவர் கல்மனங்கொண்டவரன்று. புரட்சி இயக்கத்தினின்று வெகு திறமையாகத் தன் கவனத்தைச் சமுதாயத் துறையில் செலுத்தினார்.**
>
> **1920–ஆம் வருடம் அவரை நான் கண்டபோது, இளைஞனுக்குள்ள ஊக்கத்தோடு ருஷ்யாவை மின்சார**

மயமாக்குவதைக் குறித்துப் பயின்று கொண்டிருந்தார். இதனின்றுதான் ஏனைய ருஷ்யத் திட்டங்களெல்லாம் முளைத்தன!"

திட்டமிட்டு ஒரு புதிய உலகைக் கட்டுவதற்கு லெனின் மேற்கொண்ட முயற்சிகளை வெல்ஸ் வியந்து பாராட்டியது போலவே நாமும் செய்கிறோம்.

## 'தேசியம்' 'தேசாபிமானம்' என்பது பற்றிப் பெரியார்

'தேசியம்' என்பது பற்றிய பெரியாரின் தெளிவுரை யொன்று வெளியாகியுள்ளது 'பகுத்தறி'வில். அறிவூட்டும் அவ்வரிய கருத்துரையிலிருந்து ஒரு சில துண்டங்களை மட்டும் இங்கே எடுத்துக் காட்டுகிறேன்.

"பொதுவாகவே தேசியம் என்னும் வார்த்தையே அர்த்தமற்றது என்றும், மோசக் கருத்துக் கொண்டது என்றும், அதில் பணக்காரத்தன்மை பிரதிபலிப்பதோடு பணக்காரத்தன்மையை ஆதரிப்பதற்கென்றே கற்பிக்கப்பட்ட தென்றும் பலதடவை கூறி வந்திருக்கிறோம்.

நாம் மாத்திரம் அல்லாமல் பல மேல்நாட்டு அறிஞர்களும் தேசியத்தின் தன்மையைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஜான்சன் என்கின்ற ஒரு மேதாவி 'தேசியம்' (தேசாபிமானம்) என்பது வடிகட்டிய அயோக்கியத்தனம்' என்று – அதாவது பிழைப்புக்கு வழியில்லாதவர்களின் கடைசியான இழி பிழைப்புக்கு மார்க்கமானது' என்று கூறி இருக்கிறார். இந்த அபிப்பிராயம் முதல் தேசியம் தேசாபிமானம் என்கின்ற வார்த்தைகள் எங்கு உண்டானதோ, அங்கு ஏற்பட்ட அபிப்பிராயமே தவிர, இந்தியாவில் 'தேசிய விரோதிகள்', 'தேசத்துரோகிகள்', 'சர்க்கார்குலாம்கள்' என்று 'தேசாபிமானிகளால் கருதப்படுகின்றவர் களால் சொல்லப்பட்டதல்ல.

இந்திய சட்டசபை அரசியல் மூலம் ஜாதிய சம்பந்தமான – மனித சமூக வாழ்வுச் சீர்திருத்தம் சம்பந்தமான – அதாவது ஜாதி, மத, பழக்க, வழக்க சம்பந்தமாக ஒரு காரியமும் செய்ய முடியாது. தேசியவாதிகள், தேசாபிமானிகள் என்று தங்களைச் சொல்லிக் கொள்கிறவர்கள் இது விஷயங்களைச் சட்டசபைகளில் பேசவோ, சட்டம் செய்யவோ ஒப்புக் கொள்ளுவதில்லை. தேசமெல்லாம் ஒரே அபிப்பிராயமாய், அந்தந்த மத–ஜாதிக் காரர்கள் எல்லோரும் ஒப்புக் கொள்ளத் தக்கதாய் இருக்க

வேண்டும் என்கின்றதான ஆகாத நிபந்தனைகளை யெல்லாம் சொல்லுகின்றவர்கள் அவர்கள்.

இந்திய தேசாபிமானம் என்பதே இன்று இந்த தேசப் பணக்காரர்களுடைய சவுகரியங்களைக் குறியாய்க் கொண்டதும், பணக்காரர்கள் பண வருவாய் முறையைச் சிறிதும் மாற்ற முடியாததும், பணக்காரர்களுக்குப் பணம் பெருகிக் கொண்டு போவதைத் தடுக்க முடியாததும், தேசச்செல்வம் எல்லாம் ஒருவன் கைக்கே போவதானலும் ஆட்சேபிக்க முடியாததுமான கொள்கைதான். தேசம் தேச மக்களுக்குப் பொது; தேசத்தின் செல்வம், விளை பொருள், வர்த்தகம், போக்குவரத்து, தொழில் சாலை ஆகியவைகளின் பலன்கள் இந்த் தேசத்து எல்லா மக்களுக்கும் பொது என்ற சொல்லக் கூடிய காரியங்கள் தேசாபிமானத்தில் இல்லவும் இல்லை; அதை அதில் சேர்த்துக் கொள்ள மகாத்மாக்கள் என்பவர்கள் முதல் எந்த தேசபக்தர்களும் சம்மதிப்பதும் இல்லை.

இப்படிப்பட்ட யோக்கியதையுள்ள நபர்கள் தங்கள் ஸ்தாபனத்தையும் தாங்கள் சொல்லும் கொள்கைகளையும் தேசாபிமானம் என்ற சொல்லிக் கொண்டு, தங்களோடு சேராதவர்கள் எல்லாம் தேசாபிமானிகள் அல்ல - தேசதுரோகிகள் என்றும், தங்கள் ஸ்தாபனம் குதிரைக்குச் சமமானது என்றும் மற்றதுகள் கழுதைக்குச் சமமானது என்றும் சொல்லுகிறார்கள்.

இன்று தன்னை ஒருவன் தேசாபிமானி என்று சொல்லிக் கொண்டாலோ, அல்லது அந்த ஸ்தாபனத்தில் சேர்ந்து கொண்டாலோ, அவன் எவ்வளவு அயோக்கியனாய், ஒழுக்கங் கெட்டவனாய் இருந்தாலும் அவனுக்கெல்லாம் மேடை ஏறவும் வாயில் வந்தததைப் பேசவும் மனதில் நினைத்ததை எழுதவும் பொய் - பித்தலாட்டம் - போக்கிரித்தனங்கள் செய்யவும் யோக்கியதைகள் ஏற்பட்டு விடுவது என்றால், இப்படிப் பட்ட தேசாபிமானத்தையும் தேசியத்தையும் வெட்டிப் புதைக்க வேண்டாமா என்று கேட்கின்றோம். அதற்காக உயிர் போகுமளவும் பாடுபட்டு, அதற்காக உயிர்விட நேரிடுவதைப் பெரியதொரு கிடைத்தற்கரிய காரியம் என்ற கருத வேண்டாமா என்று கேட்கிறோம்'. ('பகுத்தறிவு': 9-9-1934).

இதே 'தேசாபிமானம்' பற்றிப் பெரியார் மீண்டும் தம் கருத்தினை மீண்டும் வலியுறுத்தியதை 14-10-1934ஆம் நாளிட்ட 'பகுத்தறிவு' நமக்குச் சொல்லுகிறது.

பெரியார் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பதுகளில் படம் பிடித்துக் காட்டிய நிலவரங்கள் இன்றைக்கும் பல்வேறு வடிவங்களில் நடப்பில் இருப்பதைக் காண்கிறோம். பெரியார் எத்துணை அடிப்படையான இன்றியமையாத - வாய்மைப் போரினை நடத்தினார் என்பதை நாம் இதன் மூலம் புரிந்து கொள்ள முடிகிறது.

"பார்ப்பனர்கள் தேசாபிமானம் என்கின்ற ஓர் ஆயுதத்தை வைத்துக் கொண்டே பார்ப்பனரல்லாத மக்களை ஏமாற்றி ஆதிக்கம் பெறப் பார்க்கிறார்கள். தேசாபிமானம் என்பது வயிற்றுப் பிழைப்பு மந்திரம் என்று நான் வெகு நாளாகச் சொல்லி வருகிறேன். ஏழை மக்களிடமும் தாழ்த்தப்பட்ட மக்களிடமும் அபிமானம் இருப்பதுதான் நியாயமானதும் பயனுள்ளதுமான காரியமாகும். ஏழை, பணக்காரன், மேல்ஜாதிக்காரன், கீழ்ஜாதிக்காரன் இவர்கள் எல்லோரிடமும் அபிமானம் வைப்பது முட்டாள்தனமேயாகும். இன்று தேசாபிமானத்தின் பேரால் ஆதிக்கம் பெற்ற நாடுகள் எல்லாம் கொடுங்கோன்மையால், வறுமையால் துன்பப்படுகின்றன. அது குடியரசு நாடாக இருந்தாலும் சரி, சுயராஜ்யம் பெற்ற நாடானாலும் சரி, எல்லாம் இந்தியாவைப் போலும், இன்னும் மோசமாயுந்தான் இருந்து வருகின்றன."

23-9-1934ஆம் நாளிட்ட 'பகுத்தறிவு' இதழில் காணப் பெறும் பெரியாரின் அறிக்கை யொன்றை, அதன் சுவையும் பயனும் கருதி, உங்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். "நான்" என்னும் தலைப்பில் வெளியான அவ்வறிக்கையாவது:

"நான் காங்கிரசில் சேர்ந்துவிடப்போகிறேன் என்பதாகப் பலர் எனக்குப் பரிசாகக் கடிதங்களும், சிலர் துர்எண்ணங்கள் கற்பிக்கிற கடிதங்களும் எழுதி வருகிறார்கள். காங்கிரசுக்கு மகத்தான செல்வாக்கும் பெருமையும் இருக்கின்ற காலத்தில் நான் அதில் சேருவதானால் எனக்கு உள் எண்ணம் ஏதாவது கற்பித்தால் அதற்கு அர்த்தமுண்டு. இன்று அப்படி ஒன்றும் இல்லை.

அது எப்படி இருக்கிறது என்றால், ஜஸ்டிஸ் கட்சியானது 1926-ஆம் ஆண்டு முடிவில் எப்படி கடைசி மூச்சு வாங்கும் நிலையில் ஜீவநாடிகள் எல்லாம் விழுந்துபோய், எடுத்துப் புதைப்பதற்கும் ஆளில்லாத ஸ்திதியில் இருந்ததோ அந்த நிலையில் - அதைவிட மோசமான நிலையில் - கொள்கையற்று, தலைவர்களற்று, மானமற்று, நாணயமற்று, அழுவாரற்று, சாகும்

தருவாயில் இருக்கும் காங்கிரசில் நான் போய்ச் சேருவதாய் இருந்தால் அதில் எனக்கு என்ன லாபம் அல்லது உள் எண்ணம் இருக்க முடியும்?

ஜஸ்டிஸ் கட்சியை ஆதரிக்கும் போது கூட எனக்கும் பலவித துர்எண்ணம் கற்பித்தார்கள். ஜஸ்டிஸ் கட்சி உச்ச ஸ்தானத்தில், சுயமரியாதையோடு, உயர் நிலையில் வாழ்ந்த காலத்திலும் அதன் தலைவர்களும் அரசாங்க (காபினெட்) மெம்பர்கள் முதல் மந்திரிகள் வரை என்னிடத்தில் 'மரியாதையும் பக்தியும்' இருப்பதாய் காட்டிக் கொண்டிருந்த காலத்திலுங்கூட அக்கட்சியால் ஒரு காதொடிந்த ஊசிகூட நான் எனது சொந்தத்திற்கு எதிர்பார்க்கவுமில்லை; பெறவுமில்லை. அதனால் நான் எவ்வித பெருமையும் அடைந்துவிடவுமில்லை என்பது எனது எதிரிகளுக்கும் தெரியும். மேலும் நான் என் சொந்த முறையில் அவர்களுக்காகப் பட்ட கஷ்டமும் நஷ்டமும் எனது நண்பர்களுக்குத் தெரியும்.

அப்படியிருக்க, காங்கிரசில் – அதுவும் உயிருக்கு மாத்திரமல்லாமல் – அது செத்தால் சுடுவதற்கும் இடமில்லாமல் மயானத்துக்கும் ஊசலாடும் இக்காலத்தில் காங்கிரசிடமிருந்து நான் என்ன எதிர்பார்த்துக் கொண்டு அதனிடம் நேசம் கொள்ள முடியும்? மனித சமூக நன்மையை – அதிலும் தாழ்த்தப்பட்ட, ஏழ்மைப்பட்ட பாமர மக்களின் நன்மைக்காக, காங்கிரசு மாத்திரமல்ல இன்னும் எக்கட்சியின் நேசம் கொண்டாலும் கொள்வேனே தவிர மற்றபடி என்னுடைய ஜீவனோ பாயத்திற்கோ வாழ்க்கை உபயோகத்திற்கோ எக்கட்சியிலும் சேரமாட்டேன் என்றும் சேரவேண்டிய அவசியமில்லை என்றும் தெரிவித்துக் கொள்கிறேன்."

தாழ்த்தப்பட்ட - ஏழ்மைப்பட்ட - பாமர மக்களுக்காக எந்தக் கட்சியோடும் நேசங்கொள்ள அணியமாக விருந்தார் அய்யா. அதாவது அவரின் குறிக்கோள் தாழ்த்தப்பட்ட - ஏழ்மைப்பட்ட மக்களின் நன்மை. அவரின் அணுகுமுறை எக்கட்சியுடனும் உறவு.

## நம் நாட்டுப் பெண்கள்

'பகுத்தறிவில்' பெரியார் வெளியிட்டதொரு குறிப்பு பெண்களின் முன்னேற்றத்தில் பெரியாருக்கிருந்த வியக்கத்தக்க அக்கறையைக் காட்டும்.

"நமது நாட்டில் பெண்கள் சமையலுக்கும் படுக்கைக்கும் மாத்திரம் பயன்படக்கூடியவர்கள் என்கின்ற எண்ணம்

வைதீகர்களுக்குள்ளும் வயோதிகர்களுக்குள்ளும் இருந்து வருவதோடு, பல பெண்களும் அப்படியே நினைத்துக் கொண்டுமிருக்கிறார்கள். சில பெண்கள் – சட்டசபையில் இருந்தவர்களும் – இருக்கப் 'பழக்கம்' பெற்றிருப்பவர்களும் கூட – பெண்களுக்குக் கும்மி, கோலாட்டம், கோலம், தையல், பூப்போடுதல் ஆகிய வேலைகள் சம்பந்தமான கல்வி கற்றால் போதும் என்றும் சொல்லிக் கொண்டு இருக்கிறார்கள்.

இந்தியாவில் சென்னையில் பெண்கள் பி.ஏ., பி.எல். படித்து வக்கீல்களாக – அட்வொகேட்டுகளாக ஆகியிருக்கிறார்கள் என்றால் பெண்களை எல்லாத் துறையிலும் ஆண்களைப் போலவே பார்க்க வேண்டும் என்கின்ற ஆசை உள்ளவர்களுக்கு எவ்வளவு மகிழ்ச்சி இருக்கும் என்பதை நாம் எழுதிக் காட்ட வேண்டியதில்லை.

அப்பெண் வக்கீல்களில் இருவர் தோழர் எம்.எ. கிருஷ்ணம்மாள், எம்.எ. எதுகிரியம்மாள் ஆகியவர்களாவார்கள். இவர்களின் மூத்த சகோதரியாரும் கொஞ்சகாலத்துக்கு முன்தான் பரிட்சையில் தேறி, அட்வகேட்டாக இருக்கிறார்கள். சில வருஷங்களுக்கு முன் மதராஸ் ஹைகோர்ட் ஜட்ஜ் தோழர் தேவதாஸ் அவர்கள் குமாரத்தியும் வக்கீல் பரிட்சையில் தேறி அட்வகேட்டாகிக் கோயமுத்தூரில் தொழில் நடத்தி வருகிறார்கள்.

தங்களைப் பெண்கள் பிரதிநிதிகள் என்று சொல்லிக் கொண்டு, வெட்கமில்லாமல் கும்மியும் கோலாட்டமும் கோலமும் தையலும்தான் பெண்கள் கற்கவேண்டுமென்று சொல்லுகிறார்களே, அப்படிப்பட்ட பெண்களுக்கு இனியாவது புத்தி வருமா?"

இவ்வெழுத்துகள் 'பகுத்தறிவு' 2-9-1934ஆம் நாளுக்குரிய இதழில் இடம் பெற்றவை.

ஆண்களுக்கு இணையாக வாழ்வின் எல்லாத் துறைகளிலும் பெண்கள் சமநிலை எய்த வேண்டுமென்பதே பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தின் குறிக்கோள். எனவே வழக்குரைக்கும் தொழிலில் விரல் விட்டு எண்ணக்கூடிய மகளிர் ஈடுபட்டபோது அத்தகைய காட்சியினைப் பார்க்க வேண்டுமென்கின்ற ஆசையுள்ளவர்களுக்கு எவ்வளவு மகிழ்ச்சியிருக்கும்!' என்று கருதினார் பெரியார். அதே வேளை பழைய மரபு வழியிலேயே மகளிர் வளர்க்கப்பட வேண்டுமெனப் பேசியோரைச் சாடினார் அவர். இன்று எண்ணற்ற பெண்டிர் வழக்குத்துறையில் ஈடுபடும் காட்சி பெரியாரின் உழைப்பு வழங்கிய வெற்றியே!

## குஞ்சிதம் அம்மையாரின் உரை

"பெண்களுக்கு அவசியமான கல்வி எது?" என்னும் தலைப்பில் ஆங்கிலத்தில் குஞ்சிதம் அம்மையார் ஆற்றிய உரையின் பகுதிகள்:

"ஆண்களுக்கு எந்த எந்தத் துறைகளிலெல்லாம் கல்வி பயில்விக்கப்படுகிறதோ, அவ்வளவு துறைகளிலும் பெண்களுக்கும் கல்வி போதிக்கப்பட வேண்டியது அவசியம். பெண்களுக்கு உடற்பயிற்சியும் உடற்கூற்றுக் கல்வியும் கற்றுக் கொடுக்க வேண்டியது எல்லாவற்றையும் விட மிக்க அவசியம். கர்ப்பத்தடை – பிரசவம், குழந்தையைப் பேணுதல், சுகாதாரம், அவசர சிகிச்சை முறைகள் முதலிய துறைகளில் கல்வி புகட்ட வேண்டியது அவசியம். பெண்களுக்கு ஆண்களைப் போலவே, கலெக்டர் முதல்.போலீஸ் கான்ஸ்டபிள் வரையிலுள்ள நிர்வாக உத்தியோகங்களையும் கொடுக்க வேண்டும். உலகில் பெண்கள் எல்லாத் துறைகளிலும் ஆண்களோடு போட்டி போட்டு வெற்றி பெற்றிருக்கின்றனர்." ('பகுத்தறிவு': 2–9–1934).

மதங்களால் விளைந்த பயன்கள் பற்றி சென்னை கே. கலியாணசுந்தரம் என்பவர் 'பகுத்தறி'வில் வெளியிட்ட கருத்துகளில் சில:

"ஒவ்வொரு மதத்தினரும் தங்கள் மதம் – தங்கள் கொள்கைகள் – தான் சிறந்தது என்று போற்றுவதோடல்லாமல், தங்கள் மதத்திற்காக உயிரை அர்ப்பணம் செய்யவும் பிற மதத்தினரை இம்சை செய்யவும் தயாராயிருக்கின்றனர். பண்டைய காலங்களிலும் அவ்வாறே செய்தனர். முகமதிய மதத்தைச் சேர்ந்த அரசர்கள் மற்றவர்களை இம்சித்ததாகவும் இந்துக்களில் சைவர்கள் சமணர்களைக் கழுவேற்றினதாகவும், ஏசு கிறிஸ்துவுக்கு விரோதமான மதத்தினர் ஏசுவை சிலுவையில் அடித்ததாகவும், 1572ஆம் வருடம் ஆல்பி ஜென்றாசிஸ் என்பவரை அழித்த குற்றத்திற்காகப் பதினாயிரம் ப்ராட்டஸ்டண்ட் மதத்தினரைக் கொலை புரிந்ததாகவும், நான்காம் ஹென்றி ஆரஞ்ச் வில்லியம் என்பவரைக் கொன்றவர்கள் மத வெறியர்களே என்றும், 1842ஆம் வருடம் ஜியார்ஜ் ஜேக்கப் ஹோலியாக் என்ற மதாச்சாரியார், கடவுளால் யாருக்கும் யாதொரு சிறு பயனும் விளையாதிருப்பதால் தன்போன்ற குருக்களுக்கு அரைச்சம்பளம் கொடுத்தால் போதும் என அபிப்பிராயப்பட்ட 'குற்ற'த்திற்காகச் சிறையில் அடைக்கப்

*பட்டதாகவும், 'அறிவின் காலம்' என்ற தாமஸ் பெயின் எழுதிய புத்தகத்தை விற்ற குற்றத்திற்காக அவருக்கு ஒன்பதாண்டுத் தண்டனை கொடுக்கப்பட்டதாயும், தந்தியையும் ரயிலையும் கொண்டு வந்த போது, அதை மதப்பிரச்சாரகர்கள் அதைக் கிறிஸ்துவின் பகைவன் வருவதைக் காட்டும் தீய சகுனம் என்று கூறி எதிர்த்ததாகவும், 1814ஆம் வருடம் ஆவி விளக்கு* (Gas Lamp) *ஏற்றும் முயற்சி நடத்தபோது மதப்பித்தர்கள் அதை மதவிரோதமானது என்று எதிர்த்ததாகவும், பதினெட்டாம் நூற்றாண்டில் நிறைவேறிய வாழ்க்கைக் காப்பீட்டுத் திட்டத்தை* (Life Insurance) *மதப்பித்தர்கள் கடவுள் சித்தத்திற்கும் மதத்திற்கும் அது விரோதம் என்று சொல்லி வெறுத்ததாகவும் அறிகிறோம்.*

*சமீபத்தில் அளவுக்கு மேல் குழந்தைகளை உற்பத்தி செய்யாமல் தடுக்கும்* (Birth Control) *சட்டத்தை ரோமன் கத்தோலிக்கர்கள் அது கடவுளுக்கு விரோதமானதென்று எதிர்த்ததற்குச் சரித்திரங்களும் பிரத்தியட்ச அனுபவங்களும் எவ்வளவோ இருந்து வருகின்றன.*

*இப்படிப்பட்ட நிகழ்ச்சிகளுக்கு ஆதாரமான மதம் மக்களைச் சமாதானமாக வாழச் சம்மதிக்குமா?" (பகுத்தறிவு: 16-9-1934)*

மதக் கொடுமைகளைப் பட்டியலிட்டுக் காட்டுகின்ற அரிய கட்டுரைத் துண்டம் இது.

## நீலாவதி அம்மையாரின் கட்டுரை

இந்தியச் சட்டமன்றத்தில் சாரதா என்பவரால் முன்மொழியப்பட்டு, பெரும் எதிர்ப்புக் கிடையே நிறைவேற்றப்பட்ட 'குழந்தை மணத் தடைச்சட்டம்" என்பது பயன்பாட்டில் மிக மட்டமான நிலையில் இருந்த வெட்கக் கேட்டை எதிர்த்து எழுப்பப்பட்ட பெண்ணியக்குரலாகத் திருச்சி வீராங்கனை நீலாவதியவர்கள் எழுதிய 'சாரதா சட்டமும் சர்க்கார் போக்கும்' என்ற கட்டுரை 30-9-1934ஆம் நாளுக்குரிய 'பகுத்தறி'வில் இடம் பெற்றது.

*"மனித சமூக வளர்ச்சிக்கு இன்றியமையாத பகுத்தறிவுக்கேற்ற மிகச் சர்வ சாதாரணமானதொரு சட்டம் கனம் பொருந்திய சர்க்காரிடமும் வன்னெஞ்சமும் சுயநலமும் கொண்ட வைதீகரிடம் என்ன பாடுபடுகின்றது! வெகுபாடுபட்டு இவ்வளவு*

எதிர்ப்புகளுக்கிடையில் நிறைவேற்றப்பட்ட சாரதா சட்டத்தின் தற்போதைய நிலை மிகமிக மோசமானது.

சட்டம் சட்டமாகவே யுள்ளது. குழந்தைக் கல்யாணங்கள் நடந்த வண்ணமாகவே உள்ளன. சட்டத்தைப் பொருட்படுத்தாமல் பிரிட்டிஷ் எல்லையிலும் திருட்டுத்தனமாய் இதர எல்லைகளிலும் நடந்த குழந்தைக் கல்யாணங்கள் ஆயிரக்கணக்கிலாகும். அதிலும் பெண்வீடோ மாப்பிள்ளை வீடோ பணக்காரராயிருந்து விட்டால் சங்கதியே வெளிவராது. உயிரற்ற – உணர்ச்சியற்ற – ஒரு சவத்தின் தன்மைக்கும், செத்த பாம்பை வித்தைக்காரன் ஆட்டி வேடிக்கை காட்டும் தன்மைக்குமே இன்று சாரதா சட்டத்தை ஒப்பிடலாம்.

தங்களுக்கு அநுகூலமல்லாத விஷயங்களில் சர்க்கார் காட்டும் மனப்பான்மை வெறுக்கத்தக்கது. சர்க்கார் பெண்களின் துன்பத்தைப் போக்கவல்ல முக்கிய முதற்படியாயுள்ள சாரதா சட்டத்திற்கு நொண்டிச் சமாதானம் கூறி வைதீகர்களோடு சேர்ந்து சண்டித்தனம் செய்வது எவ்விதத்தும் ஏற்கக் கூடியதல்ல.

இளம் பெண்களை இன்னலுக்குள்ளாக்கும் கொடுமையான பாலிய விவாகத்தை ஒழிக்க வேண்டியது சர்க்காரின் முதற் கடமையாகும். இந்திய மக்களின் நலத்திற்கே ஆதி அடிப்படையான சாரதா சட்டம் அமுலுக்கு வர இவ்வளவு இழுப்பும் பறிப்புமாய் இருப்பதென்றால் துக்கப்படாமல் இருக்க முடியுமா? சிலருக்கு நல்ல பிள்ளையாக இருக்கக் கருதி, இவ்வாறு நடந்து கொள்ளுவது அரசாங்கத்தாருக்கு நீதியாகாது.

சர்க்கார் இந்தியாவில் பெண்கள் படும் துன்பங்களைக் கவனித்து, சட்டத்தை உறுதியாக்கி, நாகரிக உலகின் நன்மதிப்பிற் குரியவர்களாய் விளங்க வேண்டும்."

நீலாவதி அவர்களின் கட்டுரையின் ஒருசில பகுதிகளே இவை. அறுபத்தைந்து ஆண்டுகளுக்கு முற்பட்ட அந்தக் காலத்தில் உலக வல்லரசாகத் திகழ்ந்த பிரிட்டிஷ் அரசின் பிடரியைப் பிடித்துக் குலுக்கிக் கண்டிப்புடன் பேசிய ஒரு தமிழச்சியின் வீரத்தை வியக்கிறோமல்லவா?

## புதிய ருஷ்யா

இங்கிலாந்து நாடாளுமன்ற உறுப்பினராகும் வாய்ப்புப் பெற்ற இந்தியரும் சோவியத் நாடுகளுக்குப் பெரியார் சென்று வர

உதவி புரிந்தவருமாகிய சக்லத்வாலா அவர்கள் வெளியிட்ட கருத்துகள் 'பகுத்தறி'வில் இடம்பெற்றன. அவற்றுள் சில:

> "தற்போது மாஸ்கோ ருஷ்யாவிற்கு மட்டுமல்ல – உலகிற்கே உபயோகமான ஒரு புதிய தத்துவத்தைச் செய்து காட்டிக் கொண்டிருக்கிறது. மாஸ்கோ மற்ற நகரங்கள் அதைப் பின்பற்றி நடக்கக் கூடிய ஒரு வழிகாட்டியாகும் நிலையினை அடையும் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.
>
> எழுத்துகள் இல்லாவிடங்களில் புதிய எழுத்துகள் படைக்கப் படுகின்றன. புதிய இலக்கியங்களைக் கொண்ட நூல்கள் ஆயிரக்கணக்கில் வெளியிடப்படுகின்றன. பத்திரிகை படிக்காத மனிதனே ரஷியாவில் கிடையாது. மக்கள் அறிவியலையும் பொறியியலையும் கல்விக் கூடங்களுக்குச் செல்லுகின்றனர். பெண்கள் பொறிகளை ஓட்டுவதில் திறம் பெற்ற ஃபோர்விமன்களாக (forewomen) வெளி வருகின்றனர். தொழிற்சாலைகளில் வேலைசெய்யும் பெண்–ஆண் தொழிலாளரின் வல்லமையைக் கண்டு வியந்து மெய்மறந்து நின்றேன்.
>
> லெனினுக்கு உதவியாக நின்ற புரட்சிக்காரர்கள் பல நூற்றாண்டுகளாக ஊன்றிக் கிடந்த அட்டூழியங்களை ஒரே நாளில் வெட்டி வீசி விட்டனர். பல நூற்றாண்டுகளாகத் தங்களைக் கசக்கிப் பிழிந்து வந்த பயங்கரக் கொடுமைகளைப் பஞ்சாய்ப் பறக்கடித்து மனித உணர்ச்சியையும் மனித விடுதலை யையும் பெற்று விட்டார்கள். ஒற்றுமை, வலிமை, முன்னேற்றம் ஆகியவற்றைக் கற்றுக் கொள்ளுவதற்கு எல்லா தேசத்து மக்களும் மாஸ்கோ நகருக்கே செல்ல வேண்டியதானதொரு யாத்திரைத் தலமாக அது விரைவில் விளங்கும்! நீங்கள் நம்பமாட்டீர்கள். ஆனால் நான் சொல்வது உண்மை. இந்த முன்னேற்றம் அவ்வளவு வியப்பாய் இருக்கிறது. (பகுத்தறிவு: 16, 23–9–1934).

## கலப்புத் திருமணம்

சாதி யொழிப்புத் திருமணங்களை எந்த அளவுக்கு மக்கள் ஏற்றுக் கொண்டு வரவேற்று ஊக்கப் படுத்தினார்கள் என்பதைப் புலப்படுத்தும் ஒரு செய்தியினை 9-12-34ஆம் நாளிட்ட 'பகுத்தறிவு' மூலம் அறிய முடிகிறது.

"திருச்சி–புத்தூர் பெத்தாச்சி செட்டியார் பங்களாவில் 2–12–34 ஞாயிற்றுக்கிழமை மாலை 4––30 மணிக்குப் புதுக்கோட்டைத் தோழர் இராஜம் அவர்களுக்கும் தஞ்சை ஜில்லா போர்டு இஞ்சினீயரிங் ஆஃபீஸ் தோழர் சிற்சபேசன் அவர்களுக்கும் கலப்பு மணம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

சுமார் 2000 ஆடவர் – பெண்டிர் கூடியிருந்தனர். தோழர் இராமசுப்பிரமணியம் மணமக்களை அறிமுகம் செய்து மாலை சூட்டியதும் தோழர் வக்கீல் டி.பி. வேதாசலம் தலைமையில் மணமக்கள் உறுதிமொழி கூறி,மாலை மாற்றிக் கொண்டனர். பின் தோழர்கள் சாமி. சிதம்பரனார், கே. முத்துச்சாமி வல்லத்தரசு, எஸ். நீலாவதி, சென்னை டிஎன். இராமன், டேவிஸ் ஆகியோர் பேசினர்.

மணமக்களின் நண்பர்களால் பல வெகுமதிப் பொருள்கள் வழங்கப்பட்டன. தலைவர் முடிவுரைக்குப் பின் வந்தனம் கூறி, இரவு 8 மணிக்கு முடிந்தது. தோழர் நீலாவதி ராமசுப்ரமண்யம் வீட்டில் ஒரு சமபந்தி விருந்து நடைபெற்றது". கலப்புத் திருமணங்களுக்கு ஏற்பிசைவு வழங்கி ஒப்புமளவிற்குத் தமிழ் மக்களைப் பெரியாரின் தன்மான இயக்கம் அணியப்படுத்தி விட்டது என்ற உண்மையை இச்செய்தி உறுதிப்படுத்துகிறது.

### சடங்குகளைக் கைவிடல்

மணவினையில் மட்டுமின்றி நீத்தார் பொருட்டுச் செய்யப்படும் வினையிலும் புரட்சிதோன்றி விட்டதைக் குறிக்கும் செய்தியினை 'பகுத்தறி'வின் 16-12-34ஆம் நாளுக்குரிய இதழ் பதிவு செய்துள்ளது.

"சமூகச்சீர்த்திருத்த வீரரும் திருநெல்வேலி விஸ்வகர்ம மகாநாட்டுப் பொக்கிஷதாரரும் 'குடிஅரசு' ஆரம்பகால முதல் சந்தாதாரருமாகிய தோழர் ஏ.குமாரசாமி ஆசாரி அவர்களின் தந்தையார் ஆறுமுக ஆசாரி அவர்கள் சென்ற 24–11–34ஆம் தேதி சனிக்கிழமை பகல் 12 மணிக்கு சூரன்குடியில் தமது இல்லத்தில் 78ஆம் வயதில் மரணமானார்.

யாதொரு சடங்கன்னியில் தகனம் செய்யப்பட்டதோடு 1–12–34ஆம் தேதி பத்தாவது தினத்தன்று சுற்றத்தார்களும் சீர்திருத்தப் பிரமுகர்களும் வந்திருந்தார்கள். சாப்பாட்டுக்கு மேல் நடந்த பொதுக்கூட்டத்தில் விஸ்வகர்ம சமூகத்தார் மரண காலங்களில் நடத்தி வரும் அர்த்தமற்ற சடங்குகளைக்

கண்டித்தும், அறிவுக்குப் பொருத்தமுள்ள முறையில் மேற்படி விசேடத்தை நடத்த் வேண்டுமென்றும் பேசி, இன்று வழிகாட்டிய தோழர் ஏ. குமாரசாமி அவர்களைப் பாராட்டிப் பேசினார்கள்."

திருமணப் புரட்சியை விட மிகப் பெரிய புரட்சி இது! 1934இல் சாவுச்சடங்குகளைச் செய்ய மறுக்கத் துணிந்த நெல்லைக்காரரின் அஞ்சாமையை வீரத்துளெல்லாம் தலையாய வீரம் என்றே மதிப்பிட வேண்டும்.

வைதீகச் சடங்குகளைப் புறக்கணித்தும் குருட்டுக் கட்டுப்பாடுகளை உடைத்தும் மக்கள் மேற்கொண்டு நிறைவேற்றிய புரட்சி நடவடிக்கைகள் பற்றிய செய்தித் துண்டங்கள் 'பகுத்தறிவு' - கிழமை இதழில் இடம் பெற்றன. அவற்றுள் சிலவற்றின் சுருக்கம்:

"திருச்சி – தமிழ்நாடு புரோகித மறுப்புச் சங்கத்தின் ஆதரவில் 14–7–34 மாலை 5 மணிக்கு நாராயண பிள்ளை சத்திர வளாகத்தில் தோழர் ஈ.வெ. ராமசாமி அவர்கள் தலைமையில் கோட்டையூர் தோழர் ஏ.எல். சிதம்பரம் (செட்டியார்) அவர்களுக்கும் சென்னை தோழர் டி. ரங்கம்மாள் (ரெட்டியார்) அவர்களுக்கும் சுயமரியாதை முறையில் விதவா விவாகம் சிறப்பாக நடைபெற்றது.

மணமக்கள் ஆசனத்தில் அமர்ந்ததும் இரண்டு நண்பர்கள் சமதர்ம கீதம் பாடினர். பின்னர் புரோகித மறுப்புச் சங்கத்தின் சார்பாகத் தோழர் ராமசுப்பிரமணியம் மணசம்பந்தமான விவரங்களைக் கூறி, தோழர் ஈ.வெ. ராமசாமி அவர்களைத் தலைமை வகிக்குமாறு கேட்டுக் கொண்டார். தலைவர் முகவுரையாகச் சில நிமிஷ நேரம் பேசி, மணமக்களை வாழ்க்கை ஒப்பந்த உறதிமொழிகளைக் கூறும்படி தெரிவித்தார். மணமகனும் மணமகளும் உறுதிமொழிகளைக் கூறினர். மணமக்கள் இருவரும் ஒருவருக்கொருவர் மாலையணிவித்து மோதிரம் மாற்றிக் கொண்டனர்.

திருச்சி, பொன்மலை, ஸ்ரீரங்கம் ஆகிய ஊர்களின் சுயமரியாதைச் சங்கத்தார்களால் உபசாரப் பத்திரங்கள் வாசித்துக் கொடுக்கப்பட்டன. பின்னர் 'குமரன்' ஆசிரியர் தோழர் முருகப்பா, டாக்டர் எம். கிருஷ்ணசாமி, தோழர்கள் மரகதவல்லி, அ. பொன்னம்பலம், முத்துச்சாமி வல்லத்தரசு, ஈ.வெ.ராமசாமி, நீலாவதி முதலியோர் மணமக்களை வாழ்த்திப்

பேசினர். இரவு 9-மணிக்கு நிகழ்ச்சி இனிது முடிந்தது. ('பகுத்தறிவு': 26-8-1934)

இம்மணவிழா பல சிறப்புகளை உள்ளடக்கியது. வைதீகமுறைக் கன்னிகாதானமாக இல்லாமல் வாழ்க்கையொப்பந்த நிகழ்ச்சியாக நடந்தேறியமை, சாதிக்கலப்புத் திருமணமாக அமைந்தமை, பெண்ணுக்கு மறுமணமாய் ஆகியமை, தாலி என்னும் அடிமைச் சின்னம் மணமகளின் கழுத்துக்குப் பூட்டப்படாமை, விழா மாலையில் நடத்தப் பெற்றமை, பெரியாரால் செய்து வைக்கப்பட்டமை முதலிய பெருமைகளெல்லாம் இம்மணவிழாவிற்கு இருந்தன.

திருமணத்திற்குப் பின் புரட்சிச் சின்னங்களாகிய இணையர் இருவரும் தமிழர்கள் கடல் கடந்து குடியேறியிருந்த கீழை நாட்டுப் பகுதிகட்குச் சென்றபோது அங்கமைந்த நகரங்களில் நடத்தப்பட்ட வரவேற்பு - வாழ்த்து நிகழ்ச்சிகளைப் 'பகுத்தறிவு'ப் பக்கங்களில் படிக்கிறபோது, பெரியாரின் தன்மானக் கொள்கைகள் எந்த அளவுக்கு அயலகத்திலும் தாக்கம் செய்திருந்தன என்னும் வியப்பு மேலோங்குகிறது!

மாலை வேளையில் மணமக்கள் மாலைகளை மட்டும் மாற்றிக் கொள்ள, சுருக்கமாய் நிறைவேற்றப்பட்ட மணவினை யொன்றைப் பற்றிய எடுத்துக்காட்டான செய்தி 23-9-34ஆம் தேதி மாலை 4 மணிக்கு அருப்புக்கோட்டை பகுத்தறிவு நிலையத்தில் பஞ்சாயத்துப் போர்டு உபதலைவர் தோழர் எஸ்.எஸ். பழனிச்சாமி அவர்கள் தலைமையில், முத்து ராமலிங்கபுரம் தோழர் ஆர். ராமசாமி அவர்களுக்கும் தோழர் வெ.சு. ராமசீரங்கம்மாள் அவர்களுக்கும் தாலிகட்டுதல், புரோகிதச் சடங்குகள் செய்தல் என்ற மூடப்பழக்கங்கள் எல்லாவற்றையும் அறவே ஒழித்து, சிக்கன முறையில் மாலை மட்டுமே தம்பதிகள் மாற்றிக் கொண்டு, வெகு சிறப்பாய்த் திருமணம் நடந்தேறியது.

உள்ளூர்-வெளியூர்களில் இருந்து நூற்றுக் கணக்கான ஜனங்கள் விஜயம் செய்திருந்தனர். அவ்வமயம் தோழர்கள் ஜான்ரெட்டி, புன்னை முத்து, சி.சு.மு.சு. அருணாசலம், ராமசாமி, திரு. கருப்பையா, ஜான்ஜெீப்மணி அம்மாள் ஆகியோரால் சுயமரியாதைத் திருமணம் என்னும் பொருள்பற்றி உபன்யாசம் செய்யப்பட்டது. வந்திருந்த எல்லோருக்கும் பகுத்தறிவு நிலையத்தார் ஒரு சமபந்திச் சிற்றுண்டி விருந்து நடத்தி, தம்பதிகளைச் சந்தோஷமாக வழி அனுப்பினார்கள்" இச்சிறிய செய்தியில் எத்துணை அரிய பெரிய புரட்சி நிறைந்திருக்கிறது!

'இதுவன்றோ சிக்கனத் திருமணம்!' என்று பாராட்டிப் போற்றுதற்குரிய ஒரு தன்மான முறை மணம் கருநாடக மாநிலத்தில் குடியேறிய தமிழர் நடத்திக் காண்பித்துள்ளனர்.

> "பெங்களூர் பகுத்தறிவுச் சங்கத்தின் ஆதரவில் தோழர் கே.எம். முனிசாமி அவர்களுக்கும் தோழர் முனியம்மாள் அவர்களுக்கும் 18-11-34 காலை 10 மணிக்குத் தோழர் பி.எம். கிருஷ்ணசாமி தலைமையில் சுயமரியாதை முறைப்படி மணமகன் மணமகள் வாழ்க்கை ஒப்பந்தம் நடைபெற்றது.
>
> பின்னர் தோழர்கள் எம். பொன்னுசாமி, இ. கிருஷ்ணசாமி, இ.எஸ். மணியம், எம்.எஸ். சுந்தர் முறையே, 'மணவாளன் - மணவாட்டி நடக்க வேண்டிய முறை', 'சீர்திருத்தம்', 'சுயமரியாதைத் திருமணம்', மூடப்பழக்க வழக்கங்கள்' என்பவை பற்றியச் சொற்பொழிவாற்றிய பின்னர், தோழர் பார்த்தசாரதியால் வாழ்த்துப் பாடப்பட்டு, தலைவர் முடிவுரையுடன் திருமணம் முடிந்தது"

என்ற 25-11-34 ஆம் நாளிட்ட 'பகுத்தறிவு' தெரிவிப்பதைக் கருதுகையில், இத்தகைய மணமுறையை அனைவரும் கடைப்பிடித்தால், குடும்பங்கள் எவ்வளவு உருப்படும் என்று கூவத் தோன்றுகிறது!

சாதியொழிப்பு, மத மறுப்பு, கைம்மை அழிப்பு, நாள் - கோள் கருதாமை, சடங்குகளைக் கடைப்பிடியாமை, தாலி என்னும் சின்னம் அணியாமை ஆகியவற்றுடன் சிக்கனத்தை நல்ல வண்ணம் கைக்கொண்டால்தான் தன்மான முறை என்பது முழுமையும் செம்மையும் பெறும்.

## பிற இதழாளர்களை பெரியார் ஊக்குவித்தார்

பெரியார் பிற இதழாளர்களையும் ஊக்குவிக்கும் பண்பாளர் என்பதை முன்னரே பார்த்தோம். தொடர்ந்து அவ்வாறே அவர் ஒழுகி வந்தார் என்பதற்கு 'பகுத்தறிவு' கிழமையிதழில் வெளியான மதிப்புரைகள் சான்று பேசுகின்றன.

> "மாயவரம் தோழர் சி. நடராஜன் அவர்களை வெளியிடுவோராகவும் பொறுப்பாளராகவும், மாயவரம் வக்கீல் தோழர் கே. லட்சுமி காந்தம் பி.ஏ., பி.எல். அவர்களைக் கவுரவ ஆசிரியராகவும் கொண்டு மாயவரத்திலிருந்து வெளியாகும் 'வெற்றி முரசு' என்னும் வாரப்பத்திரிகை நமக்கு அனுப்பப்பட்டதைக் கண்டு மகிழ்ந்தோம்.

இது 'பகுத்தறிவு'க்கு உற்ற தோழனாகவும், சுயமரியாதை சமதர்மக் கொள்கைகளுக்கு வழிகாட்டியாகவும் திகழ்வதுடன், தஞ்சை ஜில்லாவுக்கு என்று தக்கதொரு பத்திரிகை இல்லாததால் அதை முன்னிட்டும் வெற்றி முரசை நாம் முழு மனதோடு வரவேற்கின்றதுடன், தமிழ் மக்களையும் – சிறப்பாகத் தஞ்சை ஜில்லா வாசிகளையும் ஆதரிக்குமாறு வேண்டுகிறோம்." (பகுத்தறிவு: 26-8-1934).

"ஜோலார்ப்பேட்டை தோழர் வி. பார்த்தசாரதி அவர்களைப் பதிப்பாளராகவும் பொறுப்பாளராகவும் ஆசிரியராகவும் கொண்டு ஜோலார்ப்பேட்டையிலிருந்து வெளிவரும் 'சமதர்மம்' என்னும் வாரப்பத்திரிகை நமது பார்வைக்கு வந்தது.

இது நமது சமதர்மக் கொள்கையையும் பகுத்தறிவுத் தத்துவத்தையும் வடஆர்க்காடு ஜில்லா விஷயங்களையும் தாங்கி சுயமரியாதை இயக்கத்துக்கு உற்ற தோழராக விளங்குவதாகும். வடஆர்க்காடு ஜில்லாவுக்கு தக்கதொரு பத்திரிகை இல்லாத சமயம் தோழர் பார்த்தசாரதி அவர்கள் 'சமதர்மம்' என்னும் பேரால் ஒரு வாரப் பத்திரிகை ஆரம்பித்ததானது மிகவும் மகிழ்ச்சியுடன் வரவேற்கத்தக்கது என்பதில் யாருக்கும் அபிப்பிராய பேதம் இருக்காது. இதைத் தமிழ் மக்களும் – குறிப்பாக வடஆர்க்காடு ஜில்லா வாசிகளும் ஆதரிக்க ஆசைப்படுகிறோம்". (பகுத்தறிவு: 26-8-1934).

"திருச்சி உறையூர் தோழர் எம். திருமலைசாமி அவர்களை ஆசிரியராய்க் கொண்ட 'நகரதூதன்' வார வெளியீட்டின் நான்காம் போரின் முதல் வெற்றி - அதாவது நான்காமாண்டின் முதலிதழ் வரப்பெற்றோம்.

"இது சிறப்பாகத் திருச்சி, ஸ்ரீரங்கம் நகரங்களின் நன்மைக்காகவும் பொதுவாகத் திருச்சி ஜில்லாவாசிகளின் உரிமைகளுக்காவும் உழைத்து வெற்றி கொண்டுள்ளது என்பது அனைவரும் அறியாததல்ல. அப்படி இருந்தும் சுயமரியாதைக் கொள்கைகளையும் சமதர்மக் கொள்கைகளையும் தொழிலாளர்களின் உரிமைகளையும் துணிச்சலுடன் வெளிப்படுத்தி வருகிறது. 12 பக்கங்களிலிருந்து 16 ஆக்கி, மாகாணப் பொதுச் செய்திகளையும் வெளியிடப்போவதாக ஆசிரியர் அறிவித்துள்ளார். பொதுமக்கள் இதனை அன்புடன் ஆதரிக்கக் கோருகிறோம்." (பகுத்தறிவு: 23-9-1934).

இம்மதிப்புரைகள் இதழாளர் பெரியாரின் பண்பட்ட பொதுநோக்கையும் தன்னலமின்மையும் நிலையூன்றுகின்றன!

## பார்ப்பனீய ஒழிப்பு நாள்

தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தில் பார்ப்பனர்களைச் சேர்த்துக் கொள்ளலாம் என்ற தீர்மானம் அக்கட்சி மாநாட்டில் கொண்டு வரப்பட்டபோது, பெரியார் வெளியிட்ட கருத்து அவர் எத்துணை சிறப்பு நிரம்பிய சான்றோர் என்பதைச் சாற்றவல்லது.

> "தோழர்களே! பார்ப்பனர்களைச் சேர்த்துக் கொள்ளலாமா என்கின்ற பிரச்சினையானது ஜஸ்டிஸ் கட்சியில் 1926ஆம் வருஷம் முதல் பேசப்பட்டு வருகிறது. என்னைப் பொருத்தவரை நான் ஆட்சேபித்தே வந்திருக்கிறேன். நான் சென்ற வாரப் பத்திரிகையில் 'பார்ப்பனீய ஒழிப்பு நாள்' என்பதாக வருஷத்தில் ஒரு நாள் கொண்டாட வேண்டும் என்று எழுதி இருக்கின்றேன்.
>
> பொதுவாக ஒரு விஷயத்தை உங்கள் ஞாபகத்துக்குக் கொண்டுவர ஆசைப்படுகிறேன். பார்ப்பனர்களைச் சேர்க்கக் கூடாது என்று ஏற்படுத்திக் கொண்டிருக்கும் ஒரு விதியும் வகுப்பு வாரிப்பிரதிநிதித்துவம் வேண்டும் என்கின்ற ஒரு விதியும் நமக்குள் இருந்து வருகின்றது. என்றாலும் இது எப்போதும் இருக்க வேண்டியதா? அல்லது எவ்வளவு காலத்துக்கு இருக்க வேண்டியது என்று யோசித்துப் பாருங்கள். இந்திய மக்கள் மாத்திரம் அல்லாமல் உலக மக்கள் எல்லோருமே சகோதரர்களாக – தோழமையுடன் – வாழ வேண்டுமென்றும் வகுப்பு வித்தியாசங்கள் என்பது எங்கும் எந்த ரூபத்திலும் காணக்கூடாது என்றும் கூப்பாடு போடுகின்ற நாம் எப்போதும் பார்ப்பனர்களைச் சேர்க்கக்கூடாது என்று சொல்ல முடியுமா?
>
> சர்வ ஜன சகோதரத்துவத்துக்கும் வகுப்புப் பிரிவு மறைவுக்கும் தான் பார்ப்பனர்களைச் சேர்க்கக்கூடாது என்றும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் வேண்டும் என்று சொல்லுகின்றோம். இது சாதாரண அறிவுடையவர்களுக்கு விளங்காது. சிறிது கூர்மையான பகுத்தறிவைப் பயன்படுத்திப் பார்ப்பவர்களுக்கு விளங்கிவிடும்!
>
> பார்ப்பனர்களை விலக்கி வைப்பது என்பதில் பார்ப்பனீயம் ஒழிந்து விடுகிறது. வகுப்பு வாரிப்பிரதிநிதித்துவம் என்பதில் வகுப்புகளின் உயர்வு – தாழ்வு வித்தியாசங்கள் ஒழிந்து சமநிலைக்கு வரநேருகின்றது. இவற்றின் பலனாய் ஒற்றுமையும்

**சமத்துவமும் வந்து பிரிவும் பேதமும் தானாய் மறைய நேரிடுகின்றது.**

**இந்த நிலை ஏற்படும் வரையில்தான் நாம் பார்ப்பனர்களைச் சேர்க்கக் கூடாதென்றம் வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவம் இருக்க வேண்டுமென்றும் சொல்லுகின்றோமே ஒழிய, இந்த உலகம் உள்ளவரையில் – மனித சமூகம் உள்ள வரையில் கூடாது என்றும் வேண்டும் என்றும் நாம் கருதி ஏற்படுத்தவில்லை.**

**இப்போதுள்ள கேள்வியெல்லாம் பார்ப்பனர்களைச் சேர்த்துக் கொள்ளவும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை எடுத்து விடவும் தகுதியானதும் அவசியமானதுமான காலம் வந்துவிட்டதா என்பதேயாகும். என்னுடைய அபிப்பிராயத்தில் இல்லையென்றே கருதுகின்றேன்." (பகுத்தறிவு: 2–9–1934).**

அன்றிலிருந்து இன்றுவரை பெரும் ஆய்வுக்கும் கடும் சொல்லாடலுக்கும் இலக்காகி, அவிழ்க்க முடியாச் 'சிக்கல்களாக'- விடுவிக்க வொண்ணாப் 'புதிர்களாக' நிலவி வந்திருக்கும் இரண்டு அடிப்படையான செய்திகளில் பெரியார் எத்துணை தெளிவாக இருந்திருக்கிறார் என்பதை அவரின் இந்த அழகான கூற்று நிறுவுகிறது.

இந்திய மக்கள் மட்டுமல்லாது உலக மக்கள் அனைவரும் சகோதரர்களாகத் தோழமையுடன் வாழ வேண்டும் என்பதுவே அவரின் குறிக்கோள். அதை எய்த, பார்ப்பனியத்தை முற்றாக ஒழித்தாக வேண்டும் என்பது அவர் மேற்கொண்ட நிலையெடுப்புகளில் ஒன்று. அதே போன்று வகுப்புப் பிரிவுகள் மறைந்தொழிய வேண்டுமென்பது பெரியாரியக்கத்தின் குறிக்கோள். அந்நிலையை அடைய ஒவ்வொரு வகுப்புக்கும் உரிமைப் பங்கு தேவை என்பது அவ்வியக்கத்தின் நிலையெடுப்பு. முன்னவை இலக்கு - Creed; பின்னவை சூழ்வு Strategy. சூழ்வுகள் தற்காலிகமானவை; இலக்குகள் நிலையானவை. ஒன்று மாறாத நோக்கு; இன்னொன்று மாற்றத்திற்குரிய போக்கு.

உலகம் உள்ள மட்டும் - மாந்த இனம் வாழும் மட்டும் குறிப்பிட்டவை கூடாதென்றோ வேண்டும் என்றோ விடாப்பிடியாக நிற்பது பெரியாரின் நெறியன்று என்பதை அவரின் கூற்று அய்யத்திற்கிடமின்றிப் புலப்படுத்தும்.

'உயர் எண்ணங்கள் மலரும் சோலை' எனப் பெரியாரைப் புரட்சிக் கவிஞர் மதிப்பீடு செய்தமையின் பொருத்தத்தைக் கரவற்ற அவரின் இக்கருத்துரை ஊன்றி உறுதி செய்கின்றது.

குறுகிய மனப்பான்மை கொண்ட இனவெறியாளர் அவர்; வகுப்புகளைத் தூண்டிவிட்டு மக்களின் ஒற்றுமையை அவர் குலைத்தார். உண்மையாகவே இனவெறிகொண்டவர்களும் மெய்யாகவே மக்களின் ஒருமைப் பாட்டினை விரும்பாதவர்களும் பெரியாரின் மீது சுமத்திய இவ்விரண்டு குற்றச்சாட்டுகள் எவ்வளவு போலியானவை என்பதைப் பெரியாரின் இத்தெளிவுரையைப் படித்துக் கருதிப் பார்ப்போர் எளிதாகப் புரிந்து கொள்ளுவர்.

நல்ல வாய்ப்பாகப் 'பகுத்தறிவு' - கிழமையிதழ் பெரியாரின் இவ்வுரையினைப் பதிவு செய்து பல்லோர் படிக்கத் தந்தது. 'பகுத்தறிவு' அவ்வாறு நடந்திராவிட்டால் பொதுவாக மக்களுக்கும், குறிப்பாகப் பெரியாரியல் ஆராய்ச்சியாளர்களுக்கும் பேரிழப்பொன்று ஏற்பட்டிருக்கும்."

## சந்தாதாரரை சேர்த்தல்

"இதை நீங்கள் தயவு செய்து கவனியுங்கள்" என்ற தலைப்பில் 2-12-1934ஆம் நாளுக்குரிய 'பகுத்தறிவு' இதழில் ஒரு வேண்டுகோள் அறிவிப்பு வெளியாயிற்று.

"நீங்கள் ஒவ்வொருவரும் எப்படியாவது கஷ்டப்பட்டு இரண்டு அல்லது ஒரு சந்தாதாரரையாவது சேர்த்து, 8 அணாவாவது அட்வான்ஸ் வாங்கி, விலாசத்தோடு நமக்கு அனுப்பிக் கொடுங்கள். ஏன்?

'பகுத்தறிவு' ஒரு தனிமனிதனுடைய சுயநலத்திற்கோ, ஒரு தனிவகுப்பாருடைய நன்மைக்கோ நடைபெறுவதல்ல.

ஆனால் இன்று ஆதிக்கத்திலிருக்கும் வகுப்பாருடைய விஷமமும் சூழ்ச்சியும் நிறைந்த எவ்வளவோ எதிர்ப்புகளையும் தொல்லைகளையும் சமாளித்துக் கொண்டு, இழிவுபடுத்தப்பட்ட மக்களுக்காகவும் ஏழ்மைப்படுத்தப்பட்ட மக்களுக்காகவும் பின்தள்ளப்பட்ட மக்களுக்காவும் நடைபெறுகின்றது.

இந்த வருஷத்தில் மாத்திரம் 3 தடவை பத்திரிகை நிறுத்தப்பட்டு விட்டதாலும், 2–3 தடவை ஜாமீன் கட்டும்படி உத்திரவு செய்யப் பட்டதாலும், பத்திரிகை விஷயமாய் 3 கேசுகள் ஏற்பட்டு அபராதங்களும் தண்டனைகளும் விதிக்கப்பட்டதாலும், கேசுகளை எதிர் வழக்காடியதாலும் 5000 ரூபாய்க்கு மேற்பட்ட நஷ்டங்கள் ஏற்பட்டதோடு பத்திரிகைச் சந்தா எண்ணிக்கையும் குறையத் தலைப்பட்டுவிட்டது.

ஏஜண்டுகள் பெரும்பாலோர் "இயக்கத்தின் மேல் உள்ள ஆர்வத்தினால் இயக்கத்தில் உள்ளவர்களால் இயக்க நன்மைக்காகப் பாடுபட்டவர்கள்" என்று சொல்லிக் கொள்ளுபவர்கள் எங்கெங்கு ஏஜண்டாய் இருந்தார்களோ, அவர்களது பாக்கிகள் 100க்கு 90 வசூலாகாமல் போய் விட்டதுடன், கண்டித்துக் கேட்கப்பட்டதனால் அவர்களது விரோதத்துக்கும் ஆளாக நேரிட்டு விட்டது. மற்ற பொது ஏஜண்டுகளில் சிலர் ஒழுங்காய் நடந்து கொள்ளாததால் எலக்ஷனுக்குப் பிறகு பத்திரிகை அனுப்புவதை நிறுத்திக் கொள்ள வேண்டியதாகி விட்டது.

ஆதலால் 'பகுத்தறிவு'க்கு ஆதரவு அளிக்க வேண்டும் என்று கருதுகிற ஒவ்வொரு தோழரும் தயவு செய்து இரண்டு சந்தாதாரர்களையாவது சேர்த்துக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்பட வேண்டியவர்களாகி விட்டார்கள். இதைச் சிறிது முக்கியமானதாகக் கருத வேண்டுமாய் வேண்டுகிறோம் – பத்திராதிபர்."

இந்த வேண்டுகோள் அறிவிப்பு பெரியார் எந்த நிலைக்குத் தள்ளப்பட்டார் என்பதையும் எப்படிப்பட்ட நெருக்கடியை எதிர்கொண்டு வெல்ல வேண்டியிருந்தது என்பதையும் நமக்கு உணர்த்துகின்றது.

'பகுத்தறிவு' – கிழமை இதழ் தொடங்கியபோது பெரியார் அறிவித்த, "பகுத்தறிவு மனித ஜீவாபிமானத்துக்கு மக்களை நடத்திச் செல்லுமே ஒழிய, எக்காரணங் கொண்டும் மக்கள் பின் நடந்து செல்லும் படியான அடிமை வாழ்வில் உயிர் வாழாது" என்னும் சூளுரையில் சற்றும் பிறழாமல் உறுதியாக ஊன்றி நின்றார் என்பதற்கு, அவர் 'பகுத்தறி'வில் வெளிவரச் செய்த கருத்துகளே சான்று. இந்திய மொழிகளில் வேறெந்த மொழிக்குரிய இதழாளரும் பெரியாரைப் போலத் துணிச்சல் காட்டியதில்லை என்பதைத் தயங்காமல் கூறலாம்.

மக்களாய நலத்துக்குக் கேடு பயக்கும் அத்தனை கூறுகளையும் வெளிச்சத்திற்குக் கொண்டு வர வேண்டும் என்பதில் விடாப்பிடியாக இருந்தார் பெரியார். அது ஒரு பெரிய எதிர்நீச்சல் முயற்சிதான். எனவே அதன் விளைவை அவர் இயற்கையாகச் சந்திக்க வேண்டியிருந்தது.

## இரண்டாயிரம் ரூபாய் பிணையத் தொகை

ஆட்சியாளர் தம் கைவரிசையைக் காட்டத் தொடங்கினர். 'பகுத்தறிவு' இதழுக்கும் அதை அச்சிட்டுத் தந்து கொண்டிருந்த உண்மை விளக்கம் அச்சகத்திற்கும் இரண்டாயிரம் ரூபாய் பிணையத்தொகை கட்ட வேண்டும் என்று, 29-1-1935அன்று அரசு கட்டளை பிறப்பிக்கப்பட்டது!

அதுபற்றிக் குடிஅரசு இதழில் குறிப்பொன்று காணக் கிடைக்கிறது.

> **"வாரப் பத்திரிகையாக நடத்தி வந்ததும், இனி மாதப் பத்திரிகையாகவும் காலணா தினப் பதிப்புப் பத்திரிகையாகவும் நடத்த உத்தேசித்து, சகல ஏற்பாடுகளும் செய்த வந்ததுமான 'பகுத்தறிவு' பத்திரிகைக்கும் உண்மை விளக்கம் பிரசுரிக்கும் அரசாங்கத்தார் 29-1-35இல் 2000 ரூபாய் ஜாமீன் கேட்டிருக்கிறார்கள். ஜாமீன் கட்டி மேற்படி பத்திரிகைகளை நடத்துவதற்கு யோசனைகள் நடந்து வருகின்றன" என்பதுவே அந்தக் குறிப்பு. (குடிஅரசு: 3-2-1935).**

மறுபடியும் 'குடிஅரசு' இதழ் தோன்றும் சூழ்நிலை உருவாகி விட்டதால். கிழமை இதழான 'பகுத்தறிவு' மாதிகையாக மாற்றுருவமெடுத்தது.

## 'பகுத்தறிவு' – மாத வெளியீடு

மாதிகையாக நூல் வடிவ உருவெடுத்து வெளிவந்த 'பகுத்தறிவு' இதழின் முன் அட்டையின் கீழிருந்து மேல்வரை குறுக்குவாட்டாகப் பெரிய எழுத்தில் பகுத்தறிவு என்று பொறிக்கப்பட்டு, அதற்குக் கீழே "மாத வெளியீடு" என்றும் அட்டையின் மேற்பகுதியில், "தனிப் பிரதி விலை அணா 0-1-6 என்றும், "1935 மே 1" என்றும், PAHUTHARIVU (REASON) எனவும் அடிக்கோடிப் பகுதியில் "பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகம், ஈரோடு" எனவும் அச்சிடப்பட்டிருந்தது.

அட்டையை அடுத்து இதழின் முதற்பக்கத்தின் மேல் பகுதியில் "பகுத்தறிவு, பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகத்தினின்று வெளிவரும் ஓர் மாத வெளியீடு" என அச்சிடப்பட்டிருந்தது. அதற்குக் கீழே "அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார் என் உடையரேனும் இலர் (குறள்)" எனப் பொறிக்கப்பட்டிருந்தது. குறளுக்குக் கீழே "மலர் 1: இதழ் 1; ஈரோடு 1935 மே 1" என்பவை இடம் பெற்றன.

மூன்று மாதங்கள் சென்ற பின் ஆகஸ்ட் மாதம் வெளிவந்த 'பகுத்தறிவு' இதழின் அட்டையில் "மாத வெளியீடு" என்பது, "அறிவை வளர்க்கும் ஓர் சிறந்த மாத வெளியீடு என்றும், இதழின் முதற் பக்கத்தின் மேற்பகுதியில் இடம் பெற்றிருந்த "பகுத்தறிவு நூல் பதிப்புக் கழகத்தினின்று வெளிவரும் ஓர் மாத வெளியீடு" என்பது "அறிவை வளர்க்கும் ஓர் மாத வெளியீடு" என்பதாகவும் மாற்றம் அடைந்தன.

பின் அட்டையின் கீழ்ப் பகுதியில், "Edited Printed and Published by E.V. Krishnaswamy for the Rational Books Publishing Society Ltd at the Unmaivilakam Press, Erode" என்று பொறிக்கப்பட்டிருந்தது. ஆகஸ்ட் திங்கள் இதழிலிருந்து "for the Rational Books Publishing Society Ltd" எனும் பகுதி இடம் பெறவில்லை.

மலர் 1, இதழ் 1 -இல் வெளியிடப்பட்ட ஓர் அறிக்கை குறிப்பிடத்தக்கது.

> "குடிஅரசுப் பதிப்பகத்தினின்று 'பகுத்தறிவு' என்ற பெயரால் ஒரு மாதப் பத்திரிகை வெளியிட வேண்டுமென்ற அபிப்பிராயம் 6,7 ஆண்டுகளுக்கு முன்னரே இருந்து வந்தது. காலஞ் சென்ற ஈ.வெ.ரா. நாகம்மாள் அவர்கள் 1928ஆம் ஆண்டிலேயே அரசாங்கத்தில் ரிஜிஸ்டர் செய்து 'பகுத்தறிவு' மாதப் பத்திரிகையைப் பிரசுரஞ் செய்ய அனுமதியும் பெற்றிருந்தார்கள் என்பதைக் 'குடிஅரசு' வாசகர்கள் நன்கறிவர். ஆனால் பலப் பல காரணங்களால் அம்மையாரின் முயற்சி தடைப்பட்டுப் போய்விட்டது.
>
> தமிழக மக்களிடையே அதிதீவிரமாக அறிவியல் கொள்கைகளைப் பரப்ப வேண்டுமென்றும், அவ்வாறு பரப்புவதற்கு ஓர் தனிப் பத்திரிகை வேறு எவ்வித நோக்கமுமின்றி அறிவியற் கொள்கைகளைப் பரப்பும் நோக்கம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு ஓர் நல்ல ஸ்தாபனத்தினின்று பிரசுரிக்கப்பட்டுத் தொண்டாற்றி வரவேண்டுமென்ற அபிப்பிராயம் நமக்கு மட்டுமல்ல – பல அறிஞர்களுக்கும் இருந்து வந்தது.
>
> எனவே 1935 ஆம் ஆண்டு மே மாதம் 'பகுத்தறி'வை நமது பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகத்தினின்று வெளியிட வேண்டுமென்று தீர்மானிக்கப் பெற்று, அவ்வாறே இப்போது வெளிவந்திருக்கிறது.

'பகுத்தறிவு' தமிழ் மக்களிடையே அறிவியல் கொள்கைகளை அதிதீவிரமாகப் பரப்ப முயற்சி செய்யும்; விஞ்ஞான மேம்பாட்டை விளக்கமாக எடுத்துக் காட்டும்; மேனாட்டு மெஞ்ஞானப் புலவர்கள் கண்ட அரிய பெரிய அற்புதங்களை யெல்லாம் தெள்ளிதில் விளக்கும்; மூட நம்பிக்கைகளையும் குருட்டுப் பழக்க வழக்கங்களையும், புரோகிதப் பித்தலாட்டங்களையும் சாதி சமய சாத்திரப் புரட்டுகளையும் பிட்டுப் பிட்டுக் காட்டும். சுருங்கக் கூறின் அறிவுக்கு மாறுபட்ட அனைத்தையும் நிர்த்தூளி பண்ணி, யாண்டும் அறிவின் ஜோதி ஜொலிக்கத் தன்னாலான எல்லாத் தொண்டினையும் செய்து தமிழ் மக்களின் வாழ்க்கையை இன்பகரமாகச் செய்வதையே தனது கடனாகக் கொண்டு வேலை செய்ய முனைந்து 'பகுத்தறிவு' இன்று உங்கள் முன் வந்துளது. நேயர்கள் நல்வரவேற்று, பகுத்தறிவு வளர முயற்சி செய்வார்களென்று பெரிதும் நம்புகிறோம்.

இதன் வருடாந்தர சந்தா இதைவிடக் குறைவாக இருக்க வேண்டுமென்று கருதியிருந்தோமாயினும், பெரிய அளவில் பல அரிய கட்டுரைகளுடனும் அதிகப் பக்கங்களுடனும் அழகிய முறையிலும் நடத்த வேண்டுமென்ற நோக்கத்தினால் இதைவிடக் குறைக்க முடியாமல் வருட சந்தா ரூ 1 ஏற்படுத்த இருக்கின்றோம்.

தமிழ் மக்கள் பகுத்தறிவை உல்லங்கனம் செய்து விடாது உவகையுடன் வரவேற்று ஆதரிப்பார்கள் என்ற நம்பிக்கையுடன் இம்முயற்சியில் ஈடுபட்டிருக்கிறோம். பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகத்தார்".

இவ்வறிக்கை நமக்குத் தரும் செய்திகள்:1 'பகுத்தறிவு' மாதிகையை வெளியிட 1928ஆம் ஆண்டிலேயே முயற்சி. 2. இதழ் பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகச் சார்பில் பதிப்புற்றமை. 3. அறிவியற் கொள்கைகளைப் பரப்புவதையே குறிக்கோளாக ஏற்றமை 4. அறிவின் ஒளிப் பெருக்கால் தமிழ் மக்களின் வாழ்க்கையை இன்பம் நிரம்பியதாகச் செய்யத் தொண்டாற்றுதல்.

இத்தகைய உயர்ந்த நோக்கங்களுடன் மக்களுக்குத் தொண்டாற்ற, அந்தக் காலக்கட்டத்தில் முன்வந்த இதழாளர் பெரியார் ஒருவரே என்பது பேருண்மையாகும்!

'பகுத்தறிவு' - மாதிகையில் பகுத்தறிவு ஊட்ட வல்ல கட்டுரைகளுக்கு நிறைய இடம் இருந்தது.

## சித்திரபுத்திரன் – புனைபெயரில் பெரியார்

'உரையாடல் வடிவத்தில் பெரியார் சித்திரபுத்திரன் என்ற புனைபெயரில் வடித்த கட்டுரைகள் நல்ல ஆராய்ச்சிக்குரிய இலக்கியமாகும். 'பகுத்தறிவு' - மலர் 3: இதழ் 12 இல் அவரால் எழுதப்பட்ட நீண்ட உரையாடலின் ஒரு சிறு பகுதி இதோ:

"**பகுத்தறிவுவாதி:** *கடவுள் எத்தனை உண்டு?*

**ஆத்திகன்:** *ஒரே கடவுள்தான் உண்டு.*

**பகுத்தறிவுவாதி:** *இவ்வளவு மதங்களும் யாருக்காக உண்டாக்கப் பட்டவை?*

**ஆத்திகன்:** *மனித வர்க்கத்திற்காகத்தான்.*

**பகுத்தறிவுவாதி:** *மதத்தால் ஏற்படும் பயன் என்ன?*

**ஆத்திகன்:** *மனிதன் கடவுளை அறியவும், கடவுளுக்கும் தனக்கும் சம்பந்தம் ஏற்படுத்திக் கொள்ளவும், ஆத்ம ஞானம் பெறவும், கடவுள் கருணைக்குப் பாத்திரனாகவும் பயன்படுவதாகும்.*

**பகுத்தறிவுவாதி:** *அப்படியானால் ஒரே கடவுள் ஒரே மனித வர்க்கத்துக்கு இத்தனை மதங்களை ஏற்படுத்துவானேன்?*

**ஆத்திகன்:** *இது மிகவும் சிரமமான கேள்வியாக இருக்கிறது. பெரியவர்களைக் கண்டு பேசிய பிறகு பதில் சொல்லுகிறேன்." (பகுத்தறிவு: 1938).*

இவ்வண்ணமே இவ்வுரையாடலில் பெரியார் பகுத்தறிவுவாதியின் பெயரால் வினாக்களை அடுக்கிக் கொண்டே போக, 'ஆத்திகன்' என்போர் விடையிறுக்க முடியாமல் "பெரியவர்களைக் கேட்க வேண்டும்" என்று மழுப்புவதாக உரையாடல் அமைந்திருக்கிறது.

அன்றாட வாழ்க்கையில் பகுத்தறிவாளர்களின் எத்தனையோ நியாயமான கேள்விகளுக்கு ஆத்திகர் செம்மையான முறையில் விளக்கம் தரவியலாமல் திணறுகிறார்கள் என்பதை எடுத்துக்கூறும் அழகான உரையாடல் இது.

பொதுவாகவே சித்திரபுத்திரன் என்னும் புனைபெயரில் பெரியார் இயற்றியுள்ள உரையாடல்களை ஒன்று திரட்டித்

தனிநூலாகப் பயின்றால், உரையாடல் என்னும் உத்தி எந்த அளவுக்குக் கைவந்த கலையாகப் பெரியாருக்கு வாய்த்தது என்பதையும், உண்மைகளை ஊன்றுவதற்கு அக்கலையை அவர் எத்துணை சுவையோடு பயன்படுத்தினார் என்பதையும், பெரியார் எவ்வளவு சிறந்த இலக்கியப் படைப்பாளர் என்பதையும் நாம் உணர்ந்து கொள்ள முடியும் என்பது உறுதி.

## பிரார்த்தனை

எல்லா மத நடவடிக்கைகளிலும் 'பிரார்த்தனை' என்பதற்குச் சிறப்பிடம் தரப்படுகிறது. இந்தப் பொருள் பற்றி விரிவாக ஆராய்ந்து பெரியார் எழுதிய விளக்கக் கட்டுரை யொன்று 'பகுத்தறிவு' மாதிகையில் வெளியாயிற்று. அக்கட்டுரையின் சில பகுதிகளைச் சுவைப்போம்.

> "பிரார்த்தனை என்பதற்கு ஜபம், தபம், வணக்கம், பூசனை, தொழுகை முதலிய காரியங்களும் பெயர்களும் சொல்லப் படுவதுண்டு.
>
> இந்தப் பிரார்த்தனையின் அஸ்திவாரம், உலகத்தைப் படைத்துக் காத்து வரும் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதும், அவர் சர்வ வல்லமையும் சர்வ வியாபகமும் சர்வமும் அறியும் ஞானமும் உடையவர் என்பதும், அக்கடவுளை வணங்குவதால் ஒருவனுக்கு வேண்டிய சகலகாரியங்களிலும் சித்தி பெறலாம் என்பவைதாம் பிரார்த்தனைக்காரர்களின் கருத்தாயிருக்கின்றது.
>
> படித்துப் 'பாஸ்' செய்ய வேண்டியவன் பிரார்த்தனையில் 'பாஸ்' செய்வது என்றால், பணம் வேண்டியவன் பிரார்த்தனையில் பணம் சம்பாதிக்க வேண்டுமென்றால், மோட்சத்துக்குப் போக வேண்டும் என்கின்றவன் பிரார்த்தனையில் மோட்சத்திற்குப் போக வேண்டும் என்றால் இவைகளெல்லாம் பேராசை என்பதோடு வேலை செய்யாமல் கூலி கேட்கும் பெரும் சோம்பேறித்தனமும் மோசடியும் ஆகும்.
>
> பிரார்த்தனையில் செலவாகும் நேரத்தினைப் போல் மனிதன் வீணாய்க் கழிக்கும் நேரம் வேறு இல்லை என்றே சொல்லுவோம். சில சோம்பேறிகள் பிழைப்பதற்காக மக்கள் புத்தி எவ்வளவு கெடுகிறது; மக்களுக்கு அயோக்கியத் தனமானவைகளைச் செய்ய எவ்வளவு தைரியம் ஏற்பட்டு விடுகிறது! பொருள்கள் எவ்வளவு நாசமாகின்றன!

ஆகவே கடவுள் கற்பனையைவிட இந்தப் பிரார்த்தனைக் கற்பனையானது மிகமிக மோசமானது. பிரார்த்தனைக் கற்பனை இல்லாவிட்டால் கடவுள் கற்பனை ஒரு பிரயோசனத்தையும் கொடுக்காமல் போய்விடும்!" (பகுத்தறிவு: மலர் 1 – இதழ் 9:)

## ஆதாரமற்ற நம்பிக்கைகள்

'ஆதாரமற்ற நம்பிக்கைகள்' என்னும் தலைப்பில் பெரியார் எழுதிய அரிய கட்டுரை 'பகுத்தறிவு' - மாதிகையில் நமக்குக் கிடைக்கிறது. அதன் தேர்ந்த சில பகுதிகள்:

"நமது நம்பிக்கைகளில் பலவற்றை ஆராய்ந்து பார்த்தால், அவற்றிற்கு ஆதாரமே இல்லையெனத் தோன்றா நிற்கும். ஒரு காலத்திலே ஒரு விஷயம் உண்மையென்று யாரோ சொன்னார்; அல்லது ஆராய்ந்து பாராமலேயே அதை நாம் உண்மை என நம்பிக் கொண்டோம்; அல்லது அது உண்மையாகத்தான் இருக்குமென்று களுவில் நம்பிக் கொண்டோம். நமது அனேக அதிதீவிர நம்பிக்கைகளுக்குக்கூட நமது வளர்ப்பு முறையே காரணமாகும்.

ஒரு நம்பிக்கை மிகவும் பழமையானது என்ற ஒரே காரணத்தினால் மட்டும் அது ஆதாரமுடைய உண்மையாகி விடாது.

வட்டமாக அன்றி இதர முறைகளில் கிரகங்கள் சுற்றுகின்றன என்று நம்புவது வெகுகாலமாக அசாத்தியமாகவே இருந்து வந்தது. வட்ட வடிவம் அல்லது மண்டலம் மேற்பார்வைக்கு ஒரு பூர்ணமான உருவம்; எனவே கிரகங்கள் எல்லாம் வட்டமாகச் சுற்றுகின்றன என்று நம்புவதே இயற்கையானது; சாத்தியமானது. ஆனால் இந்த நம்பிக்கையை ஒழிக்க அநாதி காலமாக நடந்து வந்திருக்கும் போராட்டம் சரித்திரத்திலேயே மிகவும் அற்புதமானதாகும்.

உணர்ச்சிக்கு இருதயமே ஆதாரமென்றும் மூளை அல்ல என்றும் முன்னோர் நம்பி வந்தனர். இன்றோ பெரும்பாலோர் மூளையின் உதவியினால் நாம் சிந்தனை செய்வதாகவே நம்புகிறார்கள். மூளையின் உதவியின்றி மனிதனுக்குச் சிந்திக்கவே முடியாதென்றே தற்காலத்தவர்களில் பெரும்பாலோர் கூறுகிறார்கள். எனினும் முன்னோர் மாறாகவே நம்பினார்கள்.

பளுவான பொருள்கள் இலேசான பொருள்களை விட விரைவாக விழுமென இரண்டாயிர வருஷக்காலம் தடையின்றி நம்பப்பட்டு

வந்தது. அதற்கு அரிஸ்டாட்டில் அபிப்பிராயமும் மேற்கோளாகக் காட்டப்பட்டது. உண்மை வேறு விதமானதென்று கலிலியோ நிரூபித்துக்காட்டும் வரை மக்கள் அவ்வாறே நம்பி வந்தனர்.

ஆராய்ந்து பாராமல் கண்மூடித்தனமாக நம்பப்படுபவைகள் எல்லாம் ஆதாரமுடைய உண்மைகள் ஆகிவிடமாட்டா. அத்தகைய தப்பு நம்பிக்கைகளை உடைத்தெறிவதிலேயே அறிவு வளர்ச்சியடைகிறது" (பகுத்தறிவு: மலர்2, இதழ் 5).

## தீபாவளி

தமிழர்க்கு ஆகாப் பண்டிகைகளில் முதன்மையான தீபாவளி குறித்துப் 'பகுத்தறி'வில் பெரியார் வெளியிட்ட ஆய்வுரையின் பகுதிகள் சில

"நீ மலத்தில் ஏன் மூழ்கியிருக்கிறாய் என்றால், அதற்கு நீ தமிழ் இலக்கணம் தெரியாதவன் என்று பதில் சொல்லிவிட்டால், மலத்தின் துர்நாற்றம் மறைந்து போய் விடுமா? பெரிதும் எப்படிக் கொண்டாடப் போகின்றீர்கள் என்றால், துணி தேவை இருக்கின்றவர்களும் தேவை இல்லாதவர்களும் பண்டிகையை உத்தேசித்துத் துணி வாங்குவது என்பது ஒன்று; மக்கள் மருமக்களை மரியாதை செய்வதற்கென்று தேவைக்கும் யோக்கியதைக்கும் மேலானதாகவும், சாதாரணமாக உபயோகப் படுத்துவதற்கு ஏற்றதல்லாததுமான துணிகள் வாங்குவது என்பது இரண்டு; அர்த்தமற்றதும் பயனற்றதுமான வெடிமருந்து சம்பந்தப்பட்ட பட்டாசு வகைகளை வாங்கிக் கொளுத்துவது மூன்று; பலர் இனாம் என்றும் பிச்சை என்றும் பல்லைக் காட்டிக் கெஞ்சிப் பணம் வாங்கி அதைப் பெரும்பாலும் சூதிலும், குடியிலும் செலவழித்து நாடு சிரிக்க நடந்து கொள்ளுவது நான்கு; இவற்றிற்காகப் பலர் ஊர் விட்டு ஊர் பிரயாணம் செய்து பணம் செலவழிப்பது அய்ந்து; ஒவ்வொரு வீட்டிலும் அமிதமான பதார்த்தங்கள் தேவைக்கு மேல் செய்து அவைகளில் பெரும்பாலும் கண்டவர்களுக்குக் கொடுப்பதும் வீணாக்குவதும் ஆறு; இந்தச் செலவுகளுக்காகக் கடன்படுவது ஏழு. தீபாவளி என்றால் என்ன? அது எதற்காகக் கொண்டாடப்படுகிறது? என்கிறதான விஷயங்களுக்குச் சிறிது கூட எந்த விதத்திலும் சமாதானம் சொல்ல முடியாது.

புராணங்களில் கண்டபடியே இந்தக் கதையை உண்மை என்று ஒப்புக் கொண்டு தமது பகுத்தறிவை இழந்து, தீபாவளியைச்

கொண்டாடும் நம் தமிழ் மக்களின் அறியாமையை என்னென்று சொல்வது?" (பகுத்தறிவு: மலர் 2, இதழ் 7).

## சுயமரியாதைக்காரரும் மதமும்

மதம் என்னும் பொருள் பற்றித் தன்மதிப்பியக்கத்தவர்தம் பார்வை என்ன வென்பதைப் பெரியார், 'சுயமரியாதைக்காரரும் மதமும்' என்ற தலைப்பில் வரைந்த விளக்கவுரை 1936-மார்ச் மாதிகையில் இடம் பெற்றது.

"சுயமரியாதைக்காரர்கள் மதம் என்பதைப் பற்றிக் கொண்டுள்ள அபிப்பிராயம் பலர் அறிந்ததேயாகும். நிர்ப்பந்தமானதும், அல்லது மூடநம்பிக்கையானதும், பிரத்தியட்ச அனுபவத்திற்கும் சாத்தியத்துக்கும் மாறானதும் பகுத்தறிவிற்கும் ஆராய்ச்சி அல்லது விஞ்ஞானத்திற்கும் எதிரானதுமான காரியங்களையோ கருத்துகளையோ ஆதாரங்களையோ ஏற்றுக் கொண்டிருப்பதே 'மதம்' என்றும் அப்படிப்பட்ட மதங்களையே சுயமரியாதைக் காரர்கள் மறுக்கிறார்கள் என்பதோடு அம்மதங்கள் ஒழிக்கப்படவேண்டும் என்றும் சொல்லுகிறார்கள்.

மதம் என்னும் வார்த்தைக்குப் பலவித அர்த்தங்களும் கருத்துகளும் சொல்லப்படுகின்றன.

ஒருவர், 'என்னுடைய மதம் யார் மனத்தையும் புண்படுத்தாம லிருப்பதும், யாருக்கும் என்னால் கூடிய நன்மை செய்வதும்தான்' என்று சொல்கிறார்.

மற்றொருவர் 'என்னுடைய மதம் கடவுள் இல்லை; ஆத்மா இல்லை; ஆனால் கர்மத்துக்குத் தகுந்த பலன் உண்டு என்பது தான்' என்கிறார்.

மற்றொருவர், 'மதம் என்னும் வார்த்தைக்குக் கொள்கை அல்லது கடமை என்பதுதான் அர்த்தம்' என்கிறார்.

மற்றொருவர், 'என்னுடைய மதம் விஞ்ஞானம்' என்கிறார்.

மற்றொருவர், 'என்னுடைய மதம் மனித ஜீவ அபிமானம்தான்' என்கிறார்.

மற்றொருவர், 'என்னுடைய மதம் பொதுவுடைமைக் கொள்கை' என்கிறார்.

இப்படியே இன்னும் பலவிதமாய், மதம் என்னும் வார்த்தைக்குத் தனித்தனி அர்த்தங்கள் கற்பித்துக் கொண்டிருக்கிறார்கள்.

'கடவுள்' ஏற்பட்ட வெகு காலத்துக்குப் பிறகுதான் மதம் ஏற்பட்டு இருக்க வேண்டுமே ஒழிய, கடவுளும் மதமும் இரட்டைப் பிள்ளைகள் போல் பிறந்தவைகள் அல்ல.

எப்படி இருந்தாலும் மதங்களானவை இன்று சடங்காகவும் வேஷமாகவும் இருக்கின்றனவே ஒழிய, கொள்கையாகக் கூட எந்த மதமும் அனுபவத்தில் இருக்கவில்லை. மதமானது மக்களின் கூட்டு வாழ்க்கையின் அவசியத்துக்கு ஏற்ற கொள்கைகளைக் கொண்டதாகவும் பகுத்தறிவுக்கு ஒத்ததாகவும் காலதேச வர்த்தமானத்துக்கு ஏற்பத் திருத்திக் கொள்ளக் கூடியதாகவும் சகல மக்களுக்கும் பலன் ஒன்று போல் உண்டாகக் கூடியதாகவும் இருக்கத்தக்க கொள்கைகள் கொண்டது என்றால், அதைச் சுயமரியாதைக்காரர்கள் மறுப்பதற்கு முன் வர மாட்டார்கள்." (பகுத்தறிவு: மலர் 1 ; இதழ் 11).

எவரையும் சிந்திக்கத் தூண்டும் பெரியார் கட்டுரைப் பகுதிகள் இவை.

## அறிவின் பயன்

இவ்வறிக்கையினை அடுத்து ஈ.வெ.ரா. என்று பெயரிட்டே அறிவின் பயன் என்ற தலைப்பின்கீழ் பெரியார் கட்டுரையொன்று எழுதியுள்ளார். அதில் அடங்கிய கருத்துரைகளில் தேர்ந்த சிலவற்றை எடுத்து வைக்கிறேன்.

"பகுத்தறிவு என்று சொல்லப்படுவது பொதுப் பெயரானாலும் அது மனிதனுடைய அறிவுக்கே உபயோகப்படுத்தப்படுவதாகும்.

மனிதன் தன் பகுத்தறிவைச் சரியானபடி பயன்படுத்தாமலும், பகுத்தறிவுக்கு விரோதமான விஷயங்களை மனிதன் ஏற்றுக் கொள்வதாலும் மனித சமூகத்துக்குச் சந்தோஷமும் திருப்தியும் இல்லாமல் போய்விட்டது.

சுதந்தரத்தோடும் துணிவோடும் பகுத்தறிவு என்பதைப் பயன்படுத்தக்கூடாது என்கின்ற நிபந்தனைகள் வாழ்க்கையிலும் சமுதாயத்திலும் இருந்து வர, மனிதன் ஆதியில் அனுமதித்துக் கொண்டதே இந்நிலைக்குக் காரணமாகும்.

என்றாலும் அதிலிருந்து விடுதலை பெறமுடியாது என்று தீர்மானித்து விடுதல் கூடாது. இன்று மனிதனுடைய பகுத்தறிவை அடக்கிக் கொண்டிருப்பவைகளில் முக்கியமானவை இயற்கையின் உண்மைகளை அறிய முடியாமல் செய்து

வருவதற்கு ஏதுவான தலைவிதி, முன்ஜென்ம பலன், கடவுள் செயல் என்பன போன்ற உபதேசங்களேயாகும். இவ்வுபதேசங் களுக்குக் கட்டுப்பட்ட எவனும் பகுத்தறிவின் பயனான இயற்கையை உணர்ந்து அதைத் தனக்கு அடிமையாக்கிக் கொண்டு சந்தோஷமும் திருப்தியும் அடையும் பேற்றை அடையவே முடியாது.

ஒவ்வொரு மனிதனும் அவனவனுடைய கண்ணையும் மனத்தையும் நிர்வாணமாகவும் பரிசுத்தமாகவும் வைத்துக் கொண்டு பார்க்க வேண்டும். இந்த நிலைமையையும் தன்மையையும் ஒவ்வொரு மனிதனும் அடையவே 'பகுத்தறிவு' உலகில் உலவி வந்து மக்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்று ஆசைப்படுகிறேன்." (பகுத்தறிவு மலர் 1 ; இதழ் 1: 1-5-1935).

மாந்தர் இன்பமும் மனநிறைவும் தோய்ந்த வாழ்வு பெறப் பகுத்தறிவைச் செம்மையாகப் பயன்படுத்த வேண்டும். அது நிறைவேறப் 'பகுத்தறிவு' மாதிகை உலா வந்து தொண்டாற்ற வேண்டும். இதுவே பெரியாரை ஆட்கொண்ட பெருவிருப்பு!

## நாகரிகம்

1-4-1937 அன்று வெளியான 'பகுத்தறி'வில் 'நாகரிகம்' என்ற தலைப்பில் பெரியார் எழுதிய கட்டுரையில் குறிப்பிடுகிறார் இப்படி:

"புதிய எண்ணங்களும் புதிய எழுச்சிகளும் புதிய காரியங்களும் நிகழ்கின்றன. நீங்களும் காலப்போக்கின் உயரிய பலனை வீணாக்காது, பகுத்தறிவை மேற்போட்டுக் கொண்டு, சமுதாய நன்மையைத் தேடிப் பாடுபட முன்வாருங்கள். வெறும் கடவுள் நம்பிக்கை கொண்டிருந்தவர்களும்கூடத் தங்கள் போக்கை மாற்றிக் கொண்டு, முயற்சி மெய்வருந்தக் கூலி தரும் என்று சொல்லி வருகிறார்கள். ஆகவே தோழர்களே! நீங்கள் தன்னம்பிக்கை கொண்டு மக்களின் விடுதலைக்கு - சரியான வழிகளில் பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டு போராட முன் வருங்கள்!" (பகுத்தறிவு: மலர் 2; இதழ் 12).

பகுத்தறிவைப் பரப்புவதில் புராணங்கள் என்ற பெயரிடப்பட்ட பழம் புனைகதைகளில் நிரம்பியுள்ள பொய்மை, புன்மை, அருவருப்புத் தன்மை, 'வர்ணாசிரம'க் கொடுமை ஆகியவற்றை வெளிச்சத்திற்குக் கொண்டு வரும் முயற்சியும் ஒரு கூறு. இதைக் கருதிய பெரியார் 'பகுத்தறிவு' - மாதிகையில் தொடர்ந்து அதைச் செய்தார்.

பிள்ளையார், சுப்பிரமணியன் போன்ற கடவுளர்களின் பிறப்புச் செய்திகளாகப் புராண நூல்களில் இடம் பெற்றவற்றையும், சிதம்பரம் நடராசர் கோவிலிலும் சில ஊர்த்தேர்களிலும் பிள்ளையார் உருவங்கள் தும்பிக்கையை பெண் உருவங்களின் பிறப்புறுப்பினுள் புகுத்தியிருக்கும் காட்சிகள் இருக்கும் உண்மையையும், அவ்வுருவங்களுக்கு ஆண் - பெண் பக்தர்களின் முன்னிலையில் பூசைகள் செய்யப்படும் நடப்பையும் 'பகுத்தறிவு' - மாதிகையில் எடுத்துக் காட்டிய பெரியார் இப்படிக் கேட்டார்:

"எவனோ ஒருவன் ஒரு காலத்தில் அப்படி எழுதி விட்டான் என்று பொறுப்பில்லாமல் சொல்லி விட்டால் போதுமா? இன்றைக்கும் அவ்வெழுத்துக் கொண்ட ஆதாரங்கள் போற்றப்படவில்லையா? அன்றியும் பல கோயில்களில் உருவங்களாகத் தோன்றவில்லையா? இவைகளுக்குத் தினமும் பெண்டு, பிள்ளை, வாகனம் முதலியவைகளுடன் பூஜைகள் நடக்கவில்லையா?"

விடை செப்பவே முடியா வினாக்கணைகளை வீசிய பெரியார், மேலும் அறைந்தார்.

"கடவுளைப் பற்றிய விவகாரங்களோ சந்தேகங்களோ ஏற்படும்போது மாத்திரம் 'கடவுள் ஒருவர்தான்; அவர் நாமரூப குண மற்றவர்; ஆதி அந்த மற்றவர்; பிறப்பு இறப்பற்றவர்; தானாகவே உண்டானவர்' என்று சொல்லுவதும் மற்றும் அது ஒரு சக்தி என்றும் ஒரு தன்மை அல்லது குணம் என்றும் பேசி, அந்த சமயத்தில் மாத்திரம் தப்பித்துக் கொண்டு, பிறகு இம்மாதிரிக் கடவுள்களைக் கோடிகோடியாய் உண்டாக்கி, அவைகட்கு இதுபோன்ற ஆபாசக் கதைகளை வண்டி வண்டியாய்க் கற்பித்து, அவற்றையெல்லாம் மக்கள் நம்பவும் வணங்கவும் பூசை செய்யவும், உற்சவம் முதலியன செய்வதில் எவ்வளவு அறியாமையும் புரட்டும் கஷ்டமும் இருக்கின்றன?" (பகுத்தறிவு மலர் 2; இதழ் 4 – 1936).

## யுனெஸ்கோ

தமிழ் பயின்ற மக்கள் பெரியாரின் இவ்வரிய கருத்துரைகளை ஒரு முறைக்கு இருமுறை படித்துச் சற்றே சிந்தித்துவிட்டால்கூட, பெருந்தாக்கத்திற்குள்ளாகி நல்ல பகுத்தறிவாளராக மாறிவிட மாட்டார்களா, என்ன? UNESCO என்னும் உலகப் பேரவை பெரியாரவர்களுக்கு அன்புடன் அளித்த விருதுப் பட்டயத்தில்

அவரை "மூடநம்பிக்கைகளின் முதன்மை எதிரி" **(The Arch Enemy of Superstitions)** என்று குறிப்பிட்டமை எத்துணை பொருத்தம்!

## மதப்போட்டி

சைவ - வைணவ மல்லாடல் வரலாற்றின் ஒரு கூறு பெரியாரால் 'பகுத்தறிவு' மாதிகையில் 'மதப் போட்டி' என்னும் தலைப்பின் கீழ் நல்ல வண்ணம் ஆராயப்பட்டுள்ளது. அவ்வாய்வுரையின் சில பகுதிகளை உங்களின் முன் வைக்கிறேன்.

> "மதங்கள் என்பவைகளுக்கெல்லாம் ஒரு கடவுள் இருந்தாக வேண்டும்; மோட்சம் நரகம் இருந்தாக வேண்டும்; கடவுள் தன்மை பொருந்திய அவதார புருஷர்கள் குருமார்கள் இருந்தாக வேண்டும்.
>
> இந்து மதத்துக்கோ இவை மாத்திரம் போதா. அதாவது பல கடவுள்கள் வேண்டும்; பலவிதமான மோட்சங்கள் பலவிதமான நரகங்கள் வேண்டும்; மற்றும் பலவிதமான பிறப்புகள், முன் பின் ஜென்மங்கள் வேண்டும்; பல விதமான அவதாரங்கள், பலவிதமான குருமார்கள் வேண்டும். இவ்வளவும் போதாமல் கடவுளை நேரில் கண்டு மோட்சத்திற்குப் போன பல விதமான பக்தர்கள் வேண்டும்.
>
> இந்தக் காரியங்கள் சிறப்பாக இந்து மதத்தின் உட்பிரிவுகளான சைவ மதம், வைணவ மதம் என்று சொல்லப்படும் இரண்டிலும் ஏறக்குறைய ஒன்று போலவே இருந்து வருகின்றன.
>
> உதாரணமாக வைணவத்தில் இராமாயணம் ஏற்பட்டதற்குக் காரணம் விஷ்ணுவும் அவரின் மனைவியாகிய இலட்சுமியும் கலவி செய்ததிலிருந்தே ஏற்பட்டது.
>
> பூபாரம் தீர்க்கவும் இராட்சதர்களை அழிக்கவும் விஷ்ணு இராமராய்த் தோன்றினார். அதுபோலவே பூபாரம் தீர்க்கவும், அசுரர்களை அழிக்கவும் சிவன் சுப்பிரமணியனாகத் தோன்றினார்.
>
> இராமன் பெண்சாதி சீதை ஒரு வளர்ப்புப் பெண் – சமுத்திரத்தில் கண்டெடுக்கப்பட்டவள். சுப்பிரமணியன் பெண்சாதியும் ஒரு வளர்ப்புப் பெண் – வள்ளிச் செடிக்கடியில் கண்டெடுக்கப் பட்டவள்.
>
> வைணவ பக்தரில் ஒரு குயவர் இருந்தால் சைவ பக்தரிலும் ஒரு குயவர் இருக்கிறார்.

*வைணவ மதத்துக்குச் சொக்கமாலா என்கின்ற தீண்டாத சாதி பக்தர் ஒருவர் இருந்து, கனவு கண்டு, விஷ்ணு வந்து அழைத்துப் போகிறார். சைவத்திலும் நந்தன் என்பதாக ஒருவர் இருந்து, பரமசிவன் வந்து கனவில் சொல்லி, சாமி தரிசனம் செய்யப் பட்டதாகச் சொல்லப்படுகிறது.*

*இரண்டு மதப் புராணங்களிலும் பார்ப்பனர்களுக்கு மாத்திரம் ஒரே மாதிரியான உணர்வும் மற்றவர்களுக்கு இழிவும் ஏற்படுத்தப்பட்டிருப்பதோடு, சாதிப் பாகுபாடுகள் பலப்படுத்தப் பட்டு இருக்கின்றன! (பகுத்தறிவு: மலர் 1, இதழ் 4)*

இப்படிப்பட்ட ஆராய்ச்சியில் வேறெவரும் இறங்கியதாக நாம் கேள்விப்பட்டதில்லை!

## சாமி விளையாட்டு

*“சாமி வைத்து விளையாடும் குழந்தைகள் பெரியோர்களாகிய நாம் செய்வதைப் பார்த்துத்தான் செய்கின்றன. ஆனாலும் அக்குழந்தைகள் விளையாடுவதை ஓரளவுதான் நாம் பொறுத்துக் கொள்ள முடிகிறது. ‘அடே, குட்டிச்சுவரே! அரைக் கழுதை வயது ஆகியும் இன்னமும் சாமி வைத்து விளையாட வெட்கமில்லையா? என்ற கடுத்த முகத்தோடு கேட்கிறோம்.*

*நமக்குக் குட்டிச் சுவர் மாதிரி 5 கழுதை வயது ஆயிற்றே ஒழிய, ‘சாமி’ விளையாட்டு மாத்திரம் போகவே இல்லை! திருப்பதி போகலாமா? திருச்செந்தூர் போகலாமா? என்பதும், காசி போய் விட்டு இராமேசுவரம் போகலாமா அல்லது இராமேசுவரம் போய்விட்டுக் காசி போகலாமா என்பதும், அனுமார் வாகனத்திற்குத் தங்க முலாம் பூசலாமா அல்லது தங்கத் தகட்டினாலேயே செய்து விடலாமா என்பதும், ஜம்புகேஸ்வரருக்குப் பூச்சக்கரக் குடை செய்வதற்குப் பட்டு விசேஷமா ‘வெல்வெட்டு’ விசேஷமா என்பதும், மாரியம்மனுக்கு வெள்ளியில் கண்கவசம் செய்யலாமா தங்கத்தில் செய்யலாமா என்பதும் கலியாண உற்சவம் வருஷத்துக்கு இரண்டு தடவைகள் நடத்தலாமா என்பதுமே பெரிய ஆராய்ச்சியாய் இருக்கிறதே தவிர, நமது நித்த வாழ்க்கைக்குச் சவுகரியமான ஏற்பாடுகள் செய்வதில் நமது யுக்தியானது சிறு பிள்ளைகளைவிட ஆயிரம் மடங்கு கீழாகவேதான் இருக்கிறது!*

*சாமிக்குப் போன வருடம் நடந்த கலியாணம் என்னவாயிற்று? எந்தக் கோர்ட்டில் ரத்து ஆயிற்று? அல்லது மனைவி*

ஓடிப்போனாளா? தம்பதிகளில் யாராவது ஒருவர் செத்துப் போனாரா என்று யோசிப்பதில்லை.

நமது உலக முன்னேற்றத்தில் ஈடுபடவும் நமது வாழ்க்கையைச் சீர்படுத்திக் கொள்ளவும் அதற்கு வேண்டிய முயற்சிகளைப் பல துறைகளிலும் செய்யவும் வேண்டிய காலத்தில், நமது பெரியோர்கள் 'சாமி' வைத்து விளையாடுவதும் அதற்காகக் கோடிக்கணக்கில் ரூபாய்களைச் செலவழிப்பதும் நமது மக்களைச் சோம்பேறிகளாக்கி விடுவதோடு, நமது நாட்டையும் பாழ்படுத்தி விடும் என்ற கவலையால்தான் நாமும் நம் பெரியோர்களுக்குப் புத்தி கூற வேண்டியது கடமையாகிறது" (பகுத்தறிவு: மலர் 2, இதழ் 10).

"சாமி விளையாட்டா?" என்ற தலைப்பில் பெரியார் 'பகுத்தறிவு' - மாதிகையில் எழுதிய கட்டுரையின் சில பகுதிகளே இவை. மூடநம்பிக்கையின் அடிப்படையின் மீது எழுப்பப்பட்ட 'சாமி விளையாட்டு' நாட்டைப் பாழ்படுத்தி விடுமே என்று எவ்வளவு கவலைப்பட்டார் பெரியார் என்பது தெளிவாக இவ்வெழுத்துகளில் புலப்படுகிறது.

பெரியாரின் மொழி நடைபற்றி ஏற்கனவே அறிவோம். அதன் கடுமையைப் பொருட்படுத்தாமல், அக்கடுமைக்கு மூலமான உணர்வுகளைப் புரிந்து கொள்ள முயலுவதே செம்மையாக இருக்கும்!

'மதக் கிறுக்கு' என்ற தலைப்பிட்டுப் பெரியார் 1939ஆம் ஆண்டு ஜனவரி மாதத்திற்குரிய 'பகுத்தறிவு' - இதழில் மதமாற்றம் என்பதான நடவடிக்கையால் கிட்டும் பயன்பற்றித் தம் கருத்துகளைப் பதிவு செய்துள்ளார்.

"மதங்களுக்கு ஜீவநாடியாக இருந்து வருவது பணமும் பிரசாரமுமே அல்லாமல், அவற்றின் தெய்வீகத் தன்மையோ உயர்ந்த தத்துவமோ அறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் பொருந்தக் கூடிய கொள்கைகளோ என்று எந்த மதத்தையும் யாரும் சொல்லி விட முடியாது.

மதம் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டதென்றும், சயன்சுக்கும் மதத்துக்கும் சம்பந்தம் பார்க்கக் கூடாது என்றும், பகுத்தறிவு வேறு மதக்கோட்பாடுகள் வேறு என்றும், இந்தக் காலம் வேறு அந்தக் காலம் வேறு என்றும் ரிஷி மூலம் – நதி மூலம் பார்க்கக் கூடாது என்றும் எல்லா மதக்காரர்களும் சொல்லி விடுவதால், உலகில் மதத்தின் பேரால் எந்த மூடனும்

எதையும் சொல்லித் தப்பித்துக் கொள்ளலாம் என்கின்ற தைரியத்தின் மீதே மத ஆபாசமும் மத அயோக்கியத்தனங்களும் உலகில் நிலைத்து வருகின்றன.

சாதாரணமாக இந்திய மக்களில் 100க்கு 92 பேர்கள் தற்குறிகள். எழுதப் படிக்கத் தெரியாத பாமர மக்கள். இவர்களிலும் 100க்கு 90 பேர்கள் நல்ல ஜீவனத்துக்கு மார்க்கமில்லாமலும் வயிற்றுப் பிழைப்புக்கு எதையும் செய்யலாம் என்று கற்பிக்கப் பட்டிருக்கிறவர்கள். இப்படிப்பட்ட மதப் பிரசாரம் செய்து மதமாற்றுதல் வேட்டை ஆடுவது என்பது சுலபமான காரியமாகும். இந்திய மக்களின் கல்வி அறிவு வாசனையற்ற தன்மையும் பாமரத் தன்மையும் அடிமைத் தன்மையும் எல்லாம் சேர்ந்து உலகில் வேறு எந்த தேசத்திலும் இல்லாத அளவுக்கு மதங்களும் மத வேற்றுமைகளும் மதமாற்றங்களும் தாண்டவ மாடுகின்றன. எத்தனையோ பிரிவினர்கள் இருந்து கொண்டு வெகுகாலமாகவே மதமாற்றப் பிரசாரம் செய்து கொண்டுதான் வருகிறார்கள்.

மனித சமூகத்திற்கு அவரவர்கள் வாழ்க்கையிலுள்ள கவலைகள் அற்று, அதிருப்தி ஒழிந்து, சாந்தியும் சந்தோஷமும் கொண்டு வாழ்வதற்கும், பொருளியலிலும் சமுதாய இயலிலும் ஆண் பெண் தன்மையிலும் சமதர்மத் தத்துவம் கொண்ட வாழ்க்கை ஏற்பட, இந்தியாவுக்கோ அல்லது உலகத்துக்கோ இனி மத ஒழிப்புப் பிரசாரம் வேண்டுமா அல்லது மத மாற்றுப் பிரசாரம் வேண்டுமா என்பதை ஒவ்வொரு அறிவாளியும் யோசிக்க வேண்டியது முக்கிய கடமையாகும்" (பகுத்தறிவு: மலர் 4; இதழ் 9).

## ஜோசியம்

'ஜோசியம்' என்ற ஒரு பொருள் பற்றி பெரியாரின் அருமையான அறிவுக்கட்டுரை யொன்று 'பகுத்தறிவு' மாதிகையின் மலர் 1 - இதழ் 4இல் இடம் பெற்றிருந்தது. (1-8-1935).

அவ்வாய்வுரையின் சில பகுதிகளைச் சுவைப்போம்.

'ஜோசியம்' என்பது ஒரு மனிதனுடைய பிறந்த நேரத்தைக் கொண்டு, அந்தச் சமயம் கிரகங்கள் இருந்த நிலைமைக்கேற்ப மனிதனுடைய பலாபலன்களைக் குறிப்பதென்பதாகும். குறிப்பிட்ட சாதகனுடைய பலன் மாத்திரம் அல்லாமல் அவனது பலாபலன்களுக்குச் சம்பந்தப்பட்ட மற்ற அனேகருடைய பலன்களும் அதில் அத்துபடி ஆகிவிட வேண்டும்.

ஒரு ஜாதகனுக்குச் செல்வம் வரவேண்டுமானால் – வியாதி வரவேண்டுமானால் – சாவு வர வேண்டுமானால் – அவை வருவதற்கு ஏதுவான மாற்றங்களும் சோதிடத்தின் மூலம் அறிந்தாக வேண்டும். இவனால் மற்றவர்களுக்கு ஏற்படும் லாப–நஷ்டங்களும் கணிக்கப்படும்போது, இவனது பலாபலன்களைப் போலவே மற்றவர்களது பலாபலன்களும் ஏற்கனவே அவனவன் சாதகப் பலனின் பயனாய் ஏற்பட்டதாகத் தான் இருக்க வேண்டும்.

ஒரு ஜாதகன் ஒரு மனிதனைக் கொலை செய்வதாக வைத்துக் கொள்வோம். இந்தக் கொலையானது இந்த சாதகன் இன்ன வருஷம் இன்ன மாதம், இன்ன தேதி, இன்ன கிழமை, இன்ன மணிக்கு இன்னவர் இன்ன ஆளை, இன்ன விதமாய்க் கொலை செய்வான் என்று கொலை செய்தவனுடைய சாதகத்திலும், இன்ன வருஷம் இன்ன மாதம் இன்னதேதி இன்ன கிழமை, இத்தனை மணிக்கு இன்ன மனிதனால் இன்ன விதமாய்க் கொலை செய்யப்படுவான் என்று கொலையுண்டவன் சாதகத்திலும், கர்மத்தின் பலனாலோ, கடவுள் சித்தத்தாலோ ஏற்பட்டில்லாமல் இக்கொலை எப்படி ஏற்பட்டிருக்க முடியும்?

அந்தப்படி விதி ஏற்பட்டிருக்கும் போது, கொலை செய்பவன் இந்தக் கொலையைச் செய்யக்கூடாது என்று எவ்வளவு தான் கருதினாலும், அவனால் கொலை செய்யாமல் இருக்க முடியுமா? அதுபோலவே கொலையுண்டவனும் எவ்வளவுதான் ஜாக்கிரதையாய் இருந்தாலும் கொலையிலிருந்து தப்பித்திருக்க முடியுமா? விதியில் உள்ளதுபோல் நடந்துதானே தீரும்?

ஆகவே மனிதன் செய்யும் காரியங்கள் எல்லாம் சாதகப் பலன்படியும், சாதகப் பலன்கள் எல்லாம் விதிப்படியும், விதி எல்லாம் முன் ஜென்ம கர்மத்தின் பலன்படியும் நடப்பதாய் இருக்கையில், பாவ புண்ணியம் என்னும் பாகுபாடு எப்படிப் பொருந்தும்? மோட்சத்திற்கும் நரகத்திற்கும் அவசியத்தான் ஏது?" (பகுத்தறிவு: மலர் 1; இதழ் 4).

அய்யாவின் புலமை - தர்க்க அறிவு மிகக் கூர்மையானது. அவர் வீசிய இந்த வினாக்களுக்கு இன்று வரை எவரேனும் விடையிறுத்ததுண்டா என்றால் கிடையாது என்பதுதான் விடையாகக் கிடைக்கும்!

## விஞ்ஞான உலகம் – அறிவியல் கட்டுரைகள்

அறிவியல் நம் நாட்டில் நன்றாகப் பரவ வேண்டும் என்றும் நம் மக்கள் தொகுதியிலிருந்து நியூட்டன்களும் மார்கோனிகளும்

தோன்ற வேண்டுமென்பது பெரியாரின் தணியாத அவாவாக இருந்ததால் 'பகுத்தறிவு' மாதிகையில் அறிவியல் பரப்பும் கட்டுரைகள் இடம் பெறச் செய்தது இயல்பானதுதான்.

1938 ஆம் ஆண்டு ஜூன் திங்கள் முதலாம் நாள் வெளி வந்த 'பகுத்தறி'வில் 'விஞ்ஞான உலகம்' என்னும் தலைப்பின் கீழ் இதழாளர் பெரியார் தந்த செய்திகள் குறிக்கத் தக்கவை.

> "சமீப காலத்தில் விஞ்ஞானிகள் உலகில் புதிய 'ராக்கெட்' நிபுணர்கள் தோன்றியிருக்கிறார்கள்.
>
> ராக்கெட் சங்கம் என அமெரிக்காவில் ஒரு சங்கம் இருக்கிறது. இச் சங்கத்தினர் 1933 ஆம் ஆண்டில் பரீட்சார்த்தமாக ஒரு ராக்கெட்டை உபயோகிக்கத் தீர்மானித்தனர். இந்த ராக்கெட்டில் நெருப்பு பற்ற வைக்கப்பட்ட சில செகண்டுக்குள் ஒரு மணிக்கு 700 மைல் வேகத்தில் அது பிரயாணம் செய்ய ஆரம்பித்தது.
>
> 30 ஆண்டுகளுக்கு முன் இருந்த நிலைமையைப் பார்க்கிலும், இன்று உலகில் ஆகாய விமானங்கள் அடைந்திருக்கும் உன்னத ஸ்தானம் குறிப்பிடத்தக்கது. எதிர்காலத்தில், மணி ஒன்றுக்கு 25, 600 மைல் வேகம் செல்லும் சக்தியுடைய ராக்கெட்டுகள் ஜெர்மனி, பிரிட்டன் முதலிய தேசங்களில் தற்போது பரீட்சார்த்த வேலைகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. இந்தப் பரீட்சைகளில் வெற்றி கண்டால், சாதாரண மனிதர்களையும் 7 வாரங்களில் செவ்வாய் கிரகத்திற்கும் 4 தினங்களில் சந்திரமண்டலத்திற்கும் 60 செகண்டுகளில் அமெரிக்காவுக்கும் அனுப்ப முடியும் என்று பிரபல விஞ்ஞானிகள் உறுதியாகக் கூறுகின்றனர். ஆனால் இது சாதாரண காரியமல்ல. இருந்த போதிலும் ராக்கெட்டுகளின் மூலம் பிரயாணம் செய்யும் காலம் வெகு தூரத்திலில்லை எனத் தோழர் கிளீட்டர் கூறுகிறார்." ('பகுத்தறிவு' : மலர் 4; இதழ் 2).

இன்னொரு செய்தியும் அறிவியல் விந்தையைப் பறைசாற்றும் வண்ணம் 'பகுத்தறிவு' வெளியிட்டது.

### செயற்கை கரு

'படைப்பவன் பிரமனா? விஞ்ஞானியா?' என்ற தலைப்பின் கீழ் 1-5-1938ஆம் நாளிட்ட 'பகுத்தறிவு' வழங்கிய செய்தி இதுதான்

> "ஹாலந்தில் ஒரு காளையிருக்கிறது; இங்கிலாந்தில் ஒரு பசு இருக்கிறது. இவ்விரண்டுக்கும் சமீபத்தில் ஒரு கன்று

பிறந்துள்ளது. சுமார் இரண்டு வருடங்களுக்கு முன்பு அறிஞர்களின் மூளையிலே ஒரு விஷயம் பளிச்சென்று தட்டுப்பட்டது.

அதாவது கால்நடைகளுக்குள்ளே உயர்ந்த ஜாதி யொன்று உற்பத்தி செய்ய வேண்டும் என்பதே. உதாரணமாக ஹாலந்தில் ஒரு காளையிருக்கிறது; இங்கிலாந்தில் ஒரு பசு இருக்கிறது. இவ்விரண்டும் உயர்ந்த ஜாதியைச் சேர்ந்தவை. இவற்றிற்குக் கன்று பிறந்தால் அது இன்னும் உயர்ந்த ஜாதியாக விருக்கும். ஹாலந்திலிருந்து மாப்பிள்ளைக் காளையை இங்கிலாந்துக்குக் கொண்டு வருவதா? அது வீண் சிரமமான காரியம். அதற்காக என்ன செய்தார்கள்?

காளையின் விந்துவை எடுத்து செயற்கை மூலம் கரு உண்டு பண்ணினார்கள். இப்போது ஒரு கன்று பிறந்துள்ளது!

அடுத்த படியாக இந்த நிபுணர்கள் என்ன செய்வார்களோ? மனித சமூகத்திலே இவ்வாறு ஏதாவது வேலை செய்ய அவர்கள் முன் வந்தால் எப்படி யிருக்கும்!"

தோழர்களே! சான்றோர்களே! 1938ஆம் ஆண்டிலே இதழாளர் பெரியார் 'பகுத்தறி'வில் வெளியிட்ட ஏவுகணை, கருவுறுதல் ஆகிய பொருள்கள் பற்றிய கருத்துகள் தற்போது எந்த அளவுக்கு நடைமுறை உண்மைகளாகி விட்டன என்பதைச் சற்று சிந்தித்தால் மெய்சிலிர்க்கும்! ('பகுத்தறிவு' மலர் 4; இதழ் 1).

## மனித உற்பத்தி

'மனித உற்பத்தி' என்ற தலைப்பில் கே. பிரமச்சாரி என்பவர் எழுதி, 1-9-1938ஆம் நாள் வெளியான 'பகுத்தறிவு' மாதிகையில் இடம் பெற்ற அறிவியல் கட்டுரையின் சில பத்திகளைப் பார்ப்போம்.

"1857ஆம் வருஷத்தில் மண்டை ஓடுகள் அகப்பட்டதை நியாண்டர்தால் மனிதன் என்று சொல்வது வழக்கம். (Neanderthal Man) அதன் நெற்றி தாழ்ந்து கண் புருவங்கள் கொரில்லாவைப் போலக் காணப்பட்டாலும், மூளை அமைப்பையும் அளவையும் கவனித்தால் அதை மனிதனென்றே கருத வேண்டும். அவனால் உபயோகிக்கப்பட்ட கல் ஆயுதங்களை (Impliments) கவனித்தால் அவன் அறிவிலும் கைத்திறத்திலும் மேம்பட்டவன் என்பது ஏற்படும். அவன் சற்றேறக்குறைய 500000 வருஷங்களுக்கு முன்னரே குகைகளில் (Caves) வசித்திருந்தவன் என்பது பண்டிதர்களின் அபிப்பிராயம்.

34 வருஷங்களுக்குப் பிறகு ஜாவாத் தீவில் 'பிதிகாந்த்ரோபஸ்' (Pithecanthropus) அல்லது ஜாவா மனிதன் என்று பெயர் கொடுக்கப்பட்ட மற்றொரு மனிதனுடைய எலும்புகள் காணப்பட்டன. அவன் தலையைக் கவனித்தால் கிப்பன் (Gibbon) என்ற மனிதக் குரங்கின் கிளையென்றும், மூளை அளவையும் அமைப்பையும் கவனிக்குங்கால் மனிதனுக்கும் குரங்குக்கும் மத்திய அந்தஸ்துள்ள ஒரு மனிதனென்றே பாவிக்கப்படுகிறது. இவன் மூளை அளவு தற்கால வாலில்லாக் குரங்கின் (Gorilla) மூளையளவை விடப் பெரியதாகவும் முன்னே சொல்லிய நியாண்டர்தால் மனிதனுடைய மூளையளவுக்குக் குறைந்ததாகவும் காணப்படுகிறது. தற்கால வாலில்லாக் குரங்குகளைவிடப் புத்தி சாதுர்யத்தால் மேன்மை அடைந்திருக்கலாமென்று யூகிக்க முடியுமானாலும், இதை நிரூபிக்க அவனால் செய்யப்பட்ட ஆயுதங்களாவது, மற்றைய ஆயுதங்கள் மற்றைய ஆதாரங்களாவது ஒன்றுமில்லை. இவன் சுமார் 200 அல்லது 300 ஆயிரம் வருஷங்களுக்கு முன்னே ஜீவித்திருந்தானென்று நினைக்கப் படுகிறது.

சுமார் 18 வருஷங்களுக்கு முன் 'பில்ட்டவுன் மனிதன்' (Pilt down man) என்ற மற்றொரு மனிதனுடைய எலும்புகள் அகப்பட்டன. இது பார்வையில் குரங்கு ரூபத்தையும் மனித ரூபத்தையும் கலந்திருப்பினும் மூளையளவில் தற்கால மூளை அளவைப் பெற்றிருக்கிறது. 'கோமேக்னான் மனிதன்' என்று மற்றொரு மனிதன் ரூபலாவன்யத்திலும் மூளையளவிலும் தற்கால மனிதனை ஒத்திருக்கிறான்.

மேற்சொன்னவைகளும் ஆப்பிரிக்காவிலும் மற்ற இடங்களிலும் அகப்பட்டிருக்கும் எலும்புகளும் மனிதனுடைய மூதாதை வாலில்லாக் குரங்கிலிருந்தே உற்பத்தியானான் என்பதை ஸ்திரப்படுத்துகின்றன. மேற்சொன்ன 'மனிதர்கள்' எல்லாரும் தற்கால மனிதனும் ஒரே வேரிலிருந்து உற்பத்தியாகி வெவ்வேறு கிளைகளாகப் பிரிந்திருக்கலாமென்று இதனால் விளங்கும்.

முதன் முதல் மனிதனின் மூதாதை இந்தியாவிற்குத் தென்மேற்கில் 'லெமூரியா' (Lemuria) என்னும் தேசத்தில் உற்பத்தியாகி ஆப்பிரிகா, ஆசியா, ஆஸ்திரேலியா கண்டங்களுக்கும் பரவியிருக்க வேண்டும் என்பதே சாஸ்திரிகளின் துணிவும் லெமூரியா என்னும் நாடு இப்போது இந்து மஹா சமுத்திரத் தரையாக விருப்பதால் பூர்வீக மனிதனுடைய எலும்புகள்

அகப்படுவது அசாத்தியம். ஆனால் இப்பாகம் ஒரு காலத்தில் உயருமானால் அப்போது மனிதனுடைய பூர்வீக மூதாதைகளின் எலும்புகள் அகப்படும் என்று எதிர்பார்க்கலாம்.

மனிதன் முதலில் தனிமையாகவும், பிறகு தன் பெண்ஜாதிப் பிள்ளைகளுடனும் வேட்டையாடினபோது அவனுக்குச் சமூக வாழ்வு இன்னதென்று தெரியாது. பல குடும்பங்கள் குகைகளில் வசிக்க நேரிட்டபோது சமூக ஜீவனம் (Social Life) ஆரம்பித்தது. பாஷை முதலில் இல்லையெனினும் பிறகு ஏற்பட்டு ஒருவரோடு ஒருவர் பேச நேர்ந்த போது உண்மையான சமூக வாழ்வு ஏற்பட்டது.

மாந்த இனத்தோற்ற வரலாறு தொடர்பான அரிய செய்திகள் இவை! அந்தக் காலத்தில் இத்தகைய அறிவியல் செய்திகளைப் பெரியாரின் 'பகுத்தறிவு' தமிழ் கூறு நல்லுலகிற்குக் கடமையுணர்வோடு வழங்கியது என்பது எத்துணை பெருமிதத்திற்குரிய பேருண்மை! இதைச் செய்து காட்டியவர் இதழாளர் பெரியார்!

## ஜெ. ரீவஸ் – அறிவியல் அறிஞர் கட்டுரை

"மதம் விஞ்ஞானத்திற்கு முட்டுக்கட்டை" என்று பகுத்தறிவு - மாதிகையில் வெளியான ஜெ. ரீவஸ் என்னும் அறிஞரின் கட்டுரைச் செய்திகள் குறிப்பிடத்தக்கவை.

"உண்மையில் விஞ்ஞானிகள் அய்ரோப்பாவில் மட்டுமல்ல – சகல நாடுகளிலும் பல கொடிய ஆக்கினைக்கு எப்பொழுது ஆளானார்கள் என்றால் கிறிஸ்து மதம் தோன்றியதன் பின் என்றே சொல்லவேண்டும். அப்பொழுதுதான் உலக சிருஷ்டியைப் பற்றியும் அதில் தோன்றும் ஜீவராசிகளைப் பற்றியும் பழங்கதைகள் வெளிக்கிளம்பின. அக்கதைகளையே மக்கள் நம்பி வந்தார்கள். பகுத்தறிவற்றவர்கள் கூறிய அவற்றைச் சர்ச் ஒப்புக் கொண்டது. அதன் பயன் என்னவென்றால், கிறிஸ்துவுக்கு முன் மூன்று நூற்றாண்டுகள் வரை உலகத்தில் பகுத்தறிவுடைய மக்களும் விஞ்ஞானிகளும் இருந்து வந்தததை மாற்றி, கிறிஸ்துவுக்குப் பின் மூடர்களும் அஞ்ஞானிகளும் இடம் பெற்றிடச் செய்தது!

1543இல் 'மனித உடல் கூற்றின்' வரலாறு என்பதாக வெசாலியஸ் வெளியிட்ட அறிக்கையானது மத்திய காலத்தில் மதக்காரர்களால் விஞ்ஞானிகளுக்குத் தொல்லை ஆரம்பிக்கப்பட்டது. அவர்

பெரிய ஆராய்ச்சியாளர். அவரது முப்பது ஆண்டுக்குள் மனித உற்பத்தியைப் பற்றியும் அவனது உடற்கூற்றைப் பற்றியும் பல குறிப்புகளைக் கண்டுபிடித்தார். காலம் என்பவரால் 'மனித உடற்கூற்றின் வரலாறு' என்ற நூலில் இருந்த பல தவறுகளைக் களைந்தார். அவர் ஒரு மதவாதிதான். அப்படியிருந்தும் மதகிரந்தங்களில் மனித உற்பத்தியைப் பற்றிக் கூறப்பட்டிருக்கும் கொள்கைக்கு விரோதமாக இவரது கூற்று தோன்றியதால் இவர் குற்றஞ் சாட்டப்பட்டுத் தண்டிக்கப்பட்டு உயிரிழந்தார். ஒரு 'புண்ணிய' ஸ்தலத்திற்குக் கடல் கடந்து சென்று திரும்பி வரும் போது அவரது கப்பல் உடைக்கப்பட்டு அவர் கடலில் அமிழ்த்திக் கொல்லப்பட்டார்!

பின்னால் லாமார்க், லயல், டார்வின், வாலேஸ், ஹக்ஸ்லி, ஹெகல் முதலியோர்கள் 'பரிணாமம்' குறித்துப் பல ஆராய்ச்சிகள் வெளியிட்டார்கள். அன்றும் புரோகிதர்களுடைய கூச்சலுக்கும், குருட்டு நம்பிக்கையிலே உழலும் மூட நம்பிக்கையாளர்களின் வாய் வீச்சுக்கும் பஞ்சம் ஏற்படவேயில்லை.

சர் வில்லியம் லாரன்ஸ் 1816–18க்குள் வெளியிட்ட "மனிதனுடைய இயற்கையும் உயிர்ப்பிராணிகளின் இயற்கையும்" என்ற கட்டுரையால் மனித சமூகம் எந்த மூட நம்பிக்கையால் பெரிதும் கட்டுண்டு கிடந்ததோ அத்தகைய தளையானது தளர்ச்சியாக்கப் பட்டது. இதனால் அவரது புத்தகம் பிரசுரிக்க அனுமதிக்கப் படவில்லை. அவரது பிரயாசைகளும் வீணாயின!

இதனால்தான் 'இயற்கையில் மனிதனின் பங்கு' என்ற நூலைத் தோழர் ஹக்ஸ்லி வெளியிட ஆரம்பித்தபோது லாரன்ஸ் என்பவர் தடுத்தார். அவரது எதிர்கால வாழ்க்கை – ஊக்கம் – தடைப்படுத்தப்படும் என்றார்.

வெகு காலத்திற்குப் பின்னால்தான் பூமியில் புதையுண்டு கிடந்த பூர்வீக மனிதனுடைய எலும்புகளைக் கண்டுபிடித்து அதனால் ஏற்பட்ட ஆராய்ச்சிதான் மக்களால் ஒப்புக் கொள்ளப் பட்டிருக்கிறது. இவ்விஞ்ஞான ஆராய்ச்சியால்தான் மதக்காரர்கள் சொல்லுகிற காலத்திற்கு வெகு காலத்துக்கு முன்தொட்டு மனிதன் இருந்து வந்தமை தெரிந்தது!" (பகுத்தறிவு: மலர் 2, இதழ் 12 : 1–4–1937).

## ஜோஸஃப் மெக்காபி – அறிவியல் அறிஞர் கட்டுரை

"இவ்வுலகை யார் படைத்தார்?" என்ற தலைப்பில் ஜோஸஃப் மெக்காபி எனும் புகழ் தோய்ந்த அறிஞர் எழுதிய

கட்டுரையின் தமிழ் மொழிபெயர்ப்பு 1--3-1937 அன்று வெளியான 'பகுத்தறிவு' மாதிகையில் (மலர் 2, இதழ் 11) இடம் பெறச் செய்தார் பெரியார். அதன் சுவையான - ஆர்வத்தூண்டல் செய்யும் - பின்வருமாறு:

"பல உருவமுள்ள மக்களைப் போலவே நட்சத்திரங்களின் வயதும் தோற்றமும் காணப்படுகின்றன. இளமையான நட்சத்திரங்கள் பெரிய 'பூத' உருவத்தைப் போலவும் முதிர்ந்தவைகள் குள்ளர்களைப் போலவும் தென்படுகின்றன. நட்சத்திரங்களின் வயதோ கோடிக்கணக்கானதாகும். ஆயிரக்கணக்கான நட்சத்திரங்கள் சூரியன் தோன்றுவதற்கு முன்னமே தோன்றிவிட்டன. ஆதியிலே நட்சத்திரங்கள் 'பிரமாண்டமான' உருவத்தைப் பெற்றிருந்ததாக அறிகிறோம். தெற்கேயிருக்கிற நட்சத்திரங்களுள் அண்டாரிஸ் (ANTARES) என்ற நட்சத்திரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அதன் குறுக்களவு 400 லட்சம் மைல் நீளமுள்ளது. நமது சூரியனது குறுக்களவு லட்சமைலுக்குக் குறைவாக இருக்கிறது. அண்டாரிஸ் இப்போது சுருங்க ஆரம்பித்திருக்கிறது. சூரியனும் வெகு காலத்திலிருந்தே சுருங்கிக் கொண்டே வருகிறது. அது மறையும் காலமும் நெருங்கிக் கொண்டே வருகிறது!

இலட்சக் கணக்கான இந்த நட்சத்திரங்கள் அழிந்தாலும் புதிதாக வேறு நட்சத்திரங்கள் தோன்றுவதற்கு வேண்டிய மூலப்பொருள்கள் பிரபஞ்சத்தைச் சுற்றி இருந்து வருவதை நாம் பார்க்கலாம். இப்படி பிரபஞ்சம் என்பது ஒரு சமூகமென்றே சொல்லலாம். மனித வர்க்கமானது தலைமுறை தலைமுறையாகத் தோன்றலும் மறைதலுமாக இருந்து வருவதையே பிரபஞ்சமும் ஒத்திருக்கிறது.

ஆகவே ஆரம்ப காலம் எப்பொழுது என்பது பற்றியோ முடிவு காலம் எப்பொழுது என்பது பற்றியோ யோசிக்கத் தேவையே இல்லை!"

இவை போன்ற பகுத்தறிவுக் கருத்துகள் நிரம்பியே 'பகுத்தறிவு' மாதிகை இதழ்கள் மிளிர்ந்தன.

## டாக்டர் அவாயின் கட்டுரை

"ஆதி கால மக்கள் அனைவருக்கும் தத்தம் உலக சிருஷ்டி வரலாற்றுக் கதைகள் உண்டு. இவற்றில் யூதர்கள், கிறிஸ்தவர்கள், மகம்மதியர்கள் எல்லாரும் பங்கிட்டுக் கொள்ளும் விவிலியக் கதையே அதிகச் செலாவணியானதாகும்.

விவிலிய நூலை நுட்பமாகப் படித்துப் பார்ப்பவர்கள் அந்தக் காலத்திலேயே ஆசியா மைனரில் உலக சிருஷ்டி வரலாற்றைக் குறித்து இரு திறப்பட்ட கதைகள் நிலவின என்பதை உணரலாம். இந்த இரு கதைகளையும் வெளிப்படுத்துவது ஆதியாகமமாகும். முதல் நூலில் இலோஹிம் என்றும் இரண்டாம் நூலில் எஹோவா என்றும் கூறியிருத்தலேயாகும்.

இலோஹிம் எனும் ஹீப்ருச் சொல்லுக்குக் 'கடவுளர்கள்' என்பது பொருள், எஹோவா 'கடவுளர்க்கும் கடவுள்' எனப் பொருள்படும். ஆனால் இன்றைய விவிலிய நூலில் இது 'கடவுள்' என இடம் பெற்றுள்ளது. இலோஹிஸ்டிக், எஹோவிஸ்டிக் எனும் இருவகைப்பட்ட கதைகளும் தோற்றங்கள் குறித்துக் காட்டும் வேறுபட்ட வரலாறுகள் பைபிளைக் கண்டனவாதம் செய்ததாக் குற்றஞ் சாட்டப்பட்ட ஜான் வில்லியம் கொலன்ஸோ என்னும் பிஷப் எழுதி வைத்த குறிப்புகளிலிருந்து தெரியவரும்.

1. முதல் நூலில் நீரிலிருந்து நிலம் வெளிப்பட்டது. ஆகையினால் ஈரம் எங்கும் வியாபகமாயிருந்தது. இரண்டாவதில் நிலப்பரப்பு பூராவும் ஈரம் ஆக்கப்பட வேண்டியிருந்தது. 2. முதல் நூலில் மனிதனுக்கு முன் பட்சிகளும் பிராணிகளும் சிருஷ்டிக்கப் பட்டன. இரண்டாவதில் பட்சிகளுக்கும் பிராணிகளுக்கும் முன் மனிதன் தோன்றினான். 3. முதல் நூலில் எல்லாப் பறவைகளும் நீரிலிருந்து உண்டாக்கப்பட்டன. இரண்டாவதில் அவை நிலத்திலிருந்தே உண்டாயின. 4. முதல் நூலில் மனிதன் கடவுளின் பிரதி பிம்பமாகச் சிருஷ்டிக்கப்பட்டான். இரண்டாவதில் மனிதன் நிலத்தின் தூசியிலிருந்து தோற்றுவிக்கப்பட்டுப் பின் உயிர் மூச்சினால் உயிர்ப்புப் பெற்றான். 5. முதல் நூலில் பூமி முழுமைக்கும் மனிதன் எஜமானனாக்கப்பட்டான். இரண்டாவதில் ஒழுங்குப்படுத்தவும் பத்திரப்படுத்தவும் ஈடன் தோட்டத்திலே சும்மா வைக்கப்பட்டான். 6. முதல் நூலில் ஆணும் பெண்ணும் சேர்ந்து சிருஷ்டிக்கப்பட்டனர். இருவரும் சேர்ந்து ஆசிர்வதிக்கப் பட்டனர். இரண்டாவதில் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் மிருகங்களும் பட்சிகளும் உண்டாக்கப்பட்டன. மனிதன் அவற்றிற்குப் பெயரிடுகிறான். இறுதியாக அவனுடைய விலா எலும்பிலிருந்து பெண் வெறும் கூட்டாளியாக இருக்க உண்டாக்கப்படுகிறாள்."

நம் ஆர்வத்தைத் தூண்டவல்ல இவ்வரிய செய்திகள் 1-4-1937 அன்று வெளியான 'பகுத்தறிவு' மலர் 2 - இதழ் 12 இல் இடம் பெற்ற "உலக சிருஷ்டியும் கட்டுக்கதையும்" என்னும் டாக்டர் அவாயின் என்பவரின் கட்டுரையில் அடங்கியவை.

"பிள்ளை பெறுவது கடவுளாலா?" என்ற தலைப்பில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் எழுதிய சுவையான பகுத்தறிவுக் கட்டுரை யொன்று 1937 ஃபிப்ரவரிக்குரிய 'பகுத்தறிவு' மாதிகையில் இடம் பெற்றது.

> "உன் வீட்டில் பிரசவ அறையில் கடவுளால் ஒரு குழந்தை சிருஷ்டிக்கப்பட்டதல்லவா? முதன் முதல் உன் வீட்டிவ் பிரசவ அறையில் உன் குழந்தையைக் கண்டாய். அப்பிள்ளையை ஈன்றவள் யார் என்பதை நீ யறிவாய். அவள் அதை ஈன்றெடுக்க உன் சம்பந்தம் இருந்தது என்பதையும் நன்றாய் அறிவாய். ஆயினும் அக்குழந்தையை உண்டாக்கியவர் மாத்திரம் கடவுள் என்பதுதான் உனது நம்பிக்கை.
>
> உன்னுடைய இந்த நம்பிக்கை எந்தச் சந்தர்ப்பத்திலும் மாறாதிருக்க வேண்டும். ஆனால் அதே பிரசவ அறையில் இன்னொரு நாள் தகவலில்லாமல் இன்னொரு பிள்ளையை நீ கண்டாயானால், அது மற்றவன் பெற்றதென்றும், வளர்க்க முடியாமல் அவன் என் தலையில் கட்ட நினைத்திருக்கிறான் என்றும், நான் இதைப் பெறவில்லை என்றும் நீ சொல்வாய் என்பதில் சந்தேகம் இல்லை.
>
> இது மாத்திரமா? கடவுள் என்பதாக ஒன்று வந்து உன் காதில் அந்தப் பிள்ளை நமது சிருஷ்டி. ஆகையால் அதை நீ ஒப்புக் கொள் என்ற சொன்னாலும், முடியாது முடியாது, அது நான் பெற்றதல்ல, நான் பெற்றது எனக்கிருக்கிறது என்றுதான் சொல்வாய். அந்தச் சந்தர்ப்பத்தில் நீ அப்படிச் சொல்லுவது சரியாக இருக்கலாம். ஆனால் ஒன்று. நீயும் உன் மனைவியும் உண்டாக்கிய உன் பிள்ளை கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டது என நீ, முன், நம்பியதானது இவ்விடத்தில் ஆட்டங் கொடுக்க வில்லையா?
>
> ஒரே ஒரு வார்த்தை. எதையும் படைத்த கடவுள். உன் பிள்ளையைப் படைத்த கடவுள் – சொன்னாலும் சொல்லா விட்டாலும் சகலத்யையும் சிருஷ்டித்துக் கொண்டேயிருக்கும் கடவுள் இருக்கிறாரல்லவா? அவர், நீயும் உன் மனைவியும் சம்பந்த மற்றிருக்கும் காலத்திற்கிடையில் உன் வீட்டுப் பிரசவ அறையில் ஒரு பிள்ளையைச் சிருஷ்டித்துப் போட்டு விடுவாரேயானால், அதே நேரத்தில் என்னைக் கூப்பிடு; அப்போது தான் 'கடவுள் சிருஷ்டியா?' என்ற தொடர் மொழிக்கு

*அர்த்தம். கடவுள் மனிதரின் சிருஷ்டியா, மனிதர் கடவுளின் சிருஷ்டியா என்ற இரண்டிலொன்றை நான் நிச்சயித்து விட உத்தேசம்" (பகுத்தறிவு: மலர் 2, இதழ் 10)*

புரட்சிக் கவிஞரின் மொழி நடை தனித்தன்மை வாய்ந்தது. பேச்சு நடையென்றாலும் எழுத்து நடையென்றாலும் தன் முன்னாலிருக்கும் ஒருவனை விளித்து, தன் கருத்தை வெளியிடுவதாக அது அமைந்திருக்கும். உருப்படியான விளைவினைப் பயக்கும் ஒரு தனி உத்தி அது!

## இந்தியாவில் பெண்கள் இயக்கம் – கமலாதேவி சட்டோபாத்யாயி

இதழாளர் என்னும் முறையில் பெரியார் 'காங்ரஸ் சோஷியலிஸ்ட்' என்ற ஆங்கில இதழில் தோழர் கமலாதேவி சட்டோபாத்யாயி அவர்களால் 'இந்தியாவில் பெண்கள் இயக்கம்' என்பது பற்றி எழுதப்பட்ட பெண்ணுரிமை வரலாற்றுக் கட்டுரையின் தமிழ்மொழி பெயர்ப்பைத் தம் 'பகுத்தறிவு' மாதிகையில் 1-9-1938இல் வெளிவரச் செய்தார். ஜே.கே. வேலன் என்பவரால் மொழிபெயர்ப்புச் செய்யப்பட்ட அந்த நீண்ட கட்டுரையின் சில பகுதிகளை இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

> *"பெண்களின் நிலையைச் சாதாரணமாய் வழங்கிவரும் கல்வி, நாகரிகம் முதலியவைகளிலிருந்து தீர்மானிக்க முடியாது. அதன் உண்மை அஸ்திவாரம் சமூக – பொருளாதார அமைப்பில்தான் இருக்கிறது. எங்கே பெண்கள் பொருளாதார நிலையில் கட்டுப்பட்டவர்களாய் இருக்கிறார்களோ அங்கே தாழ்வாகவும் சுதந்திர மற்றவர்களாகவும் இருப்பார்கள். எங்கே பொருளாதார நிலையில் கட்டுப்படாதவர்களாய் இருக்கிறார்களோ அங்கே பெண்கள் முன்னேற்றமாயும் சுதந்திரமுள்ளவர்களாகவும் இருக்கிறார்கள்.*
>
> *ஆரம்ப காலத்திய சாதாரணப் பெண்கள் தங்கள் பழக்க வழக்கங்களில் சுயேச்சையுடையவர்களாய் இருந்தார்கள். ஆண்களும் பெண்களும் வேலைகளைப் பகிர்ந்து செய்து விட்டு அதன் லாப நஷ்டங்களைச் சரிசமமாகப் பகிர்ந்து கொண்டார்கள். ஆனால் தனிவுடைமை ஆசை வளர்ந்தவுடன் – அதாவது நிலக்கிழார்களும், சிற்றரசுகளும் வல்லரசுகளும் முளைக்க ஆரம்பித்தவுடன் பழைய சாதாரண வாழ்க்கை நிலை சிரழிக்கப்பட்டது. புதிய சிக்கலான பொருளாதார உருவங்கள் பிறந்தன.*

பெண்கள் தங்களிடம் இருந்து வந்த பொருளாதார வேலைகளைக் கைவிட்டார்கள். கொஞ்சம் கொஞ்சமாய் சரீர பலத்தையும் பொருளாதார பலத்தையும் இழந்து வந்தார்கள். பணக்கார வர்க்கத்தில் பெண்கள் பிரகாசித்துக் கொண்டிருந்த தங்கள் நிலையிலிருந்து ஆண்களால் முழுதும் அடிமையாக்கப் பட்டார்கள். ஏழைகளின் பெண் சமூகமும் அதிகவேலைகளாலும் வேலையே இல்லாமையாலும் கீழான நிலையை அடைந்தது.

மத ஆதிக்கத்தாலும் தரும சாஸ்திரங்களின் உதவியாலும் சட்டங்களின் கூட்டுறவாலும் எப்படி மனிதன் அசேதனப் பொருள்களைத் தன் உடைமை ஆக்கிக் கொள்கிறானோ அதைப் போல் பெண்கள் சமூகத்தைத் தங்களுக்கு அடிமையாக்கித் தங்கள் ஆதிக்கத்தில் வைத்துக் கொள்ளவும் மேற்படி சாதனங்களைப் பயன்படுத்திக் கொள்ளுகிறான்" ('பகுத்தறிவு' : மலர் 4; இதழ் 5).

'**பெண் ஏன் அடிமையானாள்**' என்பது பற்றி நெடிய கட்டுரைத் தொடரைக் 'குடிஅரசு' இதழில் ஏற்கனவே எழுதி வெளியிட்ட பெரியார், அப்பொருள் பற்றிய ஏனைய அறிஞர்களின் கருத்துகளைத் தேடிப் 'பகுத்தறி'வில் வெளியிட்டார் என்பது குறிப்பிடத்தக்கது.

## கற்பொழுக்கம்

வாழ்வியல் நெறிகளில் கற்பு என்பது பல்வேறுபட்ட - படுசிக்கலான - செம்மையான இலக்கணத்திற்குட்படாத கருத்தாகவே இருந்து வந்திருக்கிறது. அது குறித்த நீண்ட ஆய்வுரை ஒன்று பெரியாரால் எழுதப்பட்டது. 'பகுத்தறிவு' மாதிகையில் வெளியான '**கற்பொழுக்கம்**' என்னும் அக்கட்டுரையின் சில பகுதிகளைக் காணுவோம்.

"கற்பு உணர்ச்சி உலகம் முழுவதும் ஒரே சீராக இருக்கவில்லை. ஒரு தேசத்தில் நல்லொழுக்கமென மதிக்கப்படுவது வேறொரு தேசத்தில் கூடாவொழுக்கமாக எண்ணப்படுகிறது.

இமாலயப்பிரதேசத்திலுள்ள ஒரு சாதியார் திபெத்தியர் வழக்கத்தைப் பின்பற்றி வருகிறார்கள். ஒரு பெண்ணுக்கு ஏககாலத்துப் பல புருஷர்கள் கணவன்மாராக இருந்து வருகிறார்கள்.

ரோமாபுரியில் காட்டோ என்பவர் தன் மனைவி மரேஷியாவைத் தன் நண்பர் ஹார்ட்டன்சியசுக்கு இரவலாகக் கொடுத்து, அவன் இறந்த பின்பு அவளைத் திரும்பப் பெற்றுக் கொண்டாராம்.

தகப்பன் மகளைத் தீண்டுவதும், சகோதரன் சகோதரியைத் தொடுவதும் பயங்கர அநாசாரமான பாபச் செயலாக இப்பொழுது மதிக்கப்பட்டு வருகிறது. ஆனால் கி.மு. 66இல் அரேபியாவிலே சகோதரர் சகோதரிகளையும், புத்திரர் தாய்மாரையும் பெண்டாண்டு வந்ததாக ஸ்ட்ராபோ என்பார் கூறுகிறார்.

'ஒரு புருஷன் ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளலாம். ஆனால் அவளைச் சேர எல்லாப் புருஷர்களுக்கும் உரிமையுண்டு' என்ற ஹெராடாட்டஸ் கூறியிருக்கிறார். லீசியார், எட்ரூஸ் கானர், சிரீட்டர், அத்தீனியர், லெஸ்பியின்கன், எகிப்தியர் முதலியவருக்குள் பண்டு ஆண்களும் பெண்களும் தத்தம் இஷ்டப்படி வரையறையின்றிப் புணரும் வழக்கம் இருந்து வந்தது எனப் பாச்சோபின் என்பார் விளக்கிக் காட்டியிருக்கிறார்.

பெண்கள் பருவமடைந்த பிறகு ஏதேனும் ஓர் ஆலயத்துக்குச் சென்று, யாரேனும் ஓர் இளைஞனைத் தேடிப்பிடித்துக் கூடி, கன்னி கழித்துக் கொள்ள வேண்டியது பாபிலோன் நகரத்தில் ஒரு புனிதமான மதச் சடங்காக மதிக்கப்பட்டு வந்தது.

மெம்பிஸ், அர்மீனியா, டயர்சிடொன் முதலிய பிரதேசங்களிலும் அந்த அநாச்சாரம் இருந்து வந்திருக்கிறது.

லிபியன் கன்னிப் பெண்கள் தங்களுக்கு இஷ்டமானவரைக் கூடி, சீதனத்துக்கு வேண்டிய பணத்தைச் சம்பாதித்தார்கள்.

மார்குஸாஸ், பிலிப்பைன், பொலினிஷியத் தீவுகளிலுள்ள சில பிரதேசங்களிலும் ஆப்பிரிக்காவில் சில சாதியாருக்குள்ளும் பெண்களுக்கு இப்பொழுதும் புணர்ச்சி சுதந்திரம் இருந்தே வருகிறது.

மலையாளத்திலே ஒரு சாதியார் தம் மனைவிமாருக்குக் கன்னி கழிக்க மதகுருமாரை ஏற்படுத்துகிறார்கள். இந்தியாவின் அனேக பிரதேசங்களிலும், பசிபிக் மகாசமுத்திரத்திலுள்ள சில தீவுகளிலும் இவ்வழக்கம் இப்பொழுதும் அனுஷ்டானத்தில் இருந்து வருகிறது. செனிகாப்பியாவில் சாதித் தலைவன் அந்தப் புண்ணிய கருமத்தை நடத்தி வருகிறான்.

ஆண் – பெண் ஒழுக்க ஏற்பாடுகளை நாம் நுட்பமாக ஆராய்ந்து பார்த்தால் அவை யாவும் ஏதேனும் ஒரு முறையில் ஒரு மதக் கொள்கையைத் தழுவி நிற்பதைக் காணலாம்.

ஒருவன் இறந்தால் அவனது விதவையை அவன் தம்பி கலியாணம் செய்து கொள்ள வேண்டுமென்று 'லெவியட் சட்டம்' வற்புறுத்துகிறது.

தத்துவ முறையில் பார்த்தால், தற்காலக் கிறிஸ்துவ ஒழுக்கத் திட்டங்கள் மிகவும் உயர்வானவைதான். ஆனால் அவை அனுபவ சாத்தியமானதல்ல. கிறிஸ்துவ ஒழுக்கத் திட்டப்படி நடக்கக் கிறிஸ்தவர்கள் ஒரு சிறிதாவது முயன்றிருந்தால் அந்தத் திட்டத்திற்கு ஒருவாறு மதிப்புக் கொடுக்க வேண்யதுதான். அந்த இலட்சியத்தையடைய நாம் முயற்சியே செய்யாது இருந்தால், அந்த இலட்சியத்தில் ஏதோ கோளாறு இருக்கிறது என்றுதான் முடிவு கட்ட வேண்டும்." ('பகுத்தறிவு': மலர் 1, இதழ் 3).

## பண்பாட்டுப் புரட்சி

"தற்கால ரஷ்யப் பெண்கள் நிலை" என்ற தலைப்பில் 1-7-1938ஆம் நாளிட்ட 'பகுத்தறிவு' மாதிகையில் வெளியான கட்டுரையில் ஓர் அரிய பெரிய - பண்பாட்டுப் புரட்சி பற்றிய செய்தி கொடுக்கப்பட்டிருந்தது.

"பெண்களுக்குப் பொருளாதார உரிமை அளிப்பதாலும் நல்லுபதேசத்தாலும் விபசாரத்தை ஒழிக்கலாம் என்பது சோவியத் பெண்களின் நம்பிக்கை. விபசாரத் தொழிலில் ஈடுபட்டவர்கள் 100க்கு 5 பேராவது இருப்பார்கள். இவர்களை மீட்டுத் திருத்துவதற்கு லேபர் கரக்ஷன் இன்ஸ்டிட்யூட்கள் நிறுவப்பட்டிருக்கின்றன. ஆண் விபசாரர்களைச் சீர்திருத்தம் செய்யவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

1913 ஆம் ஆண்டில் (அதாவது ஜார் ஆட்சிக் காலத்தில்) மாஸ்கோ நகரில் மட்டும் 20000 விபசாரிகள் இருந்தனர். பீட்டர்ஸ்பர்கில் 40000 பேர் இருந்தனர். 1931 ஆம் ஆண்டில் கணக்கெடுக்கப் பட்ட போது அவர்களின் தொகை 400 மாத்திரமே. பெண்களுக்குச் சொத்துரிமை வழங்க ஏற்பாடு செய்ததும் விபசார நோய்களை நீக்கத் தீவிரமாக முயற்சி செய்ததும் குறிப்பிடத்தக்க நல்ல பலன்களை அளித்து வருகின்றது." ('பகுத்தறிவு': மலர் 4, இதழ் 3).

## கொடுமைகள் ஒழிய வேண்டும்

ஈ.வெ.ரா. என்ற பெயரிட்டு 'நமது லட்சியம்' என்ற தலைப்பில் 11-12-1938ஆம் நாளையப் 'பகுத்தறிவு' மாதிகையில் பெரியாரவர்கள் வெளியிட்ட கருத்துகள் சுயமரியாதை இயக்கத்தின் அரசியல் - பொருளாதாரப் பார்வை பற்றிய விளக்கத்தினை நமக்குத் தருகிறது.

"அந்தக் காலத்தில் இருந்த கொடுமை, ஏழ்மை, உழைப்பு, மனக்கவலை, அடிமைத் தனம் எல்லாம் இன்றும் இருந்துதான் வருகிறது. ஆணுக்கு ஒரு நீதி பெண்ணுக்கு ஒரு நீதி இன்று இல்லையா? மக்களைத் தெருவில் நடக்க விடாமை, தொட முடியாமை, பார்க்க முடியாமை ஆகிய மூர்க்கத்தனங்கள் இன்று இல்லையா? யாதொரு பாடும் படாமல் ஒரு நாளைக்கு நாலு வேளை ஆறுவேளை சாப்பிடுகின்ற மக்களும், ஒரு நாளைக்குப் 10 மணிநேரம் 12 மணிநேரம் பாடுபட்டும் அவர்களின் பெண்டு பிள்ளைகள் இரண்டு நாளைக்கு ஒரு தரங்கூடச் சமையல் செய்ய யோக்கியதை இல்லாத மக்களும் இல்லையா?

இவைகள் எல்லாம் மதக்கட்டளை, கடவுள் சித்தம், அரசாங்க விதி என்பவைகளின் மீதே நடந்து வருகின்றனவா இல்லையா? மனித சமூக முன்னேற்றம் என்பதில் நாணயமாயும் யோக்கியமாயும் பாடுபடுவதாய் இருந்தால் மேற்கண்ட கொடுமைகளை எல்லாம் ஒழிக்க வேண்டுமா? வேண்டாமா?

அரசியல் பற்றியும் பொருளாதாரக் கொடுமைகள் பற்றியும் பேசுவதே குற்றமான காரியம் என்று சில தோழர்கள் கருதியிருப்பதாகத் தெரிகின்றது. அரசியலுக்காகவும் பொருளாதாரத்துக்காகவும் நாம் அடிக்கவோ, குத்தவோ, கொல்லவோ, சுடவோ, வெடிகுண்டு எறியவோ, அல்லது எவ்வித பலாத்காரத்தை உபயோகிக்கவோ, வேண்டுமென்று நான் சொல்லவரவில்லை.

"அன்னிய அரசாங்கம் வேண்டியதில்லை; எங்கள் தேசத்தை எங்களிடம் ஒப்புவித்து விட்டு வெளிநாட்டார் வெளியாகி விடவேண்டும்" என்று சொல்லும் தேசியவாதிகளின் அரசியலை விட நம்முடைய அரசியல் கொடுமையானதுமல்ல; முட்டாள்தனமானதுமல்ல. அன்னியர் என்பதற்காக யாரையும் நாட்டைவிட்டுப் போகும்படி நாம் சொல்லுவதில்லை. அன்னியர் ஆட்சி என்பதற்காக எந்த ஆட்சியையும் அழிக்க வேண்டும் என்று நாம் சொல்லுவதில்லை. நாம் என்ன சொல்லுகிறோம்.

முதலாளித்துவ முறை கொண்ட ஆட்சி வேண்டாம்; பாடுபடும் மக்கள் அதன் பலனை அடையும்படியான முறை கொண்ட ஆட்சி வேண்டும் என்றுதான் சொல்லுகிறோம். ஏனெனில் உலகத்தில் பாடுபடும் மக்கள் 100க்கு 90 பேர்கள் இருக்கிறார்கள். சோம்பேறிகள், பாடுபடாமல் ஊரார் உழைப்பில்

வாழுகின்றவர்கள் 100க்குப் 10 பேர்கள்தான் இருப்பார்கள். ஆதலால் 100க்கு 90 பேருக்கு அனுகூலமான ஆட்சி அவர்களுடைய நலனுக்காக அவர்களாலேயே ஆட்சிபுரியக் கூடிய ஆட்சியாக இருக்க வேண்டும் என்கின்றோம். இதனால் என்ன தப்பு? இது ஏன் முடியாத காரியமாக வேண்டும்?

இதை ராஜத்துவேஷமென்றோ வகுப்புத் துவேஷமென்றோ சொன்னால் அதற்காகப் பயந்து விடுவதா? அப்படியானால் வருவதுதான் வரட்டுமே! என்ன முழுகிப் போய்விடும்? சதா சர்வ காலமும் உழைத்து, சோம்பேறிகளுக்கும் போட்டு விட்டு, பட்டினியாகவே ஒரு சமூகம் உலகில் உயிர்வாழ வேண்டுமானால், அந்தச் சமூகம் பூண்டற்றுப் போவதில் யாருக்கு என்ன சங்கடம்? கசாப்புக் கடைக்காரனுக்காவே ஆட்டுச் சமூகம் இருக்கின்றது என்றால், அந்த ஆட்டுச் சமூகம் உலகில் அற்றுப் போவது ஆடுகளுக்கு நஷ்டமா என்று யோசித்துப் பாருங்கள்.

சிங்கப்பூர், பினாங்கு, மலேயா, மோரிசு, பிஜி, வண்டி முதலிய இடங்களில் இருக்கும் கூலிகளில் அதிகமான விகிதாசாரம் தஞ்சாவூர் ஜில்லாக்காரர்களாகவே இருந்து வருகிறார்கள். தஞ்சாவூரில் அன்னச் சத்திரங்களுக்கும் சமஸ்கிருத காலேஜு களுக்கும் குறைவில்லை என்றால், இதன் கருத்து என்னவென்று யோசித்துப் பாருங்கள். பாடுபடும் மக்கள் பறையனாய், பள்ளனாய், குடும்பனாய், சாம்பனாய்க் கஞ்சிக்கு வகை யில்லாமல் நாட்டை விட்டு வேறு நாட்டுக்குப் போய் நாயிலும் கழுதையிலும் கடையாய்ப் பாடுபடுவதும், பாடுபடாத சோம்பேறிகள் அன்னச் சத்திரத்தில் சாப்பிட்டு சமஸ்கிருத காலேஜில் வாசிப்பதும், அங்குள்ள மிராசுதாரர்கள் தினம் தினம் நிலா விருந்தும் அதிரும் பாட்டுக் கச்சேரியும் ஜலக்கிரீடையும் அனுபவிப்பதும் அங்குள்ள மடாதிபதிகள் ராஜபோகம் அனுபவித்துக் கொண்டிருப்பதும் சகிக்கக் கூடிய காரியமா என்று யோசித்துப் பாருங்கள்.

ஆகையால் பாடுபடுவோருக்கும் ஏழைகளுக்கும் காப்பளிக்கக் கூடியதான ஒரு ஆட்சியை அமைக்க வேண்டுமென்ற கருதுகிறோம். இப்படிக் கருதுவதால் ஆபத்து வந்து விடும் என்று கருதுகிறார்கள் எங்களையே ஆபத்துக் குள்ளாக்கிவிட்டு மரியாதையாய் விலகித் தப்பித்துக் கொள்ளட்டும். ஆனால் எங்களுக்கு முட்டுக்கட்டை போடவேண்டாம். உள்ளே இருந்து துரோகம் செய்ய வேண்டாம். தோழர்களே, நாம் தைரியமாயும் நேர்மையாயும் ஒற்றுமையாயும் கவலையாயும் வேலை

*செய்தோமானால் நம் ஆயுளிலேயே நமது இச்சை பூர்த்தியாவதைக் காணலாம்." ('பகுத்தறிவு': மலர் 4, இதழ் 8).*

பெரியார் அன்றைக்குத் தெரிவித்த கருத்துகள் சில தோழர்கட்காகக் கூறப்பட்டவை யென்றாலும் இக்காலத்திற்கும் அவை பொருந்தவன என்பதில் அய்யமில்லை. உழைப்பாளர்களைக் காப்பாற்றும் அரசே தேவை என்பது அரசியலில் ஈடுபடுவது ஆகாது. ஆட்சி புரியும் முறை மாறவேண்டும் என்பதை வலியுறுத்துவதே அது.

## பேரறிஞர் அண்ணா எழுதிய கட்டுரை

*1-10-1938ஆம் நாளிட்ட 'பகுத்தறிவு' மாதிகையில்* **'அபேதவாதமும் சமூக சீர்த்திருத்தமும்'** என்ற தலைப்பில் பேரறிஞர் அண்ணா அவர்கள் எழுதிய கட்டுரையொன்ற வெளியாகியுள்ளது. ஒரு தனிக் கோணத்தில் அப்பொருள் பற்றி C.N.A. எனும் பெயரில் அண்ணா ஆய்வு செய்துள்ளார். அக்கட்டுரையின் கருத்துகள் சிலவற்றைப் பார்ப்போம்.

> *"சீர்திருத்த முயற்சிகளுக்குப் பிராமணர்கள், பரம சத்துருக்கள். அரசியல் சீர்திருத்தத் துறையிலும் பொருளாதாரச் சீர்திருத்தத் துறையிலும் பிராமணர்களே முன்னிலையில் நிற்கிறார்கள். ஆனால் ஜாதியை ஒழிப்பதற்காகத் தோன்றிய இயக்கங்களில் அவர்கள் முக்கியமாகப் பங்கு கொள்வதே இல்லை.*
>
> *சமூக அமைப்பை மாற்றாமல் ஒரு அங்குல அளவாவது முன்னேறிச் செல்ல முடியவே செய்யாது. சதுர்வர்ணியத்தைப் போல் மானக்கேடானது வேறு இல்லவே இல்லை. சுதந்தரம், பெருமை, புகழ் முதலியன நிரம்பியிருந்த காலம் இந்தியச் சரித்திரத்திலேயே ஒரேயொரு காலந்தான் உண்டு. அது மவுரிய சாம்ராஜ்ய காலமே. மவுரிய மன்னர்கள் காலத்திலே சதுர்வர்ணியத்துக்குச் சாவுமணி அடிக்கப்பட்டது. சதுர்வர்ணியம் வலுப்பெற்ற காலத்தில்தான் இந்தியாவுக்குத் தோல்வியும் அழிவும் ஏற்பட்டது.*
>
> *'அபேதவாத லட்சியத்தில் எனக்குப் பூரண நம்பிக்கை யிருப்பதால் ப்ல திறப்பட்ட வகுப்பாருள்ளும் சமத்துவம் ஏற்படுமென்ற நான் நம்புகிறேன் எல்லாப் பிரிச்சினைகளுக்கும் அபேதவாதமே சரியான முடிவென்று நம்புகிறேன்' என்று காங்கிரஸ் தலைவரான ஒரு பிராமணர் கூறுகிறார். அபேதவாதம் அமுலுக்கு வரும் போது எல்லாச் சமூகங்களுக்குள்ளும் சமத்துவம் ஏற்படுமென்று நம்பினால் மட்டுமே போதுமா? வாய்ப்பந்தல் போட்டு வெறும் வார்த்தைகளால் மழுப்பாமல்,*

உண்மையான பொருளாதாரச் சுதந்தரம் ஏற்பட அபேதவாதிகள் அந்தரங்க சுத்தியாக விரும்பினால் ஜாதி உயர்வு – தாழ்வை ஒழிக்கத்தான் வேண்டும். எனவே சமூகச் சீர்திருத்தம் செய்ய வேண்டியதே அபேதவாதியின் முதல் வேலை. சமூகச் சீர்திருத்தம் செய்யாமல் புரட்சி நடத்தவே முடியாது.

இந்திய சமூக அமைப்பைத் திருத்தி அமைக்க வேண்டுமானால் அரசியல் சீர்திருத்தத்துக்கு முன் சமூகச் சீர்திருத்தம் ஏற்பட வேண்டும் என்ற கொள்கையை எவராலும் மறுக்க முடியாது.

அரசியல் அமைப்பை உருப்படுத்தும் தலைவர்கள் சமூகப் பிரச்சினைகளை முக்கியமாகக் கவனிக்க வேண்டுமெனக் காரல்மார்க்ஸின் நண்பரும் சகபாடியுமான பெர்டினண்டு லாஸேல் கூடக் கூறியிருக்கிறார். இந்தியாவைப் பொருத்த வரையில் சமூகச் சீர்திருத்தத்துக்கான வழி கரடு முரடானது – சங்கடமானது – ஆபத்துகள் நிறைந்தது. இந்தியாவில் சமூகச் சீர்திருத்தத்துக்கு நண்பர்கள் சிலரே, எதிரிகளோ அதிகம். அவர்கள் இருவகை. ஒரு கூட்டத்தார் அரசியல் சீர்திருத்தக்காரர்; மற்றவர்கள் அபேதவாதிகள்!" ('பகுத்தறிவு': மலர் 4, இதழ் 6).

அண்ணாவின் இக்கருத்துகள் நம் நாட்டின் அக்காலத்திய அரசியலின் தட்ப வெப்ப நிலவரங்களை நமக்கு உணர்த்துகின்றன.

## தமிழின் தொன்மை

'தமிழின் பூர்வீகம்' என்ற தலைப்பில் 1-1-1939 ஆம் நாளிட்ட 'பகுத்தறிவு' மாதிகையில் இடம் பெற்ற கட்டுரை கருதத்தக்க சிறப்பான செய்திகளை அடக்கியது.

"தமிழர்கள் தொன்மை வாய்ந்தவர்கள் என்பதில் சிறிதும் அய்யமில்லை. தமிழ் மொழியின் இயலே தமிழின் தொன்மைக்குப் பெருஞ்சான்றாக நிற்கிறது. உலகில் நிலவும் பல மொழிகளுள் நந்தமிழ் மொழி மெல்லோசையுடையது. மெல்லோசை மொழி நேற்று இன்று தோன்றியிராது.

தொல்காப்பியத்தின் மொழி நடையும் உள்ளுறையும் தமிழரின் தொன்மைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகள். தொல்காப்பிய மொழி மிகவும் வளமுடையது; பண்பட்டது; விழுமிய கருத்துகளை இழுமென் மொழியால் எளிதில் மலர்விக்கும் ஆற்றல் வாய்ந்தது.

தொல்காப்பியத்தில் ஒலி நுட்ப ஒலி திரிந்து எழுத்தாதல், உயர்திணை, அஃறிணை, ஆகுபெயர், அன்மொழித் தொகை

*முதலியனவும், அகம் புறம் என்னும் வாழ்வுக் கூறுபாடு, அரசு, போர்முறை, இறைச்சி, கூர்தல் முதலியனவும் சொல்லப் பட்டிருக்கின்றன. இந்நாகரிகத் துறைகள் யாவும் எத்துணை எத்துணை நூற்றாண்டுகட்கு முன்னர் அரும்பி மலர்ந்து காய்த்துக் கனிந்து தொல்காப்பியத்தில் இடம் பெற்றிருக்க வேண்டும்?*

*தமிழ் மக்கள் காட்டுமிராண்டிகளாய் இருந்து, கைக்குறி, கட்குறி, ஒலிக்குறி முதலியவற்றான் கருத்துக்களை உணர்த்தி, பின்னே எழுத்து, சொல், பொருள் முதலியவற்றைக் கண்டு, மொழியை வளம்படுத்திச் செப்பம் செய்வதற்கும், நாகரிகத் துறைகளைக் கண்டதற்கும், அவை. நிலைபெறுதற்கும் தொல்காப்பியத்துக்கு முன்னர் எத்துணை எத்துணை ஆண்டுகளாகியிருத்தல் வேண்டும்?*

*அத்தூய தமிழர் மட்டும் இப்போது தமிழ்நாட்டில் வாழ்கின்றார்களில்லை. அவர்களுடன் வேறு பல மக்களும் குடிபுகுந்து நிலைத்து விட்டார்கள். தொன்று தொட்டுத் தமிழைத் தாய்மொழியாய்க் கொண்டவரும் தமிழ்நாட்டில் குடியேறி நிலைத்த வாழ்வு பெற்றவரும் தமிழராவர் என்று கூறலாம். இவருள் சைவரிருக்கலாம்; வைணவரிக்கலாம்; அருகரிருக்கலாம்; புத்தரிக்கலாம்; கிருஸ்தவர் இருக்கலாம்; இஸ்லாமானவரிருக்கலாம்; ஆத்திகரிருக்கலாம்; நாத்திகரிருக்கலாம் இவரனைவரும் தமிழர் என்பதை மட்டும் மறத்தலாகாது.*

*பல வழிகளிலும் சிதறுண்டு கிடக்கும் தமிழ் இனத்தை ஒருமைப்படுத்துவதற்கு உறு கருவியாயிருப்பது தமிழ் மொழியேயாகும். அருமைத் தமிழ்நாடு சிதறுண்டு கிடக்கிறது. தலையாய காரணம் என்ன? தாய்மொழியைப் பேணாமை; அதன்பால் பற்றுக் கொள்ளாமை' ('பகுத்தறிவு': மலர் 4, இதழ் 9).*

இவ்வுரை எவருடயது என்பது இதழில் பதிவாகவில்லை. ஆயினும் இக்கருத்துகள் அசைபோடுவதற்கும் செயற்பாட்டிற்கும் உரியவை.

## இந்தி எதிர்ப்பு

அக்காலப் பொதுநலத் தொண்டுப் பெருமக்களில் ஒருவராகிய கே.வி. ரெட்டி நாயுடு என்பவர் எழுதிய 'இந்திப்புரட்டு' என்னும் இருபது பக்க விளக்கக் கட்டுரை 1938 ஆகஸ்ட் மாதப் 'பகுத்தறிவு' இதழில் இடம் பெற்றிருந்தது. அக்கட்டுரைச் செய்திகளின் அருமை கருதி, ஒரு சிலவற்றைத் தருகிறேன்.

"காங்கிரஸ்காரர் பதவியேற்று ஒரு மாதம் முடியுமுன்னே சென்னை மாகாணப் பள்ளிக் கூடங்களில் இந்தியைக் கட்டாயப் பாடமாக்கப் போவதாக முதன்மந்திரியார் தெரிவித்தார். உடனே அதைப் பலர் கண்டிக்கத் தொடங்கினார்கள்.

1937 ஏப்ரல் 13 ஆம் தேதி சென்னை மாகாணக் கல்லூரி அய்க்கிய சங்க ஆதரவில் கூடிய ஒரு பொதுக் கூட்டத்தில் கட்டாய இந்தியை ஆச்சாரியார் ஆதரித்துப் பேசும்படி நேர்ந்தது. அப்பால் ஆகஸ்ட் 15 ஆம் தேதி முத்தியாலுப்பேட்டை ஆந்திர பாஷாபிவிர்த்திச் சங்கச் சார்பில் கூடிய ஒரு கூட்டத்தில் நான் கனம் ஆச்சாரியாரின் இந்தி கட்டாயப் பாடத்தை எதிர்த்துப் பேசினேன். மற்றும் பல பிரபலஸ்தர்கள் கண்டிக்க முன்வந்தார்கள். அவர்களுள் முக்கியஸ்தர் தோழர் சோமசுந்தர பாரதியார். அவரும் ஒரு காங்கிரஸ்காரரே. அவர் முதன் மந்திரிக்குப் பகிரங்கக் கடிதமும் எழுதினார். திருச்சி, தஞ்சாவூர், சேலம் முதலிய இடங்களில் கூடிய பொதுக் கூட்டங்களிலும் இந்திக் கட்டாயப் பாடத் திட்டம் கண்டிக்கப்பட்டது.

மாகாணம் முழுதும் சுற்றுப் பிரயாணம் செய்த மந்திரிகளும் இந்தி எதிர்ப்பின் வன்மையை உணர்ந்து கொண்டார்கள். காங்கிரஸ்காரரே இந்தி கட்டாயப் பாடத்தைக் கண்டித்து முதன் மந்திரியாரிடம் கேள்விகள் கேட்கத் தொடங்கினார்கள்.

எதிர் அபிப்பிராயங்களை முதன் மந்திரி அலட்சியம் செய்யவே, 1938 பிப்ரவரியில் காஞ்சிவரத்தில் ஓர் இந்தி எதிர்ப்பு மகாநாடு கூட்டப்பட்டது. அம்மகாநாட்டுக்கு நானே தலைமையேற்றேன். தொடர்ந்து அநேக இடங்களில் அநேகக் கண்டனக் கூட்டங்கள் நடைபெற்றன. எதிரிகளின் அபிப்பிராயம் மீண்டும் கட்டுப்பாடாக அலட்சியம் செய்யப்படவே எதிர்ப்பாளர்கள் கறுப்புக் கொடி பிடிக்கவும் மறியல் செய்யவும் உண்ணா நோன்பு கிடக்கவும் துணிவு கொண்டார்கள்.

இந்திய அய்க்கியத்துக்கு ஒரு பொதுமொழி தேவையென்பதும் இந்தியப் பூரண சுயராஜ்யத்திற்கு அகில இந்தியப் பொதுமொழி இன்றியமையாதது என்பதுமே இதுவரை கூறப்பட்டு வந்த இரண்டு அரசியல் காரணங்கள். கானடா, தென்னாப்பிரிக்கா, ஸ்விட்சர்லாந்து, நிலைமைகளை முன்னிறுத்திப் பார்த்தால், தேசவிடுதலைக்கு ஒரு மொழி அவசியமில்லை யென்பதும் இந்திய நிலைமைக்கு ஒரு பொது மொழி சாத்தியமானதல்ல வென்பதும் நன்கு விளங்கும்.

சில காங்கிரஸ் மந்திரிகளும் பார்லிமெண்டரி காரியதரிசிகளும் பொதுமொழி பற்றியும் தேசிய மொழி பற்றியும் புலம்பிக் கொண்டே யிருக்கிறார்கள். இந்தியாவில் அதிகமாகப் பேசப்படும் பாஷை இந்துஸ்தானி என்பதற்கு ஆதாரமில்லை யெனப் பல முறை மறுக்கப்பட்டிருக்கிறது. மறுப்பு தப்பென இதுவரை நிரூபிக்கப்படவுமில்லை.

'ராபி பஜார்' – இலக்கியச் சங்கம் பல பெரிய வங்கப் பண்டிதர்களை உறுப்பினராகக் கொண்டது. இந்தியைப் பற்றி 'ராபி பஜார்' இலக்கியச் சங்கத்தில் சமீபத்தில் விவாதம் நடந்தபோது ஆனந்த பஜார் பத்திராசிரியர்களில் ஒருவரான பிரபுல்லா சர்க்கார், வங்காளி 8 கோடி மக்களால் பேசப்படுகின்றதென்றும் இந்தி 11 கோடி மக்களால் பேசப் படுவதாய்க் கூறப்படுதவற்கு ஆதாரமில்லை யென்றும் கூறினார்.

இந்தியாவின் மிகுதியான பாகங்களில் இந்தி பேசுவோர் வசித்து வருவதாகக் கூறப்படுவது தப்பென்றும், ஆசாம், ஒரிஸா, பம்பாய், ஆஜ்மீர், மீர்வாரா, பலுசிஸ்தானம், சென்னை, பரோடா, கொச்சி, ஹைதராபாத், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பாஞ்சாலம், காஷ்மீரம், மைசூர், ராஜபுதனம், கூர்ஜரம், திருவிதாங்கூர் முதலிய பிரதேசங்களில் வாழும் மக்களுக்கு இந்தி தாய்மொழியுமல்ல, உபமொழியுமல்ல எனவும் 'விசித்ரா' பத்திரிகையின் ஆசிரியரான உபேந்திரநாத் கங்கூலி தக்க ஆதாரங்களுடன் விளக்கிக் கூறியிருக்கிறார்.

உண்மையில் கட்டாய இந்திக்கு எதிர்ப்பாளர் கூறும் ஆட்சேபணைகளுக்கு முதன்மந்திரி யளித்த பேட்டியோ சர்க்கார் அறிக்கையோ சரியான சமாதானம் சொல்லவே இல்லை.

பின்லாந்து தேசத்துத்துக்கும் சர்வதேசச் சங்கத்துக்கும் ஏற்பட்டிருக்கும் ஒப்பந்தத்தில், பின்லாந்துக்குச் சொந்தமான ஆலந்து தீவில் அத்தீவில் வாழும் மக்கள் – மிகவும் சொற்பப் பேராயிருப்பினும் – அவர்களது சம்மதமில்லாமல் பின்லாந்து மொழியைக் கட்டாயப் பாடமாக்கக் கூடாது என்று ஒரு வகுப்பு சேர்க்கப்பட்டிருக்கிறது.

எந்த மாகாணக் கல்வித் திட்டத்திலும் இந்தியைக் கட்டாயப் பாடமாக்க வேண்டுமென்று காங்கிரஸ் முடிவு செய்யவில்லை. இந்தியைக் கட்டாயப் பாடமாக்கப் போவதாய் தேர்தல் அறிக்கையிலோ தேர்தல் பிரசாரங்களிலோ காங்கிரஸ்காரர் குறிப்பிடவில்லை. இந்தியைக் கட்டாயப் பாடமாக்க

வேண்டுமென்று மாகாண மக்கள் எவரும் காங்கிரஸ்காரரிடம் வேண்டிக் கொள்ளவுமில்லை. அரசியல் சூதாட்டத்தில் நம் குழந்தைகளைப் பணயமாக வைக்கக் கூடாதென்பது எனது அபிப்பிராயம். நம்முடைய பிள்ளைகள் எல்லாம் பலசாலிகள் அல்ல. நாட்டின் காலநிலை அவர்களது உடல் வளர்ச்சிக்கு உதவி புரியக் கூடியதுமல்ல.

இந்தி எதிர்ப்பாளர் ஆயிரக்கணக்கானவர்களை 'மனக்குறையுடைய சிலர்' என கனம் ஆச்சாரியார் அலட்சியமாகக் கூறுவது உண்மையில் மிக வேடிக்கையாகவே இருக்கிறது!

மாகாணம் முழுதும் நடைபெற்ற ஆயிரக்கணக்கான கண்டனக் கூட்டங்களில் பங்கு கொண்ட மக்களின் மனக்கொதிப்பையும் உணர்ச்சியையும் ஆச்சாரியார் மெய்யாகவே அறியமாட்டாரா? அவர் செல்லுமிடங்களில் எல்லாம் கறுப்புக் கொடிகளையும் இந்தி எதிர்ப்பு விளம்பரங்களையும் பார்க்கவில்லையா? வெளி மாகாணங்களில் ஜனாப் ஜின்னா, 'இந்தியன் சோஷியல் ரிபார்மர்' ஆசிரியர் தோழர் செ. நடராஜய்யர், 'ராபி பஜார்' சங்கத்தார் இந்தியைக் கண்டித்திருக்கிறார்களே, இவர்கள் எல்லாம் மனக்குறையுடையவர்களா? ஸர்.எம். கிருஷ்ணன் நாயர், மாஜி மந்திரி முத்தையா முதலியார், சாமி வேதாசலம், ஈழத்துச் சிவானந்த அடிகள், ஷண்முகானந்த அடிகள் முதலியோரின் கண்டனத்துக்கு ஆச்சாரியார் என்ன பதிலளிக்கிறார்? தோழர் சோமசுந்தர பாரதியார் இன்னும் காங்கிரஸ்வாதியாகத்தானே இருக்கிறாரே, அவரும் மனக்குறையுடையவரா? இந்தி எதிர்ப்புத் தீர்மானங்களை ஏகமனதாய் நிறைவேற்றிய சங்கங்களின் உறுப்பினர்களெல்லாம் மனக்குறையுள்ளவர்களா? இந்தி எதிர்ப்புக் கூட்டங்களில் கலந்து கொள்ளும் ஆயிரக்கணக்கான ஆண்கள், பெண்கள் எல்லாரும் மனக்குறையுடையவர்களா? கொடுஞ்சொல் கோழைத்தனத்தின் அறிகுறி.

ஆந்திரரான நான் தமிழர் இயக்கத்தை ஆதரிப்பது அக்கிரமமானதென்று கனம் யாகூப் ஹாஸன் கூறினாராம். அவருடைய அறியாமைக்கு மிகவும் இரங்குகிறேன். தெலுங்கு திராவிட பாஷைகளில் ஒன்றென்பதையும் சென்னை சர்க்காரின் இந்தி கட்டாயப் பாடத்திட்டம் ஆந்திர நாட்டையும் பாதிக்கும் என்பதையும் அவர் அறியார் போலும்.

ஆந்திர நாட்டிலும் இந்தி கட்டாயப் பாடத்துக்கு எதிர்ப்பு இல்லாமலில்லை. 16 வருடங்களுக்குமுன் – சட்ட மறுப்புப் போர்

தீவிரமாக நடைபெற்றுக் கொண்டிருந்த காலத்திலேயே – ஆந்திர ரத்ந கோபாலகிருஷ்ணய்யா 'இங்லீஷ் இடத்தில் இந்தி புகுத்தப்பட்டால் தென்னாட்டாராகிய நமக்குத்தான் அதிக கஷ்ட நஷ்டங்கள் உண்டாகும். மேலும் பல நூற்றாண்டுக்காலம் நாம் இந்தி மொழிக்கு அடிமைப்பட வேண்டியதாகவே நேரும் என எச்சரிக்கை செய்துள்ளார். அவர் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசியாய் இருந்தவர்.

ஆந்திர பார்லிமெண்ட் தலைவரான பி. கேசவராவ் சமீபத்தில் வெளியிட்ட ஒரு துண்டுப் பிரசுரத்தில் இந்தி கட்டாயப் பாடத்தால் ஆந்திரர்களுக்கு நேரக்கூடிய தீமைகளை விளக்கி எச்சரித்துள்ளார்.

சென்னை – தெலுங்கு தினசரியான 'ஜன வாணி'யும் நெல்லூர்ப் பத்திரிகையான 'ஸ்வதந்தரா'வும் ராஜமுந்திரியிலிருந்து வெளிவரும் 'பிரபுத்த பாரத்' பத்திரிகையும் இந்தி கட்டாயப் பாடத்தைக் கட்டுப் பாடாக எதிர்த்தே வருகின்றன. ஆந்திர நாட்டில் நடைபெற்ற பல பொதுக் கூட்டங்களிலும் இந்தி – கட்டாயப்பாடம் கண்டிக்கப்பட்டிருக்கிறது.

காங்கிரஸ்காரர் பதவியேற்குமுன் கையாண்ட முறைகளைப் பின்பற்றும் இந்தி எதிர்ப்பாளருக்குப் போலீஸார் தடியடி வழங்கும்படி தூண்டுவதும், கண்ணியமானவர்களைக் கைது செய்வதும் காரியாலயங்களில் சோதனை போடுவதும் காங்கிரஸ்காரரே வெறுத்த கண்டித்த – கிரிமினல் திருத்தச் சட்டத்தின்படி வழக்குத் தொடர்வதும் கொடிய அடக்கு முறைகளைக் கையாளுவதும் காங்கிரஸ் சர்க்காரேயாகும். வரப்போகும் சுயராஜ்யத்திற்கு இதுதான் முற்குறியா? படையும் விமானங்களும் உடைய வரப்போகும் பூரண சுயராஜ்யம் எவ்வளவு லட்சணமாயிருக்கும் என வெகு சுளுவாக ஊகித்தறியலாம்.

எதிரிகளை நசுக்குவதுதான் ஆரியர் வழக்கு – அவர்கள் ஜெர்மன் ஆரியராயிருந்தாலும் சரி, இந்திய ஆரியராகவிருந்தாலும் சரி. பன்னூற்றாண்டுக் காலம் பிராமணர் தமிழருடனும் ஜெர்மானியர் யூதர்களுடனும் சேர்ந்து வாழ்ந்தும் ஆரியரின் ஜாதி வெறியும் துவேஷமும் ஒழியவில்லையே!"

பெருமகன் கே.வி. ரெட்டி நாயுடு அவர்களின் அரிய வரலாற்றுக் கருத்துகள் நமக்கு எவ்வளவோ உணர்த்துகின்றன! இவற்றின் அருமை கருதியே பெரியாரவர்கள் இந்த நீண்ட

கட்டுரையினைப் 'பகுத்தறிவு' – மாதிகையில் இடம் பெறச் செய்துள்ளார். ('பகுத்தறிவு' : மலர் 4; இதழ் 4).

'பகுத்தறிவு' மலர் 4, இதழ் 2 இன் பின்னட்டையை நிரப்பியிருந்த படம் பற்றிக் குறிப்பிட வேண்டும்.

படத்திற்குத் 'தமிழ்த்தாய் மீது ஆச்சாரியார் ஹிந்திக் கத்தி - வீச்சு' என்று தலைப்பிட்டிருந்தனர். முடி சூட்டப்பட்ட 'தமிழன்னை' யின் எழிலார்ந்த முழு உருவப்படம். ஒரு கையில் திருக்குறளையும் மற்றொரு கையில் தொல்காப்பியத்தையும் ஏந்தியிருக்கிறார் 'தமிழ்த்தாய்'. பஞ்சகச்சமும் கறுப்புக் கண்ணாடியும் அணிந்த முதலமைச்சர் இராஜகோபாலாச்சாரி ஓங்கிய கட்டாரியுடன் பாய்கிறார் 'தமிழன்னை' மீது. சிறப்பென்ன வென்றால் மிரட்சியே யில்லாத தமிழ்த்தாய் அமைதியாக எதிர்நோக்குவதாகப் படம் வரையப்பட்டிருந்தமைதான். இவ்வோவியம் எல்லாத் தரப்பினரிடையேயும் பரபரப்பு உண்டாக்கியதாம்!

'பகுத்தறிவு' - மாதிகையில் பெரும்பகுதி பகுத்தறிவுக் கருத்துகளும் அறிவியற் செய்திகளும் நிரம்பிய கட்டுரைகளாகவே இருந்தன.

அடுத்த இடம் பெண் விடுதலை என்னும் அருங் குறிக்கோளுக்குத் தரப்பட்டது. அச்சேறிய கதைகள் அத்தனையும் பெண்ணியச் சிக்கல்கள் பற்றியே பேசின.

ஒவ்வொரு திங்களின் 'பகுத்தறிவு' இதழின் முதற் பக்கத்திலும் தன்மானக் கோட்பாடுகளைப் பரப்பும் பாடலொன்று தவறாமல் வெளியிடப் பெற்றது.

மறுமலர்ச்சிச் சிந்தனையாளர் பலரையும் தமிழ் மக்களுக்கு அறிமுகப் படுத்தி வைக்கும் கடமையையும் 'பகுத்தறிவு' மாத இதழ் நிறைவேற்றியது.

ஒவ்வோர் இதழும் அறுபத்தி நான்கு பக்கங்களைக் கொண்டிருந்தது. சில மாத இதழ்கள் கூடுதல் பக்கங்கள் பெற்றன. இரண்டாம் ஆண்டின் முதல் இதழில் எண்பது பக்கங்கள் அடங்கியிருந்தன.

தொடக்கத்தில் 'பகுத்தறிவு' மாத இதழ் ஓரிதழ் விலை ஒன்றரை அணாவாகவும் ஆண்டுக் கட்டணம் ஒரு ரூபாயாகவும் போடப்பட்டது. எந்தக் கட்டத்திலும் விலை மாற்றம் செய்யப்படவில்லை. எவ்வளவு மலிவான கட்டணம் என்பதைக் கருதுங்கள். மக்களுக்குப் பகுத்தறிவுச் செய்திகள் தரப்பட வேண்டும் என்பதில் பெரியாருக்கு எத்துணை ஆர்வம்!

'அறிவுடையார் எல்லாம் உடையார்' என்னும் குறட்பா 'பகுத்தறி'வின் முதற் பக்கத்து மேற்பகுதியில் இறுதிவரை அச்சிடப்பட்டு வந்தது.

குறிப்பிடப்படவேண்டிய சிறப்புச் செய்தி 'பகுத்தறிவு' மாத இதழில் வணிக விளம்பரம் எதுவுமே இடம் பெறவில்லை என்பதாகும்.

இவ்வாறு ஒரே சீராக, உயர்ந்த கொள்கைப் பிடிப்போடு, 'அறிவை வளர்க்கும் மாத வெளியீடு' என்று அறிவிப்புச் செய்ததற்கு முற்றிலும் ஏற்றவண்ணம் இதழாளர் பெரியார் 'பகுத்தறிவு' இதழை நடத்திக் காட்டியமை அக்காலத்தில் பெரும் புரட்சிச் செயலென்றே மதிப்பிட வேண்டும்!

******

# மீண்டும் குடியரசு

பெரியாரால் உயர்ந்த தொண்டற நோக்குடன் 2-5-1925 அன்று நிறுவப்பெற்று, அரும்பெரும் நிறைவேற்றங்கள் ஆயிரமாயிரம் முடித்துக் காட்டிய 'குடிஅரசு' - கிழமையிதழ், அன்றைய வெள்ளையர் ஆட்சியின் பல்வேறு நெருக்குதல்களுக்கும் அழுத்தங்களுக்கும் இலக்காகி, 19-11-1933 அன்று தற்காலிகமாக நிறுத்தப்பெற்றது என்பதை அறிவோம்.

மீண்டும் அக் 'குடிஅரசு' 13-1-1935 அன்று புத்தெழுச்சிப் பெற்று புதுப்பொலிவுடன் மக்கள் கைக்குக் கிடைத்தது. 'குடிஅர'சின் மறுதோற்றம் பற்றி அதே வெளியீட்டின் துணை ஆசிரியவுரை இப்படி விளக்கம் தந்தது.

"குடிஅரசு பத்திரிகை துவக்கப்பட்டு இன்றைக்கு 11-வது வருஷம் நடக்கின்றது. மத்தியில் அது அஞ்ஞாத வாசம் செய்ய வேண்டி ஏற்பட்டு, அதன் கொள்கைகள் 'புரட்சி', 'பகுத்தறிவு' என்னும் பெயரால் வெளியிடப்பட்டு வந்து, இப்போது மறுபடியும் 1935வது வருஷம் ஜனவரி மாதம் முதல் பழையபடி குடிஅரசு என்னும் பெயராலேயே அது வெளியாக்கப்பட்டு, முன் நிறுத்தப் பட்டதிலிருந்தே தொடர்ந்து 9ஆம் மாலை, 23 மலராய் வெளிவருகிறது.

ஆதியில் 'குடிஅரசு' மனித சமுகத்துக்கு என்ன தொண்டு செய்ய முன்வந்ததோ, அதே தொண்டை எப்படிப்பட்ட கஷ்டமான காலத்திலும் நெருக்கடியான காலத்திலும் பின்னடையாமல் செய்து வந்திருப்பதோடு, இப்போதும் அதையே கடைப்பிடித்து, தன்னாலான தொண்டாற்றத் துணிவுடன் முன் வந்திருக்கிறது!" ('குடிஅரசு': 13-1-1935).

தொடக்க ஆண்டுகளின் 'குடிஅரசு' இதழின் அளவைப் போலவே இதுவும் 9க்கு 12 எனும் அளவு இருந்தது. விலையும் ஒரு அணா என்றே இருந்தது.

முகப்பட்டையின் மேல் பகுதி நடுவில் "ஆசிரியர்: ஈ.வெ. கிருஷ்ணசாமி" என்றும், ஆசிரியர் பெயரின் இரு புறங்களிலும்" எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு", "எப்பொருள் எத்தன்மைத்தாயினும்

அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு" என்னும் குறட்பாக்கள் பொறிக்கப்பட்டிருந்தன.

பெரும்பாலும் முகப்பட்டைப் பக்கத்தில் இயக்கப் பாவலர்களின் பாடல்கள் பொறிக்கப்பட்டிருந்தன.

கட்டுரைகளை இடம் பெறச் செய்யும் தொகுப்பு முறையில் 10-2-1935ஆம் நாளிட்ட 'குடிஅர'சிலிருந்து சிறு மாற்றமொன்று இடம் பெற்றது. அதாவது நடுப்பகுதியில் வெளியிடப்பட்டு வந்த ஆசிரியவுரை (Editorial) மேலட்டைக்கு அடுத்த மூன்றாம் பக்கத்தில் அச்சாகியது. ஆனால் இப்புதுமை நீடிக்கவில்லை! 16-6-1935ஆம் நாளிலிருந்து மீண்டும் பத்தாம் பக்கத்தில் ஆசிரியவுரை அச்சிடும் பழைய முறையே கையாளப்பட்டது.

இரண்டாம் முறையாகத் தோற்றமெடுத்த 'குடிஅர'சில் இதழாளர் பெரியார் ஒரு புரட்சியையே நிகழ்த்திக் காட்டினார். அதுதான் தமிழ்மொழிக்கே புதுவாழ்வும் பெருவாழ்வும் விளைவிக்கவல்ல அடிப்படையான எழுத்துச் சீர்திருத்தம் என்னும் மிகப்பெரும் புரட்சியாகும்.

அவ்விதழின் 11-ஆம் பக்கத்தில், "தெரிவிப்பு. எழுத்து வடிவங்கள் திருத்தம். ணா , றா , னா , ணை, னை, லை, ளை ஆகிய எழுத்துக்களை முறையே ணா, றா, னா, ணை, னை, லை, ளை என்பதாகத் திருத்தி அச்சுக் கோத்திருக்கிறோம் (ப-ர்)' என்பதாகக் கட்டங்கட்டி அறிக்கையிடப் பட்டிருந்த: (ப-ர்)' என்பது பத்திராதிபர் என்பதன் சுருக்கம். மெய்யான பத்திராதிபர் பெரியாரே என்பது அனைவர்க்கும் தெரியும்.

அவ்வறிப்பின்படி இதழின் முகப்பட்டையின் பாடல் தலைப்பாகிய "வெள்ளையராட்சியை வீழ்த்து முன்" என்பதிலேயே 'ளை' எனப் புரட்சியைத் தொடக்கி விட்டார் பெரியார்! தொடர்ந்து இருபது பக்கங்களையும் ஆட்கொண்டிருந்தது. புரட்சிச் செயலை நிகழ்த்திவிட்டு, 20-1-1935க்குரிய அடுத்த கிழமையிதழில் தான் அதற்கான விளக்கத்தினைப் பெரியார் வெளியிட்டார்.

'தமிழ் எழுத்துச் சீர்திருத்தம்' எனும் தலைப்பில் நீண்டதொரு விளக்கக் கட்டுரையினைப் பெரியார் ஆசிரியவுரையாக வெளியிட்டார். "மாறுதலைக் கண்டு அஞ்சாமல் அறிவுடைமை யோடும் ஆண்மையோடும் நின்று விஷயங்களை நன்றாய் ஆராய்ச்சி செய்து காலத்துக்கும் அவசியத்துக்கும் தக்க வண்ணம், தள்ளுவன தள்ளிக் கூட்டுவன கூட்டித் திருத்தம் செய்ய வேண்டியது பகுத்தறிவு கொண்டவன் என்னும் மனிதனின் இன்றியமையாத கடமையாகும்.

தமிழ் ஏற்பட்டது இன்று நேற்றல்ல. எழுத்துக்கள் ஏற்பட்டது இன்று நேற்றல்ல. ஆனால் எழுத்துக்கள் கல்லிலும் ஓலையிலும் எழுங்காலம் போல், காகிதத்தில் எழுதவும் அச்சில் வார்த்துக் கோக்கவும் ஏற்பட்ட காலந்தொட்டு இன்று வரை அவற்றில் யாதொரு மாற்றமும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஆதலால் யாராவது ஒருவர் துணிந்து இறங்க வேண்டியதாயிற்று.

பாஷாஞானம், இலக்கண ஞானம், பொதுக்கல்வி இல்லாத ஒரு சாதாரண மனிதன் முயற்சிக்கலாமா என்பது ஒரு பெரிய கேள்வியாக இருக்கலாம். ஆனால் தகுந்த புலமையும் பாஷாஞானமும் இலக்கண அறிவும் உள்ளவர் எவரும் முயற்சிக்கா விட்டால் என் செய்வது? தவம் செய்வதா?" என்பதாகப் பெரியார் ஏன் தாம் இப்புரட்சிச் செயலில் இறங்க வேண்டியதாயிற்று என்பதைப் பொறுப்புணர்ச்சியோடு வெளிப்படுத்திவிட்டு, தமிழரின் சிந்தனையைத் தூண்டும் வண்ணம் தெளிவுரையளித்தார்.

"தமிழ் பாஷை எழுத்துக்கள் விஷயமாய், பல சீர்திருத்தங்கள் செய்யப்பட வேண்டும் என்பது அனேகருக்குள் வெகுகாலத்திற்கு முன்பிருந்தே ஏற்பட்டிருந்த அபிப்பிராயங்களாகும்.

ஒரு பாஷையோ ஒரு வடிவமோ அல்லது வேறு விஷயமோ எவ்வளவு பழையது, தெய்வத்தன்மை கொண்டது என்று சொல்லிக் கொள்ளுகிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு அவற்றில் சீர்திருத்த வேண்டிய அவசியமிருக்கின்றது என்பதுதான் உண்மைத் தத்துவமாகும்.

. . . . இந்தப் படியான சீர்திருத்தங்கள் எல்லாம் செய்யப்படுமானால் அப்போது மொத்த எழுத்துக்கள் 46 + 7 குறிப்பு எழுத்துக்கள், ஆக 53 எழுத்துக்களின் தமிழ்ப் பாஷை முழுவதும் அடங்கிவிடும்.

பாஷையின் பெருமையும் எழுத்துக்களின் மேன்மையும் அவை சுலபத்தில் தெரிந்து கொள்ளக் கூடியதாகவும் கற்றுக்கொள்ளக் கூடியதாகவும் இருப்பதைப் பொருத்ததே. இந்த மாற்றங்கள் நாளாவட்டத்தில் செய்யக் கூடியவை என்றாலும், ணை, ணே முதலிய ஏழு எழுத்துக்களைப் பொருத்த வரையில் உள்ள மாற்றத்தை வாசகர்கள் இப்போது முதலே அனுமதிப்பார்கள் என்றே கருதுகின்றோம்!"

பெரியார் குறிக்கோள் படைத்த இதழாளர் என்னும் முறையில் அன்று 'குடிஅரசு' இதழில் துணிவு மேலிட்டு அறிமுகப்

படுத்தி, 'விடுதலை'யிலும் விடாப்பிடியாகக் கையாண்டு வந்த தமிழெழுத்துச் சீர்திருத்தம் இன்று உலகம் முழுவதிலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்ட நிலையைக் கருதுகையில், பெரியாரின் திண்மையையும் பூட்கையையும் எண்ணி வியக்கிறோம்! மலைக்கிறோம்!

இவ்வண்ணம் இதழியல் வரலாற்றில் பெரியார் நிகழ்த்திய மொழிப் புரட்சிக்குக் கருவியாய்த் தான் அமைந்து விட்ட புகழ் மணக்க மணக்க, 'குடிஅரசு' ஈரோடு நகரத்திலிருந்து தன்மானக் கொள்கைகளைத் தரணியின் எல்லாப் பகுதிகளுக்கும் கொண்டு சேர்த்தது. இந்த நிலையில் 29-12-1940 அன்று கட்டம் கட்டப் பெற்ற அறிவிக்கையொன்று 'குடிஅர'சில் வெளியானது.

"நமது குடிஅரசு விடுதலை - காரியாலயம் சென்னை செல்லுவதால், தற்காலிகமாக, 'குடிஅரசு' பத்திரிகை மாத்திரம் இவ்வாரம் முதல் நிறுத்தி இருக்கிறோம். சென்னை சென்றதும் மீண்டும் வழக்கம் போல் சென்னையிலிருந்து வெளிவரும். மானேஜர்" - என்பதே அவ்வறிவிப்பு.

ஆனாலும் உடனடியாகக் 'குடிஅரசு' பதிப்பாக வில்லை. 16-10-1943 அன்றுதான் - அதுவும் ஈரோட்டிலிருந்துதான் - வெளியிடப்பெற்றது. அதுபற்றி விளக்கமாக அவ்விதழின் ஆசிரியவுரை நமக்குச் செய்திகள் தருகின்றது.

"விடுதலை - தினசரி நம் நிருவாகத்தில் நடத்தியதன் காரணமாகக் 'குடிஅரசு' நிறுத்தப்பட வேண்டியதாயிற்று. இப்போது விடுதலை நிறுத்தப்பட்டு விட்டதால் 'குடிஅரசு' மறுபடியும் துவக்கப்படுகிறது.

யுத்தகாலத்தில் 'விடுதலை'க்கு வேலை இல்லை என்பதோடு, காகிதம், நிருவாகம் முதலிய துறைகளில் செலவு அதிகமாக ஏற்பட்டதனாலும் மக்களுக்கு இன்று தேவையான யுத்த சேதியை அன்றாடம் கொடுக்க முடியாததாலும் அதன் வளர்ச்சி குன்றி, பெரும் நஷ்டத்தோடு நடைபெற வேண்டியது அவசியமாகி ஒரு வருஷ காலமாகவே 'விடுதலை'யை நிறுத்திவிட்டுக் 'குடிஅர'சை ஆரம்பிக்க முயற்சி செய்யப்பட்டு வந்தது. எனினும் அது இப்போதுதான் முடிந்தது. ஏனெனில் இதுவரை 'குடிஅரசு'க்கு சர்க்கார் அனுமதி கிடைக்கவில்லை.

எனவே 'குடிஅர'சையும் அதன் தொண்டையும் அதன் படையையும் கிளர்ச்சியையும் நல்ல வண்ணம் உள்ளன்போடு

வரவேற்று ஆதரவளித்து உதவ வேண்டியது உண்மைத் தமிழ் மக்களின் கண்டிப்பான கடமையாகும் என்பதை வணக்கத்தோடு தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

நீண்ட ஆசிரியவுரையாம் பெரியார் அறிக்கையின் சில பகுதிகளே இவை. மீண்டும் 'குடிஅர'சை வெளியிடுவதற்கு என்னென்ன தடைகளைப் பெரியார் எதிர்கொள்ள வேண்டியிருந்தது என்பது இதன்வழி நமக்குப் புலப்படுகறிது.

அடுத்த கிழமை 23-10-1943 அன்று வெளியான 'குடிஅர'சின் ஆசிரியவுரை இயக்கத்தவரும் பொதுமக்களும் காட்டிய பேருவகையையும் பேரார்வத்தையும் பற்றிப் பெருமிதத்துடன் பேசியது.

"குடிஅரசுக்கு இத்தனை வரவேற்பும் மகிழ்ச்சியும் ஏன்? எதற்காக? அதன் பாஷைக்காகவா? எழுத்துக்காகவா? இலக்கணப் பிழையற்ற தமிழுக்காகவா? யாரையும் குற்றம் கூறாமல், துவேஷம் - வெறுப்பு இல்லாத சாந்த குணத்தோடு வெளிவருவதற்காகவா? அல்லது பலபேர் அதைப்பற்றி விளம்பரம் செய்து ஆதரிக்கும் தன்மைக்காவா? அல்லது நம்மிடம் இருக்கும் நல்லெண்ணத்திற் காகவா? இவைகளில் ஒன்றுமில்லை என்பது நமக்கு நன்றாகத் தெரியும்.

தனித் தமிழ் பாஷைக்குக் 'குடிஅரசு' போராடுகிறது. ஆனால் 'குடிஅரசு' போல் 'பாஷா மாலிகை' உள்ள பத்திரிகையை நாம் பார்த்ததில்லை! 'சுதேசமித்திரன்' தமிழ் நம்மை விட எத்தனையோ பங்கு மேலான தமிழ் என்றே சொல்லலாம். சேதிகளோ பெரும்பாலோர் காதுக்கு வேதனையைக் கொடுக்கும் குடைச்சல் உள்ளது. இப்படி இன்னும் பல குற்றங்களுடன் நடைபெற்ற - நடைபெறுகிற - நடக்கப்போகிற 'குடிஅரசு'க்கு இவ்வளவு கிராக்கி என்ன வென்றால், மேற்கூறிய இத்தனை குறைகளையும் லட்சியம் செய்யாமல், 'குடிஅர'சில் வரும் சேதி உண்மையானது. ஆதாரத்தோடு கூடியது என்கின்ற நம்பிக்கையும் நாணயமும் தான். அதோடு உலகம் 'குடிஅர'சை எதிர்பார்க்கிறது; அதாவது தமிழ் உலகம் புரட்சியை நோக்குகிறது.

இனி சுயமரியாதைப் பத்திரிகைகள் பெருகியே ஆக வேண்டும். தமிழ்நாடு நன்றாகப் பண்பட்டிருக்கிறது. இதில் முளைக்கும் சுயமரியாதைப் பயிரை இனிக்காய விடக்கூடாது என்பது நமது எல்லையற்ற ஆசை.

பண உதவி செய்து விடுவதே போதுமானதாகிவிடாது. ஒவ்வொரு கிராமத்திலும் ஊரிலும் இந்தப் பத்திரிக்கைகள் வருகிறதா - படிக்கப்படுகிறதா என்பது தான் முக்கியம்" ('குடிஅரசு': 20-11-1943).

29-12-1940ஆம் நாளிட்ட இதழோடு நின்று போன 'குடிஅரசு' 16-10-1943இல் தான் மீண்டும் மக்களைச் சந்திக்கக் கிளம்பிற்று. அதற்கான காரணங்களை அதன் ஆசிரியவுரையால் நாம் தெரிந்து கொள்ள முடிகிறது.

"குடிஅரசு தோன்றி இன்றைக்கு 18 வருஷ காலமாகிறது. 'விடுதலை' தினசரி நம் நிருவாகத்தில் நடத்தியதன் காரணமாக சுமார் 2 வருஷ காலமாய் அது நிறுத்தப்பட வேண்டியதாயிற்று. இப்போது 'விடுதலை' நிறுத்தப்பட்டு, 'குடிஅரசு' மறுபடியும் வெளியாக்கப் படுகிறது.

'குடிஅரசு' தொடர்ந்து வந்திருக்க வேண்டியதே என்றாலும் காங்கிரசானது (பார்ப்பனர்கள்) அரசியலைக் கைப்பற்றித் தமிழர்களை அழுத்தியும் என்றென்றும் தலையெடுக்க வொட்டாமலும் பழிவாங்க வேண்டும் என்கின்ற ஆரிய இன உணர்ச்சியோடும் நிரந்தரமாய்த் தாழ்த்தி வைக்க அழிவு வேலையைத் தொடங்கியதைச் சகிக்க முடியாமல் நமது எல்லா முயற்சிகளையும் உணர்ச்சிகளையும் ஆற்றல்களையும் காங்கிரஸ் ஆட்சியின் பக்கம் திருப்ப வேண்டிய அவசியமும் அவசரமும் ஏறபட்டதாலேயே 'குடிஅரசு' இதுவரை நின்றிருக்க வேண்டியதாக ஏற்பட்டது.

யுத்தகாலத்தில் 'விடுதலை'க்கு வேலை இல்லை என்பதோடு காகிதம், நிருவாகம் முதலிய துறைகளில் செலவு அதிகமாக ஏற்பட்டதினாலும், மக்களுக்கு இன்று தேவையான யுத்த சேதியை அன்றாடம் கொடுக்க முடியாததாலும் அதன் வளர்ச்சி குன்றி பெரும் நஷ்டத்தோடு நடைபெற வேண்டியது அவசியமாகி, ஒரு வருஷ காலமாகவே 'விடுதலை'யை நிறுத்தி விட்டுக் 'குடிஅர'சை ஆரம்பிக்க முயற்சி செய்யப்பட்டு வந்தது. எனினும் அது இப்போதுதான் முடிந்தது. ஏன் எனில் இதுவரை 'குடிஅரசு'க்கு சர்க்கார் அனுமதி கிடைக்கவில்லை!"

ஆசிரியவுரையுடன் அய்யாவின் பெயரால் வேண்டுகோள் ஒன்றும் அக்'குடிஅரசு' இதழில் வெளிவந்தது.

"குடிஅரசு இந்த வாரம் 16-10-43ஆம் தேதி முதல் வெளிவருகிறது. தங்களுக்கு அதன் பிரதி ஒன்று அனுப்பப் பட்டிருக்கிறது. தயவு செய்து தாங்கள் சந்தாதாரராகப் பதிவு செய்து

கொள்வதோடு தங்களுடைய ஆதரவும் அன்பும் என்றும் 'குடிஅரசு'க்கு அளித்து வர வேண்டுமாய் வேண்டிக் கொள்கிறேன்."

என். கரிவரதசாமியவர்களை ஆசிரியராகக் கொண்டு 'உண்மை விளக்கம்' அச்சகத்தில் அச்சியற்றப்பட்டு வெளிவந்த 'குடிஅர'சின் விலை ஓர் அணாவே.

பாரியலின் பல்வேறு கூறுகளின் ஊற்றுக் கண்கள் வரை புகுந்து நோக்கி, தயங்காது திறனாய்வு செய்து, உண்மைகளை மக்களின் முன் படைத்துப் புத்தொளி பரப்பி வந்த 'குடிஅரசு'க்குத் தமிழ் இதழியல் வரலாற்றில் தனிச்சிறப்பான இடத்தை ஈட்டிக் கொண்டது.

'குடிஅரசு' இதழின் தொண்டுக்கு மக்களிடையே முன்பு போலவே நல்ல வரவேற்பு இருந்தது என்பதைச் சொல்லத் தேவையில்லை. 'பச்சை அட்டைக் குடிஅரசு' என்று பலரும் தங்களின் அறிவு வளர்ச்சிக்குக் காரணமாகப் பெருமிதத்துடன் வெளியிட்டதை நாம் கேட்டிருக்கிறோம், படித்திருக்கிறோம்.

1935 ஆண்டுத் தொடக்கத்திலிருந்து 1940 இறுதி வரை 'குடிஅரசு' ஈரோட்டிலிருந்து வெளிவந்து கொண்டிருந்தது. அக்காலத்திய மக்கள் நலத்தொண்டர்கள் எல்லாம் 'குடிஅரசு' படிக்கத் தவறுவதில்லை. சான்றுக்காக முஸ்லீம்லீக் முன்னோடிகளில் ஒருவரான 'கான்பகதூர்' கலிஃபுல்லா அவர்கள் அனுப்பியிருந்த வாழ்த்துச் செய்தியைக் குறிப்பிடலாம். இதுபோன்ற இன்னும் பலரின் வாழ்த்துச் செய்திகள் உண்டு.

"நமது 'குடிஅரசு' பத்திரிகைக்குப் பதினைந்தாண்டுகள் முடிந்து பதினாறாம் ஆண்டு ஆரம்பிப்பதைப் பற்றி, நான் அளவற்ற சந்தோஷமடைகின்றேன்.

இதுவரை நம் தமிழ்நாட்டில் நம் தமிழ் மக்களின் அநாகரிகமானதும் பகுத்தறிவுக்கு முரண் பட்டதுமான பழக்க வழக்கங்களையும் மூடநம்பிக்கைகளையும் தகர்த்தெறிந்து பகுத்தறிவை வளர்க்க, சென்ற 15 ஆண்டுகளாக நமது 'குடிஅரசு' செய்து வந்த தொண்டு எக்காலத்தும் எல்லாராலும் போற்றிப் புகழக்கூடிய தொண்டாகும்.

இத்தொண்டை இன்னும் பலமாக ஆற்றி, நம் தமிழ் மக்கள் புத்துணர்ச்சிப் பெற்று, நம் பண்டைச் சீரும் சிறப்பும் செல்வாக்கும் ஓங்கச் செய்யும் பணியில் என்றும் பதினாறாக விருந்து விடா

முயற்சியுடனும் குன்றா ஊக்கத்துடனும் நீடூழி காலம் தொண்டாற்றி வருமாக!" (குடிஅரசு: 14-9-1940: பக். 7).

ஓர் இஸ்லாமியத் தலைவர் இஸ்லாமிய மதத்தைப் பின்பற்றுவோரின் நடவடிக்கைகளைத் திறனாய்வு செய்யவும் கண்டிக்கவும் தயங்காத 'குடிஅரசு' இதழை உளமாரப் பாராட்டினார் என்றால், அதற்குக் கிட்டிய வரவேற்பின் அருமைதான் எத்தகையது!

29-12-1940ஆம் நாளிட்ட 'குடிஅர'சில் காணப்படுகின்ற ஓர் அறிக்கைப்படி 'குடிஅரசு' சென்னைக்கு மாற்றப்படும் ஏற்பாடுகள் நடந்தன.

"நமது குடிஅரசு, விடுதலை - காரியாலயம் சென்னை செல்லுவதால், தற்காலிகமாகக் 'குடிஅரசு' பத்திரிகை மாத்திரம் இவ்வாரம் முதல் நிறுத்தி இருக்கிறோம். சென்னை சென்றதும் மீண்டும் வழக்கம் போல் சென்னையிலிருந்து வெளிவரும்"

இவ்வறிக்கையில் குறிப்பிட்டவண்ணம் சென்னையிலிருந்து 'விடுதலை' நாளிதழ் மட்டுமே வெளிவந்தது. 'குடிஅரசு' உடனடியாக வெளியாகவில்லை. மீண்டும் அது 1943இல்தான் ஈரோட்டிலிருந்து வெளியாகி மக்களின் ஏக்கத்தைப் போக்கியது.

'குடிஅரசு' இதழ் மீண்டும் தொண்டாற்ற வந்தமை அறிஞர்களிடமிருந்து எத்தகைய வரவேற்பைப் பெற்றது என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாக, 'குடிஅர'சின் அடிநாள்களிலிருந்தே ஆய்வுக் கட்டுரைகள் வரைந்து பவுராணிகத் திருமேனிகளைத் திணறவைத்து அயரச்செய்த ஆராய்ச்சிப் பெரும் புலவர் கைவல்யப் பெருமகனாரின் கருத்துகள் சிலவற்றைக் குறிப்பிடுகிறேன்.

"வந்தாயா குடிஅரசே? வருவாய் குடிஅரசே!" என்னும் தலைப்பின் கீழ் கைவல்யம் அவர்கள் 20-11-1943ஆம் நாளிட்ட 'குடிஅர'சில் இவ்வாறு எழுதினார்.

"குடிஅரசே, நல்ல சமயம் பார்த்து வந்தாய். உன் வரவு நல்வரவாயிற்று. உன் வேலை சந்தியத்தில், உண்மையில், நியாயத்தில், அவசியத்தில் எப்படி ஒத்திருக்கிறதோ அப்படியே உன் பெரியாரும் மன உறுதியில், புத்தியில், புத்தியின் விரிவில் உயர்ந்தவர்.

அவரால் ஏற்றப்பட்ட சங்கம் ஏய்க்கும் சங்கமன்று. பழையதைப் புதியதாகவும் வலிவற்றதை வலிவு உடையதாகவும் அவமானத்தை மாட்சியுடைய வெற்றியாகவும் மாற்றிச் செய்தாக வேண்டுமென்றல்லவா அவர் சங்கம் சொல்லுகிறது! இனி அவர் செத்தாலும் அவர் சங்கம் சாகாது.

எனது குடிஅரசே! நான்சொல்லுவதுபோல் நெடுநாள் காத்திருக்க வேண்டியதில்லை. உனக்கு அனுகூலமான சின்னங்களெல்லாம் வந்து கொண்டிருக்கின்றன. எங்கும் "குடிஅரசு" என்ற கூப்பாடு கேட்கிறது. பிளேக்கும் பஞ்சமும் பலகடவுளைத் துரத்தியே விட்டன!

குடிஅரசே! ஒரு நாளில் கலியாணத்தை முடித்துவிட வேண்டுமென்று முதன் முதல் சொன்னவனும் நீதான். நடத்திக் காட்டியவனும் நீயே!"

அதே கைவல்யம் 18-12-1943ஆம் நாளுக்குரிய 'குடிஅரசு' இதழில் "அறிவுச்சுடர் கொளுத்திய வீதி வழியே போவாயாக!" என்று தலைப்பிட்டு எழுதியவற்றுள் ஒரு பகுதி குறிப்பிடத்தக்கது.

"குடிஅரசே! நீயோ அன்று கண்ட மேனி அழியாமல் இருக்கிறாய். எனக்குப் பெரியவனான உன் எஜமான் மகாதீரன்; விசாரித்தறியும் புத்தியில் நிச்சயமுடையவன்; வாக்கில் வல்லவன்; தர்க்கத்தில் - கேள்விக்குப் பதில் சொல்வதில் - அணு உலகமென்று தர்க்கம் பண்ணும் தர்க்கீயமத சாஸ்திரிகள் எல்லாம் தலை அசைக்க வேண்டும். இதை நான் பார்த்தும் கேட்டுமிருக்கிறேன்.

நம்நாட்டுப் புத்திமானில் சிறந்தவரான என். சீனிவாச அய்யங்கார் உன் எஜமானனைப் பலதடவை புகழ்ந்திருக்கிறார். தோழர் ராஜகோபாலாச்சாரியார் அடிக்கடி அவர் சினேகிதத்தை விரும்பினதும் அவரிடமுள்ள விசேடங்களுக்காகவே, சங்கராச்சாரியார் ஸ்ரீமுகம் அனுப்பி வரச் சொன்னதும் பெரியாரின் உண்மை நியாயத்தைக் கண்டேயாகும். இவையெல்லாம் எனக்கு இப்பொழுது எப்படித் தோன்றின வென்று கேட்கவும் இவையனைத்தும் என் உள்ளத்தில் அடங்கியிருந்தவைதான். பத்துநாளைக்கு முன் உன் பழைய ஏட்டில் சில படித்தேன். அதனால் உள்ளத்திலிருந்தது நிறைந்து பொங்கி உன்னிடம் வடிந்து விட்டது!"

கைவல்யத்தின் எழுத்துகள் 'குடிஅரசு' குறித்தும் இதழாளர் பெரியார் பற்றியும் அருமையான மதிப்பீடுகளை நமக்கு அள்ளித் தருகின்றன!

1935ஆம் ஆண்டிலிருந்து 40 வரையிலும், 1943 வரையிலும் என்பதாக விட்டு விட்டு மீண்டும் மீண்டும் வெளிவந்த 'குடிஅரசு' கிழமையேடுகளில் பன்னூறு படைப்புகள் இடம் பெற்றன. அறிவாசான் தந்தை பெரியாரின் சிறப்புக்கட்டுரைகள், ஆசிரியவுரைகள், இயக்கத்தின் ஏனைய முன்னோடிகளின்

கட்டுரைகள், கடவுள், மதம், மூட நம்பிக்கைகள், வர்ண ஜாதிக் கொடுமைகள், பார்ப்பனீயம், வகுப்புரிமை, பெண்ணுரிமை, மொழியுரிமை, பொதுவுடைமை, இயக்க மாநாடுகள், பிறநாடுகள், அரசியல், கலைகள் முதலிய பொருள்கள் பற்றிய கட்டுரைகள், சிறுகதைகள், கவிதைகள், இசைப்பாடல்கள் ஆகிய பிரிவுகளாக அவற்றை வகைப்படுத்தலாம்.

அவற்றுள் பன்னிரண்டாம் ஆண்டு *(16-8-1936)* இன்னுமா சந்தேகம்? *(26-12-1937)* கொலையை வரவேற்கிறோம் *(13-3-1938)*, தாழ்த்தப்பட்டோருக்கு *(3-12-1939)*; இந்து மதம் என்றால் *(7-1-1940)*; குடிஅரசும் திராவிட நாடும் *(28-10-1943)*; வர்ணாசிரம மாநாடு *(14-10-1944)*; திராவிட சமுதாயமே! *(17-1-1948)*; நியாயமான வேலை நிறுத்தம் *(20-12-1947)*; தோழர் அழகிரிசாமி *(2-4-1949)*; வாழ்க தியாகராயர்! *(6-8-1949)*; கட்டாயக் கல்வி *(13-8-1949)*; விடுதலைக்கு ஜாமீன் *(18-6-1949)* ஆகிய ஆசிரியவுரைகள்-

கவர்னர் மீது நம்பிக்கை யில்லாத தீர்மானம் *(2-1-1938)*; மறைந்தாயோ செல்வமே! *(17-3-1940)*; நல்ல பெயர் *(18-12-1943)*; கம்பன் கயமை *(25-12-1943)*; கல்வி *(1-4-1944)*; தமிழிசை *(19-2-1944)*; நாடகக் கலை வளர்ச்சி *(11-3-1944)*; உண்மை இராமாயணம் *(22-11-1947)*; கேள்வி கேளுங்கள்! *(29-11-1947)*; ஒப்புயர்வற்ற குறள் *(12-4-1949)*; திருமண எண்ணம் *(16-7-1949)* ஆகிய பெரியாரின் சிறப்புப் படைப்புகள்-

செத்தாலொழிய தீண்டாமை போகாதாம்! *(19-12-1937)*; ஆபத்து! ஆபத்து!! *(6-3-1938)*; பழங்கதைப் பேசிப் பயனில்லை! *(6-3-1938)*; இந்தியாவின் பழங்குடி *(26-2-1939)*; பார்ப்பனர் தமிழர்களா? *(4-6-1939)*; தீண்டாதோர்களே! *(19-11-1939)*; தமிழா, பார்ப்பனரைப் பார்! *(26-11-1939)*; பிராமணர் விதிப்படி நடப்பதுண்டா? *(2-6-1940)*; ஆரியத்தின் சுயரூபம்! *(13-8-1949)* என்னும் பார்ப்பனிய வர்ணாசிரம - சாதிய விளக்கக் கட்டுரைகள்-

வேதமும் விபசாரமும் *(19-4-1940)*; கிருபா நந்தரே, கழறுமின்!" *(4-11-1944)*; 1800 - 1935 *(10-11-1935)*; மதத்தால் யாது பயன்? *(15-10-1949)* எனும் கடவுள் - மத விளக்கக் கட்டுரைகள்-

மோட்ச - நரகம் *(3-4-1938)*; சபாஷ் பரோடா *(3-4-1938)*; உதகையில் மோடி *(28-10-1944)*; சாமியாடுதல் *(1-12-1945)*; நல்ல நாள் - கெட்ட நாள் *(25-11-1947)* முதலிய மூட நம்பிக்கைகள் பற்றிய கட்டுரைகள்-

செவ்வாய் *(25-6-1939)*; சூரியக் கறைகள் *(19-5-1940)*; உங்களுக்குத் தெரியுமா? *(4-11-1944)*; விவசாயத்தில் விஞ்ஞானம் *(15-1-1949)* முதலிய அறிவியற் கட்டுரைகள்-

ஆச்சாரியார் இதற்கென்ன சொல்கிறார்? (2-4-1939); ஆபீசா? அக்கிரகாரமா? (3-9-1939) என்னும் வகுப்புரிமைக் கட்டுரைகள்-

எனது சிறைவாசம் (8-10-1939); இந்திய மாதரும் அமெரிக்க மாதரும் (18-2-1940); இந்தியப் பெண்மணிகள் (19-11-1939); இந்து மதத்தில் பெண்கள் (10-2-1945); பெண்களுக்கு உதவி (29-11-1943); வாழ்க்கை (27-12-1947) ஆகிய பெண்ணியக் கட்டுரைகள்-

தமிழர்களே என்ன செய்கிறீர்கள்? (19-9-1937); தமிழைக் கொலை செய்யலாமா? (2-4-1939); இந்திப் போரின் நுட்பம் (9-4-1939); உலகாண்ட தமிழ் (30-1-1939); தமிழ்ப் பாட்டும் சி.ஆர். சீனிவாசனும் (16-10-1943); திராவிட மொழியின் சிறப்பு (18-2-1943); தமிழிசையும் பார்ப்பனரும் (25-12-1943); ஏன் இந்தப் பித்தலாட்டம்? (27-12-1947); கல்வி - தாய்மொழி (15-1-1949) முதலிய மொழியுரிமைக் கட்டுரைகள்-

மார்க்ஸ் வரலாறு (7-11-1937); தொழிலாளர்க்கு வேண்டுகோள் (26-2-1939); பாட்டாளிக் கட்சிக்குத் தடையா? (22-10-1949) எனும் பொதுவுடைமைக் கட்டுரைகள்-

இரு நல்ல பாம்புகள் (7-5-1939); கபோதிபுரக் காதல் (12-11-1939); அழுதபிள்ளை சிரித்தது! (20-12-1947); இருவேறு சேரிகளில் (27-12-1947); சாதித் திமிர் (15-1-1949); என்தம்பிமார்கள் (22-10-1949) ஆகிய சிறுகதைகள்-

இழந்த காதல் - நாடகம் (11-11-1944); சந்திரோதயம் - நாடகம் (27-1-1943); பைத்தியக்காரன் திரைப்படம் (27-12-1947); வேலைக்காரி திரைப்படம் (5-3-1949); நல்ல தம்பி - படம் (12-3-1949) என்னும் கலைத் திறனாய்வுக் கட்டுரைகள்-

நாமக்கல் ஜஸ்டீஸ் மாநாடு (16-8-1936); காஞ்சிபுரம் பிரிவினை மாநாடு (4-6-1940); திருவாரூர் நீதிக்கட்சி மாநாடு (1-9-1940); சேலம் நீதிக் கட்சி மாநாடு (2-9-1944) திருச்சி - திராவிட கழக மாநாடு (29-9-1945); ஆகிய மாநாட்டுச் செய்திக் கட்டுரைகள்-

பெல்ஜிய மந்திரி சபையைக் கவிழ்த்தவன் (1-5-1938); போலந்துப் புலிகள் (27-8-1939); பிலிப்பையின் சுதந்திர வீரன் (20-8-1939); யூதர்களை விரட்டுவது ஏன்? (3-9-1939); ஹிட்லரும் கெய்ஸரும் (7-1-1940); பல்கேரிய மன்னன் போரிஸ் (18-2-1940); அய்ரிஷ் விடுதலை (28-4--1940); ஹ்யுகோவின் காதல் (5-5-1940); படித்த மனிதன் (20-11-1947); சோவியத் பத்திரிகைகள் (1-10-1939) ஆகிய அயல்நாடுகள் பற்றிய கட்டுரைகள்-

சேரவாரும் தமிழர்களே (14-5-1939); வந்தாயா குடிஅரசே? (20-11-1943); செம்மங்குடி செப்புவது (27-5-1944); மணி திரட்டியது (28-10-1944); மானங் காக்க! (23-12-1944); ஏன்? யார்? (3-2-1945) ஆகிய இயக்க முன்னோடிகளின் கட்டுரைகள்-

ஆச்சாரியார் அடைந்த படுதோல்விகள் (26-12-1937); தமிழ்நாடு தமிழருக்கே! (19-3-1939); சர்வாதிகாரிகளுக்குப் பின் (21-5-1939); சமதர்மிகாள்! (3-9-1939); அரசியல் நிர்ணய சபை (21-1-1940) சட்டசபைச் சம்பளக் குறைப்பு (26-5-1940) மாண்டவன் மீண்டான் (3-9-1939); மத்தியப் பொறுப்பாட்சி (19, 26-2-1939) ஆகிய அரசியற் கட்டுரைகள்-

வீண் பாய்ச்சல் (18-6-1949); ஆளவந்தாருக்கு எச்சரிக்கை (26-6-1949); ஹிட்லர் தர்பார் (2-7-11949) ஆகிய பிற இதழ்களிலிருந்து எடுத்து வெளியிடப்பெற்ற கட்டுரைகள் குறிப்பிடத்தக்கவை.

கட்டுரைகளும் கதைகளும் மட்டுமல்லாமல் கவிதைகளும் இசைப்பாடல்களும் 'குடிஅர'சில் இடம் பெற்றன. அடிக்கடி 'குடிஅரசு' இதழின் முகப்பட்டையில் ஈர்ப்பு நிரம்பிய கவிதை யொன்றை வெளியிட்டுத் தாம் ஓர் எடுத்துக்காட்டான இதழாளர் என்பதைப் பெரியார் புலப்படுத்தினார்.

அழுகைக் குரல் (12-12-1937); தமிழ்க் கொடி (14-11-1937); தமிழர்காள் எழுமின்! (17-10-1937); தீபாவளிப் பண்டிகை (31-10-1937); இந்து ராஜ்யம் (13-2-1938); பெண்ணுரிமைப் பாட்டு (1-5-1938); போர் தொடுப்பீர்! (20-3-1938); தீண்டாமைக் கும்மி (5-3-1939); இன்பத் திராவிடமே! (25-12-1943); ஆடு கொடியே! (20-10-1948); கனவல்ல (27-12-1947); எங்கள் திராவிடம்! (17-1-1948); தயங்காதீர்! (5-2-1949) ஆகிய பாக்கள் குறிக்கத்தக்கன.

இத்தகைய படைப்புகளின் மூலம் 'குடிஅரசு' வெளிக் கொணர்ந்த உண்மைகளால் உலகெங்கிலும் ஏற்பட்ட உருப்படியான தாக்கங்களையும் விளைவுகளையும் குறித்து 'குடிஅர'சின் வாயிலிருந்தே நாம் கேட்டறியலாம். 18-8-1940ஆம் நாட் 'குடிஅர'சின் ஆசிரியவுரையின் சில பகுதிகளைக் கேளுங்கள்.

"இதுவரை யாரோ செய்ய முயன்று தோற்ற காரியத்தைச் செய்யக் 'குடிஅர'சால் முடியுமா? என்று கேட்டனர்.

நாட்டிலே தேசியம் ஒன்று தவிர வேறு உணர்ச்சிக்கே இடமில்லை என்ற கருதப்பட்டு வந்த காலத்தில் 'குடிஅரசு' தோன்றிற்று.

குழந்தைப் பருவத்திலேயே எதிர்ப்பட்டோரிடம், 'என்ன சேதி?' என்று கேட்க ஆரம்பித்த இந்த 'துஷ்டப் பிள்ளை' தான் முதன் முதலில் தேசியப் பார்ப்பனரின் கோட்டையைத் தாக்க ஆரம்பித்தது!

பார்ப்பன பில் கலெக்டர் பார்ப்பனரல்லாத முனிசிபல் கவுன்சிலரைப் பெயரிட்டும், அவனே இவனே என்றும் அலட்சியமாய்ப் பேசுவது சர்வ சாதாரணமாய் இருந்த காலம். பார்ப்பனரைச் 'சாமி' என்று பக்தி விநயத்துடன் பார்ப்பனரால்லாதான் கூப்பிடவும் கும்பிடவும், பார்ப்பனர் இடது கையை எடுத்துக் காட்டி, க்ஷேமம் விசாரிக்கவும் இருந்த காலம்.

பார்ப்பனரல்லாதாருக்குச் சூத்திரப் பட்டம் சர்வசாதாரணமாக வழங்கப்பட்டு, ஒப்புக்கொள்ளப்பட்ட காலம். ஆப்ரிக்க நாட்டு நீக்ரோக்களுக்கும் நமது நாட்டுத் திராவிடருக்கும் அதிக வித்தியாசமில்லை என்று கூறத்தக்க நிலையில்தான் நாடு இருந்தது.

இந்தச் சமயத்தில்தான் 'குடிஅரசு' அடிமைகள் உலகில் புரட்சிக் கீதத்தைப் பரப்பிற்று. பிடிசாபம் என்று கூறிய பார்ப்பனீயத்தை நோக்கி இடிஇடி எனச் சிரித்தது.

பதினைந்து ஆண்டுகளைக் கடந்து பதினாறாம் ஆண்டை அலைந்திருக்கிறது. ஆண்டுக்கேற்ற எழிலுடன் விளங்குகிறது. 'குடிஅர'சின் சரிதத்தை மட்டும் சிந்தையில் இருத்தினால் சோர்ந்த உள்ளமெல்லாம் வீரம் புடைத்தெழும்! குளத்தங்கரை முதற் கொண்டு கோமான் கூடும் மண்டபம் வரை 'குடிஅர'சிற்கு எதிர்ப்பு இருந்தது. உள்ளூர் அக்கிரகாரம் முதற்கொண்டு இத்தாலி நாட்டு ரோமாபுரி வரை எதிர்ப்பு!

உஞ்சிவிருத்திப் பார்ப்பனர் முதற்கொண்டு உலகக் கத்தோலிக்கக் குருவான போப்பாண்டவர் வரையிலே 'குடிஅரசு' மீது பாணம் தொடுத்தனர். நீறு பூசிய படையும் நாமமிட்ட கூட்டமும் காவியும் கமண்டலமும் கர்த்தரின் சீடர்களும் 'குடிஅரசு' மீது போர் தொடுத்தனர். ஒவ்வொருவரும் தத்தமக்குக் கிடைத்த ஆயுதங்களைக் கொண்டு தாக்கிப் பார்த்தனர். எல்லாரும் ஒன்றாகக் கூடி, கூட்டுப்படை திரட்டி எதிர்த்தனர். எல்லா எதிர்ப்பும் 'குடிஅர'சின் போக்கைத் தடுக்கவில்லை; குமுறி வந்த எழுச்சியையும் அடக்க வில்லை!

எந்தக் கொள்கைகள் ஒரு காலத்தில் எதிர்க்கப்பட்டனவோ, இன்று அவைகளை வரவேற்பதில் 'நான் முதல், நீ முதல்' என்று

போட்டி போடுபவர்களும் உறவு கொண்டாடுபவர்களும் நாளுக்கு நாள் அதிகமாவதைக் கண்டு 'குடிஅரசு' தனது பதினாறாம் வயதில் வெற்றிச் சிரிப்புடன் உங்களை நோக்கி வருகிறது.

பார்ப்பனீயத்தைப் பற்றிக் 'குடிஅரசு' பரப்பிய கருத்துகள் எந்த நிலையில் இருக்கின்றன என்பதைக் காண வேண்டுமானால், ஊரை ஒருமுறை சுற்றிப் பார்த்தால் நன்கு தெரிந்து விடும். எங்கும் அவ்வளவு வெளிப்படையாகப் பார்ப்பனீயம் கண்டிக்கப்படுகிறது! 'குடிஅரசு' புகுத்திய எல்லாக் கொள்கைகளும் இன்று ஆசிரியர் தவிர மற்றவரால் ஒப்புக் கொள்ளப்பட்டு விட்டன.

15 ஆண்டுகளில் 'குடிஅரசு' தன்னைக் கெடுத்ததை - தன் செல்வாக்கைச் சிதைத்ததை - ஆரியர் உணர்ந்து கொண்ட அளவிற்குத் திராவிடர் ஒரு சிறியதாவது உணர்வார்களேயானால், 'குடிஅரசு' தனது தோழன் 'விடுதலை'யுடன் சேர்ந்து பணியாற்றி, தமிழ்நாட்டைத் தமிழருக்கு ஆக்கிவிடும் என்பதில் அய்யமில்லை.

15 ஆண்டுக் 'குடிஅரசு' தமிழருக்காக செய்த தொண்டு என்ன என்பதை, 16ஆம் ஆண்டு ஆரம்ப மலரைக் கண்ணுறும் நேயர்கள் பிறருக்கு எடுத்துக் கூறிவார்களாக!"

இவ்வாறு இனமான - பகுத்தறிவுப் பணிகளை முனைப்பாக, பயன் கூட்டும் வண்ணம் 'குடிஅரசு' நிறைவேற்றிக் கொண்டிருக்கையில், இந்திய அரசியல் விடுதலைக்குப் பின் நாட்டில் அமைந்த தட்ப-வெப்ப நிலவரங்களில், பிற இயக்கங்களின் முற்போக்கு நடவடிக்கைகளை வரவேற்கவோ - வரவேற்கா விட்டாலும் மற்ற இயக்கங்கள் எப்போதும் போலச் செயல்படட்டும் வாளாவிருக்கவோ - ஆளும் அதிகாரத்தைப் பெற்றிருந்த அரசியலாளர்களுக்குப் பொறுமை இருக்கவில்லை. எனவே 'குடிஅரசு' இதழை அடக்க வேண்டுமெனக் கருதிய பார்ப்பனர்கள் திட்டமிட்டு ஆட்சியாளரைத் தூண்டிக் கொண்டிருந்தனர். அதற்கேற்பவே சென்னை மாநில அரசு 'குடிஅரசு'க்கு 3000 ரூபாய் பிணையம் கேட்டுக் கட்டளை அனுப்பி வைக்க ஏற்பாடு செய்து கொண்டிருந்தது. அச்செய்தி அறிந்த 'குடிஅரசு' தக்க முறையில் ஆசிரியவுரை தீட்டிற்று, தன் 2-7-1949ஆம் வெளியீட்டில்.

"விடுதலை, திராவிட நாடு ஆகிய இதழ்களுக்கு ஜாமீன் கேட்ட நம் 'சுயராஜ்ய' சர்க்காரின் 'கிருபா கடாட்சம்' இப்போது நம்மீதும் பாய்ந்திருக்கிறது. இந்தக் 'கிருபை'க்கு நாம் 3000 ரூபாய் பரிசாகக் கொடுக்க வேண்டுமாம். ஆம்; 'குடிஅரசு'க்கு ஜாமீன் 3000

ரூபாய் என்கிறது பத்திரிகைச் செய்தி. உத்திரவு எதுவும் இன்னும் நம்பிகைக்குக் கிடைக்கவில்லை.

'குடிஅரசு' ஆரம்பித்து சுமார் 25 வருஷங்களுக்குள் எத்தனையோ முறை, என்னன்னவோ காரணங்களுக்காக என்று, இந்த 'ஜாமீன் கிஸ்தி'களும் வழக்கு நடவடிக்கை 'தர்பார்'களும் நடந்திருக்கின்றன. குடிஅரசின் ஆயுட்காலத்தில், 2 வருஷத்திற்கு ஒரு நடவடிக்கை என்கிற வீதாசாரத்திலேயே நடந்து வந்திருக்கின்றன.

'குடிஅரசு'க்கு ஜாமீன் நடவடிக்கைகளோ வழக்கு நடவடிக்கைகளோ புதியவை அல்ல. ஏகாதிபத்தியத்தின் உருட்டலும் மிரட்டலும் பாய்ச்சலும் பிடுங்கலும் 'குடிஅரசு'க்கு நெடுநாளைய நித்திய அனுபவம். இந்தச் சலசலப்பு வகையில் 'குடிஅரசு' ஒரு பனங்காட்டு நரி!

பார்ப்பனீயத்தின் வலையில் வீழ்ந்து, நாம் இன்னதுதான் செய்கிறோம் என்பதை அறியாமலே, ஒன்றன்மேல் ஒன்றாகப் புசுபுசுத்த அம்புகளைப் பாய்ச்சும் சுயராஜ்ய சர்க்காரே! உங்களுக்குச் சிந்தித்துப் பார்க்கும் போக்கு சிறிதாவது உண்டா? விடுதலைக்கு ரூ. 1000 என்றீர்கள்! திராவிட நாட்டுக்கு 3000 என்றீர்கள்! இதற்கு இந்நாட்டு மக்கள் அளிக்கும் பதில் என்ன?

இரண்டனா, நான்கனாவாக எத்தனை ஆயிரம் பாட்டாளி மக்கள் வீசி வீசி எறிந்து, உங்கள் உத்தரவை எவ்வளவு கேவலமாகத் துளைத்துவிட்டிருக்கிறார்கள் என்பதை ஏன் நீங்கள் சிந்திக்கக் கூடாது? இந்த ஜாமீன் கூத்தைக் கண்டு எத்தனை ஆயிரம் ஏழைகள் வயிறெரிந்து 'வாழ்த்து'கிறார்கள் என்பதை ஏன் நீங்கள் எண்ணிப் பார்க்க வில்லை? இதுதான் நாம் உங்களுக்குக் கூறும் புத்திமதி!"

*   *   *

தமிழினத்தின் கூன் நிமிர்த்தப் போராடிய 'குடிஅரசு'க்குத் தான் எத்தனை விழுப்புண்கள்! இத்தகைய குரல்வளையைக் கவ்வும் பார்ப்பனிய நெருக்கடிகளும் பெரியார் - மணியம்மை மணப்பதிவு ஏற்பாட்டின் விளைவாக உருவான அறைகூவல் சூழ்நிலைகளும் 1949ஆம் ஆண்டுக்கப்பால் 'குடிஅரசு' தன் பயணத்தைத் தள்ளி வைக்குமாறு கட்டாயப்படுத்தி விட்டன. அந்தோ, வரலாறு ஒன்று வளராது ஓய்ந்து போயிற்று!

******

# வெற்றிகள் குவித்த 'விடுதலை'

திராவிடர் இயக்கத்தின் அடிநாளில் தோன்றி அறுபத்தி நான்காண்டு வரலாற்றைக் கொண்ட மூப்பையும் தமிழர் நலனுக்கான கணக்கற்ற வெற்றிகளை ஈட்டிக் காட்டிய பெருமையையும் உடைய 'விடுதலை' - நாளிதழ் பற்றிப் பார்ப்போம்.

'விடுதலை'யை நிறுவியவர்கள் தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்துப் பொறுப்பாளர்கள் ஆவர். 'திராவிடன்' இதழ் இல்லாமற்போய் விட்ட சூழ்நிலையில் கட்சியின் 'வாரம் இருமுறை' இதழாக அக்காலத்திய அரை அணா விலையில் 1-6-1935ஆம் நாளிலிருந்து 'விடுதலை' தமிழ் மக்களுக்குக் கிடைத்தது. அறிஞர் டி.ஏ.வி. நாதன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு, '14, மவுண்ட் ரோடு, மதராஸ்' என்னும் முகவரியிலிருந்து அது வெளிவந்தது.

இதழாளர் பெரியாரவர்கள் அதனைப் பாராட்டி வரவேற்று, தம் 'குடிஅரசு' இதழில் மகிழ்ச்சி பொங்க எழுதினார்.

"ஜஸ்டிஸ் கட்சியின் சார்பாக ஜூன் மாதம் முதல் தேதியிலிருந்து தமிழ் பத்திரிகை ஒன்று, 'விடுதலை' என்னும் பேரால், சென்னையிலிருந்து வெளியாகி, இரண்டு இதழ்கள் நமது பார்வைக்கு வந்தன. அதைப் பற்றி ஒரு மதிப்புரை எழுத வேண்டிய அவசியம் எதுவும் இருப்பதாக நமக்குத் தோன்றவில்லை.

ஏனெனில் 2,3 வருடங்களாகவே பரிசுத்த வீர இரத்த ஓட்டமுள்ள ஒவ்வொரு பார்ப்பனரல்லாதாரும் இரவும் பகலுமாய், 'தமிழ்ப் பத்திரிகை! தமிழ்ப் பத்திரிகை! தமிழ்ப் பத்திரிகை!' என்கிற தாகத்துடன் அலைந்து கொண்டிருந்ததும், அதை எந்தத் தலைவர்களும் கவனியாமல் அலட்சியமாய் இருந்ததும், அதன் பயன்களைச் சமீபகாலத்தில் ஏற்பட்ட பல தேர்தல்களின் மூலம் அனுபவித்ததும், மறுபடியும் புதிய முறையில் முன்னிலும் அதிகமாக இரண்டு பங்கு சப்தத்துடன், 'தமிழ்ப் பத்திரிகை! தமிழ்ப் பத்திரகை! தமிழ்ப் பத்திரிகை!' என்று மக்கள் கூப்பாடு போட்டதுமான விஷயம் யாரும் அறியாததல்ல. அப்படிப்பட்ட நிலையில் 'விடுதலை' என்னும் பேரால் ஒரு பத்திரிகை வெளியாகி இருப்பதைப் பார்த்து எந்தப் பார்ப்பனரல்லாதாரும் தங்களுக்கு ஏதோ ஒரு 'பாக்கியம்' கிடைத்தாக மகிழ்ச்சியடைவார்களே ஒழிய, 'இதற்கு மதிப்புரை வருகின்றதா? அது எப்படி வருகின்றது?' என்று யாரும் கவனிக்க மாட்டார்கள். ஆதலால், நாம் மதிப்புரை எழுதும் வீண் வேலையில் பிரவேசிக்காமல், 'வந்து

விட்டது தமிழ்ப் பத்திரிகை!' என்று விளம்பரம் செய்யவே ஆசைப்படுகிறோம்.

1925ஆம் ஆண்டிலேயே தென்னக மக்களுக்கு உருப்படியான பயன்கள் கிட்டுமாறு செய்யத்தக்க நாளிதழ் ஒன்று மிகத் தேவை என்று பெரியாரின் உள்ளத்தில் பட்டுவிட்டது! 'குடிஅரசு' இதழைத் தோற்றுவித்த ஏழாம் மாதத்தில் தம் உள்ளக் கிடக்கையை ஆசிரியவுரையாகவே வெளியிட்டார் அய்யா.

> "இப்போது தமிழ்நாட்டின் பெரும்பாலாராகிய ஆதித் தமிழ் மக்களுக்கு மிகவும் முக்கியமாயும் அவசரமாயும் வேண்டியது பொதுநோக்குடைய ஒரு தமிழ்த் தினசரிப் பத்திரிகையே.
>
> 'சுதேசமித்திரன்' கூட்டத்தாருக்குள்ள தந்திர சக்தி 'திராவிடன்' கூட்டத்திற்கு இல்லாததாலும் பிராமணரல்லாதாரில் சிலருக்குத் தனிப்பட்ட சுயநலத்திற்கும் கீர்த்திக்கும் 'சுதேசமித்திரன்' கூட்டம் இடம் கொடுத்ததால் இவர்களும் அவர்களோடு சேர்ந்து கொண்டு எதிர்ப்பிரசாரம் செய்ததாலும், 'திராவிட'னுக்குப் பாமர ஜனங்களை உண்மை உணரும்படிச் செய்யவும், பாமர ஜனங்களிடத்தில் செல்வாக்குப் பெறவும் முடியாமற் போய் விட்டதால், இது தக்க பலனைத் தென்னிந்திய மக்களுக்கு அளிக்கக் கூடியதாய் இல்லாமலிருக்கிறது. இந்நிலையில் தென்னிந்தியாவுக்கு – தென்னிந்தியர்களுக்கு ஒரு நம்பிக்கையும் யோக்கியமுமுள்ள தமிழ்த் தினசரிப் பத்திரிகை வேண்டுமா, வேண்டாமா என்பதை யோசிக்க வேண்டும்.
>
> பத்திரிகையின் கொள்கை பிராமணரல்லாதாருடையவும் தீண்டாதாருடையவும் சமத்துவமும் முன்னேற்றமுமே முக்கியமானதாய் இருக்க வேண்டும். இதைப் பற்றித் தமிழ் மக்கள் யோசித்து ஒரு முடிவுக்கு வந்தால் தமிழ் மக்களுக்கு ஏதாவது சுயமரியாதை உண்டாகலாம் என்று விண்ணப்பித்துக் கொள்ளுகிறோம்" (குடிஅரசு: 22-11-1925).

இவ்வாறு ஏற்கெனவே தமிழ் நாளேட்டின் இன்றியமை யாமையைத் தாமே ஆழமாய் உணர்ந்தும் தமிழினத்திற்கு உணர்த்தியுமிருந்த பெரியாரவர்கள், பத்து ஆண்டுகள் கழித்து 'நீதிக்கட்சி'யின் சார்பாக வெளிவந்த 'விடுதலை'யைப் பேரார்வத்துடன் கொண்டாட்டம் போட்டு வரவேற்று, அதற்காக விளம்பர இலக்கியம் வரைந்ததில் வியப்பொன்றும் இல்லை. அதைத் தமது கடமையாகக் கருதினார் அவர்.

சுவையூட்டும் செய்தி என்னவென்றால் எந்த 'விடுதலை'யை அவர் ஊக்கப்படுத்தி, அது ஒரு தினசரியாக வளரவேண்டும் என்று வாழ்த்தினாரோ, அதே 'விடுதலை'யைப் பத்தொன்பது மாதங்களில் பெரியாரவர்களே தம்முடைய தத்துப் பிள்ளையாய் ஏற்றுக் கொள்ளும்படி ஆயிற்று! பண்டித எஸ். முத்துசுவாமிப் பிள்ளை என்பாரை ஆசிரியராகக் கொண்டு 1-1-1937இல் நாளிதழாக உருவெடுத்து சென்னையில் வெளித்தோன்றிய 'விடுதலை' இரண்டே நாளில் ஈரோட்டுக்குக் குடிபெயர்ந்து 3-1-'37ஆம் நாளிலிருந்து அய்யாவின் நேரடிப் பொறுப்பில் வெளிவரத் தொடங்கியது. அப்போது அதன் விலை என்ன தெரியுமா? காலணா; அதாவது ரூபாய்க்கு 192 சல்லிக்காசுகள் என்றிருந்த காலநிலையில் 3 சல்லிக்காசுக்கு 'விடுதலை' விற்கப்பட்டது! அக்குறிப்பிட்ட காலத்தில் நாட்டில் வேறு எந்த ஏடும் 3 சல்லிக்காசு விலையில் மக்களுக்குக் கிடைத்ததில்லை!

1945ஆம் ஆண்டு வரை காலணா அதாவது 3 சல்லிக்கு விற்கப்பட்ட 'விடுதலை' நாளிதழின் விலை '45இல் முக்காலணா - அதாவது 9 சல்லியாகவும், '50இல் ஓரணா - அதாவது 12 சல்லியாயும், 1960இல் 7 புதிய காசுகளென்றும், 1-1-1966இல் 8 புதுக் காசெனவும், 1-11-66இல் 10 காசுகளாகவும், 15-11-'71இல் 12 காசுகளென்றும் படிப்படியாக உயர்த்தப் பெற்று வந்தது. '73ஆம் ஆண்டிறுதியில் தந்தை பெரியார் மறையும் வரை 'விடுதலை'யின் விலை 12 காசுகளே - அதாவது ஏனைய நாளேடுகளின் விலையை விட மிகக் குறைவே.

'விடுதலை'யின் அதிகார முறையிலான ஆசிரியர்களாக அமர்த்தப்பட்டுப் பொறுப்பேற்றவர்கள் பண்டித எஸ். முத்துசுவாமிப் பிள்ளை, அ. பொன்னம்பலனார், என். கரிவரதசாமி, மணியம்மையார், கி. வீரமணி ஆகிய பெருமக்களாவார்கள். பொறுப்பாசிரியர்களாகப் பணியாற்றியோர் சி.என். அண்ணாதுரை, சா.குருசாமி, சாமி. சிதம்பரனார், கி. வீரமணி ஆகிய சான்றோர் ஆவர்.

'நீதிக்கட்சி'க்காரர்களிடமிருந்து அய்யா பெற்றுக் கொண்ட 'விடுதலை' 3-1-1937ஆம் நாளிலிருந்து ஈரோட்டில் அச்சிடப்பட்டு வெளியிடப்பெற்றது. இடையில் இரண்டாம் உலகப் போர்ச் செய்தி இதழாக அது உருமாற்றம் பெற நேரிட்டு, 'புது விடுதலை' எனச் சென்னையிலிருந்து வெளிவந்து கொண்டிருந்தது. மீண்டும் தந்தை பெரியாரின் பொறுப்புக்கு 6-6-1946இல் திரும்ப வந்தெய்திய பிறகு, கே.ஏ. மணி (மணியம்மையார்) அவர்கள் அதிகார முறை ஆசிரியராகவும், சா. குருசாமி ('குத்தூசி') அவர்கள் பொறுப்பாசிரியராகவும் அமர்த்தப்பட்டு, 'விடுதலை' நாளேடு சென்னை-சிந்தாதிரிப்பேட்டை,

பாலகிருஷ்ணபிள்ளைத் தெருவிலிருந்து வெளியிடப்பட்டு வந்தது. 15-12-1965 அன்று சென்னை ரண்டால்சு சாலை, பெரியார் திடலிலுள்ள இயக்கவுடைமையாகிவிட்ட புதிய கட்டடத்திற்கு இடம் பெயர்ந்து, தொடர்ந்து அங்கிருந்து வெளியாகிக் கொண்டிருக்கிறது 'விடுதலை' நாளேடு. இப்பணிமனை குன்றக்குடி அடிகளாரால் கெட்ட நேரமாக வைதிகர்களால் கருதப்படும் இராகுகாலத்தில் தந்தை பெரியாரின் ஏற்பாட்டில் திறந்து வைக்கப்பட்டதாகும்.

> 'விடுதலை' பத்திரிகை இன்று வாரம் இருமுறையாக வெளிவந்தாலும், கூடிய சீக்கிரம் தமிழ் மக்கள் ஆதரவுக்கு ஏற்பத் தினசரி ஆகும் என்பதில் நமக்கு அய்யமில்லை. பத்திரிகையானது நல்ல மாதிரியில் – பார்ப்பன விஷமப் பிரச்சாரங்களுக்கு மார்பைக் காட்டும் முறையில் சரியான விஷயங்களைக் கொண்டு வெளியாகி வருவதால், அதை ஆதரிக்க வேண்டிய அவசியம் எந்த விதத்திலும் குறையாகக் காணப்படவில்லை.
>
> எவ்வளவோ வீரமாக ஆரம்பித்த பத்திரிகைகள் எல்லாம் வருடாந்தரம் ஆவதற்குள், ஒன்று பார்ப்பனர்களுக்கு அடிமையாக வேண்டியது அல்லது மறைந்து போக வேண்டியது என்கின்ற நிலையில்தான் இருந்து வந்திருக்கின்றன. இப்படிப் பட்ட நிலையில் 'விடுதலை' தோன்றியிருக்கிறது என்பது ஒருவிதத்தில் சந்தோஷம் என்றாலும், மற்றொருவிதத்தில் எந்த நிமிடத்தில் அதற்கு ஆபத்துவரப் போகின்றதோ என்று பயப்பட வேண்டியதாகவே இருக்கிறது.
>
> எப்படியோ, ஒரு விதத்தில் தமிழ் மக்கள் எதிர்பார்த்தபடி, 'தமிழ்ப் பத்திரிகை' ஒன்று வந்து விட்டது. அதை ஆதரித்து, தினசரியாக்கி நிலைநிறுத்த வேண்டியது தமிழ் மக்கள் கடமையே ஒழிய, இனித் தலைவர்களைக் குற்றம் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை".

இப்படியெல்லாம் 'விடுதலை' பற்றிக் கொண்டாடி எழுதிய பெரியார், மக்களின் கடமையையும் உணர்த்திக் காட்டினார்.

> "அதன் நோக்கம் அதன் தொண்டு ஆகியவை பற்றிச் சந்தேகப் ப்பட வேண்டிய காரணமே யாருக்கும் கிடையாது. ஆகையால் அதைப் பற்றிக் கவலைப்படாமலும் அதற்கு யாரும் புத்தி புகட்டுகிற வேலையில் இறங்காமலும், ஒவ்வொருவரும் சந்தாதாரராக வேண்டும். சந்தாத்தொகை வாரம் இருமுறைக்கு வருஷம் ரூ 3–10–0ஆகும். இதை விடக் குறைந்த தொகைக்குத் தமிழ்நாட்டிலோ, இந்தியாவிலோ ஒரு 'வாரம் ஒரு முறை' – 10

*பக்கம் விஷயம் கொண்டதாக ஒரு பத்திரிகை இருப்பதாக நமக்குத் தெரியவில்லை! ஆகையால், ஒவ்வொருவரும் ரூ 3-10-0 நாளையே 'மணியார்டர்' அனுப்பி விட வேண்டியது அவசியமான காரியமாகும். 3 மாதத்திற்குள் 2000 சந்தாவாவது சேர்ந்தால் 'விடுதலை' தினசரி ஆகிவிடலாம் என்பதில் சந்தேகமில்லை". (குடிஅரசு: 9-6-1935)*

அய்யாவின் இத்தகைய ஊக்க மொழிக்கு அடிப்படைக் காரணம் இல்லாமலில்லை.

'சுயமரியாதை'க் கொள்கைகளையே 'விடுதலை'யின் கொள்கைகளாக அமைத்தார் பெரியார் என்பது இயல்பானதே. அதற்காகவே 'குடிஅரசு' கிழமை யிதழ் பயன்பட்டு வந்தாலும், அந்நோக்கத்தை நிறைவேற்றுகின்ற முயற்சியில் கூடுதலாக நாளேடு ஒன்றும் துணையாக இருக்க வேண்டும் என்பதில் விடாப் பிடியாக அவர் இருந்தார். எனவே 'நீதிக்கட்சி'யாரிமிருந்து 1937இல் 'விடுதலை'யைப் பெற்றுக் கொண்டு ஈரோடு சென்ற பெரியார், தன்மதிப்பு, சமத்துவம், சகோதரத்துவம், ஆகியவற்றைத் தமிழ் மக்களிடத்தே வலியுறுத்தி வளர்த்தல், தீண்டாமைக் கொடுமை அழிப்பு, வேத-சாஸ்திர-புராண-இதிகாசங்களை எதிர்த்தொதுக்குதல், புரோகிதப் புறக்கணிப்பு, கடவுள்-மதக் கற்பனைகளை மறுத்தல், பெண்ணடிமை நீக்கம், கைம்பெண் மணம், மணவிலக்கு உரிமை, சுயமரியாதை முறை வாழ்க்கையொப்பந்தம், வடமொழி-இந்தி மொழிகளின் தீங்குகளைத் துடைத்தெறியக் கிளர்ச்சிகள் மேற்கொள்ளுதல், வடநாட்டாரின் வல்லாட்சி கூடாதென அறவழிப் போராட்டங்கள் நடத்துதல், அனைத்துச்சாதிப் பிரிவினருக்கும் கல்விச் செல்வம் கிட்டுமாறு செய்தல், அரசுப் பணிகளில் வகுப்புவாரி உரிமை வழங்கும் சட்டம் இயற்றல், இவற்றையெல்லாம் எய்துவதற்கான முயற்சிகள், சிறை வாழ்வையும் ஏற்க அணியமா யிருத்தல் முதலிய தன்மான இயக்கக் கொள்கைகள் - திட்டங்கள் தொடர்பான கருத்துகளையே 'விடுதலை'யில் அச்சிட்டு வெளியிட்டார். ஆக, 'விடுதலை' - நாளிதழ் முற்றிலும் ஒரு செய்தி இதழாக (News Paper) நடத்தப் பெறவில்லை; அது ஒரு கருத்திதழாகவே (Views Paper) நடைபோட்டது.

### மக்களின் அனைத்து விடுதலை நோக்கி நடந்த 'விடுதலை'

ஈரோட்டிலிருந்து வெளியான 'விடுதலை' சென்னை இதழ்களைப் போலவே அன்றாடம் மக்களைச் சென்றடைந்து அறிவு கொளுத்தியது. புதுமை நாட்டமும் இழிவு நீக்க வேட்கையும்

கொண்ட .தமிழ் மக்களிடையே 'விடுதலை' பெரிய அளவிற்கு வரவேற்பைப் பெற்றது. படிப்பாளிகளைக் காட்டிலும் படிப்பறிவு குறைந்த அளவே வாய்ந்திருந்த பாட்டாளி மக்கள் மிகவும் விரும்பி அதை வாங்கிப் படித்தார்கள் என்பது குறிப்பிடப் பெற வேண்டியதொன்று.

மக்களுக்கு அனைத்து விடுதலையும் கிட்ட வேண்டு மென்பதற்காகப் பாடுபட முன்வந்த 'விடுதலை' எதற்கும் அஞ்சாமல் யாரையும் விட்டுவையாது, எவர்பாலும் எள்ளளவும் கண்ணோட்டம் காட்டிடாமல், உள்ளதை உள்ளபடிப் படம் பிடித்து உலகுக்குக் காண்பிக்கும் பெருங் கடமையை மேற்கொண்டது. அம்முயற்சியின் போது மென்மையான சொற்களைத் தேடிக்கொண்டிருக்கவில்லை. நாட்டின் நலத்தைப் பல்வேறு முனைகளில் அரித்துத் தின்னும் சுரண்டல் கரையான்களை மாய்த்தொழிப்பதற்கு நயமான அணுகுமுறைகளால் முடியுமா? முடியவே முடியாதல்லவா?

எனவே நல்ல அளவுக்கு மனநிறைவு கொண்டபெரியார் அதை வெளிப்படுத்தவும் செய்தார்.

நம் ஆயுதம் - 'விடுதலை' என்பதாகத் தலைப்பிட்டு சிந்தனையைத் தூண்டுமாறு அவர் எழுதியவற்றுள் சில:

> "திராவிட மக்கள் உள்ளத்தில் பெருங்குறையாய் இருந்ததும், திராவிட மக்கள் முற்போக்குக்கே பெருந்தடையாய் இருந்ததுமான குறை நீங்கும் படியாக – இன்று 'விடுதலை' வெளியாகிவிட்டது. இனி இதை ஆதரித்து வளர்த்து நலனடைய வேண்டியது திராவிட மக்களின் கடமையாகும்.
>
> திராவிட நாட்டிற்கும் திராவிட மக்களுக்கும் இன்றுள்ள இழிநிலைகளுக்குத் தலையாய காரணங்களுக்குள் முக்கிய காரணம் என்னவெனில், திராவிடர்களுக்கு என்று திராவிடரிடத்தல் தினசரிப் பத்திரிகை ஒன்றாவது இல்லாததேயாகும்.
>
> திராவிட நாட்டில் உள்ள தினசரிப் பத்திரிகைகள் யாவும் திராவிடர் அல்லாதவர்களிடமும், திராவிடர்களின் மாற்றார்களான பிறவி எதிரிகளிடமும், அவர்களின் அடிமைகளிடமுமே இருந்து வருகின்றன. குறிப்பாக, ஆரியர்கள் வெகு தந்திரமாக, வெகு முன்னெச்சரிக்கையுடன் பத்திரிகை உலகைத் தங்கள் கைவசத்தில் ஏகபோகமாக ஆக்கிக் கொண்டதோடு, வேறு ஒருவரும் அத்துறையில் தலை எடுக்காதபடியும், வேறு ஒருவரும் தினசரிப் பத்திரிகை நடத்திச் சமாளிக்க முடியாதபடியும் செய்து

வந்திருக்கிறார்கள்; செய்தும் வருகிறார்கள். யாராவது – எந்தத் திராவிடராவது – துணிந்து பத்திரிகை நடத்துவாரேயானால், அவர் நிபந்தனையற்ற ஆரிய அடிமையாய் – ஆரியர் நலனுக்கே அதை நடத்துபவராய் இருந்தாலொழிய, வெளியில் தலைகாட்ட முடியாதபடி அழுத்தப்பட்டு விடுகிறார். இந்த நிலையில் பத்திரிகை உலகம் சிக்கிக் கொண்டதால், திராவிடர் எத்துறையிலும் தலையெடுக்க முடியாமல் தாழ்த்தப்பட்டு வருகிறார்களென்பது மாத்திரமல்லாமல், திராவிடர் ஆரியர்க்கு மனுதர்மப்படி அடிமைகளாயிருக்க வேண்டியவர்களாகிறார்கள்.

திராவிட மக்கள் மேற்குறிப்பிட்ட தன்மைகளிலிருந்து மாறி, மற்ற இனத்தவர் – மற்ற நாட்டவர் போல் ஆகி, ஒரு மனிதத்தன்மை கொண்ட சமுதாயமாக ஆவதற்கு, மிக்க எதிர் நீச்சல் போன்ற கஷ்டமானதும் தன்னலத்தை வெறுத்ததுமான தொண்டு செய்ய வேண்டியது மிக அவசியமாகுமென்பதல்லாமல் இந்தச் சமயம் மிகவும் அவசரமானதும் என்போம். அதற்கு முக்கியமான இன்றியமையாத ஆயுதம் பத்திரிகையாகும்.

பெரிதும் பாமர – பொது மக்களையும் இளைஞர்களையும் நம்பியே இதில் இறங்கியிருக்கின்றோம். இச்சமயம் நம் எதிரிகளின் ஏகபோக ஆதிக்கத்தில் அரசியலும் இருக்கும் படியான சமயமாகும். அதனால் அவர்கள் 'விடுதலை'யை எப்போது வேண்டுமானாலும் – என்ன வேண்டுமானாலும் செய்துவிடக் கூடும் என்றாலும், நமக்குள்ள ஆசை, நமது முக்கிய கடமை, நம் மக்களிடத்தில் உள்ள நம்பிக்கை, நம் இளைஞர்கள் நம் மாணவர்கள், நம் தாய்மார்கள் நமக்கு ஊட்டி வரும் ஊக்கம் ஒத்துழைப்பைத் தருவதாய்க் காட்டும் அறிகுறி, அவர்களது வாக்குத் தத்தம் ஆகியவைகளைக் கொண்டு தொடங்கி விட்டோம்.

இதே தொண்டில் இரண்டு மூன்று தடவை முயன்று தோல்வி யுற்றாலும், அதைப் பற்றிச் சிந்தியாமல் மறுமுறையும் துணிந்து இறங்கி விட்டோம் தோழர்களே! தாய்மார்களே! செல்வர்களே! அறிஞர்களே! இளைஞர்களே! மாணவர்களே! இனி உங்கள் கடமை என்ன? ('விடுதலை': 6–6–1946)

இதிலிருந்து பெரியாரின் கொதிப்பு, துணிச்சல், நம்பிக்கை, கடமை ஆகிய உணர்வுகளைப் புரிந்துகொள்ள முடிகிறது நம்மால், இந்தக் கொதிப்பும் குமுறலும்தாம் அவரை ஓர் இதழாளராக உருவாக்கியவை.

*"எல்லாவற்றையும்விட நமக்குப் பெரிய ஆபத்தாயிருப்பது பார்ப்பனப் பத்திரிகைகளே! அப்பத்திரிகைகளின் செல்வாக்கு நம் நாட்டை அடியோடு முற்றுகை போட்டுக் கொண்டிருக்கிறது. பாமர மக்கள் மட்டுமல்லாமல், தங்களைப் போதிய அறிவுள்ள மக்கள் என்று சொல்லிக் கொள்ளும் பலரும் அப்பத்திரிகைகளின் மூலம் ஏமாறுவதும், அப்பத்திரிகைகளின் மூலம் பார்ப்பனர்களுக்கு அடிமையாவதும் வளர்ந்துகொண்டே வருகிறது. நமது கெடுதிக்காகவே இப்பத்திரிகைகள் நடந்து வருவதையும், பார்ப்பன ஆதிக்கப் பிரச்சாரமே அவற்றின் கொள்கையாக இருப்பதையும் நாம் சந்தேகமற - மனப்பூர்வமாகத் தெரிந்திருந்தும், பணம் கொடுத்து நாம் நாசமாய்ப் போவதற்காக இப்பத்திரிகைகளை வாங்கிப் படிப்பதென்றால் யாராவது நம்மை அறிவு, ஒழுக்கம், மானம், வெட்கம், சுயமரியாதை உள்ள சமூகம் என்ற சொல்லக்கூடுமா? இப்பார்ப்பனர்கள் எதையாவது இரகசியமாகச் செய்கிறார்களா? 'உங்களை நாங்கள் ஏமாற்றுகிறோம். உங்களால் என்ன செய்ய முடியும்? உங்களில் யாரோ சிலர் கத்தினால் கத்தட்டும்! எங்களுக்குக் கவலையில்லை. இதற்காக கொஞ்சமும் பயப்பட்டு எங்கள் கொள்கைகளை மாற்றிக் கொள்ளப் போவதில்லை. உங்களிலேயே சில அயோக்கியர்களையும் முட்டாள்களையும் நாங்கள் சுவாதீனம் செய்துகொண்டு, உங்கள் கத்தல்களை ஒழிக்க எங்களுக்குத் தெரியும். ஒரு கை பார்க்கலாம், வாருங்கள்' என்று தைரியமாய்ச் சொல்லுகிறார்கள். இதற்கொன்றும் மார்க்கமில்லையா?" என்று சுயமரியாதை இயக்கம் கருக்கொண்ட காலத்திலேயே கவலைப்பட்டவர் தான் பெரியார். (குடிஅரசு: 30-1-1927).*

எனவே 'விடுதலை' நாளிதழ் தம் கைக்கு மீண்டும் கிட்டிவிட்டமையற்றி அவர் எந்த அளவிற்கு இன்பமும் ஊக்கமும் எய்தியிருப்பார் என்பதை நம்மால் கற்பனை செய்து கொள்ள முடியும்.

"கொடுமைப்படுத்துகிற கூட்டத்தாருக்கும் நன்மை செய்வதென்றால் அதனால் என்ன பயன் ஏற்படும்? கஷ்டப்பட்ட - கஷ்டப்படுகின்ற கூட்டத்துக்குத்தான் நன்மை செய்ய வேண்டும். நாம் ஒரு கூட்டத்தாருக்குத்தான் - ஒரு வகுப்புக்குத் தான் நன்மை செய்கின்றவர்களாவோம்; அது மற்றொரு வகுப்பாருக்குத் தீமையாய்த் தோன்றலாம். நமக்கு அதைப்பற்றிக் கவலை இல்லை. திருடனுக்கும் திருட்டுக் கொடுப்பவனுக்கும் எப்படி நன்மை செய்ய முடியும்? நாம்

பொதுநலச் சேவைக்காரர் அல்லர்; புரட்சிக்காரர்கள்" (குடிஅரசு: 5-2-'33) என்றும்,

"ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் நமது நாட்டில் தோன்றிய சீர்திருத்தக்காரர்களின் உழைப்புகள் பலன் தராததற்குக் காரணம் விட்டுக் கொடுக்கும் தன்மையும், தாட்சண்யமும், இராஜதந்திரச் செய்கையும்தான்'' (குடிஅரசு: 2-9-1938) என்பதாகவும், தம் அணுகுமுறையில் பெரியார் மிகத் தெளிவாக இருந்தார்.

எனவே 'விடுதலை'யின் எழுத்துகளில் கண்டிப்பும் காரமும் நிறைந்திருந்தன. கொடுமைகளுக்கெதிரான அதன் காட்டமான தாக்குதல்களும் சீற்றம் கக்கிடும் சாடல்களும் அறிவாழம் மிக்க வழக்காடல்களும் ஆற்றல் வாய்ந்த வினாக்களும் நல்ல விளைவையும் பாதிப்பையும் மக்களிடத்தே படைத்து, நாட்டிலே ஒரு புதிய சூழ்நிலையை உருவாக்கின. வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் பள்ளத்தில் தள்ளப்பட்டுக் கிடந்த மக்கள் 'விடுதலை'யை ஆர்வத்தோடு படித்து, தங்களைக் கைதூக்கிவிட்டுக் கடைத்தேற வைக்கவல்லதொரு புரட்சிக்காரன் தோன்றியிருப்பதாகக் கருதி, புத்துணர்ச்சியும் நம்பிக்கையும் பெற்றனர். பிறவி முதலாளிகளாம் பார்ப்பனரும் மக்களை ஏய்த்து, வாழும் மேல்தட்டு மக்களும் அவர்களின் ஏவல் மாக்களும் 'விடுதலை' என்னும் எழுத்துகளைக் கண்ட அளவிலேயே அதிர்ச்சியும் அச்சமும் காழ்ப்பும் கொண்டனர்.

தனிப்பட்ட முறையில் எவரையும் தரக்குறைவாகத் தாக்குதல் கூடாது என்பதிலும் நாடாளுமன்றமுறை நாகரிகத்தைக் கைவிடக்கூடாது என்பதிலும் கவனம் வைக்கத் தவறவில்லை பெரியார். ஆனால் ஞாயங்களை எடுத்துரைப்பதில் பிறர் மனம் புண்படக்கூடாது என்பதை அவர் வலுவாக மறுத்தார். தமிழின மக்கள் பஞ்சம் - சூத்திரர்களாகப் புண்படுத்தப்பட்டுவந்த நெடிய வரலாற்றை அவர் விரிவாகச் சுட்டிக்காட்டி வழக்குரைப்பதில் ஊன்றி நின்றார்.

## கி.ஆ.பெ. விசுவநாதம்

"ஜஸ்டிஸ் கட்சியின் சார்பில் நடைபெற்று வந்து, நின்றிருந்த 'விடுதலை'யானது சுயமரியாதை இயக்கத்தின் சார்பில் அதன் தனிப்பட்ட கொள்கைக்காகவே இன்று ஈரோட்டிலிருந்து வெளி வருகிறது. அதன் எதிர்கால வேலையும் உழைப்பும் எவ்விதம் இருக்கும் என்பதை நான் கூறித் தெரிந்து கொள்ள வேண்டிய நிலையில் எந்தக் கட்சியினரும் இல்லை என்பதே எனது எண்ணம். ஒரே வார்த்தையில் கூறி விளக்க வேண்டுமானால் அது நேர்மையுள்ளவர்களுக்கு

நீலோற்பல மாலையாகவும் விஷமக்காரர்களுக்கு விரியன் பாம்புக் குட்டியாகவும் காட்சியளிக்கும் என்று கூறலாம். அது 'விடுதலை'யின் குற்றமல்ல. அதை விரித்துப் படிக்கும் மக்களின் மனக்குற்றமேயாகும்" என்பதாகத் தன்மான இயக்கத்தின் முன்னோடிகளில் ஒருவராய் விளங்கிய கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்கள் 'விடுதலை'யின் தொடக்கக் கட்டத்தில் கருத்து உரைத்தமை இங்கு குறிக்கத்தக்கது ('விடுதலை': 6-7-1937).

மெய்யாகவே தன்மான இயக்கத்தை வெறுத்த எதிர்தரப்பினர் அவ்வியக்கக் கொள்கைகளை நச்சுக் கருத்துகள் என்றே குற்றப்படுத்தி அவ்வாறே கருத்துப் பரம்பல் செய்தனர். செங்கற்பட்டில் நடந்த சுயமரியாதை மாநில மாநாட்டின்போது, அம்மாநாட்டை மக்கள் புறக்கணிக்குமாறு செய்யும் நோக்கத்துடன் கருத்துரைகள் வழங்குவதற்கென தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், திரு. வி. கலியாணசுந்தரனார், டி. கிருஷ்ணசாமி, நெல்லையப்ப பிள்ளை, ஷஃபி முகமது, டி. குழந்தை, மயிலை ஜெயவேலு, வடிவேலு செட்டியார், நித்தியானந்த முதலியார், பக்தவத்சலம் ஆகிய பத்துப்பேர் அடங்கிய குழுவொன்று அமைக்கப் பட்டது என்ற செய்தியை இங்கு நினைவுகூர்தல் பொருந்தும்.

'குடிஅரசுக்குத் துணையாக 'விடுதலை'யும் நாளிதழ் வடிவத்தில் நாட்டு மக்களுடன் அன்றாடம் உறவாடி அறிவுகொளுத்தி உணர்ச்சியைத் தூண்டி விசையேந்தும் பணியில் ஈடுபட்டபோது 'விஷம்' என்ற முத்திரையைக் குத்தினர் வெறுப்பாளர்கள். அது பற்றிப் பெரியார் எழுதினார்.

"விடுதலை விஷம், குடிஅரசு; அப்பத்திரிகைகளைப் படிக்காதீர்கள் என்று காங்கிரஸ் மந்திரிகளும், காங்கிரஸ் தலைவர்களும், வாலர்களும் திண்ணைப் பிரச்சாரம் செய்கிறார்களாம். ஆனால், 'விடுதலை' விஷம் யாரைக் கொன்றது? 'குடிஅரசு' விஷம் யாரைக் கொன்றது? 'விடுதலை'யும் 'குடிஅரசு'ம் காங்கிரஸ்காரர்களுக்கு விஷமாகத் தோன்றக் காரணம் என்ன? இரண்டு பத்திரிகைகளும் உண்மையை மறைக்காமல் ஒளியாமல் - மேல்பூச்சுப் பூசாமல் அப்படியே சொல்லி வருகின்றன. பொய்யும் புளுகும் அளந்து நாட்டைக் குட்டிச்சுவராக்கும் பித்தலாட்டக்காரர்களுக்கு உண்மையைக் கூறும் பத்திரிகைகள் விஷமாகத்தானே இருக்கும்? அமிர்தமாக இருக்கும் என யாராவது கூறுவார்களா?" என்று தமக்கே உரிய சொல்லாடல் முறையில் விளக்கம் அளித்தார் பெரியார்.

தமிழர்க்குக் கிடைத்த 'விடுதலை'

"இத்துணை பெரிய இயக்கத்திற்கு இருந்த தினசரி எல்லாம் ஒன்றே ஒன்று தான். 'விடுதலை' அதன் பெயர். சாதிக்கட்டினின்றும் சமயக்கட்டினின்றும் வேத-புராண-இதிகாசக் கட்டுகளினின்றும் விடுதலை பெறத் தமிழர்க்குக் கிடைத்த ஒரே ஒரு ஏடு 'விடுதலை'. ஆனால் அந்த ஒரு 'விடுதலை' எத்துணை பெரிய இயக்கத்தை எத்துணை விரைவில் எத்துணை எளிதாக வெற்றி புரிக்குச் சேர்த்து விட்டது!" என்று 'தமிழன் தொடுத்த போர்' என்னும் நூலாசிரியர் அறிஞர் மா. இளஞ்செழியன் அவர்கள் பெருமிதத்துடன் குறிப்பிடுவதில் அணுவளவும் மிகைபடக்கூறல் என்பது கிடையாது.

தமிழ் மக்கள் 'விடுதலை'யைப் படிப்பதில் பேரார்வம் காட்டினாலும், ஈரோட்டிலிருந்து வெளியிடப்பட்ட 'விடுதலை'யின் பராமரிப்பு - நடப்புச் செலவுகளைக் கணக்கிட்ட பெரியார், இதழ் மாதம் 500 ரூபாய் இழப்பிலேயே நடத்தப்படுவதாக 2-9-1937இல் ஆர்.கே. சண்முகம் அவர்களுக்கு எழுதினார்.

> **"விடுதலை - தினசரிப் பத்திரிகை தினம் 5000 பிரதி வெளியாகின்றது. பத்திரிகை நடத்துவதில் எவ்வளவு சிக்கனமாக நடத்தியும் மாதம் 500 வீதம் நஷ்டமாகிறது. இனி நஷ்டம் அதிகமாகுமே தவிர குறையாது. காலை ஏழரை மணிக்கு ஆபிசுக்கு வந்தால் இரவு 10 மணிக்கு வீட்டுக்குப் போகிறேன். இதன் மத்தியில் சுற்றுப் பிரயாணம், இந்த நிலைமையில் ரோஷம் என்னை அடிமையாக்கிக் கொண்டு, இந்த மாதிரித் தொல்லையில் இறக்கி விட்டது. காசு பணம் எதிர்பார்த்து இவற்றை நான் எழுதவில்லை!"**

என்பது அய்யாவின் மடலின் ஒரு பகுதி.

தலைநகரம் சென்னை வாழ் மக்களுக்கு முறையாக 'விடுதலை' கிட்ட வேண்டும் என்பதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன எனும் செய்தியை, "சென்னையில் 'விடுதலை', 'குடிஅரசு', 'பகுத்தறிவு' - பத்திரிகைகளும், 'குடிஅரசு' பகுத்தறிவுக் கழக வெளியீடுகளும் கிடைக்கும்" என்று 10-9-1938 அன்று 'விடுதலை'யில் வெளியான விளம்பரம் நமக்குத் தெரிவிக்கிறது.

இன்னும் சென்னையிலிருந்தே 'விடுதலை'யைப் பதிப்பித்து வெளியிடுவதற்கான திட்டம் தீட்டப்பட்டுக் கொண்டிருந்த செய்தியை 29-12-'39 நாளிட்ட 'குடிஅரசு' தெரிவிக்கிறது. எனினும் அத்திட்டம் நடைமுறைக்கு வந்தது 1943ஆம் ஆண்டு தான். அவ்வளவு முன்னேற்பாடுகள் தேவைப்பட்டிருந்திருக்கின்றன.

## இழப்பில்தான் 'விடுதலை'

சென்னைக்கு 'விடுதலை' இடம் பெயர்ந்து விட்ட நிலையிலும், செலவுகளைக் கணக்கிட்ட போது இழப்பே ஏற்பட்டது என அறிகிறோம்.

'விடுதலை' ஒரு கொள்கையை அடிப்படையாகக் கொண்டு நடத்தப்பட்டு வந்ததால் அது மாதம் ஒன்றுக்குச் சராசரி ரூ. 3000 நஷ்டத்தில் நடத்தப் பட வேண்டியதாய் நிகழ்ந்து வந்தது என்றும் நஷ்டத்திற்குக் காரணம் கடவுள், மதம், புராணம், ஜோசியம் முதலிய மூட நம்பிக்கை சம்பந்தமான விளம்பரங்களையும், சினிமா முதலிய ஒழுக்கக் கேடும் மூடநம்பிக்கைக் கதைகளையும் பத்திரிகையில் போடாமல் பகிஷ்கரித்து வந்ததேயாகும் என்றும் அய்யா அவர்களே குறிப்பிட்டார். ('விடுதலை' 6-6-64).

"பொருள் நஷ்டம் இந்த அளவில் இருந்தாலும் அதன் பலன் அலட்சியப்படுத்தக் கூடியதாய் அல்லாமல் பாராட்டத் தக்கதாய் இருந்து வருகிறது என்பதில் அய்யமில்லை" என்பதாக அவர் நம்பியதால் அவ்விழப்பைப் பெரிதாகப் பொருட்படுத்திக் கொள்ளாமல் தாங்கிக் கொண்டார். அதே வேளை இதழ் வளர்ச்சிக்கான வேண்டுகோள்களையும் முன் வைத்தார் அய்யா.

"நமது இயக்கம், நமது பத்திரிகை செய்துள்ள பணிகளை மக்களிடம் சொல்லுங்கள். இது மறைந்தால் என்ன ஆகும் என்பதை விளக்குங்கள். அதிகாரிகளை, அரசாங்கச் சிறிய உத்யோகஸ்தர்களை, வியாபாரிகளை, விவசாயப் பொது மக்களின் தைரியமாய் அணுகுங்கள். வெட்கப்படாதீர்கள். தமிழ்நாட்டு மக்களின் இனவுணர்ச்சியையும் சமுதாய நலன் உணர்ச்சியையும் பரீட்சை பார்ப்பதில் நமக்குக் கவுரவக் குறைவு ஏற்படாது.

இழப்பில்தான் வெளிவந்து கொண்டிருந்தது 'விடுதலை' என்பது உண்மை. எனினும் கொள்கை பரப்பும் பணிக்கு நாளேடு ஒன்று இன்றியமையாதது என்பதை மிக ஆழமாய்ப் பெரியார் உணர்ந்திருந்தார் என்பது ஒன்று. மற்றொன்று 'விடுதலை' விளைவித்து வந்த அரும் பெரும்நன்மைகள் நின்று விட்டால் தமிழினத்திற்குப் பேரிழப்பு - ஏன், பேரழிவே நேருமே என்ற பொறுப்புணர்வு அவருக்கு இருந்தமை. இவ்விரு காரணங்களையும் நமக்கு விளக்க வல்ல குறிப்பு ஒன்றைக் காட்டுகிறேன்.

'விடுதலை'யைப் பெரியார் ஈரோட்டிலிருந்து நடத்திக் கொண்டிருந்த கட்டத்தில் 1-9-1940 அன்று 'விடுதலை' என்னும்

தலைப்பின் கீழ் அவரால் உருக்கமாய் வெளியிடப்பட்ட அறிக்கையில் கண்டிருப்பதாவது;

"திராவிடப் பெருங்குடி மக்களே! 'விடுதலை' – பத்திரிக்கை 'சுதந்திர விடுதலை'யாக நடைபெறச் செய்கிறார்களா 'அடிமை விடுதலை' யாகச் செய்ய உடந்தையாக இருக்கிறீர்களா?

இன்று 'விடுதலை'க்கு மாதா மாதம் 500 ரூபாய் நஷ்டம் வருகிறது. 'விடுதலை' திராவிட நாட்டில் அதிகமாய்ப் பரவுவதும் தடைப்படுகிறது.

கஷ்டத்திற்குக் காரணம் பிரசுரிக்கும் காகிதம் பவுண் ஒன்றுக்கு 1.1.3½ பைசா வீதம் இருந்தது. இன்று யுத்தத்தின் காரணமாகப் பவுண் ஒன்றுக்கு 10.3.3 பைசாவாக உயர்ந்து விட்டது. இதன் பயனாய் நாள் ஒன்றுக்கு குறைந்தது 7000 பிரதி பதிப்பிக்கப் படுவதாக வைத்துக் கொண்டாலும், தினம் 10½ ரீம் காகிதம் வேண்டும். இந்த 10½ ரீம் காகிதத்திற்குத் தினம் 450 பவுண் இரையாகின்றது. பவுண் ஒன்றுக்கு விலை முன்பைவிட 2 அணா சுமார் அதிகமென்றால் தினம் ஒன்றுக்கு ரூ. 56–40 அதிகம். ஒரு மாதத்திற்கு 30 நாள்களுக்கு ரூ 1300 வீதம் முன்பைவிட அதிகச் செலவு ஏற்படும். இதற்கு 2ஆம் முறை பத்திரிகை விலை உயர்த்தி யிருப்பதில் அதாவது முன்பை விட 2 பக்கம் அதிகப்படுத்தி 2½ காசு உயர்த்தியிருப்பதில் 30ரூ. அதிகம் கிடைக்கக்கூடும். அதில் மாதம் 780 ரூபாய் கழித்தாலும் மீதி மாதம் ஒன்றுக்கு 520 நஷ்டத்தில் எந்த விதத்திலும் குறைவு கிடையாது.

ஆதலால் இந்த நஷ்டத்திற்காக நமது கொள்கைகளை விட்டுக் கொடுத்து, 'அடிமை விடுதலை'யாகி, விளம்பரத்திலும் செல்வவான்களிடம் நன்கொடை பெறுவதா அல்லது சுதந்திர விடுதலையாக இருந்து எவ்விதக் கொள்கையையும் விட்டுக் கொடுக்காமல், சகல விஷயங்களையும் உரிமையாக வெளிவிடும் உரிமையுடன் நடத்துவதா என்பதற்காகத்தான் 'விடுதலை'யைச் சுதந்தரமாய் நடத்தச் செய்கிறீர்களா அல்லது அடிமை 'விடுதலை'யாக நடத்தச் செய்கின்றீர்களா என்று கேட்கிறது. இனியும் நம் இயக்கம் வலுக்க வலுக்க நம் 'விடுதலை'க்கு அதிகச் சுதந்திரம் வேண்டியிருக்கும். அப்பொழுதுதான் நிலையானதும் நேர்மையானதுமான பிரயோஜனத்தைத் திராவிடர்கள் அடையக் கூடும்.

ஆதலால் திராவிட மக்களே! 'விடுதலை'க்கு உதவுங்கள், உதவுங்கள், பணமுடிப்பாக உதவுங்கள்!!

நாளேடு என்ற வகையில் 'விடுதலை' நன்றாகப் பரவுவதற்கும், நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் வாழ்ந்த தமிழ் மக்களும் அயல்நாடுகளில் இருந்த தமிழர்களும் பேரார்வத்தோடு அதை வாங்கிப் படித்துப் பயனடைவதற்குமானதொரு தனிச் சூழ்நிலை எதிர்பாராவண்ணம் அது தோன்றிய அடி நாட் கட்டத்தில் அமைந்தமை பற்றிச் சற்றே ஆய்வு செய்வோம்.

'விடுதலை' இதழாளராக அய்யா பொறுப்பேற்ற சில மாதங்களில் இரட்டையாட்சி முறையிலான சட்டமன்றத் தேர்தல் வந்து விட்டது. அந்நிலையில் தேர்தல் தொடர்பான செய்திகளையும் கருத்துகளையும் மக்களுக்குத் தெரிவிக்க வேண்டிய கடமையை நிறைவேற்ற வேண்டி யிருந்தது. முன்னரே 'குடிஅரசு' கிழமை இதழ் படித்துக் கொண்டிருந்தவர்கள் 'விடுதலை' நாளேட்டையும் விரும்பிப் படித்தது இயற்கையே. தேர்தல் வேறு வந்துவிட்டதால் 'விடுதலை' படிப்பவர்களின் எண்ணிக்கை இயல்பாகக் கூடுதலாகியது.

பதினேழு ஆண்டுக்காலம் 'சென்னை மாகாண ஆட்சி'யில் பங்கு பெற்றிருந்த நீதிக்கட்சி பிறர் கற்பனை பண்ண முடியாத அளவிற்கு தாழ்த்தப்பட்ட ஆதிதிராவிடர்களை உயர்த்தும் சட்டங்கள் இயற்றுதல் உட்பட மக்களுக்காக ஆற்றிய நன்மைகளின் அருமை பற்றி - அவற்றின் புரட்சித் தன்மைபற்றி 'விடுதலை'யில் சிறப்பான வகையில் விளக்கங்கள் வெளியிட்டார் பெரியார். 'இந்தியத் தேசியக் காங்கிரசு'க் கட்சியாரும் 'நீதிக்கட்சி'க் காரர்களும் வெள்ளையரோடு கொண்டிருந்த உறவுகளை வேறுபடுத்திக் காட்டினார் அவர். 'காங்கிரசு' ஆட்சி ஏற்படுமானால் விளையும் பின்னடைவு பற்றி வரும் பொருளுரைக்கும் கருத்துகள் வெளியிடப்பட்டன. இறுதியாகத் தேர்தலில் வெற்றி பெற்றது 'காங்கிரசு'க் கட்சியே. அது பெரும்பான்மை இடங்களைப் பெற்று விட்டாலும், ஆட்சியோச்சுதல் வெள்ளையரின் தலையீடின்றி நடப்பதற்கான ஒப்பந்த உறுதிமொழி பெறுவதன் பொருட்டு, உடனடியாக ஆட்சிப் பொறுப்பேற்க மறுத்துக் கொண்டிருந்தது.

வெள்ளைய ஆளுநர் அமைக்க விரும்பிய இடைக்கால அமைச்சரவையில் 'நீதிக்கட்சி' பங்கேற்கக் கூடாது என்று பெரியார் கண்டிப்பான கருத்து வெளியிட்டார். எனவே தனிப்பட்ட ஒரு சிலரைக் கொண்டு, கட்சி சார்பற்ற அமைச்சரவை ஒன்று ஆளுநரால் அமைக்கப்பட்ட நிலையில், அதை 'அற்பாயுசு மந்திரிசபை' என்று 'காங்கிரசு'க்காரர்கள் எள்ளல் செய்தனர். மூன்றரை மாதஞ் சென்று,

அமைச்சரவை அமைத்து ஆட்சிக்கட்டிலில் அமரக் 'காங்கிரசு'க் கட்சி முன் வந்தபோது, 'சரணாகதி மந்திரிசபை' என்று அதற்குப் பெரியார் பெயரிட்டார். அத்துடன் 'விடுதலை'யில் அன்றாடம் முதற் பக்கப் பெட்டிச் செய்தியாக, "சரணாகதி மந்திரிசபை இன்று — ஆம் நாள். இன்னும் எத்தனை நாள்?" என்று தடித்த எழுத்துகளில் அச்சிட்டு வந்தார். இந்த உத்தி அன்றைய நிலைவரத்தில் படிப்போரிடையே பெருஞ்சுவை கூட்டியது.

"காங்கிரசு'க் கட்சியின் சார்பில் 14-7-1937 அன்று சென்னை மாகாணப் பிரதமர்ப் பொறுப்பினைச் சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் ஏற்றுக் கொண்டு அமைச்சர்கள், சட்டமன்றத் தலைவர், மேலவைத் தலைவர் ஆகிய பதவிகளில் ஆறனுக்குப் பார்ப்பனரையே அமர்த்திக் கொண்டார். ஒரு சில கிழமைகளிலேயே வடபுலத்து இந்தி மொழியைத் தென்னகத்தில் பரப்பிடும் முயற்சியின் முதற்படியாக அம்மொழியை மாணாக்கரிடையே புகுத்துவதற்குத் திட்டமிட்டார். அதை வெளிப்படையாகவே அறிவித்து விட்டுக் கட்டளையும் இட்டு விட்டார்! 15-4-'38ஆம் நாளில் அவரின் அரசு போட்ட ஆணை, '38-39 கல்வியாண்டுத் தொடக்கத்தி லிருந்து தமிழக உயர்நிலைப் பள்ளிகளில் இந்தி மொழியும் ஒரு கட்டாயப் பாடமாக இருக்கும் என்பதாகக் கொக்கரித்தது. இத்தனைக்கும் 'காங்கிர'சின் தேர்தலறிக்கையில் இடம் பெறாத திட்டம் அது!

அவரின் மதுவிலக்குத் திட்ட நடைமுறைக்காக இரண்டாயிரத்து இருநூறு தொடக்கப் பள்ளிகள் மூடப்பட்டன. அதே காலத்தில் பார்ப்பனர் மட்டுமே படிப்பதற்கான வேத பாடசாலையொன்று பனிரெண்டு இலட்சரூபாய்ச் செலவில் அவரால் நிறுவப்பட்டது. இனவுணர்வு மேலிட்டு இன்னும் பலவற்றைத் தயங்காமல் செய்தார் ஆச்சாரியார்.

தமிழர் நலன் பேணும் தன்மான இயக்கக் கொள்கைகளுக்கு மாறான ஆச்சாரியாரின் செயல்கள் அனைத்தையும் கடுமையாகக் கண்டிக்கவும் எதிர்க்கவும் 'விடுதலை' நாளேட்டை நன்றாகப் பயன்படுத்தினார் பெரியார்.

## இந்தி மொழித் திணிப்பு

ஆச்சாரியாரின் இந்தி மொழித் திணிப்பு தமிழரிடையே இனவுணர்வையும் மொழியுணர்வையும் பெருக்கி ஒற்றுமையை உருவாக்கும் முயற்சியில் பெரியாருக்கு அருமையான வாய்ப்பாக

அமைந்தது. 1924ஆம் ஆண்டிலேயே திருவண்ணாமலைக் 'காங்கிரசு' மாநாட்டுத் தலைமையுரையில், "வடமொழி உயர்வுக்கு வகை தேடவே, ஒரு ஒடிந்து போன குண்டூசி அளவுப் பயனும் இல்லாத இந்தி மொழியை இங்கு பிரச்சாரம் செய்ய வருகிறார்கள். தமிழ்மொழி வளர்ச்சிக்காக இதில் நூற்றில் ஒரு பங்கு கவலையாவது எடுத்துக் கொள்கிறார்களா? பார்ப்பனரல்லாதார்க்கு ஏற்படும் பல ஆபத்துகளில் இந்தியும் ஒன்றாக முடியும்போலிருக்கிறது" என்று துணிவாகக் கருத்தறிவித்தவர் பெரியார். அதன்பிறகு 'குடிஅரசு' இதழில் இந்தி மொழியை மறுத்தெழுதிய கட்டுரைகள் மூலமும், அதன் பின்னர் 1931ஆம் ஆண்டில் நன்னிலத்தில் நடந்த சுயமரியாதை மாநாட்டுத் தீர்மானத்தின் வாயிலாகவும் தொடர்ந்து இந்தி நுழைப்பை எதிர்த்தவர் அவர்.

இப்போது இந்தி மொழி கட்டாயமாகவே திணிக்கப்பட்ட நிலையில், "ஆரியக் கலப்பால் தமிழின் தன்மை, உரிமை, நேர்மை எல்லாம் கெட்டு, ஆரியருக்குத் தமிழன் அடிமை என்பதுதான் மிஞ்சிவிடுகிறது. அப்படி இருக்கும் போது இனியும் ஆரீய பாஷையைக் கட்டாயமாக்கினால் என்ன ஆகும்?" என்று கேட்டுக் கிளர்ச்சிக் கொடியைப் பெரியார் ஏந்திப் பிடித்துச் சீறிப் பிளிறினார்!

இந்தி எதிர்ப்பு நெருப்பு நன்றாக மூண்டு நாடு முழுவதையும் பற்றிக் கொண்டு, திரட்சி திரட்சியாக எரிந்தது. 'மாகாணப் பிரதமர் பொறுப்பில் அமர்ந்த இருபத்தெட்டாம் நாளாம் 10..37 அன்று சென்னை ராமகிருஷ்ணா மடத்தில் ஆச்சாரியார் கட்டாய இந்திக் கல்வி பற்றிய தம் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்தியதிலிருந்து கட்டாயக் கட்டளையிட்டது வரைக்கும் இடையிலான கட்டத்தில், தமிழகத்தின் எல்லாப் பகுதிகளிலும் எதிர்வினைகள் நிகழ்ந்தன.

27-8-37ஆம் நாளன்று கரந்தை, 29-8-37 அன்று திருவையாறு, 5-9-37 அன்று சென்னை - சவுந்தரிய மகால், 4-10-37 அன்று சென்னை-கோகலே மண்டபம், 12-10-37 அன்று திருநெல்வேலி, 7-11-37 அன்று சேலம், 8-11-37 அன்று இராசிபுரம், 14-11-37 அன்று ஆம்பூர், 12-12-37 அன்று நாமக்கல், 26-12-37 அன்று திருச்சி, 27-2-38 அன்று காஞ்சிபுரம் 3-1-38 அருப்புக்கோட்டை, 6,2,38 அன்று ஓமலூர், 19,20-2-38 அன்று மதுரை, 2,3-438 ஆகிய நாள்களில் சாக்கோட்டை, 10-4-38 அன்று கோயம்புத்தூர் என்று பல்வேறு இடங்களிலும் தமிழ் மக்கள் கூடித் தம் எதிர்ப்புணர்ச்சியைப் புலப்படுத்தினர்.

ஒன்பது .மாதங்களில் பதினெட்டு தமிழகப் பகுதிகளில் கூட்டங்களாகவும் மாநாடுகளாகவும் இந்தி மறுப்பு நிகழ்ச்சிகள்

நடத்தப்பட்டன. ஆங்காங்கே பல்லாயிரக் கணக்கான மக்கள் பங்கேற்ற திட்டவட்டமாகத் தங்களின் மொழிப்பற்றை உறுதிப் படுத்தினர். இந்தியாவின் பிற மாநிலங்களிலிருந்தும், பர்மா, சிங்கப்பூர், பினாங், இலங்கை முதலிய பிற நாடுகளிலிருந்தும் தமிழின மக்கள் தாயகம் வந்து அம்மாநாடுகளில் பங்கெடுத்துக் கொண்டார்கள் என்பது பெருமிதத்துடன் குறிப்பிட வேண்டிய சிறப்புச் செய்தியாகும்.

நிகழ்ச்சிகளில் விளக்கவுரைகளும் உணர்ச்சியுரைகளும் பொழிந்த சான்றோர்கள், புலமையாளர்கள், இயக்க முன்னோடிகள் ஆகியோரின் பெயர்ப்பட்டியல் மிக நீளமானது. எனினும் மக்களிடையே ஏற்கனவே அறிமுகமாகியிருந்து செல்லும் சொல்லைச் செல்வமாய்க் கொண்டிருந்த பெரியார், மறைமலையடிகளார், நாவலர் சோமசுந்தர பாரதியார், பட்டுக்கோட்டை அழகிரிசாமி, அறிஞர் அண்ணா, கி.ஆ.பெ. விசுவநாதம், பன்னீர்ச்செல்வம், ஊ.பு.அ. சவுந்தர பாண்டியன், பூவாலூர் பொன்னம்பலனார், கே.எம். பாலசுப்பிரமணியம், உமா மகேசுவரனார், இராவ்சாகிப் என். சிவராஜ், சர்.எம். கிருஷ்ணன் நாயர், சர். கோவிரெட்டி நாயுடு, கான் பகதூர் கலிபுல்லா, மணவை திருமலைசாமி, செ.தெ. நாயகம், சாமி. சிதம்பரனார், மேனாள் அமைச்சர் எஸ். முத்தையா, சட்டப் புலவர் கா. சுப்பிரமணியனார், அறிஞர் மு.சி. பூரணலிங்கம் போன்ற வேறுபட்ட கட்சிகளைச் சேர்ந்தோரும், பல்வகைச் சமயச் சார்பு கொண்டோரும், கட்சிகளுக்கு அப்பாற்பட்ட புலவர்களம் ஒருங்கிணைந்து உரத்த குரலில் வழக்குரைத்து இந்தியைக் கட்டாயப் பாடமாக்குவதை வன்மையாகக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றினர் என்பதை மட்டும் குறித்தாலே போதும். மொழியின் பெயரால் பல்வகைப்பட்ட தமிழரும் கைகோர்த்து நின்றமை ஒரு புதிய வரலாறுதான்!

ஆச்சாரியாரின் கட்டாய மொழித் திணிப்பு எண்ணத்திற்கு எதிராகத் தமிழகத்தில் விளைந்த வெப்ப நிலவரம் அவருக்குப் பேரதிர்ச்சியையும் மனப்பாதிப்பையும் தந்தது.

முதலில் ராமகிருஷ்ணா மடத்தில் சென்னை மாகாணத்தின் எல்லாப் பள்ளிகளிலும் எல்லா வகுப்புகளிலும் கட்டாய இந்தியைக் கொண்டு வரப் போவதாக ஓங்கிப் பேசிய ஆச்சாரியார், ஒரு சில நாள்களிலேயே எதிர்ப்புக் குரல்கள் ஒலிக்கக் கேட்ட பிறகு, சென்னைக் கல்லூரியில் அடுத்த மாதம் உரையாற்ற நேர்ந்த போது, அனைத்து உயர்நிலைப் பள்ளிகளிலும் முதல் மூன்று படிவங்களில் - அதாவது

ஆறாம் ஏழாம் எட்டாம் வகுப்புகளில் மட்டும் இந்தி கட்டாயப் பாடமாக இருக்கும் என்றார்.

பின்னர் "இந்தி என்ற பேச்சுக்கே இடமில்லை" என்று மாநாடுகளின் வாயிலாக மக்கள் அறுதியிட்டமை கண்டு, இந்திக் கல்வி பற்றிய அரசாணையில், "தமிழகம், ஆந்திரம், கன்னடம், மலையாளம் ஆகிய பகுதிகளில் முறையே 60, 54, 4, 7 எண்ணிக்கைப் பள்ளிகளில் மட்டுமே முதல் மூன்று படிவங்களில் இந்திப் பாடம் இருக்கும்" என்றொரு வேடிக்கையான நடைமுறையை அறிமுகம் செய்தார்.

எதிர்ப்பாளர்கள் தணியவோ தளரவோ காணோம் என்பதைப் புரிந்து கொண்டு, "இந்தியில் தேறாவிட்டாலும் மாணவரின் வகுப்பு மாற்றம் தடைப்படாமல் பார்த்துக் கொள்ளப்படும் என்ற அளவிற்கு நிலையிறங்கிப் பேசிய அவர், "இன்றைக்கு இந்தி வேண்டுமா, வேண்டாமா என்பதல்ல பிரச்சினை; ஆளுவது நானா அல்லது ஈரோடு இராமசாமியா என்பதுதான் பிரச்சினை" என்றெல்லாம் வெடித்துரைக்கும் அளவிற்கு உணர்ச்சிக்கு இலக்கானார்.

ஆனால் இந்திப் படிப்பு பற்றிய ஆணையை அவர் திரும்பப் பெறுவதாக இல்லை. இந்நிலையைச் சரியாகப் புரிந்து கொண்ட தமிழ்க் காப்புத் தலைவர்கள் திருச்சியிலே கலந்துரையாடல் கூட்டமொன்றிற்கு ஏற்பாடு செய்தனர். 28-5-38 அன்று நிகழ்ந்த அத்திருச்சிப் பாசறைக் கூட்டத்திற்கு நாடெங்கிலுமிருந்தும் தமிழுணர்வு மேலிட்ட ஆண்களும் பெண்களும் நூற்றுக் கணக்கில் வந்து கலந்து கொண்டனர். அங்கு இந்தி எதிர்ப்பை ஓர் இயக்கமாக நடத்த, பேராசிரியர் ச.வோ. பாரதியார், பெரியார் உமா மகேசுவரனார், சவுந்தர பாண்டியனார், கே.எம். பாலசுப்பிரமணியம், கி.ஆ.பெ. விசுவநாதம் ஆகியோர் அடங்கிய மாநில இந்தி எதிர்ப்பு வாரியம் அமைக்கப்பட்டது. ஆங்காங்கு துணைவாரியங்களை நிறுவி, இந்தி கற்பிக்கும் பள்ளிக் கூடங்களின் முன் மறியல் செய்து மாணவர்களைத் தடுப்பது என்றும், அமைச்சர்களுக்குக் கறுப்புக் கொடி காட்டுவதென்றும், தேவையானால் சட்ட மறுப்பு நடவடிக்கையில் ஈடுபடுவது என்றும், இந்தி விருப்பப் பாடமாகக்கூடக் கூடாது என்றும் முடிவுகள் செய்யப்பட்டன.

அந்தக் கட்டத்தில் பெரியாரவர்களின் விசை நிரம்பிய எழுத்துகள் எவ்வளவு தாக்கம் பயப்பவையாக இருந்தன என்பதற்குச் சான்றாகச் சில வரிகள்:

"உண்மையில் இந்தி தமிழ் மக்களுக்கு நஞ்சு என்பதை எடுத்துக்காட்ட நாம் எடுத்துக் கொண்ட முயற்சி கொஞ்ச நஞ்சமல்ல. கனம் ஆச்சாரியார் சிறிதும் லட்சியம் செய்யவில்லை. இனி கெஞ்சிக் கொள்ளுவதாலோ, சமாதான முறையில் வேறு ஏதாவது முயற்சி செய்வதாலோ எவ்விதப் பயனும் ஏற்படப் போவதில்லை.

உண்மைத் தமிழ் ரத்தம் அதாவது சிறிதும் கலப்பற்ற சுத்த தமிழ் ரத்தம் ஓடும் வீர வாலிபர்களே இந்தி எதிர்ப்பு இயக்கத்துக்கு வரவேண்டும். பார்ப்பனர் தயவு இல்லாது வாழ முடியாது என்கிற தமிழ் மக்கள், முடிபுனைந்த மன்னராய் இருந்தாலும் அவனுடைய நிழலும் இம்முயற்சியில் பட நாம் இடம் தரக் கூடாது.

அதிக அவகாசமில்லை. சகல பொறுப்புகளும் மானமுள்ள பரிசுத்த இளைஞர் கையில் இருக்கிறது. தமிழ் இளைஞர்களே, இதுவரை உங்களில் பலர் "இந்தி எதிர்ப்புப் போருக்கு நான் தயார், நான் தயார்; நானும் என் மனைவியும் தயார்! என்று தெரிவித்துக் கொண்டிருக்கிறீர்கள். அவரவர் கஷ்ட ஜீவனம் நடத்தவும், அடிபடவும், இராப்பட்டினி – பகல்பட்டினி கிடக்கவும் தொலைவழி நடக்கவும் தயார் செய்து கொள்ளுங்கள். போர் முனை சிப்பாய் போல் ஆக்கினைக்கு அடிபணியவும் தயார் செய்து கொள்ளுங்கள்.

ஏதோ விலக்க முடியாத பல காரணங்களால் தமிழ் மக்களில் பலர் புரோகித ஆட்சிக்கு அடிமைப்பட்டுக் கிடந்தாலும் அதைப் பற்றிக் கவலைப்படாமல் அவர்களும் நாமும் நம் பின் சந்ததியும் மனிதர்களாக வாழ முயற்சிக்க வேண்டியது நமது கடமை என்பதை உணருங்கள்.

தமிழ்நாட்டில் மானமுள்ள சுத்தத் தமிழ் மக்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள் என்பதை உலகம் உணர இதைவிட வேறு தக்க சமயம் இனி சுலபத்தில் கிடைக்காது கிடைக்காது.

ஆகவே பொதுமக்களே, இளைஞர்களே, தயாராகுங்கள். முன்வாருங்கள். ஒரு கை பாருங்கள். ஆரிய சூழ்ச்சிக்கும் திராவிட வீரத்துக்கும் போர் மூண்டுவிட்டது. போர் நெருங்கிவிட்டது. தயார்! தயார்!! வெற்றி நிச்சயம்!!!"

பெரியாரின் போர் முரசத்தை இப்போது கேட்கும் நமக்கே எவ்வளவு கொதிப்பேறுகிறது! அப்படியானால் அந்தக் காலத்தில் - அறுபத்தியோர் ஆண்டுகளுக்கு முன்பு - வாழ நேர்ந்த தமிழர்களுக்கு உளப்பாதிப்பு ஏற்பட்டிருக்கும்? அந்நிலையில் தமிழகம் முழுவதிலும்

"இந்தி ஒழிக! தமிழ் வாழ்க! தமிழ்நாடு தமிழருக்கே! எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத தமிழ் என்று சங்கே முழங்கு! சேனை ஒன்று தேவை - பெருஞ்சேனை ஒன்று தேவை. செந்தமிழைக் காப்பதற்குச் சேனை ஒன்று தேவை!" என்ற முழக்கங்கள் ஒலித்தன.

திருச்சி பாசறைத் தீர்மானங்களுக்குப் பின், இறுதி முன்னறிவிப்பு நிகழ்ச்சியாக, கோடம்பாக்கத்தில் 3-6-38 அன்று இந்தி ஒழிப்பு மாநாடு மறைமலையடிகளார் தலைமையில் ஏற்பாடாகியது. மக்கள் தலைமையுரைச் சுவையில் திளைத்துக் கொண்டிருந்த வேளை, இருநாள்கட்கு முன்பு முதல்வர் இல்லத்தின் முன் உண்ணா நோன்பு தொடங்கிய பல்லடம் பொன்னுசாமி யவர்கள் தளையுண்டு சிறைப்பட்டார் எனும் செய்தி மாநாட்டினரிடையில் பரவிற்று. அவ்வளவுதான்; மாநாட்டுக்கு வந்திருந்த அத்தனை பேர்களும் செ.தெ. நாயகம், காஞ்சி மணிமொழியார் சண்முகானந்த அடிகள் ஆகியோரின் தலைமையில் ஊர்வலமாகச் சென்று ஆச்சாரியாரியாரின் இல்லத்தில் முன்னிலையில் ஆர்ப்பாட்டம் முழக்கம் செய்ததுடன் நில்லாது, அன்றிரவு அங்கேயே மாபெரும் கண்டனப் பொதுக் கூட்டம் ஒன்றும் நடத்தப்பட்டது. கூட்டத்தின் முடிவில் முதலாம் இந்தி எதிர்ப்பு மறியல் திட்டச் சர்வாதிகாரியான நாயகம் அவர்களும் சிறை பிடிக்கப்பட்டனர். வழக்கு மன்ற நடுவர் நாயகத்திற்கு ஒரு மாதக் காவலும் 200 ரூபாய் ஒறுப்புத் தொகையும், அடிகளுக்கு நான்கு மாதக் கடுங்காவலும் தீர்ப்பளிப்புச் செய்தார்.

ஆயினும் என்ன? திட்டமிட்டிருந்த வண்ணம் 3-6-1938ஆம் நாள் இந்தியைக் கற்பிக்க முன் வந்த கல்வியகங்களில் ஒன்றான சென்னை இந்து தியலாஜிகல் உயர்நிலைப் பள்ளியின் முன்புறம், இரண்டாம் 'சர்வாதிகாரி' யாக ஈழத்தடிகள் பொறுப்பேற்க, பல்லாயிரக்கணக்கான தமிழ் வீரர்கள் வீராங்கனைகள் புடை சூழ்ந்து ஆர்ப்பரிக்க, இந்தி எதிர்ப்பு அறமறியல் களத்தில் மொழிக்காக்க மறவர்கள் இறங்கினர். "இந்தி ஒழிக! தமிழ் வாழ்க!" என்னும் ஒலி முழக்கங்கள் விண்ணதிர்வைப் படைத்தன! அங்கு அணியமாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்த காவல்துறையினர் உடனே மறியல் மறவர்களைத் தளை செய்து இட்டுச் சென்றது. அடுத்து ஒரு மறவர் குழு களமிறங்கித் தளையுண்டது.

இவ்வண்ணம் நாள்தோறும் நடந்தது. 'சர்வாதிகாரி'யாகப் பொறுப்பேற்றார். நாயகம், அடிகள் ஆகியோரை அடுத்து கே.எம். பாலசுப்பிரமணியம், ஜி.என். ராஜூ, குடந்தை எஸ்.கே. சாமி, எம்.எஸ். மொய்தீன், புவனகிரி நமச்சிவாயம், மயிலாடுதுறை சம்பந்தம், காஞ்சி

பரவஸ்து ஆச்சாரியார், பெரியகுளம் அரங்கசாமி, கந்தம் ரோசம்மாள், டி.எஸ். மாரியம்மாள், நெல்லை இராமநாதர் ஆகியோர் 'சர்வாதிகாரி'ப் பொறுப்பேற்ற பெருமக்களாவர்.

விடுமுறை நாள்கள் தவிர, அன்றாடம் குழுக் குழுவாக மொழிக்காப்பு மறவர்கள் மறியல் களம் கண்டு தளையுண்டு சிறைக்கூடம் நண்ணினர். தமிழகத்தின் அனைத்துப் பகுதிகளி லிருந்தும் - ஏன், சிங்கப்பூர் - மலாயா முதலிய அயல்நாடு களிலிருந்துங்கூட மொழிமானக் காப்புப் போரில் பங்கேற்க வீரர்கள் ஆர்வமுடன் வந்தனர். சிறைவைக்கப்பட்டவர்களின் மொத்த எண்ணிக்கை - 1271 பேர். மறியல் பண்ணும் கடமையில் மட்டுமே ஈடுபட்டோருக்கு 4 திங்கள், 6 மாதங்கள், 8 மாதம், 10 திங்கள்கள், ஓராண்டு, ஈராண்டு, மூவாண்டு, வெறுங்காவல், கடுங்காவல் என்று வெவ்வேறு சிறைவாழ்வுத் தீர்ப்பு வழங்கப்பட்டமை முறை மன்றங்களின் நடைமுறைகளின் முறையின்மைக்குச் சான்று. மறை. திருநாவுக்கரசு, அருணகிரி அடிகள், அண்ணா, பாவலர் பாலசுந்தரம் ஆகியோர் இத்தகைய வேறுபட்ட தீர்ப்புப் பெற்றோரில் குறிப்பிடத்தக்கோர்.

தீர்ப்பாளர் "அய்ம்பது ரூபாய் ஒறுப்புத் தொகையாகக் கட்ட வேண்டும். கட்டா விட்டால் ஆறு வாரம் சிறையில் இருக்க வேண்டும்" என்றார்.

"ஒறுப்புத் தொகை கட்டுவதா? ஆறு கிழமைச் சிறை வாழ்வையே ஏற்கிறோம்" என்று அகனமர்ந்து முகமலர்ந்து அறிவித்தனர். அங்கே அமர்ந்திருந்த அய்யா பெரியாரும் பிற தலைவர்களும் தாய்க்குலத்தை நெஞ்சினிக்க வாழ்த்தினர்.

பகல் 1 மணிக்கெல்லாம் தீர்ப்பு அளிக்கப்பட்டு விட்டாலும் இரவு 9 வரை தாய்மார்களையும் பச்சிளங் குழந்தைகளையும் மற்ற இரண்டு தொண்டர்களையும் பட்டினி போட்டு அலைக்கழித்துப் பிறகே சிறைக்கோட்டத்திற்கு கொண்டு சென்றனர்.

இவ்வாறே கிழமைக்கு ஒரு முறை பெண்களின் பங்கேற்பு என்று திட்டமிட்டுக் கொண்டு பெரும்பாலும் திங்கட்கிழமைகளில் மகளிர் பல்லோர் மறியல் களங்கண்டு, சிறைக்கொட்டடி வாழ்வைச் சுவைத்தனர். இது 4-9-39 வரை தொடர்ந்தது. இத்தகைய இருபது பெண்டிர் குழுக்களில் 73 தாய்மார்களும் 32 பிஞ்சுக் குழந்தைகளுமாக மொத்தம் 105 பேர் பங்கு பற்றினர். அக்காலத்தில் எப்படிப்பட்ட

உணவு சிறைகளில் வழங்கப்பட்டது என்பதை நாம் நேரில் பட்டறிந்திராவிட்டாலும், அது பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். மிகமிகக் கழிசடைத்தரமான உணவுதான் கொடுக்கப்பட்டது என்றாலும் தமிழ்ப்பற்று மேலிட்ட தாய்மார்கள் அதைப் பொறுத்து ஏற்றுக் கொண்டார்கள். சிலர் விடுதலை பெற்று வெளி வந்தவுடன், மீண்டும் உள்ளே செல்ல முன் வந்தனர் என்பதுதான் வியந்து விம்மிதப்படவேண்டிய செய்தி!

மொழிப்போரின் போது தமிழ்ப் பெண்மணிகள் கொண்ட ஆர்வப் பெருக்கு எந்த அளவிற்கு இருந்தது என்பதைக் குறிப்பிட வேண்டும்.

"இன்னும் ஒரு கிழமைக்குள் பெரியாரைச் சிறையினின்றும் விடுவிக்காவிட்டால், முதல்வரின் இல்லத்தின் முன்பாக மறியல் செய்வேன்" இவ்வாறு முன்னறிவிப்புச் செய்தார் பண்டிதை நாராயணி அம்மையார். ஒரு கிழமை ஆயிற்று. பெரியார் விடுதலையாகவில்லை! அறிவித்த வண்ணம் 17-2-39ஆம் நாள் பெரியதோர் ஊர்வலப் பேரணியை நடத்திக் கொண்டு ஆச்சாரியாரின் வீட்டிக்குமுன் சென்று நின்று, 'பெரியாரை விடுதலை செய்க!" என்று ஓங்கிக் குரலெழுப்பினார். முறை மன்றத்திற்குக் கொண்டு செல்லப்பட்ட அவருக்கு "ஆறு மாதச் சிறை வாழ்வு" என்று தீர்ப்பளிக்கப்பட்டது. இன்முகத்துடன் அதை அவர் ஏற்றார்.

மறியல் களத்தின் வல்லாட்சியராகப் பணியாற்றுவதற்குத் தயங்காது. முன் வந்தனர் ரோசம்மாள், மாரியம்மாள் என்னும் வீரப்பெண்மணிகள்!

தன்தன் கணவரை முதலில் மறியல் போராட்டத்திற்கு அனுப்பி வைத்து, அவர் தளை செய்யப்பட்டுச் சிறை செலுத்தப்பட்டார் என்றவுடன், "நானும் செருமுனை செல்வேன்; சிறையறை புகுவேன்" என்று களம் இறங்கி வீரம் நாட்டியோர்தாம் பல்லடம் பொன்னுச்சாமியாரின் துணைவி நாச்சியம்மாள், அருணகிரியாரின் துணைவி உண்ணாமுலையம்மை, மறை. திருநாவுக்கரசரின் துணைவி ஞானம் அம்மை, பாவலர் பாலசுந்தரத்தின் துணைவி பட்டம்மாள், களச்சாவு ஏற்ற தாளமுத்துவின் துணைவி குருவம்மாள் ஆகிய பெண்குலப் பெருமாட்டிகள்!

வேறெந்த நாட்டு வரலாற்றிலும் இப்படிப் பெண்மணிகள் பங்கேற்ற மொழிப் போர்க் காட்சிகள் இடம் பெற்றுள்ளதாக நாம்

அறியக் கூடவில்லை. புறநானூற்றுச் செய்திகள் வேண்டுமானால் சுவை கருதி மிகைப் படுத்தப் பெற்றவையாக இருக்கக் கூடும். ஆனால் இவை நாட்டோர் மெய்யாய்க் கண்டவை!

பெரியாரைச் சிறையினுள் அடைத்து வைத்து விட்டால் மொழிக் கிளர்ச்சியும் அடங்கி விடும் என்று கற்பனை பண்ணிய அரசு பெருத்த ஏமாற்றத்தையே சுவைத்தது! இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் கண்டனங்கள் வீசப்படும் என்று ஆச்சாரியார் எதிர்பார்க்கவேயில்லை. அத்தகைய சூழ்நிலையில் கடுங்காவல் கட்டளை வெறுங்காவல் என்பதாகத் தணிந்தது; 'சி' வகுப்புச் சிறை வாழ்வு 'பி'யாக உயர்ந்து, ஒரு கட்டத்தில் 'ஏ' வகுப்பையும் எட்டியது. ஆனால் பெரியாரை விடுவிக்கும் நல்லுணர்வு மட்டும் அரசுக்கு உடனடியாக உண்டாகவில்லை.

மாறாக, வயிற்று நோய்க்கு இலக்காகி எடை குறைந்து மெலிந்து போய்விட்ட பெரியாரைக் கடுமையான வெப்பத்தின் குடியகமாய்ப் பெயர்பெற்ற பெல்லாரிச் சிறைச்சாலைக்கு இடமாற்றம் செய்தது அரசு! அங்கே மேலும் உடல் நலிவுற்ற அய்யாவை மீண்டும் சென்னைக்குக் கொண்டு வந்து, இறுதியில் கோவைக்கு இட்டுச் சென்ற அரசு திடீரென்று 22-5-39 அன்று அவரை விடுவிப்புச் செய்தது. முதலில் சென்னையில் 72 நாள்களும் அடுத்துப் பெல்லாரியில் 75 நாள்களும் மீண்டும் சென்னையில் 10 நாள்களும் இறுதியாகக் கோவையில் 10 நாள்களுமாக 167 நாள்கள் கிழவர் பெரியார் சிறைக் கொட்டடியில் கிடந்து வாடிநைந்த வரலாறு உலக வரலாற்றிலேயே தனித்தன்மை படைத்தது.

பெரியார் சிறையேகிய நாளிலிருந்து விடுதலையாகும் வரை தமிழினப் பற்றுக் கொண்ட மக்கள் வெளியிட்ட உணர்ச்சிப் பெருக்கு நாட்டையே உலுக்கியது. தமிழகத்தின் சிற்றூர் - பேரூர்களில் எல்லாம் கண்டனப் பொதுக்கூட்டங்கள்; பட்டி-தொட்டிகள் யாவிலும் "தமிழ் வாழ்க! இந்தி ஒழிக!" என்னும் முழக்கம்; பெரியாரை இன்னுமா சிறையில் வைத்திருப்பது?" என்னும் உரைகள் அவ்வப்போது; "விடுவியுங்கள் வீரத்தலைவரை!" என்பதாகத் தொலைவரிகள் - ஆயிரக்கணக்கில் அரசுக்கு

டிசம்பர் - அன்று அய்யா சிறைக்கோட்டம் புகுந்ததைக் கருதி ஒவ்வொரு மாதமும் 6ஆம் நாள் மாலை சென்னைக் கடற்கரையில் இளைஞரும் மூத்தோருமாக ஒன்றரை இலட்சம் மக்கள் கலந்து கொண்ட சிறப்புக் கூட்டத்தில் அண்ணா, பன்னீர் செல்வம், கி.ஆ.பெ. விசுவநாதன் முதலிய தலைவர்களின் எழுச்சியுரைகள் இடம் பெற்றன.

அக்கூட்டம் நள்ளிரவையும் தாண்டி, 2.00மணி வரை நடந்தது. "காந்தியாரின் சட்ட மறுப்புக் காலத்திலுங் கூட இவ்வளவு பெரிய கூட்டம் கூடியது கிடையாது" என்று ஆரிய ஏடுகளே வியந்தன!

சேலத்தில் நகராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளி ஒன்றன் முன்புறம் நாள் தோறும் மறியல் செய்யத் தொடங்கிவிட்டனர் மக்கள். நகராட்சி மன்றங்கள், "பெரியாரைச் சிறை வைத்தது பெருந்தவறு. உடனே அவரை விடுவிக்க வேண்டும்" என்பதாகத் தீர்மானம் நிறைவேற்றத் தொடங்கி விட்டன. பெரியாரை விடுவிக்குமாறு கேட்டு மகளிர் குலம் ஆச்சாரியாரின் இல்லத்தின் முன்பாக மறியல் செய்யத் தொடங்கி விட்டனர்!

தமிழகத்திற்கும் அப்பால் ஆந்திர - மலையாள - கன்னட நாடுகளிலும், பம்பாய் - தில்லி - லாகூர் - மராத்தாப் பகுதிகளிலும், மலேயா, சிங்கப்பூர், பினாங், பர்மா, இலங்கை போன்ற அயல்நாடுகளிலும் கண்டனக் குரல்கள் ஒலிக்கத் தொடங்கின!

தமிழர் தொடுத்த மாபெரும் மொழிப்போரின் பல்வேறு களங்களில் தமிழர் பெரும்படையின் வழிநடைப் பயணங்கள் என்பவை பயன்கள் குவித்த உருப்படியானதொரு களம்!

திருச்சியிலிருந்து சென்னை வரை நடந்தே வழி நெடுக மக்களைச் சந்தித்து இந்தி எதிர்ப்பின் இன்றியாமையை விளக்கிக் கொண்டே வருவது என்றொரு திட்டம் தீட்டப்பட்டது. அதற்குத் 'தமிழர்படை' என்று பெயர்சூட்டப்பட்டது. அப்படையில் பங்கேற்க விரும்புவோர்களின் முகவரிகளைக் கேட்டு, படை அமைச்சர்ப் பொறுப்பைச் சுமக்க முன்வந்த ஆற்றல் நிரம்பிய எழுத்தாளர் மணவை ரெ. திருமலைசாமி அவர்கள் 38 ஆண்டு சூன் திங்களிறுதியில் ஓர் அறிக்கை யிட்டார். பெயர் கொடுத்த 500 வீரர்களில் கட்டுடலும் கட்டுப்பாடு காக்கும் உள்ளமும் பொருந்திய இளைஞர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

அய். குமாரசாமி அவர்களைப் படைத்தலைமைப் பொறுப்பாளராகவும், பட்டுக்கோட்டை அழகிரி அவர்களைத் தானையின் ஆணைப் பேராளராகவும், மூதாட்டி இராமாதிர்தத் தம்மையாரைப் பெருஞ்சோற்றுப் பொறுப்பாளராயும் கொண்ட அந்த நூற்றுவர்ப் படை 1-8-1938 அன்று திருச்சியிலிருந்து புறப்பட்டு, திருச்சி, தஞ்சை, தென்னார்க்காடு, செங்கற்பட்டு ஆகிய மாவட்டங்களில் 577 கற்கள் நடந்து மறுமாதம் 11-ஆம் நாளன்று சென்னையை அடைந்தது. அந்த 42 நாள்களில் 87

பெருங்கூட்டங்களில் 4 இலட்சம் மக்களுக்குப் படை நோக்கம் பற்றிய விளக்கங்கள் தரப்பட்டன. இந்நாட்டு வரலாற்றில் அதற்குமுன் அத்துணை நீண்ட பயணம் நடந்ததில்லை. காந்தியாரின் தண்டிப் பயணப் படை, இராசகோபாலாச்சாரியாரின் மறைக்காட்டு உப்பளப் பயணம் ஆகியவற்றைவிடத் தமிழர்பெரும்படைப் பயணம் பல மடங்கு நெடியது.

நீண்ட பயணம் என்பதால் மட்டுமன்று அதன் சிறப்பு. கொள்ளிடம் ஆற்றினைப் படைவீரர் அத்தனை பேரும் துணிச்சலாகப் படகுப் பயணம் மேற்கொண்டனர். பெண்ணையாற்றை நீந்திக் கடந்தார்கள். சுட்டெரிக்கும் வெய்யிலில், வெப்ப அலைகளை வெளியிட்டுக் கொண்டிருந்த பொசுக்கும் மணலின் மீது கால்களைப் பதித்துப் பதித்து நடக்க வேண்டியிருந்தது அவர்களுக்கு! குடைகளே இல்லாமல், ஆங்காங்கே கடும் மழைத் தாக்குதல்களை எதிர்கொண்டு நீர்தோய்ந்த ஆடைகளுடன் ஓடாது ஒதுங்காது அவர்கள் பீடாக நடைபோட்ட தொலைவு மொத்தம் 27 கற்கள்! அத்தகைய கேடுபாடுகளால் தடுமன், இருமல், காய்ச்சல், வயிற்றுப் போக்கு ஆகிய நோய்களுக்கு இலக்கானோர் பலர். என்றாலும், அடடா, எவரும் பின்வாங்கி ஊருக்குத் திரும்ப முயலவில்லை! இப்படிப்பட்ட ஈகப்பெரும்படைப் பயணம் சீனச் செஞ்சேனையின் நீள் பயணத்தை நினைவூட்டுகிறதல்லவா? சென்னைக் கடற்கரையில் ஒன்றரை இலட்சம் மக்கள் கூடி, இரவு ஒரு மணி வரை தமிழர் பெரும்படைக்குப் பாராட்டு விழா எடுத்தனர்.

திருச்சியைப் பின்பற்றி அதே ஆகஸ்ட் மாதம் என்.பி. காளியப்பனார், எஸ்.எஸ். ஜோசப் ஆகியோரின் பொறுப்பில் கோவை மாவட்டத் தமிழர் படை என்ற பெயரில் அணியொன்று உருவாகி, அம்மாவட்டம் முழுவதிலும் உள்ள அனைத்துப் பகுதிகளிலும் சுற்றுப் பயணம் செய்து, மக்களிடையே விழிப்பை யுண்டு பண்ணுவதில் வெற்றி கண்டது!

நம் கற்பனைக் கண்களால் இக்காட்சிகளை நோக்கினால் மெய்ச்சிலிர்ப்பு உண்டாவது உறுதி.

மகளிர் உள்ளங்களில் நீறுபூத்த நெருப்புக் கங்காக உறைந்து கிடந்த மொழிப்பற்றினைத் தந்தை பெரியாரவர்களின் அன்பழைப்பு களன்றெரியும் பிழம்பாய் மாற்றிவிட்டது. விளைவாக மாநாடு முடிந்த மறுநாளே மகளிர் குலம் மறியல் களத்தில் வீரம் பொங்க இறங்கிவிட்டனர்!

நான் 14-11-1938 'புறநானூ'ற்றை மீண்டும் படைத்துக் காட்டுவதற்காகப் புயலெனப் புறப்பட்டனர் தலைமைப் பண்பு வாய்ந்த தமிழ்ப் பெண்மணிகள் அரசியலில் புகழ் படைத்த மருத்துவர் தருமாம்பாள், தன்மான இயக்க முன்னோடி மூவலூர் இராமாமிர்தம், பாவலர் பாலசுந்தரத்தின் துணைவியார் பட்டம்மாள், தமிழ்ப் புலவர் மயிலை முதத்துக்குமாரசாமியாரின் தமக்கையார் மலர்முகம், மூன்று ஆண்டு அகவைச் செல்வி மங்கையர்க்கரசி, ஓராண்டுக் கைக்குழந்தை நச்சினார்க்கினியன் இருவருடன் - தருமாம்மாள் அவர்களின் மருமகள் - சீதம்மாள் ஆகிய களங்காணும் மகளிர் மணிகள் தமிழ்க்கொடி அச்சிடப்பட்ட ஆடையணிந்தவராய், பல்லாயிரம் தமிழ்ப் பெருமக்கள் பின் தொடர "வாரீர் தமிழ்ப்பெண்காள்!" என்னும் பண்ணை இசைத்துக்கொண்டு நடைபோட்டு மறியல் களமாகிய இந்து தியோலாஜிகல் பள்ளிக்கு முன் சென்று நின்றனர்.

உடனே அங்கிருந்த காவல்துறை ஆய்வாளர், "இவ்விடம் விட்டு நீங்கள் போய் விடுங்கள்!" என்று கூவ, தாய்மார்கள் "முடியாது" என்று உறுதியாக மறுக்க, "அப்படியானால் சிறைச்சாலை உங்களை அழைக்கும்" என்று அதிகாரி மிரட்ட, "அதற்குத்தானே நாங்கள் காத்திருக்கிறோம்" என்று தாய்மார்கள் அஞ்சாமல் கூற, சிறார்களுடன் அய்வரும் பழநியப்பா, பிஸ்மில்லாசாகிப் என்னும் ஆண் தொண்டர்களும் கைது செய்யப்பெற்று, வழக்கு மன்றத்திற்கு இட்டுச் செல்லப்பட்டார்கள். அப்போது எழுந்த வாழ்த்தொலிகள் அந்நிலப்பகுதியையே அதிர வைத்தன!

வழக்கு மன்ற நடுவர் வெங்கடராமய்யர் விடுத்த வினாக்களுக்கு வீராங்கனைகள் இறுத்த விடைகள் நம்மை மலைப்பிலும் பெருமித்திலும் ஆழ்த்துபவை!

"இப்பொழுதும் கூறுகின்றோம். இந்தி ஒழியும் வரை இதே போல் கூச்சல் போடத்தான் செய்வோம்!"

"நாங்கள் எங்கள் உரிமைக்காகப் பாடுகிறோம். இதற்குக் கூட இந்த அரசாங்கத்தில் இடமில்லை என்றால் நாங்கள் எப்படி வாழ்வது?"

"தமிழ்நாட்டில் தமிழ்தான் தழைக்க வேண்டும்"

"தமிழ் வாழ்க! இந்தி ஒழிக! இதுதான் எங்கள் குறிக்கோள்"

"எங்கட்கு இந்தி கட்டாயப் பாடமாக இருக்கக் கூடாது"

"இந்தியை யார் விரும்புகிறார்கள் என்பதை 'ஓட்'டுக்கு விடச் செய்யுங்கள்"

"எங்களுக்கு எல்லாருடைய வீடுகளும் சரியாகத் தெரியாது. தாங்கள் ஒரு பட்டியல் கொடுத்தால் வீடுகளுக்குச் செல்லுகிறோம்."

"இங்கு வந்திருக்கும் ஆயிரக்கணக்கான மக்களும் எங்கள் சாட்சிகளே!"

இப்படியெல்லாம் நம் முந்தையராகிய மூதாட்டிகள் மாறி மாறிக் கூறித் தம் அஞ்சாமையை நிலைநாட்டினர். இறுதியாக, இனி இப்படிச் செய்ய மாட்டோம் என்று உறுதி கூறினால் மன்னிப்புக் கிட்டும்" என்று தெரிவிக்கப்பட்ட போது, "அதற்காக இங்கு நாங்கள் வரவில்லை. எங்கள் தாய்மொழியை வேண்டாமென்று சொல்லச் சொல்லுகிறீர்களா? அது முடியாது. தவறு செய்தாலல்லவா மன்னிப்புக் கேட்க வேண்டும்? நாங்கள் ஒரு தவறும் செய்யவில்லையே! தாய்மொழிக்காகப் போராடினோம்" என்று வெடித்தனர் வீரப் பெண்மணிகள்!

தமிழன் தொடுத்த போர் என்று உயர்வாகப் பாராட்டப்படும் அந்த இந்தி மறுப்பு அறவழிக் கிளர்ச்சியின் தலையாய - உச்சநிலைக் கட்டங்கள் என்பவை இரண்டு. முதன்மையானது தந்தை பெரியாரவர்கள் சிறைக்கு அனுப்பப்பட்டமை. மற்றொன்று நடராசன், தாளமுத்து என்னும் இரண்டு இந்தி எதிர்ப்பு மறவர்கள் இறந்து பட்டமை!

## தனித்தன்மை படைத்த பெரியார்!

தமிழ் மக்களின் மொழிவுணர்வு வெளிப்பாட்டின் வெப்பக் கடுமையைத் தாங்கிக் கொள்ள முடியாத ஆச்சாரியார் அரசு வெறுப்பு மேலிட்டு, பெரியார் மீது பாய்ந்தது. தூண்டிவிடல் என்று குற்றஞ் சாட்டப்பட்ட பெரியாரைச் சிவப்புப் படைத் தொண்டர்படை அணிவகுப்புடன் பல்லாயிரக் கணக்கான சென்னை மக்கள் முறைமன்றத்திற்கு அழைத்து வந்தனர். 5,6-12-1938 ஆகிய இரு நாள்களிலும் வழக்கு நடந்தது. தீர்ப்பாளரை நோக்கி "தாங்கள் பார்ப்பனர் திருப்தியடையும் வண்ணம் அல்லது மந்திரிமார்கள் திருப்தி அடையும் வண்ணம் எவ்வளவு அதிக தண்டனையைக் கொடுக்க முடியுமோ அவைகளையும் எவ்வளவு தாழ்ந்த வகுப்பு கொடுக்க உண்டோ அதையும் கொடுத்து, இவ்வழக்கு விசாரணை நாடகத்தை முடித்து விடும்படி விளக்கமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்றார் எதிலும் தனித்தன்மை படைத்த பெரியார்.

இரண்டு குற்றங்கள் பெரியாரால் நிகழ்த்தப்பட்டதாக உறுதி செய்து, ஒவ்வொரு குற்றத்திற்கும் ஒவ்வோர் ஆண்டு கடுங்காவலும் ஓராயிரம் ரூபாய் ஒறுப்புத் தொகையும் கட்டளையிட்டுத் தீர்ப்பளித்தார் குற்றவியல் நடுவர். ஒறுப்புக் கட்டணம் செலுத்தவில்லையென்றால் ஆறு ஆறு மாதம் கூடுதலாகக் கடுங்காவலில் இருக்க வேண்டுமென்றும், மூன்றாண்டுக் கடுங்காவலை ஒன்றரை ஆண்டுகளில் ஏற்று முடிக்க வேண்டும் என்பது தீர்ப்பின் விரிவு.

காலை 10 மணி முதல் பிற்பகல் 4 வரை உணவையும் துறந்து சாலையில் அமர்ந்திருந்த பல்லாயிரக்கணக்கான மக்கள் தீர்ப்பினைக் கேட்டு, "இதை நாங்கள் ஒப்ப மாட்டோம், ஒப்பமாட்டோம்!" என்று கொந்தளித்துக் குமுறினர்.

"முதுமைப் பருவம்! காவல்! கடுங்காவல்! இந்நிலையை உன்ன உன்ன உள்ளம் குழைகிறது. நண்பரே! நாயக்கரே! தள்ளாத வயதில் சிறை புகுந்து இருக்கிறீர்! உம் வயது - உடல்நிலை - முதலியவற்றை நினைத்து முதலமைச்சர் நும்மை விடுதலை செய்வாரென்று எதிர்பார்க்கிறோம்" என்று உருகினார் தமிழ்த்தென்றல் திரு.வி.க.

'அவரிடம் உயர்ந்த குணங்களும் சிறந்த ஆற்றல்களும் உண்டு என்பது வெளிப்படை. அவருடைய ஆப்த நண்பர் இராசகோபாலாச்சாரியார் பிரதம மந்திரியாய் இருக்குங் காலத்தில் அவர் சிறைபுக நேர்ந்ததை 'விதியின் விளையாட்டு' என்றுதான் சொல்ல வேண்டும்!" என்று ஆனந்த இதழ், "காட்டுவிலங்காண்டி நடத்துகை" (Barbaroas treatment) என்று குறிப்பிட்டது.

'பம்பாய் செண்டினல்' ஏடு, "நாயக்கர் எந்தச் சட்டத்தை யாவது மீறினாரா? பின் எதற்காக இந்த மிகப் பெரும் கொடுமையான ஒறுத்தல்?" என வினவிற்று.

இன்னும் பூனா 'இதவாதா,' கல்கத்தா ஸ்டார் ஆஃப் இந்தியா', 'அமிர்த பஜார்', 'டெய்லி எக்ஸ்ப்ரெஸ்', அலகாபாத் 'லீடர்', நாகபுரி 'மராட்டா' முதலிய ஏடுகளெல்லாம், "இது அடாத தீர்ப்பு!" என்று வெளிப்படையாகக் கண்டித்தன.

மொழிப் போராட்ட வரலாற்றில் தனிச் சிறப்பாகக் குறிப்பிடப்படவேண்டிய தகுதி படைத்தது மகளிரின் அரிய பங்காகும். ஒரு கட்டம் வரையிலும் பொதுக் கூட்டங்களிலும் மாநாடுகளிலும் வெறும் பார்வையாளராகவே கலந்து கொண்டு

வந்தனர். தமிழகப் பெண்மணிகள். திடீரெனக் கிளர்ச்சி நடவடிக்கைகளில் நேரடியாகப் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்ற அவர்களுக்குப் படவே, தமிழ்நாட்டுப் பெண்கள் மாநாடு என்ற ஒன்று சென்னையில் ஏற்பாடு செய்யப்பட்டது.

மாநாட்டு நாளாகிய 13-11-38 அன்று நடுப்பகலில் புறப்பட்ட ஆயிரமாயிரம் பெண்களும் அவர்களைப் பாராட்டித் தொடரும் ஆயிரக்கணக்கான ஆடவர்களம் அணிவகுத்த எழுச்சி ஊர்வலத்தில் பெண்ணுரிமைக் காவலரும் தமிழர் தந்தையுமான பெரியார்.

சிறுமியர், இளம் பெண்கள், தாய்மார்கள், மூதாட்டிகள் என அத்தனை வகை வீராங்களைகளும் மொழிக்காப்பு ஒலி முழக்கங்கள் இட்டுக்கொண்டும் பாரதிதாசனின் மொழிப்பற்றுப் பாடல் வரிகளை இசைத்துக் கொண்டும் நடைபோட்ட காட்சி அதற்கு முன்னர் இந்நாடு பார்த்திராத ஒன்று.

சென்னை-ஒற்றைவாடை நாடக அரங்கில் மாநாடு நடந்தது. மீனாம்பாள் சிவராஜ், பண்டிகை நாராயணி, தாமரைக் கண்ணி, மறைமலை அடிகளாரின் செல்வி நீலாம்பிகை, பார்வதி, பண்டிதை கண்ணம்மாள், கலைமகள், மூவலூர் இராமமிர்தம், கமலாம்பாள், மலர்முகம், அண்ணாவின் துணைவியார் இராணி ஆகிய அம்மையார்களும் குஞ்சிதமணி நீலாயதாட்சி என்னும் சிறுமியும் மாநாட்டு நடவடிக்கைகளில் பங்கேற்றனர்.

"தமிழ்ச்சொல் ஒன்றனுக்கு மாற்றாக அயல்மொழிச் சொல்லொன்று வழக்குப் பெற்றால் அத்தமிழ்ச்சொல் வழக்கற்றுப் போகுமென்று உணர்வதற்கு மொழி நூல் புலமை வேண்டியதில்லை; வெறும் பகுத்தறிவு இருந்தால் போதும். எத்தனையோ அழகான பொருட்செறிவுள்ள தமிழ்ச் சொற்கள் - அய்யோ!- இறந்து போய் விட்டன".

"தமிழ்ப் பிள்ளைகளுக்குத் தாய்மொழியாகிய தமிழையே இன்னும் கட்டாயப் பாடமாக வைக்காத நிலையில் அயல்நாட்டு மொழியாகிய இந்தியைக் கட்டாயப் பாடமாக்கலாமா?"

"ஒரு நாட்டு மொழியை இன்னொரு நாட்டவர் கட்டாயமாகப் படிக்க வேண்டுமென்பது வீணான முடிபாகும்"

"தமிழ் செழிப்பில்லாத மொழியா? வடமொழி போல் பேசமுடியாமல் இறந்துபட்ட மொழியா?"

"இது கண்டு பொறாது நீங்கள் சீறி எழுந்தால் . . . . . . ?"

இத்தகைய கருத்துகள் தாய்மார்களால் சீற்றத்தோடு வெளியிடப்பட்டன.

பெண்களாலேயே முன் மொழியப்பட்டு அவர்களாலேயே நிறைவேற்றப் பட்ட தீர்மானங்களில், சொல்லிலும் எழுத்திலும் அய்யாவைக் குறிக்கும் சிறப்புப் பெயராகப் பெரியார் என்பதையே வழங்கி வரவேண்டும் என்பதுவும், தமிழ்நாட்டின் எல்லாப் பள்ளிகளிலும் தமிழ்மொழியைக் கட்டாயப் பாடமாக்க வேண்டும் என்பதுவும் தலையாயவை.

இறுதியில் பெரியார், "தமிழ் மொழிக்குற்ற இடையூற்றைக் களைந்தெறிய வாருங்கள், தமிழ்நாடு உங்களை அழைக்கிறது!" என்று தாய்க்குலத்தை உரிமையோடு அழைத்தார்.

சவுக்காரப்பேட்டை 'இந்து' - பள்ளியின் முன்பு அறமறியல் தொடங்குவதற்கு இரண்டு நாள் முன்னரே முதலமைச்சர் வீட்டின் முன் தொடங்கிய மறியல் திட்டம் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. பொதுவான இடத்தில் மறியல் ஏற்பாடு பண்ணப் பட்டுவிட்டதால் தனிப்பட்ட முறையில் முதல்வர் இல்லத்தின் முன் மறியலை நிறுத்திவிடலாம் என்று தந்தை பெரியார் கேட்டுக் கொண்டதற்கிணங்க, அம் மூன்றரை மாத மறியல் நடவடிக்கை 16-9-38 அன்று விலக்கிக் கொள்ளப்பட்டு விட்டது.

அதற்கு மறு நன்றியாக ஆச்சாரியார் என்ன செய்தார், தெரியுமா? பெரியாரையே சிறைப்பிடித்து, சென்னையிலிருந்து பெல்லாரிக்கு அனுப்பி வைத்து விட்டார் அவரை. இந்த இடத்தில், "இந்தியை எதிர்ப்போரை யெல்லாம் 'ராஜதுவேஷ'க் குற்றம் சுமத்தி, ஆயுள் தண்டனை வழங்கிச் சிறைக் கொட்டடிக்குள் வதிய வைக்க வேண்டும்" என்று 'நல்ல எண்ணம்' வெளியிட்டார் தீவிர தேசபக்தர் 'சத்தியமூர்த்தி அய்யர் என்பதைக் குறிப்பிடுதல் பொருந்தும்.

என்றாலும் சத்தியமூர்த்தியாரின் பரிந்துரையை அரசு நடப்பாக்க முடியவில்லை என்பது மட்டுமன்று; தீர்ப்பளிக்கப் பட்டபடி ஒன்றரை ஆண்டுக் காலம் முடியுமட்டும் பெரியாரைச் சிறையில் அடைத்து வைத்திருக்கவே இயலவில்லை அரசுக்கு. குமுறலும் சீற்றமும் கொண்ட மக்களின் எழுச்சி நடவடிக்கைகளின் முன்னால் அரசு பணிந்து தீரவேண்டியிருந்தது. உடல் நலக் குறைவுக்குள்ளாகி, 24 பவுண்டு அதாவது தனது முந்திய எடையில் 15 விழுக்காடு குறைந்து விட்ட நிலையில், 167நாள் சிறைவாழ்வுக்குப் பின் 22-5-1939 அன்று பெரியார் விடுவிக்கப்பட்டார்.

வெளியே வந்த பெரியார், "நான் எதற்காகச் சிறை புகுந்தேனோ, அது வெற்றியடைந்து விட்டதா? என்னுடன் சிறை சென்ற தமிழர்களை இங்கே பார்க்க முடியவில்லையே! இந்தி ஒழிய வேண்டும். இல்லையேல் தமிழர் சிறையில் மடிய வேண்டும்" என ஓங்கி ஒலித்துவிட்டு, மேலும் மக்களைத் திரட்டத் தமிழகச் சுற்றுப்பயணம் கிளம்பினார். சிறை மீண்டு வந்த இனத் தலைவரைத் தமிழக மக்கள் இன்பம் பொங்க வரவேற்றனர். மொழிப் போர் நடவடிக்கைகளுக்காக வட்டாரந்தோறும்அவரிடம் பணமுடிப்பு வழங்கினர்.

கோடை விடுமுறைக்குப் பின் அறவழி மறியல் முன்னிலும் முனைப்பாகத் தொடரப்பட்டது. இந்தித் திணிப்பை விலக்கிக் கொள்ள முடியாதென உறுதியாக நின்ற ஆச்சாரியாரின் அரசுக்கு இறுதி நேர்ந்து, 27-10-39 அன்று ஆச்சாரியார் பதவியிலிருந்து விலகிக் கொள்ளலானார். ஆட்சிப் பொறுப்பினை ஏற்றுக் கொள்ளுமாறு வெள்ளைய ஆளுநர் தந்தை பெரியாரைக் கேட்க, அதற்கு இசைய உறுதியாக மறுத்து விட்டு, அறப்போரினை மட்டும் தற்காலிகமாக நிறுத்தி வைத்தார்.

அவ்வளவுதான். ஒரேயொரு நாள் இடைவெளியில் 21-2-'40 அன்று இந்தியினை விரட்டித் தள்ளும் அறிக்கையை ஆளுநரின் அரசு வெளியிட்டது. "கட்டாய இந்தி முறை பொதுமக்களில் பெரும்பாலோரிடையே எதிர்ப்பையும் அதிருப்தியையும் விளைத்திருக்கின்றது. முதல் மூன்று படிவங்களில் தேர்வு எதுவுமில்லாமல் இந்தியைக் கட்டாயப் பாடமாக மட்டும் கற்றுக் கொடுப்பதால் மாணவர்களுக்கு அந்த மொழியில் போதிய அறிவோ திறமையோ ஏற்படாதென அரசுக்குத் தோன்றுகிறது. ஆகவே அரசியலார் இந்திக் கட்டாயத்தை உடனடியாக எடுத்து விடுவதென முடிவு செய்து விட்டனர்" என்றது அரசின் அறிக்கை.

கட்டாய இந்தி தொலைந்தமை பற்றித் தமிழினமே கொண்டாடிக் களித்தது! பம்பாய், நாகபுரி போன்ற வடபுலத்து ஊர்களிலிருந்து வெளியான இதழ்களுங்கூட அரசின் முடிவை வரவேற்று எழுதின. களச்சாவுப் புகழெய்திய நடராசனின் தந்தையார், "என் மகனை இழந்த கொடுந்துயரம் இந்தி ஒழிந்ததால் விளைந்த மகிழ்ச்சியினால்தான் ஆறிற்று!" என்ற நெஞ்சை நெகிழ்த்தும் அறிக்கையினை வெளியிட்டார். வடபுல இசுலாமியத் தலைவரான மகமது அலி ஜின்னா, பெரியாரவர்களைப் பாராட்டி, "இந்தி எதிர்ப்புப் போரில் வெற்றி கண்ட தங்களுக்கு எனது உள்ளம் நிறைந்த வாழ்த்து!" என்று தொலைவரி அனுப்பினார்.

தந்தை பெரியாரவர்கள், "வெற்றி பெற்ற தமிழ்நாடே! வீர இளஞ்சிங்கங்காள்! ஒப்பற்ற தாய்மாரே! உங்களுக்கெல்லாம் எம் வாழ்த்து!" என்று இன்பக் கண்ணீர் பெருக்கினார்.

தமிழன் தொடுத்த போர், வரலாற்றில் தனிப்பெருமை ஈட்டியது. அதுபற்றி 22-2-1949இல் 'விடுதலை'யில் வெளிவந்த ஆசிரியவுரை புகழ்வாய்ந்த ஒன்றாகும். 'தமிழா, கேள்' எனும் அவ்வாசிரியவுரையின் சில பகுதிகள்:

"கொட்டுவீர்! கொட்டுவீர்! வெற்றி முரசு கொட்டுவீர்! தமிழர்காள், பாகை நிமிர்த்தி வாகை சூடி வாருங்கள் வெற்றி விழாவிற்கு, வந்தது நமது உழைப்பின் உறுபயன்! கண்டோம் கடும்போரின் வெற்றியை!

"மகனை, மகளை விட்டுப் பிரிந்து சிறை சென்ற தாய்மார்களும் தகப்பன் மார்களும் எவ்வளவு! அந்த இரும்புக் கம்பிகளுக்குப் பின்னால் இளமையையும் இளமைக்குண்டான இன்ப உரிமைகளையுங் கூட மறந்து ஏதேதோ எண்ணி வாடிய இளைஞர்கள் எத்தனை பேர்! வானத்தில் மிளிரும் விண்மீனை மாதக்கணக்கில் காணாமல், நீலநிற வானத்தின் நிலவொளியைக் காணாது, நெஞ்சில் உறுதியுடன், 'நடக்கட்டும் போர், நாம் இருப்பதும் இறப்பதும் ஒன்றே' எனச் சிறையில் வாழ்ந்தவர் எவ்வளவு பேர்! நெல்லுக்குத்திய கைகளும் கல்லுடைத்த கரங்களும், அங்கு அடிமைபோல் நின்று அசைந்த தலைகளும் எவ்வளவு!

"இவ்வளவுக்கும் பிறகு பிறந்தது புதிய உத்தரவு; கட்டாய இந்தி ஒழிந்தது!

"தமிழர் முகமெல்லாம் மலர்கிறது. தமிழர் தலைநிமிர்ந்து நடமாடுகின்றனர். களிப்பு கண்களின் ஒளி மூலமும் நடையின் அழகு மூலமும் வாழ்த்தொலி மூலமும் வருகிறது! பரவுகிறது! பூரிக்கின்றனர் தமிழர்.

"இன்னமும் போர் உண்டோ? உண்டு. தமிழ்நாடு தமிழருக்காகும் வரையில் நாம் போரிட்டுத்தான் தீர வேண்டும்."

இவ்வண்ணம் தமிழினத்தின் மொழி மான வரலாற்றின் தொடக்கப் பகுதி நிறைவுக்கு வந்தது.

தமிழன் தொடுத்த மொழிப்போரில் சிறைக் கொடுமைகளைச் சிரித்த முகத்துடன் ஏற்றுக் கொண்ட ஆயிரக்கணக்கான மறவர் - மறத்திகளில் தங்களின் இன்னுயிரையே ஈந்துவிட்டவர்கள் இரண்டு பேர். நடராசன், தாளமுத்து என்னும் அவ்விருவர்தாம் இந்தி எதிர்ப்பு

வரலாற்றில் மட்டுமின்றி திராவிடர் இயக்க வரலாற்றிலே முதன்முதலாகக் களச்சாவுக்கு இலக்கான இனமான வீரர்கள்.

சென்னையைச் சேர்ந்த நடராசன் மணமாகாத இளைஞன். சிறை வாழ்வின் போது பல கேடுகளால் அவரின் முகத்தில் கொப்பளங்கள் உருவாயின; விளைவாக முகம் பெரிதாக வீக்க மெடுத்தது; படுக்கையில் வீழ்ந்தார் நடராசன்!" மன்னிப்புக்கேட்டுக் கொண்டால் விடுதலை கிட்டும்'' என்றனர் அதிகாரிகள். சிறைக்கண்காணிகளோ பணம் உட்படப் பலவகை ஆசைகள் காட்டினர். நடுங்கா உள்ளம் படைத்த நடராசன், "மன்னிப்பா? பணமா? மடிவேனே தவிர, மானத்தை இழக்க மாட்டேன்" என்று சாவுப் படுக்கையிலும் உறுதி காட்டினார். சென்னைப் பொது மருத்துவமனையில் 16 நாள்கள் கிடத்தப்பட்டிருந்தாலும் அவர் 15-1-39 அன்று இயற்கையைத் தழுவத்தான் நேர்ந்தது. பெற்றோருக்கு ஒரே பிள்ளையாய் வாய்த்த நடராசனின் இறுதி ஊர்வலம் கண்டோர் நெஞ்சைக் கசக்கி யெடுப்பதாய் பத்தாயிரம் பேர் கொண்டு அமைந்தது. கொடுமை அத்துடன் முடியவில்லை.

நடராசனின் மறைவு பற்றிச் சென்னைச் சட்டப் பேரவையில் கேள்வி கிளம்பியது. "படிப்பறிவில்லாத தற்குறியாக இருந்ததால் நடராசன் என்ற அரிஜன் இறந்தார்'' என்று கூசாமல் விடை செப்பினார் முதல்வர் ஆச்சாரியார். "கல்லாத காரணத்தால்தான் நடராசன் இறந்துபட்டாரா?" என்று வினவினார் கேள்வி எழுப்பிய அப்துல் அமீர்கான். அதற்கு ஆச்சாரியார் அளித்த விளக்கம் வேடிக்கையாகவும் விந்தையாகவும் இருந்தது!" படிப்பறிவில்லாததால் தான் நடராசன் இந்தி எதிர்ப்பு மறியலில் கலந்து கொள்ள முன் வந்தார். மறியலில் பங்கேற்ற அவர் சிறைப்பட்டு அங்கு இறக்க நேர்ந்தது" என்றார் முதல்வர். இதை அறிந்த நடராசனின் தந்தைக்குத் தூக்கிவாரிப் போட்டது! "என் மகன் படித்தவன் அவன் எழுதிய மடல்கள் எம்மிடம் உள்ளன. இதோ அவன் படித்த மாநகராட்சிப் பள்ளிச் சான்றிதழ்" என்று பதைப்புடன் அறிக்கையிட்டார் அவர்.

தாளமுத்து குடந்தையிலிருந்து இந்தி எதிர்ப்பு மறியலில் பங்கேற்க வந்தவர். முன்னதாகச் சாக்கோட்டையில் நடந்த சுயமரியாதை மாநாட்டில், "இந்தப் பகுதியைச் சார்ந்த தமிழ்ப் பழங்குடி மக்கள் இந்தி எதிர்ப்புப் போரில் நிறையப் பங்கேற்க வேண்டும். ஆனால் அறப்போருக்கு வருவோரைத் திருப்பிக் கொடுப்பதாக உறுதி கூற முடியாது" என்று அண்ணா அவர்கள் பேசியதைக் கேட்டு விட்டுத்தான் அவர் சென்னைக்குக் கிளம்பினார். நடராசனைப் போல மணமாகாதவரல்லர் தாளமுத்து. இளம்

மனைவியிடமும் பெற்றோரிடமும் விடைபெற்றுப் போர் முகம் நோக்கிப் புறப்பட்ட அவர் ஊருக்குத் திரும்பவே யில்லை! ஆச்சாரியார் ஆட்சி 12-3-1939 அன்று அவரை மாய்த்து விட்டது.

இளமையான மனைவியும் முதுமையான பெற்றோரும் அவலத்தின் எல்லையை அடைந்து துடிதுடிக்க, பல்லாயிரம் தமிழ் மக்கள் பங்கேற்க, சென்னையில் தாளமுத்துவின் இறுதி ஊர்வலம் நடந்தது. நடராசனின் கல்லறையின் அருகிலேயே தாளமுத்து உடலும் அடக்கம் செய்யப்பட்டபின் நிகழ்ந்த இரங்கல் கூட்டத்தில் அண்ணா, "விடுதலையுற்ற தமிழகத்தில் பெரியார் சிலை நடுவாக இருக்க, தாளமுத்து, நடராசன் என்னும் இருமணிகள் சிலைகள் இருபக்கங்களிலும் எழுப்பப்படும்" என்றார்.

ஆச்சாரியார் ஆட்சி முடிவுற்ற இரு கிழமைக்குள் மொழிப்போர் வீரர்கள் அனைவரும் சிறைக் கொட்டடி வாழ்விலிருந்து விடுவிக்கப்பட்டனர்.

தொடர்திட்டமாக 1939-40ஆம் கல்வியாண்டில் மேலும் 100 பள்ளிகளில் இந்திமொழி கற்பிக்கப்படும் என்பதாகப் போடப்பட்டிருந்த ஆச்சாரியாரின் அரசாணை தள்ளுபடி செய்யப்பட்டது. எனினும் இந்திப் படிப்பை அறிமுகம் செய்த ஆச்சாரியாரின் மூல ஆணை வெள்ளைக்கார ஆளுநரால் சில நடைமுறைச் சிக்கல்களின் பொருட்டு தள்ளுபடி செய்யப்படாமல் இருந்தது.

அக்கட்டத்தில் நாடு முழுவதும் 3-12-1939 அன்று இந்தி எதிர்ப்பு நாள் கூட்டம் நடத்தப்படவேண்டும் என்று பெரியார் அறிவித்ததை ஏற்று, தமிழகத்தின் சிற்றூர்-பேரூர்கள் அனைத்திலும் மக்கள் இந்தி எதிர்ப்பு நாள் நிகழ்ச்சிகள் நடத்தினர். அதுபோலவே அடுத்த கிழமை 'தமிழ்நாடு தமிழர்க்கே! நாள் கொண்டாட்டம் பெற வேண்டும். என்று தந்தை பெரியார் கேட்டுக் கொண்டதற்கிணங்க தமிழ்ப் பெருமக்கள் 10-12-39 அன்று கொண்டாடி, "தமிழ்நாடு தமிழர்க்கே!" என ஒலி முழக்கம் செய்தனர். தொடர்ந்து, அடுத்த கிழமை 18-12-'39 அன்று இனமான உணர்வோடு தமிழினம் தந்தை பெரியார் பிறந்த நாள் விழா வெடுத்து நன்றி பாராட்டியது. இம்மூன்று விழாக்களின் விளைவாகத் தமிழ்க்குடி மக்களின் நாட்டு - மொழியுணர்வு பொங்கிப் பெருகியது.

அந்தச் சூழ்நிலையில் காஞ்சியில் 31-12-1939 அன்று ஏ.டி. பன்னீர்ச்செல்வம் அவர்களின் தலைமையில் பாசறைக் கூட்டம்

நடந்தது. பெரியார், அண்ணா, சர்வாதிகாரிகளாகப் பொறுப்பாற்றியோர் ஆகியோர் பங்கேற்ற அக்கூட்டத்தில், கட்டாய இந்தித் திட்டம் தொலையாதவரை திராவிட நாட்டில் தமிழ் மக்களுக்கு நிலையான அமைதியும் மனநிறைவும் ஏற்பட முடியாதென்பதை அரசியலார்க்கு அறிவிக்கும் தீர்மானம் நிறைவேறியது.

அதனையொட்டி 2-1-1940இல், "கவர்னர் ஆட்சியினர் தமிழரின் மனப்புண்ணை ஆற்ற முன் வருகிறார்களா? அல்லது மறுமுறை தமிழரைப் போருக்கு அழைக்கிறார்களா?" என்று கடுமையாகக் கேட்டது 'விடுதலை'.

பம்பாயில் வாழ்ந்த தமிழினப் பெருங்குடி மக்களின் கோரிக்கையை நிறைவேற்றி வைக்கும் நல்லுணர்வோடு தந்தை பெரியார் தம் குழுவினருடன் மராட்டியத் தலைநகரத்திற்கு 5-1-40இல் பயணமானார். அங்கு நிகழ்ச்சிகளை முடித்துக் கொண்டு ஒரு கிழமைக்குப் பின் தாயகம் திரும்பியவுடன், "பொறுத்தது போதும், போர் தொடுப்போம்!" என்று அறை கூவிய பெரியார், திருச்சி, மதுரை, வடஆர்க்காடு, நெல்லை ஆகிய மாவட்டங்களுக்குச் சென்று மக்களின் உணர்வுகளைப் புரிந்து கொண்டு சென்னை திரும்பி 19-2-40 அன்று கோகலே மன்றத்தில் "இதுவே இறுதி எச்சரிக்கை, இனிப் பேச்சில்லை!" என்று அறுதியிட்டார்.

இவ்வண்ணம் 1938இல் தொடங்கி 40இல் நிறைவுற்ற இந்தி எதிர்ப்பு அறப்போராட்டத்தின் அனைத்துச் செய்திகளையும் விரிவாக அச்சிட்டு, கண்களின் முன்னே தெரியும் காட்சிகள் என்னும் அளவிற்குத் தமிழ் மக்கட்கு 'விடுதலை' நாளிதழ் வழங்கியதால்- அவ்விதழ் மட்டுமே வழங்கியதால் பல்லாயிரக்கணக்கானோர் பரபரப்போடு 'விடுதலை' வாங்கி, பல்வகை எதிர்பார்ப்புடன் படிக்கும் வாடிக்கை தோன்றியது. மேலும் அக்காலக்கட்டத்தில் அறிஞர் அண்ணா தாம் எய்திய அகலமான ஆங்கிலப் படிப்பின் ஆழமான புலமையின் துணை கொண்டு படைத்துக் காட்டிய புதுமைத் தமிழ்நடை 'விடுதலை'யை அணி செய்ததால், 'விடுதலை' படிக்கும் வேணவாவினால் தமிழ் மக்கள் தாக்குண்டனர்.

'விடுதலை' எந்த அளவிற்கு மக்களிடையே புழங்கியது என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு:

"தமிழ் மக்களே!" "இந்தி வந்தால் அடிமை வாழ்வை அடைவோம்", "தமிழ் நாட்டவர்களே!" என்னும் கட்டுரைகள்

'விடுதலை'யில் முறையே 19-8-'38, 27-8-'38, 30-8-'38 ஆகிய நாள்களில் வெளியாயின. அக்கட்டுரைகளை வெளியிட்டமையைக் குற்றப்படுத்தி, 'விடுதலை'யின் மீது ஆச்சாரியார் அரசு வழக்குத் தொடர்ந்தது.

வழக்காடலின் போது அரசு வழக்குரைஞர் கேட்ட வினாவிற்கு விடையளிக்கும் முறையில், குற்றப் புலனாய்வுத் துறை ஆய்வாளர் திரு. அய்யாசாமி (நாயுடு) "இம்மாகாணத்திலேயே 'விடுதலை' அதிகமாகச் செலவாகின்றது. அது ஸ்டால்களிலும், மோட்டார் ஸ்டாண்டுகளிலும் தெருக்களிலும் அதிகமாக விற்பனையாகிறது" என்றார்.

தொடர்ந்து அவரைத் துணை ஆட்சியர் உசாவிய போதும், "இம்மாகாணத்திலேயே 'விடுதலை' பிரதிகள் தாம் ஸ்டால்களிலும் தெருக்களிலும் மோட்டார் ஸ்டாண்டுகளிலும் மற்ற பத்திரிகைகளை விட அதிகமாக விலையாகின்றன" என்றே கூறினார்.

'விடுதலை' படிக்கும் ஆர்வம் தமிழர்களிடையே மேலோங்கி யிருந்தது என்பதை இக்கூற்றுகள் உறுதிப்படுத்துகின்றன.

"தமிழ்நாடு தமிழருக்கே!" என்னும் உரிமை முழக்கத்தையும், பெரியார் பெல்லாரிச் சிறையிலிருந்து திரும்பிய பிறகு சிந்தனையாக, "திராவிட நாடு திராவிடருக்கே!" என்னும் திருத்தம் பெற்ற உரிமை முழக்கத்தையும் 'விடுதலை' மக்களிடையே பரப்பிப் பேரெழுச்சியை உருவாக்கி இந்தி எதிர்ப்பு இயக்கத்தை வெற்றி முகட்டுக்கு இட்டுச் செல்ல முடிந்தது.

"இத்துணை பெரிய இயக்கத்திற்கு இருந்த தினசரி எல்லாம் ஒன்றே ஒன்றுதான். 'விடுதலை' அதன் பெயர். அந்த ஒரு 'விடுதலை' எத்துணை பெரிய இயக்கத்தை எத்துணை விரைவில் எத்துணை எளிதாக வெற்றிபுரிக்குச்சேர்த்து விட்டது! அதுவும் எத்தனை எத்தனை ஆரிய ஏடுகளின் மறைத்தல் - திரித்தல் பிரசாரத்திற் கிடையே" என்பதாக அறிஞர் மா. இளஞ்செழியன் அவர்கள் "தமிழன் தொடுத்த போர்" எனும் இந்தி எதிர்ப்பு அறப்போராட்ட வரலாற்று நூலில் குறிப்பிட்டுள்ளமை மிகையன்று; முற்றிலும் மெய்!

# 'விடுதலை' தமிழர்களின் உயிர்!

வணிகராகவும் இதழாளராகவும் கொள்கையாளராகவும் நின்று பெரியார் 'விடுதலை'யின் நெருக்கடி நிலை பற்றி அறிக்கையிட்டதன் தொடர்ச்சியாக இதழின் ஆசிரியர்ப் பொறுப்பிலிருந்த அ. பொன்னம்பலனாரின் 'விடுதலை' முகவர் களுக்கான அறிவிப்பில் மேலும் செய்திகள் கிடைக்கின்றன.

"ஈரோட்டிலிருந்து பத்திரிகைக் காரியாலயம் சென்னைக்குச் செல்வதில் நிர்வாகச் செலவு மாதம் 500 ரூபாய் வீதம் அதிகமாகவும், அசோசியேட்டட் ராய்ட்டர் நிருபர் ஆகியவைகளுக்கு மாதம் ஒன்றுக்குக் குறைந்தது 500 ரூபாய் வீதம் அதிகமாகவும், ஆக - காகித விலை யல்லாமல் செலவு இனத்தில் மாத்திரம் மாதம் 1000 ரூபாய்க்குக் குறையாமல் அதிகப் படுகின்றது. இது தவிர இப்போது நடைமுறையில் இருக்கும் நஷ்டமும் ஈடு செய்யப்பட வேண்டியதாய் இருக்கிறது.

ஆதலால் ஏஜண்டுகள் இவற்றை உணர்ந்து நன்றாய் யோசித்துப் பார்த்து, 'விடுதலை' 8 பக்கம் வெளிநாட்டுத் தந்திச் சேதிகளுடன் 9 பைசா விலையில் 2 பைசா கமிஷன் வீதம் தங்கள் தங்கள் ஊரில் நாள் ஒன்றுக்கு எத்தனை பத்திரிகைகள் விற்கப்படக் கூடும் என்பதை, தயவு செய்து நாளையே தெரிவிக்க வேண்டுமென்று ஏஜண்டுகளை வேண்டிக் கொள்ளுகிறோம்!! ('விடுதலை' 3-9-1940)

இவ்விரு அறிக்கைகளுக்கும் பலன்கள் இருந்தன. நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து நன்கொடைத் தொகைகள் ஈரோடு 'விடுதலை' அலுவலகத்திற்கு அனுப்பப்பட்டன. அப்பெயர்ப் பட்டியல்களின் தன்மை எவருக்கும் மலைப்புண்டாக்க வல்லது.

> 'விடுதலை' பத்திரிகைக்கு யுத்தத்தின் காரணமாக (இரண்டாம் உலகப் போர்) நஷ்டம் ஏற்பட்டு வருவதையும் சென்னைக்கு கொண்டு போய்த் தந்திச் செய்திகளுடன் வெளியிட வேண்டியிருப்பதையும் குறித்து 3-9-40ஆம் தேதி ஓர் அறிக்கை வெளியிட்டிருந்தோம். அந்த அறிக்கையைப் படித்த பொள்ளாச்சித் தோழர் பி. நடராஜ் செட்டியார் மிகவும் கலங்கி, 'விடுதலை' பத்திரிகை சென்னைக்கு அவசியம் செல்ல வேண்டு மென்றும் 'விடுதலை' ஒன்றே தமிழர்களின் உயிர் என்றும் அதை நிறுத்தி விடக் கூடாதென்றும் வேண்டிக் கொண்டு, 'விடுதலை'க்கு ஏற்படும் நஷ்டத்திற்காக இன்றிலிருந்து மாதம்

*ஒரு ரூபாய் கொடுத்து வருவதாகக் கடிதம் எழுதி, ஒரு ரூபாய் நமக்கு அனுப்பி யிருக்கிறார். அதற்காக நமது மனமுவந்த வந்தனத்தைத் தோழர் நடராஜ செட்டியாருக்குத் தெரிவித்துக் கொள்வதுடன், 'விடுதலை'- பத்திரிகையானது எவ்வளவு நஷ்ட மேற்பட்டாலும் கஷ்டம் ஏற்பட்டாலும் சென்னை சென்று தந்திச் செய்திகளுடன் வெளியிடுவதென முடிவு செய்யப்பட்டு விட்டதென்றும் அதற்கான ஏற்பாடுகளும் நடந்து வருகின்றன வென்றும் அவருக்குத் தெரிவித்துக் கொள்வதுடன், அவரைப் பின்பற்றி எல்லாத் தோழர்களும் உதவி செய்ய வரவேண்டுமென வேண்டிக் கொள்கிறோம்! ('விடுதலை': 12-9-1940).*

இச்செய்தித் துண்டம் நம்முள்ளத்தில் தோற்றுவிக்கும் சிந்தனை யலைகள்தாம் எத்தனை!

*"இப்போது உடனடியாக 2 மாதத்தில் 2500 சந்தா அதிகமாகச் சேர்க்கப்பட்டு ஆக வேண்டும். ஓர் ஆண்டுக்குள் மேலும் 5000 சந்தா பெருகி ஆக வேண்டும். அது 2 மாதத்திற்கு அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்.*

*இரண்டு மாத காலம் 60 நாள்களில் 2500 சந்தா; தினம் 42 சந்தா; 12 மாவட்டங்களில் 100 வட்டங்கள்; பொதுவாக ஒரு மாவட்டத்திற்கு 200 சந்தா வீதமாகும். இதுகூட நம் கழக முயற்சிக்கு 'விடுதலை' மறுபிறப்புக்குக் கைகூடவில்லை என்றால் நம் நிலை என்ன என்பதைச் சிந்திக்க வேண்டுமென்ற இந்த வேண்டுகோளை விண்ணப்பமாகத் தமிழ்நாட்டு மக்களிடம் சமர்ப்பிக்கிறேன்" ('விடுதலை': 6-6-1964)*

இச்செய்திகள் ஓர் இதழாளர் என்னும் முறையில் அதுவும் ஒரு குறிக்கோளுடன் இன விடுதலைக்காக நடத்தப்படும் இதழின் பொறுப்பாளர் எனும் முறையில் 'விடுதலை'யின் வளர்ச்சிக்காகப் பெரியார் மேற்கொண்ட நடவடிக்கைகளை வெளிப்படுத்துகின்றன.

இரண்டாம் உலகப் போர்ச் செய்திகளை விரிவாகப் பரப்ப அன்றைய பிரிட்டிஷ் அரசுக்குத் தமிழ்த் தாளிகை யொன்று தேவைப்பட்டதால், 'விடுதலை' நாளிதழைப் பெரியார் அரசுக்கு ஒத்தி முறையில் 1943 செப்டம்பர் முதல் தந்துதவ நேர்ந்தது.

ஆனால் 'விடுதலை'யை எவ்வளவு விரைவாக முடியுமோ அவ்வளவு விரைவாக அரசிடமிருந்து திரும்பப் பெற்று, இயக்கத் தொண்டுக்காகப் பயன்படுத்த வேண்டும் என்பதில் குறியாக விருந்த பெரியாருக்கு அவரின் உடைமை 6-6-1945 அன்று மீண்டும் அவரின் உரிமையாகிவிட்டது.

திடீரென்று 'விடுதலை'யை வெளிக்கொணர வேண்டி யிருந்ததால், அது சரசாரி அளவில் அல்லாமல் - தற்காலிகமாக

'தனிப் பிரதி விலை முக்காலணா' என்று போடப்பட்டு வெளிவந்தது.

மீண்டும் 'விடுதலை' பெரியார் கைக்குக் கிடைத்து விட்ட நிலையில் 17-6-1946 அன்று துணை ஆசிரியவுரை யொன்ற இடம் பெற்றது. "விடுதலை பத்திரிகை" எனும் தலைப்பின் கீழ் வெளியாகி யிருந்தது இதுதான்:

"விடுதலை - பத்திரிகை துவக்கி ஒரு வாரத்திற்கு மேல் ஆகிவிட்டது. துவக்க நாளென்று மிஷின் அதிக தொல்லை கொடுத்தது மாத்திரமல்லாமல் பத்திரிகையும் மக்களுக்குத் திருப்தியில்லாத மாதிரியில் வந்து இருந்தது. பிறகு சிறிது சிறிதாகச் சரிப்பட்டு வருகிறது. போதிய அளவு காகித கோட்டா அனுமதி இல்லாததால் வாசகர்களின் ஆவலைத் தீர்க்கும்படியான எண்ணிக்கையும் அளவும் இல்லாமல் அதிருப்தியடையும்படி செய்ய வேண்டி இருப்பதற்கு வருந்த வேண்டி இருக்கிறது.

கூடிய சீக்கிரம் ஏதாவது ஒரு வழியில் வாசகர்கள், இயக்கத் தோழர்கள் மனங்குளிர வகை செய்ய வேண்டுமென்றே மிக்க கவலையுடன் முயற்சி செய்யப்பட்டு வருகிறதுடன் தந்திச் செய்திகளும் பிரகரிக்க முயற்சி செய்யப்பட்டு வருகிறது. எனவே 'விடுதலை' பத்திரிகையில் ஏதோ சில தகராறுகள் இருந்தாலும் பொறுத்தருளுவதுடன் வார்த்தைப் பிழை, எழுத்துப் பிழைகள் மாத்திரமல்லாமல் - சரியான கவனிப்பு இல்லாமையால் கருத்துப் பிழை நேர்ந்தாலும் பொறுத்தருள வேண்டுகிறோம்"

மிகத் தேர்ந்த இதழாளராகப் பெரியார் திகழ்ந்தார் என்பதற்கு இவ்வாசிரியக் கூற்று நல்ல எடுத்துக் காட்டு. தொடர்ந்து முயன்று 'விடுதலை'யை ஒரு பெரும் படைக்கலனாக மீண்டும் உருவாக்கி, அதன் துணை கொண்டு வெற்றி மேல் வெற்றியாகக் குவித்துக் கொண்டே இருந்தார் பெரியார்.

அவ்வெற்றிகளைப் பட்டியலிட்டு, எண்ணிக்கையைக் கணக்கிட்டுக் காட்டும் முயற்சியில் இறங்குவது தேவையற்ற ஒன்று. அமைச்சர்களும் அரசுப் பணியாற்றும் அதிகாரிகளும் அன்றாடம் 'விடுதலை' படிக்கத் தவறுவது கிடையாது. ஆயிரக்கணக்கான அன்றாடங்காய்ச்சிகளுக்கோ 'விடுதலை' அறிவூட்டும் ஆசானாக விளங்குகிறது.

# விளைந்த விந்தைகள்!

இதழாளர் என்னும் முறையில் பெரியார் பொருள் இழப்பையும் பொருட்படுத்தாமல் விடாப்பிடியாய் 'விடுதலை' நாளிதழை நடத்திக் கொண்டு வந்தமைக்கு அதனால் தமிழ் மக்களுக்குக் கிட்டிய அரும் பெரும் நன்மைகள் தாம் தலையாய அடிப்படை. பெரியாரவர்களே, "நமது 'விடுதலை' பத்திரிகை காரணமாக நாட்டில் ஏற்பட்டுள்ள மாறுதல்கள் நமது நாட்டு மக்களுக்கு இன்னமும் சரிவரத் தெரியவில்லை. நமது 'விடுதலை'யே இல்லை என்றால் இன்றைக்கு அரசாங்கமே பார்ப்பனரல்லாதார் கைக்கு வந்திருக்காது. இது ஒரு சிலருக்குத்தான் - பொறுப்புணர்ச்சியுடன் சிந்தித்துப் பார்க்கின்றவர்களுக்குத் தான் தெரியும்" என்பது அவரின் மதிப்பாய்வு.

நூற்றுக்கணக்கான அம்மாற்றங்களை இங்கே எண்ணிக்கையிட முடியாதாகையால் சிறப்பான சிலவற்றை நினைவு படுத்திக் கொள்ளலாம். ராஜகோபாலாச்சாரியார் 1938ஆம் ஆண்டில் சென்னை மாநில ஆட்சிப் பொறுப்புக்கு வந்ததும், "சரணாகதி மந்திரிசபை........ ஆம் நாள். இன்னும் எத்தனை நாள்" என்பதாக அன்றாடம் 'விடுதலை' பெட்டிச் செய்தி போட்டது மட்டுமா? அவர் பள்ளிகளில் புகுத்திய கட்டாய இந்தியை எதிர்த்து, தந்தை பெரியாரும் தமிழ்ச்சான்றோரும் நிகழ்த்திய நீண்ட அறப்போர் தொடர்பான ஆயிரக்கணக்கான செய்திகளை ஆச்சாரியார் பதவியை விட்டுச் செல்லும் வரை ஒன்று விடாமல் விரிவாகச் செய்திகளை நாட்டுக்குத் தந்தது 'விடுதலை'.

தொடர்ந்து-

தொடர் வண்டி நிலையைச் 'சிற்றுண்டிச்சாலை'களில் 'பிராமணன்' 'சூத்திரர்' என்னும் இடப்பிரிவினை நிலவிய இழிநிலை நீங்கியமை-

பார்ப்பனர்கள் நடத்தி வந்த உணவுக்கடைகளின் பெயர்ப்பலகைகளில் இடம் பெற்றிருந்த 'பிராமணாள்' எனும் வர்ணாச்சிரமப் பெயர் மறைந்தோடியமை-

ஒவ்வொரு ஆணின் பெயருக்கும் பின்னொட்டாகக் குறிக்கப்பட்டு வந்த சாதிப் பெயர் ஒழிந்து விட்டமை-

"சூத்திரச்சி, ஒத்திப்போ!" என்று நீரெடுக்க வரும் நம் பெண்ணைக் கொச்சைப்படுத்திய பார்ப்பனிகளின் அநாகரிகத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டமை-

பார்ப்பனச் சிறுவர்களைக் கூட, அல்லாதார் 'சாமி' என்று விளிப்பதும், 'பஞ்சமர்' ஏனைய ஆண்களின் முன்னிலையில் 'சாமி' என அடங்குவதும் பழங்கதையாய் ஆகி விட்டமை-

ஒவ்வொரு மாவட்டக் 'காங்கிரஸ்' தலைமைப் பொறுப்பிலும் பார்ப்பனரே இருந்த காலம் காணாமற் போய், இன்று ஒவ்வொரு கட்சியின் மாநிலத் தலைவராகப் பெரும்பாலும் அல்லாதவரே இருக்கும் விந்தை நிகழ்ந்தமை-

கலப்புத் திருமணம் செய்தோர்கள் 'சாதி கெட்டவர்கள்' என்று பழி சுமத்தப்பட்ட நாள்கள் மறைந்து, இன்று அத்தகையோர் மதிப்பிற்குரியோராக ஏற்கப்படும் சூழ்நிலை தோன்றியமை-

"இராமாயணம் ஒரு கட்டுக்கதையே!" என்று வாய் விரித்து ஆச்சாரியாரே ஒப்புதல் கூற்று வெளியிட நேர்ந்தமை-

மடத்துத் தலைவர்கள் பல்லக்கில் அமர்ந்து கொள்ள, பஞ்சமரும் சூத்திரரும் அவர்களின் பல்லக்குத் துக்கிகளகத் தொண்டாற்றிய காட்சிகள் இன்று காணக்கிடைக்காதவை என்றாகியமை-

களிமண் பிள்ளையார் உருவங்களை நாடு முழுவதிலும் ஆயிரக்கணக்கான தொண்டர்கள் வெளிப்படையாகப் போட்டு உடைத்து, நம்பிக்கையாளர்களுக்கு அறிவு கொளுத்தியமை-

அரசுப் பணிமனைகளில் மாட்டப்பட்டிருந்த 'கடவுளர்' படங்கள் அகற்றப்பட ஏற்பாடு பண்ணியமை-

புலவர்களிடம் உறைந்திருந்த 'திருக்குறள்' எனும் அறிவு நூலைப் பொது மக்கள் கைக்குக் கிட்டச் செய்தமை-

மடவார் என்றழைக்கப்பட்ட நம் மகளிர் மாஞாலமே வியக்கும் அளவிற்கு அறிவாளராக ஆற்றலாளராக உலா வரும் உயர்நிலை உருவானமை-

கல்விக் கூடங்களில் குறிப்பாகத் தொடக்கப்பள்ளிகளில் பெண்பால் ஆசிரியை நிறையப் பங்களிப்புச் செய்ய வைத்துள்ள புரட்சி-

வகுப்புரிமைக் கொள்கையை விடாது பற்றிக் கொண்டிருந்த மாநில முதல்வர்கள் ஓமந்தூரார், குமாரசாமிராஜா இருவரின் சான்றாண்மை-

தொழிற் கல்வியகங்களிலும் அரசுப் பணிகளிலும். பிற்படுத்தப்பட்டோர், தாழ்த்தப்பட்டோர் ஆகியோருக்கு இட ஒதுக்கீடு செய்ய ஏந்தாக இந்திய அரசமைப்புச் சட்டத்தை முதன் முறையாகத் திருத்திய புதுமை-

நாட்டாட்சியின் தலைமைச் செயலகத்தில் கவரிமான் களெனத் தம் குடுமிகளை விரித்துப் போட்டுக் கொண்டு பார்ப்பனர் இன்பந்துய்த்த காட்சியெல்லாம் மறைந்தொழிந்து, இன்று 'கருப்புத் திருவுருவங்களும் அமர்ந்திருக்கும் அழகுத் தோற்றம்-

முதன் முதலாய் ஆதி திராவிடப் பெருமகன் ஒருவர் சென்னை உயர்முறை மன்றத்தில் தீர்ப்பாளராகப் பொறுப்பேற்றமை-

ஆச்சாரியாரின் 'குலக்கல்வி'த் திட்டம் தொலைந்து போக, காமராசரின் திட்டத்தில் 33,000 பள்ளிகள் முளைத்தமை-

பஞ்சம-சூத்திரப் பிள்ளைகள் உயர்நிலைப் பள்ளிப் பொதுத்தேர்வில் அமர்ந்து தேறி, எளிதாகக் கல்லூரிக்குள் நுழைய முடியாதபடி தடுத்துவிடப் பார்ப்பனர்க்குப் பெருங் கருவியாக விருந்த 'Selection' எனும் வடிகட்டும் முறைக்கு விடையனுப்பு விழா எடுக்கப்பட்டமை-

பாடநூல்களை அரசே அச்சிட்டு மலிவு விலையில் மாணாக்கர்க்கு வழங்கும் உருப்படியான திட்டம் நடைமுறைக்கு வந்தமை-

'தாலுகா போர்டு', 'ஜில்லா போர்டு', 'ரெவின்யூ போர்டு' என்று அழைக்கப்பட்ட கேடான அமைப்புகள் வெவ்வேறு கட்டங்களில் கலைக்கப்பட்டமை-

நம் தாயகத்திற்குத் 'தமிழ்நாடு' என்று பெயர் சூட்டிப் புதிய வரலாறு படைக்கப்பட்டமை-

தேசியக் கொடி எரிப்புக் கிளர்ச்சித் தீர்மானத்தின் உடனடிப் பலனாக, இந்திய நடுவண் அரசுத் தலைமை, தமிழக அரசின் தலைமை ஆகிய இரண்டின் சார்பாகவும் "இந்தி மொழி கட்டாயமாகத் திணிக்கப்படவே மாட்டாது" என்பதாக வெளிப்படையாக உறுதி அறிவிக்கப்பட்டமை-

தமிழ்நாட்டரசின் இருமொழிக் கொள்கை உலகிற்கே தெரியும் வண்ணம் அறிவிக்கப்பட்டமை-

தெலிங்கானாவில் தூக்கக் கயிற்றுச் சுருக்குக்கு இலக்காக விருந்த பொதுவுடைமைத் தோழர்கள் உயிர் பிழைக்கும் வண்ணம் சூழ்நிலை உருவாக்கப்பட்டமை-

போன்ற பெரியாரியல் கோட்பாடுகள் நடப்புக்கு வருமாறு நிறைவேற்றம் எய்தியமைக்கு 'விடுதலை'யின் தொண்டறம் மாபெரும் காரணியாக நின்றது என்பது வரலாற்று உண்மையாகும்.

இவையெல்லாம் விந்தைகள் என்று அழைக்கப்படும் தகுதியடைத்தவை. இவ்வண்ணம் நாட்டின் 'தட்ப வெப்ப இயற்கை'யையே மாறவைத்த பெருமிதத்திற்குரிய அருஞ்சிறப்பு இதழாளர் பெரியாரின் உடைமை!

**"விடுதலை' மலர்கள்**

'முடியின் இறகு'க்கு ஒப்ப, 'விடுதலை' ஆண்டு மலர்கள் ஒளிர்ந்தன. முதன் முதலில் ஆண்டு மலர் 1956 ஆம் ஆண்டு பெரியார் பிறந்த நாளாகிய செப்டம்பர் 17ஆம் நாள் அன்றைய 'விடுதலை' பொறுப்பாசிரியர் 'குத்தூசி'குருசாமி அவர்களால் வெளியிடப் பட்டது.

இன்றைய 'விடுதலை' ஆசிரியர் கி. வீரமணியவர்கள் பொறுப்புக்கு வந்த பின்னர் 1962ஆம் ஆண்டிலிருந்து ஒவ்வோர் ஆண்டும் செப்டம்பர் 17 அன்று 'விடுதலை' - பெரியார் மலர் வெளியிடப்பட்டுக் கொண்டு வருகிறது.

'விடுதலை' மலரில் பெரியாரின் பிறந்த நாள் சிறப்புக் கட்டுரையும் அவரின் கொள்கை விளக்கக் கட்டுரைகளும் இயக்க முன்னோடிகள், பொது வாழ்வுத் தலைவர்கள், பல்துறை அறிஞர்கள், பாவலர்கள் ஆகியோரின் ஆய்வுப் படைப்புகளும் இடம் பெற்றன.

'விடுதலை' மலர் ஒவ்வொன்றும் அறிவுக் கருவூலம் என்பதில் அய்யமே இல்லை. மலர்களின் தனித்தன்மைகளை விளக்குவதென்றால் அதுவே ஒரு தனிப் பொழிவாகிவிடும், 'விடுதலை' வளாகத்தில் அமைந்துள்ள பெரியார் பகுத்தறிவு ஆய்வு நூலகத்தில் படிக்கக் கிடைக்கின்றன.

எண்ணற்ற ஆராய்ச்சியாளர்கள் அந்நூலகம் போந்து நிறையச் செய்திகளை 'விடுதலை' மலர்களிலிருந்து திரட்டித் தங்களின் ஆய்வுக் கட்டுரைகளில் பயன்படுத்துகின்றனர்.

## 'விடுதலை' இதழின் தொண்டு பற்றி கருத்துரைகள்

'விடுதலை' இதழின் தொண்டறம்பற்றிப் பெருமக்கள் சிலரின் கருத்துகளைப் பார்ப்போம்.

*"திராவிடனே! உன் சமுதாயம் சேறும் பாசியும் நிறைந்த குட்டை போல் ஆகிவிட்டது. சேறும் பாசியும் நிரம்பிய குட்டையிலுள்ள நீரை எவரே விரும்புவர்? அந்த நீர் குடிப்பதற்கோ குளிப்பதற்கோ முடியாதபடி ஆக்கப்பட்டு விட்டது. எனவே அதை உபயோகித்து உன் உடலை நோய்க்கு ஆளாகும்படி செய்து வதைந்து போகாதே; சேற்றை அகற்றிப் பாசியை நீக்கித் துப்புரவு செய்து உபயோகப்படுத்திக் கொள் என்று 'விடுதலை' கூறுகின்றது.*

*'ஒரு காலத்தில் நீ உன்னத நிலையில் இருந்தாய். இந்நாட்டு ஆட்சி உன்னுடையதாய் இருந்தது ஆனால் இன்று? நீ ஆண்டியாயக் கிடக்கிறாய். வீரனாய் – விறல் வேந்தனாய் – இருந்த நீ கோழையாய் – பூனையைக் கண்டு அஞ்சும் பேதையாகிக் கிடக்கிறாய்! சிம்மாசனத்தில் சிறப்போடிருந்த நீ இன்று செங்கை ஏந்திச் சேவடி காத்து நிற்கிறாயே! இப்படி நீ ஆனதன் அடிப்படையை உணரவில்லையே! என்று கூறி விளக்கமும் விழிப்பும் உண்டாக்கி வருகிறது 'விடுதலை' '.*

*'கீழ்த்தர ஜாதியாய் – நான்காம் அய்ந்தாம் ஜாதியாய் ஆக்கப்பட்டுவிட்டாய்! உழைத்தாலும் உழைப்பின் பயனை அடைய முடியாதபடி செய்யப்பட்டு விட்டாய்! அரசியலிலோ பிற துறைகளிலோ கேவலம் கீழ்த்தரச் சிப்பந்தியாய்ச் சீர்குலைக்கப்பட்டு விட்டாய். கல்வியில் 100–க்கு 90 பேர் தற்குறிகளாய் இருக்கும் கொடுமையைப் பெற்று விட்டாய்! பொருளாதாரத்தில் நசுக்கப்பட்டு விட்டாய்! என்று கூறித் திராவிடப் பெருங்குடி மக்களுக்கு அறிவுத் துறையில் புத்துணர்ச்சியும் வாழ்க்கைத் துறையில் வளத்தையும் பெறும்படி 'விடுதலை' பணியாற்றி வருகிறது!"*

*'விடுதலை'க்கு 1948இல் அன்றைய அரசு பிணையத் தொகையாக 2000ரூபாய் கேட்டபோது பேரறிஞர் அண்ணா 27–6–1948ஆம் நாளுக்குரிய 'திராவிடநாடு' இதழில் எழுதிய ஆசிரியவுரையின் பகுதிகள் இவை.*

*"புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் 'விடுதலை' பற்றித் தெரிவித்த கருத்துகள் பற்றி அறிவோமோ?*

"விடுதலை–பத்திரிகையை ஒவ்வொருவரும் அவசியம் வாங்கிப் படிக்க வேண்டும். மற்ற பார்ப்பன ஏடுகளை மறந்துங்கூட எவரும் வாங்கக்கூடாது. அவை நமக்குத் துரோகம் இழைப்பவையாகும்.

தமிழர்களுக்காக – தமிழர்களின் கல்வி உத்யோக நியமனத்துக்காகப் பாடுபடும் ஏடு 'விடுதலை' ஒன்று தான். எனவே 'விடுதலை'யை அனைவரும் ஆதரிக்க வேண்டும்.

குடிஅரசு, விடுதலை, மற்றும் பகுத்தறிவு வெளியீடுகளான பார்ப்பனப் பித்தலாட்டங்களை விளக்கும் நூல்களும் மலிவு விலையில் விற்கப்படுகின்றன. அவற்றை வாங்கி யாவரும் படிப்பதோடு மற்றவர்களையும் படிக்கச் செய்ய வேண்டும். ('விடுதலை': 18–5–1958).

ஆந்திரப் பெரியார் என்று மதித்துப் போற்றப்பட்ட நாத்திகர் 'கோரா' அவர்களின் பாராட்டு சுருக்கமாகவும் அதேநேரம் மிக ஆழமாகவும் இருந்தது.

"விடுதலை என்ற சொல் விரிந்த பொருளுடையது. எல்லாத் துறைகளிலும் மனித விடுதலைக்குப் போராடும் 'விடுதலை' ஏட்டையும் அதன் தலைவர் பெரியார் அவர்களையும் பாராட்டுகிறேன்" ('விடுதலை' பெரியார் மலர்: 17–9–1985)

"விடுதலையும் பெரியாரும் என் அன்பான எதிரிகள். என் நண்பரின் 86ஆம் ஆண்டு பிறந்த நாளன்று என் வாழ்த்துகளைப் பெரியார் அன்புடன் பெற்றுக் கொள்வார்களாக!"

இவ்வாறு கூறியவர் எவராக இருக்க முடியும் என்ற கற்பனை பண்ணுகிறீர்களா? பெரியாருடன் நெடுங்கால உறவும் உரிமையும் அதே போழ்து கொள்கையில் நேர் முரணான நிலைப்பாடும் கொண்ட சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியாரின் வாழ்த்தே இது. 'விடுதலை' இதழ் வெளிப்படுத்திய கருத்துகள் எந்த அளவுக்கு அவரைப் பாதித்தன என்பதை அவரின் இக்கூற்று நன்றாய்ப் புலப்படுத்துகிறது.

குன்றக்குடி மடத்தின் தலைவரும் சைவசமயம் சீர்திருத்தக்காரரும் ஆய்வுக் கண்கொண்டு எந்தச் சிக்கலையும் நோக்கும் போக்காளருமாகிய திருப்பெருந்திரு தெய்வசிகாமணி அடிகளார் புதிய 'விடுதலை' - பணிமனைப் பேரார்வத்துடன் திறந்து வைத்து நிகழ்த்திய வரலாற்றுச் சிறப்பு மிக்க சிந்தனையுரையின் ஒரு பகுதியைக் கேளுங்கள்.

"தலைவர் பெரியார் அவர்கள்தான் துணிந்து நாட்டில் நல்ல கருத்துகளைத் தோற்றுவிக்க 'விடுதலை'யைத் தொடங்கினார்கள். 'விடுதலை'யின் புரட்சிக் கருத்துகளை வரவேற்க மேல்மட்டத்தில் உள்ளவர்கள் விரும்புவதில்லை. அடிமட்டத்தில் உள்ளவர் களாவது வரவேற்கின்றார்களா என்றால், இப்போதுதான் அவர்களுக்குப் போய்ச் சேர்ந்து கொண்டிருக்கிறது. தமிழர்களின் நலன் கருதி நடக்கக்கூடிய 'விடுதலை'யினைத் தமிழர் ஒவ்வொருவரும் வாங்கிப் படிக்க வேண்டும்.

'விடுதலை' வாங்கிப் படிப்பது தமிழர் ஒவ்வொருவரின் கடமையாகக் கருத வேண்டும். தமிழர்களின் இல்லங்கள் என்பதற்கு அறிவிப்புப் பலகை போல் 'விடுதலை' தமிழர் ஒவ்வொருவரது இல்லத்திலும் இருக்க வேண்டும்!" ('விடுதலை': 2-11-1965).

இதைவிட 'விடுதலை' குறித்த நற்சான்றிதழ் வேறொன்றும் இருக்க முடியாது.

'விடுதலை'க்கு தண்டனை

'விடுதலை'-இதழ் தொடர்பான சுவையான சூடான நிகழ்ச்சியொன்றைக் குறிப்பிடுதல் இங்கே தகும்.

திடீரென்று தமிழக அரசு அன்றைய சென்னை சர்க்கார் ஓராண்டுக்கு முன்னர் 'விடுதலை'யில் வெளியான பெரியார், 'குத்தூசி' குருசாமி ஆகிய இருவரின் கட்டுரைகளைக் காரணம் காட்டி, ஏற்கனவே 'விடுதலை'யின் சார்பாக அரசிடம் செலுத்தப்பட்டிருந்த பிணையத் தொகை இரண்டாயிரம் ரூபாயைப் பறிமுதல் செய்து கொண்டு, மேலும் பத்தாயிரம் ரூபாய் பிணையத் தொகையாகக் கட்ட வேண்டுமென்று குற்றவியல் மாநில நடுவர் வாயிலாகக் கட்டளையிட்டது. நடவடிக்கை நாள் 25-5-1949 ஆகும்.

இவ்விரண்டு நடவடிக்கைகளையும் எதிர்த்து மணியம்மையார் 'விடுதலை'யின் பொறுப்பாளர் எனும் நிலையில் மேல்முறையீடு செய்தார். சென்னை உயர்நீதி மன்றத்தின் தீர்ப்பாளர் மூவரின் முன்னிலையில் வழக்காடல் 7-3-1950 நிகழ்ந்தது. வழக்குரைத்தவர் குறிப்பிடத்தக்க பெருமகனார் ஆவார். புகழ் படைத்த வகுப்புரிமை ஆணையை ஒழுங்கு படுத்தி நாட்டுக்கீந்த முன்னாள் அமைச்சர் மதிப்புமிகு முத்தையா (முதலியார்) அவர்கள்தான் அவ்வழக்கறிஞர்.

வழக்கறிஞர் முத்தையா அவர்கள் மேல்முறையீடாக வைத்த அடிப்படையான விளக்கங்கள் அருமையிலும் அருமையானவை;

கட்டுரைகள் வெளியாகி நெடுங்காலம் - சுமார் ஓராண்டு - கழித்து தடுப்பு நடவடிக்கை மேற்கொள்ளப்படச் சட்ட ஏற்பு கிடையாது. இந்திய அரசியல் விடுதலை பெற்று விட்ட பிறகு 'ஹிஸ்மெஜஸ்டி' பெயரால் பிணையத் தொகை எப்படி பறிமுதல் செய்யப் பெற முடியும்? சட்டமன்றத்தில் அமைச்சர் கோபால் ரெட்டியவர்களே 'விடுதலை'க் கட்டுரைகள் சட்டத்தை மீறி எழுதப்பட்டவை அல்ல" என்று ஒப்புக் கொண்டிருக்கிறார். உண்மையில் சொல்லப்போனால் பெரியார் அவர்களும் அவரின் பத்திரிகையும் அவரின் இயக்கமுமே நாட்டில் கலகம் நடவாமல் தடைப்படுத்தின. இக்கருத்துகளைக் கொண்டு சான்றோர் முத்தையா அவர்கள் அழகாக வழக்காடினார்.

'விடுதலை'க் கட்டுரைகளின் ஆங்கில மொழிபெயர்ப்பைச் செவிமடுத்த மாண்நிரம்பிய நயன்மையார்கள் ராஜமன்னார், சத்தியநாராயணராவ், விஸ்வநாத சாஸ்திரி ஆகிய மூவருமே அடக்க முடியாமல் சிரிப்பை வெளிக்காட்டினர் என்றாலும், அவர்களின் தீர்ப்பு மட்டும் விந்தையாக இருந்தது!

"திருமணப் புரோகிதன் சமஸ்கிருதத்தில் சொல்கின்றவற்றைத் தமிழில் சொன்னால் எந்த நாகரிகமுள்ள பார்ப்பனரல்லாதானும் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டான் என்ற எண்ணத்தை உறுதியால் எழுப்பவல்ல "விபசாரியே நீயே என் மனைவி!" என்னும் மிகவும் ஆத்திர மூட்டும் தலைப்புக் கொண்ட கட்டுரை, பார்ப்பனப் புரோகிதன் மணமகனைத் தன் மந்திரத்தின் மூலம் விபசாரியாக்குகிறான் என்று நன்கு சுட்டிக் காட்டப்படுகிறது. இந்தக் குறிப்பு பார்ப்பனரல்லாதாரை ஆத்திரப்பட வைத்தே தீரும் என்றனர் தீர்ப்பாளர்கள்!

எப்படி! திருமண மந்திரத்தின் பொருள் புரிந்தால் பொறுத்துக் கொள்வதற்கில்லையாம்.. அதை எடுத்துக் காட்டுவது பகைமையை மூட்டும் குற்றமாம். மேல் முறையீடு தள்ளுபடி செய்யப்பட்டது. பறிமுதல் சரியே என்பது தீர்ப்பின் விளைவு. இதுதான் 'விடுதலை'யின் ஈகம்!

### வழக்கறிஞர் வீரமணி – 'விடுதலை' இதழின் ஆசிரியர்

ஒரு கட்டத்தில் 'விடுதலை' நாளிதழினை நிறுத்தி விட்டு, கிழமை இதழாக அதை நடத்தலாமா என்று சிந்திக்கும் நிலைக்குச் சென்று விட்டார் பெரியார்! அது பற்றி அய்யாவே பின்னாளில் இப்படி குறிப்பிட்டார்:

> "விடுதலை–பத்திரிகை பார்ப்பனரல்லாத தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு – அவர்களது விழிப்புக்கு

*நல்லதொரு துணைவனாகவே இருந்து வந்திருக்கிறது. இன்னும் பல அதிசயக் காரியங்கள் செய்திருக்கிறது; செய்து வருகிறது. இப்படியெல்லாம் இருந்தும் தமிழ் மக்களிடம் அதுபெற வேண்டிய நிலையை அடையாமல் தவித்துக் கொண்டிருக்கிறது என்றால் அது தமிழ் மக்களுடைய தன்மையைக் காட்டுகிறது என்றுதான் சொல்ல வேண்டும்.*

*இந்த நிலையில் 'விடுதலை' நஷ்டம் தாங்காமல் அதை நிறுத்தி விட்டு, முன் நான் நினைத்ததுபோல் திருச்சியில் ஒரு வாரப் பத்திரிகை துவக்கலாம் என்று முடிவு செய்து கொண்டிருந்த நேரத்தில் நண்பர் வீரமணி அவர்கள் தனது வாழ்நாளைச் சுயநலமற்ற பொதுத்தொண்டில் செலவிட விரும்புவதாக முன் வந்தார்!*

*வீரமணி அவர்கள் எம்ஏ., பி.எல். பட்டம் பெற்றவர். கெட்டிக்காரத் தன்மையும் புத்திக்கூர்மையும் உள்ளவர். அவர் எம்.ஏ.,பி.எல். பாஸ் செய்து வக்கீல் தொழிலில் இறங்கியவுடன் மாதம் ரு. 300, ரூ 400 வரும்படி வரத்தக்க அளவுக்குத் தொழில் வளர்ந்ததோடு கொஞ்ச காலத்திலேயே மாதம் ரூ. 500, ரூ 1000 என்பதான வரும்படி வரும்நிலையில் தொழில் வளம் பெற்றுவரும் நிலையைக் கண்டவர். இந்த நிலையில் அவர் ஒரு சாதாரண ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவராகவும் இருந்து வந்தார். இந்த நிலையில் சுயநலமில்லாது எவ்விதப் பொருள் ஊதியத்தையும் கருதாமல் பொதுத் தொண்டு செய்ய ஒருவர் வந்தார் - வருகிறார் - வரக்கூடும் என்பது உவமை சொல்லக் கூடாத ஒரு மாபெரும் காரியம் என்றே சொல்ல வேண்டும்.*

*அப்படிப்பட்ட ஒருவரை நாம் தக்கபடி பயன்படுத்திக் கொள்ளாவிட்டால் அது நம்முடைய அறியாமையாவே முடியும் என்ற எண்ணத்தின் மீதே அவரை நம் 'விடுதலை' ஆசிரியராகவும் பயன்படுத்திக் கொள்ள முன் வந்த அவருடைய ஏகபோக ஆதிக்கத்தில் 'விடுதலை'யை ஒப்படைத்து விட்டேன்!" ('விடுதலை': 6-6-1964)*

வழக்கறிஞர் வீரமணியவர்கள் 'விடுதலை' நாளிதழின் ஆசிரியராகப் பொறுப்பேற்றுக் கொண்ட போது, தந்தை பெரியாரவர்கள், இது நமது கழகத்திற்குக் கிடைக்க முடியாத ஒரு பெரும் நல்வாய்ப்பு என்றே கருதி, திரு. வீரமணி அவர்களை மனதார வரவேற்பதோடு, கழகத் தோழர்களுக்கும் இந்த நற்செய்தியைத் தெரிவித்துக் கொள்கிறேன்" என்று அறிக்கை யிட்டார் ('விடுதலை': *10-8-1962*).

மெய்யாகவே அவ்வறிக்கை எந்த அளவிற்கு நற்செய்தியாக அமைந்தது என்பதை வரலாறு இன்றைக்குப் யாருக்குப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறது என்பதை அனைவரும் அறிவோம். அதை இங்கு விளக்குவது 'மற்றொன்று விரித்தல்' ஆகிவிடும் என்று அஞ்சி, அதைத் தவிர்க்கிறேன்.

## முதற் கொள்கை

பெரியார் தம் இயக்கத்தின் முதற் கொள்கையாக 'வர்ணாசிரம' சாதி முறை ஒழிப்பு என்பதாய் வகுத்துக் கொண்ட வண்ணம் சாதியொழிப்புத் திட்டத்தின் ஒரு கூறாய், நாட்டிலுள்ள பார்ப்பன உணவகங்களின் முன்புறப் பலகைகளில் எழுதப்பட்ட 'பிராமணாள்' எனும் எழுத்துகளை 5-55-1957 அன்று அழித்தெறியும் நடவடிக்கை மேற்கொள்ளுவதாகத் திருச்சியில் 18-4-1957 அன்று கூடிய திராவிடர் கழக மத்திய நிருவாகக்குழு தீர்மானித்தது.

அதன் தொடர்பாகப் பெரியார் சென்னை ஆட்சியாளருக்கும் சென்னை ஆளுநருக்கும் ஒரு கோரிக்கை வைத்தார். நீண்ட விளக்கத்துடன் அமைந்த அவ்வேண்டுகோளின் அடிப்படையான சில பகுதிகள்:

> "நம் நாட்டில் இருந்து வரும் சாதிப்பிரிவுகள் ஒழிந்து, மக்கள் யாவரும் சாதிப் பிரிவற்ற ஒரே சமுதாயமாக இருக்க வேண்டும் என்பது அரசாங்கத்தார் இலட்சியமாகவும் முயற்சியாகவும் இருந்து வரும் என்கின்ற எண்ணத்தின் மீதே இந்த வேண்டுகோளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.
>
> பிராமணர்கள் என்பவர்கள் மாத்திரம்தான் தங்கள் சாதியை நிலை நிறுத்திக் கொள்ளப் பாடுபடுகிறார்கள். எப்படியோ – தெரிந்தோ, தெரியாமலோ அல்லது வேண்டுமன்றோ அல்லது அலட்சியமாகவோ பார்ப்பனருக்கு மத்திய அரசாங்கம் ஒரு உரிமம் கொடுத்து வருகிறது. அதாவது அரசாங்கம் அனுமதி (லைசன்ஸ்) கொடுத்து நடைபெறும் நடக்கச் செய்யும் பார்ப்பனர்களின் உணவு விடுதிகளில் 'பிராமணர் விடுதி' என்று போட்டுக் கொள்ள அனுமதிக்கிறது.
>
> பார்ப்பனர்கள் தங்களை மேலான சாதியென்று அவர்கள் வீட்டிலிருந்து சொல்லிக் கொள்ளட்டும். பூணூல் போட்டுக் கொள்ளட்டும். நமது மேல் படுவதில்லை என்ற எட்டி ஓரமாக நடந்து கொண்டு போகட்டும். இவைகளைப் பற்றிப் பொதுமக்கள் பார்த்துக் கொள்ளட்டும். அரசாங்கத்தார் ஏன்,

'பிராமணன்' என்று போட்டுக் கொண்டு வியாபாரம் நடத்திப் பணம் சம்பாதிக்கவும் மற்றவர்களை இழிவு படுத்தும் குறியைக் காட்டவும் இடம் கொடுக்க வேண்டும்? ஆதலால் நான் அரசாங்கத்திற்குத் தெரியப்படுத்திக் கொள்வதெல்லாம் – உணவு, சிற்றுண்டிச் சாலைகளுக்கு அரசாங்கம் அனுமதி கொடுப்பதில் – அந்த அனுமதிச் சீட்டு நிபந்தனைகளில் லைசன்ஸ்தாரர் – சாதிப்பெயர் போடக் கூடாது என்று குறிப்பிட வேண்டும் என்பதுதான். ஆதலால் அரசாங்கத்தாராவது கவர்னர் பெருமானாவது அருள்கூர்ந்து 5–5–1957ஆம் தேதிக்கு முன் அமுலுக்கு வரும்படியாக ஓர் அவசர அறிக்கை வெளியிட்டு விட்டால், இதற்காக நேரடி நடவடிக்கை – கிள்ர்ச்சி செய்ய வேண்டிய அவசியம் இருக்காது என்பதைப் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன்" ('விடுதலை': 27–4–1957).

பெரியாரின் வேண்டுகோளின் மீது ஆட்சியாளர் கருத்துச் செலுத்தி உருப்படியாக எதுவும் செய்ய முன் வந்தாரில்லை. எனவே போட்ட தீர்மானத்தின்படி நடவடிக்கையில் ஈடுபடப் பெரியார் முனைந்தார்.

தமிழகத்தில் பார்ப்பனர் நடத்தி வந்த உணவகங்களின் உரிமையாளருள் பெரும்பான்மையோர் 'பிராமணாள்' என்னும் சொல்லைப் பெயர்ப்பலகைகளிலிருந்து நீக்கிவிட ஒப்பிய நிலையில், திருவல்லிக்கேணி 'முரளீ கபே' என்னும் உணவங்காடி உரிமையாளர் கடுமையான முறையில் மறுப்புத் தெரிவித்ததால் அந்த உணவக வாயிலைப் போராட்டக் களமாகத் தேர்ந்தெடுத்தது கழகம்.

அவ்வுணவகம் முன்பு தொண்டர்களும் மக்களும் புடை சூழ ஒவ்வொரு நாள் மாலை நேரத்திலும் கழகத் தோழர் - தோழியர் மூவர் நின்று அறப்போர் முறையில் மறியல் செய்தனர். அறப்போர் பெரியாரின் மேற்பார்வையில் 5-5-1957 அன்று தொடங்கி 8 மாதங்கள் நடந்தன. 1021 இருபால் தொண்டர்கள் கைது செய்யப்பட்டுச் சிறையேகினர். பெரும் பரபரப்பை உருவாக்கி விட்ட இச்செய்திகளையெல்லாம் ஒவ்வொரு நாளும் உலகுக்கு வழங்கிய 'விடுதலை', பெட்டிச் செய்தியாக இத்தனை பேர் தண்டிக்கப்பட்டனர் என அன்றாடம் தெரியப்படுத்தி வந்தது. (22-12-57 முதல் நாள் முழுதும் மறியல் செய்வதெனத் தீர்மானித்து, அவ்வாறு தொடர்ந்து நடந்தது.)

குறிப்பிடத்தக்க செய்தி என்னவென்றால் போராட்டம் வெற்றியாகவே முடிந்தது என்பதுதான்.

பெரியாரே நேரில் சென்று நாகரிகமாக வேண்டியபோது, எந்த உரிமையாளர் சட்டம் பேசக் கிண்டல் மொழிந்து மறுப்புரைத்தவரோ, அதே பார்ப்பன உரிமையாளர் 'பிராமணாள்' என்பதை நீக்கி விட்டு, மாற்றக 'அய்டியல்' என்னும் பெயரைப் பொறித்துக் கொண்டார்!"

இதுபற்றி 24-3-58 அன்று வெளியான 'விடுதலை' ஆசிரியவுரையில், "இந்த வெற்றியானது நமக்குப் பலாத்காரத்தால் எற்பட்ட வெற்றி அல்ல என்பதோடு, மாற்றாரை நெருக்கித் தொல்லைக்கு உள்ளாகிப்பெற்ற வெற்றி அல்ல என்பதோடு, நலம் தன்னலம் வெறுத்து, துன்பத்தை அனுபவித்ததன் பயனாய் மாற்றான் மனந்திருந்தி, அளித்த வெற்றியே யாகும்" என்று குறிப்பிட்டது.

இக்கிளர்ச்சியின் விளைவாக, "பார்ப்பனர் உணவகங்களின் உண்ணோம்!" என்று அறிவிப்போர்களின் பெயர்ப்பட்டியல் தொடர்ந்து 'விடுதலை'யில் இடம் பெற்றது. மேலும் அடுத்து நடைபெற்ற அரசியல் அமைப்புச் சட்ட எரிப்பு வீரப்போருக்குக் கழகத் தொண்டர்களை இம் மறியல் அறப்போர் அணியப்படுத்த வல்லதாய் இருந்தது என்பது உண்மை.

சாதியொழிப்புப் பேரார்வமும் பார்ப்பனிய எதிர்ப்புணர்வும் மேலிட்ட நிலையில் பெரியாரின் தொண்டர்கள் அவரின் எவ்வகையான போராட்ட அறிவிப்பையும் நிறைவேற்றக் காத்திருந்தனர்.

பெரியார் சாதியொழிப்பு முயற்சிக் கென்றே சிறப்பு மாநாடொன்றை அறிவித்தார். தஞ்சையில் 4-11-1957 அன்ற ஏற்பாடு பண்ணப்பட்ட அந்த மாநாட்டில் பெரியாரை ஒரு பெரிய துலாக்கோலின் ஒரு பக்கத் தட்டில் அமரச் செய்து மறுதட்டில் அவரின் எடைக்கு எடை வெள்ளி நாணயங்களைப் போட்டு நிரப்பி அவரிடம் மக்கள் வழங்கினார்கள். உள்ள நெகிழ்ச்சிக்கு இலக்கான பெரியாரவர்கள், "பிராமணன் என்றொரு சாதி கிடையாது என்று சட்டப்படி உறுதிப்படுத்தாவிட்டால் அரசியல் சட்டப் பிரிவுக்குத் தீ வைப்போம்!" என்று அறிவிப்புச் செய்தார். சட்ட எரிப்பு நாளாக 26-11-1957 என்பதைக் குறிப்பிட்டார்.

உடனடியாகச் சட்டத்தைக் கொளுத்துவோரின் பெயர்கள் நாள்தோறும் 'விடுதலை'யில் இடம்பெற்றன. பெயர்களின் எண்ணிக்கை ஆயிரக்கணக்கில் பெருகிற்று.

பெரியாரின் மீது 117, 302, 323, 324, 326, 436 ஆகிய ஆறு இந்திய ஒறுப்புச் சட்டப் பிரிவுகளின் கீழ் வழக்குப் பதிவு செய்தது

அரசு. எனினும் அஞ்சாமல் மக்களிடம் சென்று போராட்டம் பற்றிய விளக்கங்கள் கொடுத்தார்.

> "இம்மாதம் 26ஆம் தேதிக்குள் 'பிராமணன் என்ற ஒரு சாதி கிடையாது. சட்டத்தில் அந்த மாதிரி கருதமாட்டோம்' என்று அறிக்கை வராவிட்டால் அரசாங்கச் சட்டத்தைக் கொளுத்தப் போகிறோம். எனக்கு 79 வயதாகிவிட்டது; நம் மக்களுக்கு ஏதாவது காரியம் செய்து விட்டுத்தான் நான் சாக வேண்டும். இல்லையென்றால் நம் மக்களுக்கு உணர்ச்சியூட்டிவிட்டுத்தான் சாகவேண்டும்.
>
> வேண்டுமானால் இந்தப் பார்ப்பன சமுதாயத்திற்கு நான் வாய்தா (கெடு) கொடுக்கிறேன்; தன்னை அது மாற்றிக் கொள்ளட்டும். அரசாங்கம் எங்களைப் பிடித்து ஜெயிலில் போடும்; நாங்கள் பயந்து கொள்வோம் என்பது பார்ப்பனர்கள் நினைப்பு. இது யாரிடம் பலிக்கும்? நான்தான் உயிரைவிடத் தயாரா யிருக்கிறேனே! என்னுடைய தொண்டர்களும் தயாராயிருக்கிறார்கள்!" ('விடுதலை': 11-11-1957)

என்றும்,

> "நான் - மூன்று ஆண்டுக்கோ, பத்து ஆண்டுக்கோ, நாடு கடத்தலுக்கோ, தூக்குத் தண்டனைக்கோ ஆளாக்கப்பட்டாலும், மற்றும் பிரிட்டிஷ்காரன் காங்கிரஸ் கிளர்ச்சியின் மீது கையாண்ட எந்தவிதமான கொடிய தீவிரமான அடக்கு முறைகளை நம்மீதும் கழகத்தின் மீதும் பிரயோகித்தாலுங்கூட, அவைகளுக்குப் பயப்பட்டு என் இலட்சியத்தையோ, திட்டத்தையோ மாற்றிக் கொள்ளப் போவதில்லை. கழகத் தோழர்களே! தீவிர இலட்சியவாதிகளே! நீங்கள் மூன்று ஆண்டு தண்டனைக்குப் பயந்து விட மாட்டீர்கள். இஷ்டப்பட்டவர்கள் தஞ்சை மாநாட்டுத் தீர்மானத்தை நிறைவேற்ற - பெயர் கொடுங்கள்!" ('விடுதலை': 11-11-1957)

என்றும் அறிவித்தார் பெரியார்.

இந்திய அரசமைப்புச் சட்ட அடிப்படைகளை அருமையாக ஆராய்ந்து, தெளிவானதோர் அறிக்கையினை வெளியிட்டார் பெரியார். 17-11-1957ஆம் நாளுக்குரிய 'விடுதலை'யில் இடம் பெற்ற தம் நீண்ட விளக்க அறிக்கையின் இறுதியில் இவ்வாறு அவர் அறுதியிட்டார்:

> "இந்த அரசியல் சட்டத்தை உருவாக்கின ஆறுபேர்களில் நான்கு பேர் பார்ப்பனர். இதை நிறைவேற்றிய அரசியல் நிர்ணய சபை

**என்பது, வயது வந்தோரின் வாக்குரிமை பெறாதவர்களை பெரும்பாலும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களையே கொண்டதாகும்.**

**இந்தச் சட்டத்தில் இந்து மதத்திற்குப் பாதுகாப்பு அளிக்கப் பட்டிருக்கிறது; இந்து மதத்தில் சாதிக்கும் பாதுகாப்பு இருக்கிறது; சாதியைக் காப்பாற்றத்தான் இடமிருக்கிறது. இதை எளிதில் திருத்தியமைப்பதற்கும் சாதி ஒழிப்புக்காரருக்கு வசதியில்லை; வாய்ப்பும் இல்லை. (368வது பிரிவைப் படியுங்கள்).**

**ஆதலால் சாதியை ஒழிக்க விரும்புகிறவர்கள் தனித் திராவிட நாடு பெற விரும்புகிறவர்கள், தமிழ்நாடு சுரண்டப்படுவதைத் தடுக்க விரும்புபவர்கள் – என்ன செய்வது? இதை எரிப்பதன் மூலம் நம் எதிர்ப்பைக் காட்டிக் கொள்வதைத் தவிர வேறு வழி என்ன?"**

*சாதியொழிப்பு - சட்ட எரிப்புக் கிளர்ச்சியின் வலிமை நாட்டையே உலுக்கிற்று! என்று, உலகத்தின் புருவங்களை உயரச் செய்தது! பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட தொண்டர்கள் குறிப்பிட்ட அரசமைப்புச் சட்டப் பிரிவுகள் அடங்கிய சிற்றிதழைத் திட்டமிட்ட வண்ணம் 26-11-1957 அன்று எரித்துச் சாம்பலாக்கினர்.*

*நாலாயிரம் இருபால் தோழர் - தோழியரை அரசு கைது செய்தது. மூன்று மாதங்களிலிருந்து மூன்றாண்டுகள் வரை எரிப்பாளர்கட்குச் சிறைக் கொட்டடி காட்டினர் குற்றவியல் தீர்ப்பாளர்கள். பதினைந்து பேர்கள் களச்சாவைச் சந்தித்தனர். எந்நாட்டு வரலாற்றிலும் இதற்கொப்பான மானப் போராட்டம் நிகழ்ந்ததில்லை!*

*அமெரிக்க 'நியூயார்க் டைம்ஸ்' இதழில், "இந்தியாவில் திராவிடர் கழகத்தினர் இந்திய அரசமைப்புச் சட்டத்தைக் கொளுத்தி இரண்டாயிரம் பேருக்கு மேல் சிறை புகுந்தனர்" என்று செய்தி வெளியிடப் பெற்றது என்றால் பெரியாரின் போராட்ட வலிமை எத்தகையது என்பது புலப்படுகிறது.*

*கொலைக் குற்றங்களைப் பெரியார் மீது சுமத்தி, ஆறு மாதச் சிறை வாழ்வை அவர் ஏற்குமாறு செய்வதில் வெற்றியடைந்தனர் பார்ப்பனர். பார்ப்பனரின்பால் கசப்பும் வெறுப்பும் கொண்டனர் மக்கள். "பார்ப்பனருக்குத் துணி வெளுக்க மாட்டோம்!", "பார்ப்பனருக்கு முடி வெட்ட மாட்டோம்!" என்றெல்லாம்*

அறிவிப்புகள் வெளியாகும் அளவிற்குத் தமிழகத்தின் மக்களாயத் தட்பவெப்ப நிலை உருவாயிற்று.

இந்தச் செய்திகளையெல்லாம் 'விடுதலை'யின் மூலமாக மட்டுமே நாம் அறிந்து கொள்ளவியலும்.

## பாலியல் சமனியம்

பெரியாரியலின் ஒரு கூறாகிய ஆண்-பெண் பாலியல் சமனியம் தொடர்பாக - 'குடிஅரசு' வாயிலாகச் செய்தது போலவே - 'விடுதலை' வாயிலாகவும் அறிவுப் புரட்சி செய்தார் அய்யா.

ஓர் அரிய ஆசிரியவுரையினை 'விடுதலை'யில் பெரியார் எழுதி, ஒரு பெரிய சிந்தனைத் தாக்கத்தை விளைவித்தார். "பத்தினி - பதிவிரதை" எனும் தலைப்பேந்திய அவ்வாசிரியவுரையின் பகுதிகள் சில:

> *"பத்தினி - பதிவிரதை என்ற சொற்கள் முட்டாள் தனத்திலிருந்தும் மூர்க்கத் தனத்திலிருந்தும் தோன்றிய சொற்களாகும். இச்சொற்கள் தமிழ்ச் சொற்களுமல்ல; இச்சொற்களுக்கு உரிய பொருளில் தமிழில் சொற்களோ சொல்லோ இல்லை!*
>
> *இச்சொற்பொருளுக்குள்ள குணம் மனிதர்களுக்கு அவசியம் என்ன என்பது பற்றி இதுவரையிலும் யாராலும் விளக்கப்படவே இல்லை. ஆரியப் பதிவிரதைத் தன்மைக்கு அகலிகை சிதை துரோபதை என்ற சொல்லப்பட்ட பதிவிரதைகளின் யோக்கியதையே நன்றாக விளங்கும். மற்றும் பதிவிரதைகளுக்கு உதாரணம் காட்டிக் கற்பிக்கப்பட்டிருக்கும் சாவித்திரி, நல்ல தங்காள், கண்ணகி முதலிய பெண்களின் தன்மையை அவர்களது அனுபவத்தைப் பார்த்தாலும் பதிவிரதைத் தன்மை விளங்கும்.*
>
> *பதிவிரதைகளுக்கு ஏன் துன்பம் - துயரம் ஏற்பட வேண்டும்? அவர்கள் ஏன் 'விதவைகள்' ஆக வேண்டும்?*
>
> *தமிழர் சரித்திரம் தொடங்கிய காலம் முதல் இன்று வரை ஒரே ஒரு பெண்ணைத்தான் பத்தினியாக - பதிவிரதையாகக் கண்டுபிடிக்க முடிந்திருக்கிறது என்றால் இது தமிழ்ப் பெண் சமுதாயத்திற்கு எவ்வளவு இழிவும் பழியும் ஆகும் என்று சிந்தியுங்கள்" ('விடுதலை': 4-5-1973).*

'அரசியல் விடுதலை' இந்தியாவிற்குக் கிட்டுவதற்கு முன்னர், சென்னை மாகாணச் சட்டசபையில் பலதாரத் தடைச்சட்டம்

கொண்டு வர ஏற்பாடு செய்யப் பட்டபோது அதை வரவேற்று தந்தை பெரியாரவர்கள் ஒரு நீண்ட ஆசிரியவுரை தீட்டினார்.

"தோழர் எ. காளேஸ்வரராவ் என்பவர் இரு தார மணத்தைத் தடுப்பதற்காகவும் திருமண ரத்து உரிமையை இருபாலருக்கும் வழங்குவதற்காகவும், சென்னை சட்டசபையில் ஒரு மசோதா கொண்டு வரப் போவதாகத் தெரிகிறது.

இந்த மாகாணத்தைப் பொறுத்த வரையில் நமது 20 ஆண்டுப் பிரச்சாரத்தின் பயனாக, இம்மசோதாவுக்குப் பொது மக்களின் எதிர்ப்பு இருக்காதென்றே கூறலாம். படித்த ஒரு சிலரும், வைதிகப் பித்து நீங்காதவரும் இம்மசோதாவை எதிர்க்கலாமே தவிர, மற்றவர்கள் குறிப்பாகப் பெண்கள் எதிர்க்க மாட்டார்கள் என்றே நினைக்கிறோம்.

பெண்ணடிமை நிலை மாறி முன்னேற்ற நிலையைப் படைப்பதற்கு வழி வகை காட்டும் பெரியாரின் அரிய கருத்துரையொன்றை அறிவோமா? "நாம் பெண்களை முட்டாள்களாக்கி விட்டோம். பெற்றோர்களை மீறியும், சமூகக் கட்டுப்பாடுகளை மீறியும் ஆண்கள் காரியமாற்ற முன்வருவதுபோல் பெண்கள் முன் வருவதில்லை. பெண்களுக்கு விடுதலை பற்றிய அறிவு போதவில்லை. அவர்களுக்கு விடுதலை உணர்ச்சி உண்டாக்க எவ்வித முயற்சியும் இதுகாறும் செய்யப்படவில்லை. அவர்களுக்குச் சுதந்திரமாகச் சிந்திப்பதற்கான வசதி கொடுக்கப்படவில்லை.

பெண்களை வெளியில் செல்ல விடுவதில்லை; பிறருடன் தாராளமாகப் பழக அனுமதிப்பதில்லை. 'சன்னலின் அருகே நிற்காதே! வாசலில் யார் போகிறார்கள் என்று எட்டிப் பாராதே! ஆண்கள் வந்தால் அடுப்பங்கரைப் பக்கம் ஓடி விடு என்றெல்லாம் கூறி, அவர்களை ஒன்றும் தெரியாத முட்டாள் களாக்குகிறோம். இவை மாய்ந்து போய், பெண்களுக்கு உண்மையான விடுதலை வரவேண்டும். பெண்கள் வெறும் மிருக இனம் போல் நடத்தப்படும் இந்நிலை ஒழிந்தேயாக வேண்டும்.

தாமாக ஒழித்துக் கொள்ள முயல மாட்டார்கள்; முன்வர மாட்டார்கள். ஆண்கள் தாம் முன்வந்து, விட்டுக் கொடுத்து, பெண்களைச் சமநிலைக்குக் கொண்டு வர வேண்டும். தாய் தந்தையர் ஆண்களை விட மேலாகப் பெண்களுக்குத்தான் அதிகப் படிப்புச் சொல்லிக் கொடுக்க வேண்டும். சுதந்தரம் கொடுத்தால் பெண்கள் கெட்டுப் போய் விடுவார்கள் என்று

நினைத்து, அவர்களை எந்நாளைக்குமே அடிமைத் தளையில் கட்டிப் போட்டு வைத்திருப்பது முடிவில் பெருங்கேட்டையே விளைவிக்கும்.

நாம் வீட்டு நாய்களையே எடுத்துக் கொள்வோம். சில நாட்கள் விடாப் பிடியாகக் கட்டிப் போட்டு வைத்திருந்து பிறகு அவிழ்த்து விட்டால், காரணமின்றியே சந்தோஷத்தால் இங்கே ஓடும், அங்கே ஓடும்; குதிக்கும். கட்டு ஒழிந்ததில் அதற்கு ஆனந்தம் அவ்வளவு! இதுதான் இயற்கை. எனவே நாம் பெண்களை உலகத்தினின்றும் மறைத்து வைப்பதும், அவர்களை அடைய வொட்டாமல் தடுத்து வைப்பதும் மிகமிகக் கேடானது.

பெண்களைச் சிலர் படிக்க அனுமதிப்பார்கள்; ஆனால் பிறருடன் பழக அனுமதியார்கள்! பெண்களுக்கு வேண்டியது புத்தகப் படிப்பு மட்டுமல்ல; உலக அறிவும் தான் வேண்டும். நல்லது – கெட்டது ஆராய்ந்தறியும் அறிவு வேண்டும். ஒருவரை யொருவர் நன்கு தெரிந்து கொள்ள வாய்ப்பளிக்கப்படாத நிலையில், தன் கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை மட்டும் பெண்ணுக்கக் கொடுத்தால் அப்பெண் பிறர் கூறும் உபதேசத்தைத்தானே கேட்க வேண்டி நேரிடும்?" ('விடுதலை': 11–10–1948)

அரை நூற்றாண்டுக்கு முன் நம் பெண்களின் நிலை எவ்வாறு இருந்தது என்பதைப் படமாக்கிக் காட்டும் அய்யாவின் சொல்லோவியம் இது.

அண்ணல் அம்பேத்கர் இந்திய நடுவணரசின் சட்ட அமைச்சராக இருந்த வேளை இந்து திருமணச் சட்டத்திற்குத் திருத்தம் ஒன்று கொண்டு வந்தார். அதன்படி எல்லாத் திருமணங்களும் பதிவு செய்யப் பெற வேண்டும். அதைப் புரோகிதர்களும் ஏனையப் பார்ப்பனத் தலைவர்களும் கடுமையாய் எதிர்த்தார்கள். அப்போது பெரியாரவர்கள் வெளியிட்ட கருத்துகள் இங்கு குறிப்பிடத்தக்கன.

"டாக்டர் அம்பேத்கர் ஒரு சட்டம் கொண்டு வருகிறார். அதன் படி நீங்களெல்லாம் திருமணப் பதிவு செய்து கொள்ள வேண்டியதுதான். இதற்குப் பார்ப்பனர்கள் எதிர்ப்பாக இருக்கிறார்கள். ஏனென்றால் இந்தத் திருமணம் மதச் சம்பந்தமாக – மதத்திலே உள்ள சாஸ்திரம் சம்மந்தமாக – சாஸ்திரத்திலே உள்ள சடங்கு முறையாக நடக்கிறதனாலே பார்ப்பானுக்குப் பிழைப்புண்டு, அந்த முறை போய் விட்டால் அவனுக்குப் பிழைப்புப் போய் விடும். ஆனதனாலே அவர்கள்

இன்னமும் மதச் சம்பிரதாயப்படி நடக்க வேண்டும் என்று வழக்குப் போடுகிறார்கள்.

டாக்டர் அம்பேத்கார் அவர்களுடைய கொள்கைப்படி, திருமணம் என்றால் ஒரு ஆணும் ஒரு பெண்ணும் கூடி வாழ்க்கை நடத்துவதுதான். அதற்கு ஒரு குறிப்பு இருக்க வேண்டும் என்பதுதானே தவிர, மற்றபடி வேறொன்றும் வேண்டியதில்லை.

சொத்துக்காக ஏற்பட்ட திருமண முறையானது, பார்ப்பனர் உள்ளே புகுந்து, சொத்தோடு மாத்திரம் விட்டு விடாமல் இந்த உலகத்திற்குத்தான் சொத்து, மேல் உலகத்திற்கு இன்னும் வேறொன்று இருக்கிறது; அதற்காகவும் திருமணம் வேண்டும் என்று சொல்லுகிறார்கள். ஆகவே ஒவ்வொரு ஆணும் பெண்ணும் குழந்தையை உண்டாக்கிக் கொண்டுதான் தீர வேண்டும் என்று செய்து விட்டார்கள்.

சொத்துக்காகப் பிள்ளை இல்லாவிட்டாலும் திதி–திவசம் செய்வதற்காகப் பிள்ளை வேண்டும். தந்தை ஒரு பிள்ளையை உண்டாக்கச் சக்தியில்லாதவனாக இருந்தால், இந்த சாஸ்திரம் சொல்லுகிறது. 'மனைவியை இன்னும் யாரிடமாவது விட்டுக் குழந்தையைப் பெற்றுவிடு' என்று.

நாம் சமுதாயத்திலே பெரிய மாறுதல் வேண்டும் என்று சொல்லுகிறோம்; சம உரிமை வேண்டும் என்று சொல்லு கின்றோம். வைதிகத் திருமணங்களில் வேறு நடவடிக்கைகள் நடைபெறுகின்றன. இவைகளையெல்லாம் நாம் கூடாது என்று சொன்னால் நமக்கு நெருப்போடு என்ன சண்டையா? இல்லை – நெய்யோடுதான் சண்டையா? இல்லை. அவைகள் எல்லாம் இருக்க வேண்டிய இடங்களில் இருக்க வேண்டும். எனவே இத்தகைய மடமை மூடப் பழக்கங்கள் ஒழிந்து, சீர்திருத்த முறையில் திருமணம் செய்து கொள்ள ஏராளமான இளைஞர்கள் முன் வர வேண்டும்" ('விடுதலை': 17–2–1951).

தன்மானத் திருமண முறையை இந்நாட்டுக்கு - ஏன், இவ்வுலகிற்கு வழங்கி வழிகாட்டிய பெரியாரின் பெண்ணடிமை யொழிப்புச் சிந்தனைகள் எத்துணை ஆழம் படைத்தவை!

முதலாவது சுயமரியாதை மாநாடு செங்கற்பட்டில் கூடியபோது அதாவது சுமார் 20 ஆண்டுகளுக்கு முன்பு – திருமண ரத்து உரிமையை வற்புறுத்தி அம்மாநாட்டில் தீர்மானமொன்று நிறைவேற்றப்பட்டது. அதற்குப் பிறகு சில மாதங்கள் கழிந்து,

சென்னையில் நடைபெற்ற மாதர்கள் மாநாட்டில் அத்தீர்மானத்தைக் கண்டித்தும், 'திருமண ரத்து மத விரோதமானது' என்றும் தீர்மானிக்கப்பட்டது. அவ்வளவு பின்னணியிலிருந்த இம்மாகாண மாதர்கள் இன்று எவ்வளவோ முன்னேறி யிருக்கின்றனர். ஆதலால் படித்த பெண்கள் சார்பில் இம்மசோதாவிற்கு எதிர்ப்பிருக்காது என்றே கூறலாம்.

பிள்ளைப்பேறில்லை என்ற காரணத்தைக் காட்டியும், வேறு அற்பச் சண்டைகளைக் கொண்டும், இந்து மத ஆண்கள் ஒரு மனைவி யிருக்கும் போது மற்றொரு பெண்ணையும் மணந்து கொள்ளுகின்றனர். அவ்வாறு செய்பவர்கள் இருவரும் மனமொப்பி, திருமண ஒப்பந்தத்தை ரத்துசெய்த பிறகாவது செய்தாலும் பரவாயில்லை. அதை விட்டு, ஆண் மட்டும் சர்வாதிகாரத்துடன் மற்றொரு பெண்ணை மணந்து கொள்கிறான். பெண்ணும் இதே காரணத்தைக் கொண்டு (பிள்ளைப்பேறில்லாமை) மற்றொரு ஆணை மணந்து வீட்டில் சேர்த்துக் கொண்டால் கணவன் சும்மாயிருப்பானா?

இதுமட்டுமல்ல; திருமணமான ஆண்களில் சிலர் பிற பெண்களுடன் நேசமாகி அதைப் பெருமையாகவும் வெளிப் படையாகவும் கூறிக் கொள்ளும் அக்கிரமச் செயலை, சென்னை நகரத்தைத் தவிர வேறெங்கும் காண முடியாது.

இம்மாதிரிக் கொடுமைகளைத் தடுப்பதற்கு இந்தப் புதிய மசோதா உதவி செய்யும்.

திருமண ரத்து உரிமை சட்டத்திலிருக்குமானால் நாள்தோறும் ஆயிரக்கணக்கான திருமண ரத்துக்கள் நடைபெறும் என்று சிலர் விஷமப் பிரச்சாரம் செய்வார்கள். இது பெருந்தவறு. சட்டத்திலிருக்கும் ஒருரிமையை எல்லோரும் செய்வதென்பது எளிதல்ல. 'இந்து' என்று கூறப்படுகிறவன் எத்தனை பெண்களை வேண்டுமானாலும் மணந்து கொள்ளலாம் என்பதைச் சட்டம் அனுமதிப்பதனால், எத்தனை பேர் பல மனைவிகளுடன் இருக்கிறார்கள்?

எனவே திருமண ரத்து என்பது கணவன் - மனைவி ஆகியவர்களுக்கு இருக்க வேண்டிய தற்காப்பு ஆயுதம்; இதைக் கொண்டு இருவருமே அடிக்கடி குத்திக் கொள்வார்கள் என்று கூறுவது அபந்தம்.

இந்த மசோதாவில் எல்லாத் திருமணங்களையும் சர்க்காரில் பதிவு செய்து விட வேண்டியது அவசியம் என்ற ஒரு விதியையும் சேர்த்துக் கொண்டால்தான் நல்லது.

இம்மசோதாவிற் கெதிராக சர்வகட்சி ஆண்களும் ஒன்று சேர்ந்து விடுவார்கள்; பெண்ணினம் உஷாராயிருக்கட்டும்! ('விடுதலை': 4-9-1946).

பதிவிரதாத்தன்மை என்னும் இந்து மதக் கோட்பாடு பற்றிக் கடுமையாகச் சாடி 'விடுதலை'யில் கருத்தறிவித்தார் பெரியார்.

"இந்நாட்டிலே ஒரு பெண்ணானவள் பதிவிரதையாக இருக்க வேண்டுமென்றால் அவள் எவ்வளவுக் கெவ்வளவு அடிமை யுணர்வோடு இருக்கிறாளோ, அவ்வளவுக் கவ்வளவு அவள் உயர்ந்த பதிவிரதையாகப் பாவிக்கப்படுகிறாள். இதைத்தான் நமது இதிகாசங்களும் புராணங்களும் சாஸ்திரங்களும் வலியுறுத்துகின்றன.

முஸ்லிமை எடுத்துக் கொண்டால், பெண்களை உலகத்தைக் கூடப் பார்க்க விடமாட்டேன் என்கிறானே! முகத்தை மூடி அல்லவா சாலையில் நடமாட விடுகிறான்! இதைவிடக் கொடுமை உலகில் ஒன்று இருக்க முடியுமா?

நம் நாட்டு யோக்கியதைதான் என்ன? ஏழு வயதிலேயே பெண்களைக் கல்யாணம் செய்து கொடுத்துவிட்டு, அன்றைக்கு இரவே சாந்தி முகூர்த்தம் வைத்து விடுகிறானே! சாந்தி முகூர்த்தம் நடந்த மறுநாளே அந்தப் பெண் ஆஸ்பத்திரிக்குப் போய்விடுவாள். இவ்வளவு காட்டுமிராண்டித்தனங்களும் பெண்கள் மீது சுமத்தப்பட்டு இருந்தனவே!

உலகிலே மற்ற நாட்டுக்காரன் எல்லாம் எப்படி எப்படி முன்னேறி வருகிறான்! வெள்ளைக்காரன் என்ன நம்மைவிடப் புத்தியுள்ளவனா? இயற்கையிலே நம்மைவிட அவன் அறிவில் குறைந்தவன்தானே! இருந்தாலும் அவர்களின் முன்னேற்றம் எங்கே? நம் நிலை எங்கே? காரணம் - அவன் அறிவைப் பயன்படுத்தினான். நாமோ பயன்படுத்தத் தவறிவிட்டோம். அறிவைப் பயன்படுத்தினால் நாமும் அவனை விட வேகமாக முன்னேற்ற மடையலாம்!

நான் 1932இல் ஜெர்மனி சென்றிருந்தேன். அப்போது ஒரு வீட்டில் தங்கியிருந்தேன். அந்த வீட்டுக்காரர்களை

> விசாரித்தேன். அவர்கள் தங்களை "Proposed Husband and Wife" என்றார்கள். அப்படி என்றால் என்ன அர்த்தம் என்று கேட்டேன். "நாங்கள் உண்மையுள்ள கணவன் – மனைவியாகத் திருமணம் செய்து கொள்வதற்கு முன்பு, ஒருவரை யொருவர் நன்றாகப் புரிந்து கொள்ள, நாங்கள் பயிற்சி பெறுகிறோம்" என்றார்கள். "எவ்வளவு காலமாக? என்று கேட்டேன். "எட்டு மாதமாக" என்றார்கள். எப்படி இருக்கிறது பாருங்கள்! அந்த நாடு முன்னேறுமா? 'பதிவிரதம்' பேசி, பெண்களை அடிமை யாக்கும் இந்த நாடு முன்னேறுமா?" ('விடுதலை': 28–6–1973).

எந்த வடிவத்திலும் பாலியல் ஏற்ற - தாழ்வு நிலவக்கூடாது என்பதில் இறுதி வரை பெரியார் குறியாகவே இருந்தார் என்பதற்கு இது சான்று.

## மடமை ஒழிப்பு

தன்மான இயக்கக் கொள்கைகளில் ஒன்றான மடமை யொழிப்புக்காக 'விடுதலை' விடாமல் தொண்டு செய்தது. குடிஅரசு, பகுத்தறிவு, புரட்சி முதலிய ஏடுகளைப் போலவே பகுத்தறிவுப் பகலவனின் புரட்சிக் கருத்துகளை 'விடுதலை'யும் தாங்கித் தரணிக்கு வழங்கியது.

> "சிறு குழந்தையின் கையில் கிடைத்த நெருப்புப் பந்தம் வீட்டையே ஊரையே எரித்துச் சாம்பலாக்கியது என்பது போல், கடவுள் எண்ணம் அறிவையே கொன்று விட்டது" என்றும், "உலக மனித சமுதாயத்திற்கு ஒருவன் தொண்டு செய்ய வேண்டுமானால், முதல் தொண்டாக, கடவுள்கள் ஒழிப்பு வேலையில் இறங்கினால்தானே அவன் உண்மையான, யோக்கியமான, அறிவாளியான தொண்டனாக இருக்க முடியும்?" என்றும் உறுதியான பற்றுக்கோள் கொண்டவராகப் பெரியார் இருந்ததால், கடவுள் – மத – வேத – சாஸ்திர – இதிகாச – புராணப் பொருள்கள் தொடர்பாக மீண்டும் மீண்டும் சிந்தித்து நிறைய நிறைய எழுதினார். அவற்றுள் சான்றுக்காக ஒரு சிலவற்றைப் பார்ப்போம்.

> "கடவுளைக் கற்பித்தவன் உலக உற்பத்திக்கு – நடத்தைக்கு ஒரு கர்த்தா இருக்க வேண்டும்; அந்தக் கர்த்தாதான் 'கடவுள்' என்று உத்தேசத்தின் மீது சொல்லுகிறான். அதாவது சந்தேகத்தின் பயனை (Benefit of Doubt) கடவுளுக்குக் கொடுக்கிறான்.

ஆனால் மதமும் சாத்திரமும் அப்படி இல்லை. முழுப் பொய்யையே கற்பனை செய்து, மக்களை ஏய்ப்பதற்கென்றே, பயப்படுத்துவதற் கென்றே பாகுபடுத்தி மதத்தையும் சாத்திரத்தையும் அமைக்கிறான். இதை அமைப்பு என்பதற்கு ஆதாரம் என்னவென்றால், பல மதங்கள், பல சாத்திரங்கள் இருப்பதும், அவை ஒன்றுக்கொன்று முரண்பாடாக – நேர்மாறாக இருப்பதுமேயாகும். மற்றும் இப்படிக் கற்பித்தவர்கள் என்பவர்கள் மனிதத் தன்மைக்கு மேம்பட்டவர்கள் என்பதும், இந்து மத சாத்திரங்கள் இயற்கைப் பிரத்தியட்ச விதிகளுக்கு மாறுபாடாக இருப்பதும் மற்றொரு ஆதாரமாகும்.

இதை ஏன் நாம் குறைகூறுகிறோம் என்றால், இவை அறிவை மாத்திரமல்லாமல் ஒழுக்கம், நேர்மை, அன்பு, அருள், ஒற்றுமை, சமநிலை முதலியவற்றைப் பாழ் செய்வதோடு, வளர்ச்சியையும் கெடுத்து, விஞ்ஞானத்தை மறைத்து, அஞ்ஞானத்தை வளர்த்து வருகிறது என்பதால், நம் (திராவிடர்) தமிழர்களாகிய மக்களுக்கு (கடவுள் உண்டா, இல்லையா என்பது வேறு விஷயம்) மதமே இல்லை! இந்து மதம் நம் மதம் என்று கருதிக் கொண்டிருக்கிறோம். இதுவே ஒரு மாபெரும் – இமயமலை அளவு – முட்டாள்தனமாகும்.

அறிவு – பகுத்தறிவு தொடர்பான அய்யாவின் கருத்துகள் அருமையானவை! “மனிதன் என்பதற்கே பொருள், விஷயங்களை ஆராய்ந்து, நன்மை தீமை என்பதை உணர்ந்து, சகல துறைகளிலும் மேலும் மேலும் வளர்ச்சி அடைகிற தன்மை உடையவன் என்பதேயாகும்.

மனிதன் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்ததைவிட எவ்வளவோ மாற்றமடைந்திருக்கின்றான்; நூறாண்டுகளுக்கு முன் இருந்ததைவிட எவ்வளவோ மாற்றமடைந்திருக்கிறான்; இன்னும் சொல்லப் போனால் அய்ம்பது ஆண்டுகளுக்கு முன்னால் இருந்ததை விட, எவ்வளவோ மாறுதல் அடைந்திருக்கிறான். அறிவிலே வளர்ச்சியிலே அற்புதங்களைக் கண்டுபிடிப்பதிலே எவ்வளவோ முன்னேற்றம் அடைந்திருக் கிறான். அதற்கெல்லாம் காரணம் மனிதனுக்கு உண்டான அறிவு மேன்மைதான்.

சக்கி முக்கிக் கல்லிலே இருந்தவன் முதலிலே திரி விளக்கு, பிறகு ‘காஸ்’விளக்கு, அதன்பிறகு ‘எலக்ட்ரிக்’ விளக்கு என்று – சில ஆயிரம், பத்தாயிரக்கணக்கான விளக்கினுடைய வெளிச்சம் ஒரு

சிறு கம்பியில் தெரியும்படி, அவ்வளவு முன்னேற்றம் எப்படி அடைந்தான்? அறிவைக் கொண்டு ஆராய்ச்சி செய்ததனாலே தான்!

மணிக்கு மூன்று மைல் நடந்து கொண்டிருந்த மனிதன் முதலிலே மாட்டு வண்டி, குதிரை வண்டி, சைக்கிள், மோட்டார் இவைகளில் சென்று, இன்றைய தினம் மணிக்கு 600 மைல் பறக்கும் படியான ஆகாயக் கப்பலை எப்படிக் கண்டுபிடித்தான்? அறிவினாலேதான்!

ஒரு மைல் இரண்டு மைல் கேட்கும்படியான ஒலி பெருக்கியை எப்படிக் கண்டுபிடித்தான்? அறிவினாலேதான்!

அய்ந்தாயிரம், பத்தாயிரம் மைலுக்கப்பால் இருந்து பேசினால், அதைக் கேட்கும்படியான தொலைபேசியை எப்படிக் கண்டுபிடித்தான்? அறிவினாலே!

மனிதனுடைய அறிவு அவ்வளவு வேலைகளைச் செய்திருக்கின்றது. இதுவெல்லாம் கதை அல்ல; நாம் நேரிலே அனுபவிக்கிறோம்" ('விடுதலை': 27-3-1951).

"நமது கொள்கை பகுத்தறிவு. பகுத்தறிவென்றால் நாத்திகம் என்பது பொருள். அறிவு கொண்டு சிந்திப்பதுதான் நாத்திகம் ஆகும்.

நாம் பகுத்தறிவு கொண்டு ஆராய்ந்து பார்த்தால், பகுத்தறிவுக்கு ஏற்ற கடவுள் இருக்கிறதா என்று சிந்தித்துப் பார்த்தால், இல்லவே இல்லை! உண்மையில் ஒரு கடவுள் இருக்குமானால் நமக்குத் தெரியாமல் இருக்க வேண்டிய அவசியம் என்ன? அந்தக் கடவுள் தாம் இருப்பதாக நமக்காவது ஏன் தெரியப்படுத்தக் கூடாது?" ('விடுதலை': 20-6-1973).

இக்கூற்றுகளே போதும். பெரியார் நம் நாட்டு மக்கள் பகுத்தறிவாளர்களாக விளங்க வேண்டும் என்பதிலே எவ்வளவு அக்கறை கொண்டிருந்தார் என்பதை நாம் புரிந்து கொள்ளுவதற்கு.

"இந்து மதத்திற்கு ஆதாரம் வேதம், சாத்திரம், புராண - இதிகாசமே! இந்த மதத்தின்படி நாம் கீழான பிறவி 4ஆம், 5ஆம் சாதியாராவோம்! அதனால் மேற்கண்ட மத ஆதாரங்களைப் படிக்கத் தகுதியற்றவர்களாக ஆக்கப்பட்டிருக்கிறோம். வேத சாத்திர புராண இதிகாச ஆதாரங்கள் பெரிதும் நம் மக்களை இழிகுலமாக்கி, அயோக்கியராக்கி, பல வழிகளிலும் அவமானப் படுத்தியுள்ளன.

ஆகவேதான் கடவுள் நம்பிக்கை, மதம், சாத்திரம், புராணம், இதிகாசம் ஒழிக்கப்பட்டே ஆக வேண்டுமென்று கூறுகிறோம். ('விடுதலை': 17-12-1969)

"மனிதன் உண்ணல், மலஜலம் கழித்தல், உறங்கல், கலவி செய்தல், முதலிய சகல காரியங்களுக்கும் அவனே முயச்சித்துப் பாடுபட்டுப் பக்குவப்படுத்திக் கொண்டுதான் வாழ்கிறான்; இப்படியே நோய் வந்தாலும் அதற்குப் பரிகாரம் அவனே செய்துகொள்ள வேண்டும்; நோயின் பரிகாரத்தன்மைக்கேற்ப, குணமடைவது, சாவது முதலியவை மனிதனால் அல்லாமல் இவ்வளவு காரியங்களுக்கும் எவன் கடவுளை நம்பி கைகட்டிக் கொண்டிருக்கிறான்? ஆனால் வாழ்வில் எல்லா நிலையிலும் அறிவற்ற தனமாயும் 'கடவுள் செயல்' 'கடவுள் செயல்' என்று சொல்லிக் கொண்டும் தன் முயற்சிகளுக்கெல்லாம் கடவுளை வேண்டுவதுபோல் நடித்துக் கொண்டும் இருக்கின்றான் என்பதல்லாமல், எந்த மனிதன் எந்தச் சிறு காரியத்திற்குக் கடவுளை நம்பி எதிர்பார்த்துக் காத்துக் கிடக்கிறான்?" ('விடுதலை': 4-12-69).

"சர்வ வல்லமையுள்ள கடவுள் ஒன்று இருக்கிறது என்பதை நான் என் மனம் மொழி மெய்களால் நம்புகிறேன்; அதற்கேற்பவே நடந்து கொள்ளுகின்றேன் என்று யாராவது ஒருவர் முன் வந்து சொல்லித் தனது நடத்தையைக் கொண்டு நிரூபித்துக் காண்பிக்கட்டும்! நான் பதினாயிரம் ரூபாய் பந்தயம் கட்டுகிறேன். யோக்கியமானவர்கள் யார் வேண்டுமானாலும் வரட்டும்!" ('விடுதலை': 17-12-69).

"முதல் பித்தலாட்டம் ஆத்மா என்பது இது இல்லாவிட்டால் மற்ற பித்தலாட்டங்களுக்கெல்லாம் இடமே இல்லை. பார்ப்பானுடைய மதத்தைத் தவிர ஆத்மா என்ற சொல் வேறு மதத்தில் கிடையாது. கிறிஸ்து மதம், முஸ்லிம் மதம், தமிழ் மதம் ஆகிய எந்த மதங்களிலும் ஆத்மா என்பதே கிடையாது, புத்தர் கூட ஆத்மா என்பது ஒன்றில்லை; அதற்கு எஜமான் என்று ஒரு கடவுளில்லை என்று தான் கூறியிருக்கிறார்.

மனிதன் பிறக்கும்போதே பெரிய மனிதனாகப் பிறப்பதில்லை. சின்னக் குட்டியாகத்தான் பிறக்கிறான். சிறிதாகப் பிறந்து பிறகு பெரியவனாக வளருகிறான். பெண்டாட்டி சினையாகிறாள்; பிள்ளை பெறுகிறாள். அப்புறம் உணவு உண்டு வளர்ந்து மனிதனாகிறான். இதில் எப்படி ஆத்மா என்பது பொருந்தும்?" ('விடுதலை': 9-4-1955).

புராணங்கள் என்பவற்றைப் பெரியார் எப்படி அலசி ஆராய்கிறார் பாருங்கள்.

"வேதத்திலும் சாஸ்திர – உபநிஷதங்களிலும் ஏராளமாய் அயோக்கியத் தனங்களும் கொலை பாதகங்களும் இருந்தாலும், அவற்றைச் சரியானபடி ஆதாரத்தோடு வெளிப்படுத்துவது என்பது என்போன்றவர்கட்கு அவ்வளவு சாதாரண காரியம் அல்ல என்றாலும் புராண இதிகாசங்கள் என்பன கொண்டு தக்க ஆதாரங்களோடு வெளிப்படுத்துவது எளிதான காரியமேயாகும்.

விஷ்ணு புராணத்தில் ஓர் இடத்தில் அதாவது ஒரு அத்தியாயத்தில் காணப்படுவதாவது; தேவர்களெல்லாம் விஷ்ணுவிடம் சென்ற, 'பூலோகத்தில் அசுரர்கள், ராட்சதர்கள் எல்லோரும் ஜபதபங்கள், தானதர்மங்கள் செய்து வருகின்றார்கள். இதனால் தேவர்களாகிய – பிராமணர்களாகிய எங்களுக்கு மரியாதை இல்லாமல் போய் விடுகின்றது. மக்கள் எங்களை மதிப்பதில்லை. தேவர்கள், பிராமணர்கள் என்பதற்காகவே நாங்கள் அடைந்து வந்த பெருமைகளையும் உரிமைகளை அடைய முடிவதில்லை. அவற்றில் அவர்களும் பங்கு கேட்கிறார்கள். ஆதலால் எங்களைக் காப்பாற்றி யருள வேண்டும். என்று கேட்டுக் கொண்டார்கள்.

இதற்கு விஷ்ணு பகவான், 'நான் என் உடலிலிருந்து ஒரு மாயா மோகனை உண்டாக்குகிறேன். அவன் மக்களிடம் சென்று, தான தர்ம ஜபதபம் செய்வதில் பிரயோஜனம் இல்லை. மக்கள் ஒழுங்காக அறிவின்படி நடந்தால் போதும் என்று சொல்லிவிடுவான். அப்பொழுது நான் அவர்களை நீங்கள் எல்லோரும் வேத சாஸ்திரப்படி நடவாமல் அறிவின்படி நடந்தவர்கள். விஞ்ஞானத்தைப் பிரதானமாய்க் கொண்டவர்கள் என்று சொல்லி நரகத்தில் போட்டு அழித்து விடுகிறேன்' என்று சொல்லிவிட்டார்.

அதன் மீது அந்த மாயா மோகன் மக்களுக்குப் பகுத்தறிவைப் போதித்து, வேத மார்க்கத்தை விட்டுப் பகுத்தறிவுப்படியே நடந்த எல்லா மக்களும் நரகத்திற்கு அனுப்பப்பட்டு விட்டார்கள்.

நம் நாட்டில் பிழைக்க வந்து குடியேறிய ஆரியர்கள் எவ்வளவு அயோக்கியர்கள் என்பதையும், நம்மை மனிதத் தன்மையோடு வாழவிடாமல் செய்து, எவ்வளவு கொடுமையும் அட்டூழியமும் செய்திருக்கிறார்கள் என்பதையும் உணரவேண்டுமானால், அவர்களால் எழுதப்பட்ட புராண – இதிகாசங்களைப் பார்த்தால் தெரியும்" ('விடுதலை' 8–8–1959).

புராணக் கொடுமைகட்கு இவ்வாறு எடுத்துக்காட்டு அளித்த தந்தை பெரியார், இதிகாசப் பொய்மையை வெளிச்சமாகத் தெளிவு படுத்தும் புலமையைக் காணுவோம்.

*"இருபது இலட்ச வருடங்களுக்கு முன் இராமன், அயோத்தி இருந்தனவா? இந்த நாள், கோள் இருந்தனவா? ஸ்ரீராம நவமி என்று ஒரு போலி நாளை மக்களிடம் விளம்பரப்படுத்திக் கொண்டு, பார்ப்பனர்கள் ஆண்டுக்கு ஒரு முறை கொண்டாட்டம் நடத்துகிறார்கள்.*

*இராமன் பிறந்த நாள் என்று சொல்லப்படுவது இன்றைக்கு இருபது இலட்சம் வருஷங்களுக்கு மேலாகியது. இந்த 20 இலட்சம் வருஷத்தில் எத்தனையோ பிரளம் ஏற்பட்டிருக்க வேண்டும். பிரளம் என்றால் உலகமே மாற்றம் அடைவதும், உள்ளதெல்லாம் நாசமடைவதும் முதலிய காரியங்கள் நடப்பதாகும். அப்போது மனித சமுதாயம், உலக பூகோளம், மலை, சமுத்திரம், காடு, நாடு முதலிய யாவும் அழிவும் மாற்றமும் அடைந்து விடும். இது யாவருமே அறிந்ததும், புராணக் கூற்றும், சரித்திர உண்மையுமாகும்.*

*இப்படிப்பட்ட நிலையில் 20 இலட்சம் ஆண்டுகளுக்கு முன் அயோத்தி என்றோர் ஊரும், தசரதன் என்ற ஓர் அரசனும், அவனுக்கு அனேக பெண்டாட்டிகளும் இருந்தனர்; அவனுக்கு இராமன் என்றொரு பிள்ளை பிறந்தான்; அதற்கு வருஷம், மாதம், தேதி, நாள், கோள் இன்ன இன்னது என்பதும்; அவை மாத்திரமல்லாமல் அந்த 20 இலட்சம் ஆண்டுகளுக்கு முன் திராவிட நாடு, பாண்டிய நாடு, இலங்கை நாடு முதலியவை எல்லாம் இருந்தன என்பதும் எப்படி உண்மையாக இருக்க முடியும்? ('விடுதலை': 19–4–'56)*

இத்தகைய வடமொழிப் புராணக் கதைப் புளுகுகளின் அடிப்படையில் தென்னகத் தமிழ் மக்கள் பண்டிகைகள் கொண்டாடும் அருவருப்பான சூழ்நிலைகளால் பெரியார் அவலத்தின் எல்லைக்கே தள்ளப்பட்டார்.

*"தாய் என்றும் மகள் என்றும் பேதத்தை உணர்ந்த மனிதர்களைக் கேட்கிறேன். பத்து நாட்களுக்கு முன் அப்பனும் மகளும் கணவன் மனைவியாக வாழும் கடவுள்களின் கதையைப் பண்டிகையாக (சரஸ்வதி பூசை)க் கொண்டாடினார்கள். அதே முட்டாள்கள், பூமியைப் பாயாகச் சுருட்டிய கதையையும், பூமிதேவி என்னும் கடவுள், விஷ்ணு என்ற கடவுளை – பன்றி*

உருவத்தில் – கலவி செய்து ஒரு பிள்ளையைப் பெற்று, அப்பிள்ளையே விஷ்ணு என்னும் கடவுளும் அதன் பெண்டாட்டியும் (அதாவது அப்பிள்ளையின் தாயாரும்) சேர்ந்து கொன்றார்கள். அப்படிக் கொன்ற நாளை மகிழ்ச்சி நாளாக பண்டிகை கொண்டாடப் போகிறோம் என்றால், இந்தக் கொண்டாட்டக்காரர்கள் மனிதர்களா, மனிதப் பிறவிகளா என்று கேட்கிறேன்" ('விடுதலை': 26–10–1972)

இப்படியாகவே ஒவ்வொரு பண்டிகையின் போதும் பகுத்தறிவுப் பகலவன் அப்பண்டிகை பற்றித் திறனாய்வுக் கட்டுரை எழுதி 'விடுதலை'யில் வெளியிடுவதை வாடிக்கையான கடமையாகச் செய்து வந்தார்.

"கொடிது கொடிது கோவிலுக்குப் போதல்; அதனினும் கொடிது பார்ப்பான் பூசை செய்யும் கோவிலுக்குப் போதல்; அதனினும் கொடிது குழவிக் கல்லையும் செம்பையும் கும்பிடுதல்; அதனினும் கொடிது தேர்த் திருவிழா உற்சவத்திற்குப் போதல்; அதனினும் கொடிது பெண்களை அங்கு கூட்டிப் போதல்; அதனினும் கொடிது கோவில் கட்டுதல்; அதனினும் கொடிது காணிக்கை போடுதல்; அதனினும் கொடிது அர்ச்சகப் பார்ப்பானுக்கு ஈதல்!" ('விடுதலை': 21–10–1957).

"எல்லா மக்களும் குறைவற்ற செல்வத்துடன் நிறைவுற்ற ஆயுளுடனும் வாழ்வதற்குப் பகுத்தறிவுப் பள்ளிகள் மாத்திரம் வைத்து, நிர்வாணமான' சிந்தனா சக்தி தரும்படி படிப்பைக் கொடுத்தால், நாட்டில் இன்று வீணாகும் செல்வம், நேரம், ஊக்கம் – எல்லாம் மீதமாகும்" ('விடுதலை': 17–12–'69).

"கடவுளும் மதமும் நன்மைக்கென்றே ஏற்பட்டவையாயினும் ஒழிக்கப்படவேண்டியவையே. சமுதாயத் தொண்டை வலியுறுத்தவும், அதில் உண்மையையும், அன்பையும் ஒழுக்கத்தையும் ஏற்படுத்தவும் என்பதாகச் சொல்லிக்கொண்டே மேற்கண்டவை ஏற்பட்டு, இப்போது அவை தேவையில்லாதவைகளாக ஆகிவிட்டதோடு, ஒழிக்கப்பட வேண்டியவையாகவே ஆகிவிட்டன!

வஞ்சகத்திற்கும் துரோகத்திற்கும் அன்பு ஒழுக்கம் என்றும், திருட்டுக்கும் புரட்டுக்குமே நாணயம் என்றும் அகராதிகளில் விளக்கம் எழுத வேண்டிய நிலைக்கு மனிதன் வந்து விட்டான். இதில் என்ன அதிசயமென்றால், இந்த விதிக்கு விலக்களிக்க இன்று இந்த நாட்டில் ஒரு ஆளைக் கூடக் காணமுடியவில்லை என்பதுதான்.

*கடவுளும் சமயப் பிரசாரங்களும் நற்பயன் அளிக்கவில்லையே! கடவுள்களுக்கும் சமயங்களுக்கும் – இவைகளுக்குக் கோவில்களுக்கும் உற்சவங்களுக்கும் குறைவில்லை; சமயப் பிரசாரங்களுக்கும், கடவுள் – சமயம் பற்றிய ஆதாரங்களுக்கும் குறைவில்லை; இவைகளில் தேர்ந்த புலவர்களுக்கும் குறைவில்லை; மற்றும் கடவுள் – சமய நம்பிக்கைக் காரர்களுக்கும் பக்தர்களுக்கும், பக்தி செலுத்துபவர்களுக்கும் குறைவில்லை. இந்நிலையில் மனிதனிடம் அன்பு ஒழுக்கம், நாணயம், நம்பிக்கை இல்லாமல், துரோகத்தினால், ஒழுக்கக் கேட்டால், நாணயக் குறைவால், ஏமாற்றுதலால் அல்லாமல் வேறு வழியில் மனிதன் வாழ முடியவில்லை!" ('விடுதலை': 20–6–1956).*

*"நாங்கள் செய்கின்ற காரியங்களை இதற்கு முன் செய்திருக்கிறார்களா என்றால், செய்திருக்கிறார்கள். புராணங்களைப் பார்த்தால் இதைக் கண்டுகொள்ளலாம். இரணியன், இராவணன், சூரபத்மன் போன்றவர்கள் முயற்சி செய்திருக்கிறார்கள். இந்த முயற்சிகளை யெல்லாம் ஒழித்ததாகத் தந்திரமாக எழுதி முடித்து விட்டார்கள். ஏன் இப்படிச் செய்து விட்டார்கள் என்றால், மற்ற எவனும், எப்போதும் மறுபடியும் அம்மாதிரி முயற்சிக்கக் கூடாது என்பதற்காகத்தான்" ('விடுதலை': 8–3–1951)*

நம் மக்களைப் பீடித்துக் கொண்ட பொருளற்ற மட நம்பிக்கைகளின் வலுவற்ற தன்மையினை மறுப்புக் கிடமில்லா வகையில் பேரறிவாளர் பெரியார் அவர்கள் சுட்டிக் காட்டிய சுவையே சுவை!

*"கோயிலில் போய்ப் பூப்போடுக் கேட்கிறோமே, சிறிதாவது சிந்திக்க வேண்டாமா? நீ போய்த் தங்கையையும் அண்ணனையும் சொல்லிப் பூப்போட்டுக் கேட்டால், 'இது வேண்டாம்' என்று அந்தச் சாமி கூறுமா?*

*ஒரு கழுதை பிறந்த நேரத்தைச் சாதகம் குறித்துக் கேட்டால், 'இது கழுதையின் சாதகம், வேண்டாம்' என்று கூறுமா?*

*அம்மாள் மகள் இருவருடைய பெயரையும் எழுதி, அவர்களுடைய மகனுக்குக் கட்டலாமா என்று கேட்டால், அந்தச் சாமி என்ன செய்யும்? 'இருவருமே இலாயக்கில்லை' என்று கூறுமா?*

குருவி கழுகுகளிடம் சோதிடம் பார்ப்பது என்பதெல்லாம் மிகவும் மடத்தனமான காரியமாகும்.

சாதகம், பொருத்தம், நல்ல நேரம் என்று பார்த்து நம்முடைய வசதியைக் கெடுத்துக் கொள்கிறோம்.

நல்ல நேரம், இராகுகாலம், எம கண்டம் என்று பார்க்கிறார்களே, இவர்களுக்குக் கோர்ட்டில் ஒரு கேஸ் விசாரணை இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அங்கு நல்ல கொளுத்த இராகு காலம் என்று சொல்லப்படும் நேரத்தில், அவன் 'இராமசாமி' இராமசாமி!' என்று கூப்பிட்டால், இவன் 'இப்போது இராகுகாலம்; நான் வரமாட்டேன்' என்று கூறுவானா? துண்டை எடுத்து இடுப்பில் கட்டிக்கொண்டு குடுகுடு என்று – எங்கே சீக்கிரம் போகாவிட்டால் வழக்கைத் தள்ளிவிடப் போகிறானோ என்று ஓடிப் போய் 'வந்தேன்' என்று தானே கூறுவான்?

எம கண்டத்திலே ரயிலும் பஸ்ஸூம் புறப்படுகிறது 'கொஞ்சம் இரு; இப்பொழுது எமகண்டம்' என்று கூறினால், அது நிற்குமா? அதில் தானே ஏறிச் செல்கிறான்? இதையெல்லாம் நன்றாகச் சிந்தித்துச் செயலாற்ற வேண்டும்" ('விடுதலை': 4–1–1960)

இவ்வண்ணம் ஒன்றா, பத்தா, நூறா? ஓராயிரம் மடமையொழிப்புக் கருத்துகளை எழுதிக் கொண்டேயிருந்தார் அய்யா!

அனைத்து நாட்டுக் கல்வி அறிவியல் பண்பாட்டு அமைப்பு தந்தை பெரியார் அவர்களுக்கு, "புது உலகத் தொலைநோக்காளர் - தென்கிழக்காசியாவின் சாக்ரட்டீஸ் - சீர்திருத்த இயக்கத்தின் தந்தை - அறியாமை, மூட நம்பிக்கை, பொருளற்ற மரபு வழக்காறுகள், இழிந்த முறைகள் ஆகியவற்றின் கடும் எதிரி" எனும் பட்டயத்தினை 27-6-1970 அன்று வாங்கிச் சிறப்பித்த போது,

"மற்ற புகழ்ச்சிகளுக்கெல்லாம் நான் பாத்திரனல்லன்; ஆனால் மடமையின் கடும் எதிரி என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். இன்னும் என் கருத்துகளை விரிவாக எடுத்துச் சொல்ல எனக்குப் பத்திரிகை வசதியில்லை. இந்த நாட்டில் இந்தக் கருத்துகளைச் சொல்கிறவன் இதுவரை கொலை செய்யப்படாமல் உயிர் வாழ்வதே ஓர் அதிசயமாகும்"

என்று அய்யா ஏற்புரை நிகழ்த்தியமை பகுத்தறிவுக்கு அவர் தந்த முதன்மையான இடத்தை விளக்கும்.

தமிழ்நாடு

தன்மான இயக்கமென்றாலும் திராவிடர் கழகம் என்பதானாலும் பெரியாரியல் எனினும் அதன் அடிப்படை நோக்கங்களில் தமிழர்கள் தங்கட்கென்ற அனைத்து அதிகாரங்களும் உரிமைகளும் படைத்த தனியொரு நாட்டைப் பெற்றிருக்க வேண்டும் என்பது ஒன்றாகும். இது நல்லதா, நடக்குமா, தமிழினத்தவரின் ஏற்பு இதற்கு உண்டா, அரசியல் தலைவர்களின் இசைவு இதற்குக் கிட்டுமா என்பதெல்லாம் தனியே நூலாக்கப்பட வேண்டியதோர் ஆய்வுப் பொருளாகும். ஆனால் தந்தை பெரியார் தன் இறுதிக் காலம் வரை 'தமிழ்நாடு தமிழர்க்கே' எனும் பற்றுறுதியில் விடாப்பிடியாக இருந்து தம் கருத்தை விளக்கமுறச் செய்ய 'விடுதலை' ஏட்டினை நன்றாகப் பயன்படுத்தினார்.

"தமிழ்நாடு தமிழருக்கே என்று இப்போது நடைபெற்று வரும் பிரச்சாரத்தைப் பற்றித் தமிழ்நாட்டில் எங்கும் பேசப்பட்டு வருகிறது. 'தமிழ்நாடு தமிழருக்கே!' என்னும் சொல் இன்று தமிழ்நாடெங்கும் தமிழ் மக்களது இலட்சியக் குறிச்சொல்லாக ஒலிக்கப்படுகிறது. 'தமிழ்நாடு' என்றால் 'திராவிட நாடு' என்றும் நாம் எடுத்துக் காட்ட வேண்டிய அவசியம் சிறிதுமில்லாமல், எத்தனையோ ஆதாரங்கள் இருக்கின்றன. 'திராவிடமே தமிழ் என்று மாறிற்று' என்றும், 'தமிழே திராவிடம் என்று மாறிற்று' என்றும் சரித்திர ஆசிரியர்கள் முடிவு கண்டதாகக் குறிக்கப்பட்ட ஆதாரங்கள் இருக்கின்றன. பழங்காலத்து அகராதிகளும் அப்படியே சொல்லுகின்றன.

நாட்டில் ஒற்றுமை கெட்டு நலம் குன்றி இழிநிலையில் இருப்பதற்குக் காரணம், இந்நாட்டுமக்களுக்குத் தாங்கள் ஒரே சகோதரர்கள் என்ற உணர்ச்சி இல்லாததேயாகும். இதற்கு முக்கிய காரணம், தமிழர் அல்லது திராவிடர்கள் பிறவியில் உயர்வு தாழ்வுக் கொள்கை இல்லாதவர்களா யிருப்பதும், திராவிடத்தில் புகுந்து குடியேறி ஆதிக்கம் கொண்ட ஆரியர் பிறவியில் உயர்வு - தாழ்வு என்பதையே அடிப்படையான கொள்கையாகக் கொண்ட சமய சமூகத்தவரா யிருப்பதும் ஆகும்" என்பதாகத் தந்தை பெரியாரவர்கள் 20-11-1939ஆம் நாளிட்ட 'The Madras' ஆங்கில நாளிதழில் வெளியிட்ட அறிக்கைக்கு விளக்க விரிவுரையாக அமைந்திருந்த, 'தமிழ்நாடு தமிழருக்கே' என்னும் 'குடிஅரசு'க் கட்டுரையினை 'விடுதலை'யில் மறுபதிப்புச் செய்தார்.

பெரியாரின் நிலையினை நன்கு தெளிவாக்கிய அக்கட்டுரையின் பகுதிகள் சில:

தமிழ் மக்கள் கலப்படமற்ற தனித்தமிழ்ச் சாதி ('Race') என்றொருவன் சந்தேகமறக் கருதுவானாயின், அவன் உடனே தன்மீது சுமத்தப்பட்டிருக்கும் - தனக்கு எவ்வகையிலும் எப்போதும் சம்பந்தமிராததான - தன்னைச் சூத்திரன் என்றும் சண்டாளன் என்றும் கூறும்படியான சமயத்தை உதறித் தள்ளிவிட வேண்டியது முதற்காரியமாகும்.

அத்தமிழ் மகன் தமிழ்நாட்டின் விடுதலையும் செல்வப் பெருக்கம், தொழில் மேம்பாடும்தான் தன்னுடையது என்றும் இவற்றிற்காக உழைப்பதுதான் தனக்காக தமிழ் மக்களுக்காக - தமிழ்நாட்டுக்காகச் செய்யும் தொண்டு - கடமை என்றும் கருத வேண்டும்.

'இந்திய தேச அபிமானம்' என்பது, தமிழன் பல நாட்டாரின் நலனுக்கு உழைத்துப் பல நாட்டாருக்கு அடிமையாய் இருப்பதாகும். அரசியல் துறையிலும் நாம் வேற்று நாட்டானுக்கே அடிமையாய் இருக்க வேண்டுமானால், அது மேல் நாட்டானுக்கு அடிமையானால் என்ன? வடநாட்டானுக்கு அடிமையானால் என்ன?

தமிழனின் செல்வந்தானாகட்டும், தமிழ்நாட்டை விட்டுக் கடத்தித்தான் ஆக வேண்டுமென்றால், அது மேல்நாட்டுக்குப் போனால் என்ன? வடநாட்டுக்குப் போனால் என்ன?

உதைக்கும் காலுக்கும் முத்தமிட்டுப் பூசை செய்கிறோம்; மலத்தை மனமார முகருகிறோம்; மானமிழந்தோம்; பஞ்சேந்திரியங்களின் உணர்ச்சியை இழந்தோம்; மாற்றானுக்கு அடிமையாகி வணங்குகிறோம். இதற்குத்தானா தமிழன் உயிர்வாழ வேண்டும்? எழுங்கள்!

நம்மை ஏய்த்து அழுத்தி, நம் தலைமேல் கால் வைத்து ஏறி மேலே போக, வடநாட்டானுக்கும் தமிழரல்லாதவனுக்கும் நாம் படிக்கல் ஆகி விட்டோம்.

இனியாவது 'தமிழ்நாடு தமிழருக்கே!' என்று ஆரவாரம் செய்யுங்கள். தமிழ்நாட்டுக்குப் பூட்டப்பட்ட விலங்கை உடைத்துச் சின்னாபின்னமாக்குங்கள்!

*தமிழ்நாடு தமிழருக்கே! ('விடுதலை': 3-12-1957)*

போர்த்தலைவன் தன் படைமறவர்களின் முன்னே நின்று உசுப்பு மொழி - ஊக்க மொழி பொழிவதையே நினைவூட்டுகிறது

இனத் தலைவர் பெரியாரின் இம்மானவுரை.

இக்கருத்துகளை 1937ஆம் ஆண்டிலிருந்தே தொடர்ந்து பத்தாண்டுகளாக வெளிப்படுத்தி வந்த நிலையில் '47இல் இந்நாட்டைவிட்டு வெள்ளையர் வெளியேறத் தீர்மானித்தனர். அத்துடன் இந்தியாவின் விடுதலைக்குப் பிந்திய அரசியலமைப்பைத் திட்டமிடுவதற்கென அரசியல் நிர்ணய சபை யொன்றுக்கும் வழிவகுத்துக் கொடுத்தனர். அவ்வரசியலமைப்புப் பேரவையின் நடவடிக்கைகளை இனமீட்புக் குறிக்கோள் கொண்ட பெரியார் மிகக் கடுமையான முறையில் எதிர்த்தார்.

> "அரசியலமைப்பு சபை உறுப்பினர்கள் சிலரிடமிருந்து ஆதிபத்திய அரசியலமைப்பு சபை செய்யக் கூடியது என்ன வென்பது குறித்து விளக்கங்கள் வந்த வண்ணமுள்ளன. அதிகாரங்களனைத்தையும் தன்மாட்டே நிரம்பப் பெற்றுக் கொள்ளும் பலமிக்க மத்திய நிர்வாகமொன்று அமைப்பதே இந்துஸ்தான் (இந்தியா) அரசியலின் முக்கிய குறிக்கோளென அறிவிக்கப்பட்டுள்ளது. அய்க்கியம் வளருவதற்கு, மாகாணங்களை எப்பொழுதும் மத்திய நிர்வாக ஆதிக்கத்தின் கீழேயே அடக்கி வைத்திருந்து அதன் ஆணைக்கு உட்பட்டு நடந்து வர ஆவன செய்ய வேண்டும் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.
>
> அரசியல் முறைகள் வகுக்கப்பெற்று நகலாகியும் அவை மாகாண சட்டசபைகளுக்கு அனுப்பப் பெற்றுக் குற்றங்குறைகளையும் திருத்தங்களையும் யோசனைகளையும் கூறுமாறு கோரப்படுமென முதற்கண் அறிவிக்கப்பட்டது. விரைவில் காரியம் முடிய வேண்டியிருப்பதை அனுசரித்து மாகாண சட்டசபையின் விவாதத்திற்கு நகலை அனுப்புவதற்கில்லையென அரசியலமைப்பு சபையார் அறிவிக்கின்றனர்.
>
> இத்தகைய நம்பிக்கைத் துரோகச் செயலைத் திராவிடர்களாகிய நாம் மட்டுமல்ல – பொது நன்மையில் அக்கறையுடைய சட்டசபைக் கட்சியினரும் கண்டித்தே தீர வேண்டும்.
>
> மாகாணங்களுக்கு அளிக்கப்படும் புதிய அரசியலின் அம்சங்கள் என்ன? மத்திய நிர்வாகம் சர்வ வல்லமையும் சர்வ சக்தியும் கொண்டதென்ற அடிப்படையை வைத்து நாம் ஆராயத் தொடங்க வேண்டும். அன்பு, மரியாதை, மதிப்பு,
>
> "தமிழ்நாடு பிரிந்தே ஆக வேண்டும். எனக்குத் தெரியும் சுயமரியாதை இயக்கத் தோழர்கள் 100க்கு 100 பேரும்

பிரிவினையை ஆதரிப்பவர்கள்தாம். தி.மு.க.வில் 99 பேரும் காங்கிரசில் 75 சதவீதம் பேரும் நிச்சயம் பிரிவினைக் கொள்கையை ஆதரிப்பவர்களே! எல்லாருமே தமிழர் என்பதை உணருங்கள். குடும்பம், பதவி, படிப்பு, பந்தம், பாசம் இல்லாத தமிழர்கள் என்னோடு போராட்டத்தில் சேர வாருங்கள்!"

என்று 8-2-'68இல் அறைகூவிய பெரியாரவர்கள், இரண்டு மாதங்கள் கழித்து, "14-4-68ஆம் நாளை டெல்லி ஆதிக்கக் கண்டன நாளாகக் கடைப்பிடிக்க வேண்டும் என்று அறிவித்தார். அன்று நிறைவேற்றப்பட வேண்டிய தீர்மானத்தின் ஆங்கில மொழியாக்கமும் 'விடுதலை'யில் வெளியிடப்பட்டிருந்தது. 'விடுதலை'யில் வெளியான தீர்மான வரிகளின் சில பகுதிகள்:

**"We doresolve that Tamilnadu must be carved out of the Indian Union as an independent state. Secession is the only permanent remedy for the maladies constantly plaguing the Tamilians and Tamilnadu.**

**By Tamilnadu's servitude in the Indian Union, industrial and other kinds of development are considerably affected. Hence Tamilnadu must be made an independent, sovereign state".**

தீர்மானத்தை நிறைவேற்றி, அதை இந்தியக் குடியரசுத் தலைவருக்கும் இந்திய அரசின் உள்துறை அமைச்சருக்கும் அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தது. அவ்வண்ணமே தமிழகமெங்கிலுமிருந்து பல்லாயிரக் கணக்கான தீர்மானப் படிகள் டில்லிக்கு அனுப்பி வைக்கப்பட்டன.

"தமிழ்நாடு சுதந்தர நாடு ஆக வேண்டும்" என்னும் தலைப்பில் 13-7-68ஆம் நாளைய 'விடுதலை'யில் இரண்டு பக்க அளவுக்கு எழுதிய ஆசிரியவுரையின் பகுதிகள் சிலவற்றை இங்கு குறிப்பிடல் தகும்.

"தமிழன் எதற்காக மத்திய ஆட்சியில் இருக்க வேண்டும்? தமிழ்நாட்டுக்கு 'நீதிபதிகளை மத்திய ஆட்சி அனுப்ப வேண்டுமாம். போலீஸ் இலாகாத் தலைமை அதிகாரிகளை மத்திய ஆட்சி அனுப்ப வேண்டுமாம். அதாவது மத்திய ஆட்சி முத்திரை பெற்றவர்கள்தாம் பதவியில் இருக்க வேண்டுமாம். அதுவும் 100க்கு 90 தமிழனல்லாதவர்களாகவே இருக்க வேண்டுமாம். இது வெள்ளையன் ஆட்சியை விட ஒரு படி முன்னேறி இருக்கிறதா இல்லையா?

இந்த இந்திய ஜனநாயக ஆட்சி நீடித்தால் மக்கள் நிரந்தர அடிமையாகவே இருக்க வேண்டியதுடன், வெகு சீக்கிரத்தில் மேலும் காட்டுமிராண்டித் தன்மையையும் மிருகத் தன்மையையும் அடைந்தே தீர வேண்டி வரும். இன்றைய இந்திய தேசியம் இந்த நிலையை வளர்ப்பதும் நிலை நிறுத்துவதுமாகத்தானே இருந்து வருகிறது! இதற்குப் பரிகாரம் மொழிப்படி உணவு உடை – கலாச்சாரப்படி நாடுகளைப் பிரித்து மற்ற நாட்டு ஆட்சிமுறை போன்ற ஒருமுறையை ஏற்படுத்த – அதன்படி மக்களாட்சி இருக்கும்படிச் செய்வது தான்"

பெரியாரின் வழக்காடலில்தான் எவ்வளவு ஞாயப் பண்பு அடங்கிக் கிடைக்கிறது!

1967 செப்டம்பர் மாதத்தில் இன வெளிகொண்டு மராட்டிய சிவசேனைக்காரர்கள் பம்பாயில் உழைத்துப் பிழைத்துக் கொண்டிருந்த தமிழர்களைக் கடுமையாகத் தாக்கிக் கொடுமைப்படுத்திய செய்தியறிந்து தந்தை பெரியார் கொதிப்புற்றார். "தமிழனுக்கு மானம் வேண்டாமா? பம்பாயில் சிவசேனைக்காரன் தமிழனை அடித்தால், அதற்குப் பரிகாரமாக இங்கிருக்கிற பம்பாய்காரனை நாம் விரட்ட வேண்டாமா? வெறுக்கத் துணிந்தவன் தான் வெற்றி பெறுவான்" என்று சீறினார் அய்யா. திருச்சியில் சிவசேனை எதிர்ப்பு மாநாடு (17-9-1967) கூட்டி, "இனிமேல் ஒருவரை ஒருவர் சந்திக்கும்போது 'வணக்கம்' என்று கூறாமல், 'தமிழ்நாடு தமிழருக்கே!' என்று கூறுங்கள்" என்று அறிவித்தார் அவர்.

13-9-1970ஆம் நாளன்று சென்னையில் முதல்வர் கலைஞர் கருணாநிதி அவர்களின் தலைமையில் வங்காள அஜாய் முகர்ஜி அவர்களால் தொடக்கி வைக்கப்பட்ட மாநில சுயாட்சி மாநாட்டில் பேசிய பெரியார் அவர்கள்,

**"சுதந்தரம் பெற்று 20 ஆண்டுகள் கழிந்த பின்பு, ஓர் மாநாடு கூட்டி, எங்களுக்கு இன்னும் சுதந்தரம் கிடைக்கவில்லையே என்று கேட்கிறோம். இது வெட்கக் கேடான நிலைமை அல்லவா? இந்த மாநாட்டின் கோரிக்கைகள் விரைவில் வழங்கப்படாவிட்டால் இன்னும் மூன்றே ஆண்டுகளில் தமிழ் நாட்டுக்கு மாநில சுயாட்சி அல்ல, முழுச் சுதந்தரம் விடுதலை கிடைத்தே தீரும். அதை யாரும் அப்போது தடுக்க முடியாது!" என்பதாக முன்னறிவுப்புக் கொடுத்தார்.**

1972 - சனவரித் திங்களில் தமிழக அரசின் சார்பில் வெளியிடப் பெற்ற 'தமிழரசு' மாதிகையின் சிறப்பு மலரில், அய்யா

எழுதிய கட்டுரையின் முத்தாய்ப்பாக,

> "சாதி ஒழிப்பு போன்ற பணிகளுக்கு மத்திய அரசு தடையாக இருந்து வருவதால், தமிழ்நாடு தனியாகப் பிரிந்தால்தான் வழி பிறக்கும் என்று எண்ணம் ஏன் உண்டாகக் கூடாது?"

என்று வினா எழுப்பியிருந்தார். அது பற்றித் தமிழகச் சட்டமன்ற உறுப்பினர்கள் காட்டிய எதிர்ப்புக்கு விடையளிக்கும் வண்ணம், 22, 24-1-72ஆம் நாளிட்ட 'விடுதலை' இதழ்களில் ஆசிரியவுரைகள் வெளியாயின.

> "கீழ்ப்படிதல் என்ற அடிப்படையில் அசைக்க முடியாத யூனியனொன்றை நிறுவுவதென்ற ஆரம்பக் கொள்கைக்குப் பதிலாக, மனமொவ்வாத கூட்டாளிகள் வலுக்கட்டாயமாகப் பிணைத்து இழுத்துக் கொண்டு வரப்படுவதைக் காண்கிறோம்.
>
> பெடரல் மத்திய நிர்வாகத்தின்கீழ் ஒப்படைக்கப்பட்டுள்ள அதிகாரங்களைக் கூர்ந்து பரிசிலனை செய்து பார்ப்போருக்கு, அவற்றின் பிற்போக்கு அம்சங்கள் தெரிய வரும். அரசியலமைப்பாளர் எவரும் இதுகண்டு வெட்கித் தலைகுனிய வேண்டும்.
>
> மாகாணமொன்றுக்கு உரிய சொத்தை பெடரல் சொத்தாக்கிக் கொள்ள, பெடரல் நிர்வாகத்துக்கு அதிகாரமளிக்கப்பட்டுள்ளது; மாகாண சட்டசபையைக் கலக்காமலேயே இதனைச் செய்து கொள்ளலாம். அவை சம்பந்தமாக மாகாண சட்டசபைகளுடன் கலந்து பேச வேண்டியது தகுதியும் முறையுமாக இருக்க, இவ்விதம் செய்யப்பட்டிருப்பது என்ன நியாயம்?
>
> அரசியல் நிர்ணய சபையில் நிகழ்ந்துள்ள விவாதங்களைக் கவனிக்கும் போது மைனாரிட்டிகளுக்கு நியாயம் கிடைக்கும் என்று நம்பக் கூடியதாக இல்லை. பிற்பட்ட வகுப்பினர் என்ற காரணத்தினால் இதுவரை தனிச்சலுகை பெற்று வந்த மைனாரிட்டிகளுக்கு உத்தியோகத்தில் இனிமேல் விசேஷ பிரதிநிதித்துவம் இருக்காது.
>
> இது மட்டுமா? நம் வாழ்க்கையின் ஓர் இன்றியமையாத அம்சமாக விளங்கி வருவதும், தென்னியத் திராவிட இனத்தின் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் காரணமாய் இருந்து வருவதுமான பிரதிநிதித்துவ முறை ரத்து செய்யப்பட்டு விடுமாம்!" ('விடுதலை': 6-8-1947).

இவைபோன்று இன்னும் பல திறனாய்வுக் கருத்துகளை, உருவாக்கிக் கொண்டிருந்த அரசியலமைப்புச் சட்டம் பற்றித் தம் அறிக்கையில் பதிவு செய்த பெரியாரவர்கள்,

"திராவிடர்களாய்ப் பிறந்துள்ள எல்லா மக்களும் சுறுசுறுப்புடன் வீறு கொண்டு எழுங்கள்! எல்லா இடங்களிலும் பொதுக் கூட்டங்கள் போடுங்கள்! பொது ஜனக் கருத்தை ஒன்று திரட்டுங்கள்! நான் மேலே கூறியவற்றை நாடெங்கும் பரப்பி, திராவிடச் சக்தியை உருவாக்குங்கள்!" என்று கேட்டுக் கொண்டார்.

அதே கட்டத்தில் ஆரிய – இனத்தில் பிறந்து, பெரும்பான்மைத் தமிழர்களான இந்நாட்டுக்குரிய மக்களுடன் உறவு கொள்ளாது தங்களைத் தனிமைப்படுத்திக் கொண்டு ஆணவத்துடன் வாழும் பிரிவினருக்கும் வேண்டுகோள் வைத்தார் பெரியார். அது இது:

"திராவிடம் விழித்தெழுந்து விட்டது. இனி உரிமைப் போராட்டம் விரைவில் துவக்கப்படுவது நிச்சயம். ஆகவே விரைவில் பார்ப்பனத் தோழர்கள், ஒன்று திராவிடர்களோடு சேர்ந்து விட வேண்டும். அல்லது – அவர்கள் குடியேற வடநாட்டில் வசதிகள் செய்து கொள்ள வேண்டும். நாங்கள் குடியேறும் படி கூறவில்லை. அவர்களும் எங்களோடு என்றென்றும் ஒற்றுமைப்பட்டு வாழ வேண்டும்; ஆனால் மனிதர்களாக வாழ வேண்டும் என்பதுதான் எங்களுடைய உள்ளக்கிடக்கை. இதில் எந்தப் பார்ப்பனத் தோழரும் சந்தேகப்பட வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் திராவிடன் என்றுமே விருந்தோம்பல் செய்யத் தவறியதில்லை. ஆகவே பார்ப்பனத் தோழர்கள் நன்றியறிதலோடு எங்களுடன் ஒத்துழைக்க வேண்டும். அந்த ஒத்துழைப்பால் தங்களுக்கும் ஏராளமான நன்மைகள் உண்டாகும். இன்றுள்ள வெறுப் புணர்ச்சிக்கும் ஆளாக வேண்டியிருக்காது! ('விடுதலை': 19–1–1948).

"வெள்ளைக்காரன் வெளியே போன பிறகு தேர்தல் வைத்து அந்தத் தேர்தலில் வெற்றி பெற்று இவர்கள் ஆளுவார்களானால், 'மக்கள் ஆட்சி' என்று வேண்டுமானால் சொல்லலாம். அப்படியில்லாமல் அவன் இவர்களிடத்தில் கொடுத்துவிட்டுப் போனான் என்பதால் இவர்களே ஆளுவது என்பது என்ன நியாயம்? என்று கத்தினால் ஒப்புக் கொள்ள முடியுமா? இது வெள்ளையனுடைய பிரதிநிதிகள் ஆட்சிதானே?

ஆகவே தான், 'இது குடியரசு ஆட்சியல்ல; கொடுமைக்கார – கொள்ளைக்கார ஆட்சி' என்று கூறுகிறோம். 'இந்தச் சுரண்டல் ஆட்சியிலிருந்து விலக வேண்டும்' என்று சொல்லுகிறோம்" ('விடுதலை': 9–4–1950)

'இந்தியா குடியரசு நாடாகிவிட்டது' என்னும் கூற்றின் பொருத்தமின்மை பற்றி அய்யா தந்த அரிய தெளிவுரை இது.

"நாம் வேறு எந்த நாட்டானையாவது; இந்த தேசத்திற்கு வந்து ஆட்சி செய்' என்று கூப்பிடுவதாய் இருந்தால், அது தேசத் துரோகம் ஆகும். ஒரு அமெரிக்கனை, ஜப்பான்காரனை, பிரெஞ்சுக்காரனைக் கூப்பிட்டால் அது வேண்டுமானால் தேசத்துரோகம் ஆகும். ஆனால் நாம் இங்கே இருக்கிற அன்னிய இராஜ்யத்தானை 'வெளியே போ' என்றால் அது எப்படித் தப்பு ஆகும்? எப்படி தேசத்துரோகம் ஆகும்? சொல்லட்டுமே யாராவது?

நாங்கள் கூறுவது எல்லாம் – எங்கள் நாட்டை எங்கள் இராச்சியத்தான் அல்லாத அன்னியன் யாரும் ஆளக் கூடாது; நாங்களே இந்த நாட்டை ஆள வேண்டும்; வெளியில் இருப்பவனுக்கு எவ்வித அதிகாரம் – ஆதிக்கமும் இருக்கக் கூடாது" ('விடுதலை': 2–3–1951).

"நம் திராவிட நாடாகிய சென்னை இராஜ்யமானது சுதந்தரத் தனியரசு நர்டாகப் பிரிந்தாக வேண்டும் என்பது திராவிடர் கழகத்தின் மூச்சு! இந்த மூச்சு நமக்கு இன்றல்ல; நேற்றல்ல; பார்ப்பன துவேஷத்தால் அல்ல; காங்கிரசுக்கு விரோதமாக அல்ல; சுதந்திரத்திற்கு எதிர்ப்பாக அல்ல. ஏனெனில் இன்றைய இந்த நாட்டின் சுதந்தர சுயேச்சை ஆட்சியானது திராவிட நாட்டுக்கு – திராவிட மக்களுக்கு வெள்ளை ஆரியன் ஆட்சியைவிடக் கொடுமையான, புராணக் கற்பனைகளின் ஆரிய ஆட்சிக் கொடுமைகளை விட மோசமான மனு ஆட்சியாகவே இருந்து வருகிறது. வடிகட்டின மஞ்சள் ஆரியன் சர்வாதிகார ஆட்சியாகவே இருக்கிறது. அரசியல், பொருளியல், கல்வி இயல், கலை இயல், மொழி இயல், கலாச்சார இயல், பண்பு இயல், சமய இயல், சமுதாய இயல் முதலிய எல்லா இயல்களும் மஞ்சள் ஆரிய ஆதிக்க இயலாகவும் ஆரியர்களின் சுகபோக இன்ப வாழ்விற்காகவே அமைக்கப்பட்டதாகவும் இருந்து வருகிறது" ('விடுதலை': 12–11–52).

"வெள்ளைக்காரன் இன்னும் 300 கோடி ரூபாய்க்கு மேல் முதலை இங்கேயே விட்டு வைத்துச் சுரண்டிக் கொண்டிருக்கிறான். வட நாட்டான் கொள்ளையனாகவே மாறிச் சுரண்டுகிறான். இங்கேயிருந்து கொண்டே பார்ப்பான் சுரண்டுகிறான். நாம் தனி நாடு கேட்டால், 'சிறிய நாடு வாழ முடியுமா?' என்கிறான். பாக்கிஸ்தான் கேட்டபோதும், இப்படித்தான் சொன்னார்கள். 'நீயாகத் தருகிறாயா? நான் ரஷ்யாவை உதவிக்கு அழைத்து வாங்கிக் கொள்ளட்டுமா?' என்று ஜின்னா கேட்டதும் பணிந்தார்கள். நமக்கு அத்தகைய மான உணர்ச்சி வேண்டும்" ('விடுதலை': 23-7-1951)

"திராவிடத்தை அல்லது தமிழ்நாட்டை விட்டு ஆந்திரர், கர்நாடகர், மலையாளிகள் பிரிந்து போன பின்பு கூட, மீதியுள்ள – யாருடைய ஆட்சேபனைக்கும் இடமில்லாத தமிழகத்திற்குத் தமிழ்நாடு என்ற பெயர்கூட இருக்கக் கூடாதென்று பார்ப்பானும் வடநாட்டானும் சூழ்ச்சி செய்து இப்போது அந்தப் பெயரையே மறைத்து ஒழித்து, 'சென்னை நாடு' என்று பெயர் கொடுத்திருப்பதாகத் தெரிய வருகிறது.

இது சகிக்க முடியாத மாபெரும் அக்கிரமமாகும். எந்தத் தமிழனும் – அவன் எப்படிப்பட்ட தமிழனானாலும் – இந்த அக்கிரமத்தைச் சகித்துக் கொண்டிருக்க மாட்டான். அப்படி யார் சகித்துக் கொண்டிருந்தாலும் என்னால் சகித்துக் கொண்டிருக்க முடியாதென்று சொல்ல வேண்டியவனாக இருக்கிறேன். இதைத் திருத்த, தமிழ்நாட்டு மந்திரிகளையும் சென்னை – டில்லி சட்டசபை, கீழ் மேல் சபை அங்கத்தினர்களையும் மிகமிக வணக்கத்தோடு இறைஞ்சி வேண்டிக் கொள்கிறேன்.

தமிழ், தமிழ்நாடு என்கின்ற பெயர்கூட இந்நாட்டுக்கு, சமுதாயத்திற்கு இருக்க இடமில்லாதபடி எதிரிகள் சூழ்ச்சி செய்து வெற்றி பெற்று விட்டார்கள் என்கின்ற நிலைமை ஏற்பட்டு விடுமானால், பிறகு என்னுடையவோ, என்னுடைய கழகத்தினுடையவோ என்னைப் பின்பற்றும் நண்பர்களுடையவோ வாழ்வு வேறு எதற்காக இருக்க வேண்டும்?" ('விடுதலை': 11-10-1955).

"திராவிட நாடு எது? இதற்கு முன் – 1956க்கு முன் இருந்த சென்னை மாகாணத்தைத்தான் நான் 'திராவிட நாடு' என்று சொன்னேன். அப்போது மலையாளம், கன்னடம், ஆந்திரம் பிரிந்திருக்க வில்லை. வெள்ளையன் இந்த நாட்டை விட்டுப்

போய் விட்ட பிறகு வட நாட்டானும் இந்த நாட்டுப் பார்ப்பானும் சேர்ந்து கொண்டு 'இனிமேல் நமக்கு ஆபத்து' என்று கருதி, நான்கு பிரிவுகளாக வெட்டி விட்டார்கள். இப்பொழுது நம்மோடு ஒட்டிக் கொண்டிருந்த கள்ளிக்கோட்டை, மங்களூர் மாவட்டங்களும் மலையாளம் - கன்னட நாடுகளின் சம்பந்தமில்லாமல் தனித்தமிழ் நாடாக ஆகிவிட்டோம். ஆகவே இதை இப்பொழுது 'தமிழ்நாடு' என்று சொல்லலாம்" ('விடுதலை': 29-8-1956).

"உண்மையாக உள்ளது உள்ளபடி சொல்ல வேண்டுமானால் இந்தப் பனியா பார்ப்பன ஆட்சி ஏற்பட்ட பிறகு தமிழ்நாட்டில் தமிழன் சிறையில் இருக்கும் சிறைக் கைதி போலவே நடத்தப்பட்டு வருகிறான். 'கான்விக்ட் வார்டர்களாக' தமிழர் சேவகர்கள், தமிழர் அதிகாரிகள் ஆகியவர்கள் இருந்து வருகிறார்கள். தமிழர்கள் மந்திரிகளாக இருந்தாலும் சரி, நிர்வாக அதிகாரிகளாக இருந்தாலும் சரி, இவர்கள் யாவருமே 'கான்விக்ட் வார்டர்களை'ப் போலவேதான் இருந்து வர வேண்டியதாக இருக்கிறது. (கான்விக்ட் வார்டர் என்றால், நல்ல அடிமையாக இருந்து விடுதலை பெறக் கருதி, சிறையில் தொண்டு செய்யும் நீண்ட நாள் தண்டனை பெற்ற கைதி) ('விடுதலை': 11-12-1957)

எவரையும் சிந்திக்கத் தூண்டவல்ல அய்யாவின் பட்டறிவு நிரம்பிய அறிக்கை இது.

வடபுலத் தில்லியின் ஆட்சியின் கீழ் வாழ விருப்பமில்லை எனக்காட்டும் வகையில் தமிழ்நாடு நீங்கலான இந்திய தேசப்படத்திற்குத் தீயிடும் கிளர்ச்சியொன்றினைப் பெரியார் அறிவித்தார். அப்போது அவர் வெளியிட்ட கருத்துகளில் சில:

"தமிழ்நாடு எதற்காக யூனியன் (டெல்லி) ஆட்சியின் கீழ் அடிமையாக இருக்க வேண்டும்? இல்லாவிட்டால் என்ன ஆகி விடும்?

வரலாற்றுப்படி நாம் டெல்லியுடன் இணைந்து கூட்டாக இருக்க வேண்டும் என்பதற்கு ஏதாவது ஆதாரங்கள் உண்டா? 56 நாடுகளில் நாம் ஒரு நாட்டவராய் இருந்து வந்தவர்கள்.

வெள்ளைக்காரன் வியாபார நிமித்தம் இங்கு வந்து பல பகுதிகளில் இருந்த நாடுகளையும் பிடித்துத் தனது சவுகரியத்தை முன்னிட்டு இதை 'ஒரு குடைக்கீழ்' கொண்டு வந்தானே தவிர, அதற்கு முன்பு எப்போதாவது டெல்லியை எஜமானனாகக்

கொண்டு தமிழ்நாடு இருந்தது என்று சரித்திரத்தைப் புரட்டிக் காரணம் காட்ட முடியுமா? 'காஷ்மீர் முதல் கன்னியா குமரி வரை' என்ற சொற்றொடருக்கு அய்க்கியப்பட்ட ஒரே நாடு இந்தியா என்ற பொருள் இதற்கு முன் எப்போதாவது இருந்திருக்கிறதா?

பூகோளப்படி எந்த நாடாவது 2000 மைல்களுக்கு அப்பால் எஜமான் ஆட்சியை வைத்திருப்பதும், எதற்கெடுத்தாலும் அங்கு ஓடி ஓடிக் கருத்தும் உத்தரவும் என்ன என்று தெரிந்து, பிறகு செயலாற்றும் தன்மையைக் கொண்டுள்ளதா? எந்த வகையில் இது சரியானதாகும்?

பிர்லா, டாட்டா, டால்மியா போன்றவர்களிடம் வாங்கும் தேர்தல் நன்கொடையும் அதற்குப் பிரதி உபகாரம் என்ற முறையில் சர்க்கார் அவர்களுக்கு வழித்துறை வகுப்பதும் நாம் எடுத்துக்காட்டி வராதவைகள் அல்லவே? இந்திய யூனியன் ஆட்சியின் நிர்வாகத்திறமைக்கும் நீதிக்கும் இன்னும் வேறு எடுத்துக்காட்டுகள் வேண்டுமா?

கடன், கடன் என்று வெளிநாட்டாரிடம் பல்லைக்காட்டிக் கெஞ்சி, பல கோடிகள் மடிப்பிச்சை வாங்கி, காஷ்மீர் முனையிலும், இது போன்ற மற்ற காரியங்களிலும் அவை பாழடிக்கப்பட்டு வருகின்றன. இந்த நிலையில் எதற்காக நாம் டெல்லி ஆட்சியின் கீழ் இருக்க வேண்டும்? ஆண்டு ஒன்றுக்கு 66 கோடி ரூபாய் எதற்காகக் கப்பம் கட்ட வேண்டும்?

ஏக இந்தியத் தோழர்களே, நன்றாகச் சிந்தியுங்கள்! தெளிவடைவீர்களானால், ஜூன் 5ஆம் தேதி மாலை இந்தியத் தேசப் படத்தில் தீ வையுங்கள்! நாடு பிரிக்க, மேற்கூறிய அநியாய அக்கிரமங்களைக் கண்டிக்க, அடக்கி ஒழிக்க இது ஒன்றுதான் வழி, வேறு மார்க்கம் இருந்தால் காட்டுங்கள்; வேறு வழி இருந்தால் சொல்லுங்கள்; இல்லை என்றால் நீங்கள் எங்கள் வழிக்கு வாருங்கள். நாங்கள் சொல்வதைக் கேளுங்கள். பந்தத்தை ஏந்துங்கள்! படத்தைப் பொசுக்குங்கள்!" ('விடுதலை': 22-5-1960)

இக்கிளர்ச்சியின் போது முன்னோடித் தலைவர்கள் தடுப்புக் காவலில் வைக்கப்பட்டனர்; நாடு நெடுகிலும் 4000 பேர் கைது செய்யப்பட்டனர். 16 அகவை 17 அகவை கொண்ட இரண்டு தமிழிளைஞர் இரண்டாண்டுச் சிறை வாழ் செய்யத் தீர்ப்பளிக்கப் பட்டது.

"நாமோ தேர்தலுக்கு நிற்கிறவர்கள் அல்ல. ஆனாலும், நமது திராவிடர் கழகத்தில் திராவிட நாடு பிரிவினையே ஒரு

கொள்கையாக இருந்தாலும், காமராஜர் காங்கிரஸ் தலைவரானவுடன் சமதர்மம் – சோஷலிசம் காங்கிரசின் கொள்கையாக ஆக்கப்பட்டுவிட்டதால், அது தக்கபடி அமுலுக்கு வந்தால், திராவிட நாடு பிரச்சினை அவசியமாக இருக்காது அல்லது கூடாததாய் இருக்காது என்று கருதி, அதிகமாயப் பிரஸ்தாபிக்காமல் இருந்தோம்.

என்றாலும், காங்கிரசின் பலக்குறைவையும் பார்ப்பனரின் கட்டுப்பாட்டு பலத்தையும் பார்க்கும் போது சோஷலிச அமுலுக்குத் தொல்லை ஏற்படும் என்று பயப்பட வேண்டி யிருப்பதால் இப்போது திராவிட நாட்டுப் பிரச்சினையைப் பிரச்சுரம் செய்ய வேண்டியதும் அவசியமென்றே தெரிகிறது.

55 கோடிப் பேருக்கும் ஒரே நாடு; ஆயிரக்கணக்கான சாதியாருக்கும் ஒரே நாடு; ஆயிரக்கணக்கான மொழி பேசுகிறவர் களுக்கும் ஒரே நாடு; பல்வேறு மதம் உடைய மக்களுக்கும் ஒரே நாடு – அதாவது இவ்வளவு பேர்களுக்கும் ஆட்சிக்கு ஒரே ஒரு நாடு! இத்தனை பேரையும் அடக்கி ஆள ஒரே ஒரு கட்சி என்றால் இது என்ன நாடா? சர்க்கஸ்காரன் வளையத்துக்குள் இருக்கும் மிருகப் பிராணிபோல் இப்படி இருக்க என்ன அவசியம் வந்தது?

இதுதான் சுதந்தரமா? மானம் – ரோஷம் கண்ணாடி போட்டுக் கொண்டு பாருங்கள்! ('விடுதலை': 30–3–1967)

'நாட்டுப் பிரிவினை எனும் இவ்வாசிரியவுரையில், 'சமதர்ம' ஆட்சி தக்க முறையில் நடப்புக்கு வந்து விட்டால் நாட்டுப் பிரிவினைக்குத் தேவை இராது தந்தை பெரியாரவர்கள் கருதினார்கள் என்பது தெளிவு படுத்தப்பட்டது. இதுபற்றி நாம் எவ்வளவோ சிந்திக்கலாம்; பேசலாம்; எழுதலாம். மொத்தத்தில், மக்களின் அமைதியான இன்ப வாழ்வை உறுதிப்படுத்தும் சமநிலைக் கொள்கையோடு ஓர் ஆட்சி அமைய முடியுமானால், அதன்பிறகும் நாட்டுப் பிரிவினை நடந்தேயாக வேண்டும் என்று விடாப்பிடியாக நின்று, 'பிரிவினைக்காகவே பிரிவினை' கேட்கும் முரட்டு நிலை தமக்குக் கிடையாது என்பதை 'ஒரே உலகு' விருப்பம் ஏற்ற பெரியார் ஆழமாகப் புலப்படுத்தினார் என்று நம்மால் உணர முடிகிறது.

இந்திய நாடாளுமன்றத்தில் ஆட்சி மொழி நீட்டிப்புச் சட்டம் நிறைவேறிவிட்டதென அறிந்த பெரியார், 17-12-67 ஆம் நாளிட்ட 'விடுதலை' ஆசிரியவுரையில்,

"205 பேர் ஆதரித்தும், 41 பேர் எதிர்த்தும் ஆட்சிமொழி மசோதா நிறைவேறியிருக்கிறது. இது விஷயத்தில் தென்னக எம்.பிக்களின்

*தனித்த கூட்டத்தில் மெஜாரிட்டி பார்த்து முடிவெடுக்கும் முறை கையாளப்பட்டிருக்க வேண்டும். இந்தி பேசும் பகுதியினர் மெஜாரிட்டியாக இருந்து கொண்டிருக்கும் வரையில், நாம் நினைப்பது எதுவும் நடக்காது, அதனால் நாம் இந்திய யூனியனில் இருப்பது நமக்குக் கேடுதரும்விஷயமே!"*

என்பதாக உள்ளக் குமுறலோடு குறிப்பிட்டார்.

*"நான் பிறக்கிறதற்கு முன்னேயே சூத்திரர்கள் நீங்கள்! நான்காம் சாதி நீங்கள்! இப்போது, நாளைக்குச் சாகப்போகிறேன். சூத்திரனாய் விட்டு விட்டுத்தானே சாகிறேன்! அப்புறம் என்ன என்னுடைய தொண்டு? சிந்திக்கணும் நீங்கள்.*

*நமது இயக்கத்தினுடைய இலட்சியம் இந்த டெல்லி ஆட்சியை ஒழிப்பது. இதிலிருந்து விலகணும் என்று எவனாவது நினைத்தால் ஏழு வருஷம் தண்டிப்பேன் என்று சட்டம் போட்டானே, எனக்கும் அண்ணாதுரைக்கும் பயந்து தானே அந்த மாதிரி போட்டான்?*

*சும்மா மாநாடு நடத்தி விட்டுப் போகிறதில்லை; நடந்தவுடனே கிளர்ச்சி ஆரம்பிப்போம்! நாம் அவர்களுக்கு நோட்டீசு விடணும் – என்ன இதை மாற்றுகிறதற்கு வழிபண்ணுகிறாயா? இல்லை என்னை ஒழிக்கிறாயா என்று.*

*முதல் பலி நான். என்னைக் கொடுத்து விட்டுத்தான் உங்களைக் கூப்பிடுவேன். இது கடைசி முயற்சி"*

'விடுதலை' இதழின் 5-11-73ஆம் நாளையப் பதிப்பில் வெளியான திருச்சி சிந்தனையாளர் கழகத்தில் பெரியார் நிகழ்த்திய உரைப் பொழிவின் பகுதிகள் இவை.

"பிரிவினையா?" என்ற தலைப்பில் 23-11-73ஆம் நாளிட்ட 'விடுதலை'யில், "டில்லி அரசாங்கத்தில் இருப்பவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். வெறும் மிரட்டலில் பருப்பு வேகாது. எந்த விளைவுக்கும் தயார்!" என்பதாக ஆசிரியவுரை எழுதிய பெரியார், திட்டமிட்ட வண்ணம், 1973 டிசம்பர் 8,9ஆம் நாள்களில் சென்னையில் 'தமிழர் சமுதாயம் இழிவு ஒழிப்பு மாநாடு' நடைபெறச் செய்தார்.

அய்யா அவர்கள் பங்கேற்ற இறுதி மாநாடாக அமைந்து விட்ட அம்மாநாட்டில் அவர் ஆற்றிய எழுச்சியுரையின் பகுதிகள்:

*"நமக்கு ஞாயம் இருக்கிறது. இந்த டில்லி அரசாங்கத்தை மாற்ற; நமக்கு ஞாயம் இருக்கிறது, நம் அரசாங்கத்தை அமைக்க,*

அடியோடு இந்திய பூராவுக்கும் மாற்றாவிட்டாலும், நம் நாட்டைப் பொறுத்தவரைக்கும் நாம் தனிச் சுதந்தர ஆட்சி என்று செய்து கொள்ள நமக்கு உரிமை இருக்கிறது.

இந்தியா என்கிற ஒரு தேசம் ஆகணும், அதிலே நாம் ஒரு நாட்டானாக இருக்கணும் அப்படி என்று நாம் ஆரம்பிக்கவில்லையே! இந்தியாவை அய்ந்தாறு மாகாணம் பண்ணி, நம் மாகாணம் தமிழ்நாடு, ஆந்திர நாடு, கேரள நாடு கன்னட நாடு இந்த மாகாணங்களும் இத்தோடு இன்னும் ஒன்றோ இரண்டோ சேர்த்து, இது ஒரு யூனியன் ஆக இருக்கணும் என்று அப்படியெல்லாம் திட்டம் இருந்தது. அம்பேத்கார் போட்ட திட்டமே இருக்கிறது. இன்னின்னது இன்னின்னது என்று சுயநலமில்லாத எவனும் - உணர்ச்சியுள்ள எவனும் நம் காரியம் ஞாயம் என்று தான் சொல்லுவான். அதனாலே நாம் செய்கிற காரியம் ஞாயமான காரியம்; முன்னமேயே செய்திருக்க வேண்டியது.

'அடிமையாய் இருக்கிறோம்; இழிவுக்கு ஆளாகி யிருக்கிறோம்; இது மாறுவதற்கு நாம் ஏதாவது செய்யணும். செய்யலாம்' என்று நினைக்கணும். இழிவு நீங்குகிறது ஒன்று, மடமை நீங்குகிறது ஒன்று - ஆக இரண்டு வரும், அது உலகத்திற்கு ரொம்பப் பயன்படக் கூடிய காரியம். இரண்டையும் விட விடுதலைக்கு நமக்கு ஒரு வாய்ப்பு ஏற்படுமே என்கிறது ஒன்று.

அனேகமாக நாம் பிரிந்து கொள்வோம்; நாம் பிரிந்து கொள்வோம். ஏனென்றால் அவன் நம் வழிக்கு வரமாட்டான். பிரியாவிட்டாலும் ரொம்ப உணர்ச்சி நம் மக்களுக்கு உண்டாகும்.

நான் சொல்ல வருவது, நாம் ஜெயித்தோமா தோற்றோமா என்கிற எண்ணம் உங்களுக்கு இருக்கக் கூடாது. நம் கடமையைச் செய்கிறோமா இல்லையா என்கிறதைத்தான் மனதிலே வைத்துக் கொண்டு துணிந்து தொண்டாற்ற வேண்டும்" ('விடுதலை': 10-12-1973).

இவை தமிழினத்தினுடைய இழிவு ஒழிப்புக்காகப் பெரியார் திட்டமிட்டிருந்த போராட்ட நடவடிக்கைகளைப் பற்றி அவர் மாநாட்டு மக்களுக்கு விளக்கிய நெடிய தலைமையுரையில் இடம் பெற்ற இந்திய வல்லாட்சி எதிர்ப்புக் கருத்துகளில் சிலவாகும். ஆனால் அவர் திட்டமிட்ட வண்ணம் போராட்டம் நடப்பாகவில்லை. காரணம் போராட்டம் தொடங்குவதற்கு முன் அவர் இயற்கையாகிவிட்டார்!

தம் மறைவுக்கு நான்கு நாள்களுக்கு முன்னர் சென்னை-தியாகராய நகரில் பல்லாயிரக்கணக்கான மக்கள் கலந்து கொண்ட பொதுக்கூட்டத்தில்,

> **"தமிழ்நாடு தனியாகப் பிரிந்தால் பத்து வருஷத்துக் குள்ளாக நாம் எல்லாம் 100 வருஷம் இருப்போம். ஆகாயத்திலே ஒவ்வொருவரும் பறப்போம்! தமிழன் இந்தியாவிலேயே முதல் நம்பராக இருப்பான். இந்தியாவுக்கே வழிகாட்டக் கூடிய சக்தி உடையவனாகிவிடுவான்!" என்று நம்பிக்கை வெளியிட்டார் பெரியார். ('விடுதலை': 10-12-1973).**

இறுதிவரை, தமிழர்க்கெனத் தனியரசு தேவை என்பதில் பற்றுறுதியும் நம்பிக்கையும் முயற்சியும் கொண்டிருந்தார் தந்தை பெரியார் என்பதை இச்செய்திகளெல்லாம் நிலைநாட்டுகின்றன. வாய்ப்பாக, இங்கே எந்த வடிவத்திலும் உயர்வு-தாழ்வு நிலவாத சமநிலைக் குமுகாயம் சமைக்கப்படுமென்ற சூழ்நிலையும் உறுதிப்பாடும் இருக்குமானால் தனிநாட்டுரிமை கோரத் தேவையிராது என்பதையும், ஆனால் அச்சூழ்நிலை இங்கு நிலவவில்லை யென்பதையும் அவர் தெளிவுப்படுத்தினார் என்பதையும் நாம் நினைவிற் கொண்டால், அவர் குறுகிய மனப்பான்மை படைத்தவராக நாட்டின் ஒற்றுமையைக் குலைக்க முற்பட்டவர் என்னும் பொய்யுடையாரின் குற்றச்சாட்டு முதற்காட்சி நிலையிலேயே தகுதியற்றதெனத் தள்ளுபடி செய்யப்பட்டு விடும்!

தொடர்ந்து மூன்று நாள்களில் "சாதி ஒழிந்த சமுதாயம் அமைக்கின்றாயா? அல்லது எங்களைப் பிரித்து விட்டு விடுகின்றாயா? என்று மத்திய அரசுக்கு நோட்டீஸ் விடவேண்டும்" என்று தூண்டிய பெரியாரவர்கள், மறுநாள்,

> **"மாநில சுயாட்சி கேட்டு மத்திய அரசைக் கெஞ்சுவது எப்படியிருக்கிறதென்றால், ஒருத்தி ஒரு படி மிளகை அடுத்த வீட்டுக்காரியிடம் கொடுத்து விட்டு, ஒரு குவளை ரசத்திற்குப் பிச்சை கேட்டுக் கையேந்தி நின்றது போல இருக்கிறது" என்று உவமை காட்டி விளக்கம் கொடுத்தார். ('விடுதலை': 28-1-1972).**

தம் வாழ்நாளின் இறுதிக் கட்டம் வரையிலும் தமிழர்க்கெனத் தனியரசு இருந்தேயாக வேண்டும் என்னும் கருத்தினை விடாமல் வலியுறுத்திக் கொண்டே வந்தார். தமிழின மீட்பராம் பெரியார், தாம் கொண்டிருந்த பற்றுறுதியை அவர் எவருக்காகவும் எதற்காகவும் கைவிடவேயில்லை. அதுவும் அவர்தம் வாழ்வின் இறுதிக்கட்டத்தில் மீண்டும் மீண்டும் அக்கருத்தை அழுத்தமாக வெளிப்படுத்தினார்.

"நாமிருக்கும் இந்த தேசம் இந்தியா என்பதை நாம் ஏற்றுக் கொண்டால், நாம் இந்து என்பதை ஏற்றுக் கொள்ள வேண்டும். நாம் இந்து என்பதை ஏற்றுக் கொண்டால், நாலாஞ்சாதியாகிய சூத்திரன் என்பதை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும். நாம் சூத்திரன் என்பதை ஏற்றுக் கொண்டால் நாமெல்லாரும் தாசிபுத்திரர் என்பதை ஏற்றுக் கொள்ள வேண்டும். இந்த இழிவிலிருந்து விடுபடுவதற்கு ஒரே வழி தமிழ்நாடு தனி நாடு ஆவது தான்" என்றார் அய்யா ('விடுதலை': 26-8-73).

17-9-73 அன்று பெரியாருக்கு எடுக்கப்பட்ட 95ஆம் பிறந்த நாள் பெருவிழாவின் போது ஏற்புரை கூறிய அய்யா அவர்கள், "அடுத்த போராட்டம் 'தமிழ்நாடு தமிழருக்கே' என்பதுதான்!" என்றார் ('விடுதலை': 18-9-1973)

அன்றைக்கு வெளியான 'விடுதலை' சிறப்பு மலரில் தம் பிறந்த நாட் செய்தியாக வெளியிட்ட கட்டுரையின் சில பகுதிகள்:

> **"அடுத்த ஆண்டு மலரில் எழுதவேண்டிய காலத்தில் நான் இருப்பேனோ இல்லையோ என்கிற பிரச்சினை மாத்திரமல்லாமல், எழுதும்படியான வாய்ப்பு இருக்குமோ இருக்காதோ என்பதே முக்கிய காரியமாகும். இந்திய ஆட்சியிலிருந்து தமிழ்நாட்டை விலக்கிக் கொள்ள முயற்சி செய்தே ஆக வேண்டிய ஒரு கட்டாயமான நிர்ப்பந்தமான நிலையில் நாம் இருக்கிறோம். இந்த முயற்சி நாம் இந்திய ஆட்சியிலிருந்து விலகிக் கொள்ளும் வாய்ப்பு ஏற்படுமா என்பது பற்றி முடிவு செய்து கொள்ள முடியாமல் இருந்தாலும், இம்முயற்சியில் நாம் பலர் சிறையில் இருக்க நேரிடலாம் என்கிறதாலேயேதான் இந்தப்படி எழுதுகிறேன்.**
>
> **இந்திய ஆட்சியில் அரசியல் பிரச்சினை எப்படி இருந்தாலும், சமுதாயப் பிரச்சினையில் இன்றைய இழிவைப் போக்க ஏதாவது முயற்சி செய்துதான் ஆக வேண்டும். ஆதலால் நாம் உடனடியாக இந்தியக் கூட்டாட்சியிலிருந்து விலகி, விடுதலை பெற்று, சுதந்தரத் தமிழ்நாட்டை உருவாக்கும் முயற்சியில் ஈடுபட்டாக வேண்டியவர்களாக இருக்கிறோம்.**
>
> **இன்று அமுலில் இருக்கும் 'இந்து லா' (Hindu Law) என்னும் சட்டத்திலும் பல உயர்நீதி மன்றங்களின் தீர்ப்பிலும் பார்ப்பனரல்லாத இந்து மக்கள் என்பவர்களை மிக இழிவாகக் கூறி நிலை நிறுத்தப்பட்டிருக்கிறது. இந்து என்னும்**

சொல்லுக்குச் சட்டத்தில் கொடுத்திருக்கும் விளக்கம் என்னவென்றால் – கிறிஸ்தவர்கள், முஸ்லீம்கள் தவிர்த்த இந்தியாவில் உள்ள மக்கள் அனைவருமே இந்துக்கள் ஆவார்கள் என்பதாகும். இதன்படி நாத்திகன், பகுத்தறிவுவாதி, பரதேசி முதலிய சகலரும் இந்துக்கள் ஆகி, சூத்திரர் பார்ப்பானின் தாசி மக்கள் என்று ஆகிவிடுகிறார்கள்.

நான் இந்து அல்ல என்று சொல்லிவிட்டால் இழிவு நீங்கிவிடும் என்று தான் முதலில் கருதினேன். பிறகு சட்டங்களைப் பார்க்க ஆரம்பித்த பிறகுதான், இது தெரிந்தது! ஆதலாலேயே தீவிர முயற்சி எடுக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

இன்று நம் நாட்டில் இந்துக்கள் எல்லாருக்குமே அரசியலில்தான் முக்கிய கவனம் இருக்கிறது. அன்றியும், நாட்டுப் பிரிவினை என்றால் எல்லா மக்களும் பயப்படுகிறார்கள். 50 வருஷ காலமாகச் சுயமரியாதை இயக்கம் சாதித்தது என்ன என்று பார்த்தால், சிறிது படிப்பு, பல பதவி, சில உத்தியோகம் பெற நேர்ந்ததோடு, அரசியலில் பார்ப்பனரின் கொட்டத்தை நல்ல அளவுக்கு அடக்க முடிந்தது என்பதல்லாமல், சமுதாயத் துறையில் உள்ள அடிப்படை இழிவு அப்படியே தங்கி, நல்ல அளவுக்குப் பலமும் பெற்று விட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

எனவே நாம் சட்டத்தைப் பற்றிப் பயப்படாமலும், பதவி கிடைக்காதே என்று கவலைப்படாமலும் சுதந்தரத் தமிழ்நாடு பெற ஒவ்வொரு வரும் முடிவு செய்து கொண்டு முன்வர வேண்டியது ஒவ்வொரு தமிழனுக்கும் மிக அவசியமான காரியம்.

'சுதந்தரத் தமிழ்நாடு எனது இலட்சியம்' என்ற சொற்களை ஒவ்வொருவரும் இலட்சியச் சொல்லாகக் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். பொது மக்களே! இளைஞர்களே! பள்ளி–கல்லூரி மாணவர்களே! மாணவிகளே! உறுதி கொள்ளுங்கள்!" ('விடுதலை–மலர்': 17–9–73).

அதே மாதம் 30ஆம் நாளன்று மதுரையில் நடந்த 'கருஞ்சட்டைப் படை மாநாடு பெரியார் தலைமையில் நடந்தது. அப்போது "கழகத் தோழர்களே, நீங்கள் உயிருக்கு அஞ்சாதவர்கள்! தியாகத்தின் சின்னமாகிய கருஞ்சட்டை அணிந்திருப்பவர்கள்! சுதந்தரத் தமிழ்நாடு கேட்பது சமுதாய விடுதலை பெறுவதற்காகத் தான். கேட்பது சட்ட விரோதந்தான். ஆனால் நியாய விரோதமல்ல!

ஏழாண்டு சிறையிலிட்டால் பரவாயில்லை என நீங்கள் ஏற்க வேண்டும்'' என்று கூடியிருந்த ஆயிரமாயிரம் இயக்கத் தொண்டர்களை அய்யா ஊக்குவித்து அணியப்படுத்திய செய்தியை 'விடுதலை' பரப்பியது.

"மொழி மசோதாவால் விபரீதமே விளையும் - நாடு பிரிய வழி வகுக்கும்" எனப் பெருந்தலைவர் காமராசர் வரும்பொருளுரைத்ததை 18-12-67ஆம் நாளைய 'விடுதலை'யின் முதல் பக்கத் தலைப்புச் செய்தியாக வெளியிட்ட பெரியார், "தமிழ்நாடு தனிச் சுதந்தர நாடாக மாறினாலொழியத் தமிழர் தன்மானத்தோடு வாழ முடியாது" என்று கொட்டை எழுத்துகளில் கட்டம் கட்டிக் கருத்து வெளியிட்டார்.

மொழிச் சட்ட நிறைவேற்றத்தை அடுத்து, நான்கே நாள்களில் நாடாளுமன்றத்தில் 'பிரிவினைத் தடுப்புச் சட்ட'த்தினை - திராவிட முன்னேற்றக் கழக - பொதுவுடைமைக் கட்சி உறுப்பினர்கள் வெளி நடப்புச் செய்ய, ஆட்சியாளர் நிறைவேற்றிக் கொண்டனர். அக்கட்டத்தில், 21, 22-12-67 இரு நாள்களிலும் 'விடுதலை'யில் பிரிவினை எதிர்ப்புச் சட்டம், 'பிரிவினை அவசியமா? இல்லையா? என்ற ஆசிரியவுரைகள் தீட்டினார் அய்யா.

"தி.மு.க. மந்திரிகள் தவிர, மற்ற தோழர்கள் எல்லாரும் முன் வாருங்கள். போராட்டம் துவக்குவோம்'' என்றும், ''நான் வேண்டுமானால் என்னுடைய 'ஜாதிப் போராட்டத்தை ஒத்தி வைக்கிறேன், இந்தத் தென்னாடு விடுதலைப் போராட்டத்தை முன்னிட்டு. போராட்டம் துவக்க வேண்டியதுதான்! இந்த அரசாங்கம் இருக்கும்மா? விலகுமா?'' என்பதாகச் சீறி, அறை கூவவிட்டார் பெரியார்.

23-10-1973 இல் தொடங்கி 'விடுதலை'யில் தொடர்ந்து நான்கு நாள்கள் பெரியார் இழிவு நீக்க முயற்சி பற்றியே ஆசிரியவுரைகள் தீட்டினார். அவற்றில் இந்தியப் பேரரசின் வல்லாட்சி முறையை மிக திண்மையாக எதிர்த்து ஓங்கிக் குரல் எழுப்பினார். சான்றுக்குத் துண்டங்கள் சில:

> "சென்னையில் டிசம்பர் 8,9 தேதிகளில் நடக்க விருக்கும் மாநாடு முற்ற மகாநாடுகளைப் போல் இல்லாமல், தமிழர் சமுதாயத்தின் மானாபிமானத்தைப் பொருத்த மகாநாடாகும்.
>
> 1922, 23ஆம் ஆண்டுகளில் கூடப் பார்ப்பனர்கள் சூத்திரர் எனப்படுவோராகிய நம்மிடம் பேச நேர்ந்துவிட்டால் 'ஸ்நானம்'

செய்த பிறகு தான் சாப்பிடுவார்கள்! ஸ்நானம் செய்த பிறகு எவ்வளவு அவசர அவசியமான காரியமாய் இருந்தாலும் நம்மிடம் பேச மாட்டார்கள்.

1940இல் கூட, பொது உணவு விடுதிகளில், ஆலயங்களில், ரயில் நிலையங்களில், சத்திரங்களில் சாப்பிட - தங்கியிருக்கப் பார்ப்பனர்க்கு வேறு இடம் மற்றவர்களுக்கு வேறு இடம் என்பதாகப் பிரிவினை இருந்து வந்தது.

இவையாவும் இப்போது மறைந்து விட்டதென்று சொல்லலாம். இவை நடப்பில்தான் மறைந்திருக்கிறது என்றாலும் ஆதாரங்களில் நாளுக்கு நாள் பலப்படுத்தப்பட்டு வருகிறது" ('விடுதலை': 23-10-1973)

"நீதி ஸ்தல சட்டப்படியும் சூத்திரன் - வேசிமகன் என்றிருப்பதையும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றால், இந்த நிலையில் நாம் உயிருடன் வாழ்வதே, அவமானகரமாக இழிவானதுமாக இல்லையா? இவ்வளவு இழிநிலையில்தான் இருந்தாக வேண்டும் என்றால், இந்த ஆட்சியிலிருந்து நாடு விலகிக் கொள்ளுவது தான் மானமுடையதாகும்!" ('விடுதலை': 24-10-1973).

"தமிழ்நாட்டுக்கு டில்லி ஆட்சியினால் ஆக வேண்டிய காரியம் என்ன இருக்கிறது? டில்லிக்காரன் யார்? தமிழன் யார்? இருவருக்கும் என்ன சம்பந்தம்? எதில் ஒற்றுமை? இந்தியாவிலிருந்து பர்மா நாட்டான் பிரிந்து கொண்டான். பாகிஸ்தானிலிருந்து வங்காள தேசத்தான் பிரிந்து கொண்டான். இலங்கை தேசத்திலிருந்து யாழ்ப்பாணர்கள் தமிழர்கள் பிரிய வேண்டுமென்கிறார்கள். தமிழன் செலவில் வாழும் 'கல்' கடவுளைத் தொடக் கூடாது, கடவுள் இருக்கும் இடத்திற்குச் செல்லக் கூடாது என்கிற இழிவை எல்லாம் பொறுத்துக் கொண்டு இருக்க வேண்டும் என்பதற்கு என்ன அவசியம்?" ('விடுதலை': 25-10-73)

"ஜாதிகளைப் காப்பாற்றப் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது, அதாவது மதத்தில் ஆகமத்தில் கைவைக்கக் கூடாதென்று தீர்ப்பளிக்கப்படுகிறது. இந்த இழிவினை நீக்கச் சட்டம் செய்ய வேண்டும்" ('விடுதலை': 26-10-1973).

30-10-1973 அன்று 'விடுதலை'யில் இடம் பெற்ற பெட்டிச் செய்தி மிகமிக முகாமையானதொன்று? "தமிழர்களே! பிரிவினைக்காகப் பிரிவினை கேட்கவில்லை. நான் சூத்திரன் - தாசி

மகன் என்கிற இழிவு நீங்கப் பிரிவினை தவிர வேறு வழி என்ன?" என்பதே அக்கட்டத்திற்குள் அடங்கிய பதினைந்து சொற்கள்!

அதே கருத்தினை 15-11-73 நாளிட்ட 'விடுதலை'யில் பெரியார், 'ஆசிரியவுரையாக வெளியிட்டார். "நானே கூடப் பிரிவினை கேட்கவில்லையே! எங்கள் மீதுள்ள இழிவு நீக்கப்படவில்லையானால் பிரிந்து போவது தவிர வேறு வழியில்லை என்று தான் சொல்லுகிறோம். இனவுணர்வையே முற்றாகத் துறந்து விட்ட 'தமிழர்' என்போருக்கான தெளிவுரையாகப் பெரியார் இவ்வாறு கூறினார்.

'இந்திய விடுதலை நாள்' கொண்டாட்டம் பற்றிப் பெரியார் மேற்கொண்ட நிலைப்பாடு இன்று வரையிலும் இதழ்களும் அரசியல் தலைவர்களும் குறிப்பிடக்கூடிய வரலாற்றுச் செய்தியாய் இருந்து வருகிறது.

'விடுதலை'யில் 9-8-1947 அன்று பெரியார் வெளியிட்ட அறிக்கையில் நமக்கு நல்ல விளக்கம் கிடைக்கிறது. அறிக்கையின் பகுதிகள்:

"வெள்ளையர்கள் இந்தியாவை விட்டு வெளியேறி விடவில்லை! இந்தியாவுக்குக் குடியேற்ற நாட்டு அந்தஸ்து அளித்திருப்பதாய்ச் சொல்லுவதன் மூலம் இந்தியாவின் நிர்வாக அதிகாரத்தை இந்தியருக்கு மாற்றியிருக்கிறார்கள். குடியேற்ற நாட்டு அந்தஸ்து என்பது அதிகார மாற்றமே தவிர, நாடு ஒப்படைப்பு அல்ல. வெள்ளையருக்கும் காங்கிரசுக்கும் ஏற்பட்ட ஒப்பந்த ஆட்சிதான் ஒழிய, இந்திய மக்களுக்கு ஏற்பட்ட சுதந்தர ஆட்சியல்ல.

ஏற்படப்போகும் மாகாண ஆட்சி என்பது வெள்ளையர் அதிகார ஆட்சிக் காலத்திலிருந்த உரிமையைவிட மோசமான ஆட்சியேயாகும். அதிகாரங்கள் யாவும் மத்திய அரசாங்கத்திற்குத் தான் உண்டு.

வடநாட்டுக்கும் தென்னாட்டுக்கும் சமுதாயத்துறையிலும் பொருளாதாரத்துறையிலும் ஏராளமான பேதம் உண்டு. வியாபாரத்தில் வடநாட்டார் கொள்கை இனியும் அதிகம் படுமே ஒழிய சிறிதும் குறையாது.

ஆத்மார்த்தத்துறை என்னும் மதக் கொடுமையால் சமுதாயக் கொடுமை வடநாட்டார் இஷ்டப்படிதான் பெருகுமே தவிர, சமுதாய சமத்துவம் ஏற்பட வழியில்லை.

நாம் இன்று திராவிட நாடு கேட்பது முக்கியமாய் வடநாட்டான் பொருளாதாரச் சுரண்டலும் ஆரியன் விளைத்த சமுதாய இழிவும் நீங்க வேண்டும் என்பதற்காகவேயாகும்.

ஆகவே வெள்ளையர் நம்மை மோசடி செய்ததை வெறுக்கவும் கண்டிக்கவும் அறிகுறியாகவும், காங்கிரசின் - அதாவது, வடநாட்டு பனியாக்களுடையவும் ஆரியப் பார்ப்பனர்களுடையவும் சூழ்ச்சிக்கும் ஏமாற்றும், தந்திரத்திற்கும் நாம் ஏமாந்து விடவில்லை என்பதைக் காட்டவும் பூரண சுயேச்சை உள்ள திராவிட நாடுதான் நமது லட்சியமே தவிர, அதற்குக் குறைந்த எதைக் கொண்டும் நாம் திருப்தியடைய மாட்டோம் - ஓய மாட்டோம் - கிளர்ச்சி செய்தே தீருவோம் என்பதைக் காட்டவும் இம்மாதம் 15ஆம் தேதி நடக்கும் சுதந்திரத் திருநாள் என்னும் ஆரியர் - பனியா ஏமாற்றும் திருவிழாவில் நாம் கலந்து கொள்வதில்லை.

இதைக் காங்கிரஸ்காரரும் ஆரியர் - பனியாக்கள் அடிமைகளும் திருத்திக் கூறி, "வெள்ளையனை வெளியேற்றுவது திராவிடர் கழகத்தாருக்கு இஷ்டமில்லை" என்று விஷமப் பிரசாரம் செய்வார்களாகில்,அது காங்கிரசாரின் மற்றொரு பித்தலாட்டப் பிரசாரம் என்று திராவிட மக்கள் கருத வேண்டுமே ஒழிய, ஏமாந்து போகக் கூடாது என்று வேண்டிக் கொள்கிறேன்"

இவ்வறிக்கையைப் போன்றே இந்தியக் குடியரசு நாள் கொண்டாட்டத்தின் போதும் பெரியார் வெளியிட்ட அறிக்கையும் குறிக்கத் தக்கது.

"அரசியல் சட்டம் பொது மக்கள் பிரதி நிதிகளால் செய்யப்பட்டதல்ல என்பதோடு, அது பொதுமக்களுக்கு - உண்மையான குடியரசு ஆட்சிக்கு ஏற்ற தல்ல. அது முதலாளிகளுக்கும் வடநாட்டார்களுக்கும் தென்னாட்டைச் சுரண்டி அடக்கி ஆளுவதற்கு ஏற்ற குடியரசே ஆகும். இந்தக் 'குடியரசு' என்பது ஏழை - பாட்டாளி மக்களுக்கும் பாமர பொது மக்களுக்கும் சிறிதும் பயனற்றது என்பதோடு அவர்களுக்குக் கேடானதுமாகும்.

பிரிட்டிஷ் ஆட்சி இந்நாட்டில் இருக்கும் போதே திராவிட நாடு என்னும் சென்னை மாகாணத்தை இந்தியப் பொது ஆட்சியிலிருந்து பிரித்து, அதன் சம்பந்தம் இல்லாத திராவிட - தனி - சுதந்தர ஆட்சி நாடாக ஆக்கப்பட வேண்டும் என்கின்ற கிளர்ச்சி இந்நாட்டில் இருந்து வருவதைக் காங்கிரசு, உணர்ந்திருந்தும், பிரிட்டிஷ் அதிகாரம் - ஆதிக்கம் காங்கிரசாரிடம் ஒப்புவிக்கப்பட்ட

பிறகும் அந்தக் கிளர்ச்சி தொடர்ந்து நடந்து கொண்டு வருவது காங்கிரசுக்குத் தெரிந்திருந்தும், அப்படிப்பட்ட கிளர்ச்சி செய்பவர்கள் திராவிடர் கழகத்தார் (ஜஸ்டிஸ் கட்சியார்) என்பதும் அக்கட்சிக்கு நாட்டில் அதிகமான ஆதரவு - செல்வாக்கு இருக்கிறது என்பதையும் நன்றாய் அறிந்திருந்தும், அதை அடக்கு முறைத் தத்துவங்களால் அடக்கி அலட்சியப்படுத்தி வைத்துக் கொண்டு தங்கள் நலத்துக்கும் நினைப்புக்கும் ஏற்ற வகையில் 'குடியரசு' ஆட்சி ஏற்படுத்திக் கொண்டால், இதை எப்படி திராவிட மக்களால் - குறிப்பாக, திராவிடர் கழகத்தாரால் (ஜஸ்டிஸ் கட்சியாரால்) ஒப்புக் கொள்ளவும் ஆதரிக்கவும் முடியும்?

ஆகவே இந்தக் கொண்டாட்டத்தில் எவருமே கலந்து கொள்ளக் கூடாதென்பதோடு, இதைத் துக்க நாளாகக் கருதி, துக்கக்குறிகாட்ட வேண்டியது தவிர்க்க முடியாத அவசியமாகும்" ('விடுதலை': 20-1-1950).

இவ்விரண்டு அறிக்கைகளை யொட்டி அவற்றில் அடங்கிய உண்மைகளையும் உணர்வுகளையும் விளக்குகின்ற ஆசிரியவுரைகள் 'விடுதலை'யில் நிறைய வெளியாயின. மேலும் அரசமைப்புச் சட்டத்தில் அடங்கியுள்ள வல்லாண்மைக் கூறுகள் பெட்டிச் செய்திகளாகச் சுருக்கி 'விடுதலை'யில் வெளியிட்டார் பெரியார். அப்போது 'விடுதலை' ஆசிரியர் 'குத்தூசி' குருசாமியவர்களால் எழுதப்பட்ட 'பலசரக்கு மூட்டை'க் கட்டுரைகள் அங்கதச் சுவை (Satire) நிரம்பியவை!

'நாட்டுப் பிரிவினை' அல்லது 'தனிநாடு' என்னும் இப்பொருளின் தொடர்பாக ஒன்றை நாம் நன்றாக - மிகத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

வெள்ளைக்காரர்கள் இந்தியத் துணைக்கண்டத்தை விட்டு வெளியேறி விடுவது என்று தீர்மானித்த பிறகு, அதிகார ஒப்படைப்பு என்னும் கடமையில் நாணயமாக நடந்து கொள்ளவில்லை என்பது உண்மையிலும் உண்மை பேருண்மை! இத்துணைக் கண்டத்தின் பல்வேறு தேசிய இனங்களுக்கும் ஞாயம் வழங்காது இந்து - முஸ்லீம் என்னும் கண்ணோட்டத்தில் மட்டும் கருத்துச் செலுத்த ஒரு சிலரின் கைகளில் அதிகாரத்தை ஒப்படைத்துவிட்டு ஒரு சில தன்னல ஒப்பந்தங்களுடன் வெளியேறுவதில் விரைவு காட்டினர். கிரிப்ஸ் தூதுக் குழுவின் திட்டத்தைக் கூட மீண்டும் ஆய்வு செய்யலாம் என்ற குறைந்த அளவு முயற்சி கூட மேற்கொள்ளப்படவில்லை. இந்திய அரசமைப்பு பற்றிய ஆய்வுக் குழுக்கள் - மாநாடுகள் எத்தனையோ

இங்கேயும் அங்கேயும் நடத்தினார்களே இங்கிலாந்துக்காரர்கள், அவற்றில் பலராலும் வெளியிடப் பெற்ற கருத்துகளையெல்லாம் 'இங்லீஷ் கால்வா'யில் இட்டொழித்துவிட்டு இப்பரந்த துணைக்கண்டத்தின் பல்வகைப்பட்ட மக்களை அவர்கள் வஞ்சித்தமை மாபெரும் வரலாற்றுக் குற்றம், நம்பிக்கை காட்டி ஏமாற்றியோடி விட்ட இழிவான இரண்டகம்!

பெரியார் சென்னையராட்சியின் போதே பத்தாண்டுக் காலம் 'தமிழ்நாடு தமிழருக்கே!' என்று முழங்கிக் கொண்டிருந்தவர். அக்கருத்தை அவரின் இறுதியுரையிற் கூட வெளிப்படுத்திவிட்டே அவர் மறைந்தார். அச்சிந்தனையே அவரின் மூச்சடங்கும்வரை நிலைத்திருந்தது அவரிடம்.

அதே போழ்தில் ஏற்ற - தாழ்வு நிலை எந்த வடிவத்திலும் இல்லாமல் துடைக்கப்பட்டுச் சமவுரிமை - சமநுகர்ச்சி நிலவும் உலகு படைக்கப்பட்டால் கூட ஒன்றாகக் கூடி வாழ்வதை முரட்டுத் தன்மையுடன் விடாப்பிடியாக மறுக்க வேண்டும் என்பதில் பெரியார் ஒரே குறியாய் இருக்கவில்லை.

காமராசரின் சமதர்மத் திட்ட நிறைவேற்றம் குறித்துப் பெரியாருக்கிருந்த நம்பிக்கை பற்றிய அவரின் அறிக்கை; முதல் பொதுத்தேர்தலின் போது, "உண்மையான கம்யூனிஸ்ட் ஆட்சி அமையுமானால் தனி நாட்டுப் பிரிவினைக்குத் தேவை இராது" என்பதாக அவர் அறிவித்தமை (The Hindu: 5-11-1951) "ரஷ்யப் படையெடுப்பை வரவேற்பேன்!" எனும் அவரின் நீண்ட விளக்க அறிக்கை; "பிரிவினைக்காகப் பிரிவினை கேட்கவில்லை!" என்னும் அவரது தெளிவுறுத்தல் அறிக்கை ஆகியவை சான்றாக நின்று அவரின் நிலைப்பாட்டை உணர்த்துகின்றன.

தனி நாடாக வாழும் குறிக்கோளுக்கும் கூடி வாழ இசையும் பண்பாட்டிற்கும் பெரியார் மாந்தப் பற்று ஒன்றை மட்டுமே அடிப்படையாகக் கொண்டிருந்தார் என்பதை நாம் ஆழ்ந்து ஓர்ந்து தேர்ந்து தெளிய வேண்டும்.

### வகுப்புரிமை

வகுப்புரிமைக் கொள்கையின் பொருட்டே, 'காங்ரஸ்' என்னும் பெரிய தேசியக் கட்சியின் மூத்த முன்னோடித் தலைவர்களில் ஒருவர் எனும் புகழ் வாய்ந்த பெருமகனாக இருந்த பெரியார் அப்பேராயத்தை விட்டே வஞ்சின மொழி கூறி வெளிவந்தவர் என்பது வரலாற்றில் இடம் பெற்றுவிட்ட உண்மை.

சுயமரியாதை இயக்கம் கண்டு அதைத் திராவிடர் கழகமாக உருவாக்கிய பெரியார், கழகத்தின் மூன்று அடிப்படை நோக்கங்களில்

ஒன்றாக 'வகுப்புரிமை பெறுதல்' என்பதைப் பலப்பல வாய்ப்புகளில் பறைசாற்றியவர்.

பல்வேறு கட்டங்களில் பல்வேறு கட்சிகள் நாட்டை ஆட்சி செய்த வேளைகளில், அவ்வாட்சிகளுக்குப் பெரியார் வலிய ஒத்துழைப்புத் தந்தமையோ அல்லது கடுமையான எதிர்ப்புக் காட்டியமையோ வகுப்புரிமைக் கொள்கையின் அடிப்படையில்தான் என்பது நிலைநாட்டப்பட்ட ஒன்று.

ஆனால் அதே நேரத்தில் வகுப்புரிமைக் கொள்கையும் அதன் நடவடிக்கைகளும் எவ்வளவு காலத்துக்கு நீடிக்க வேண்டும் என்று கால எல்லை வகுப்பதில் தொடக்கத்திலிருந்தே பெரியார் தெளிவாக மிகத் தெளிவாக இருந்தார்.

"இந்த நாட்டில் வாழும் கோடிக்கணக்கான பார்ப்பனரல்லாத மக்களுக்கு, இன்று முதலில் சாதி ஒழிப்பதும் சமமாய் நடத்தப்படுவதுமல்லாத வேறு சுயராஜ்யம் என்ன வேண்டியிருக்கிறது என்று யோசித்துப் பாருங்கள்.

சாதி பேதங்கள் ஒழிவது சட்டத்தினால்தான் முடிய வேண்டுமே ஒழிய, பொதுஜன சம்மதத்தில் என்றால் ஒரு நாளும் முடியவே முடியாது. பலாத்காரத்துக்கோ அல்லது தண்டனைக்கோ அல்லாமல் எவனாவது சாதி ஒழிய சம்மதிப்பானா?

பூரண சுயேச்சை பெற்ற இந்தியாவில் பறையனும் பிராமணனும் இருக்க மாட்டார்கள் என்றோ, கொடுப்பன – கொள்வினைக்கு அருகதையற்ற சாதி–மத பேதங்கள் இருக்காது என்றோ ஒரு வாசகம் இருக்குமானால், நான் மாத்திரம் எதற்காக வகுப்புவாரிப் பிரதிநிதித்துவமும் வகுப்பு வாதமும் பேச வேண்டும்?

ஆகவே சட்டத்தின் மூலம் சாதிகள் ஒழிகின்ற போது, சட்டத்தின் மூலம் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை எடுத்துவிடுவது சிறிதும் சிரமமான காரியமல்ல என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்" ('திராவிட நாடு': *30–5–1943*).

''கடைசியாக நான் கூறுவது நமக்கு அழிவையும் கீழ்த்தன்மையையும் வசதியின்மையையும் கொடுக்கிற இந்தச் சாதிகள் ஒழிந்து, மக்களுக்குச் சமமான தன்மை வரும் வரை, இப்போதைய பிற்பட்ட வகுப்பினருக்கு அறிவு வளர்ந்து நாகரிகம் அடைந்து அரசியலில் கலந்து கொள்வதற்காகக் கல்வி, உத்தியோகம் முதலியவைகளில் அவரவர்களின் எண்ணிக்கைக்குத் தகுந்தபடி விகிதாச்சாரம் அளிக்கப்பட வேண்டும் என்பதுதான்" ('விடுதலை': *9–4–1950*).

ஆக, இதழாளர் பெரியாருக்கு வகுப்புரிமைக் கொள்கைக் காப்பு - பரப்பல் நடவடிக்கைகளில் 'விடுதலை' ஞாலத்தின் மாணப் பெரிய உதவி புரிந்திருக்கிறது என்பது நன்கு விளங்குகிறது.

'பெரியார் என்றால் வகுப்புரிமை; வகுப்புரிமை என்றால் பெரியார்' இப்படிக் கூறத் தக்க அளவுக்கு வகுப்புரிமைக் கொள்கையோடு தம்மைப் பிணித்துக் கொண்டவர் அய்யா அவர்கள். 'நீதிக் கட்சி' என்று வழங்கப்பட்ட தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் வகுப்புரிமைக் கொள்கையை பெரியாரின் அயராத போராடல் எனும் தொடர்ந்த நீர் பாய்ச்சுதல் இருந்திராவிட்டால் கனிகள் கொட்டும் மரமாகிப் பயன்தரும் அரிய வரலாறு உருவாகியிருக்கவே முடியாது. நாட்டை ஆண்ட பல அரசுகட்குப் பெரியார் துணை செய்தமையும் செய்யாமையும் வகுப்புரிமைக் கொள்கை அடிப்படையின் மீதே நிகழ்ந்தன. அத்தகைய சுவை நிரம்பிய வரலாற்றைப்படைக்க, அய்யாவுக்கு இருந்த படைக்கலன் 'விடுதலை' நாளிதழே"

> *"நான் கூறுவது, நமக்கு அழிவையும் கீழ்த்தன்மையையும் வசதியின்மையையும் கொடுக்கிற இந்தச் சாதிகள் ஒழிந்து, மக்களுக்குச் சமமான தன்மை வரும் வரை இப்போதைய பிற்பட்ட வகுப்பினருக்கு அறிவு வளர்ந்து நாகரிகம் அடைந்து, அரசியலில் கலந்து கொள்வதற்காகக் கல்வி, உத்தியோகம் முதலியவைகளில் அவரவர்களின் எண்ணிக்கைக்குத் தகுந்தபடி விகிதாச்சாரம் அளிக்கப்பட வேண்டும் என்பது தான். ஒரு கூட்டு வியாபாரத்தில் கடைசியில் வருகிற இலாபத்தில் அவரவர்கள் போட்ட முதலுக்கு ஏற்றவாறுதானே பங்கு பிரிக்க வேண்டும்? அதை விட்டு எல்லாவற்றையும் ஒருவனே எடுத்துக் கொள்வது என்பது என்ன நியாயம்? சாதிகளை ஒழிக்காமல் அவைகளை விட்டு வைத்துக் கொண்டு, இதிலே மட்டும் சாதித்தன்மை கூடாது என்பதிலே ஏதாவது அர்த்தம் இருக்கிறதா? நாம் வரி கொடுக்கிறோம். நமக்குத் தகுந்தபடி கொடுக்க வேண்டும் என்று கேட்பது வகுப்புவாதமா?" ('விடுதலை': 9-4-1950)*

> *"சமுதாயச் சீர்திருத்தம் என்பதற்கு முதற்படி பார்ப்பனர் ஆதிக்கத்தில் இருக்கும் பதவி - உத்தியோகங்களை விகிதாச்சாரம் கைப்பற்ற வேண்டியது என்பதைத்தான் ABCD-யாகக் கொண்டேன்- கொண்டோம். ஆனதினாலேதான் நான் வகுப்புவாதி என்று சொல்லப் பட்டேன் என்பதல்லாமல், நானும் வகுப்புவாத உருவமாகவே இருந்து வருகிறேன்" ('விடுதலை': 5-3-1969).*

"ஒவ்வொரு வகுப்பாருக்கும் இத்தனை உத்தியோகங்கள்தாம் என்று திட்டவட்டமாக வரையறுத்துவிட வேண்டும். அந்த எண்ணிக்கை மேற்பட்டு எவராவது ஓர் ஆள் அதிகமாக உத்தியோகம் பார்த்தால் அவர் மீது ஆக்கிரமிப்புக் குற்றம் சாட்டப்பட்டு, வேலை கொடுத்தவனுக்கு நாணயக் குறைவுக் குற்றம் சாட்டி, அதற்கான தண்டனையும் கொடுக்க வேண்டும். அப்போதுதான் அனைவரும் – எல்லா வகுப்பினரும் சமநிலை எய்த முடியும். இல்லையேல் மேலே இருப்பவர்கள் இன்னும் உயர உயரப் போய்க் கொண்டே இருக்க, தாழ்ந்த நிலையில் – சமுதாயத்தின் அடித்தளத்திலே வாதனையுறுவோர் மேலும் மேலும் தாழ்ந்து அழிந்து போக வேண்டிய நிலைமைதான் ஏற்படும்" ('விடுதலை': 17–8–1950).

"நாம் நம்முடைய உரிமைகளைப் பெறுவது என்றாலே என்ன அர்த்தம் என்றால், நம்முடைய உரிமைகளைப் பறித்து அனுபவித்து வருகிற எதிரிகளின் ஆதிக்கம் அழிவு என்று தான் அர்த்தம். அவர்களின் அழிவின் மீதுதான் நாம் நம்முடைய உரிமைகளைப் பெற முடியும். அந்த அளவுக்கு அவர்கள் நம்மீது, நம் உரிமைகளைப் பெறுவதற்கில்லாமல், ஆதிக்கம் பெற்றிருக்கிறார்கள்.

ஆனால் இந்தக் காரியம் சுலபமானதல்ல; சாதாரணமாகச் சாதித்துவிடலாம் என்கிறதான தன்மையில் இல்லை. இது மிகப் பெரிய காரியம் என்பதோடல்லாமல் மிகமிகப் பயங்கரமான – பலர் பலியாக வேண்டிய காரியமாகும். எதிர்த்துப் போராடுகிற நம் எதிரிகளுக்கு ஒற்றுமை அதிகம்; நமக்கு எவ்வித பலமும் கிடையாது; நமக்குள் ஒற்றுமையும் கிடையாது; துரோகிகளும் அதிகம். ஆனாலும் நாம், பலமிக்க – வலுவுற்றிருக்கும் நம்முடைய எதிரிகளை எதிர்த்துப் போராடியாக வேண்டும். இதற்கு மனத்துணிவு வேண்டும்" ('விடுதலை': 30–5–1951) என்றும்,

"நான் மனித சமுதாயத்தின் 'தகுதி', 'திறமை', 'தரம்' என்பவைகளைப் பார்த்து வந்த அனுபவம் உடையவன். அவைகளைப் பற்றி நான் எழுதி வந்த கருத்துக்கள் இன்னமும் இருக்கின்றன. பிற்படுத்தப்பட்ட – தாழ்த்தப்பட்ட வகுப்புகளுக்காக உழைத்து வந்தவன் – வருபவன் நான். மந்திரிகள் முதல் அவர்களில் வகுப்பு வாரிப் பிரதிநிதித்தவம் ஆகித் தீர வேண்டும் என்பவன்" ('விடுதலை': 18–7–1972) என்றும்,

"இனி நான் எவ்வளவு நாளைக்கு இருக்க ஆசைப்பட முடியும்? எவ்வளவு நாளைக்குத்தான் இருக்க முடியும்? என் நிலை எனக்குத் தெரியும். அதனால்தான் சொல்லுகிறேன். வகுப்புரிமை பெற்றே ஆக வேண்டும் என்று" ('விடுதலை': 18-3-1967)

என்றும் விடாப்பிடியாகத் தம் உள்ளக் கிடக்கையினை வெளிப்படுத்தி வந்தார் பெரியார்.

வகுப்புரிமைக் கொள்கைக்கு இடர்ப்பாடும், எதிர்ப்பும், கேடும் நேரிட்ட காலங்களிலெல்லாம் 'விடுதலை' நாளிதழ் கண்டனக் குரலும் உரிமைக் குரலும் எழுப்புவதை மாபெரும் கடமையாகக் கொண்டது. இந்தியா அரசியல் விடுதலை எய்திய வுடனேயே 1948 மே மாதத்தில் இந்தியப் பேரரசு மாநில அரசுகளுக்கு ஒரு சுற்றறிக்கையை அனுப்பியது.

"அரசாங்க உத்தியோக நியமனங்களில், இந்து மதத்தின் கிளைகளுக்குள் (சாதிப் பிரிவுகளுக்குள்) பேரங்காட்டுவது தற்போதைய அரசாங்கக் கொள்கைக்கு மாறாக வேற்றுமையைத் தோற்றுவிப்பதாகும். மாகாண அரசாங்கங்கள் உத்தியோக நியமனங்களில் இதுவரை சாதிப் பாகுபாடுகளை இதுவரை கைக்கொண்டிருந்து வந்தாலும், இனி செய்யப்படும் நியமனங்களில் எந்த மாகாணமும் சாதிப்பாகுபாடுகள் காட்டக் கூடாது என்பதோடு, தாழ்த்தப்பட்ட மக்களுக்கு என ஒதுக்கப்பட்டுள்ள இடங்கள் தவிர்த்து மற்றவற்றை எல்லா இந்துக்களுக்கும் பொதுவாகவே வழங்க வேண்டும்"

எனக் கட்டளையிட்டது அச்சுற்றறிக்கை.

இந்திய விடுதலையை யொட்டி 'அரசியல் நிர்ணய சபை' என்ற பெயரால் அமைக்கப்பட்ட இந்திய அரசியலமைப்புச் சட்டத்தைத் திட்டமிட்டு உருவாக்கும் பார்ப்பன வல்லாண்மைப் பேரவை, வகுப்புரிமைக் கோட்பாட்டுக் குரல் பேரவையில் ஒலிக்க வொட்டாமல் பண்ணிய சூழ்ச்சியையும் நாணக் கேட்டையும் 'விடுதலை' மிகக் கடுமையாகக் கண்டித்து எழுதிற்று.

"அரசியல் நிர்ணய சபையில் இது காலம் வரையில் இந்தியா முழுமையிலும் பஞ்சாப் லாகூர் முதல் திருநெல்வேலி வரையும், கொச்சி முதல் அஸ்ஸாம் வரையும் இருந்து வந்த வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ உரிமையை நிலைநிறுத்த ஆளில்லாமல் செய்யப் பட்டிருக்கிறது. அதாவது 'வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தைப் பற்றி ஒரு சென்னை மாகாண மெம்பர் ஒரு பிரேரனை கொண்டு

வந்தார். இதனால் அபிப்பிராயபேதம் கடுமையாகி, கட்சிக் கட்டுப்பாடு ஒழுங்குமுறை காரணமாக அத்தீர்மானம் நிறுத்தப்பட்டு விட்டது' என்று காணப்படுகிறது. அங்குள்ள கட்சிக் கட்டுப்பாடு எதுவும், மற்ற விஷயங்களில் தீர்மானம் கொண்டு வருவதையும் பேசுவதையும் வாதிப்பதையும் தடுக்கவே யில்லை.

எனவே, இன்றைய அரசியல் நிர்ணய சபை என்பது திராவிட சமுதாயத்தை இராமாயண காலம் முதல் இருந்து வந்த மனு முறைக்கு ஆளாக்கும் ஒரு பூதேவர்களின் (ஆரியர்களின்) சபையே ஒழிய, இந்நாட்டு மக்களின் அரசியல் சபை அல்ல. அந்த அரசியல் நிர்ணய சபை நடவடிக்கையால் உருவாக்கப்படும் நூல் ஒரு மனுதர்ம நூலேயாகும்"

என்பது 'விடுதலை' 2-12-48ஆம் நாளைய இதழில் இடம் பெற்ற ஆசிரியவுரையின் ஒரு பகுதி.

இக் கண்டனத்தின் பிற்கால விளைவுகளைப் பற்றியெல்லாம் கருதிப் பார்க்க மனங் கொள்ளாமல், அன்றைய ஆணவ அரசியல் வாழ்வுக்காரர்கள் வகுப்புரிமைக் கொள்கைக்கு முரணாக அரசியல் சட்டம் செய்து கொள்ளுவதில் வெற்றி கண்டு, 26-1-1950ஆம் நாளிலிருந்து இந்திய மக்களின் பெயரால் அரசியல் சட்டத்தை நடைமுறைக்குக் கொண்டு வந்தனர். அதாவது அன்று முதல் இந்தியா 'குடியரசு' எனும் நிலை எய்தியது.

இந்திய விடுதலையை யொட்டி, வகுப்புரிமைக் கொள்கையினைக் கைவிடுமாறு மாநிலங்களை இந்திய அரசு வற்புறுத்திப் பார்த்துத் தோல்வி கண்டிருந்த நிலையில், இந்தியா குடியரசாகி, புதிய அரசியல் அமைப்புச் சட்டம் நடப்புக்கு வந்தவுடன், ஆறே மாதத்தில் - கல்வியாண்டுத் தொடக்கத்தில் - சீனிவாசன், செண்பகம் என்ற இரண்டு தமிழ்நாட்டுப் பார்ப்பனர்கள் வகுப்புரிமைக் கொள்கையை எதிர்த்து சென்னை உயர் முறைமன்றத்தில் வழக்குத் தொடுத்து, அரசியல் சட்டத் தொகுப்பு உயர்மட்டக்குழு உறுப்பினராகப் பொறுப்பாற்றி யிருந்த அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் என்பவரை வரவழைத்து வழக்காட வைத்தனர். விளைவு என்னவாக இருக்க முடியும்? இந்திய அரசியலமைப்புச் சட்டத்திற்கு முரணான மாநில வகுப்புரிமை ஆணை செல்லாது என்னும் அதிர்ச்சியூட்டும் தீர்ப்பு அளிக்கப்பட்டது! சென்னை மன்றத் தீர்ப்பினை இந்திய மீவுயர் முறை மன்றமும் உறுதிப்படுத்தியது.

எந்த வகுப்புரிமைக் கொள்கையின் பொருட்டு 'காங்ரஸ்' எனும் பேராயக் கட்சியைத் துறந்து தந்தை பெரியார் வெளியேறி,

அதை நடைமுறைக்குக் கொண்டு வருவதில் வெற்றி கண்டாரோ, அதே வகுப்புரிமை தம் காலத்திலேயே செயல் இழப்பதை அமைதியாகப் பார்த்துக் கொண்டு வாளாவிருக்க முடியுமா, பெரியாரால்? பதைத்துத் துடித்துக் குமுறிப் பொங்கிய பெரியார் மாபெரும் உரிமைக் கிளர்ச்சிக்கு மக்களை அணியப் படுத்தினார். அம்முயற்சிக்கு அருந்துணையாய் இருந்தது 'விடுதலை' நாளிதழே 14-8-1950. அன்று 'வகுப்புரிமை நாள்' கொண்டாடுமாறு மாணவர்களையும் பொதுமக்களையும் வேண்டினார். "14ஆம் தேதி திராவிடத்தின் ஜீவநாடிக்கு உயிர் கொடுக்கும் நாள். வகுப்பு வாரி பிரதிநிதித்துவ உரிமை செத்தால் தமிழன் வாழ்வு, முற்போக்கு, மானம் செத்தது என்று தான் அர்த்தம். திராவிடர் - தமிழர் - இன்று ஓரளவுக்காவது உயிர் வாழ்வது எதனால்? கம்யூனல் ஜீ.ஓ.வால் என்பது ஞாபகமிருக்கட்டும். பார்ப்பனர் தவிர்த்து, வேறு கட்சிக்காரர்கள், கொள்கைக்காரர்கள் யாராய் இருந்தாலும் இதற்காகப் பாடுபட வேண்டாமா?

மாணவர்கள் - மாணவிகள் இளைஞர்கள் - இளம் பெண்கள் - ஆண்கள் - பெண்கள் - வியாபாரிகள் யாவரும் இதில் பங்கு பெற வேண்டும். அதிகாரிகளுடைய மனைவி மக்களை ஊர்வலத்திற்கு - கூட்டத்திற்கு அனுமதியுங்கள். ஊர்வலத்தில் நானும் கலந்து கொள்ளுகிறேன். குறிப்பு: பலாத்காரமான காரியம் சிறிதும் ஏற்பட இடம் தர மாட்டேன்" ('விடுதலை': 10-8-1950).

பெரியார் வகுப்புரிமை நாள் நடத்த வேண்டிய இன்றியமையாமை பற்றி இது போன்ற உணர்ச்சியூட்டும் சொற்கள் நிரம்பிய அறிக்கைகளை அன்றாடம் 'விடுதலை'யில் வெளியிட்டார்.

அதன்படியே தமிழ்நாடெங்கிலும், "வகுப்புரிமை எமது பிறப்புரிமை", "வகுப்புரிமையைத் தொடர்ந்து நடைமுறைப்படுத்துக!" என்னும் ஒலி முழக்கங்களுடன் எண்ணற்ற கிளர்ச்சிப் பேரணிகள் நடத்தப்பட்டன. அந்தக் கிளர்ச்சி நாளன்று (14-8-50) 'விடுதலை'யில் வெளியான பெரியாரின் அறிக்கை அவரது குமுறலையும் சீற்றத்தையும் நன்கு புலப்படுத்தியது.

> **"துவேஷமும் வெறுப்பும் அதிருப்தியும் வளரும்படியாகவே பார்ப்பனத் தலைவர்கள் மேலும் மேலும் அகம்பாவமாகவும் ஆணவமாகவும் தந்திரமாகவும் சூழ்ச்சியாகவும் வஞ்சகமாகவும் காரியங்களைச் செய்து வருவது பார்ப்பன சமுதாயத்திற்கு நன்மை பயக்கும் காரியமாக இருக்க முடியுமா?**
>
> **இன்று துவக்கப்பட்டிருக்கும் இந்த வகுப்பு வாரி உரிமைக் கிளர்ச்சியானது வகுப்புரிமையை மாத்திரம் பொறுத்த கிளர்ச்சி**

அல்ல. இந்த நாட்டில் பார்ப்பனரல்லாதார் – திராவிடர் 100க்கு 90க்கு மேம்பட்டிருந்தும், இந்த நாடு திராவிடர்களுடையதாக இருந்தும், இந்த நாடு திராவிடர்களுடைய உழைப்பின் மீதும் அவர்களது தானதருமத்தின் மீதும் இருந்து வந்தும், இந்த நாட்டை வெள்ளையனுக்கு முன் ஆண்டு வந்தவர்களும் திராவிடர்களாகவே இருந்திருந்தும், இன்று அப்படிப்பட்ட பார்ப்பனரல்லாத திராவிட சமுதாயம் பார்ப்பனர்களிடம் – அதுவும் இந்த நாட்டுக்குப் பிழைக்க வந்து இந்நாட்டு மக்கள் தானதருமங்களாலேயே மனிதர்களான பார்ப்பனர்களிடம் சிக்கிக் கொண்டு இந்தப்படி அல்லற்படவும் இழிவுபடவும், தங்கள் உரிமைக்கு விகிதாசாரத்திற்குப் பார்ப்பனர்களைத் தொங்கவும், பார்ப்பனர்கள் திராவிடர்களைப் பார்த்து, 'உங்களுக்குத் தகுதி இல்லை, திறமை இல்லை; நீங்கள் அடிமை வேலைக்குத் தான் தகுதி' என்று சொல்லவுமான நிலை எதனால் – எது எதனால் ஏற்பட்டதோ அதை அதையெல்லாம் வேரோடு கண்டுபிடித்து அழித்து ஒழிக்க வேண்டும் என்பதற்காகவே இக்கிளர்ச்சி தோன்றியதாகும்.

பார்ப்பனர்களுக்கு அவர்களுடைய சூழ்ச்சியும் தந்திரமுமே ஆயுதமாக இருக்கிறதேயொழிய, மற்றபடி வேறு ஆயுதம் அவர்களுக்குக் கிடையாது. திராவிடர் நிலை அப்படி அல்ல. திராவிடர் மாத்திரம் 100க்கு 25 பங்கு ஒன்று பட்டு விட்டால், பார்ப்பனியத்தைச் சித்திரத்தில் கூட – கண்காட்சிக் கூடத்தில் கூடக் காணமுடியாது. 'திராவிடர்கள் ஒன்று சேரமாட்டார்கள்' என்கின்ற தைரியம் இனி பார்ப்பனருக்கு வேண்டாம்!" ('விடுதலை': 14–8–1950).

இதுபோன்ற எச்சரிக்கைகளைத் தொடர்ந்து வெளியிட்ட பெரியார் இறுதிக் கட்டமாக, 3–12–50 அன்று திருச்சியில் 'வகுப்புவாரி உரிமை மாநாடு' என்னும் பெயரில் ஒரு பெரிய மாநாட்டினைக் கூட்டி, அதில் முறையான வகுப்புரிமை அரசாணை 1928இல் நடைமுறைக்கு வர மூலகாரணமாயிருந்த முன்னாள் அமைச்சர் எஸ். முத்தையா, உலக நாடுகளின் அரசியல் அமைப்புச் சட்டங்களில் கற்றுத் துறைபோகிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் பேராசிரியர் இரத்தினசாமி போன்ற பேரறிஞர்களைப் பங்கேற்கச் செய்ததுடன், இந்திய அரசமைப்புச் சட்டத்தையே திருத்த வேண்டுமெனக் குறிப்பிட்டு, இப்படி அறிவித்தார். "வகுப்புவாரி உரிமையே எனது அரசியல் வாழ்வில் ஏற்பட்ட ஒரு முக்கிய திருப்பத்திற்குக் காரணமாய் அமைந்தது! வகுப்புவாரி நியமன

உத்தரவு இன்று சுப்ரீம் கோர்ட்டில் விவாதத்தில் இருக்கிறது. எனவே அதுபற்றிப் பேசுவது தவறாகும். ஆனால் எதற்கும் துணிந்து விட்ட நமக்கு இதுபற்றி மட்டும் ஏன் கவலை பிறக்கப் போகிறது. வெள்ளம் தலைக்கு மேல் ஏறிவிட்டது; சாண் ஏறினால் என்ன? முழம் ஏறினால் என்ன? சட்டம் சட்டம் என்று மரியாதை தரத்தர, அது நமக்கே கஷ்டம் கஷ்டம் என்று மேலும் கஷ்டத்தை விளைவிக்குமானால் அச்சட்டத்திற்கு நாம் மட்டும் ஏன் மரியாதை கொடுக்க வேண்டும்? எவ்வளவு காலந்தான் நாம் அக்கிரமத்தைப் பொறுத்துக் கொண்டிருப்பது? நமது உண்மைத் தகுதிக்கும் திறமைக்கும் எந்தப் பார்ப்பானும் ஈடாகமாட்டானே!

பார்ப்பனர்களும் காங்கிரஸ்காரர்களும் என்னவோ நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். நமது போராட்டத்தையும் நவகாளிப் போராட்டமாக ஆக்கி வைக்க வேண்டுமென்றே அவர்கள் விரும்புகிறார்கள் போலும். நாம் அதற்கும் துணிந்துதான் – ஒரு நவகாளி யல்ல, பல ஜாலியன்வாலாபாக் அட்டூழியங்களுக்கும் துணிந்துதான் இப்போராட்டத்தில் இறங்கியுள்ளோம். நம் மாகாணத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்; நம் மானத்தையும் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்!" ('விடுதலை': 13–12–1950).

"உத்தியோகம் எவர் அப்பன் வீட்டுச் சொத்து? உத்தியோகத்துக்குத் தரப்படும் சம்பளம் யார் தாய்–தந்தையார் பாடுபட்ட சொத்து? உத்தியோகம் யாருக்காக – எந்த வகுப்புக்காக நிருவாகம் செய்யப்படுவது என்பதை ஒரு நாட்டானோ மற்ற வர்க்கத்தானோ மற்ற வகுப்பானோ நம் நாட்டில் வந்து உத்தியோகம் பார்ப்பதைப் பிராணனை விட்டாவது தடுக்க மாட்டானா? என்பதாக அய்யா சினத்தோடு வினவினார். ('விடுதலை': 29–8–1950).

"அதிகாரம், உத்தியோகங்களில் வகுப்பு, உள்வகுப்பு, உட்பிரிவு சாதி வகுப்புரிமை வேண்டும்" ('விடுதலை': 18–7–1972).

இவ்வாறு வகுப்புரிமை பற்றிய வழிகாட்டல்கள் தந்த பெரியாரவர்கள், "தமிழர்கள் இவற்றைப்பற்றி நல்ல வண்ணம் யோசித்து, கட்டுப்பாடான கிளர்ச்சி செய்தவன் மூலம் பரிகாரம் பெற வேண்டுமென்று ஆசைப்படுகிறேன்" ('விடுதலை': 17–9–1954) என்றும்,

"தாய் வயிற்றில் பிறந்த எல்லா மக்களுக்கும் சம அனுபவம் இருக்க வேண்டும் என்று கருதி, ஒன்றுக் கொன்று குறைவு - அதிகம்

இல்லாமல் பார்த்துக் கொள்வது எப்படி ஒரு தாய்க்கு இயற்கைக் குணமாக இருக்குமோ, அது போலத்தான் எனக்கும் தோன்றுகிறது. மற்றும் அந்தத் தாய் தமது மக்களின் உடல் நிலையில் இளைத்துப் போய், வலிவுக் குறைவாய் இருக்கிற மகனுக்கு, மற்ற குழந்தைகளுக்கு அளிக்கிற போஷணையைவிட எப்படி அதிகமான போஷணையைக் கொடுத்து, மற்ற குழந்தைகளோடு சரிசமானமுள்ள குழந்தையாக ஆக்க வேண்டுமென்று பாடுபடுவாளோ, அதுபோலத்தான் நான் மற்ற வலுக்குறைவான பின்தங்கிய மக்களிடம் அனுதாபம் காட்டுகிறேன். இந்த அளவுதான் நான் பார்ப்பனரிடம் மற்ற வகுப்புகளிடமும் காட்டிக் கொள்ளும் உணர்ச்சி ஆகும்" ('விடுதலை': 1-1-1962)

இப்படியெல்லாம் வகுப்புரிமைக் கருத்துகளை வெளியிட்ட பெரியார், பார்ப்பனரல்லாத் தமிழரின் முன்னேற்றத்திற்குப் பேருதவியாக 22 ஆண்டுகள் நடைமுறையில் இருந்து வந்த சென்னை அரசின் வகுப்புரிமை ஆணை, ஆங்கிலேயர் ஆட்சிக்குப் பின் நடப்புக்கு வந்த இந்திய அரசியலமைப்புச் சட்டத்திற்கு முரணானது என்பதாக உயர்முறை மன்றமும் மீவுயர் முறை மன்றமும் தீர்ப்பளித்த கட்டத்தில் சீறி எழுந்து, பல்வேறு கிளர்ச்சி நடவடிக்கைகளை மேற்கொண்டார். அப்போது அவர் தொடர்ந்து வெளியிட்ட காட்டமான அறிக்கைகளை மக்களிடம் கொண்டு சென்றது 'விடுதலை'யே.

இதுபோன்ற அறிக்கைகளின் பயனாக விளைந்த பரபரப்பான சூழ்நிலைதான் இந்திய அரசியற் சட்டத்தின் முதலாம் திருத்தத்திற்கு வழி வகுத்து, இடவொதுக்கீட்டு ஏந்தினை ஓரளவுக்கேனும் மீட்டளித்தது!

## கடும் புலி வாழும் காடு!

பார்ப்பனர் - திராவிடர் போராட்டம் பற்றிய பெரியாரின் கருத்துகளை 'விடுதலை' இதழ் 19-5-1948 அன்று ஏந்தி வெளிவந்தது.

> **"பார்ப்பனர் – திராவிடர் போராட்டம் ரொம்பவும் வளர்ந்து விட்டது. பார்ப்பனர்களும் துணிந்து விட்டார்கள். ஆட்சி தம் ஆதிக்கத்தில் உள்ள போதே நம்மீது பாய்ந்து தம் ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொள்ள நினைக்கிறார்கள். 'கறுப்பு நாய் வெள்ளை நாய் ஆகாது; கழுதை குதிரை ஆகாது,' ஆண் பெண்ணாக மாறமுடியாது. இவை எப்படி ஆண்டவன் படைப்போ அதே போல் ஆண்டவனால் பார்ப்பனாகப் படைக்கப்பட்டவன் பார்ப்பானாகத்தான் இருப்பான்.**

சூத்திரனாய் பிறப்பிக்கப்பட்டவன் சூத்திரனாகத்தான் இருப்பான். இவை மாற்ற முடியாதவை' என்று கூறியிருக்கிறார்கள்.

திவான் பகதூர் சாஸ்திரியார், சுப்பிரமணிய அய்யர் ஆகியோர் கூடி, இனி இரண்டில் ஒன்று பார்த்துக் கொள்ள இருக்கிறார்கள். 'புல்லேந்திய கை வாளேந்தும். பலமுறை வாளேந்திப் பலரைக் கொலை செய்திருக்கிறோம். பலரை அண்டியிருந்து கெடுத்திருக்கிறோம்' என்று கூறி, மேலும் மார்தட்டிக் கூறுகிறார்கள். 'சிப்பாய் கலகத்தை நடத்தியவர் யார் தெரியுமா? இராணா என்கிற ஒரு பார்ப்பனன்தான் ஞாபகமிருக்கட்டும். திருநெல்வேலியில் ஆஷ்துரையைச் சுட முன்வந்தவன் யார் தெரியுமா? வாஞ்சி என்கிற ஒரு பார்ப்பனன். காந்தியாரைக் கொன்றது கோட்ஸே என்கிற ஒரு பார்ப்பான் என்பது ஞாபகமிருக்கட்டும்!' என்று துப்பாக்கி எடுக்குமளவுக்குத் துணிந்து நம்மைப் போருக்கழைக்கிறார்கள்.

புல்லேந்திய கை வாளேந்தினால் வாளேந்தியவர்கள் என்ன ஏந்துவார்கள் என்பதை நினைத்துப் பாருங்கள். விரல் உரல் ஆனால் உரல் என்னவாகும்? அப்புறம் உங்கள் கதி என்னவாகும் என்பதையும் நினைத்துப் பாருங்கள். பார்ப்பனர்கள் வாழை இலைகள்; திராவிடர்கள் முட்செடிகள்! வாழை இலை முள்ளின் மீது மோதினாலும், முள் வாழை மீது மோதினாலும் வாழை இலைதான் அழிந்து படும். அதுபோல் பார்ப்பனர் திராவிடர் மீது மோதினால் அவர்கள் தாம் அழிவார்கள். திராவிடர்கள் பார்ப்பனர் மீது மோத ஆரம்பித்தார்களோ - அப்புறம் பார்ப்பனப் பூண்டே இந்நாட்டில் இருக்காது இதைப் பார்ப்பனர்கள் உணர வேண்டும். பார்ப்பனத் தோழர்களே, எங்களை முட்டாள்களென்று கூறி, உங்களைப் புத்திசாலிகள் என்று பெருமை யடித்துக் கொள்ளுகிறீர்கள். ஆணவப்பட்டு அழிந்து போகாதீர்கள். புத்திசாலிகளானால், புத்திசாலிகளாகவே பிழைத்துக் கொள்ளுங்கள்".

ஒருவர் எத்துணை பெரிய படிப்பாளியாய் - திறமையாளராய் - நற்பண்பு மணியாய் இருந்தாலும் அவர் பார்ப்பனரல்லாத 'சூத்திர'னாய்ப் பிறந்து விட்டால், இந்த நாட்டில் உரிய மதிப்பும் பெருமையும் எய்த அவரால் முடியவே முடியாது என்னும் சூழ்நிலை நிலவும் அவலத்தைப் பெரியாரவர்கள் சித்திரபுத்திரன் என்ற பெயரில் 2-10-1950 'விடுதலை'யில் எப்படிச் சாடினார் என்பதைக் கேளுங்கள்.

"பிறந்தாலும் சூத்திரனாய்ப் பிறக்கக் கூடாது!" எனும் தலைப்பிட்டுப் பெரியார் தம் தூவலை ஓச்சியிருக்கிறார் இப்படி:

"மேல் நாட்டில் பிறப்பதாயிருந்தால் நாயாய்ப் பிறந்தாலும் கழுதையாய்ப் பிறந்தாலும் மேன்மை பெறலாம். "நரக" பூமியாகிய நம் திராவிட நாட்டில் பிறக்க வேண்டுமானால் பார்ப்பானாய்ப் பிறந்தால்தான் பயன் பெறலாம். குஷ்டரோக – குடிகார – தூர்த்தப் பிராமணனானாலும் அனாமதேயப் பிராமணனானாலும் இந்நாட்டில் பிராமணப் பிறவிக்கு மரியாதை – மேன்மை கிடைக்கும்! திராவிடனுக்கு, திராவிட நாட்டில் அவன் எவ்வளவு மேதாவியாக இருந்தாலும் மரியாதை கிடைக்காது.

உதாரணம்: நேற்று கார்ப்பரேஷனில் சர்.ஏ. ராமசாமி முதலியார் ஆண்டு விழாவுக்கு அழைக்கப்பட்டு அங்கு சென்று அருமையான சொற்பொழிவு ஆற்றியிருக்கிறார். அவர் உலகம் அறிந்த மேதாவி அவரால் இந்தியாவுக்கே பெருமை கிடைத்திருக்கிறது. சுதந்தர இந்தியாவில், அதாவது வெள்ளையன் இந்தியாவில் அல்ல – "பாரத்" இந்தியாவில், தாம் விரும்பாமல், தம்மைக் கேட்காமல் கூட, தமக்கு கவர்னர் வேலை கொடுக்கப்பட்டதை வேண்டாம் என்று சொன்னவர்.

அப்படிப்பட்ட ஒருவரை அழைத்து, தன்னைப் பெருமைப் படுத்திக் கொண்ட கார்ப்பரேஷன் அவருக்கு ஒரு அட்ரஸ் படித்துக் கொடுக்கக் கூட மனம் பெறவில்லை! காரணம் ராமசாமி முதலியார் 'சூத்திரர்' கார்ப்பரேஷனில் மெஜாரிட்டி கவுன்சிலர்களாக இருப்பவரும் 'சூத்திரப்' பிண்டங்கள். தங்கள் இனம் என்ன என்பதையே அறியாதவர்கள்.

அதே கார்ப்பரேஷனுக்கு அடுத்த நாள் ஒரு பார்ப்பனர்– இந்த நாட்டுப் பார்ப்பனர் வடநாட்டுக்குச் சென்று, 'சிவானந்த சரஸ்வதி என்று பட்டம் சூட்டிக் கொண்டு பார்ப்பனர்ப் பத்திரிகை விளம்பரத்தின் மீது 'பகவான்' – 'சுவாமி' ஆகிக் கொள்ளைக்காக வந்த வழியில் அழைக்கப்பட்டு, டீ பார்ட்டிக் கொடுக்கப்பட்டு, வரவேற்பு கொடுக்கப்பட்டு, மகா ஆடம்பரம் செய்யப்பட்டிருக்கிறது! அவர் செய்த சொற்பொழிவில் உதிர்ந்த முத்துகளோ அன்பு, ஆத்மா, இன்பம், ஈவு இரக்கம் என்பன போன்ற பண்டாரப் பேச்சுகளுடன் பஜனை பாடினார். அவரின் சிஷ்யர்கள் கூடவே பின்பாட்டுப் பாடினார்கள். நல்ல பஜனை நடந்தது!

இதிலிருந்து என்ன தெரிகிறது என்றால், இந்தியாவில் பிறந்தால் பார்ப்பனனாய்ப் பிறக்க வேண்டும். இல்லாவிட்டால் கழுதை நாயாகவாவது மேல்நாட்டில் பிறக்க வேண்டும் என்பதுதான்.

அதனால்தான் தமிழ்நாட்டில் ஆங்கிலமும் இந்தியும் கட்டாயப் பாடம். இந்தியாவுக்குத் திராவிடநாடு ஒரு சிற்றரசு!"

பெரியாரின் இனமான வுணர்வு எப்படி எழுத்து வடிவம் பெற்றது பார்த்தீர்களா? பெரியாருக்குத்தான் எத்தகைய குமுறுல்!

"100-க்கு 3 பேரேயுள்ள உங்களுக்கு உயர்ந்த பதவிகள் எல்லாம் சொந்தமாய் இருப்பது முறையல்ல. பாடுபடும் பாட்டாளிகள் சூத்திரர்களாகவும் பாடுபடாத சோம்பேறிகள் உயர்சாதிக்காரர் களாகவும் இருப்பது நேர்மையல்ல என்பதை நீங்கள் உணர்ந்து கொள்ளுங்கள். பொதுவாக உங்களுக்குச் சகல உரிமைகளும் வாங்கிக் கொடுத்தவர்கள் திராவிடர்கள் தான் என்பதை உணருங்கள். எங்களையும் உங்கள் சகோதரரைப் போல் நடத்துங்கள்.

பார்ப்பனர்கள்தாம் எங்கு பார்த்தாலும் நமக்குத் தொல்லை கொடுத்து வருகிறவர்கள். நமது கூட்டங்களுக்குத் தடை விதிக்கும்படி பார்ப்பன சப்-இன்ஸ்பெக்டர்களைத் தூண்டு கிறார்கள். கருப்புச்சட்டைக்காரர் மீது தடையுத்தரவு பிறப்பிக்கும் படி தூண்டுகிறார்கள். பார்ப்பன உபாத்தியாயர்கள் நம் பிள்ளைகளுக்குத் தொந்தரவு கொடுக்கிறார்கள். பார்ப்பனத் தலைமை உபாத்தியாயர்கள் திராவிட உபாத்தியாயர்களுக்குத் தொல்லை கொடுக்கிறார்கள். நாம் கோரும் முன்னேற்றத் திட்டங்களை யெல்லாம், கூடுமான அளவுக்கு எதிர்க்கிறார்கள்; ஆனால் அது சட்டமாகியவுடன் அதன் முழுப் பயனையும் அடைந்து கொள்கிறார்கள்!

நாம் எல்லோரும் கறுப்புச் சட்டைக்காரர்களாக வேண்டும். கறுப்புச்சட்டை ஒரு படையெடுப்பின் எண்ணமல்ல; அது இழிவின் அறிகுறி! இழிவிற்காக அவமானப்படுகிறோம்; துக்கப்படுகிறோம்; அதைப் போக்கிக் கொள்ள முயற்சி செய்கிறோம் - முடிவு செய்துவிட்டோம் என்பதன் அறிகுறி.

இந்த இழி சாதிப்பட்டக் கட்டாயம் ஒழிக்கப்பட்டேயாக வேண்டும். அதற்காக ஒரு 2000 - 3000 பேர்களாவது பார்ப்பனர்களின் பலிபீடத்தில் உயிரிழக்கத் தயாராயிருக்க வேண்டும். 'நானா சூத்திரன்? எங்கள் தாய்மார்களா

*சூத்திரச்சிகள்? இந்நிலை ஒரு நிமிட நேரமேனும் இருக்க இடங்கொடேன். இதோ என் உயிரை இதற்காக அர்ப்பணிக்கவும் துணிந்து விட்டேன்!' என்கிற உணர்ச்சி ஒவ்வொரு திராவிடனுக்கும் ஏற்படவேண்டும். உறுதி பெற்றெழுங்கள், இழிவு நீக்கந்தான் முக்கியம் என்று! ('விடுதலை': 19-5-1948).*

பெரியார் கூற்றின் இப்பகுதிகளால் பார்ப்பனர்கள் தங்களின் பல்லாண்மையை நிலைநிறுத்துவதில் எந்த அளவுக்கு விடாப்பிடியாக நின்றார்கள் என்பது பற்றியும் இழிவு நீக்கமே நம் இயக்கத்தின் முதன்மையான குறிக்கோள் என்பது பற்றியும் நல்ல விளக்கம் நமக்குக் கிடைக்கிறது.

## தேசிய கொடி எரிப்பு?

இந்தியா அரசியல் விடுதலை அடைவதற்குமுன்பே இந்தி மொழித் திணிப்பை எதிர்த்துப் பெரிய அளவில் நெடிய அறப்போர் நடத்திய பெரியார் இந்திய விடுதலைக்குப் பின்பும் இந்தி வல்லாண்மையை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது.

இந்திய விடுதலையைத் தொடர்ந்து இந்திய அரசின் பொறுப்பில் இருந்தவர்கள் இந்தியை இந்தியா முழுமைக்குமான தேசிய மொழியாகவும் ஆட்சி மொழியாகவும் நிலைநாட்டும் முயற்சியில் உடனடியாக இறங்கி விட்டனர். அம்முயற்சிக்குத் துணை நின்ற சென்னை மாநில அரசை எதிர்த்து 1948ஆம் ஆண்டிலேயே பெரியாரும் அவர்தம் இயக்க வீரர்களும் அறமுறை நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். அரசு தமிழகத்தின் தட்ப வெப்ப நிலையைக் கருதி, தன் திட்டங்களைக் கைவிட முன் வந்தது.

ஆனால் இந்தியப் பேரரசை ஓச்சியவர்கள் விட்டுக் கொடுப்பதாய் இல்லை. எவரைப் பற்றியும் எதைப்பற்றியும் - கருதிப் பார்க்க அவர்கள் மனங்கொள்ளவில்லை. இந்தித் திணிப்புக்கான திட்டங்களை வெறியோடு அவர்கள் அறிமுகப்படுத்திக் கொண்டே யிருந்தார்கள்! மக்களுரிமைப் போராளி தந்தை பெரியாரவர்கள் மொழி வெறியர்களின் வல்லாண்மைப் போக்கிற்குத் தடைபோடத் துணிந்தார்.

அவரின் துணிவு எந்த அளவுக்குச் சென்றது என்பதுதான் உலக வரலாறு கண்டிராத மாபெரும் விந்தை! என்ன அது? இந்திய யூனியன் கொடி என்னும் தேசியக் கொடியை 1-8-1955 அன்று தமிழகமெங்கும் கொளுத்தி இந்தித் திணிப்பு எதிர்ப்பை உலகிற்கு உணர்த்துவது எனும் தீர்மானமே அது. அதன் தொடர்பான

செய்திகள் சிலவற்றை 'விடுதலை'யில் வெளியான பெரியாரின் அறிக்கைகள் வாயிலாக நாம் தெரிந்து கொள்ள முடியும்.

"இந்திய அரசாங்கத் தேசியக் கொடியைக் கொளுத்துவது என்பது மிகக் கடினமான தீர்மானம் என்பதாகப் பலர் கருதக் கூடும். இது இந்திய அரசாங்கத்தைக் கவிழ்க்கவோ, ஒழித்துக் கட்டவோ கருத்துக் கொண்டு செய்யப்பட்ட கொடி கொளுத்தும் தீர்மானமல்ல.

எங்களுக்கு - தமிழர்களுக்கு - தமிழ்நாட்டாருக்கு - இந்திய அரசாங்கம் வேண்டாம். தமிழ்நாடு - தமிழர்கள் இந்திய அரசாங்கத்தின் கூட்டு ஆட்சியில் இந்திய யூனியனில் இருக்க விரும்பவில்லை. நாங்கள் எங்களை - நாட்டை, தனிப்பட்ட பூர்ண சுயேச்சையுள்ள தனியரசு நாடாக ஆக்க விரும்புகிறோம். எங்கள் நாட்டைத் தனி - பூரண சுயேச்சை நாடாக செய்ய எங்களுக்குச் சக்தி உண்டு. சகல விதத்திலும் எல்லாவிதமான வசதியும் உண்டு.

நாங்கள் பிரிந்து கொள்ள வேண்டும் என்கின்ற எண்ணம் எங்களுக்கு வடநாட்டாரால் நடத்தப்படும் இந்திய அரசாங்கம் சர்வ வல்லமையுடன் ஆட்சி நடத்திக் கொண்டிருந்த காலமான 1937-38லேயே தோன்றி, திராவிட நாடு கிளர்ச்சியை நடத்தி வந்திருக்கிறோம்.

ஆண்டுதோறும் நாங்கள் பிரிவினை நாளைக் கொண்டாடி வருகிறோம். மற்றும் அரசியல் சட்டம் எங்களை நிரந்தர அடிமைப் படுத்தும் வடவரின் சர்வாதிகாரச் சட்டம் என்றும் அதைத் தீயிட்டுக் கொளுத்த வேண்டுமென்றும் எங்கள் மாநாடுகளில் பலதடவை பேசியும், பத்திரிகைகளில் எழுதியும் வந்திருக்கிறோம்.

## கொடி எரிப்பு ஒத்தி வைப்பு!

"இந்திய யூனியன் கொடி கொளுத்தப்படும் என்கின்ற திராவிடர் கழகத் தீர்மானம் சம்பந்தமாக, சென்னை அரசாங்க முதன் மந்திரி திரு. காமராஜர் அவர்களது அறிக்கையினைப் பார்த்தேன். அவ்வறிக்கையானது நான் விரும்பிய படி மத்திய அரசாங்கத்திற்காகவும் சென்னை அரசாங்கத்திற்காகவும் வெளியிடப்பட்ட அறிக்கை என்று பொருள் தரும்படியாக விடப்பட்டிருக்கிறது.

அதிலிருந்து தமிழ்நாட்டவர் மீது இந்தி கட்டாயப் பாடமாகத் திணிக்கப்பட மாட்டாது என்று அரசாங்கம் வாக்குறுதி கொடுத்து, கொடியைக் கொளுத்த வேண்டாம் என்று விரும்புவதாக உணருகிறேன். ஆகவே நான் எனது தீர்மானம்

அமுல் செய்யப் படாமல் இருக்க வேண்டுமென்று சர்க்கார் விரும்பினால், எப்படிப்பட்ட வாக்குறுதி அளிக்க வேண்டு மென்று எதிர்பார்த்தேனோ அப்படிப்பட்ட வாக்குறுதி அளிக்கப்பட்டிருக்கிறது.

ஆனால் நடைமுறையில் இந்த வாக்குறுதியை அமுல் நடத்துவதில் அரசாங்கத்தாரால் இந்தி கட்டாயப்படுத்தப் படவில்லை என்பதாக மக்கள் தெளிவாகக் கருதும்படி நடந்து கொள்ளுமோ, அல்லது இவ்வளவு நாள் நடந்து கொண்ட மாதிரி ஒன்றுக்கொன்று (அறிக்கைக்கும் செய்கைக்கும்) சம்பந்த மில்லாததுமாதிரி நடந்துகொள்ளுமோ என்பதை நடைமுறையில் தெரிந்து கொள்ள வேண்டியிருப்பதால், முதல் மந்திரியாரின் விருப்பத்திற்கு ஏற்பக் 'கொடி கொளுத்துவதைத்' தற்காலிகமாகவே ஒத்தி வைத்து, திராவிடர் கழகத்தாரையும், மற்றும் இதில் ஈடுபடவிருக்கிற பொதுமக்களையும் ஆகஸ்ட் 1ஆம் தேதி யன்றைக்குக் கொடியைக் கொளுத்தாமல் இருக்கும்படி வேண்டிக் கொள்கிறேன்.

அவ்வறிக்கையில் கொடி கொளுத்துவோர் மீது தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படும் என்று தெரியப்படுத்தி இருப்பது பற்றி நானோ பொதுமக்களோ எவ்வித ஆச்சரியமும் படத்தேவையில்லை. 'அரசாங்கத்தினுடைய கொடி'யைக் கொளுத்தினால் அரசாங்கம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும் என்று எந்தப் பைத்தியக்காரனும் நினைத்துக் கொண்டிருக்க மாட்டான். அடக்குமுறையினுடையவும் தண்டனையினுடையவும் கடைசி எல்லையை எதிர்பார்த்துத் தான் திராவிடர் கழகம் கொடி கொளுத்தத் தீர்மானம் செய்திருக்கிறது. இதை உலகறியவும் செய்திருக்கிறது.

மடிகட்டிப் பெயர் கொடுத்த – மொழிப்பற்றும் மானமும் துணிவும் கொண்ட பதினாயிரக் கணக்கான வீரசிகாமணிகளுக்கு எனது பாராட்டுதலையும் உளம் நிறைந்த நன்றியையும் தெரிவித்துக் கொண்டு, கொடி கொளுத்துப்படி மறுபடியும் எனது வேண்டுகோள் வரும் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கச் சிரம் வணங்கி வேண்டிக் கொள்கிறேன்" ('விடுதலை', 31–7–1955)

பெரியாரின் இவ்வறிக்கைகள் நமக்கு நிறைய விளக்கமும் சிந்திப்பும் தரவல்லவை!

"எங்களுடைய இந்த உணர்ச்சியையே அடியோடு அழிக்கும் படியான தன்மையில், அன்னிய மொழியாகிய இந்தி மொழியை

எங்கள் நாட்டிற்குள் அரசியலின் பேரால் பலாத்காரமாகப் புகுத்தி, மொழி, கலாச்சாரம், கல்வி முதலிய துறைகளிலும், அரசியலில் ஆட்சி மொழி என்கின்ற தன்மையிலும் புகுத்தி யிருப்பதோடு இந்தி படித்துப் பாஸ் செய்தவனுக்குத்தான் உத்தியோகம் என்கின்ற அளவுக்கு வடவராட்சி துணிந்து விட்டதால் இந்திய ஆட்சி தமிழ்நாட்டில் கூடாதென்கின்ற எண்ணம் எங்களுக்கு வலுப்பட்டு விட்டது.

தேசியக் கொடி என்பது எங்களுக்கு எங்கள் தேசத் தேசியக் கொடியல்ல. 'இந்தியா தேசம்' என்பதை எங்களுக்குச் சம்பந்தப்பட்ட தேசமாக நாங்கள் வெகுகாலமாகக் கொண்டிருக்க வில்லை. நாட்டு இலட்சணப்படி, எங்கள் நாடு எந்த விதத்திலும் இந்திய நாடு என்பதுடன் சேர்ந்ததாக இருக்க நியாயமே இல்லை. சரித்திர சம்பந்தப்பட்ட வரையில் – வெள்ளையர் காலத்தைத் தவிர – வேறு எந்தக் காலத்திலும் எங்கள் நாடு தனித்த சுதந்தர நாடாகவே இருந்து வந்திருக்கிறது.

ஆகவே 'இந்தியத் தேசியக் கொடியைக் கொளுத்துவது இந்தியக் கூட்டாட்சியில் தமிழ்நாட்டுத் தமிழர்களாகிய நாங்கள் பிரஜைகளாக இருக்கச் சம்மதப்படவில்லை' என்கின்ற எங்களுடைய இஷ்டமின்மையைக் காட்டுவதேயாகும்'' ('விடுதலை': 20–7–1955).

## பரிகாரம்

"இந்திய யூனியன் ஆட்சி என்பதை நாங்கள் எங்கள் சர்க்காராக – ஆட்சியாகக் கருதவில்லை. அதன் காரணங்கள் இன்ன இன்னவைகள் என்று விளக்கி வந்திருக்கிறோம்; விளக்கி வருகிறோம். அந்த எண்ணங்களைப் படிப்படியாகத் தீவிரப்படுத்திக் காட்டுவதற்காக இப்படிச் செய்கிறோம். எங்களுக்கு வேறு எவ்வித கெட்ட எண்ணமுமில்லை. இந்திய யூனியன் ஆட்சியை ஒழித்து – கவிழ்த்து, எங்கள் ஆட்சியை இந்தியா மீது சுமத்தவோ, இந்தியாவை நாங்கள் எங்கள் அடிமைப்படுத்திக் கொள்ளவோ அல்ல; அல்லது இந்தியாவை இன்னொரு நாட்டானுக்குக் கைவசப்படுத்தவோ, காட்டிக் கொடுக்கவோ அல்ல. அதாவது நாங்கள் துரோகிகளுமல்லர்; எதிரிகளும் அல்லர்; யுத்தம் தொடங்குகிறவர்களுமல்லர்.

எங்கள் நாட்டு ஆட்சி எங்களுக்கு வேண்டும். எங்கள் நாட்டுக்குள் எங்கள் மொழியல்லாதது ஆட்சி மொழியாக, தேசிய மொழியாக, கல்வி மொழியாக இருக்கக் கூடாது. இந்தியை வலியுறுத்தும் ஆட்சி எங்கள் (தமிழ்) நாட்டிற்கு வேண்டாம்

என்பதை ஆட்சியாளருக்குக் காட்டுவதற்காக இதைச் செய்கிறோம். அதுவும் ஏன் செய்கிறோம் என்றால், மற்ற விதமாகச் செய்யப்பட்ட காரியங்கள் கவனிக்கப்படவில்லை. கேலி செய்யப்பட்டுவிட்டன.

இந்த ஜனநாயக ஆட்சி இந்தியைப் பற்றி யோக்கியமான முறையில் ஓட்டுக் கேட்கட்டுமே! மெஜாரிட்டி மக்கள் இந்தியை விரும்பினால் வைத்துக் கொள்ளட்டும். அப்படியில்லாமல் இந்திய யூனியன் அரசாங்கத்திற்குள் தமிழ்நாடு ஒரு ராஜ்யமாகச் சேர்க்கப்பட்டிருப்பதால் யூனியனிலுள்ள 20 நாடுகள் சொல்லுகிறபடிதான் தமிழ்நாடு கேட்டு ஆக வேண்டும் என்றால் நாங்கள் பரிகாரம் தேடிக்கொள்ளுவது எப்படி? ('விடுதலை': 21-7-1955).

## 'திரு'வா? 'ஸ்ரீ'யா?

தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தின் தலைவராகப் பொறுப்பேற்றுக் கொண்ட பின், பெரியார் தமிழக அரசுக்கு ஒரு வேண்டுகோள் வைத்தார். அரசு தொடர்பான ஆவணங்களில் மக்களின் பெயர்களுக்கு முன்னிலையில் 'ஸ்ரீ' என்னும் மதிப்புச் சொல்லுக்கு மாற்றாகத் 'திரு' எனும் தமிழ்ச்சொல் பயன்படுத்தப்பெற வேண்டுமென்பதே பெரியாரின் கோரிக்கை.

அதன் தொடர்பாக அரசு கீழ்க்கண்ட அறிவிப்பினை 11-3-1942 அன்று தாளிகைகளில் வெளியிட்டனர்.

> "இந்தியரின் பெயர்களுக்கு முன்பாக 'ஸ்ரீ' என்று உத்தியோக முறையில் எழுதும் கடிதங்களில் தற்போது உபயோகிக்கப் படுகிறது. இதற்குப் பதிலாகத் தமிழர்கள் விஷயத்தில், 'திரு' என்று உபயோகிக்க வேண்டுமென்று தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தார் (ஜஸ்டிஸ் கட்சி) சர்க்காருக்கு விக்ஞானம் செய்து கொண்டார்கள். இதுபற்றித் தமிழர்களின் கருத்தென்ன வென்பதைச் சர்க்கார் தெரிந்து கொள்ள விரும்புகிறார்கள். எனவே ஏப்ரல் 15ஆம் தேதிக்குள், அவர்கள் சென்னை சர்க்காரின் பிரதம காரியதரிசிக்குத் தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவித்துக் கொள்ளலாம்" ('விடுதலை': 11-3-1942).

அரசின் இவ்வறிப்பு வெளியான மறுநாள் பெரியார் பின்வருமாறு வேண்டுகோள் மக்களிடம் வைத்தார்.

> "அய்யன்மீர், நாம் நமது மகாநாடுகளிலும் கமிட்டிக் கூட்டங்களிலும், நம் மக்களுடைய பெயர்களுக்கு முன்பாக,

மரியாதை வார்த்தையாக இப்போது சர்க்காரால் உபயோகப்படுத்தப்படும் 'ஸ்ரீ' என்கிற வார்த்தைக்குப் பதிலாகத் 'திரு' என்கிற வார்த்தையை உபயோகப்படுத்த வேண்டும் என்று தீர்மானம் செய்து சென்னை சர்க்காருக்கு அனுப்பி யிருந்தது யாவரும் அறிந்ததேயாகும்.

இப்போது சென்னை சர்க்காரார் அந்தப்படி மாறுதல் செய்யும் விஷயத்தில் பொது மக்களின் அபிப்பிராயம் அறிய விரும்புகிறார்கள். தாங்கள் தங்கள் ஊரில் உடனே ஒரு பொதுக்கூட்டம் ஏற்பாடு செய்து, அந்தப்படி மாற்ற வேண்டியது பற்றித் தீர்மானம் நிறைவேற்றி அதை, "சர்க்கார் சிப் செக்ரட்டரி, மதராஸ் கவர்ன்மெண்ட், மதராஸ்" என்ற விலாசத்துக்கு அனுப்பிக் கொடுத்து, 'விடுதலை'க்கும் தெரிவிக்க வேண்டுமாய் வேண்டிக் கொள்ளுகிறேன். இது மிகவும் அவசரமான காரியமாகும். மற்றும் தங்கள் ஊரில் வேறு சங்கங்கள் இருந்தாலும் அதன் மூலமாயும் தீர்மானம் அனுப்பலாம். – ஈ.வெ. ராமசாமி" ('விடுதலை': 12–3–1942).

மேலும் இதழாளர் பெரியார் 'புத்தனேரி மணி' என்பாரின் "திருவின் பெருமை" என்னும் கட்டுரையையும் 'விடுதலை'யில் இடம் பெறச் செய்தார். அதன் துண்டங்கள் சில.

"இனிமையும் எளிமையும் இலக்கியச் செழுமையும் இசைச் சிறப்பும் இணையற்ற பெருமையும் ஒருங்கிசைந்த தமிழ்மொழியிலே மிகச் சிறந்த அழகிய சொல் ஒன்றிருக்குமானால், அது 'திரு' என்னும் சொல்லேயாகும். மக்களால் விரும்பபப்படும் அழகு, செல்வம், அறிவு, பெருமை, இன்பம் முதலிய எல்லாக் குணங்களும் 'திரு' என்னும் சொல்லிலே அடங்கியுள்ளன.

ஆனால் தமிழர்களாகிய நலம் இத்தகைய 'திரு' என்னும் தமிழ்ச் சொல்லை மறந்திருக்கின்றோம்! வெறுத்திருக்கின்றோம் 'திரு'வைச் சேர்த்தெழுதத் தயங்குகின்றோம்! அஞ்சுகின்றோம்! இன்னும் பிறமொழிக்கு அடிமைப்பட்டு 'ஸ்ரீ' என்ற சொல்லைப் பெயர்களுடன் சேர்த்தெழுதுகின்றோம்!

தமிழ்ப் பெருமக்களே! இத்தருணத்தைக் கைவிட்டு விடாதீர்கள்! தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தாரின் தீர்மானப்படி அரசினர் நடவடிக்கை எடுக்கின்றமையால் இதரக் கட்சியினர் இதற்கு எதிர்ப்பாக இருக்கக் கூடும். தமிழ்மொழியின் சுதந்தர வாழ்வே தமிழனின் சுதந்தர வாழ்வு! எனவே ஆய்ந்து தேர்ந்து ஆவன செய்க!! (விடுதலை': 11-3-1942).

இந்த நடவடிக்கைகளின் விளைவாகத் தமிழகத்தில் ஒரு மாபெரும் கருத்துப் போர் தொடர்ந்து நடந்தது. 'திரு' தேவையில்லை என்பதாக ஆரியப் பார்ப்பனரும் 'திரு'வே வேண்டும் எனத் தன்மானத் தமிழரும் நிகழ்த்திய சொல்லாடல்கள் பற்றிய சுவையான செய்திகள் 'விடுதலை' ஏடுகளிலிருந்து நமக்குக் கிடைக்கின்றன.

வாடிப்பட்டி என்னும் மதுரை மாவட்ட ஊராட்சியில் மட்டும் தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தினை, தெ.இ.ந.உ. வாலிபர் சங்கம், சுயமரியாதைச் சங்கம், ரெட்டி மகாஜன சங்கம், காங்கிரசுக் கமிட்டி, பொதுஜன வாசகசாலை, உண்மை விளக்கச் சங்கம், ராணி மங்கம்மாள் பேட்மிண்டன் க்ளப், வர்த்தகத் தொழிலாளர் சங்கம் ஆகிய பல்வேறுபட்ட அமைப்புகள் 'திரு'வை வரவேற்றுத் தனித்தனியாகத் தீர்மானம் நிறைவேற்றின எனும் செய்தி வரிகள் எவரையும் வியப்பில் ஆழ்த்தக் கூடியவை!.

## முக்கலைவாணர்களே!

பெரியாரவர்கள் கலைத்துறையைச் சார்ந்தவர்கட்கு 'விடுதலை'யில் விடுத்த உணர்ச்சியைத் தூண்டும் வேண்டுகோள் ஒன்று குறிப்பிடத்தக்கது. கலைஞர்களின் அறிவுப் புலத்தைப் பெரிதும் பாதித்து, நல்ல பலன்களைக் குவித்த "முக்கலைவாணர்களுக்குப் பெரியார் விண்ணபப்ம்" எனும் அவ்வறிக்கையின் துண்டங்கள் சிலவற்றைப் படித்துக் காட்டுகிறேன்.

> **"முக்கலைவாணர்களே! நீங்கள் இதுவரை தெரிந்திருக்கா விட்டாலும் திராவிடர்களின் சமுதாய நிலை மிக இழிவானதும் கேடானதுமான நிலைமையில் இருக்கிறது என்பதையும், அதை மாற்ற எங்களைப் போன்ற சிலர் தங்களது யாவற்றையும் ஒப்படைத்துத் தொண்டாற்றி வருவதையும் இப்போதாவது தெரிந்திருப்பீர்கள். திராவிடர்களிடையே ஒரு புதிய கிளர்ச்சி தோன்றியிருப்பதை நீங்கள் மறுக்க முடியாது.**
>
> **இப்படிப்பட்ட சமயத்தில் கலைவாணர்கள், கலை வாழ்க்கைக்காரர்கள் செய்ய வேண்டிய வேலை என்ன? நாங்கள் செய்து வரும் வேலையை அழிப்பதுதானா?**
>
> **அப்பப்பா! இந்த சினிமாக்களையும் புராண நாடகங்களையும் பஜனைப் பாட்டுக்களையும் நடனங்களையும் 'பாட்டு ப்ளேட்'களையும் எடுத்துக் கொண்டால் நம் கள்ளுச் சாராயக் கடைகளும் தாசிவேசி – குச்சுக்காரிகள் வீடும் மார்வாடி – செட்டி கொள்ளைகளும் மேலென்று சொல்லுவேன்!**

மணிக்கு அய்ந்தாறு ஆயிரம் ரூபாய் வீதம் ரேட் வாங்கிக் கொண்டு, 2,3 மணி நேரம் முருகா முருகா, ராமா ராமா, கிருஷ்ணா, கிருஷ்ணா என்று பாடுவதும் இதுகள் தங்களது மனைவி – வைப்பாட்டிமார்களுடன் நடத்திய லீலைகளை வர்ணித்துப் பாடுவதும்தானா நடிப்பு – இசைக்கலையின் பயன்? இவ்வளவு பணச் செலவுக்கு இதுதானா பிரதிபிரயோஜனம்? 'திராவிடனுக்கு வந்துவிட்டது நல்ல காலமும் புத்தெழுச்சியும்' என்பதற்கு இதுதானா உதாரணம்?

எனவே கலைவாணர்களே! நீங்கள் தான் எங்களைக் காப்பாற்ற வேண்டியவர்கள்! நீங்கள் தெரிந்தோ தெரியாமலோ இப்படி எதிரிகளின் கையாள்களாக ஆகிவிட்டால் எங்கள் கதி என்ன? நாங்கள் எதெதற்கு என்று அழுவது? எதெதற்கு நாங்கள் புரட்சி செய்வது? எதெதற்கென்று நாங்கள் சிறை செல்வது உதைபடுவது. சிந்தித்துப் பாருங்கள். எதிரிகளோடு போராடுவதா? உங்களோடு போராடுவதா?

படித்தவன், பணக்காரன், புலவன், கலைவாணன், கலைவாணி ஆகியவர்கள் தங்கள் இனத்துக்குக் கேடு விளைவிக்கும் எதிரிகளுக்குக் கையாளயிருப்பதும், தாங்களே எதிரிகளாய் இருப்பதும் இந்தத் திராவிட நாட்டில் திராவிட மக்களைத் தவிர உலகில் வேறு எங்குமே யாருமே இருக்க மாட்டார்கள்! இந்த நிலை மாறியாக வேண்டும் – கண்டிப்பாய் மாறியாக வேண்டும். வாலிபர்களே! உங்களிடத்தில்தான் இந்தப் பொறுப்பு இருக்கிறது. பொதுமக்களே! தாய்மார்களே! நீங்கள் எங்களுக்கு உதவி செய்யா விட்டாலும் தொல்லை கொடுக்காதீர்கள்.

எங்கு கண்டாலும் இந்த இனக் கொலை – சுயமரியாதைக் கொலை – அறிவுக்கொலை – முன்னேற்றத் தடை செய்யும் ஆரிய அடிமைக் கலைவாணர்களை விரட்டி அடியுங்கள். நீங்கள் ஒத்தை ஆளாய் இருந்தாலும் துணிந்து கூப்பாடு போடுங்கள். தொண்டாற்றுங்கள். கண்டிப்பாய் வெற்றி அடைவோம்.

ஒழியட்டும் ஆரியப் புராணக் கதை – இலக்கியம் – பாட்டு, நடிப்பு – நாடகம் – பிளேட்டு!

ஓங்கட்டும் பகுத்தறிவு, சுயமரியாதை, சீர்திருத்தக் கலை – பாட்டு – நடிப்பு – நாடகம் – பிளேட் – நடிக மணிகள்! ('விடுதலை': 26–2–1950).

பெரியாருக்கு, தம் எழுபத்தியோராம் ஆண்டகவையில் எவ்வகையான கவலை இருந்தது என்பதைக் கருதுகையில்

உணர்ச்சிக்கு இலக்காகிறோம். அவரின் வேண்டுகோளுக்கு அரும்பயன் கிட்டியது. கலைத்துறையில் நல்ல மாற்றம் ஏற்பட்டது. திரைப்பட உலகில் பெரும் புரட்சியே நிகழ்ந்தது எனலாம். சென்ற நூற்றாண்டின் அய்ம்பதுகளில் வெளிவந்த பெரும்பாலான படங்கள் இவ்வுண்மையினைப் பேசும்!

## பொதுவுடைமைக் கொள்கைச் சார்பு

'கம்யூனிசம்' எனப் பேசப்படும் பொதுவுடைமை வாழ்க்கை முறையைப் பெரியார் எவ்வளவு முனைப்பாக வரவேற்கவும் பரப்பவும் செய்தார் என்பதை இதழாளர் பெரியாரின் 'குடிஅரசு' இதழும் தொடர்ந்து அவர் நடத்திய ஏனைய இதழ்களம் நமக்கு நிறையத் தெரிவிக்கின்றன.

'விடுதலை' நாளிதழிலும் பொதுவுடைமை தொடர்பான கருத்துகளும் செய்திகளும் அதிக அளவில் இடம் பெற்றதில் வியப்பதற்கு ஒன்றுமில்லை. ஒரு சிலவற்றை மட்டும் நினைவூட்ட விரும்புகிறேன்.

> *"நான் 1927இல் திருநெல்வேலி மாநாட்டில் கம்யூனிசம் பற்றிப் பேசினேன். பிறகு பொதுக்கூட்டங்களில் கம்யூனிசப் பிரசாரம் பலமாகச் செய்து வந்தேன். இது நான் ரஷ்யாவைப் பார்த்துப் பேசியதல்ல. பார்ப்பானுக்கும் கடவுளுக்கும் காங்கிரசுக்கும் காந்திக்கும் விரோதமாகப் பிரசாரம் செய்து வந்ததில் தோன்றிய கருத்துக்களே அவை. பிறகு 1931 இல் ரஷ்யா சென்றேன் என்றால், அங்கிருந்து நான் தெரிந்து கொண்டு வந்தது ஏதாவது இருக்குமானால் அது கம்யூனிசம் செய்கையில் சாத்தியமானது தான் என்பதுதான்.*
>
> *நாளைக்கு ரஷ்யாக்காரன் இந்த நாட்டின் மீது படையெடுத்தால் நான் ரஷ்யாக்காரனை ஆதரித்து, இந்நாட்டுச் சிறையில் இருக்கவோ, சுட்டுக் கொல்லப்படவோதான் தயாராய் இருப்பேனே ஒழிய, இந்திய தேசாபிமானத்திற்கு அடிமையாக ஒரு நிமிஷமும் இருக்கச் சம்மதிக்க மாட்டேன். கொள்கை பெரிதா? தேசம் பெரிதா என்று எண்ண வேண்டும்!*
>
> *கம்யூனிசம் என்பது என் கருத்துப்படி மனித சமுதாயத்திற்கு இருந்து வரும் இழிவுகளும் குறைபாடுகளும் கவலையும் நீக்கப் படுவதுதான். கம்யூனிசக் கொள்கைக்கு நம் நாட்டில் செல்வாக்கு ஏற்பட்ட பிறகுதான், நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் சமதர்மம் பேசியதும், அவருடன் போட்டி போட ஜவகர்லால் நேரு சமதர்மம் பேசப்புறப்பட்டதுமாகும்.*

பாரதி தேசாபிமானம், வ.வே.சு. அய்யர் தேசாபிமானம், காந்தி தேசாமபமானம், திலகர் தேசாபிமானம், ராஜாஜி தேசாபிமானம், சவார்க்கார் தேசாபிமானம், சத்தியமூர்த்தி தேசாபிமானம் ஆகிய நெருப்புப் பறக்கும் தேசாபிமான மெல்லாம் எனக்குத் தெரியும்!"

"கம்யூனிஸ்ட்களும் நானும்" என்னும் தலைப்பில் ஆசிரியவுரையாக 4-2-1966 அன்று 'விடுதலை'யில் வெளிவந்த பெரியாரின் கட்டுரையின் சில துண்டங்கள் இவை. இந்த 'ரஷ்யப் படையெடுப்பு'ப் பொருள் பலரிடையே கருத்தாடல்களைத் தூண்டிய சிக்கலாக அமைந்தமை. எதிர்பாராதன்று.

தேசபக்தி பற்றியும் 'ரஷ்யப் படையெடுப்பு'க் கற்பனை பற்றியும் பெரியார் மேலும் துணிச்சலாய்க் கருத்துகள் வெளியிட்டார். "ரஷ்யப் படையெடுப்பை வரவேற்பேன்" என்னும் தலைப்பில் 9-2-1966ஆம் நாளிட்ட 'விடுதலை'யில் பெரியார் எழுதிய நெடிய ஆசிரியவுரையின் பகுதிகள் சில:

"எந்த மனிதனுக்கும் பொதுநல லட்சியமிருக்குமானால் கம்யூனிசம் தான் முடிவான லட்சியமாக இருக்க வேண்டும். அதற்கு முதற்படியாக சமதர்மம் இருக்கலாம். அதற்காகவே யாவரும் பாடுபடவேண்டும். மனிதனுக்காக - மனித சமுதாயத்தற்காகத் தேசியமே யொழிய, தேசியத்திற்காக மனித சமுதாயம் அல்ல. சுபாஷ் சந்திரபோஸ் இருந்திருப்பாரேயானால் இந்திய நாடு கம்யூனிசப் போக்கில் எவ்வளவோ தூரம் சென்றிருக்கும்.

ரஷ்யாக்காரன் வந்தால் நாட்டைக் கம்யூனிசமாக்க வருவான். ரஷ்யக் கம்யூனிசத் திட்டத்தில் வேறு நாடுகளின் மீது படையெடுத்து வெற்றி பெற்றுத் தன் நாட்டுடன் சேர்த்துக் கொள்ளுவது என்பது இல்லை. மற்றென்ன வென்றால் உலகத்தையே கம்யூனிஸ்ட் கொள்கை நடப்பு மயமாக்குவது அவ்வளவுதான்.

நான் பாகிஸ்தான் படையெடுப்பை முறியடிக்க வேண்டும் என்கிறேன். ரஷ்யாக்காரன் படையெடுத்து வந்தால் (வரவே மாட்டான்) வரவேற்பேன் என்கிறேன். ஏன்? பாகிஸ்தான்காரன் தன் நாட்டுடன் நம்நாட்டைச் சேர்த்துக் கொள்ளவும் இஸ்லாமிய நாடாக ஆக்கிக் கொள்ளவும் வருகிறான். சைனாக்காரன் அதுபோலவே செய்வது மட்டுமல்லாமல், நாட்டுக்குள் குடியேறவும் நம்நாட்டுச் சுகபோகத்தை

அனுபவிக்கவும் வருகிறான். நாட்டை நான் விரும்பும் சமதர்மமோ கம்யூனிசமோ ஆக்க இவர்கள் வரவில்லை!

ரஷ்யா வருவானானால் இன்றைய தேச துரோகிகளையும் (பூணூல்களையும்) தேசத்துரோகப் பத்திரிகைகளையும் தூக்கு மரத்தில் ஏற்றிச் சாம்பலாக்கி, திராவகமாக்கிவிடுவான்! நாடு இந்தியாவாகவே இருக்கும். இந்தியர்கள் வசமே இருக்கும். ஆகவே நான் விரும்பியபடி இந்தியா அந்த இலட்சியத்தை எய்துவது என்றால், இந்தியா கம்யூனிஸ்ட் நாடாக ஆனால்தான் முடியும். அதற்கு யார் வந்தாலும் சரி என்பதுதான் எனது கருத்து".

இவ்விரண்டு ஆசிரியவுரைகளும் பொதுவுடைமைக் கொள்கை தான் பெரியாரின் இறுதிக் குறிக்கோள் என்பதையும் அது நிறைவேற எதனையும் கொள்ளலாம் என்னும் அவரின் அணுகு முறையையும் தெளிவாக்குகின்றன.

இந்திய அரசியல் விடுதலைக்குப் பின் உடனடி விளைவாக காவல் துறையின் கொடுமைகளுக்கும் துப்பாக்கிச் சூட்டிற்கும் அதிக அளவில் இலக்காகி இன்னுயிர் இழந்தவர்கள் பொதுவுடைமைக் கட்சியைச் சார்ந்தவர்கள்தாம்.

வடபுலத்தில் கல்கத்தா, கான்பூர், சபர்மதி, நாசிக் ஆகிய ஊர்களிலும் தென்னகத்தில் வேலூர் கடலூர் சேலம் சைதாப்பேட்டை ஆகிய இடங்களிலும் காவல்துறையினர் வெறியாட்டம் ஆடினர். விடுதலை எய்திய இரண்டு ஆண்டுகளில் இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலும் எண்ணத் தொலையாத், துப்பாக்கிச் சூடுகள் நடந்தேறின.

தளை செய்யப்பட்டுச் சிறை வைக்கப்பட்டிருந்த பொதுவுடைமை இயக்கத் தொண்டர்கள் விலங்குகளைவிடக் கீழாக நடத்தப்பட்டனர்! தமிழகச் சேலம் சிறையில் நடைபெற்ற நிகழ்ச்சியொன்று நாட்டையே நடுக்கிற்று. 'கான்விக்ட் வார்டர்கள்' என்றழைக்கப்படும் முதுநிலைக் குற்றவாளிகள் சிறையிலிருந்த பொதுவுடைமைக் கட்சி சார்ந்த தோழர்களை நடத்திய முறையின் இறுதிக் கட்டமாகத் துப்பாக்கிச் சூடு நிகழ்ந்து இருபத்தி இரண்டு தோழர்கள் இறந்து பட்டனர்; நூறு பேர்களுக்கும் மேலாக மருத்துவமனையில் கிடத்தப்பட்டனர்.

12-2-1950 ஞாயிறு நண்பகல் 12.35 மணிக்கு நடந்த இக்கொடிய நிகழ்வை 'விடுதலை' - நாளிதழ் அன்றைக்கே செய்தியாக உலகிற்கு

வழங்கியதுடன் மறுநாள் 13-2-1950 அன்றைய ஆசிரியவுரையாக, "கொடுமை! கொடுமை!! அடாத செய்கை! அடாத செய்கை!! நெஞ்சம் குமுறுகிறது!!" என்று எழுதியது.

பம்பாயில் ஏற்பாடாகியிருந்த திராவிடர் கழக மாநாட்டிற்காகச் சென்றிருந்த பெரியார் திரும்பி வந்தவுடன் சேலம் நிகழ்ச்சியைக் கண்டித்து தமிழகமெங்கிலும் 5-3-1950 அன்று கூட்டங்கள் நடத்தப் பெற வேண்டுமென்று அறிக்கையிட்டார்.

> "சேலம் ஜெயிலில் அடைபட்டிருந்த காவல் கைதிகள் ஜெயில் அதிகாரிகளால் சுடப்பட்டு, 22 பேர்கள் கொல்லப்பட்டும், 100 பேர்கள் போல் காயப்பட்டும் வீழ்த்தப்பட்ட அகோர காரியமானது பொதுமக்களால் மிகவும் கண்டிக்கப்படத் தக்க காரியம் என்பதோடு, இனி அப்படிப்பட்ட காரியம் நடக்காமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டியது பொது மக்கள் கடமையாகும். ஆதலால் அதிகாரிகளினுடையவும் சர்க்காருடையவும் செய்கைகளை மக்கள் கண்டிக்கிறார்கள் என்பதையாவது சர்க்காருக்குக் காட்ட வேண்டியது பொது மக்கள் கடமையாகும்.
>
> ஆகவே இக்கண்டனக் கருத்தைத் தெரிவிக்கும் காரியத்திற்காகத் திராவிடர் கழக அங்கத்தினர்கள் மார்ச் மாதம் 5ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை மாலை ஆங்காங்குள்ள கழகங்களின் மூலம் பொதுக் கூட்டம் ஏற்பாடு செய்து, தீர்மானம் செய்து, தீர்மானத்தை சர்க்காருக்கும் பத்திரிகைகளுக்கும் அனுப்பிக் கொடுக்க வேண்டுமாய் வேண்டிக் கொள்ளப் படுகிறார்கள்.
>
> போலீசாரோ, சர்க்காரோ தடை உத்தரவு போட்டால் நிறுத்திக் கொண்டு, சேலம் ஜெயிலில் குறிப்பிட்ட தேதியில் அதிகாரிகளும் சர்க்காரும் நடந்து கொண்ட கோரத்தன்மையைக் கண்டிப்பதாக எழுதி உள்ளூர் மக்களிடம் கையொப்பம் வாங்கி அனுப்ப வேண்டியது. கூட்டத்தில் ஆத்திரமும் அக்கிரமமுமான பேச்சுக்கள் நிகழாமல் கழகத் தோழர்கள் கவனித்துக் கொள்ள வேண்டும்". ('விடுதலை' 22-2-1950)

பெரியாரின் அறிவிக்கைப்படி 5-3-1950 அன்று திருச்சியில் ஏற்பாடு பண்ணப்பட்டிருந்த கண்டனக் கூட்டத்தில் பெரியார் தெரிவித்த கருத்துகளை 'விடுதலை' வெளியிட்டிருந்தது.

> "அவர்கள் (காங்கிரஸ் ஆட்சியாளர்கள்) சொந்தத்தில் ஆட்சி புரியவில்லை. வெள்ளைக்கார சம்பந்தத்தில் அவர்களின் அடிமைகளாக இருக்கிறார்கள். அவர்களின் சொற்படி இவர்கள்

கேட்டாக வேண்டும். இல்லையென்றால் இந்தியா காமன்வெல்த்தில் இருக்க முடியாது. மக்களை ஏமாற்றுவதற்காக மறைமுகமாக 'இந்திய ஆட்சி குடியாட்சி' என்றார்கள். குடியாட்சி காமன்வெல்த்தில் இருக்க முடியாது. இதுவரை எங்கும் இருந்ததில்லை.

கம்யூனிசம் என்ன? அது பாம்பா, தேளா? காங்கிரஸ் ஆட்சியாளர் கம்யூனிசத்தை மக்களிடம் விளக்காமல் மக்கள் பயப்படும்படி பூச்சாண்டி காட்டுகிறார்கள். கம்யூனிசம் என்றாவது ஒரு நாளைக்கு நிச்சயமாக ஏற்பட்டுத் தான் தீரும்! விரைவில் கம்யூனிசம் வரும்; வந்து கொண்டிருக்கிறது. அதன் நிழலும் தெரிகிறது. சேலம் நிகழ்ச்சிதான் கம்யூனிச நிழல்.

நான் சமீபத்தில் கேள்விப்பட்டேன். தோழர் காமராஜர் இந்த ஊருக்கு வந்து பேசிய காலத்தில் எவனோ ஒரு பள்ளிப் பையன் ஒரு பட்டாசு பற்ற வைத்து வீசினானாம். அதற்கு இந்த வெண்ணெய் வெட்டிப் போலீசு 146 பேர்களை அரஸ்ட் செய்து மாதக்கணக்காகச் சிறையில் வைத்திருக்கிறதாம். அதில் இரண்டு பேர் சுட்டுக் கொல்லப்பட்டு விட்டார்களாம். இது என்ன ஆட்சி?" ('விடுதலை': 7,8-3-1950).

சேலம் அவலம் தொடர்பாக 'விடுதலை'யில் "20 உயிர்கள் பலி. 100 பேருக்குக் காயம், "பெரியார் கட்டளை: கண்டனக் கூட்டங்கள்" என்னும் தலைப்புகளில் அய்ந்து ஆசிரியவுரைகள் எழுதப்பட்டன. பொதுவுடைமைக் கட்சிக்கும் திராவிடர் கழகத்திற்கும் நடைமுறைகள் அணுகுமுறைகள் குறித்து வெளிப்படையாகவே எத்தனையோ கருத்து மோதல்கள் இருந்து வந்த நிலையிலும் பெரியாரின் இந்த நடவடிக்கைகள் பொதுவுடைமைத் தலைவர்களிடம் பெரிய தாக்கத்தை விளைவித்தமை இயற்கையே!

"விடுதலையானதிலிருந்து நான் தமிழகத்தின் பல பாகங்களுக்குச் சென்று பல்வேறு கட்சியினரையும் மக்களையும் சந்திக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. உங்கள் பத்திரிகை வாயிலாகத் தமிழ் மக்களுக்கு - குறிப்பாகத் திராவிடர் கழகத் தோழர்களுக்கு என் கருத்தைக் கூறப் பிரியப்படுகிறேன்.

அரசாங்கத்தின் அக்கிரம அடக்குமுறைக்கு எங்கள் கட்சி உட்பட்டதாயிருந்த காலத்தில், ஜனநாயக உரிமைளுக்காக நிமிர்ந்து நின்று கிளர்ச்சி செய்த பெருமை, பிரதானமாகத் திராவிடர் கழகத் தோழர்களுக்கும், 'விடுதலை' பத்திரிகைக்கும்

உரியதாகும். எங்கள் கட்சியும் கட்சியின் தலைமையில் திரண்டு நிற்கும் தொழிலாளி–விவசாயி–நடுத்தர வர்க்க மக்களும் உங்களுடைய ஆதரவைப் பற்றி விசேஷமாகக் குறிப்பிடுகிறார்கள்.

நிராயுதபாணிகளான கம்யூனிஸ்ட் தோழர்கள் மீது சர்க்கார் துப்பாக்கிப் பிரயோகம் செய்து 23 வீரர்களைச் சுட்டுக் கொன்ற போது அடால்ஃப் இட்லரையும் தோற்கடிக்கச் செய்யும் அந்த அக்கிரமத்தைத் தமிழகமெங்கும் எடுத்துக்கூறி, நீங்கள் ஜனங்களைத் தட்டி எழுப்பினீர்கள்.

தஞ்சை ஜில்லா கிராமங்களில் செங்கொடியின் தலைமையில் புதுவாழ்வுப் போதம் பெற்ற விவசாயப் பாட்டாளிகளுக்குப் பெருமிராசுதார் கூட்டமும் காங்கிரசாட்சியும் இழைத்த கொடுமைகளை – சேரிகள் சூறையாடப்பட்டதை வாலிபர்கள் சித்திரவதை செய்யப்பட்டதை – பெண்கள் மானபங்கம் செய்யப் பட்டதை – தைரியமாக ஒலிபரப்பி, நல்லெண்ணமுடையவரின் – மனச்சாட்சி படைத்தவரின் நீதிமன்றங்களாக நீங்கள் விளங்கினீர்கள்! இந்த அரிய தொண்டுக்கு, கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் நான் உங்களை வாழ்த்துகிறேன்".

இம்மடல் இந்தியப் பொதுவுடைமைக் கட்சியின் முன்னோடித் தலைவர்களில் ஒருவரும் அக்காலத்தில் தமிழ்நாட்டு மக்களுக்கு நன்றாக அறிமுகமாகியிருந்த மலையாளப் பிறப்பாளருமாகிய தோழர் ஏ.கே. கோபாலன் அவர்களால் எழுதப்பட்டு 25-5-1951ஆம் நாளிட்ட 'விடுதலை'யில் வெளிவந்ததாகும்.

இதேபோன்ற தமிழ்நாட்டுத் தொழிற்சங்கத் தலைவர்களில் ஒருவரும் பெரியோரின்பால் நல்ல பற்றுக் கொண்டவருமான தோழர் எம். கல்யாண சுந்தரம் அவர்கள் படுக்கையிலிருந்த வாக்கிலேயே 27-6-1951 அன்று விடுதலை ஆசிரியருக்கு எழுதிய மடலின் ஒரு சில பகுதிகளைப் பார்ப்போம். இவ்விரண்டு மடல்களும் கொடுமைகளை எதிர்த்துப் போராடல், உண்மைகளை வெளிப்படுத்தத் தயங்காமை ஆகிய பெரியாரின் பண்புகளைப் புலப்படுத்தப் போதுமானவை.

"என்னுடைய விடுதலைக்காத் திராவிடர் கழகமும் 'விடுதலை' பத்திரிகையும் செய்த கிளர்ச்சிக்கு என் சார்பிலும் எங்களுடைய கட்சியின் சார்பிலும் நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறேன். என்னுடைய விடுதலை திராவிடர் கழகம் – கம்யூனிஸ்ட் கட்சியின் அய்க்கியத்தின் வெற்றியாகும்.

திராவிடர் கழகம் – கம்யூனிஸ்ட் கட்சியின் அய்க்கியம் தமிழ்நாட்டு மக்களின் விடுதலைப் போராட்டத்தின் வெற்றியை

நிர்ணயிக்கும் ஒரு பெரிய சக்தியாகும். இந்த அளவிற்கு வளர்ந்து வந்திருக்கும் கருத்தொற்றுமையையும் செயல் ஒற்றுமையையும் மேலும் மேலும் வளர்த்து, கண்மணியைப் போல் பாதுகாக்க வேண்டியது திராவிடர் கழகத் தோழர்கள், கம்யூனிஸ்ட் கட்சித் தோழர்களின் கடமையாகும்.

கம்யூனிஸ்ட் கட்சியும் தொழிலாளி, விவசாயி மக்களின் இயக்கங்களும் காங்கிரஸ் - ஃபாசிஸ்ட் அடக்குமுறைக்குப் பலியான பொழுது 'விடுதலை' பத்திரிகை செய்துள்ள சேவை சரித்திரத்தில் இடம் பெற வேண்டியது. தமிழ்நாட்டு மக்களின் பத்திரிகையாக மேலும் மேலும் 'விடுதலை' வளர்ந்து தமிழ் பேசப்படும் ஒவ்வொரு வீட்டிற்கும் ஒரு பிரதி செல்லும் நாளை எதிர்பார்க்கிறேன்.

என்னுடைய விடுதலையைக் கோரிக் கிளர்ச்சி செய்து வெற்றியடைந்த தொழிலாளி - விவசாயி மக்களுக்கும் நண்பர்களுக்கும் எனது மனப்பூர்வமான நன்றியை 'விடுதலை'ப் பத்திரிகையின் மூலம் தெரிவித்துக் கொள்ள அனுமதியுங்கள். அன்பு மறவாத கல்யாண சுந்தரம்".

தென்னகத் தலைவர்கள் மட்டுமா? அனைத்திந்தியப் பொதுவுடைமைக் கட்சியின் தலைவர் எஸ்.ஏ. டாங்கே அவர்களே நன்றியுணர்வுடன் பெரியாரைப் பாராட்டினார். "வேட்டையாடப் பட்ட கம்யூனிஸ்ட் கட்சிக்குப் பெரியார் கொடுத்த அளவு ஆதரவு - அடைக்கலம் - வேறு எவரும் கொடுக்கவில்லை. திராவிடர் கழகமும் பொதுவுடைமைக் கட்சியும் இலட்சிய ஒருமைப்பாடு உடையவை. திராவிடர் கழகம் சாதி வேற்றுமையற்ற சமுதாயத்தை உருவாக்கப் பாடுபடுகிறது. அத்துடன் சமதர்ம சமுதாயம் உருவாகவும் உழைக்கிறது. இவ்விரண்டு இலட்சியங்களும் பொதுவுடைமைக் கட்சியின் குறிக்கோள்களாகும்.

நம் இருசாராருக்கிடையே உள்ள சிறு கருத்து வேறுபாடு ஒன்றே ஒன்றைப் பற்றித்தான். எது முதல், எது இரண்டாவது - என்பது பற்றியதாகும். பொருளாதார மாற்றத்திற்கு நாங்கள் முன்னுரிமை கொடுக்கிறோம். திராவிடர் கழகம் சமுதாயத்திற்கு முன்னுரிமை கொடுக்கிறது. அவ்வளவுதான் மாறுபாடு!" தோழர் டாங்கே அவர்களின் மதிப்பீடு எத்துணை துல்லியமானது! இக்கருத்து பெரியாராலும் பலமுறை கூறப்பட்டதுதான். எதிர்கால இந்திய வரலாற்று ஆராய்ச்சியாளருக்கு இப்பொருள் பற்றிய ஆய்வு அருஞ்சுவை கூட்டும்!

கல்வி

கல்வியைப் பற்றி 'விடுதலை'யில் வெளிவந்த பெரியாரின் கருத்துகளில் சில:

"இப்போதுள்ள கல்விக்கூடம் எதற்காக இருக்கிறது? மக்கள் அறிவு பெற வேண்டும். ஒழுக்கமுடையவர்களாக இருக்க வேண்டும் என்பதற்குக் கல்வி கற்கவில்லை; கல்வித் திட்டமும் இவைகளைப் போதிப்பதாக இல்லை. அவர்கள் படிப்ப தெல்லாம் பிழைப்பதற்கு, மண்வெட்டி எடுக்காமல் ஓரளவு பேனா பிடித்தெழுதிச் சம்பாதிக்கும் படியான வழியைத் தேடுவதற்கேயாகும்.

பெற்றோர்களும் தங்கள் குழந்தைகளைக் கல்வி கற்க வைப்பதன் காரணம், தம் பிள்ளை புத்திசாலி ஆக வேண்டும், அறிவாளி ஆக வேண்டும் என்று வெளியில் மட்டும் கூறுவார்களே தவிர, உள்நோக்கமெல்லாம் பயன் உத்தியோகத்திற்குப் போய்ச் சம்பாதித்தால் நம் வாழ்ககயைக் கஷ்டமின்றிக் கழிக்கலாம் எனபதற்குத்தான்.

மாணவர்கள் பள்ளி நேரங்களில் தங்கள் மனம் போன போக்கில் நடத்தல் கூடாது. முதலாவது, வயிற்றுப் பிழைப்பைத் தேட, பரீட்சையில் 'பாஸ்' செய்ய வேண்டும். அதன் பிறகு தங்கள் அறிவை அப்படியே வைத்துக் கொள்ளக் கூடாது; பகுத்தறிவைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். தானே எதையும் சிந்தித்து உணரும் பகுத்தறிவைப் பின்பற்ற வேண்டும்.

நான் கூட மாணவர்களை என் கழகத்திற்கென்ற கிளர்ச்சிகளில் கலந்து கொள்ளக் கூடாது; கல்விக்கு இடையூறாக எதிலும் ஈடுபடக் கூடாது என்று அடிக்கடி கூறுவதுண்டு. அரசியல் சம்பந்தப்பட்ட விவகாரங்களில் சேரக்கூடாது என்றும் கூறுவேன். ('விடுதலை': 9-3-1956).

"இன்றைக்கு நாம் அனுபவிக்கும் தொல்லைகளுக்கு - அதாவது மக்கள் அனுபவிக்கும் தொல்லைகளுக்குப் படித்தவர்கள் படித்தவர்கள் படிப்புக் காரணம் என்று தான் சொல்ல வேண்டும். ஆடு நரிக்குப் பயன்படுவதுபோல், படிக்காதவன் படித்தவர்கட்குப் பயன்படுகின்றான். நன்றாகச் சொல்ல வேண்டுமானால், படித்தவன் படிக்காதவனை ஏமாற்றிச் சுரண்டுகிறான் என்பதைத் தவிர, படிப்பு என்பது எதற்குப் பயன்படுகிறது?" ('விடுதலை': 25-1-1947).

"எல்லாத் துறைகளின் நிலைமையையும் சந்தேகமற உணருபவனே அறிவாளி எனப்படுவான். உலகத்தின்

விஷயங்களையும் எங்கிலுமுள்ள இயற்கையின் நிலைமையும் ஆராய்ந்து உண்மையை உணர்ந்தவன்தான் அறிவாளி.

ஒருவன் பி.ஏ. படித்தாலும் எம்.ஏ. படித்தாலும் அறிவாளி ஆகமுடியாது. பட்டம் என்பது பாராயணம்தான்" ('விடுதலை': 6-2-1960)

இன்றையக் கல்வியைப் பற்றி இப்படியெல்லாம் பெரியார் கருத்து வெளியிட்டாரெனினும், அப்படிப்பட்ட வயிற்றுப் பிழைப்புப் படிப்புத் துறைகளிலும் எல்லாப் பிரிவு மக்களுக்கும் பங்கு கிட்டுமாறு வகுப்புரிமை தேவை என்பதைத் தொடர்ந்து உரத்த குரலில் வலியுறுத்திக் கொண்டேயிருந்தார்.

தற்காலக் கல்வி பற்றிய பெரியாரின் கருத்துகள் 'விடுதலை'யில் இவ்வாறு வெளியிடப் பெற்றன.

கல்வி கற்கும் காலங்களில் மாணவர்கள் தங்களின் படிப்பில் மட்டுமே கருத்துச் செலுத்த வேண்டுமே யொழிய அரசியல் நடவடிக்கைகளில் நாட்டம் காட்டி, அவற்றில் ஈடுபட்டுக் கல்வி பயிலும் கடமையிலிருந்து தவறிவிடக்கூடாது என அடிக்கடி வற்புறுத்திய தந்தை பெரியாரைப் போல வேறெந்தத் தலைவரும் அறிவுரை கூற முன் வந்ததில்லை என்பது குறிப்பிடத்தக்கதொரு சிறப்புச் செய்தியாகும்.

அரசியல் விடுதலையுற்ற இந்தியாவின் முதல் பொதுத் தேர்தலுக்குப் பின், நேர்மையற்ற வழியில் தமிழக அரசின் முதல்வராகப் பொறுப்பேற்ற சக்கரவர்த்தி இராஜகோபாலச்சாரி யவர்கள் கல்வியாளர்களுடன் கலந்தாய்வு செய்யாமல், தன் கட்சிப் பொறுப்பாளர்கட்குத் தெரிவியாமல், சட்டமன்றத்தைப் பற்றியும் கருதாது தொடக்கப் பள்ளிகட்கான புதிய கல்வித் திட்டமொன்றை அறிமுகப்படுத்தினார்.

இத்திட்டத்தின்படி இருவேளைப் படிப்பு என்பது கிடையாது. சிற்றூர் மாணவர்கள் ஒருவேளை - 3 மணிநேரம் - பள்ளியில் பாடங் கற்று விட்டு மறுவேளை அவரவர் தகப்பன்மாரின் தொழிலைப் பயிலவேண்டும். இது எவ்வளவு கொடுமையான சூழ்ச்சி நிறைந்த பார்ப்பனரல்லாப் பிள்ளைகளை நிலையாகக் குலத்தொழிலில் ஈடுபடுத்தும் 'வர்ணாசிரம'த் தன்மை வாய்ந்த திட்டம் என்பதை ஆழமாய்ப் புரிந்து கொண்ட திராவிடர் தந்தை பெரியார், "ஆச்சாரியாரின் இந்தக் குலக்கல்வித் திட்டத்தை ஒழித்தே தீருவேன்" என வஞ்சினம் கூறிப் போராட்ட அறிவிப்புக் கொடுத்தார்கள்.

"தோழர்களே, இந்தப் பார்ப்பனர்கள் நம்மை எவ்வளவு தூரம் கொடுமைப் படுத்துகிறார்கள்! பண்ணாத கொடுமைகளை – அக்கிரமங்களையெல்லாம் செய்கிறார்கள்! போதாதென்று நம் மக்களின் கண்களையும் குத்துகிறதா? உடலால் ஈடுபடுகிற வேலைகள் அத்தனையும் செய்கிறவர்கள் திராவிட மக்கள் தானே? வரி கொடுப்பதுவும் கிராமத்து மக்கள் தானே? உழைக்கிற நம் மக்கள் படிக்கக் கூடாது என்று திட்டம் கொண்டு வருவதென்றால் என்ன நியாயம்? இதை எப்படி சகித்துக் கொண்டிருப்பது? இவர்களைச் சும்மா விட்டு வைத்திருப்பதால் தானே இப்படியெல்லாம் தைரியமாய்ச் செய்கிறார்கள்?

திராவிட மக்கள் படிக்கக் கூடாது என்பதாகக் கல்வித் திட்டம் கொண்டு வருவது என்றால் நமக்கு ஆத்திரம் வராதா? அவர்களுடைய நடத்தையும் போக்கும், இந்தப் பார்ப்பனர்களை இங்கே வைத்திருக்கிற வரையில் நம்முடைய இன மக்கள் தலையெடுக்க முடியாது; ஆதலால் பார்ப்பனரை இந்த நாட்டை விட்டுத் துரத்தித் தான் ஆக வேண்டும் என்ற அந்த அளவிற்கு அல்லவா எண்ணம் போகிறது!

'இந்தக் கல்வித் திட்டம் கேடானது; எங்கள் மக்களை நசுக்குவது; நாங்கள் படிக்கக் கூடாது என்பதற்காகக் கொண்டு வரப்படும் அழிவுத் திட்டம் என்பதாகச் சொன்னால், 'இல்லை இதுதான் நல்ல திட்டம், இதன் மூலம்தான் படிக்க முடியும்' என்ற நமக்குச் சொல்லுகிறார்கள். நாங்கள்தான் ஆயிரம் காரணங்களை விளக்கி, இன்னின்ன காரியங்களால் இத்திட்டம் கேடானது என்ற சொல்லுகிறோமே! நாங்கள் சொல்லுகிற காரணங்களை மறுத்தால் சரி; அதை விட்டு விட்டு என்னவோ இவர்கள் தான் மக்களைப் பற்றிக் கவலை எடுத்துக் கொண்டு பாடுபடுகிற மாதிரியும், எங்களுக்கெல்லாம் அதைப் பற்றிக் கவலையே இல்லை என்பதாகவும் பேசுவது எவ்வளவு தவறானது? இந்த ஆச்சாரியார் அவர்களுக்கோ அவருடைய இனத்து மக்களுக்கோ இந்த நாட்டு மக்களைப் பற்றி எதில் எங்களைக் காட்டிலும் அதிகமான கவலை இருக்க முடியும்?

என்ன தைரியம்? எங்கள் நாட்டில் பார்ப்பானுக்குச் சமமாக வாழ எங்களுக்குத் தகுதியில்லை – திறமையில்லை என்கிறார்கள். படிக்கவும் வசதி செய்து தரமாட்டேன் என்கிறார்கள்; பெரிய படிப்பு படிக்க விடமாட்டேன் என்கிறார்கள். கொஞ்சம் மனிதனாகலாம் என்றாலும் அதற்கும் விடாமல் 'கல்வித் திட்டம்'

என்ற பெயரால் அவனவன் சாதித் தொழிலுக்குப் போங்கள் என்று – அதற்கும் வெடிவைக்கிறார்கள். எதிரிகள் என்றால் வாழவே கூடாது என்றா நினைப்பது?

இப்போதே சொல்லுகிறேன்: இந்தக் கல்வித்திட்டம் எடுபட்டால் மட்டுமே போதாது. நம்முடைய மக்களுக்கு உத்தியோகம் கல்வி எல்லாவற்றிலும் சரியானபடியான விகிதாச்சாரம் – பார்ப்பானுக்கு 100க்கு 3, நம்மவர்களுக்கு 97 என்கிற – வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவம். கொடுக்கப்பட்டாக வேண்டும். இந்த இரண்டும் திராவிட மக்களின் ஜீவாதாரமான உரிமையான பிரச்சினைகள். இவ்விரண்டு காரியங்கள் நிறைவேறுவதற்காக இந்த இனம் கடைசிவரை உயிரைப் பணயம் வைத்துப் போராடியே தீரும்! இதில் சந்தேகமே இல்லை.

உள்ளபடியே சொல்லுகிறேன். இந்தப் பார்ப்பனரை ஒழிக்கிறோமோ இல்லையோ – எங்களிலே ஆயிரம் பேர் இந்த முயற்சியில் – பார்ப்பனரை வெளியேற்றும் இந்த நல்ல காரியத்தில் – சாவோம். ஓர் ஆயிரம் பேர்செத்து விட்டால் என்ன நட்டம் இந்த இனத்துக்கு வந்து விடப் போகிறது? நான் பலமுறை கூறியது போல் இந்த நாட்டுத் திராவிட மக்களின் எண்ணிக்கையில் இந்தச் சாவு என்பது தலை வாருவதில், சிக்கெடுப்பதில் கழியும் ஒரு சில முடிகள் போன்றது தானே தவிர, பெரிய நட்டம் ஒன்றுமில்லை. ஆனால் பார்ப்பனர்கள் தீர்க்கப்படுகிறார்கள் என்ற நிலைமை ஏற்படுமானால் உள்ளபடி அந்தச் சமுதாயத்துக்கு எவ்வளவு கேடு – நட்டம் என்பதைச் சிந்தித்துப் பார்க்கட்டும்!

ஆச்சாரியாருக்குச் சொல்ல விரும்புகிறேன். அவர் இந்தத் திட்டத்தை மாற்றவில்லையானால் நிச்சயமாக இது அவருடைய இனத்தின் அழிவுக்கே ஒரு காரணமாய் இருக்கப் போகிறது!

நான் மிகப் பெருமையோடு சொல்லிக் கொள்ள ஆசைப் படுகிறேன். பொது வாழ்வில் எவ்வித இலாபத்தையும் கருதாமல், சட்டசபை – ஜில்லா போர்டு என்பதாக எந்தப் பெருமையும் கருதாமல் கை நட்டப்பட்டுக் கொண்டு, தங்களுக்கு உள்ளதையும் விட்டு விட்டு, உள்ளபடி பொது நன்மை என்கிறதையே இலட்சியமாகக் கொண்டு யாராவது பாடுபடுகிறார்கள் என்றால், அது திராவிடர் கழகத்தார் என்கிற இந்த ஒரு கழகத்தாரைத் தவிர வேறு யாருமில்லை!

எனவே தோழர்களே, இதை ஒரு ஏணியாகக் கருதி மேலே போவது என்பதாகக் கருதாமல் சமுதாய மக்கள் முன்னேறப் பயன்படுவதாய்ப் பாடுபட முன் வரவேண்டும் என்று உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். போராட்டத்திற்கு வரும்போது வீட்டில் பயணம் சொல்லிக் கொண்டுப் புறப்பட்டு வாருங்கள் ('விடுதலை': 1-2-1954).

பெரியார் தொடங்கிய இப்போராட்டத்தின் விளைவாக ஆச்சாரியார் முதல்வர் பதவியிலிருந்து விலக நேர்ந்தது, காமராசர் ஆட்சிப் பொறுப்பேற்று, 'குலக்கல்வி'த் திட்டத்தை ஒழித்துக் கட்டி, பொன்னான புதிய வரலாறு சமைத்தார்.

## பெரியாரின் கண்டிப்பு

முதல்வராகப் பணியாற்றிய பேரறிஞர் அண்ணா அவர்களின் மறைவுக்குப் பிறகு ஒரு கட்டத்தில் தமிழக அரசு திடீரென ஒரு திட்டத்தை வகுத்தது. உயர்நிலைப் பள்ளியிலும் கல்லூரியிலும் சேர விரும்பும் மாணவர்கள் அதற்கான தகுதித் தேர்வு ஒன்றில் தேற வேண்டும் என்பதே அத்திட்டம். அது பற்றிக் கேள்விப்பட்ட பெரியார் பதறிப்போய், அதை எதிர்த்து அறிக்கை இட்டார். அப்போது கல்வியமைச்சராய் இருந்தவர் நாவலர் நெடுஞ்செழியன். "அரசாங்கத்தின் முக்கிய கவனத்துக்கு" என்னும் தலைப்புக் கொண்ட அவ்வறிக்கையின் சுருக்கம்:

"பாஸ் செய்த சர்ட்டிபிகேட்டில் காலேஜில் சேரத் தகுதி உடையவன் (Eligible for College Course) என்று எழுதிக் கொடுத்து விட்டு, காரியத்தில் மார்க் பார்த்து – திறமை பார்த்து – புகுமுகப் பரீட்சை வைத்துச்சேர்க்க வேண்டும் என்று உத்தரவு போடுவதும், தராதரம் பார்க்காமல் சேர்க்கக்கூடாது என்பதும் பார்ப்பனீயமா? அல்லவா?

பிற்படுத்தப்பட்ட வகுப்பு, தாழ்த்தப்பட்ட வகுப்பு என்பவர்களைக் குழியில் தள்ளி மூடுவது தானே இந்த யோசனையின் பலன்?

கல்வித்துறை அதிகாரம் பிற்படுத்தப்பட்ட வகுப்பார், தாழ்த்தப்பட்ட வகுப்பார் கையில் இருந்தால், இந்த எண்ணம் அவர்களது ஞாபகத்துக்காவது வருமா?

மொத்த ஜனத்தொகையில் முற்பட்ட வகுப்பு மக்கள் எவ்வளவு? பிற்படுத்தப்பட்ட வகுப்பார் ஜனத்தொகை எவ்வளவு? யார் 1க்கு

3ஆக – 4ஆக வரி கொடுக்கிறார்கள்? கல்வித்துறையில் பார்ப்பன ஆதிக்கத்தை உயிருக்குத் துணிந்து ஒழித்ததன் பலன் இதுதானா?

நான் மனித சமுதாயத்தின் 'தகுதி', 'திறமை' 'தரம்' என்பவைகளைப் பார்த்து வந்தவன். பிற்படுத்தப்பட்ட வகுப்புகளுக்காக, தாழ்த்தப்பட்ட வகுப்புக்காக உழைத்து வந்தவன் – வருபவன் நான். மந்திரிகள் முதல் வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவம் ஆகித் தீர வேண்டும் என்பவன். அதிகாரம் – உத்தியோகங்களிலும் வகுப்பு, உள் வகுப்பு, உட்பிரிவு ஜாதி வகுப்புரிமை வேண்டும்.

கண்டிப்பாய் அரசாங்க அகராதியில் "தகுதி, திறமை, தரம்" என்ற சொற்களை எடுத்து விட வேண்டும்" ('விடுதலை': 17–7–1972)

பெரியாரின் கருத்துகள் 'விடுதலை'யில் வெளியான பிறகு, தமிழக அரசு 'தகுதித்தேர்வு'த் திட்டம் பற்றி மூச்சி விடவில்லை!

அரசியல் என்பது பற்றி அய்யாவின் தெளிவுரை இதோ:

"அரசியல் என்ற தனியாக ஒரு விஷயம் இல்லை; அரசியல் என்பது மக்கள் வாழ்வில் சுமத்தப்பட்ட எல்லா விஷயங்களையும் சேர்த்துக் கூறுவதுதான் அதாவது சமுதாயம் பொருளாதாரம், கல்வி, வியாபாரம், கைத்தொழில், பகுத்தறிவு இன்னும் மற்றும் அனேக காரியங்களைக் கொண்டதுதான் அரசியல், ஆனால், இன்றைய தினம் மக்கள் என்ன கருதுகிறார்கள் என்றால் அரசியல் வேறு, சமுதாயம் வேறு என நினைத்துக் கொண்டு தனித்தனியாகப் பிரித்துப் பேசுகிறார்கள். சமுதாயம் வேறு அரசியல் வேறு என்று பிரிப்பதன் காரணம் என்ன? அரசியல் விஷயமாய்ப் பேசுவதாய் இருந்தால் அது 'பொலிடிக்கல்' என்றும், சமுதாய விஷயமாக இருந்தால் அது 'சோஷியல்' என்றும் பிரித்து, மக்களுடைய சமுதாயத்துறை சீர்படுவதற்கு இல்லாமல் செய்வதற்காகவே செய்த ஒரு தந்திரம் இது என்றுதான் சொல்ல வேண்டும். இந்த நாட்டிலேதான் இப்படிச் சொல்லுகிறோமே தவிர வேறு எந்த நாட்டிலும் இப்படித் தனியாகப் பிரித்துக் கையாளுவது கிடையாது!" ('விடுதலை': 14–10–51).

எல்லா அரசியல் முன்னோடிகளுக்கும் அரசியல் அறிஞர்கள் என்போர்க்கும் நன்றாகத் தெரிந்திருந்தும் வெளிப்படுத்தாமற் போன பெரியார் மட்டும் அழகான விளக்கிய அரிய கருத்து இது.

இதைப் போன்றே இன்னொன்றையும் அஞ்சாமல் எடுத்துரைத்தார் அய்யா.

இந்தச் சட்டம் ஏற்படுத்தப்பட்ட அரசியல் நிர்ணய சபையின் பிரதிநிதிகள் எல்லாம் பிரிட்டிஷ் அரசாங்கத்தினரால் எடுக்கப் பட்டவர்கள். இந்தியாவின் மக்களால் ஜனநாயக முறையில் – குடியரசு முறையில் அமையப் பெற்ற பிரதிநிதிகள் அல்லர். இவர்களுக்கு ஓட்டுக் கொடுத்து அனுப்பியவர்கள் பணக்காரர்களும் பார்ப்பனர்களும் படித்தவர்களும்தான்; இவர்களுக்கு மட்டுமே அந்தக் காலத்தில் ஓட்டுரிமை கொடுத்திருக்கிறார்கள். ஆகவே, இவர்கள் பொதுமக்களால் தெரிந்தெடுக்கப்பட்டவர் என்று சொல்ல முடியாது! என அறைந்தார் நடந்த உண்மையை ('விடுதலை':22–9–51).

இன்றையத் தலைமுறையினருக்கு இவ்வுண்மை விந்தையாகவும் வேடிக்கையாகவும் இருக்கும். எனினும் மெய்யாய் நிகழ்ந்தது இதுதான்.

******

# 'THE JUSTICITE' – ஒரு சான்று!

உலகியலில் நிரம்பிய பட்டறிவு பெற்றிருந்த பெரியாரவர்கள் தம் இயக்கக் கோட்பாடுகளையும் தம் விளக்கக் கருத்துகளையும் நம் நாடு முழுமைக்கும் மட்டுமின்றி அயல் நாடுகளுக்கும் பரப்பிப் பயன் கூட்ட ஆங்கில ஏடுதான் பெருந்துணைபுரியும் என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்தார் என்பதை நாம் முன்னரே அறிந்தோம்.

தாம் நடத்திவந்த 'ரிவோல்ட்' கிழமையேட்டை நிறுத்த வேண்டிய கட்டாயத்திற்குத் தள்ளப்பட்டார் என்னும் செய்தியையும் நாம் அறிவோம். 'ரிவோல்ட்' இதழையே மீண்டும் வெளிக் கொண்டு வரவேண்டும் என்னும் தனியாத ஆவல் அவருள் குடி கொண்டிருந்தது என்பதைப் புலப்படுத்தும் குறிப்புகள் 'குடிஅர'சில் காணப்படுகின்றன.

1944இல் சேலம் ஜஸ்டிஸ் மாநாட்டில் தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தை சுயமரியாதை இயக்கக் கொள்கைகளை ஏற்றுக் கொண்ட 'திராவிடர் கழகம்' என்ற புதிய அமைப்பாக மாற்றிய பெரியார், அவ்வமைப்பின் கொள்கைகளான வர்ணாசிரம - சாதி முறை ஒழிப்பு, மூட நம்பிக்கைகளை அழித்தல், திராவிடர்களுக் கென்று தனிநாடு, வகுப்புரிமை ஆகியவற்றைப் பரப்புவதற்கென்று ஆங்கிலத் தாளிகை யொன்று இருந்தேயாக வேண்டும் என்ற இன்றியமையாமையைக் கருதினார். அதன் பயனாய் 'THE JUSTICITE' என்னும் ஆங்கில மொழிக் கிழமையிதழ் தொடங்குவதென முடிவெடுத்தார்.

சேலம் மாநாடு 'ஜஸ்டிஸ் மாநாடு' என்றே பெயர் சூட்டப்பட்டிருந்தது 'ஜஸ்டிஸ்' கட்சிதான் திராவிடர் கழகம் என்பதாக மாற்றுருவம் தாங்கியது. சில காலத்திற்கு ஆவணங்களிலெல்லாம் 'திராவிடர் கழகம் [ஜஸ்டிஸ் கட்சி] என்றே பொறிக்கப்பட்டு வந்தது. இவை விளைவித்த தாக்கமும் 'ஜஸ்டிசைட்' எனும் இதழ்ப் பெயருக்குக் காரணமாயிருக்கலாம்.

'THE JUSTICITE' இதழ் வெளியிடப்படும் செய்தியைக் 'குடிஅரசு' இதழில் முன்கூட்டியே வெளியிட்டு இயக்கத்தவரையும் மக்களையும் அணியப்படுத்தினார் இதழாளர் பெரியார். 9-9-1944,

16-9-1944 ஆகிய நாள்களில் வெளிவந்த 'குடிஅரசு' இதழ்களில், "ஜஸ்டிசைட் என்கிற ஆங்கில வாரப்பத்திரிகை கூடிய விரைவில் ஈரோட்டிலிருந்து வெளிவரும்" என்னும் விளம்பரம் இடம் பெற்றது. 23-9-1944ஆம் நாளிட்ட 'குடிஅரசில்', "ஜஸ்டிசைட் என்கிற ஆங்கில வாரப்பத்திரிகை இவ்வாரம் முதல் வெளிவருகிறது - மானேஜர்" என்னும் விளம்பரம் வெளியிடப்பட்டிருப்பதால், அந்தக் கிழமையிலிருந்து வெளியிடப்பட்டது என்பதே சரியாக விருக்கும். அந்த முதல் 'ஜஸ்டிசைட்' பல ஆவணக் காப்பகங்களில் தேடியும் கிட்டவில்லை! 'ஜஸ்டிசைட்' இதழின் ஆசிரியர்ப் பொறுப்புக்குப் பெரியார், தூய 'சுயமரியாதை' வீரரும் தம் நம்பிக்கைக்குரிய நெருக்கமான தோழராக இருந்தவருமாகிய கரிவரதசாமி என்பவரை அமர்த்தினார்.

'ஜஸ்டிசைட்' ஆங்கில இதழ் சனிக்கிழமைதோறும் வெளியாகும் கிழமையேடாக இருந்தது. 15 அங். நீளமும் 12 அங். அகலமும் கொண்டது அது. நான்கு பக்கங்களை அடக்கிய அவ்விதழுக்கு ஒன்றரை அணா விலையிடப்பட்டது.

முகப்புப் பக்கத்தின் மேற்பகுதியில் 'THE JUSTICITE' என்று கலைநயம் படைத்த ஆங்கில எழுத்துகளில் இதழின் பெயர் பொறிக்கப்பட்டிருந்தது. இதழின் பெயருக்குக் கீழே BOOK 1, LEAF 1 என்று இரு கோடிகளிலும், ERODE, SATURDAY, SEPTEMBER 2, 1944 என்று நடுப்பகுதியிலும் இரட்டைக் கோடுகளுக்கு இடையே சிறிய எழுத்துக்களில் அச்சிடப்பட்டிருந்தன. இதழ்ப் பெயருக்கு இடது பக்கத்தில் இதழின் கட்டணச் செய்திகள் கட்டங்கட்டி வெளியிடப்பெற்றன. வலது பக்கத்தில் கட்டங்கட்டி, அதனுள்ளே, "SPREAD 'THE JUSTICITE' and help the growth of SELF-RESPECT" என்றும் "THE JUSTICITE IS THE SYMBOL OF DRAVIDIAN SOLIDARITY AND NATIONAL SELF-RELIANCE" என்றும், கட்டத்திற்குள் மாறி மாறி அச்சிட்டனர்.

இதழின் இரண்டாம் பக்கத்தில் ஆசிரியவுரைக்கு மேலே ஆங்கிலக் கவிஞர்களின் பாட்டு வரிகள் இடம் பெற்றன. நான்காம் பக்கத்தின் கீழ்க்கோடியில், "Edited, Printed and Published by N. Karivaradaswamy at the Tamilan Press, 42, Cutchery Street, Erode" என்று பொறிக்கப்பட்டது.

அவ்வப்போது அறிவு புகட்டும் ஆங்கிலக் கவிதைகள் 'ஜஸ்டிசைட்'டில் வெளிவரச் செய்தார் பெரியார். அதைப் போல் பேரறிவாளர்களின் நன்மொழிகள் அவ்விதழ்களில் இடம் பெற்றன. சிறந்த ஆய்வறிஞர்களின் உண்மை காட்டும் கட்டுரைத் தொடர்களும்

அச்சேறின. 'THOUGHT FOR THE WEEK' என்னும் தலைப்பில் சிந்தனையாளர்களின் ஆய்வுரைகள் கட்டமிட்டுத் தரப்பட்டன. இத்தனையும் நான்கு பக்கங்களுக்குள் வழங்கப்பட்டமை பெரியாரின் அறிவாற்றலையும் பட்டறிவுப் பரப்பையும் திட்டமிட்ட உழைப்பையும் தெளிவாகப் புலப்படுத்துகிறது.

'திராவிடர் கழகம்' என்னும் அமைப்பு நிறுவப்பட்ட கட்டத்தில் தொடங்கப்பட்ட ஆங்கிலக் கிழமையேடு என்ற நிலையில், 'ஜஸ்டிசைட்' தனது அடிநாள்களில் "Dravidian Federation (JUSTICE PARTY) Members enrolled" என்று தலைப்பிட்டு தமிழகத்தின் ஒவ்வொரு மாவட்டத்திலும் எத்தனை பேர் திராவிடர் கழகத்தில் உறுப்பினர்களாயினர் எனும் பட்டியலை ஒவ்வொரு கிழமையும் தாங்கி வந்து கொண்டிருந்தது. அப்பட்டியல்களிலிருந்து திராவிடர் கழகத்திற்கு உறுப்பினர் சேர்க்கும் முயற்சியில் எப்படி கோவை, தஞ்சை, திருச்சி, சேலம் ஆகிய மாவட்டங்கள் மல்லாடிக் கொண்டிருந்தன என்பது குறித்து நமக்குச் சுவையான செய்திகள் கிடைக்கின்றன.

'ஜஸ்டிஸ்' என்னும் வெறும் அரசியல் கட்சியாக இருந்த அமைப்பு பெரியார் தலைமையில் சுயமரியாதை என்ற சமுதாயக் குறிக்கோளை உள்ளேற்றுக் கொண்டுவிட்ட திராவிடர் கழகம் எனும் புத்துயிர் பெற்ற மக்களாய இயக்கமாக மாற்றுருவம் பெற்ற பின்னர், அதற்கு மக்கள் எந்த அளவிற்கு ஏற்பிசைவு தந்து வரவேற்பும் ஒத்துழைப்பும் கூட்ட முன் வந்தனர் என்ற உண்மையை உலகிற்கு உணர்த்தும் வண்ணம் ஓர் அரிய ஆசிரியவுரை Editorial - 18-11-1944 ஆம் நாளிட்ட 'ஜஸ்டிசைட்' கிழமை இதழில் இடம் பெற்றது.

நம்முன் இருக்கும் பணி

"நம் முன் இருக்கும் பணி" (THE WORK AHEAD) என்ற அவ்வாசிரியவுரையின் சில பகுதிகள்:

> "சேலத்தில் கழிந்த ஆகஸ்ட் 27ஆம் நாளன்று நிகழ்ந்த மாநாட்டில் ஆறு மாதக் காலத்திற்குள் திராவிடர் கழகத்தில் 10,000 உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டு, சிறப்பு மாநாடொன்று கூட்டப் பெறவேண்டும் என்று முடிவெடுக்கப்பட்டது. நிகழ்ந்திருப்பதோ முதன்மையும் பொருளாழமும் வாய்ந்தது! பெரியார் மேற்கொண்ட சுற்றுப் பயணங்களின்போது எல்லாவிடங்களிலும் திராவிட மக்களால் பேரார்வத்துடன்

அவர் வரவேற்கப்பட்ட சூழ்நிலையின் வாயிலாக, தம்முடைய பொதுத்தொண்டு வாழ்க்கையில் அவருக்கு வாய்த்த இடம் எத்துணை மதிப்பிற்குரியது என்பது மெய்ப்பிக்கப்பட்டுவிட்டது!

இன்றைக்கு நம் அமைப்பு 13,000 உறுப்பினர் வலிமை கொண்டது. மிகவிரையில் உறுப்பினர் எண்ணிக்கை ஒரு லட்சமாக உயரப்போகிறது. எண்ணற்ற இளைஞர்கள் ஆர்வம் மேலிட்டவர்களாய் எதற்கும் அணியமாயுள்ளனர். அவர்கள் உரிமையுடன் கேட்பதெல்லாம் கிளர்ச்சிகளின் மூலம் மக்களாயப் புரட்சியே.

பெரியாராவர்கள் வரும் டிசம்பரில் நாடு தழுவிய சுற்றுப் பயணத்தை நிறைவேற்றாமல் மனநிறைவடைய மாட்டாரென அறிகிறோம். எனவே தமிழகத்திலுள்ள திராவிடத் தோழர்கட்கு வேண்டுகோள் ஒன்று. நம் முன் இருக்கும் பணியினைச் செய்து முடிக்கவும் தொண்டர்களிடையே ஒற்றுமையை உருவாக்கவும் முனைவோம். நம் நாட்டு மக்களுக்கு உண்மையான முறையில் பெருமிதத்துடன் தொண்டாற்றுவோம்.

பெரியாரின் தலைமையின்பால் உள்ளார்ந்த நம்பிக்கை வைத்து உடனடியாக வினையாற்றுவோம் அதுவே நமக்கு உரியதை நாம் எய்திக் காட்டுவதில் கொண்டு சேர்க்கும்".

விரிவான ஆசிரியவுரையின் இந்த ஒரு சில பகுதிகளே தமிழகத்தின் அன்றைய நிலவரத்தை நமக்கு உணர்த்த வல்லவை.

தந்தை பெரியாரின் கொள்கையிலும் உழைப்பிலும் தமிழ் மக்கள் - குறிப்பாக, இளைஞர்மணிகள் எந்த அளவுக்கு நம்பிக்கை வைத்து அவருக்குத் துணை நிற்க விரைந்து முன் வந்தனர் என்பதைத் தெளிவாக்கும் எழுத்துகள் இவை.

**"THE DRAVIDIANS - TODAY" - பேரறிஞர் அண்ணா**

அதே இதழில் பேரறிஞர் அண்ணா அவர்கள் 'நக்கீரன்' என்ற பெயரில் "THE DRAVIDIANS - TODAY" (திராவிடர்கள் - இன்று) என்னும் தலைப்பில் எழுதிய கட்டுரை அரிய வரலாற்றுச் செய்திகள் கொண்டது. சிலவற்றைக் குறிப்பிடுகிறேன்.

"ஒரு காலத்தில் நம் கட்சியின் தூண்களாகக் கருதப் பட்டவர்களில் சிலர் இப்போது அய்ந்தாம் படையினராகி விட்டனர் என்பது எத்துணை அதிர்ச்சிக்கும் அவலத்திற்கும் உரிய செய்தி! இவர்களைப் பற்றி எவர் கவலைப்படுகின்றார்?

என்கிறார் நண்பரொருவர். ஆம் இத்தகைய சிறு தீப்பொறிகள் பற்றி நாம் அஞ்சத் தேவையில்லை. திராவிட இளைஞர்தம் நெஞ்சங்களில் எழுப்பிவிடப் பட்டுள்ள பெரு நெருப்போடு ஒப்பிடுகையில் இச்சிறு பொறிகள் இன்மைக்குச் சமம். தூண்டப்பட்டுவிட்ட பெருந்தீ தடை நிற்கும் அத்தனையையும் அழித்தொழித்து எதிரிகளையும் இரண்டகம் புரிந்தோரையும் எதிர்த்துத் தள்ளும் வரையிலும் அணையாது – அணைக்கப்பட முடியாது! 'நெருப்பு விரைந்து பரவுகிறது! என்ற கூவுகிறோம். சாவுக்கு அஞ்சுவோர் ஒதுங்கி நிற்கட்டும்.

இப்போது நாம் உருப்படியான வேலையைச் செய்து முடிக்க வேண்டும். எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்குக் கழகக் கிளைகளை மேலும் மேலும் அமைக்க வேண்டும். ஒவ்வொரு சிற்றூரிலும் திராவிடர் கழகம் இருக்குமாறு செய்ய வேண்டும். ஒவ்வொரு கழகமும் முறையான பணிகள் மேற்கொள்ள வேண்டும். சில உறுப்பினர்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தி மக்களுக்கு மிகத் தெளிவான முறையில் கொள்கைகளை விளக்க வேண்டும். இத்தகைய கூட்டங்கள் அடிக்கடி – குறைந்தது மாதத்திற்கு ஒன்று மேனியாவது – ஏற்பாடு செய்ய வேண்டும். அதன் விளைவாக உறுப்பினர் எண்ணிக்கை உயர வேண்டும்.

நம் கழகம் இப்போது பெரிய இயக்கமாக வளர்ந்துள்ள நிலையில், தீவிரமாக வேலைகள் தொடங்க வேண்டும். ஒரு சிற்றூரின் மக்கள் தீபாவளிப் பண்டிகையைச் சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள் என்றால் 'இந்தியின் இறப்பு' என்றோர் விழாவை ஏற்பாடு செய்யத் தயங்கக் கூடாது. அவர்கள் 'தமிழ் வருஷப் பிறப்பு விழா' என்று கொண்டாடுகின்றனர் என்றால், நாம் ஒரு பொதுக் கூட்டமே ஏற்பாடு செய்து, அந்த விழாவை ஏன் திராவிடராகிய நாம் கொண்டாடக் கூடாது என்பதை மக்களுக்கு விளக்க வேண்டும். இவை போன்ற பணிகள் அவர்களிடம் எப்படியும் தாக்கத்தை ஏற்படுத்தி அவர்களைச் சிந்திக்கத் தூண்டும். ஒரு நாள் அவர்கள் பகுத்தறிவு படைத்த பிறவிகளாக இருந்தால் நம் பக்கம் வந்தே தீருவர்.

எந்த நாடும் மறுமலர்ச்சியும் அதன் தொடர்ச்சியான புரட்சியும் இல்லாமல் 'விடுதலை' எய்திடவில்லை என்பதை வரலாறு நமக்குக் காட்டுகிறது. நாம் தற்போது மறுமலர்ச்சிக் கட்டத்தில் இருக்கிறோம். தேவை ஒரு புரட்சியே. எனவே உறுதி படைத்த தளராத நெஞ்சுடன் களமிறங்கிப் பணிபுரிவோம். போராடி வெல்லுவோம், அல்லது உயிர் துறப்போம். எம்முறையிலேனும் நாம் நமது ஒளிமிக்க திராவிட நாட்டை அடைந்தே தீருவோம்!"

விழிப்பும் எழுச்சியும் விளைவிக்கும் கருத்துகள் இவை.

## அனைவருக்கும் சம வாய்ப்பு

"IN SEPARATION LIES SALVATION" (உய்வு தனிநிலையில்தான் உண்டு) என்னும் ஆசிரியவுரை 24-3-1945ஆம் நாளிட்ட 'ஜஸ்டிசைட்'டில் இடம் பெற்றது. அதன் தமிழாக்கத்தின் பகுதிகளைக் கேளுங்கள்.

> "பார்ப்பன - பணியா - பிரிட்டீஷ் பிடிகளிலிருந்து விடுபட்டதொரு தனிநிலைத் திராவிடத்தையும் திராவிட இனத்தினுடைய உறுதிப்பட்ட ஒற்றுமையையும் நாம் வலியுறுத்துதல் தவறா?
>
> எல்லார்க்கும் எல்லா வாய்ப்புகளும் பல்துறைக் கல்வியும் அளிக்கப்பட வேண்டுமென்பதை வற்புறுத்துபவர்கள் நாம், தொழிலாளர்க்கு நிலையான வேலை வாய்ப்பும் பணிக்காப்பும் வேண்டுமென்று கட்டாயப் படுத்துபவர்கள் நாம். படிப்பின்மை தொலைந்தேயாக வேண்டும். தற்போதைக்கு நாம் ஏற்றுக் கொள்ளுவதெல்லாம் ஒவ்வொரு குடிமகனும் குடிமகளும் அவரவர்க்கு இயன்றவண்ணம் படிக்கவும் எழுதவும் செய்யட்டும் என்பதே.
>
> மக்களிடையே திறனாய்வுப் பண்பையும் அறிவியல் மனப்பான்மையையும் புகட்டி வளர்ப்பதே நம்முடைய கல்வி முயற்சிகளின் அடிப்படைக் கருத்தோட்டமாக இருந்தாக வேண்டும். நம் நாட்டு வரலாற்றில் மீள மீள உருவாகும் நிலவரமாகவும், நம் நாட்டைப் பின்னேற்றச் சூழ்நிலையின் படிகளிலேயே இருக்கச் செய்ய வல்லதாயும் வாய்த்த மூட நம்பிக்கைப் பிறல்களைத் தணித்துக் கரைத்தொழிக்கும் ஆற்றல் அறிவியல் பண்பாட்டிற்கு மட்டுமே உண்டு.

அனைவர்க்கும் சம வாய்ப்பு என்பது அரிதாகப் படலாம். ஆனால் அந்நிலையை எய்துவதற்கு, புதிய மக்களாயக் கட்டுமானத்திற்கான அடிப்படை நடவடிக்கைகளை நாம் மேற்கொள்ளுதல் இன்றியமையாதது. எடுத்த எடுப்பில் பெண் விடுதலையையும், சிறுமையான சாதிமுறையைச் சாய்த்துத் தள்ளுவதையும் நாம் நிறைவேற்றக் கடமைப்பட்டுள்ளோம்.

நாம் பேசிக்கொண்டிருப்பது 'சமனியம்' என்பது மட்டுமன்று; அதைக் காட்டிலும் இன்னும் அடிப்படையானதாகும். சமூக நீதி வேண்டுமெனக் கேட்கிறோம். மனநலம் வாய்த்த எந்த மக்களாய

அமைப்பிலும் நாட்டின் செல்வப் படைப்பாளர்களாம் உழவர்களையும் ஆலைத் தொழிலாளரையும் மறைத்தொதுக்கப் பட்டவர்களாகவே நிலையாக வைத்திருக்கவொண்ணாது.

எனவே திராவிட இனத்தவர் யாவரும் ஒன்றிணைந்திருந்தால் அனைத்திலும் பங்கேற்க வியலும். தனித்திராவிட நாட்டை எதிர்ப்போர் உண்டு என்பதை நாமறிவோம். இந்தியாவின் ஆலைச் செல்வரும் வணிகச் சுரண்டற்காரரும் வெள்ளையரிடமிருந்து பொருளியல் துறையின் ஆட்சி முற்றாகத் தங்களின் கைகளுக்கே மாற்றப்பட வேண்டும் என்ற எதிர்ப்பார்ப்பில் இருக்கும் நிலையில் இந்திய தேசியக் கட்சிகளின்பால் அரசியற் சார்பு கொண்டோராயும் நம் பால் எதிர்ப்புக் காட்டுவோராயும் உள்ளனர். பெரிய அளவிற்குத் தலைமையாண்மை தங்கட்குக் கிட்டும் என்பது கனவு காணும் அறிவுப் பிழைப்பாளர்களும், நம்முன் அறியாமையின் விளைவினால் கொழுக்கும் தன்னல அதிகாரவிரும்பிகளும் - அனைவர்க்கும் அப்பால் - இன்று வரை நம்மீது மேலாட்சி செலுத்தி வரும் ஆரியர்களும் நம்மை எதிர்க்கவே செய்வார்கள்.

எனினும் எவ்வகை எதிர்ப்பினாலும் கலக்கமுறாமலும் எவர் மீதும் பகைமை பாராட்டாமலும் திராவிடத் தனிநிலை யென்னும் இலக்கு நோக்கித் தொடர்ந்து செல்வோம். நமக்குப் பெரியார் ஈ.வெ. இராமசாமி என்ற உயர் மதிப்பு வாய்ந்த தலைவர் கிடைத்துள்ளார். அவரின் தலைமையின் கீழ் கடுமையாக உழைப்போம். உறுதியாக வெற்றி நமக்கே உரியதாகும். இதுவே நம் நம்பிக்கை, திராவிடத்தின் விழிப்புற்ற இருபால் உடன்பிறவிகளின் நம்பிக்கையும் இதுவே ஆகட்டும்!"

இவ்வாசிரியவுரை அக்காலத்திய தமிழக நிலவரங்களையும் திராவிடம் பற்றிய கனவுகளையும் பெரியாரின்பால் வைக்கப் பட்டிருந்த நம்பிக்கையையும் படம் பிடித்துக் காண்பிக்கின்றது.

## இந்தியா பற்றிய தீர்ப்பு

புகழ் வாய்ந்த பீவர்லி நிக்கோலசு அவர்கள் இயற்றிய 'இந்தியா பற்றிய தீர்ப்பு' (Verdict India) என்ற நூலிலிருந்து சில பகுதிகளை 3-3-1945ஆம் நாளுக்குரிய 'ஜஸ்டிஸைட்' தாங்கி வெளிவந்தது. அப்பதிவுகளில் ஒரு பகுதியை எடுத்துக்காட்ட வேண்டுமென விரும்புகிறேன்.

"ஹிந்து மதத்தில் நான்கு பெரும் பிரிவுகள் உள்ளன. அவற்றுள் மீவுயரத்தில் வழிவழி - பாரம்பரிய - முறையில் வந்த

புனிதர்களாம் பார்ப்பனர் என்பவர் இருக்கின்றனர். புயல் போன்ற ஒளிர் மணியாகிய நேரு ஒரு பார்ப்பனர். 'காங்கிரஸ்' கட்சியின் மேனாள் தலைவரும் பிரிட்டிஷ் ஆட்சியினருக்கும் இந்தியக்கடுமை நிலையானருக்கும் இடையே முதன்மைப் பாலமாக இலங்குபவருமாகிய சி. இராஜகோபாலாச்சாரியும் ஒரு பார்ப்பனரே! 'இந்து'வியலின் வலது சாரி முன்னோடி பண்டித மாளவியாவும் பார்ப்பனர்தான். ஏன், 'காங்கிர'ஸின் பெரும் புள்ளிகளில் பெரும்பாலோர் பார்ப்பனர்தாம்! பழம் எத்தோனியர் பிரிட்டனின் அரசியலில் என்ன பங்காற்றினார் களோ, அதே போன்று பார்ப்பனர் இந்திய அரசியலில் பங்காற்றுகின்றார்கள் என்று சொல்லப்படுகிறது.

சத்திரியர்கள், வைசியர், சூத்திரர் என்பவர் மற்ற மூன்று வகுப்பினர் ஆவார்கள். 'காந்தி வைசியர் எனும் வணிகர் வகுப்பைச் சேர்ந்தவர். சத்திரியர் போர் வீரர் ஆவர். உழவுத் தொழிலாளரும் கீழ் மட்டப் பணிகள் செய்வோரும் சூத்திரர் எனப்படுவர்.

இந்தச் சாதிமுறைக்கு அப்பால் 60 மில்லியன் மக்கள் இருட்டில் ஆழ்ந்தோராய் தீண்டத் தகாதோராய் வாழுகின்றனர்! நடைமுறையில் 2500 சாதிகளாய் – தடைகளுக்கும் கட்டுப்பாடு களுக்கும் இடையில் எளிதான வாழ்க்கை முறையைச் சிக்கல் நிரம்பியதாக்கிக் கொண்டு வாழ்கின்றனர் என்பது நம்ப முடியாத வேடிக்கைதான்!

தீண்டத்தகாதோரின் வாழ்க்கை பெரிதும் மறுப்புகளின் தொகுப்பாகும். அவர்கள் பொதுக் கிணறுகளைப் பயன்படுத்தக் கூடாது. அதாவது அவர்கள் அருவருப்பான அழுக்குகள் மண்டிய நீரைத்தான் பருக வேண்டுமென்று தீர்ப்பளிக்கப் பட்டுள்ளனர். அவர்தம் குழந்தைகள் பள்ளிகட்குள் நுழைய முடியாது, வெளியில்தான் உட்கார வேண்டும் மழைக்காலத் தட்பவெப்ப நிலையில் கூட!

அவர்கள் குளிப்பிடங்களுக்கு அருகே செல்லக்கூடாது. எனவே எக்குற்றமும் செய்யா அம்மக்கள் சொல்லவொண்ணா அழுக்குடன் தோற்றமளிக்கின்றனர்! கோவில்கள் அவர்களுக்குத் திறக்கப்படுவதில்லை. நாவிதர்கள் அவர்கட்கு முடிவெட்டு வதில்லை. சலவையாளர்கள் அவர்களின் துணிகளை வெளுப்பதில்லை.

'இந்து'க்கள் கூறுகின்றனர், "அவர்கள் முற்பிறவியில் செய்த பாவத்துக்காக இப்போது படுகின்றனர். நாங்கள் ஏன் அவர்களுக்காக இரங்க வேண்டும்?" என்று. பீவர்லி நிக்கோலசு 1945இல் நேரில் கண்ட இந்தியக் காட்சி இது.

## Why Then - -?

B.G. என்பவர் 6-1-1945ஆம் நாளுக்குரிய 'ஜஸ்டிசைட்'டில் "Why then - -?" என்னும் தலைப்பில் அருமையான வினாவொன்றை எழுப்பியிருந்தார்.

"கோவிலில் கருவறையில் உள்ள படிமத்திலிருந்து ஒரு ஃபர்லாங் தொலைவில் நாம் நிறுத்தப்பட்டு விடுகிறோம். விளைவாக, பார்ப்பனக் கும்பலின் முதுகுப்புறங்களையும் குண்டிப் பகுதிகளையுந்தாம் நாம் வணங்க வேண்டியுள்ளது.

உணவுக் கடையில் போதிய இருக்கை யேந்துகள் இல்லாத முன்பகுதியில்தான் நாம் உட்கார வைக்கப்படுகிறோம். பார்ப்பனக் கும்பலோ தனியறை வாய்ப்புகளை எய்தி இன்புறுகிறது.

கல்வியகத்தில் நம்முடைய இன மாணவர்கள் கற்பிக்கப் படுவதோ கவனிக்கப்படுவதோ கிடையாது. கவலையுடன் கூறுவதெனில் நம் மாணவர்கள் ஊக்கக் குறைப்பிற்கு இலக்காகின்றனர்.

இதழியல் உலகிலோ நம் கருத்துக்கு இடமே கிடையாது. இன்னும் சொல்லப் போனால் நம்முடைய இனத்தைச் சேர்ந்த புகழ் தோய்ந்த பெருமக்களின் கோட்பாடுகளும் வழிகாட்டல்களும் பார்ப்பன இதழ்களால் இருட்டடிப்புச் செய்யப்படுகின்றன; எள்ளி நகையாடப்படுகின்றன.

அரசுப் பணிகளிலோ விசிறியிழுப் போராயும் எழுத்தர்களாகவும் மட்டுமே நம்மால் இருக்க முடியும்.

அன்றாட வாழ்க்கையில் நம்மவர்களில் பெரும்பாலோர் வெறும் விறகு வெட்டிகளாவும் நீரிறைப்போராயுமே இருக்கின்றனர்.

இந்திய தேசியப் பேராயக் கட்சியிலோ நம்முடைய திராவிட இனத் திருவாளர்கள் புகழ் பாடிகளாகவும் கைதாங்கிகளாகவுமே பயன்படுத்தப்படுகின்றனர்.

இந்து மஹாசபையில் வெறும் பிறப்பினாலேயே ஒரு வகுப்பினர் மட்டும் உயர்ந்தோர் என்பதை வலியுறுத்துகின்ற இந்து மதம் என்றதொரு நச்சு அமைப்புக்குள் நாம் அனைவரும் அடைக்கப்பட்டு விடுகின்றோம்.

பிறகு ஏன் தேசிய மூளையாளர்கள் எனப்படுவோர் பகுத்தறிவு மூளையாளர்கள் அவர்களின் கடமையினை நினைவுறுத்தும் போது முணு முணுக்கின்றனர்?"

அந்தக் காலக்கட்டத்தில் இந்த நாட்டிற்கு உரிமையாளர்களாகிய பெரும்பான்மை மக்கள் எந்த நிலையில் வைக்கப் பட்டிருந்தார்கள் என்பதைப் படம் பிடித்துக் காட்டும் மறுக்கமுடியாத சிறுகட்டுரை இது!

## The Tamil Music Movement

தமிழிசை இயக்கம் தொடர்பாக 23-12-1944ஆம் நாளிட்ட ஜஸ்டிசைட் இதழில் கட்டுரையொன்று வெளியாகியுள்ளது. "THE TAMIL MUSIC MOVEMENT" என்று தலைப்பிடப்பட்ட அக்கட்டுரையை எழுதியவர் 'a Self-Respector' என்பதாக போடப்பட்டுள்ளது. அக்கட்டுரையின் சில பகுதிகளையேனும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

"தமிழிசைச் சங்கத்தின் சார்பில் இசை நிகழ்ச்சிகள் சென்னையில் நடத்தப் பெற விருப்பதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. தமிழ்நாட்டில் இசைக்கப்படும் பாடல்கள் தமிழில்தான் இருக்க வேண்டுமென்று தமிழிசை இயக்கம் வலியுறுத்துவது சரியே. இன்றைக்குங்கூடப் பல இடங்களில் தெலுங்குப் பாடல்களும் ஹிந்திப்பாடல்களுமே பெரும்பாலும் இசைக்கப்படுகின்றன. இத்தகைய இழிவான சூழ்நிலை பொறுத்துக்கொள்ளப்பட முடியாதது. நீக்ரோக்கள் கூட இசை என்பது தங்களின் தாய்மொழியில் இல்லை என்றால் உள்ளக் கிளர்ச்சி யடைகின்றனர். நாமோ இத்துணை காலமும் உறங்கிக் கொண்டிருந்தோம்.

நம்முடைய கடவுளர்கள் சமஸ்கிருத மந்திரங்களை மட்டுந்தான் ஏற்கின்றன! இப்போது ஆங்கில மொழியும் நம்முள் நுழைந்து கொண்டது. திரைப்படப்பாடல்கள் என்ற வகையில் ஹிந்தியும் நம் நடுவே புழக்கத்திற்கு வந்து விட்டது. இந்தச் சூழ்நிலையில்

தமிழகத்தில் தமிழ்ப்பாடல்கள்தாம் முன்னுரிமை பெற வேண்டும் என்னும் கோரிக்கை மிகவும் ஞாயமானது.

தமிழிசை இயக்கம் என்பது மெய்யாகவே தன்மான இயக்கத்தினால் முதலில் தொடங்கப்பட்டது. சிறந்த பாவலராகிய பாரதிதாசன் எட்டு ஆண்டுகளுக்கு முன்பாகவே இக்கருத்துக்குச் சொல் வடிவம் தந்தார்; கவிதை உருவத்தில் அதனை வெளிப்படுத்தினார். 'ஆற்றங்கரை தனிலே' என்று தொடங்கும் பாடலில் வானொலியில் இடம் பெறம் பாடல்களில் தமிழே ஆட்சி செலுத்த வேண்டும் என்ற விருப்பத்தை உணர்த்தியிருக்கிறார்.

சுயமரியாதை இயக்கம் எல்லா வாழ்வியல் துறைகளின் தொடர்பாகவும் வரும் பொருள் உரைத்துக் கொண்டு வருகிறது. அவற்றுள் ஒன்று தான் இசைத்துறையும். நம்முடைய கூவல் வீண்போகவில்லை. உயர்ந்த நாட்டுத் தொண்டாளர்களும் கலையாளர்களும் இந்தக் குறிக்கோளை ஏற்றுக் கொண்டுள்ளனர். இது நமக்கு முதல் வெற்றி!

இனிமேல் பாடல்கள் நம் திராவிட இனத்தின் புகழ் பேசுவதாக இருக்கட்டும். தோழர் பாரதிதாசனின் பாடல்கள் இந்த நோக்கத்தை நிறைவேற்ற மிகச் சிறப்பான பொருத்தமுடையவை. உறங்கும் அரிமாக்களை அவை உசுப்பிவிட வல்லவை!"

இக்கருத்துகளைப் பெரியார்தான் "A Self-Respector" என்ற பெயரில் வெளியிட்டுள்ளார் என்பதைப் பல்வேறு காரணிகளின் அடிப்படையில் நாம் முடிவு கட்ட முடிகிறது.

## புத்துயிர் ஊட்டுவது இளைஞர்களே

குன்றாத ஆற்றலும் உந்துவிசையும் ஆளுமையுங் கொண்ட பெரியார் ஈ.வெ. இராமசாமி அவர்களுக்கு நன்றி. அவரால் நம் இன மக்கள் தங்களின் திராவிட இனவுணர்வுக் கிளர்ச்சிக்கு இலக்காகி தங்களின் வீழ்த்தப் பட்ட நிலையைப் புரிந்து கொண்டு விட்டனர். தாம் பிறந்த மண்ணிலேயே இழிபிறவிகளாக்கப்பட்ட நிலையை - அயலவர்களாலும் படையெடுப்பாளர்களாலும் என்பது மட்டுமன்றி உடன் வாழும் ஆரியர்களாலேயே மிகுந்த அவல நிலைக்கு ஆளாக்கப்பட்டிருக்கும் உண்மையை ஆழமாகவும் அகங்கனக்கவும் உணருகின்றனர். சமுதாய அளவில் தாங்கள் அமுக்கப்பட்டுக் கிடப்பதைத் தெரிந்து கொண்டனர்.

மக்களாய - அரசியல் விடுதலைக்கான வாயிற்கதவுகளைத் திறக்கவல்ல அரிய நம்பிக்கைச் சொல்லாக இப்போது வாய்த்து விட்டிருப்பது சுயமரியாதை என்னும் சொல்லே. தன்மானம் என்ற ஒழிக்க வொண்ணா அடித்தளத்தின் துணைக்கொண்ட திராவிட இளைஞன் எதற்கும் - எவற்கும் அஞ்சத் தேவையில்லை.

இந்நாட்டு இளைஞர்கள் மீதுதான் நிறைய எதிர்பார்ப்புடன் மக்களின் கவனம் பதிந்திருக்கிறது. உலகம் முழுவதிலும் இளைஞர்கள் தான் தத்தம் நாடுகளுக்குப் புத்துயிர் ஊட்டியுள்ளனர். அயர்லாந்து விடுதலை பெற்றது அதன் இன மக்களாலேயே. இளம் துருக்கியர்தாம் தங்கள் நாட்டின் துருப்பிடித்துப் போன ஒழுகலாறுகளைத் துடைத்தெறிவதற்குக் கடுமையாக உழைத்தவர்கள். திராவிட நாடு மட்டும் பன்னாடுகளிடையே தனக்குரிய பெருமித இடத்தை எய்தக் கூடாத அளவிற்கு, எழ முடியாமல் தளை செய்யப் பட்டு அடிமை நிலையிலேயே கிடக்க வேண்டுமா? தூய்மையான, பாழாக்கப்படா, தன்னல வல்லாண்மையுடையோருடன் இணையா, பழங்கால மூட நம்பிக்கைகளினின்று முற்றாக விலகி நிற்கும் திராவிட இளைஞர்கள் உள்ள மட்டும் நாட்டின் எதிர்காலம் பற்றிய நன்னம்பிக்கை நமக்கிருந்தே தீரும்.

> இளங்குருதிதான் துணியும்; செய்து முடிக்கத் துடிக்கும்; வீரச் செயலில் பேரார்வம் காட்டும்; விசையாண்மையை நிலை நாட்டும். எனவே இல்லார் என்பவர் இல்லார் என்ற நிலையை உருவாக்கும் குடியாட்சி அரசியலைச் சமைப்பதற்கான பெரும் மக்களாயப் புரட்சியைக் கொண்டு வரும் கடமையும் உரிமையும் இனி இளைஞர்களுக்கே உரியவை. அதற்கான காலம் கனிந்து நிற்கிறது! இளைஞர்கட்கு நாம் விடுவது இவ்வேண்டுகோளே!"

இந்த ஆசிரியவுரை படித்த திராவிட இளைஞரிடையே எத்துணை பெருந்தாக்கத்தையும் ஊக்கத்தையும் அக்காலத்தில் உண்டாக்கியிருக்கும்!

ஆசிரியவுரை அதிர்ச்சி யூட்டுகிறதல்லவா?

### மாணாக்கரும் அரசியலும்

கட்டுரைகள் என்பவற்றுக்கு அப்பால் செய்திப் பகுதிகளும் 'ஜஸ்டிசைட்'டில் இடம் பெற்றன. 6-1-1945ஆம் நாளிட்ட இதழில், என்னும் தலைப்பில் "Dr. Ambedkar's Views" துணுக்குகள் வெளியாயின.

"மாணாக்கரும் அரசியலும்" என்ற தலைப்பின் கீழ் அச்சாகிய செய்தி:

"டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் கல்கத்தாவில் அனைத்திந்திய அட்டவணைச் சாதிகளின் மாணவர் பேராயம் ஏற்பாடு செய்திருந்த கூட்டத்தில் பேசுகையில் மாணவர் உலகம் எய்தி வந்த ஈட்டல்களில் குறிப்பிடத்தக்க வீழ்ச்சி காணப்படுவதாகக் கூறினார். முன்பைவிடத் தற்போது ஆளும் அரசு கல்விக்காகப் பெருந்தொகையைச் செலவிடுகிறது; ஆனாலும் முன்பைக் காட்டிலும் இப்போது மாணாக்கர்கள் படிப்பை விட அரசியலில் நிரம்ப ஆர்வம் காட்டுவது வீழ்ச்சிக்குக் காரணமாகிவிட்டது. மாணவர்களின் நடவடிக்கைகளில் அரசியல் நாட்டம் என்பது ஞாயமான ஈடுபாடுதான் என்னும் அரசியற்காரர்களின் கருத்திலிருந்து அம்பேத்கர் வேறுபட்டார். 'அகில இந்திய மாணவர் சம்மேளனம்' என்னும் (பொதுவுடைமையர் தலைமையில் இயங்கிய) அமைப்பு பற்றிக் குறிப்பிட்ட அவர், பேராயக் கட்சியின் தீர்மானத்தைச் சலிப்பான முறையில் அப்படியே வழி மொழிவதைத்தான் செய்து கொண்டிருக்கிறது என்றும் அவ்வியக்க மாணவர்களின் சொல்லாடல்களில் தற்சிந்தனை என்பதையே காணமுடியவில்லை எனவும் தெரிவித்தார். ஒதுக்கப் பட்ட பிரிவு மாணாக்கர் தங்களுக்கெனத் தனியமைப்பை உருவாக்கிக் கொள்ள வேண்டுமென்ற அம்பேத்கர், அகில இந்திய மாணவர் சம்மேளத்திலிருந்து பிரிந்து கொண்டு அவர்கள் அரசியலிலிருந்து தங்களைத் தனிமைப்படுத்திக் கொண்டு, மாணாக்கர் வாழ்க்கைக்குப் பொருந்திய பாடுகளில் மட்டுமே ஈடுபாடு கொள்ள வேண்டும் என்பதாக ஒதுக்கப்பட்ட வகுப்பு மாணவர்கட்கு வழிகாட்டினார்".

அம்பேத்கரின் இக்கருத்தும் மாணவர் குறித்த பெரியாரின் கருத்தும் ஒன்று போலவே அமைந்திருப்பதை நம்மால் உணர முடிகிறது.

'ஜஸ்டிசைட்'-கிழமை இதழ் குறைந்த பக்கங்களே கொண்டிருந்தாலும், விளக்கமான கட்டுரைகள் மட்டுமே அல்லாது, இயக்கம் தொடர்பான முதன்மை நிலை நடவடிக்கைகளும் செய்திகளாக அதில் இடம் பெற்றன. அவற்றுள் குறிப்பிடப்பட வேண்டிய ஒன்று. 'ஜஸ்டிசைட்'டின் 1-5-1945ஆம் நாளிட்ட இதழில் "பாரதிதாசன் பெருமைப் படுத்தப் பெற்றார்" எனும் தலைப்பில் வெளியான செய்தி: "நேற்று (30-4-1945) மாலை மேரி மண்டபத்தில் திராவிட நாட்டின் பெரும்பாவலர் தோழர் பாரதிதாசன் தோழர் எஸ். இராமநாதன் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் சிறப்புச் செய்யப்பட்டார். தேர்ந்தெடுக்கப்பட்ட அவரின் பாடல்கள் சில, மக்களின் ஆர்வத்தினைத் தூண்டுகின்ற வகையில் இசைக்கப்பட்டன.

பாரதிதாசனின் பாக்களின் அருமைகளைப் புலவர் கா. அப்பாதுரையார் எடுத்துக்காட்டி உரைப் பொழிவு நிகழ்த்தினார்.

செங்கற்பட்டு மாவட்ட நாட்டாண்மைக் கழகத் தலைவர் தோழர் டி. சண்முகவர்கள் தன்மான இயக்க வளர்ச்சிக்கும் தமிழிலக்கிய முன்னேற்றத்திற்கும் பாரதிதாசனின் தொண்டுகள் எவ்வாறு பயன்படுகின்றன என்பதை விளக்கிப் பாராட்டினார்.

இசைமேடைகளில் அவரின் பாடல்களை நிறையப்பாடுமாறு இசைக்கலைஞர்களை வேண்டிக் கொள்ளும் தீர்மானம் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டது".

அந்தக் காலத்தில் (1940-களில்) சென்னையில் மாநிலந் தழுவிய பார்ப்பனரல்லா வழக்குரைஞர்கள் சங்கம் எனும் அமைப்பு இருந்திருக்கிறது என்ற நிலவரத்தை நமக்குக் காட்டும் செய்தித் துண்டம் இதோ: "மாநிலப் பார்ப்பனரல்லா வழக்குரைஞர் சங்கப் பொதுக் குழுவின் ஆண்டுக் கூட்டம் 29-4-1945 அன்று சர். பிடி ராஜன் தலைமையில் சென்னை ப்ராட்வே 15/9 எண்ணிட்ட இல்லத்தில் கூடி, அடுத்த ஆட்சி முறை முதன்மைத் தலைவர் (Administrative General) என்பவர் ஒரு பார்ப்பனரல்லாதவராகத்தான் இருக்க வேண்டும் என்னும் தீர்மானத்தை நிறைவேற்றியது.

மற்றொரு தீர்மானம் எல்லாப் பார்ப்பனரல்லா வகுப்பார்க்கும் அந்தந்த வகுப்பு மக்களின் குடிக்கணக்கு எண்ணிக்கைக்குத் தகுந்தவாறு 97% அரசுப் பதவிகள் - குறிப்பாக நீதித்துறைப் பதவிகள் - பகிர்ந்தளிக்கப்படும் வகையில் வகுப்புரிமைச் சட்டத்தில் திருத்தம் செய்யப்பட வேண்டும் என்று வலியுறுத்தியது". ('ஜஸ்டிசைட்': 1-5-1945).

சிற்றூர் அலுவலர் சிலர் பெரிய அளவிற்கு மனப் பாதிப்பிற்கும் பதைப்புக்கும் இலக்காகி, தங்களைக் காப்பாற்ற வேண்டுமென்று அரசுக்குத் தொலைவரி (தந்தி) கொடுத்துள்ளனர்! செய்தி இதுதான். திருநெல்வேலி மாவட்டப் பாளையங்கோட்டை யிலுள்ள கிராம அதிகாரிகள் பயிற்சி நிறுவனத் தலைமையாசிரியர் பயில்வோர் அனைவரும் ஒரே இடத்தில் ஒன்றாக அமர்ந்துதான் உணவு அருந்த வேண்டும் என்றும், வெவ்வேறு பிரிவினர்க்குத் தனித்தனியே உணவளிக்கும் ஏற்பாடு கிடையாது என்றும் அறிவுறுத்தியுள்ளார்.

ஆனால் பார்ப்பனரல்லாதாரோடு சேர்ந்தமர்ந்து உண்ணக்கூடாது என்று பயிற்சி பெற வந்த பார்ப்பனர் சிலர் முடிவெடுத்தனர். அதன்படி உணவு விடுதியில் சாப்பிடாமல் இருப்பதற்கான இசைவாணை பிறப்பிக்குமாறு அரசுக்குத் தொலைவரி கொடுத்திருக்கின்றனர். ('ஜஸ்டிசைட்': 4-8-1945)

இச்செய்தி சேரன்மாதேவியில் வ.வெ.சு. அய்யரின் மேலாண்மையின் கீழ் நடந்த குருகுலத்தில் நிகழ்ந்தவற்றை நினைவூட்டுகிறது. குருகுலப் போராட்டத்திற்குப் பிறகு இருபது ஆண்டுகள் கழிந்தும், எல்லாருடனும் இணைந்தமர்ந்து உண்ணும் பண்பாட்டை மேற்கொள்ளா மனநோயாளிகள் தமிழகத்தில் உலவினர் என்னும் செய்தி நம்மை நாணமுறச் செய்கிறது.

1944ஆம் ஆண்டு திசம்பர்த்திங்கள் 23ஆம் நாளுக்குரிய 'ஜஸ்டிசைட்' இதழில் வெளியிடப்பட்டிருந்த புரட்சித் தன்மை படைத்த ஒரு செய்தி நமக்கு வியப்பும் உவகையும் விளைவிப்பதாகும்.

"OLD WIDOWERS SHOULD NOT MARRY YOUNG GIRLS" என்னும் தலைப்பின் கீழ் இடம் பெற்றிருந்த அச்செய்தி வடபுலத்தில் அக்காலத்தில் தனியாட்சியுரிமையுடன் நடப்பிலிருந்த பாரத்பூர் மாநிலத்தில் புதிதாகப் போடப்பட்ட சட்டம் பற்றியதாகும்.

"பாரத்பூர் மன்னரின் அரசு அண்மையில் ஓர் ஆணையினை வெளியிட்டிருப்பதாகத் தெரிய வருகிறது. 50 ஆண்டு அகவை எய்திவிட்ட எந்தவோர் இந்து ஆணும் 25 ஆண்டகவைக்குக் கீழுள்ள எந்தவொரு பெண்ணையும் திருமணம் செய்து கொள்ளுமாறு விடப்பட மாட்டார் என்பதே அவ்வறிக்கை. மேலும் அவ்வறிவிப்பின்படி 'வரதட்சிணை' என்பது தடைசெய்யப் பட்டுள்ளது. இச்சட்டத்தை மீறுபவர்கள் இரண்டாண்டுச் சிறை வாழ்வுக்கோ, 1000 ரூபாய் ஒறுப்புக்கோ அல்லது இரண்டுக்கும் சேர்த்தோ உரியவர்கள் ஆவர்!"

இதழாளர் என்னும் வகையில் பெரியார் தம் இறுதிக் காலம் வரை நடத்திக் கொண்டு வந்த 'விடுதலை', 'உண்மை', 'The Modern Rationalist' ஆகிய தாளிகைகளின் பொறுப்பேற்று, தொடர்ந்து இன்று வரை நடத்திக் கொண்டிருக்கும் ஆசிரியர் திரு கி. வீரமணியவர்களையும் அவருடன் அக்காலத்தில் கொள்கை பரப்பும் களப்பணியில் ஈடுபட்ட ஏனைய எடுத்துக்காட்டான வீரவிடலையரையும் பாராட்டிப் போற்றும் "SELF-RESPECT BOMBERS" என்னும் ஆசிரியவுரையொன்று 20-12-1944ஆம் நாளிட்ட 'ஜஸ்டிசைட்' ஏட்டில் வெளியிடப்பட்டது. அதன் தமிழாக்கத்தைத் தருகிறேன்.

"தன்மான வெடிகுண்டு வீசிகள்": திராவிடர் இயக்க மாணாக்கர் குழுக்கள் தமிழ் மாவட்டங்களில் சுற்றுப் பயணம் செய்து புரோகிதப் பித்தலாட்டம், மத மூட நம்பிக்கை ஆகியவற்றைத் தோலுரித்துக் காட்டி வருகின்றனர். தங்களுடைய வாய்ப்பான

விடுமுறை நாள்களைத் துறந்துவிட்டுக் கடுமையான சுற்றுப்பயணம் மேற்கொண்டுள்ள நம் மாணவமணிகளைப் பாராட்டுகின்றோம். கழிந்து முறை அவர்கள் செய்த தொண்டு வீணாகி விடவில்லை. அவர்களின் கோடைப் பயணம் நல்ல வெற்றிப் பயணமாய் அமைந்தது. குறிப்பாக, நாட்டின் உட்கோடிச் சிற்றூர்ப் பகுதிகளில் பகுத்தறிவுச் செய்திகள் பேரார்வத்துடன் வரவேற்கப்பட்டன. விளைவாக - பெரிய அளவிற்கு விழிப்புணர்வு ஏற்பட்டது.

இப்போது இரண்டாம் முறையாக மேற்கொள்ளப்பட்டுள்ள பயணம் முழுவீச்சுடன் நடைபெறுகிறது. ஒற்றையடிப்பாதைகள் நெடுக நடந்தும், தூக்கிப் போடும் வண்டிகளிலும் நெருக்கடி மிகுந்த தொடரிகளிலும் பயணம் செய்தும், காலை நேரக் குளிர்ச்சியை எதிர்கொண்டும், நேரந்தவறி உணவு உட்கொண்டும், முதல் தடவையாகப் பெற்றோரிடமிருந்து பிரிக்கப்பட்ட நிலையில் ஒரு புதுவகைப் பட்டறிவுக்குள்ளாகின்ற இவர்கள் பலவகைப் பண்புகள் கொண்ட கூட்டத்தாரிடையே நுட்பமான சிக்கல்களைப் பற்றி உரையாற்றிவரும் இவ்வினம் தன்மான வெடிகுண்டு வீசிகள் பகுத்தறிவு வெடிகுண்டுகளை வீழ்த்த, அவை வைதிகவெறியையும் இரண்டகத்தையும் சுட்டெரிக்கும் சூழ்நிலை அமைந்துள்ளது.

இவ்விளைஞர் அணியினர் பல்வேறு அகவையும் படிப்பும் வாய்ந்த ஒளி பொருந்திய அருமையான திரட்டாகும். சான்றுக்குச் சாதியையும் வேதியனையும் எதிர்த்து இடி முழக்கம் பண்ணும் பதினொன்றே அகவையுள்ள இளைஞர் வீரமணியை எடுத்துக்காட்டுவோம்.

கல்லூரி மாணாக்கரும் உயர்நிலைப் பள்ளி மாணாக்கரும் இயக்க நற்கொள்கைகளையும் பரப்புவதில் போட்டி போடுகின்றனர். இவர்களின் பயணங்களின் பயனாயும் மாநாடுகளின் விளைவாகவும் பெருந்திராவிட இயக்கம் வலுக்கூட்டப்பட்டிருக்கிறது என்பதை எவரும் மறுக்க முடியாது. எனவே இவ்வீர விடலைகளைப் பாராட்டுகிறோம்!"

வரும் பொருள் உரைக்கும் இவ்வாசிரியவுரை திரு. வீரமணியவர்களை அன்றே அடையாளம் காட்டிவிட்டதன்றோ?

அவ்வப்போது 'ஜஸ்டிசைட்'டில் சிந்தனையாளர்தம் செம்மொழிகளும் அச்சேறின. அவற்றுள் சிலவற்றைக் குறிப்பிடுகிறேன்.

"உங்களின் பொறிகளுக்குப் புலப்படாதவற்றின்மீது நம்பிக்கை வைப்பதைக் காட்டிலும் உங்களின் புலன் உணர்வுகட்கும் புரிதலாற்றலுக்கும் உகந்தவற்றின் மீது நம்பிக்கை வைப்பதுதான் பாதுகாப்பானது!" - பெரியார்.

"அந்தோ! ஆராய்ச்சி வினா என்னும் 'குற்றம்' மதமெனும் நிறுவனம் இதுவரை மன்னித்திராத ஒன்று. முழுமையான நம்பிக்கை என்பதுவும் அஞ்சாத ஆய்வு என்பதும் எல்லாக் காலக்கட்டங்களிலும் இணங்கிப் போக முடியா எதிரிகளாகவே இருந்து வந்துள்ளன!" - ஷெல்லி.

"கழிந்த கால மதங்கள் - ஏன், வருங்கால மதங்கள் - என்பவை எல்லாம் மாந்த குல உள்ளத்தின் உயிர்நிலை பறிக்கப்பட்ட வடிவங்களாகவே இருந்தன - இருக்கும். ஏனெனில் வலுவிழந்து சுக்கு சுக்காகிவிட்ட அடிப்படையைக் கொண்டவையே மதங்கள்!" - லூதர் பர்பேங்க்

"விடாப்பிடியான சமயவெறி ஒருவகையான முடக்கு நோயே ஆகும். ஒருவரின் உயிர்நிலையின் எல்லா வகையான வடிவச் சிதைவுகட்கும் அதுவே காரணமாகி விடுகிறது"- ஹாரி சைமன்.

"20 கோடி இந்து மக்கள் உண்டு உயிர் வாழ்வதற்கு நடத்திக் கொண்டிருக்கும் வாழ்க்கைப் போராட்டத்தில் தங்களையும் ஈடுபடுத்திக் கொள்ள கோடிப் பார்ப்பன மாக்கள் முன்வருவது கிடையாது. அத்துடன் நின்றுவிடவில்லை அவர்கள். மதத்தின் பெயரால் தங்கட்குக் கிட்டியிருக்கும் முன்னுரிமை நிலையை ஏனோயோருக்குக் கேடு கூட்டும் வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொள்ளவும் செய்கின்றனர்" - பாபு கோவிந்த தாசு.

"ஓ, பார்ப்பனரே! உங்களின் 'வர்ண பரம்பரைக் கோட்பாடு' பற்றி என்ன கருதுவது? பார்ப்பனன் பாரம்பரிய அடிப்படையில் கல்விக்கு அதிகமான இயற்கைத் தகுதி படைத்தவன் என்றால், அவன் கல்விச் செல்வத்தை எய்துவதற்கென்று ஏன் பொருட் செல்வத்தை விரயப்படுத்த வேண்டும்? அத்துணை செல்வமும் பறையனுக்காகச் செலவிடப் பெறட்டும்!

வாய்ப்பற்ற - வலிமையிழந்த எளியோருக்கு ஈயுமின்! ஏனெனில் அவர்கட்கே நன்கொடை யுதவிகள் இன்றியமை யாதவையாகும். பிறப்பிலேயே பார்ப்பனன் திறமையானவன் என்றால் பிறரின் துணையில்லாமலேயே - அவனாகவே தன்னை வாழ வைத்துக் கொள்ள முடியும். திறமையற்றவர்களாய்ப் பிறந்தோர்

தங்கட்குத் தேவைப்படும் கல்வியையும் கற்பிப்போரையும் அடையட்டும்! இதுதான் எனக்கும் தெளிவாகும் ஆயுமுறையும் ஞாயமும் ஆகும்"

- விவேகானந்தர்.

'ஜஸ்டிசைட்'டின் 21-7-1945ஆம் நாளிட்ட இதழில் கட்டம் கட்டி மாணாக்கர்க்காக வெளியிடப்பட்ட பாநடை அறிவுரை குறிப்பிடத்தக்கது. இதோ அதன் தமிழாக்கம்:

"திராவிட மாணவர் தோழர்களே, ஒன்றுபடுங்கள்! ஆரியக் கோட்பாடுகளை ஆய்வுக்கு எடுங்கள். அருவருப்பைத்தான் அசங்கியத்தைத்தான் அவற்றில் காணுவீர்கள்!

'பனியா' காந்தியாரின் கொள்கையினைக் கருதிப்பாருங்கள். காட்டு விலங்காண்டிக் காலத்திற்கே அது பொருத்தமானது எனும் முடிவுக்கு வாருங்கள்!

இந்திய இன்றைய பொதுவுடைமைக்காரர்களின் போக்கினுள் புகுந்து நோட்டமிடுங்கள். பார்ப்பனியத்திலிருந்து அது வேறுபட்டதன்று என்பது எளிதில் புலப்பட்டு விடும்!

பிறகு - உங்களின் சிறந்த தேர்ந்தெடுப்பாக எது இருக்க முடியும்? திராவிடர் மாணவர் கழகந்தானே?........"

இவ்வாறு நான்கு பக்கங்களை மட்டுமே கொண்ட 'ஜஸ்டிசைட்' ஆங்கிலக் கிழமையிதழை நல்ல வண்ணம் பயன்படுத்திக் கொண்டு நாட்டு நலன்களுக்கான கருத்துகளைக் கற்றாரிடையே பரப்ப முடியும் என்று நிலை நாட்டினார் இதழாளர் பெரியார். பெரியாரின் இதழியல் அறிவாற்றலுக்கு 'ஜஸ்டிசைட்' தக்கதொரு சான்று! 'விடுதலை' நாளிதழ் இரண்டாம் உலகப் போர்ச் செய்திகளை மக்களுக்குக் கொண்டு சேர்க்கும் நோக்கத்திற்காக அன்றைய பிரிட்டிஷ் ஆட்சியாளரிடம் ஒத்திக்கு விடப்பட்டிருந்த நிலையில், "குடி அரசு" மட்டுமே தமிழ் மட்டும் தெரிந்தோரிடம் சென்ற விழிப்புணர்ச்சி ஊட்டிக் கொண்டிருந்தது. அக்கட்டத்தில் 'ஜஸ்டிசைட்' சிறிய உருவத்துடன் உலாவந்து சீர்த்தி மேவியது.

திராவிடர் கழகம் எனும் பேரியக்கம் தோன்றிய பிறகு 'விடுதலை' நாளிதழை ஆட்சியாளரிடமிருந்து திரும்பவும் பெற்று நிறையப் பயன் காண வேண்டுமென்னும் பெருமுயற்சியில் பெரியார் இறங்கியிருந்ததாலும், தாளிகைத்தாள் (Newsprint) தட்டுப் பாட்டினாலும் 'ஜஸ்டிசைட்' நிறுத்தப்பட வேண்டிய நெருக்கடிக்கு இலக்காகியது!

******

# 'உண்மை' உலாக் கிளம்பியது!

உள்ளதை உள்ளபடி ஊருக்கு உரைக்க - உள்ளவற்றின் உள்ளே புதைந்துள்ள மெய்ப்பொருள்களைக் கல்லியெடுத்து உலகுக்கு உரைத்திட 'உண்மை' உலாக் கிளம்பியது! ஏற்கெனவே பெருமளவில் இயக்கக் கருத்துகளையும் இயக்கச் செய்திகளையும், ஓரளவு நாட்டு - உலக நிகழ்வுகள் பற்றிய தெரிவிப்புகளையும் தாங்கிய நாளிதழாக 'விடுதலை' வெளிவந்து கொண்டிருக்க, கூடுதலாக உண்மை விளக்கக் கட்டுரைகள் கொண்ட பருவ இதழ் ஒன்று இன்றியமையாததெனக் கருதிய பெரியார், மடமை மாய்க்கும் குறிக்கோளுடன் 'உண்மை' என்னும் பெயரிலேயே மாதிகை யொன்றனை நிறுவினார். (குடிஅரசு இதழை அய்யா அச்சிட்டமை உண்மை விளக்கம் அச்சகத்தில்தான் என்பது இங்கு நினைவு கூரத்தக்கது.)

14-1-1970 அன்று தமிழர் திருநாளில் திருச்சியில் பெரியார் முன்னிலையில் சே.மு.அ. பாலசுப்பிரமணியம் தலைமையில் திராவிடர் கழகப் பொதுச்செயலாளர் கி.வீரமணி அவர்களால் முதல் 'உண்மை' வெளியிடப்பெற்றது. அட்டைகள் நீங்கலாக இருபத்தெட்டுப் பக்கங்களைத் தன்னுள் கொண்ட 'உண்மை' இதழ்க்குப் பெரியாரால் மிகக் குறைந்த தொகையான இருபத்தைந்து காசு விலையிடப்பட்டது. திருச்சி அறிவுக் கடல் அச்சகத்தில் ஈ.வெ.ரா. மணியம்மை அவர்களால் அச்சிடப்பட்டு, புலவர் கோ. இமயவரம்பன் அவர்களை ஆசிரியராகவும் வெளியிடுவோராகவும் கொண்டு வெளியிடப்பட்டது. 'உண்மை'யின் அளவு 7க்கு 9" ஆகும்.

'உண்மை' முதல் இதழின் முகப்பு அட்டை பேரறிவாளர் கவுதம புத்தரின் உருவப் படத்தை ஏந்தியிருந்தது. இதழின் முதலாம் புக்கமாம் ஆசிரியவுரைப் பக்கத்தின் மேலிருமூலைகளிலும் முறையே "புத்தியுடையவனே புத்தன்" என்றும், "சிந்திப்பவனே சித்தன்" என்றும் பொறிக்கப்பட்டிருந்தது.

> **"உண்மை என்னும் பெயரால் ஒரு மாதப் பத்திரிகையை 1970ஆம் ஆண்டு முதல் துவக்குகிறேன். அதற்குக் கொள்கை மக்களைப் பகுத்தறிவு வாதிகளாக ஆக்க வேண்டும் என்பதாகும். பகுத்தறிவுத் தொண்டுக்காக, சமுதாய இழிவு - மடமை நீக்கும்**

தொண்டுக்காக என்றே பாடுபட இந்த 'உண்மை' பிறந்திருக்கிறது.

"மக்களை அறிவாளியாக்கும் துறையில் மூட நம்பிக்கைகளை ஒழிக்கும் துறையில் யார் பாடுபட்டாலும், அவர்கள் பொதுமக்களால் வெறுக்கப்படவும், நாத்திகர்கள் என்று கூறப்படவும், தொல்லைக்கு ஆளாக்கப்படவும், கொல்லப் படவுமான தன்மை உலகிலேயே இயற்கையாக இருந்து வருகிறபோது அந்த நிலை நம் நாட்டில் நம் மக்கள் இருக்கும் யோக்கிதையில் ஏற்படாமல் இருக்க முடியுமா? ஆதலால் அந்த நிலைக்கு ஆளாகும் தன்மையை எதிர்பார்த்தே நான் இக்காரியத்தில் பிரவேசித்துத் தொண்டாற்றி வருகிறேன்.

"உண்மை நாத்திகப் பத்திரிகைதான். முக்காலும் நாத்திகப் பத்திரிகைதான். அதற்காக யாரும் பயப்படாதீர்கள்.

'உண்மை'யை வரவழைத்துப் படியுங்கள். பத்தாயிரம் சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொடுங்கள். 'உண்மை' 6 மாதத்தில் வாரப்பத்திரிகையாக ஆகும்படி ஆக்கிக் கொடுங்கள்".

தந்தைப் பெரியாரின் இச்சொற்கள், நாத்திகத்தைப் பரப்பும் 'உண்மை'க்கு ஆண்டுக் கட்டணம் செலுத்தும் உறுப்பினர்கள் மட்டும் 10,000 பேர் இருக்க வேண்டுமென்றும், 'உண்மை' திங்களிதழ் என்னும் நிலையிலிருந்து கிழமையிதழ் என்ற நிலைக்கு வளர்ச்சியடைய வேண்டுமென்றும் விருப்பங் கொண்டிருந்தார் என்பதைப் புலப்படுத்துகின்றன.

## உண்மை இதழின் பண்பும் பயனும்

தாம் தோற்றுவித்த 'உண்மை' இதழின் பண்பும் பயனும் பற்றிப் பெரியாரவர்களே குறிப்பிட்டார்.

"உண்மைப் பத்திரிகைக்கு முதலாவது ஆண்டாகிய ஒரு ஆண்டு முடிவெய்தி, இரண்டாவதாண்டின் முதல் இதழாக இம்மலர் உங்கள் கைக்கு வருகிறது. சென்ற ஓராண்டுக் காலத்தில் 'உண்மை' பல பகுத்தறிவுக் கட்டுரைகளையும் அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகளையும், உலகினர் போற்றும் பல அறிஞர்கள் கருத்தைக் கொண்ட கட்டுரைகளையும் கொண்டு மாதந்தோறும் வெளியாகி உங்கள் கைக்கு வந்து கொண்டிருக்கிறது. 'உண்மை' போன்ற பத்திரிகை தமிழ்நாட்டில் வேறு இல்லை என்று சொன்னால் மிகையாகாது. இந்த ஒரு ஆண்டில் நமது நாட்டில் எங்கு பார்த்தாலும், பகுத்தறிவுக் கழகங்களும், சிந்தனையாளர்

கழகங்களும் ஆராய்ச்சியாளர் கழகங்களும் தாராள கருத்துக்காரர்களும் தோன்றிய வண்ணமாக இருப்பதுடன், அக்கழகங்களில் படித்த அறிவாளிகளும் மேதாவிகளும், அரசியல் பதவியிலும் ஆசிரியர் பதவியிலும் இருந்து வரும் பெரியோர்களும் மாணவர்களும் ஈடுபட்டுத் தொண்டாற்றி வருகிறார்கள்".

'உண்மை' இதழின் உள்ளீடு பற்றியும் அதன் தாக்கம் பற்றியும் அய்யா அவர்களுக்கு அகநிறைவு இருந்தது என்ற உண்மையை 14-1-1971ஆம் நாளிட்ட 'உண்மை'யின் ஆசிரியவுரைப் பகுதியில் அவர் வெளியிட்ட இவ்வெழுத்துகள் நமக்குக் காட்டுகின்றன.

அதே ஆசிரியவுரையில் பெருமிதம் மேவிட்ட நிலையில் இப்படி அறிவித்தார்:

> இன்னமும் நாள், கிழமை, மாதம், ஆண்டு, நேரம், காலம், ஜோசியம், சகுனம் முதலிய மற்றும் எத்தனையோ 'துர்நாற்றங்கள்' மக்களைக் கவ்விக் கொண்டிருக்கின்றன. இவைகளிலிருந்து மக்களை விலகச் செய்ய வேண்டுமானால் பூகம்பம், வெள்ளம், புயல், விஷநோய் முதலிய சாதானங்களால்தாம் முடியுமே அல்லாமல், அறிவைப் புகட்டித் திருத்துவது என்றால். . . . நினைக்கும் போதே பயம்தான் ஏற்படுகிறது. இப்படிப்பட்ட ஒரு மாபெரும் காரியத்தைச் செய்ய 'உண்மை' துணிந்து தொண்டாற்ற வந்திருக்கிறது என்றால், இதை "மரண தைரியம்" என்று தான் சொல்ல வேண்டும்".
>
> இவ்வண்ணம் தறுகண்மையுடன் எழுதிய அய்யா அவர்கள், "இந் நாட்டில் பகுத்தறிவுப் பிரசாரமும் மூடநம்பிக்கை ஒழிப்புப் பிரசாரமும் விஞ்ஞான வளர்ச்சிப் பிரசாரமும் செய்பவர்களுக்கு, 'உண்மை' போன்ற பத்திரிகைகளைத் தோற்றுவிக்கப் பாடுபடுவதோடு, மூட நம்பிக்கையைப் பரப்பும் பத்திரிகை களையும் அதன் பயனாய் வாழ ஏற்பட்ட சமுதாயங்களையும் ஒழித்துக் கட்ட வேண்டிய ஒரு மிகக் கஷ்டமான பொறுப்பும் நமக்கு இருந்து வருகிறது"

என்றும் குறிப்பிட்டார். 'உண்மை' இதழ் மட்டுமின்றி, மேலும் பல பகுத்தறிவு இதழ்கள் உருவாகும்படியாக உழைக்குமாறு பிறரைப் பெரியார் கேட்டுக் கொண்டார் என்றால், அவர்தம் உள்ளக் கிடக்கை எத்தகையது எனப் பெரிதும் நாம் வியக்க வேண்டியிருக்கிறது.

"ஆகவே சந்தாதாரர்களே, அன்பர்களே, நீங்கள் ஒவ்வொருவரும் 'உண்மை'க்கு மறு ஆண்டுச் சந்தாதாரர்களாக

ஆவதோடு, ஒவ்வொருவரும் அய்ந்து சந்தாதாரர்களுக்குக் குறையாமல் சேர்த்துக் கொடுத்தும் உதவி செய்யுங்கள் என்று வேண்டிக் கொள்ளுகிறேன்" என்பதாக ஆசிரியவுரையை அய்யா

முடித்துள்ளமை, இதழாளர் என்ற முறையில் உளவியல் கலையில் அவர் எத்துணை பட்டறிவும் தேர்ச்சியும் எய்தியிருந்தார் என்பதை நமக்கு விளக்குகிறது.

1970; 71, 72 - ஆகிய மூன்று ஆண்டுகளிலும் திருச்சியிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த 'உண்மை', 14-1-1973ஆம் நாளிலிருந்து சென்னை - திராவிடன் அச்சகத்தில் அச்சாகி 32 பக்கங்களைத் தாங்கி 40 காசுகள் விலையிடப்பெற்று வெளிவரத் தொடங்கியது.

'உண்மை'யின் முதலாம் இதழிலேயே பெரியார், "உண்மை நாத்திகப் பத்திரிகைதான், முக்காலும் நாத்திகப் பத்திரிகைதான்'' என்றும், ''ஆகவே 'உண்மை'யின் தொண்டு எதிர்நீச்சல் தொண்டேயாகும்" என்றும் அறிவிப்புச் செய்தார் என்றால், அதை அவர் நூற்றுக்கு நூறு விழுக்காடு நடைமுறைப்படுத்திக் காட்டினார்.

ஓராண்டுக்குள் பெரியார் தம் கைப்படவே, "உண்மை இதழ்"; "ஜாதி"; "நான் சொன்னால் உனக்கு ஏன் கோபம் வர வேண்டும்?" மதம் என்பது மூட நம்பிக்கையின் தொகுப்பு; "கடவுளை நம்பும் முட்டாள்களே!"; ''நாங்கள் யார் தெரியுமா?''; ''ஜாதி ஒழிய வேண்டுமானால்"; "ஆஸ்திக - நாஸ்திகம்''; "நமது லட்சியமும் எதிர்கால வாழ்வும்"; "தமிழர் நிலை" என்பதாகப் பத்து தலைப்புகளில் அந்த 1970ஆம் ஆண்டு முழுவதற்கும் ஆசிரியவுரைப் பகுதியில் எழுதினார். "நான் சொன்னால் உனக்கு ஏன் கோபம் வரவேண்டும்?" எனும் தலைப்பில் மூன்று 'உண்மை' இதழ்களில் தொடர் கட்டுரைகளையும் வரைந்தார். ஆக, பன்னிரண்டு மாதங்களில் ஆசிரியவுரைகளும் பெரியாருடையவை.

இவை போக அவரின் சிறப்புக் கட்டுரைகள் எத்தனை வெளிவந்தன என்பதைப் பாருங்கள்:

"புத்தாண்டுச் செய்தி"
"நாகரிகம்"
"ஒன்றை மனத்தில் வையுங்கள்"
"கடவுள் குழப்பம்"
"சோசியலிசம்"
"கடவுள் மத ஆதாரங்கள்"
"சிவனின் யோக்கியதையும் சைவனின் ஒழுக்கமும்"

"நான் சொல்லுகிறேன்"

"இந்து மதம்"

"மூன்று கடவுள் எதற்கு?"

"ஆத்மா"

"இன்றைக்குப் புத்தாண்டு பிறக்கிறது"

"கடவுள் சக்தி"

"சுயமரியாதை இயக்கம் ஏன்?"

"ஏன் விலக வேண்டும்"

"ஆரியர்களுக்கு கடவுள் உண்டா?"

"மதமும் மனித சமுதாயமும்"

"இந்துக் கடவுள்கள்"

"மனித சமூக உறவுமுறை"

"உலக மாறுதலின் வேகம்"

"நீங்கள் பூணூல் மாட்டியிருப்பதைப் பார்த்தால் எங்கள் மனம் வேகுகிறதே!"

"பஞ்ச கன்யான் ஸ்மரேந்"

"கடவுளும் மதமும் மனிதனை யோக்கியமாய் இருக்கச் செய்யா"

"இந்திய சரித்திரம்"

"புத்தர் வணக்கம்"

"பாரதக் கதையை நடந்த கதையாக நம்பலாமா?"

"மனிதன் செத்தால், பிறகு?"

"கடவுள் மறுப்பும் - கோவில் இருப்பும்"

"நாஸ்திகர்களே சமதர்மவாதிகள்"

"பிரார்த்தனை"

"இராமனுக்கு நான்கு பெண்டாட்டிகள்"

"தர்மம் என்றால் என்ன?"

"சிரார்த்தமும் கல்யாணமும்"

"ஏ, கடவுள் நம்பிக்கைக்கார அறிவிலிகளே!"

"கூட்டுறவு வாழ்க்கை"

"காந்தியார் - பெரியார் உரையாடல்"

"கருத்தடையும் மனித வாழ்வின் லட்சியமும்"

"தீபாவளிப் பண்டிகை"

"மனிதன் ஒரு ஜீவப்பிராணி"

"பொதுத் தொண்டும் பொது நல வாழ்வும்"

"இராமாயணம் பற்றி ஆராய்ச்சி"

"நாம் அஞ்ஞானிகள்"

"சாமி விளையாட்டு"

"கந்தன் - முருகன் பெயர்களின் காரணங்கள்"

"இராஜாஜி அழுகை"

"வாழ்க்கைக்கு மதம் வேண்டுமா?"

ஆகிய கட்டுரைகளும், 'சித்திரபுத்திரன்' உரையாடல்களாக

"கடவுள் கதை"

"புரோகிதரும் திதியும்"

"வெள்ளிக்கிழமை விளக்கு வைத்த நேரம்"

"ஒன்றுக்கொன்று பொருத்தம்"

"சொர்க்கம்"

"அர்ச்சகர் - ஜோசியர் உரையாடல்"

"அப்போதே வாக்குக் கொடுத்திட்டேன்"

"சிவராம சாஸ்திரிக்கும் மருதையாப் பிள்ளைக்கும் உரையாடல்"

"புண்ணிய ஸ்தலங்கள்"

ஆகியவையும் - ஆக நாற்பத்தைந்து படைப்புகள் பெரியாருடையவை. ஆசிரியவுரைகளும் சேர்த்து மொத்தம் அய்ம்பத்தைந்து ஆகும்.

ஓராண்டுக்குள் 'உண்மை'யில் அச்சேறிய பெரியாரின் படைப்புகள் மட்டும் இத்தனையென்றால் அவர் தம் குறிக்கோளை நடைமுறைப் படுத்துவதில் எந்த அளவுக்கு நேரடி ஈடுபாடும் முனைப்பும் காட்டினார் என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. எண்ணிப் பார்த்தால் எத்துணை மலைப்பு உண்டாகிறது!

அய்யாவின் எழுத்துகள் அல்லாமல் பிற அறிவாளர்களின் படைப்புகளும் 'உண்மை'யில் இடம் பெற்றன.

இதழின் பொறுப்பேற்றிருந்த ஆசிரியர் புலவர் இமயவரம்பனின் "தமிழ் இலக்கியங்களில் வர்ணாஸ்ரமம்"; "பல்லவர் ஆட்சியும் பார்ப்பனர் ஏற்றமும்"; "நம் நாட்டாரின் வரலாறு"; "வரலாறு கூறும் வரிகள்"; "சங்க இலக்கியங்களில் புராணக் கதைகள்"; "பக்திப் போதையால் பகுத்தறிவு இழந்த பாண்டியன்"; "அழகிரியும் சிவக்கொழுந்தும்".

ஜான் பெஞ்சமினின் "நாஸ்திகம்"; சார்லஸ் ப்ராட்லாவின் "ஆஸ்திகமும் நாஸ்திகமும்"; "அவரின் சம்சயத்தைக் குறித்து

உரையாடல்" ராபர்ட் ஜி. இங்கர்சாலின் "நன்றி கூறும் நடப்பு"; ஜே. ரீவலின் "மதம் விஞ்ஞானத்திற்கு முட்டுக்கட்டை"; "மத போதனை ஒழியுமா?" எம்.ஜே. கோல்டின் ஜீன் மெஸ்லியரின் "நன்மைகளுக்குக் கடவுள் பொறுப்பானால், தீமைகளுக்கு யார் பொறுப்பு?"; ஜோசப் மெக்காபியின் "இவ்வுலகை யார் படைத்தார்?"; எம்.கே. காலினின் "மெய்யாகவே ஒரு கடவுள் உண்டா?"; "சாக்ரட்டீசின் பொன் மொழிகள்"; "புத்தரின் பொன் மொழிகள்"; "பகுத்தறிவு பற்றி நபிகள் நாயகம்"; "பெர்ட்ரண்ட் ரஸல் பேசுகிறார்" (வே. ஆனைமுத்துவின் தமிழாக்கம்); "பெரியாரின் பொன் மொழிகள்";

கைவல்யம் அவர்களின் "கடவுள்"; "பிராமணர் யார்?"; புரட்சிக் கவிஞரின் "தமிழர்கள் நசுக்கப்பட வேண்டும்!"; "பிள்ளை பெறுவது கூடக் கடவுளாலா?"; "அன்பே சிவம் என்பது ஆத்திகர் கரடி"; நாவலர் நெடுஞ்செழியனின் "இதோ, பெரியாரில் பெரியார்"; "அதோ, அவர்தாம்!"; பட்டுக்கோட்டை அழகிரியாரின் "ஆண்டவனும் பகுத்தறிவும்"; கி. வீரமணியின் "இங்கிலாந்தில் ஒரு 'பெரியார்'!" து.மா. பெரியசாமியின் "கீதை ஏன் தோன்றியது?"; வழக்கறிஞர் பி. சிதம்பரத்தின் 'தாலி எதற்கு?";

மா. சிங்காரவேலரின் "மனம் அல்லது மனசு"; "கடவுள் தங்கும் இடம் எது?"; மயிலை சீனி. வேங்கடசாமியாரின் "சாமிகள் இனி அவதாரம் செய்யுமா?"; லாலா லஜபதிராயின் "கடவுள் இல்லை"; பொ. திரிகூடசுந்தரம் பிள்ளையின் "விக்கிரக வணக்கமும் மனிதன் தலைவிதியும்"; டாக்டர் பராஞ்சிபையின் "சாவும் பின் நிகழ்ச்சியும்";

பேராசிரியர் எம்.கே. சுப்பிரமணியனின் "சுயமரியாதைத் தத்துவமும் வளர்ச்சிப் பொருளாதாரமும்"; "சுயமரியாதைத் தத்துவம்"; "மேதை அண்ணா"; பேராசிரியர் சாலை இளந்திரையனின் "முழுமையான சீர்திருத்தம்"; "புதிய வாழ்க்கைத் தத்துவம்"; "கற்பின் வரலாறு"; பேராசிரியர் பி. செங்குட்டுவனின் "மதம் விளைத்தமாச்சரியம்" (தொடர் கட்டுரை); பேராசிரியர் லட்சுமிநரசுவின் "இந்து மதம்";

புதுவை நாதனின் "வாழைப்பழம்"; உண்மை விளம்பியின் "மூடநம்பிக்கை - ஒரு குறும்புள்ள குரங்கு"; ஸ்க்ரூஉ லூஸின் "மூடம் - அடிமை எங்கிருந்தது?"; 'நவமணி' இதழில் வெளியான அறிவியலாளர் சுலோவின் "ஆணா? பெண்ணா? - இஷ்டம் போல் குழந்தை பெறலாம்"; அமெரிக்க நாஸ்திகப் பெருக்கப் பரப்புரையாகிய "நாங்கள் நாஸ்திகர்தாம், ஏனென்றால்___"

ஆசிரியர் பெயர்கள் தாங்காக் கட்டுரைகளான, "அற்புதங்களை நம்புவது அறியாமையே"; "மோசம் போனேனே

ஈஸ்வரா!''; ''இவை மறுக்கப்பட முடியுமா?''; ''தமிழ் மக்கள் கவனத்திற்கு''; 'வேடிக்கைப் பேச்சு''; "The Administrative Worker" என்னும் ஆங்கில மாதிகையில் வெளியான, "PERIYAR THE PHILOSPHER" ஆகிய கட்டுரைகளும் இன்னும் தகுதி நிரம்பிய பாக்களும் 'உண்மை'யில் இடம் பெற்றன. உறந்தை கே. பாலசுப்பிரமணியத்தின் ''உண்மையே வருக! வருக!!''; பொன். பஞ்சாபகேசனின் ''புகழ் மணக்கத் தோன்றிய நல் 'உண்மை' வாழி!'' பொறியாளர் கும. சுப்பிரமணியனின் 'அம்மையப்பன்!''; சாலை இளந்திரையனின் ''இளந்தமிழர் பெற்ற பேறு!'' பாவேந்தர் பாரதிதாசனின் ''நம் பெரியார் வாழ்கவே!''; செ.மு. கந்தசாமியின் ''மூட நம்பிக்கை'' ஆகியவை அழகான பாக்கள்.

இவையே யன்றி என்.வி. நடராசனின் ஓர் உரைப் பொழிவும், பெரியார் பிறந்த நாளை முன்னிட்டு அய்யா பற்றிய சான்றோர்களின் கருத்துரைகளும் 'உண்மை'யை அணி செய்தன.

அப்பப்பா, ஓராண்டுக்குள் எத்தனை படைப்புகளைப் பெரியார் மக்களுக்கு அள்ளித் தந்திருக்கிறார் என்று எவரும் வியப்புறுவது இயற்கை! அத்தனையும் அறிவுப் பண்டங்கள் என்னும் உண்மை குறிக்க வேண்டிய ஒன்று. மலிவான சுவையூட்டும் கவர்ச்சிச் செய்திகளோ ஈர்ப்புப் படங்களோ இதழில் இடம்பெறச் செய்யாமல், வெறும் பகுத்தறிவு - நாத்திகச் செய்திகள் மட்டுமே அடங்கிய இதழை ''இதோ, படியுங்கள்'' என்று மக்களிடம் வழங்கும் துணிச்சல் பெரியாரவர்களைத் தவிர வேறு யாருக்கு இருக்க முடியும்?

''இப்படிப்பட்ட ஒரு மாபெரும் காரியத்தைச் செய்ய 'உண்மை' துணிந்து தொண்டாற்ற வந்திருக்கிறது என்றால், இதை 'மரண தைரியம்' என்றுதான் சொல்ல வேண்டும்!'' என்பதாகப் பெரியாரே 'உண்மை'யின் இரண்டாம் ஆண்டின் தொடக்க இதழில் குறிப்பிட்டார்.

அதே இதழில் அந்த 'மரண தைரியம்' ஏற்பட்டதற்கான காரண விளக்கத்தையும் பெரியார் வெளிப்படுத்தினார். ''காரணம் உலகப் போக்கு, சுற்றுச் சார்பு, நம் மக்கள் இன்று கொண்டிருக்கும் உணர்ச்சியும் தாம்'' என்பது அவரின் விளக்கம். பெரியாரின் தன்னம்பிக்கையும் மக்களின்பால் வைத்த நம்பிக்கையும் பொய்த்துப் போய் விடவில்லை; அவை மெய்ப்பிக்கப்பட்டன!

ஆம், ஓராண்டுக்குள் பத்தாயிரம் பேர்கள் ஆண்டுக் கட்டணம் செலுத்தி 'உண்மை' - மாதிகையின் உறுப்பினராய் ஆகி விட்டனர் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள். ''இதற்கு இன்று வரை சுமார் பத்தாயிரம் சந்தாதாரர்கள் ஏற்பட்டிருக்கிறார்கள். ஜனவரி

மாத வாக்கில் சுமார் ஏழாயிரம் சந்தாக்களுக்கு ஓராண்டு முடிகிறது" - என்பது அவர் கையொப்பமிட்டு வெளியிட்ட அறிக்கை வரிகள்.

இதிலிருந்து 'உண்மை' தொடங்கிய மாதத்திலேயே ஏழாயிரம் பேர் ஆண்டு உறுப்பினராகி விட்டனர் என்பதையும், தொடர்ந்து மூவாயிரம் உறுப்பினர்கள் 'உண்மை'க் குடும்பத்தில் இணைந்தனர் என்பதையும் நாம் புரிந்து கொள்ளுகிறோம். இந்தச் சூழ்நிலையில்தான் உலகிற்கு உண்மைகளைக் காட்ட - அவர்களுக்கு ஆய்வு மனப்பான்மையைய ஊட்ட - உலாக் கிளம்பியது 'உண்மை'!

'உண்மை'யின் ஒவ்வோர் மாத அட்டையிலும் ஓர் அறிஞரின் உருவப் படம் இடம் பெற்றது. முதல் இதழின் அட்டையைப் புத்தரின் படிமப் படம் அணி செய்தது. தொடர்ந்து பெரியார், பெட்ரண்ட்ரஸல், சாக்ரட்டீஸ், இங்கல்சால், பேரறிஞர் அண்ணா, டாக்டர் அம்பேத்கார், கார்ல் மார்க்ஸ், மா. சிங்காரவேலர், கே.வி. அழகிரிசாமி, பாவேந்தர் பாரதிதாசன் ஆகியோரின் உருவப் படங்கள் இடம் பெற்றன. அட்டைப் படச் சிந்தனையாளரின் பொன்மொழிகள் இதழின் உள்ளே அச்சிடப்பட்டமை மிகப் பொருத்தமா யிருந்தது. இதழ்ப் பக்கங்களில் படங்கள் - ஒன்றிரண்டு தவிர - அச்சேறக் கிடையாது.

பெரியார் வாழ்ந்த காலம் முழுதும் - அதாவது 'உண்மை'யை நிறுவியபின் நான்கு ஆண்டுகள் - இந்தப் போக்கையே கடைப்பிடித்தார். இறுதி வரை ஒவ்வொரு மாத ஆரிரியவுரையும் பெரியாரின் கையொப்பத்துடன் வெளியானது. 'ஆசிரியர்' வீரமணி, புரட்சிக் கவிஞர், அண்ணா, கைவல்யம், வே. ஆனைமுத்து, கலியராஜூலு, பாலன், செல்வமகன், உடுமலைச் சித்தன், ஜெயங்கொண்டம் கலையரசன், வி.சி. வேலாயுதம், சிந்தனைமதி, பி. செங்குட்டுவன், சங்கமித்ரா ஆரல்வாய்மொழி, தமிழ் மறை முதலியவர்களின் பகுத்தறிவுப் படைப்புகள் பெரியார் காலத்திய 'உண்மை' இதழ்களை அணிசெய்தன.

அச்சேறிய சிறந்த படைப்புகளில் அரிய சிலவற்றின் சில பகுதிகளைப் பார்ப்போம்.

"நாங்கள் (சுயமரியாதை இயக்கத்தார் - திராவிடர் கழகத்தார் ஆகிய நாங்கள்) யார் தெரியுமா? மனித சமுதாயத்தில் இருக்கிற பகுத்தறிவற்ற (மடமைகளைக் கொண்ட) தன்மைகளை மாற்றி மக்களையெல்லாம் அறிவாளிகளாக்கி, பகுத்தறிவுடையவராக இருப்பதன் காரணமாக அடைய வேண்டிய முன்னேற்றங்களை -

வளர்ச்சிகளை யெல்லாம் மக்கள் அடையும்படிச் செய்யப் பாடுபடுபவர்கள்.

இதில் எங்களுக்குப் பல கஷ்டங்கள் இருக்கின்றன என்பதோடு, பல தொல்லைகளுக்கும் நாங்கள் ஆளாக வேண்டிவரும். உயிரை இழக்க நேர்ந்தாலும் நேரிடும். ஏனெனில் நாங்கள் ஒழிக்க வேண்டியவைகள் ஆயிரம் - இரண்டாயிரம் - மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன், மக்கள் சுத்த காட்டுமிராண்டிகளாக இருந்த காலத்தில், அக்கால நிலைக்கேற்ப இருந்து வந்த மக்களால் அக்கால நிலைக்கு ஆளாகி, காட்டுமிராண்டித் தன்மையில் இருந்து வந்த மக்களுக்குள் புகுத்தப்பட்டவைகளே. ஆகவே இத்தொண்டை உயிருக்கு - அவமானத்திற்குத் துணிந்து செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம்.

அக்கால ஆட்சியும் பகுத்தறிவு விளக்கக்காரரான சாக்ரடீசையும் 'திருத்தம்' செய்யத் தோன்றிய இயேசுவையும் கொலைத் தண்டனை விதித்துக் கொன்றிருக்கிறது. சமீப காலத்திலும் ஆழ்வார்கள் நாயன்மார்கள் என்பவர்களாலும் அறிவியல் கருத்துக்காரர்கள் கொல்லப்பட்டும், கீழ்த்தரமாக வைக்கப்பட்டும் வந்திருக்கிறார்கள்.

ஆகவே பொதுமக்களே! கடவுள் - மத - வேத நம்பிக்கைக் காரர்களே! இதிலிருந்து நாங்கள் யார் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்" ('உண்மை': 14-8-1970).

இருபதாம் நூற்றாண்டில் இவ்வாறு அறிவிப்புச் செய்து விட்டுக் களமிறங்கிய இதழாளர் பெரியார் ஒருவரே! இத்தொண்டறத்தில் தங்களை ஈடுபடுத்திக் கொண்ட 'துறவிகள்' தன்மான இயக்கத்தவர் மட்டுமே!

கிண்டி - பொறியியற் கல்லூரியின் தமிழ் மன்றத் தொடக்க விழாவில் பெரியார் வெளிப்படுத்திய கருத்துகள் தமிழர் அனைவராலும் சிந்திக்கத் தக்கவை.

> "என்ஜினீரியங் கல்லூரி என்கின்ற பொறியியற் கல்லூரியில் தமிழ் மன்றம் ஏன் துவக்குகிறீர்கள்' என்று எனக்குப் புரியவில்லை.
>
> இப்போது நாம் பெரிய வளர்ச்சி நிலையில் இருக்கிறோம். பேராசிரியரவர்கள் (வா.செ. குழந்தைசாமி) சொன்னார் இதுவரை மனிதன் உடல் உழைப்பால் செய்யும் காரியங்களைச் செய்யத்தான் இயந்திரங்கள் இருந்தன. இப்போது மனிதன்

மூளையால் செய்கின்ற காரியங்களைச் செய்யவும் இயந்திரங்கள் இருக்கின்றன' என்று.

இப்படிப்பட்ட அதிசய அற்புதங்கள் எல்லாம் மற்றவர்களால் கண்டுபிடிக்கப்பட்டு நாம் அனுபவிக்கின்றோமே ஒழிய நாம் கண்டு பிடித்ததெல்லாம் கடவுளாக்கி வணங்குவதுதான்!

இலக்கிய நயம் – கவிநயம் என்பவற்றிற்காக வேண்டுமானால் தமிழ் கற்கலாம். மற்றபடி புதுமையான கருத்துகளை அறிந்து கொள்வதற்குத் தமிழில் எதுவுமே கிடையாது. நாம் தமிழர், நம்நாடு தமிழ்நாடு என்பதற்காகத் தமிழைப் போற்றலாமே ஒழியத் தமிழில் பொது அறிவிற்கான எதுவும் கிடையாது.

தமிழ் மன்றம் என்றால் திருவிளையாடற் புராணம், கந்த புராணம், கம்ப ராமாயணம் என்கின்ற குப்பைகள் நிறைந்ததாகத்தான் இருக்கும். அதுபோல இம்மன்றம் இருக்கக் கூடாது. அவைபோன்ற புத்தகங்களை உள்ளே விடக்கூடாது. இத்தமிழ் மன்றத்தில் உள்ளவர்களும் தமிழ் அறிஞர்களும் இனியாவது தமிழில் இன்றைக்கு வேண்டிய மாதிரி அக்கம் பக்கத்திற்குக் கவர்ச்சியுள்ள மாதிரி ஆக்க முற்படவேண்டும். வளர்ச்சிக்கேற்ற முறையில் தமிழில் நூல் இல்லை. பெரிய அறிவாளிகள் எல்லாம் சேர்ந்து செய்ய வேண்டும். ஒழுங்கான சரித்திரமே நமக்கு இல்லை. 50 வருடங்களுக்கு முன்னர் எழுதப்பட்ட சரித்திரத்திற்கும் 5 வருடங்களுக்கு முன் எழுதப்பட்ட சரித்திரத்திற்கும் நிறைய மாறுதல்கள் இருக்கின்றன. அறிவியல் நூல்களையே இம்மன்றத்தில் உள்ளவர்கள் படிக்க வேண்டும். அறிவுக் காரியங்களுக்கு முன்னோர்களைப் பார்க்கக் கூடாது. பழமை, முன்னோர்கள் என்பதெல்லாம் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையாகும். தமிழ் மன்றத்தில் அறிவை முக்கியமாகக் கொண்டு பழமைகளை யெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டு, புதுமைக்கு – அறிவு வளர்ச்சிக்கு இடம் கொடுக்க வேண்டும்.

நாம் நம் வசதிக்கேற்ப – நிலைக்கேற்ப அறிவைப் பயன்படுத்த ஆரம்பித்தால் வெள்ளைக்காரன் நம் பின்னால் நிற்க வேண்டும். மற்ற நாட்டானை விட நமக்கு அறிவு அதிகம். அதைப் பயன்படுத்தாத காரணத்தாலேயே நாம் இன்றைக்கும் காட்டுமிராண்டிகளாக இருக்கின்றோம்.

இவ்வளவும் சொன்னதால் நான் மொழிக்கு எதிரி என்று கருதாதீர்கள். அதை எப்படிப் பயன்படுத்த வேண்டுமோ

அப்படிப் பயன்படுத்தினால் அதனால் என்ன நன்மை என்பதைச் சிந்திக்க வேண்டுகிறேன். நம் மொழிதான் நம் வளர்ச்சிக்குக் கேடாக இருக்கிறது. அதை மாற்றுவதற்குத் துணிய வேண்டும்". ('உண்மை': 14-8-1970).

முற்போக்கான இக்காலத்திரைக்கதைகள் பலவற்றுக்குக் கருவாக அமைந்த சாதியொழிப்புப் புரட்சிக் காட்சியொன்று: சித்திரப்புத்திரன் எனும் புனைபெயரில் பெரியாரால் வரையப்பட்டு 14-8-1970ஆம் நாளுக்குரிய 'உண்மை'யில் வெளியிடப்பட்டது. அதன் பிற்பகுதியை மட்டும் நாம் அறிந்தாலே போதும்.

**தாய்:** கேட்டீளா? சேஷுக்குட்டி சுக்கூருடன் ராத்திரி ஓடிட்டா!

**தகப்பன்:** அவனோடுதான் போனாள் என்று உனக்கு எப்படி டீ தெரியும்?

**தாய்:** நேத்து அவனோடு சிரிச்சிப் பேசிண்டிருந்தா. நான் கண்டிச்சேன். அவள் சின்னக் கொழந்தையா மண்ணுக் கொளிச்சிண்டு விளையாடினப்ப அவனைக் கட்டிக்கிறேன்னு வாக்குக் கொடுத்தாளாம். அதுக்காக அவனைக் கட்டிக்கோணுமாம். வச்சேன்! அப்பா வந்தா சொல்றேன்னேன். பயந்துண்டு ஓடிட்டா, முண்டை!

**தகப்பன்:** சனியன் தொலைஞ்சுது போ. அவன் மேலே அவளுக்கு ஆசை. என்னமோ சொல்லிண்டு ஓடிட்டா! இந்த நம்ம அயோக்கிய ஜாதியிலேயே அவளுக்குத் தகுந்த மாப்பிள்ளை வேணுமுன்னா 5000 ரூபாய் வரதட்சினை, கல்யாணச் செலவு 2000 ரூபாய் ஆக 7000 ரூபாயிக்கு எங்கே போறது? யாரை விக்கிறது? போகட்டும் போ. அவனும் S.S.L.C. பாஸ் பண்ணி இருக்கான். நல்ல அசல் சாயபு பிராமணனாட்டமா செக்க செவேருன்னு இருக்கான்! பிராமணன் M.A. படிக்கிறதும் சரி, சாயபு S.S.L.C. படிக்கறதும் சரி. சீக்கிரத்தில் எதோ வேலைக்கு வந்துடுவான்.

**தாய்:** அய்யோ அசட்டுப் பிராமணா! அப்படித்தான் இருந்தாலும் ஒரு முதலி - நாயக்கன் இல்லயா? சாயபோடவா ஓடறது!

**தகப்பன்:** என்னமோ பிடிச்சவனோட போயிட்டா. நம்ம ஜாதியில இல்லாவிட்டா வேற யாரோடு போனால்தான் என்ன? முதலிக்கும் சாயபுக்கும் என்னடி வித்தியாசம்? மொட்டை ஒன்னுதானே?

தாய்: சுக்கூரவா ஆத்திலே பெண்ணை மூடி போட்டல்லவா வெச்சுடுவா? இனி அவளைப் பார்க்க முடியுமா? அவாத்துக்குப் போனா நாலு பேரு என்ன சொல்லுவா?

தகப்பன்: நான் சம்மதிச்சா அப்புறம் யார் டீ கேக்கறவா? இனி அப்படித்தான்டி எல்லாம். ராஜகோபாலாச்சாரியார் சேட்டுக்குப் பெண் கொடுக்கலையா? நீலகண்ட சாஸ்திரி வெள்ளைக்காரனுக்குப் பெண் கொடுக்கலையா? சட்டோபாத்தியாயா நாயுடுவுக்குப் பெண் கொடுக்கலையா? நாம்தானா கெட்டுப் போயிட்டோம்? நமக்கென்னடி பயம்? 7000ரூபாய் மிச்சமாச்சுடி( சுக்கூர் அவப்பா சிபார்சிலே நம்ம மணிக்குக்கூட உத்தியோகம் வந்துடும். நீ ஒன்னும் சத்தம் போடாதே காங்கிரஸ்காரர் யாராவது கேட்டா இந்து - முஸ்லீம் ஒற்றுமைன்னு சொல்லடி. சுயமரியாதைக்காரர் கேட்டா சுயமரியாதையில் சேர்ந்துட்டோம்னு சொல்லடி

தாய்: பகவானே, காலம் இப்படியா கெட்டுப் போகணும்?

தகப்பன்: என்னடி கெட்டுப் போச்சு? நாள வருஷத்துக்குப் பாருடீ, சேஷூக்குட்டி தங்க விக்ரஹமாட்டா பிள்ளை பெத்துடப்போறா! எங்கேயோ அவா சவுக்யமாய் இருந்தால் சரி!

### சுவையான ஒப்பீடு!

14-3-1970, 14-5-1970 ஆகிய நாள்களுக்குரிய 'உண்மை' இதழ்களில் இடம் பெற்ற 'இங்கிலாந்தில் ஒரு பெரியார்' என்னும் கி. வீரமணியவர்களின் சுவையான ஒப்பீட்டுக் கட்டுரையில் கிட்டும் சில செய்திகள்:

"இருபதாம் நூற்றாண்டின் பகுத்தறிவு மேதை தந்தை பெரியார் அவர்களைப் போலவே இங்கிலாந்து நாட்டிலும் பகுத்தறிவுச் சுடர் பரப்பிய மாமேதை பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் ஆவார்கள். இருவரும் ஒருவரை யொருவர் நேரிற் சந்தித்தவர்கள் அல்லர் என்றாலும் அறிவுலகத்தின் வழிகாட்டிகள் என்ற வரிசையில் இவர்கள் தலையாய இடம் பெற்றுத் திகழ்ந்தவர்கள். தந்தை பெரியார் அவர்களது குடும்பம், பொது வாழ்க்கை ஈடுபாடு இவைகளை அறிந்தோர் அந்தப் பின்னணியை மனத்திற் கொண்டு பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் அவர்களது வாழ்வு, கொள்கைகள், அடைந்த கொடுமைகள் இவற்றை ஆராய்ந்தால் 'இங்கிலாந்தில் அதோ ஒரு பெரியார்! என்று கூறவே தோன்றும்.

1910இல் லிபரல் கட்சியின் கொரடாக்கள் இவரைக் குறிப்பிட்ட ஒரு தொகுதி வேட்பாளராக நிறுத்தலாம் என்று பரிந்துரைத்தனர். அவர் லிபரல் அசோசியேஷன் கூட்டமொன்றில் பேசியபோது, "நீங்கள் கடவுளைப் பற்றிக் கவலைப் படாதவரா?" என்று சிலர் கேட்டனர். ''ஆம்'' என்று இவர் பளிச்செனப் பதிலளித்தார். "எப்போதாவது சர்ச்சுக்குப் போவதுண்டா?" என்று மீண்டும் அவர்கள் கேட்க, "இல்லை, நிச்சயமாகப் போகமாட்டேன்" என்றார் இவர், "இத்தகைய விஷயங்களை ரகசியமாக வைத்துக் கொள்ள முடியாது'' என இவர் திட்டவட்டமாகக் கூறவே, இவருக்கும் தேர்தலுக்கும் பொருத்தமில்லை எனக் கருதி, வேறு நம்பிக்கைவாதியைத் தேர்ந்தெடுத்துவிட்டனர்! சமூகப் புரட்சியாளருக்கும் தேர்தலுக்கும் எளிதில் ஒத்து வராது!

பகுத்தறிவுக் களஞ்சியமாம் பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் 1929ஆம் ஆண்டில் வெளியிட்ட பெண்ணுரிமைச் சாசனமான 'திருமணமும் ஒழுக்கமும்' (Marriage and Morals) என்ற நூலின் பல கருத்துகள் ஏறத்தாழ அதே காலத்தில் 'குடிஅரசு', 'பகுத்தறிவு' - இதழ்களில் தந்தை பெரியார் அவர்களால் கட்டுரைகளாகத் தீட்டப்பட்டு, 'பெண் ஏன் அடிமையானாள்?' என்ற கவர்ச்சி மிக்க தலைப்புடன் வெளியாகிய நூலில் இருந்தன.

தமது கருத்துகள் பிறரால் எப்படிக் கருதப்படும் - விமரிசிக்கப்படும் என்பதைப் பற்றித் துளியும் கவலைப்படாமல் தாம் நினைத்ததைச் சொன்னவர். கிளர்ச்சிகளில் ஈடுபடுவதிலும்கூட அவரது அறப்போர் முறையும் அதற்கான துணிவும் அவரை இங்கிலாந்து நாட்டுப்பெரியாராகவே நம்மைக் கருதச் செய்கின்றன! தமது 90ஆம் வயதில் சாலையின் ஓரத்தில் உட்கார்ந்து மறியல் செய்து வியட்நாம் போர் பற்றித் தமது கருத்தினை உலகறியச் செய்ததுடன், தமக்குச் சிறைத்தண்டனை என்றதும் மகிழ்வுடன் அதனை ஏற்றார்.

ரஸ்ஸல் அவர்கள் சுமார் 40 நூல்கள் எழுதியுள்ளார். நூல்கள் அனைத்திலும் கருத்தாழம் இருப்பது மட்டுமல்ல; மிக்க தெளிவும் இருக்கும். தந்தை பெரியார் எந்தப் பொருளைப் பற்றி எழுத - பேச முனைந்தாலும், அது கேட்பவர்கள், படித்தவர்கள், பாமரர்கள் அத்தனை பேர் உள்ளத்திலும் நிலைத்து நிற்கும் அளவுக்குத் தெளிவாக இருக்குமோ அதே போல் இதிலும் அவர்கள் இருவருக்கும் உள்ள ஒற்றுமை மிக அதிகம்.

இருபதாம் நூற்றாண்டில் மேற்குக்கு ஒரு ரஸ்ஸல் என்றால் கிழக்குக்கு ஒரு பெரியார்!

*சீரழிப்புச் செய்திகள்*

'உண்மை'யின் பொறுப்பாசிரியராகத் தொண்டு செய்த புலவர் கோ. இமயவரம்பனின் தமிழ் இலக்கியங்களில் வர்ணாஸ்ரமம்' எனும் கட்டுரை வியப்பும் வெட்கமும் தரும் செய்திகளைக் கொண்டது.

> *"இன்றைக்கு நமக்குக் கிடைத்துள்ள காலத்தான் முற்பட்ட தொல்காப்பியத்தில் கூடப் பார்ப்பனர்தம் வர்ணாசிரமக் கருத்துக்கள் காணப்படுகின்றன.*
>
> *ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் காலமாகிய கடைச்சங்க காலத்திலும் இந்த வர்ணாசிரமக் கொள்கை தமிழகத்தில் நன்கு வேரூன்றி இருந்திருக்கின்றது! அவன் பாடிய புறநானூற்றுப் பாடலில் "வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும் கீழ்ப்பாலொருவன் கற்பின் மேற்பாலொருவன் அவன்கட்படுமே" எனக் குறிப்பிட்டுள்ளான்.*
>
> *சங்க காலத்தின் இறுதியில் இயற்றப்பட்ட சிலப்பதிகாரத்தை நோக்குவோம். அழற்படு காதையில் மதுரை மாநகரில் அந்தணர் சாதிப்பூதம், அரசர் சாதிப்பூதம், வணிகர் சாதிப்பூதம் வேளாண் சாதிப்பூதம் என்பதாக நான்கு சாதிப் பூதங்கள் இருந்தனவாக இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார்.*
>
> *வச்சணந்தி மாலை (வெண்பாப் பாட்டியல்) கூறும் வர்ணாசிரமம்: உயிரெழுத்துக்கள் பன்னிரண்டும் வல்லெழுத்துக்கள் ஆறும் பார்ப்பன வருணம் என்றும், த,ந,ய,ர,ப,ம - இவ்வாறு மெய்யும் அரச வருணமென்றும், ல,வ,ற,ன இந்நான்கும் வணிக வருணம் என்றும் தமிழ்க்கே சிறப்பெழுத்துக்கள் எனப் பெருமையாகக் கூறப்படும் ழ,ள இவ்விரண்டும் சூத்திர வருணம் என்றும் கூறப்பட்டுள்ளது.*
>
> *மேலும், வெண்பா பிராமண குலமென்றும், ஆசிரியப்பா சத்திரிய குலமென்றும், கலிப்பா வைசிய குலமென்றும், வஞ்சிப்பா சூத்திர குலமென்றும் குலப் பொருத்தங்கள் கூறுகின்றது.*
>
> *ஒருவன் கலம்பகம் எனும் நூல் செய்ய விரும்பினால், தேவர்க்கு நூறு பாட்டும், அந்தணர்க்குத் தொண்ணூற்றைந்து பாட்டும், அரசர்களுக்குத் தொண்ணூறு பாட்டும், அமைச்சருக்கு எழுபது பாட்டும், வணிகர்க்கு அய்ம்பதும் சூத்திரர்க்கு முப்பதுமாகப்*

பாட வேண்டுமாம். என்னே வர்ணாசிரமத்தின் கொடுமை(" ('உண்மை': 14-2-1970).

தமிழ் இலக்கிய வரலாறு படிப்படியாக ஆரியத் தாக்கத்திற்கு அடிமைப்பட்டு எப்படித் தமிழ்ப் பேரினத்தையே தலைக்குனிவுக்கு இலக்காக்கியது என்பதை இச்சீரழிப்புச் செய்திகள் நமக்குப் புரிய வைக்கின்றன.

## அழகிரியார்

பட்டுக்கோட்டை அழகிரியாரின் புகழ்வாய்ந்த 'இதோ பெரியாரில் பெரியார்!' எனும் பொழிவு 14-11-1970 ஆம் நாளிட்ட 'உண்மை'யில் இடம் பெற்றிருந்தது. அப்பொழிவின் பிழிவினைக் கேளுங்கள்.

> "நம் நாட்டிலும் ஏனைய நாடுகளிலும் எத்தனையோ பணக்காரர்கள் உண்டு. ஆனால் எந்தப் பணக்காரனும் –அவன் எந்நாட்டவனாயினும் சரியே, தன் சுயநலத்திற்காக, சுயபெருமைக்காகப் பொது வாழ்வில் ஈடுபடுவானே அல்லாது, தன்னலமற்று எவனும் பொதுவாழ்வில் ஈடுபட மாட்டான். இவர்களுக்கெல்லாம் மாறுபட்டவர் பெரியார்! இத்தள்ளாத வயதிலுங்கூடத் தமது நேரம் முழுவதையும் பொதுநல ஊழியத்திலேயே செலவழித்து வருகிறார். ஆகவேதான் பெரியாரில் ஒரு பெரியார் என்று இவரை அழைக்க வேண்டியிருக்கிறது.
>
> இத்தகைய பெரியார் இருந்ததாக உலகச் சரித்திரத்தில் கூறக் காணோம். நாமும் இவரைத் தவிர வேறோர் பெரியாரைக் கண்டோம் இல்லை. இனியும் காணப்போவதில்லை! அன்னாரின் சிறப்பை நாம் உணர்ந்திருக்கிறோமா? உணரும் நிலையிலாவது இருக்கிறோமா? இல்லை, இல்லை என்று தான் கூறத் துணிகிறது என் மனம்.
>
> தம் உழைப்பின் பலனை இவர் காண்பது எப்போது என்று நீங்கள் துடிக்க வேண்டாமா? உங்கள் சக்திகளை யெல்லாம் இப்பெரியாருக்கு நீங்கள் அடிமைப்படுத்த வேண்டாமா?"

## புதிய உத்தி

தமிழர்கள் நசுக்கப்பட வேண்டும்! எனும் புரட்சிக் கவிஞரின் கட்டுரை புதியதோர் உத்தியுடன் வேறுபட்ட முறையில் படைக்கப்பட்டது!

> "தமிழருக்குப் புரட்சி மனப்பான்மை அவர்கள்தம் பகைவர்களால் நசுக்கப்படுவதிலிருந்து உண்டாகும். ஆகையால்

தமிழர் தம் பகைவரால் அடையும் எவ்விதத் தொல்லைகளையும் நான் வரவேற்கின்றேன்.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகவே தமிழர் சீரழிந்து வருகிறார்கள். தம் சீரழிவுக்குக் காரணம் இன்னதுதான் என்பதை அவர்கள் அறிந்து வந்தும் அவர்களின் மிதமிஞ்சிய ஆஸ்திகப் புத்தியானது அந்தச் சீரழிவும் நல்லதே என்று திருப்தியடைய வைத்து. பகிரங்க ஏதேச்சதிகாரம், தூக்குமரம், சித்ரவதைகள் இவைகளைக் கண்டபின்னும் அரச வணக்கம், 'வறுமையிற் செம்மை' விதி, அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்ற ஜபம்! நெஞ்சு பஞ்சு படும் பாடு! நரம்புகள் துடைப்பக்குச்சு!

இப்போது தமிழர் அவ்வளவு மோசமில்லை. காதைப் பிடித்துத் தூக்கினால் தமிழன்தன் சகிப்புத் தன்மையை விட்டுக் 'கீ' என்று கத்துகிறான்! தமிழரை வஞ்சித்து வஞ்சித்து அவர்களின் ஒற்றுமையைக் கலைத்துக் கலைத்து நலி செய்து நலி செய்து பழகிய அந்த எதிரிகள் இன்று தமிழரின் மண்டையைய நோக்கி ஓச்சிய சோட்டடிதான் ஹிந்திக் கட்டாயப் படிப்பு அநேகமாக இன்று தமிழரால் ஓர் புரட்சி ஏற்படலாம்! நலிந்த ஜாதி சாகா எழுச்சியுறும். இது இயற்கைச் சட்டம்! எனது இன்பக் கனவு! ('உண்மை': 14-7-1970).

## அறிவியற் கட்டுரை

சிந்தனைச் சிற்பி சிங்காரவேலரின் "மனம் அல்லது மனசு" எனும் அறிவியற் கட்டுரையொன்று 14-7-1970ஆம் நாளிட்ட 'உண்மை'யில் வெளியாயிற்று. அதன் சில பகுதிகள்:

"மனம், எண்ணம், சித்தம், சைதன்யம், நியாபகம், இயற்கை எண்ணம், பரம்பரை எண்ணம் முதலியன கற்பனா வார்த்தைகள் என்றே 'நடத்தை ஆராய்ச்சியால் விளங்குகிறது. நடத்தையைத் தான் நாம் பார்க்கிறோம். இயற்கையறிவு (Instinct) என்று சொல்வதும், பயம், கோபம், அன்பு என்ற அழைப்பதும் (Emotion), எண்ணம் (Thought) என்பதும் எல்லாம் நடத்தையே. நமது அவயங்களின் நடத்தைகளே இந்த நடத்தைகளுக்குக் காரணமாகும். உள் அல்லது வெளித் தூண்டுதலால் (Stimulus) அசைவு உண்டாகின்றன. இந்த அசைவுகள்தாம் (Response) நடத்தைகளாகத் தோன்றுகின்றன. இந்நடத்தை ஆராச்சியால் இதுகாறும் தெரியாதிருந்த தூண்டுகோல்களால் இனி உலகம் சீக்கிரத்தில் சீர்பெறும் என்பதற்கு அய்யமில்லை.

சித்திரத்திற்குக் கைப்பழக்கமும் கோபம், அன்பு, ஈகை ஆகியவற்றிற்கு நமது குடலும் காரணங்கள் என்று தெரிகிறது. கை கால்களால் நடக்கவும் ஓடவும் ஆடவும் அடிக்கவுமான நடத்தைகள் உண்டாகின்றன. நாக்கு, தொண்டை, பேசும் சதை, மூச்சுப்பை ஆகிய பேச்சுறுப்புகளின் வினையாடல்களை எண்ண மென்று வழங்குகின்றோம். நமது பேச்சின் பரிணாமங்களே நாம் உரத்துக் கூவும் போது பேசுவதாகவும், நமக்கு நாமே பேசுகையில் எண்ணுவதாகவும் சொல்கின்றோம். கோப-தாபங்கள், அன்பு, ஈகை முதலிய நடத்தைகள் நம் குடல்களின் அசைவுகளே 'குடல் நடுங்கிற்று' என்னும் வழக்காறே அச்சத்திற்குக் குடலே காரணமென விளக்குகின்றது.

இந்த ஆராய்ச்சியின் முடிவு என்னவெனில் மனத்தைக் கற்பித்தல் என்றும், பயபக்தியால் - கடவுளருளால் நன்மை யுண்டாகும் என்றும் சொல்லி வந்ததெல்லாம் வீண் சொற்களே!"

## நபிகள் நாயகத்தின் கருத்து

அறிவு பற்றிய நபிகள் நாயகத்தின் கருத்துகளின் தொகுப்பு அதே இதழில் இடம் பெற்றுள்ளது. "அறிவானது சீனாவிலிருந்த போதிலும் இவ்வுலகின் எந்த மூலையில் இருந்த போதிலும் அதைத் தேடிச் செல்லுங்கள், தொட்டிலிலிருந்து கட்டைக்குச் செல்லும் மட்டும் அறிவை நாடிச் செல்லுங்கள். ஆணேயாயினும் பெண்ணேயாயினும் அறிவை அடைய வேண்டியது ஒவ்வொரு முஸ்லீமின் கடமை, அறிவைத் தேடிக் கொள்க. நன்மை - தீமை இன்னதென உணர்ந்து கொள்ளும்படி, அவ்வறிவு செய்கின்றது.

அதிகமான தொகையைக் காட்டிலும் அதிகமான அறிவே மேலானது. இராத்திரி முழுவதும் தொழுவதைக் காட்டிலும் அவ்விரவில் ஒரு மணிநேரம் அறிவுக்காக ஓதுக்குதல் அதிக நன்மை பயக்கும். ஒரு மனிதன் அய்ந்து வேளை தொழுதுகொண்டும், ஆண்டுக்கு முப்பது நோன்பையும் நோற்றிக் கொண்டும் எல்லா வகைத் தானதர்மங்களைச் செய்து கொண்டும் மக்காவுக்குச் சென்று ஹஜ் செய்தும், ஏனைய எல்லா நற்செய்கைகளையும் செய்பவனாக இருக்கலாம். ஆனால் அவன் தன் செயல்களில் எத்துணை பகுத்தறிவைச் செலுத்துகிறானோ, அதற்குத் தக்கவாறுதான் சன்மானம் பெறுகிறான்! ('உண்மை': 14-7-1970).

"எத்துணை அறிவூட்டும் கருத்துகள் இவை!

## நாவலர் நெடுஞ்செழியனின் கற்பனைக் காட்சி!

"அதோ அது யார் தாத்தா? - தத்தி நடக்கும் பள்ளிச் சிறுவன் தள்ளாடி நடக்கும் தன் தாத்தாவைக் கேட்பான்.

"யாரையடா கேட்கிறாய்?"

"அதோ அந்தச் சிலையைத்தான் தாத்தா கேட்கிறேன்" என்று சிறுவன் பூங்காவின் நடுவே பொலிந்து காணப்படும் சிலையொன்றைச் சுட்டிக் காட்டுவான்.

முதியவர் மெதுவாக நடந்து சென்ற சிலையின் பீடத்திலே தன் கையை ஊன்றி, அண்ணாந்து பார்ப்பார்; உற்று நோக்குவார்; சிலையின் தோற்றம் அவர் சிந்தனையைக் கிளறிவிடும்!

பரந்த நெற்றி, விரிந்த முகம், எடுப்பான மூக்கு, எழிலொழுகும் பிடரி, மயிரடர்ந்த புருவம், செறிந்து வளர்ந்த தாடி, உடலிலே சட்டை, மேலே சால்வை, இடுப்பிலே வேட்டி, காலிலே செருப்பு, மூக்கிலே கண்ணாடி, கையிலே தடி, களிற்றின் பெருமிதம், காளையின் முறுக்கு, சிங்கத்தின் நோக்கு!

- இவை சிலையின் கூறுபாடுகளாகத் தெரியும்.

"இவர் யாரென்று உனக்குத் தெரியவில்லையாடா?"

"தெரியவில்லையே தாத்தா!"

"உங்கள் பாடப்புத்தகத்திலே இவரைப் பற்றிய வரலாறு குறிக்கப்பட்டிருக்குமே . . . . !"

"இல்லையே தாத்தா!"

"இல்லையா?"

"ஆமாம் . . . !"

"உங்களுக்கு உலகைத் திருத்திய உத்தமர்கள்' என்ற புத்தகம் பாடமாக வைக்கப்படவில்லையா?"

"வைத்திருக்கிறார்கள்!"

"அதில் யார் யாரைப் பற்றியெல்லாம் இதுவரையில் சொல்லிக் கொடுக்கப்பட்டிருக்கிறது?"

"முதலில் சாக்ரடீஸைப் பற்றிச் சொல்லிக் கொடுத்தார்கள். அவர் ஒரு பெரிய அறிஞர் என்றும் உலகைத் திருத்திய உத்தமர்களிலே

அவர் முதன்மையானவர் என்றும் தெரிந்து கொண்டோம். இப்பொழுது ஏகவைப் பற்றித் தெரிந்து கொண்டு வருகிறோம்"

"ஆமாம், ஆமாம்! அதே புத்தகத்தில்தான் கடைசி அத்தியாயத்தைப் புரட்டினால் பெரியார் இராமசாமி என்று வரும்! அவரைப் பற்றி அந்த அத்தியாத்தைப் படிக்கும் போது நன்றாக அறிந்து கொள்வாய். அவர்தாம் இவர்!"

"நீங்கள் அவரை அறிவீர்களா, தாத்தா?"

"நான் இளைஞனாக இருந்த போது அவரைப் பார்த்திருக்கிறேன்; நன்கு பழகியிருக்கிறேன். அவர் துவக்கிய பகுத்தறிவு இயக்கத்திலே பங்கு கொண்டிருந்தேன் . . ."

இப்படியாக வருங்காலத்தில் ஏதும் அறியாத சிறுவனுக்கு முதியவர் உலகைத் திருத்திய உத்தமர்களின் வரிசையிலே ஒருவராக வைத்து எண்ணிக்காட்டிப் பேசத் தகுந்த ஈடும் எடுப்புமற்ற திருவிடத்தின் தலைவரே இன்று நம் முன் நடமாடும் பெரியார் ஈ.வெ. இராமசாமி ஆவார்கள். ('உண்மை': 14-10-1970)

## தாலி எதற்கு?

"தாலி எதற்கு? அது என்ன?" எனும் நாகர்கோவில் பி. சிதம்பரனாரின் கட்டுரை அருஞ் செய்தியைக் கொண்டதாகும்.

"நம் பெண் மக்கள் அணியும் தாலியானது எதைக்குறிக்கிறது? சற்று ஆலோசனைக்கு இடந்தருவது இது. மேனாட்டு ஆராய்ச்சிக்காரர் ஒருவர் கூறியிருக்கும் உண்மை: 'இந்தியாவில் அநேக இடங்களில் கலியாணக் காலங்களில் பெண்ணின் கழுத்தில் ஆண்குறியின் சின்னத்தைத் தாலி எனக் கட்டிவிடுகிறார்கள்! ஜோசப் மெக்காபி என்பவர் கூறுகின்ற இது உண்மையா என்பதை நாமே நேரில் கண்டு அறிந்து கொள்ளலாம்.

இதென்ன சங்கடமாக விருக்கிறதே யென்றால், தகுந்த காரணங்களை மேனாட்டு அறிஞர்கள் எடுத்துக் கூறுகின்றனர். இவ்விதம் செய்வதற்கு ஓர் அடிப்படையான காரணமுண்டு. அதாவது புத்திரப்பேறாம்.

எந்த நாட்டிலும் எவ்வகுப்பாரிடத்தும் மக்கட் பேற்றினைப் பற்றி இதுவரை குறுகிய நோக்கங் கொண்டதில்லை எனலாம். அதாவது குழந்தைகள் ஒவ்வொரு குடும்பத்திலும் பெருக வேண்டுமென்ற ஆசையே பூலோகம் முழுவதும் பரவியிருந்தது.

தாலி கட்டுதல் மக்கட் பேற்றினைப் பற்றிய வழக்கமாயிருந்தால் நம் கடவுளர்களின் பத்தினிமார்களுக்கும் இந்த ஆபாசச் சின்னத்தைக் கழுத்தில் கட்டுவானேன் என்றுதான் கேட்கிறோம்.

இந்தியாவில் எந்தத் திருமணத்திலும் மணமக்களுக்குக் குழந்தைகள் பெருக வேண்டுமென்று வேண்டிக் கொள்ளப் படுகிறது. இதை மறுப்பதற்கிடமில்லை. எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பதற்காக அவ்வுற்பத்திச் சின்னத்தைப் பெண் கழுத்தில் அணியும்படி ஆடவர்கள் செய்து விட்டார்கள். புருஷன் உயிருடன் இருக்குமட்டும் இந்த மங்கல நாணை எடுத்து விடக் கூடாது. புருஷன் இறந்தால் அதை அறுத்துவிட வேண்டும். இதனாலேதான் விதவைகள் 'அறுதலி' என்பதாக இழித்துக் கூறப்பட்டு வருகிறது.

தாலியைச் சமைக்கும் தட்டாரும் 'தாலியானது எதைக் குறிக்கிறது?' என்று கேட்டால் 'தெரியாது' என்றே சொல்லு கிறார்கள். நாகரிகம் மிகுந்த இக்காலத்தில்தான் கர்ப்பத்தடை வேண்டுமென்றும் மக்கட் பெருக்கத்தை நிறுத்துவதற்கான வழிகளைத் தேடவேண்டுமென்றும் ஆரம்பித்திருக்கிறார்கள். இந்த ஆபாசச் சின்னத்தை அணியாமலிருப்பது நல்லது" *('உண்மை': 14-10-1970).*

## முட்டுக்கட்டை

கர்மம் - தலைவிதிக் கொள்கையைச் சாடி புகழ் தோய்ந்த வழக்கறிஞர் திரிகூடசுந்தரம் (பிள்ளை) அவர்கள் எழுதிய கட்டுரை குறிக்கத் தக்கது.

"கர்மத்தைப் பற்றியும் விக்கிரக ஆராதனையைப் பற்றியும் என்னதான் தத்துவார்த்தம் சொல்லுவதாய் இருந்தாலும், இரண்டும் தேசத்தின் முன்னேற்றத்திற்கு முக்கியமான முட்டுக்கட்டையாய் இருந்து வந்திருக்கின்றன. மனிதன் என்னதான் முயற்சி செய்தாலும் நடப்பது நடந்தே தீரும் என்கிற எண்ணத்தை உண்டாக்கி மனிதனை அசைய விடாமல் செய்து விடுகின்றது.

"விக்கிரக ஆராதனை மனிதன் அக்கிரமங்களை செய்வதற்கு முதற்காரணமாய் இருக்கின்றது. தங்களுக்கு என்ன கஷ்டம் நேர்ந்தாலும் மக்கள் தங்களின் முன் ஜன்மத்தின் கர்மம் என்று நினைத்து அதிலிருந்து தப்புவதற்கு விக்கிரகங்களை வணங்குகிறார்கள். வியாதி வந்தாலுங்கூட இனிமேலாவது சுகாதார முறையைக் கைக் கொள்ளலாம் என்பதில் சிறிதும்

கவலை எடுத்துக் கொள்ளாமலும் போன ஜன்மத்தில் தாங்கள் செய்த கர்மத்தின் பலன் என்றே நினைத்து விடுகிறார்கள்!

என்னுடைய அபிப்பிராயம் என்ன வென்றால் சமுக இயல் அரசியல் பொருளாதார இயல் ஆகியவைகளில் ஏதாவது முன்னேற்றம் அடைய வேண்டுமானால் விக்கிரகங்களை வணங்குவது என்கின்ற கொள்கையையும் தலைவிதி – கர்மபலன் – முன்ஜன்மத்தின் வரம் – ஊழ்வினை நம்பிக்கையும் அடியோடு ஒழித்தாக வேண்டும் என்பதேயாகும். ('உண்மை': 14–5–1970).

## மயிலை சீனி வேங்கடசாமி

மயிலை சீனி வேங்கடசாமியவர்கள் வடித்த "சாமிகள் இனி அவதாரம் செய்யுமா?" எனும் புரட்சிப் பண்பு பொங்கும் தன்மானச் சிந்தனைக் கட்டுரையின் சில பகுதிகள்:

"சாமிகள் இனி அவதாரம் செய்யுமா? அல்லது சாமிகள் அவதாரம் செய்ததாகச் சொல்வதை மக்கள் இனியும் நம்புவார்களா?

பார்ப்பனருக்குச் செல்வாக்கையும் உயர்வையும் உண்டாக்கிப் பார்ப்பனரல்லா மக்களுக்கு இழிவையும் தாழ்வையும் அடிமைத்தனத்தையும் உண்டாகும்படிச் செய்தவர்களை யெல்லாம் அவதாரங்களாக்கி விட்டார்கள்.

புத்தரைக் கூடப் பார்ப்பனர் விஷ்ணுவின் அவதாரம் என்று எழுதி வைத்துக் கொண்டார்கள். ஆனால் புத்தர் பார்ப்பனரின் ஆதிக்கத்துக்காகவோ அல்லது அவர்களின் வயிற்றுப் பிழைப்புக்காகவோ பாடுபடவில்லை!

இந்தியாவை முகமதியர் ஆண்டு கொண்டிருந்த காலத்தில் பார்ப்பனர் அல்லா உபநிஷத் என்றொரு நூல் எழுதி இஸ்லாம் மதத்தையும் இந்து மதத்திற்குள் சேர்க்கப் பார்த்தார்கள் ஆனால் முகமதியர்கள் ஏமாறவில்லை!

எல்லாச் சாமிகளும் இந்தியாவில்தான் அவதாரம் செய்கின்றனவே தவிர மற்ற நாடுகளில் அவதாரம் செய்வதில்லை. காரணம் இந்தியா புண்ணிய தேசம் என்று பக்தர்கள் சொல்லுகிறார்கள். சுயமரியாதை இயக்கம் அவதாரப் புரட்டை நம்புவதற்கு இந்தியாவில் மக்கள் இருக்கிறபடியால் சாமிகள் அளவில்லாமல் அவதாரம் செய்து கொண்டிருக்கின்றன என்கிறது. இந்தியாவிலும் இப்பொழுது பகுத்தறிவுச் சூரியன்

*உதயமாகி இருப்பதால் மக்கள் கொஞ்சங் கொஞ்சமாக விழித்துக் கொள்ளத் தலைப்படுகின்றனர். ஆகவே சாமிகள் இனி அவதாரம் செய்யுமா? சாமிகளுக்கே ஆபத்து வந்துவிட்ட போது அவதாரத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டியதில்லை!" ('உண்மை': 14-12-1970).*

நாத்திகப் பேரறிவாளர் இங்கர்சால் அவர்களின் 'நன்றி கூறும் நடப்பு' என்னும் உரைப் பொழிவு 'உண்மை'யில் 1970 ஜூன் திங்களிலிருந்து உரைத் தொடராக வெளியிடப்பட்டது. அதன் சத்தான பகுதிகள் சில;

*"உலகம் உருண்டை என்பதை உணர்த்தியவர் ஒரு போப்பாண்டவரோ, அல்லது ஒரு குருவோ ஒரு பக்தரோ அல்லது கடவுள் எனப்பட்டவரோ அன்று.*

*மாஜலன் என்பார் செவில்லே என்னும் ஸ்பெயின் நாட்டுத் துறைமுகத்தினின்றும் 1519 ஆகஸ்ட் 10 ஆம் தேதியன்று கப்பலில் புறப்பட்டு, மேற்குப் பக்கமாகவே கப்பலைச் செலுத்திச் செலுத்திக் கடைசியாகக் கிளம்பிய இடமான செவில்லே என்ற துறைமுகத்துக்கே 7-9-1522 அன்று வந்து சேர்ந்தார். உலகை வலம் வந்து உலகம் உருண்டை என்பதை உணர்த்தினார்.*

*1543 இல் கோபர்நிகஸ் எனும் அறிஞர் 'மேலுலகப் பொருட்களின் புரட்சி' என்ற நூலை வெளியிட்டார். விண்மீன்களின் பெரும் தோற்றங்கள் பற்றியும் உருத்தெரியாத இவ்வுலகம்பற்றியும் அவர் அறிந்திருந்தார்.*

*பதினாறாம் நூற்றாண்டின் இறுதியில் உலகம் படைத்த வற்றிலேயே ஒரு சிறந்த அறிஞரான ப்ரூனோ என்பார் உலகங்களின் உண்மையான இயற்கைப் பான்மைகளை மக்களுக்கு விளக்கினார். உலகாயதம் எனப்படும் 'பொருள்முதன்மை'க் கொள்கைக்கு அடிப்படையிட்டவராகக் கருதலாம் இவரை. நாத்திகராகிய புரூனோ உண்மைகளை நேர்மைப் பண்புடன் வெளியிட்டார். கத்தோலிக்க ஆலயத்தை 'மிருகங்களின் ஆட்சி சாலை' என்றார்.*

*மதத் தலைவர்கள் புரூனோவைப் பல ஆண்டுகள் சிறை வைத்திருந்து அவரைத் தன் கொள்கையை மாற்றிக் கொள்ளச்செய்ய முயன்றார்கள். இறுதியாகக் குற்றவாளியாக அவரைக் கறைப்படுத்தி, 'புனித ஆவி நிரம்பப் பெற்றோர்'களைக் கொண்டு உயிரோடு தீயிட்டுக் கொளுத்தினர் 16-2-1600 அன்று.*

1608இல் லிப்பர் செயிம் என்னும் உலாந்து நாட்டவர் பொருள்கள் தெள்ளெனத் தெரியும்படியான கண்ணாடிகளை அமைத்துக் கொடுத்தார். ஆம், 'தொலைநோக்கி'யைக் கண்டுபிடித்தார். அவர் நம் கண்முன் எண்ணற்ற, உலகங்களைக் கொடுத்து நம்மைப் பிரபஞ்ச வாழ்வாளராக ஆக்கினார்!

1610ஆம் ஆண்டு ஜனவரி 7ஆம் தேதி இரவு கலிலேயோ கோபர்நிகசின் உண்மைத் தத்துவத்தை நிலைநாட்டி, 1632இல் தம் வேலைப்பாடான 'உலகத்தின் அமைப்பு' என்ற புத்தகத்தை வெளிப்படுத்தினார். ஆலயங்கள் கலிலேயாவைச் சிறைசெய்து முழங்காலிலேயே இருக்குமாறு செய்து, விவிலிய நூலின் மீது கை வைத்து தம் கருத்தைத் திரும்பப் பெற்றக் கொள்வதாக ஆணையிடச் செய்தது.

1609ஆம் ஆண்டில் கெப்லர் என்பார் 'கிரகக் கூட்டங்களின் அசைவு' எனும் தம் நூலை வெளியிட்டார். கணித முறையில் இடைவெளி, கிரகம், அசைவு இவற்றின் தொடர்பு அறிந்து விளக்கினார். இவ்வளவு சிறந்த அறிவை மனிதமூளை இதுகாறும் பெற்றதில்லை! கெப்லரின் அன்னை அவரின் நூலின் விளைவாகப் பட்ட கொடுமைகள் எத்தனை! பின் நியூட்டன், எர்ஸ்கேல், இலப்லஸ் முதலியோர் தோன்றினர். எலிஜா, ஜாசுவா முதலியோரின் வான சோதிடம் அறிஞர் மூளைகளில் மங்கியது! ('உண்மை': 14-7-1970).

ஆண் பிள்ளையையோ பெண் குழந்தையையோ விரும்பிய வண்ணம் பெற்றுக் கொள்ளும் வாய்ப்பு பற்றி 'நவமணி' இதழில் வெளிவந்த ஓர் அறிவியல் கட்டுரையினை 'உண்மை'யின் 14-9-1970ஆம் பதிப்பில் அச்சிட்டார் பெரியார்.

"குழந்தை ஆணாகவோ பெண்ணாகவோ பிறப்பது பெற்றோரில் அதிக சக்தி படைத்தவர் யாரோ அவரைப் பொருத்ததாக ஒரு சமயம் கருதப்பட்டது. 1891இல் பால் வேறுபாட்டிற்குக் காரணமாக 'குரோமோஸோம்' கண்டுபிடிக்கப் பட்டதன் அடிப்படையில் 1930ஆம் ஆண்டுத் தொடக்கத்தில், "எக்ஸ் குரோமோஸோமும் எக்ஸ் முட்டையும் சேர்ந்தால் பெண் கரு தோன்றுகிறதென்றும், ஒய் க்ரோமோஸோமும் எக்ஸ் முட்டையும் சேர்ந்தால் ஆண் கரு உருவாகின்றதென்றும் நிகோலாய் கோல்த்சோவ் எனும் சோவியத் உயிரியல் பேராசிரியர் கருத்து வெளியிட்டார். அதன் அடிப்படையைக் கொண்டு சுலோவ் என்னும் ருஷ்ய அறிவியலாளர் நாம் நினைக்கும்வண்ணம் வீட்டு விலங்குகள் குட்டிகள் போடச்

செய்யும் ஆய்வில் ஈடுபட்டு வெற்றி பெற்றார். அப்போது அவர் கஸக் அறிவியல் ஆராய்ச்சிக் கழகத்தில் இருந்தார்.

'உயிரியல் பிரச்சனைகள் பலவற்றை அறிவியல் தீர்க்கிறது, பிறக்கப் போகும் குழந்தை ஆணாக இருக்க வேண்டுமா பெண்ணாக இருக்க வேண்டுமா என்பதை நிர்ணயித்து அதன்படி பிறக்கச் செய்வது சாத்தியம் என்றே தோன்றுகிறது' என்பது சுலோவ் அவர்களின் கூற்று!

## அய்ந்து கட்டங்கள்

**'சுயமரியாதை இயக்கத்தின் தத்துவமும் வளர்ச்சிப் பொருளாதாரமும்'** எனும் பேராசிரியர் 'எம்.கே. சுப்பிரமணியத்தின் அருமையான கட்டுரையின் பகுதிகள்:

> **"சுயமரியாதை இயக்கம் தோன்றிய காலத்திலிருந்தே அது சம்பிரதாய ரீதியாக (Ceremonial) அமைந்துள்ள பாரம்பரிய (Traditional) சமூகத்தைச் சீர்திருத்த அல்ல - அடியோடு அழித்துப் புதியதோர் சமூகத்தைப் படைத்திடும் தத்துவத்தைச் செயல்படுத்திடும் முயற்சியில் ஈடுபட்டு வந்துள்ளது. மருந்து போட்டுத் தண்ணீரைச் சுத்தம் செய்வதும் தண்ணீர் பூராவையும் இறைத்துக் கிணற்றைக் கழுவுவதும் சீர்திருத்த வேலையாகும். அக்கிணற்றை மண்ணைப் போட்டு நிரவி மூடிவிடுவது என்பது அழிவு வேலையாகும். நான் ஒரு அழிவு வேலைக்காரன்" என்று பெரியார் குறிப்பிட்டுள்ளார்.**
>
> **பொருளாதாரத் திட்ட வல்லுநர்கள் கிராம - நகர வேறுபாடுகளைக் களைந்தெறிவதைப் பொருளாதார வளர்ச்சியின் அம்சமாகக் கொண்டுள்ளனர். கிராமம் - நகரம் என்று பிரித்துப் பேசுவதே ஒரு வகையான 'வர்ணாசிரம தர்மம்' என்று 50 ஆண்டுகளாகப் பிரச்சாரம் செய்து வந்துள்ளார்.**
>
> **வளர்ச்சிப் பொருளாதார நிபுணர் ராஸ்டோவ் (W.W. Rostow) சமூகங்களின் பொருளாதார அமைப்பினை ஆய்ந்து வளர்ச்சிக்குரிய அய்ந்து கட்டங்களைச் சுட்டிக் காட்டியுள்ளார். சம்பிரதாய - பாரம்பரியச் சமூக அமைப்பு, விடுபடுநிலைக்கு முந்திய நிலை, விடுபடு நிலை, முதிர்ச்சி நோக்கிச் செல்லும் நிலை, பெருமளவு உற்பத்தி நிலை என்பனவே அந்த அய்ந்து கட்டங்கள்.**
>
> **இந்து சமூகம் பாரம்ப்ரிய நோக்கும் சம்பிரதாயக் கட்டுக்கோப்பும் உள்ளது. பொருளாதார வளர்ச்சிக்குரிய**

*முதற்கட்டத்திலேதான் அது உழன்று வந்துள்ளது. வளர்ச்சியடைந்துள்ள மேலைநாடுகளில் பாரம்பரிய நோக்கும் சம்பிரதாயப் பிடிப்புமுள்ள முதல் கட்டத்திலிருந்து அடுத்தடுத்துள்ள கட்டங்களை நோக்கி விஞ்ஞான வாய்ப்புகளையும் புதிய கண்டுபிடிப்புகளையும், புத்தம் புதிய தொழில் வளர்ச்சித் திறன்களையும் தொழில் நுண்ணறிவினையும் பயன்படுத்தி இயல்பாகவே முன்னேறப் பலகாரணிகள் (Factors) உதவின. ('உண்மை': 14-9-1970).*

'உண்மை'யில் வெளிவந்த நகைச்சுவைத் துணுக்குகட்கு "வேடிக்கைப் பேச்சுக்கள்" என்று தலைப்புக் கொடுக்கப்பட்டது.

"**மகன்:** இப்பூமியைத் தாங்கிக் கொண்டிருப்பது யாரப்பா?

**தந்தை:** ஆதிசேஷன்.

**மகன்:** ஆதிசேஷனைத் தாங்கிகொண்டிருப்பது எது?

**தந்தை:** (விடை செப்ப முடியாமல் விழிக்கிறார்!)"

* * *

**முத்துச்சாமி:** அய்யா சிற்பி யவர்களே! என் தந்தையின் தாத்தாவின் தாயின் தகப்பனாரின் தகப்பனின் சகோதரர் பாடமொன்று எழுதிக் கொடுப்பீரா?

**சிற்பி:** என்ன, இரண்டு மைல் தூரம் நீளுகின்றதே! ஏதேனும் படம் கொண்டு வந்தாலல்லவா அதைப் பார்த்து எழுத முடியும்? காணமற் போன ஒருவரின் உருவத்தை வரைவதெப்படி?

**முத்துச்சாமி:** நல்லது. இந்தச் சிவன், விஷ்ணு, பிரம்மா, விநாயகர், முருகன் உருவங்களை வரைந்திருக்கிறீரல்லவா? அவை எப்படித் தெரிந்தன உமக்கு? நேரில் பார்த்தா எழுதினீர்கள்? ('உண்மை': 14-7-1970).

எடுத்துக்காட்டாகக் கூறப்பட்ட இத்துணுக்குகள் நகைச்சுவை மட்டுமே ஊட்டுபவையன்று. நல்ல சிந்தனைத் தூண்டலையும் விளைக்க வல்லவயைல்லவா?

தில்லிப் பேராசிரியர் சாலை இளந்திரையனின் அழகிய பாவரிகள் சில:

"பெரியாரை நினைக்கிறேன்; அவர்நடந்த
வீரநடைப் பாதையினை நோக்கு கின்றேன்;
அரிதான நடைப்பயணம்; எதிர்ப்புச் சேற்றில்

ஆழாநெ டுங்கால்கள் வயிரக் கால்கள்!
ஒருபெரியார் இல்லாத தமிழ கத்தை
ஒருமுறைக்கு நூறுமுறை நினைத்துப் பார்த்தேன்;
இருளடைந்த மதக்காடு, சாதிப் பள்ளம்
இவைநிறைந்த ஒருகேடே அந்த நாடு!

எவ்விதமாய் எதிர்ப்புகளை வென்றி ருப்பார்!
எவ்விதமாய் இருட்டிலொளி விரித்தி ருப்பார்!
இவ்விதமாய் எண்ணுகிறேன்; நெஞ்சக் கூட்டின்
எலும்புகளும் விரியவியப் பெய்து கின்றேன்!
காடழித்துக் கேடழிக்குப் புதுப்பே ராறு!
கற்பனையாம் இருள்கிழிக்கும் ஒளியின் வீறு!
நாடிழந்த நடையதற்குப் பயிற்ற வந்த
நம்பெரியார் இளந்தமிழர் பெற்ற பேறே!

('உண்மை': 14-9-1970)

## கொள்கை அறிக்கை

'நீதிக்கட்சி' என்று அழைக்கப்படும் தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் தோற்றுவிக்கப்பட்ட கட்டத்தில் பிட்டி தியாகராயரின் பெயரால் வெளியிடப்பட்ட பார்ப்பனரல்லார் கொள்கை அறிக்கையினை 14-6-1971ஆம் நாளிட்ட 'உண்மை'யில் இடம்பெறச் செய்திருந்தார் பெரியார். அதன் சிறப்பான பகுதியைப் பார்ப்போம்.

> "விழிப்படைந்த பார்ப்பனரல்லாதார் விரைந்து செயலாற்ற முன்வர வேண்டுகிறோம். அவர்களுடைய பிற்காலம் அவர்களது கையில்தான் இருக்கிறது. அவர்கள் செய்ய வேண்டிய காரியம் மிகப்பெரியது; மிக அவசரமானதுமாகும். முதல் வேலையாக சிறுவர் சிறுமியரை இன்னும் அதிகமான அளவில் நாம் படிக்க வைக்க வேண்டும். பல இடங்களில் சங்கங்களைத் தோற்றுவித்து பார்ப்பனரல்லாதார்க்கு எந்தெந்தச் சலுகைகள் உண்டு என்பதை எடுத்துக் கூறி, அதிகமானவர்களைப் படிக்கச் செய்ய வேண்டும். நிதி திரட்டி ஏழைகள் படிப்பதற்கு உதவி செய்ய வேண்டும்.
>
> கல்வித்துறையில் நாம் உரிய அளவுக்கு முன்னரே கவனம் செலுத்தத் தவறி விட்டோம். ஆகவே இப்போது நாம் தீவிரமாக அதில் முனைய வேண்டும். கல்வியில் கவனம் செலுத்துவதுடன் சமுதாய முன்னேற்றத்திற்கும் நாம் தீவிரமாக உழைக்க வேண்டும். அதற்கான பத்திரிகைகளையும் தொடங்கி, சங்கங்களும் ஆங்காங்கு அமைக்க வேண்டும். நம் உரிமைகளுக்காகப் போராட வேண்டும்.

இவற்றைச் செய்யாது நாம் இதுவரை வாளாவிருந்தோம். அதைச் சில தன்னலவாதிகள் பயன்படுத்திக் கொண்டனர். அதன் பயனாகப் பார்ப்பனரல்லாதாரிடையே மிக்க அதிருப்தி காணப்படுகிறது. நாள்தோறும் இந்த அதிருப்தி வளர்ந்து வருகிறது. அரசாங்கத்தின் கவனத்துக்கு இதனைக் கொண்டுவர வேண்டும். அத்துடன் முதலில் பார்ப்பனரல்லாதார் தங்களுக்குத் தாங்களே உதவி செய்துகொள்ள வேண்டும். கல்வி, சமுதாயம், அரசியல், பொருளாதாரம் முதலிய பல துறைகளிலும் முன்னேறுவதற்கான முயற்சிகளில் ஈடுபட வேண்டும்.

எங்களுடைய உறுதியான நம்பிக்கை என்னவென்றால் இன்னும் சிறிது காலத்திற்காவது ஒவ்வொரு வகுப்பாரும் தங்களுடைய வளர்ச்சியை முதன்மையாகக் கருதவேண்டும். பிற வகுப்பினருடன் சேர்ந்து பணியாற்றும்போது, தான் தாழ்ந்தவன் என்று கருதாது, சுயமரியாதையுடன் சமவுரிமை பெற்றவன் என்று எண்ண வேண்டும். சுயமரியாதையுடன் சமநிலையிலிருந்து மற்றவர்களுடன் பணியாற்றுவதையே ஒவ்வொருவரும் குறிக்கோளாகக் கொள்ள வேண்டும்".

அன்று தெ.ந.உ. சங்கத்தின் சார்பில் வெளியான பார்ப்பனரல்லாரின் கொள்கை அறிக்கையின் விரிவான மூல வடிவத்தின் இறுதிப் பகுதியே இது. இவ்வறிக்கை அக்காலத்தில் வாழ்ந்த நாட்டு மக்களிடையே பெரும் தாக்கத்தை விளைவித்தது என்பது வரலாற்றுப் பேருண்மை. வல்லாண்மை படைத்தோராய் விளங்கிய வேதிய வகுப்பினர் இவ்வறிக்கையினைத் தங்களுக்கு விடப்பட்ட கடும் அறைகூவலாய்க் கருதினர். பெரியார் உள்ளிட்ட பொதுநல நாட்டங் கொண்ட பார்ப்பனரல்லா முன்னோடிகள், தொண்டர்கள், கல்வியறிவு கொண்டோர், நிலக்கிழார்கள் அரசுப் பணியாளர்கள் ஆகியோர் உண்மைகளையும் நன்மைகளையும் நன்கு உணரத் தலைப்பட்டனர். அதன் பதிப்பு 1920ஆம் ஆண்டில் நடந்த இரட்டை ஆட்சி முறைத் தேர்தலில் தெளிவாகியது. 'நீதிக் கட்சி' வெற்றி பெற்று ஆட்சி அமைத்தது.

புகழ் வாய்ந்த 'நீதிக்கட்சி'த் தலைவர்களில் ஒருவரான ஆர்க்காடு இராமசாமி (முதலியார்) அவர்கள் 1927இல் 'ஜஸ்டிஸ்' ஆங்கில ஏட்டில் தீட்டிய 'புரோகித எதிர்ப்பு இயக்கம்' என்னும் ஆசிரியவுரையினை மொழியாக்கம் செய்து 14-11-1971க்குரிய 'உண்மை'யில் பெரியார் வெளியிட்டார்.

'அய்ரோப்பாவில் ரோமன் கத்தோலிக்கக் கிறிஸ்தவத் தீவிர வைதிகக் குருமார்களின் ஆதிக்கத்துக்குப் பெரும் எதிர்ப்பு

இயக்கம் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே ஏற்பட்டுள்ளது. இந்த எதிர்ப்பாளர்களில் முக்கியமானவர் மார்ட்டின் லூதர். இவரது பிரசார வன்மையால் ரோமன் கத்தோலிக்கக் கிறிஸ்தவ குருமார் ஆதிக்கம் சரிந்தது. இங்கிலாந்திலோ அரசாங்கமே போப் ஆதிக்கத்துக்கு முடிவு கட்டும் நடவடிக்கைகளைச் சட்டத்துறையில் மேற்கொண்டது.

கத்தோலிக்க மதத் தலைமைப் பீடமுள்ள இத்தாலியிலோ கரிபால்டியும் மாஜினியும் அந்நாட்டு மக்களைக் கடவுள் கன்காணிகளின் ஆதிக்க அதிகார விலங்குப் பிணிப்பிலிருந்து விடுவிக்க மகத்தான செயலாற்றினர்.

இவற்றின் பயனாய் மேனாடுகளில் சமுதாய வாழ்க்கையிலோ ஆட்சித் துறையிலே மதத் தரகர்களின் தொடர்பும் ஆதிக்கமும் பெருமளவில் துண்டிக்கப்பட்டும் நீக்கப்பட்டும் விட்டன. துருக்கியிலே இஸ்லாமிய மதத் தலைவர் ஆதிக்கம் அடியோடு ஒழிக்கப்பட்டுவிட்டது!

தென்னிந்தியாவிலே பார்ப்பனரல்லாதார் (திராவிட மக்கள்) முன்னேற்றத்திற்கான நல உரிமைச் சங்கம் தோற்றுவிக்கப் பட்டது. இதன் முக்கிய சமுதாயத் துறைக் குறிக்கோள் மக்களைப் புரோகிதக் குழுவினரின் ஆதிக்கத்திலிருந்தும் சுரண்டலிலிருந்தும் மீட்பதே!

மற்ற நாடுகளிலோ யார் வேண்டுமானாலும் உரிய பயிற்சி பெற்று மதகுரு ஆகலாம். நம் நாட்டில் ஒரு குறிப்பிட்ட தனிச் சாதியினரின் பரம்பரைப் பிறப்புரிமையாகப் புரோகித - அர்ச்சனைத் தொழில் உள்ளது. இதனால் அவர்களது ஆதிக்கமும் சுரண்டலும் உரம் பெற்று நீடித்துப் படுமோசமான நிலைமையை விளைத்துள்ளன. மற்ற நாடுகளை விட நம் நாட்டில் மதத் தரகர் பல மடங்கு அதிகமாக உள்ளதற்குக் காரணமே புரோகிதத் தொழில் பரம்பரையாக ஒரு சாதியினரின் நிரந்தர தனியுடைமையாக்கப் பட்டிருப்பதே!

இப்போது இந்தக் கேட்டினை அறிந்து இதனை ஒழிக்க வேண்டும் என்பதான எண்ணம் நம் மக்கள் மனத்திலே ஏற்படும் அறிவுக்கு விழிப்பேற்பட்டிருப்பது இந்தப் புரோகிதக் கும்பலும் இந்த உண்மை நிலையை உணர்ந்து காலவேறுபாட்டுக்கும் மக்கள் முன்னேற்ற அறிவியல் பண்பாட்டுக்கும் ஏற்றபடி நடந்து கொள்ளுவது அவசியம்.

ஒரு விஷயத்தை நிச்சயம் நம்புகிறோம். அதாவது நீதியின் முன்னேற்றத்தை எதுவுமே தடைப்படுத்த முடியாது".

## கீதை - ஆய்வு

"கீதை ஏன் தோன்றியது?" என்னும் தன்மான அறிஞர் து.மா. பெரியசாமியின் ஆய்வுக் கட்டுரையின் துண்டங்கள் சில: *('உண்மை': 14-1-1970, 14-2-1970)*

> "தமிழர்களின் அறிவையும் மானத்தையும் கெடுத்து மூட நம்பிக்கையை வளர்ப்பதே கீதை. 'பிராமணன் முதலான நாலு சாதிகளையும் பிரம்மா முதல் புழு வரையிலுள்ள ஜந்துக்களையும் நான் உண்டு பண்ணிக் காப்பாற்றி, அழிக்கிறேன். ஞானம், அருள், தவம், பொறை, வாய்மை, மேன்மை, மோனம், அய்ம்பொறி அடக்கல், வீரம், தருமம், தானம், கல்வி, கேள்வி, பேருண்டி, நெடுந்துயில், சோம்பல், நீதி, ஒழுக்க வழு, வஞ்ச, மறதி, பொய், கோபம், காமம், கொலை என்கிற குணங்களில் சிலருக்குச் சில குணங்கள் அதிகமாயும், சிலருக்குக் குறைவாயும் இருக்கும்படிச் செய்கிறேன். *(கீதை, அ.4 - சு. 13).*

இத்தகைய இழி செயலை - பேதச் செயலைக் கொண்ட கடவுளைத்தான் போற்றிப் புகழ்ந்து கூறுகிறார்கள். இது எவ்வளவு அறிவீனம்!

பார்ப்பனரின் உதவியில்லாமல் மற்ற வகுப்பினர் எவ்வகைச் சடங்குகளும் செய்து கொள்ள முடியாமற் போயிற்று. அதனாலேயே புரோகிதர்களுக்கு அந்தஸ்தும் ஆதிக்கமும் பெருகி, முடிவில் அவர்களுக்கு மதச் சடங்குகளே ஒரு பெருந் தொழிலாகவும் ஏற்பட்டு விட்டது. (எம்.கே. சுந்தரவரதாச்சாரியாரின் இந்து சரித்திரம் - பக்கம் 33).

துயரமும் அச்சமும் கவலையும் நீங்கிய நிலையே முக்தி எனப்படுகிறது. பார்ப்பனர் மட்டுமே முக்தி நிலை எய்தமுடியும் என்பதற்குப் போட்டி எழுந்தது. அதுவே சமய - பவுத்த மதங்கள். அறிவுப் புரட்சியின் விளைவு பவுத்தம். இப்புரட்சியையே சுயமரியாதை இயக்கம் செய்து கொண்டு வருகிறது.

## பகுத்தறிவுப் பொறியாளரின் பா

"தீபாவளி யாருக்கு? எனும் தலைப்பில் மின்னியல் பொறியாளர் பாவலர் கு.மா. சுப்பிரமணியன் அவர்கள் யாத்த

பதினாறு எண்சீர் விருத்தப் பாக்கள் 14-10-1971ஆம் நாளிட்ட 'உண்மை'யில் அச்சேறின. அவற்றின் முதலாம் பாடலையும் இறுதி விருத்தத்தையும் கேட்டாலே போதும்.

"எரிகின்ற பெருந்தீயில் நெய்யைக் கொட்டி
ஏலாத உயிர்வதையை செய்தே பார்ப்பார்
புரிகின்ற யாகத்தைக் கண்டே இஃது
பொய்சூது வஞ்சகத்தால் வாழ்வார்க் கன்றி
நெறிநின்று புவியாளும் மன்னன் மக்கள்
நெஞ்சத்துள் வைகும்நற் கோமான் அண்ணல்
நரகன்றன் நாட்டாருக் காகா தென்று
நாடெங்கும் வேள்விதனைத் தடுத்தான். அந்நாள்

ஆரியர்தம் தீயொழுக்கம் வேதம் மற்றும்
அவிசொரிந்து வேட்டலுயிர் வதைகள் தாமும்
சீரியநற் றமிழர்க்குத் தீதா மென்ற
பூரியர்கள் களிப்பென்னுங் கடலில் மூழ்கிப்
போற்றிவர வேற்றார்கள் கண்ணன் றன்னை;
பாரினிலே யவர்க்குத்தீ வளியா மென்றால்
பைந்தமிழர் கொண்டாடல் முறையோ சொல்வீர்!"

லக்னோ எனப்படும் லட்சுமணபுரியில் வெளிவந்து கொண்டிருந்த 'பஹுஜன்' இதழில் ஆசிரியர் சாடிலால் சாத்தி அவர்களால் 'பெரியார் மூலம் ராமர் அவமதிக்கப்பட்டது சரியா? என்னும் தலைப்புக் கொண்ட கருத்துரை 7-3-1971இல் வெளியானது. அது 14-9-1971ஆம் நாளிட்ட 'உண்மை'யில் இடம் பெற்றது.

> "பெரியார் ராமசாமி நாயக்கருடன் இந்தக் கட்டுரையாளர் முதன்முறையாக 1946இல் கான்பூரிலும், பிறகு 1959, 1969ஆம் ஆண்டுகளிலும் கான்பூரிலும் லக்னோவிலும் சந்தித்து, அவரது எண்ணங்களை அறியச் சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன. இம்மூன்று முறையும் அவர் பாரத நாட்டின் தீண்டப்படாதவர், பிற்பட்டவர், மைனாரிட்டியினர் சார்பில் கூட்டப்பட்ட மாநாடுகளில் வடஇந்திய மக்களால் அழைக்கப்பட்டிருந்தார். அவற்றில் லட்சக்கணக்கான மக்களின் முன்னிலையில் தமது கருத்தைச் சொல்ல அவருக்குச் சந்தர்ப்பம் கிடைத்து.
>
> தமது சமூகத்தின் மீது இந்து சமுதாயம் மனிதத்தன்மையே இல்லா அவமதிப்புச் செய்வதால் அதற்கெதிராகப் பெரியார் புரட்சி செய்ய முற்பட்டுள்ளார். இதற்காக அவர் அரசியலைப் பய்னபடுத்திக் கொள்ளவில்லை; அவரது திராவிடர் கழகம் ஒரு

*சமுதாயச் சீர்திருத்த இயக்கம், ஜாதிப் பாகுபாடுகள் உயர்ந்தவர் – தாழ்ந்தவர் பாகுபாடு, மூடநம்பிக்கை, வெறுப்பு – இவற்றை ஒழிப்பதே அவர் குறிக்கோள். கடவுள், தர்மம், சுவர்க்கம், தலைவிதி, அதிர்ஷ்டம் இவற்றின் மூடநம்பிக்கையிலிருந்து மக்களை விடுவிப்பதுமாகும்.*

*சேலம் நிகழ்ச்சியை ஜாதி வெறியர்கள், ஜாதிப் பாகுபாட்டின் மூலம் பல நூற்றாண்டுகளாகப் பெருமைஅடைந்து வருபவர்கள், பத்திரிகைகளிலும் பொதுக்கூட்டங்கள் – ஊர்வலங்களின் மூலமும் தங்களின் வெறுப்பைக் காட்டி மக்களைத் திசைதிருப்ப முயல்கின்றனர்.*

*“ராமசரித மானஸ்’ ராமர் மகிமையை விடப் பிராமணர் மகிமை பற்றி அதிகம் கூறுகிறது. துளசி ராமசரிதம் எழுதத் தொடங்குமுன்னர் பிராமணர்களின் பாதங்களைத் தொழுகிறார். ராமர் வாயிலாகவே பிராமண குலத்திற்குத் துரோகம் செய்வோர் வாழமுடியாது என்றும் அவர்களை நிந்திப்பவர்கள் நரகத்தை அடைவர் என்றும் கூறுகிறார்!*

*மக்களாட்சிக் காலத்தில் எவர் பிராமண வர்ண பேதத்தால் அவமதிக்கப்பட்டு, நசுக்கப்பட்டு, உறிஞ்சப்படுகிறார்களோ அவர்களுக்காகப் பெரியார் இத்தகைய கிளர்ச்சிகள் செய்து பிரச்சினைகளுக்குத் தீர்வு காண மக்களை இழுப்பதைத் தவிர வேறு வழி என்ன இருக்கிறது? சங்கராச்சாரியார், கோல்வால்கர் போன்றோர் இந்துமத சாஸ்திரங்களின் துணைகொண்டு மூடநம்பிக்கைகளைப் பரப்பி, இங்குள்ள சூத்திரத்தைச் சுரண்டுகின்றனர். இதற்கெதிராகப் பெரியார் கிளர்ச்சி செய்தால் அரசாங்கமும் இந்து சமுதாயமும் கூக்குரலிடுகின்றன!*

*திராவிடர் கழகத் தலைவர் ஏன் அப்படிச் செய்தார்? அவரின் கருத்து என்ன? அவற்றை அறிந்து குறைபாடுகளை அகற்ற முனைய வேண்டும். மனிதனை மனிதனாக மதித்துத் தீர்வு காணுங்கள்”.*

## பெரியாரியல் இலக்கியம்

**தோழர் துரை.** சக்கரவர்த்தி வடித்த ‘திருவிழா’ என்றோர் அருமையான சிறுகதை 14-10-1971ஆம் நாள் வெளியான ‘உண்மை’யில் இடம் பெற்றது. பெரியாரியல் இலக்கணத்திற்கு எடுத்துக் காட்டானதோர் இலக்கியப் படைப்பு அச்சிறுகதை என்று தயங்காமல் தீர்ப்பளிக்கலாம்.

"சிற்றூர் ஒன்று. எப்போது இடிந்து விழலாம் என்றிருக்கும் ஒரு குடிசை. மனைவி குழவியுடன் இருநாட் பட்டினி கிடந்த சண்முகம், துன்பத்தின் சுமையைத் தாங்க முடியாமல் சிந்தனையில் ஆழ்ந்து கிடக்கும் நிலை! திடீரென ஊரிலே காளியாத்தாள் திருவிழா அறிவித்து, சண்முகம் குடும்பத்துக்கு 31ரூபாய் வரியும் போட்டு விட்டார்கள். கையில் ஒரு காசுகூட இல்லாத சூழ்நிலையில் அவ்வளவு பெரிய தொகைக்கு என்ன செய்வது? தான் பெற்ற மூத்த மகன் படிப்புக்காக வாங்கிய கடனைத் திருப்பிக் கட்ட இன்னும் முடியவில்லை. அப்பையன் வீட்டை விட்டே ஓடி விட்டான்!

நாட்டாண்மைக்காரர் சண்முகத்திடம் கண்டிப்புக் காட்டுகிறார். அவ்வளவு பணம் தர இயலாத நிலையைக் கூறிக் குமுறியவன் "அந்தச் சாமியையே நான் கும்பிடலேங்க" என்கிறான். அவ்வளவுதான்! அவரின் 'ஊர்விலக்கல்' தண்டனைக்கு இலக்காகிறான். மறுகிழமைக்குள் செலுத்தி விடுவதாகக் கெஞ்சியும் பலனில்லை. மனைவியின் தாலியை விற்றாலும் முழுத் தொகை கிட்டுவதற்கில்லை.

சிந்தித்துச் சிந்தித்துப் பார்க்கிறான் சண்முகம். ஊர்க் கட்டுப்பாடு எனும் கொடுமையை எவ்வளவு காலம் எதிர் கொள்ள முடியும்? மானவுணர்ச்சி அவனை வாட்டியெடுத்தது. அவன் பகுத்தறிவாளன் அல்லன். மனைவியிடம் கலந்து பேசி நஞ்சு அருந்தும் முடிவுக்கு வருகிறான். அவன், அவனின் மனைவி, கைக்குழந்தை மூவரும் பிணங்களாகின்றனர்!

இக்கதைச் செய்திகளைத் தெரிவிக்கும் முறைகளால் தன்னிடம் சிறுகதைப் படைப்பாற்றல் நிரம்பிக் கிடப்பதைக் காட்டியுள்ளார் சக்கரவர்த்தி! "தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான் சண்முகம்" எனும் தொடக்கமும், "அவனது அவலநிலை கண்டு இரக்கப்படாது அம்பாளுக்கு விழா எடுத்த பக்தர்கள் அந்த அனாதைப் பிணங்களை அடக்கம் செய்வதில் மட்டும் ஏனோ அக்கறை காட்டினர்?" என்னும் கதை முடிப்பும் ஈர்ப்பானைவை.

"இரண்டாம் தேதியே அவனுக்கு முப்பதாம் தேதியாய்த் தோன்றும்"

"அவன் தலையை யார் அடகு வாங்குவார்கள்?"-

"காய்ச்சல் அடித்துக் கிடக்கும் அவன் கைக்குழந்தைக்குக் கஷாயம் வைத்துக் கொடுக்கக்கூடக் காசு இல்லை"-

'திருவிழா' என்னும் மடமை, அதற்காகக் கட்டாய வரி தண்டும் கொடுமை, ஊர்க்கட்டுப்பாடு என்பது விளைவிக்கும் தீமை, பெற்றோரைத் தவிப்புள்ளாக்கும் பிள்ளைகளின் பொறுப்பின்மை, வாட்டும் வறுமை, அடிப்படை பற்றிச் சிந்தியாமல் அழிவை நாடும் பகுத்தறிவின்மை, காளியாத்தாள் என்பது வெறும் கற்பனையே எனும் உண்மை ஆகியவை அனைத்தும் தன்னுள் கொண்டுள்ள இப்படைப்பு சிறந்த சிறுகதைத் தொகுப்புகளில் இடம் பெறத் தகுதி வாய்ந்தது!

## ஃப்ரெஞ்சுப் புரட்சி

ஃப்ரெஞ்சுப் புரட்சி பற்றித் தெளிவு தரும் கட்டுரையொன்று கல்வியாளர் கவியராஜுலு அவர்களால் 14-12-1971ஆம் நாளிட்ட 'உண்மை'யில் எழுதப்பட்டது. புரட்சிக்கு உடனடிக் காரணமாய் அவர் காட்டும் நிகழ்ச்சியினை அனைவரும் தெரிந்து கொள்ள வேண்டும்.

"1789இல் நாடாளுமன்றத்தைக் கூட்டுவித்தார் அரசர் (16ஆம் லூயி). அந்த ஆண்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட பொதுமக்கள் பிரதிநிதிகள், பிரபுக்கள் பிரிவு, குருமார்கள் பிரிவு ஆகிய மூவகைப் பிரிவினரும் தனித்தனியாகக் கூடாமல் ஒன்றாகக் கூடி முடிவெடுக்க வேண்டுமென்று வழக்கத்திற்கு மாறான ஒரு புதிய முறையை அரசர்முன் கோரிக்கையாக வைத்தனர். இதற்கு முன்னிருந்து முனைந்து செயல்பட்டவர் மிரபோ (Mirabeau) என்பவர்.

மிரபோ அரசியல் மிதவாதக் கொள்கைக்காரர், அரசரும் அவர்தம் அமைச்சர்களும் மிரபோவின் அறிவுரைக்குச் செவிசாய்த்து அரசியலில் சீர்திருத்தங்கள் செய்திருந்தால் ஃப்ரெஞ்சுப் புரட்சியே நிகழ்ந்திருக்காது என்று பெரும் வரலாற்றாசிரியர் கூறுவர்.

அரசர்: அமைச்சர்களே, பிரபுக்களே, குருமார்களே, மக்கள் பிரதிநிதிகளின் தலைவர் மிரபோ இப்போது சில கோரிக்கைகளை மக்கள் சார்பில் நம் முன்னே வைக்கிறார்.

மிரபோ: மாட்சிமை பொருந்திய மன்னர்பிரானுக்கும் அரசியார்க்கும் என் மனமார்ந்த வணக்கம். இன்று 'சுதந்தரம் நமது பிறப்புரிமை; சமத்துவம் தழைக்க வேண்டும்; சகோதரத்துவம் ஓங்க வேண்டும்' என்று மக்கள் முழங்கிக் கொண்டிருக்கின்றனர். நம்முடைய 'ஸ்டேட்ஸ் ஜெனரல்' என்னும் நாடாளுமன்றத்தின் முப்பிரிவுகளைச் சார்ந்தவர்களும் தனித்தனியே கூட வேண்டுமென்ற மரபை மாற்றி, முப்பிரிவுகளைச்

சார்ந்தவர்களும் ஒன்றுகூடி முடிவெடுக்க வேண்டு மென்பது மக்களின் முதல் கோரிக்கை.

குருமார்களும் பிரபுக்களும் கூட மற்ற சாதாரண மக்களைப் போல் வரி செலுத்த வேண்டும். இது இரண்டாவது.

**அரசர்:** மூன்றாம் கோரிக்கை என்னவோ?

**மிரபோ:** பிரபுக்களுக்கும் குருமார்களுக்கும் அரசியலிலும் சமுதாயவியலிலும் அளிக்கப்பட்டுள்ள சில சிறப்புரிமைகள் அகற்றப்பட்டுச் சமத்துவ நிலை ஏற்படுத்தப்பட வேண்டும்.

**அரசர்:** இன்னும் கூற வேண்டியது உண்டா?

**மிரபோ:** இன்னுமொரு கோரிக்கை இருக்கிறது, அரசே! அரசர், அரசியார் இருவரும் ஆடம்பர வாழ்க்கை நடத்துவதால் அரசுப் பணம் விரயமாகிக் கொண்டிருக்கிறது. அச்செலவினங்களைத் தவிர்க்க வேண்டும்.

**பிரபுக்கள்:** அரசே! பன்னெடுங்காலமாகக் கடைப்பிடிக்கப்பட்டு வரும் மரபுகளையும் கோட்பாடுகளையும் மாற்றி யமைப்பதற்கு நாங்கள் ஒருபோதும் ஒப்ப மாட்டோம்.

**அரசர்:** அரசியாரின் கருத்தினை அறிவோமே.

**அரசி:** மக்களுக்கு வரி செலுத்த வேண்டிய கடமை மட்டுமே உண்டு. அரசனும் அரசியும் செலவினங்களைக் குறைத்துக் கொள்ள வேண்டும் என அறிவுரை கூற அவர்களுக்கு உரிமையில்லை.

**பிரபுக்கள்:** அரசே, அரசியார் கூறுவதுதான் சரி. இந்தக் கோரிக்கைகளை நாம் ஏற்கவே கூடாது. நாடாளுமன்றத்தின் பிரிவுகள் தனித்தனியாகத்தான் கூட வேண்டும். இதை ஒப்புக் கொள்ளாவிட்டால் மக்கள் பிரதிநிதிகள் நாடாளுமன்றத்தை விட்டு விலகி விடட்டும்!"

மக்களாய நோய்களைப் போக்கி நலம் உண்டாக்குவதற்குத் தாம் கையாளும் மருத்துவ முறை பற்றிப் பெரியாரே விளக்கி யிருக்கிறார்.

"வைத்தியத்தில் இரண்டு முறைகளைச் சொல்லுவார்கள். 1.Physician's Cure 2. Surgeon's Cure - அதாவது மருந்து கொடுத்து வியாதியைக் குணப்படுத்துவது ஒரு முறை; கத்தியைப் போட்டு அறுத்து ஆபரேஷன் செய்து, நோயாளியைப் பிழைக்க வைப்பது இன்னொரு முறை.

என்னைப் பொருத்தவரையில் நான் 'நோயாளி செத்துப் போனாலும் பரவாயில்லை; நோயாளிக்குக் கஷ்டமில்லாமல் மருந்து மட்டுமே கொடுத்துக் குணப்படுத்தலாம்' என்று கருதபவன் அல்லன். நோயாளிக்குக் கஷ்டம் ஏற்பட்டாலும் பரவாயில்லை, அவன் சாகக்கூடாது என்று கருதி, அறுத்து ஆபரேஷன் செய்யும் இரண்டாவது முறையில் நம்பிக்கையுடையவன்.

நம்முடைய தோல் அப்படி லேசான தோலல்ல; 2000 – 3000 வருஷங்களாகத் தடித்துப் போன கெட்டியான தோல்! அதில் உறைக்க வேண்டுமென்றால், சிறிது கடினமாகத்தான் சொல்லியாக வேண்டும். எனது இலட்சியமெல்லாம் கஷ்டமாக இருந்தாலும் ஆள் பிழைக்க வேண்டுமென்பதுதான். உங்கள் நாட்டு மக்களைப் பாருங்கள்; உலகத்தையும் பாருங்கள். சிந்தியுங்கள்; பரிகாரம் தேடுங்கள்!" ('உண்மை': 14–5–1972).

## செத்துப்போன கடவுள்

கன்னடமொழியில் வசுதேவ பூபாளம் என்னும் அறிஞர் யாத்த 'செத்துப் போன கடவுள்' என்னும் கட்டுரை பெங்களூர் வி.சி. வேலாயுதம் அவர்களால் மொழியாக்கம் செய்யப்பட்டு 'உண்மை'யில் வெளியிடப்பட்டது.

"அக்ஸ்லி என்பார் கூறுவதுபோல மதச்சுமை சுமக்கும் மனிதன் இயற்கைக்கு மீறிய சக்திகளையும் இருப்பதாகக் கற்பித்துக் கொள்ளுகிறான். மனிதனின் மந்திரங்களுக்குப் பலன் அளிக்கும் சிறு தெய்வங்கள், அவற்றினும் அதிக ஆற்றல் வாய்ந்த தேவர்கள், அநேக தேவர்களின் ஆற்றலை ஒருங்கே பெற்றுள்ள ஒரே ஒரு கடவுள் என்பதாக இப்படியே தொடர்கிறது மனிதனின் கற்பனைக் கடவுள்களின் பட்டியல்.

இவ்வுலகிற்குக் காரண பூதமான ஒன்று இருக்கத்தான் வேண்டும்; அக்காரண சக்திதான் கடவுள் என்று மக்கள் இன்னும் கூறுகிறார்கள். கடவுளுக்கே காரண பூதமாக வேறொன்று இருக்கக் கூடாதா? ஏனிதைக் கேட்கக்கூடாது? கடவுள் எப்படி

உண்டானான் என்கிற கேள்விக்குப் பதில் இல்லையானால் அதை ஆதிரகசியம் என்று ஒப்புக் கொள்ளுவதானால் – ஆதி காலத்திலிருந்தே கடவுள் இருந்து வருகிறது என்று சொல்வதை விட்டொழித்து, ஆதியிலிருந்தே உலகம் இருந்து வருகிறது என்பதுடன் அமையலாம்.

மாந்தனின் தெளிவற்ற கற்பனையில் பிறந்த கடவுள், அவனது அறிவு முதிர்ந்த சிந்தனையில் மாண்டு போகிறான்!"

இக்கருத்தினைச் சின்னேரம் சிந்தித்தால்கூடத் தெளிவு கிட்டிவிடும். ('உண்மை': 14-1-1972).

'பெரியார் சிந்தனைகள்' தொகுப்புக் குழுத் தலைவர் வே. ஆனைமுத்துவின் **கடவுள் உண்டா? இல்லையா?** என்னும் கட்டுரைத் தொடர் 'உண்மை'யில் வெளியாயிற்று. எவ்வகை மூளையையும் இயங்கச் செய்யவல்ல அதன் இறுதிப் பகுதி இதோ:

"கோபுரத்தையும் கற்சிலையையும் கண்டவுடனே 'இது சாமி; நீயும் கும்பிடு' என்று கூறித் தாயானவள் தனது குழந்தையின் இரு கைகளையும் சேர்த்து வைத்துக் கும்பிடச் சொன்னால்தானே குழந்தை கும்பிட முயல்கிறது? கும்பிடும் பழக்கத்தில் ஊறும் அதே குழந்தையைக் கடவுள் நம்பிக்கை உடையதாகவும் 'சாமி' கும்பிடும் பழக்கம் உடையதாகவும் ஆக்கிய குற்றம் பெற்றோருடையதல்லவா?

குல தெய்வ வழிபாடு, கூட்டு வழிபாடு, நோன்புகள், திருவிழாக்கள், வீட்டுச் சடங்குகள் இவற்றைக் கைவிடாது செய்வதுதான் நமது கலாசாரம் அல்லது பண்பாடு எனக் கொண்டு வருவது தவறல்லவா?

கடவுளே துணை என்றும், திரவுபதை பத்தினித் தெய்வம் என்றும் தலைமுறை தலைமுறையாகக் கேட்கப்பட்டும் சொல்லப்பட்டும் வந்த கருத்துகளைப் பாட்டியோ பாட்டனோ - தாயோ தந்தையோ - திரும்பத் திரும்பச் சொல்லிக் கொடுத்துத்தானே தெய்வ நம்பிக்கையைக் குழந்தையின் நெஞ்சத்திற் புகுத்தி விடுகிறோம்? இரண்டு மூன்று தலைமுறைகட்கு இப்படிப்பட்ட மூட எண்ணங்களையும் பழக்கங்களையும் குழந்தைகட்குக் கற்பிக்காமல் விடுவோமானால், கடவுள் ஏது? மதம் ஏது? சாதி எங்கே இருக்கும்? இவை பற்றிய எண்ணங்கள் எப்படி மக்களைப் பற்ற முடியும்?

மநுநீதி, அர்த்த சாஸ்திரம், பகவத் கீதை, இராமாயணம், பாரதம், மற்றும் புராணங்கள் ஆகிய நூல்களையோ, இவற்றில்

காணப்படும் கருத்துகளின் ஒரு பகுதியையோ எவரும் எந்த மொழியிலும் அச்சிட்டு வெளியிடக்கூடாதென்றும் எவரும் இவற்றை வைத்திருக்கக் கூடாதென்றும், இவற்றைப் பற்றி எவரும் பொது இடத்தில் பேசக்கூடாது என்றும், இவற்றின் கருத்துகளை எந்த முறையிலும் தமிழ்நாட்டாரிடையே பரப்பவோ செயற்படுத்தவோ கூடாதென்றும், இவற்றின் கருத்துகளைத் தாங்கி எந்த வெளியீடும் கிழமை இதழும் தமிழரிடையே உலவக் கூடாது என்றும் சட்டத்தின் மூலம் தடையிட்டு, அதே நிலைமையை ஒரு நூற்றாண்டுக்கு நீடித்து விட்டோமானால், அதன் பின்னர் எந்தத் தமிழ்மகன் கடவுள் துணை வேண்டும் என நினைப்பான் - நம்புவான்? ('உண்மை': 14-8-1972).

பெரியார் அவர்கள் பல துறைகளிலும் பாடுபட்டார்கள். இன அடிப்படையில் பதவி ஒதுக்கீடு வேண்டும் என்று போராடி அதை அரசின் ஆணையாக ஆக்கினார்கள். ஆனால் அவர்கள் பெற்றுத் தந்த இந்தப் பதவிகளில் அமரும் தமிழர்களில் பெரும் பகுதியினர் மூட நம்பிக்கை நிறைந்த சூழலில் வளர்ந்தவர்களாகவும் பகுத்தறிவுப் பாரம்பரியம் அற்றவர்களாகவும் இருப்பது தான் மிகவும் கெட்ட வாய்ப்பு. மொத்த விளைவாக சக்தி வாய்ந்த பல நிலைகளில் செல்வாக்கான பல பதவிகளில் தமிழர்கள் என்ற பெயரில் மூடநம்பிக்கை மூட்டைகளும் பக்திப் பண்டாரங்களும் அமர வழி ஏற்பட்டது.

இவர்கள் தங்கள் வசதிக்கும் வருவாய்க்கும் செல்வாக்கிற்கும் பெரியாரே காரணம் என்று மிகவும் நன்றியுணர்வோடு நினைப்பதில் என்னவோ தவறுவதில்லை. பார்ப்பனப் பத்திரிகைகளில் பிரபலமாகி இடம் பிடித்துக் கொண்டு, 'மாபெரும் மேதை'களாகவோ, 'கவிஞர்'களாகவோ பிழைப்பு நடத்திக் கொண்டு வரும் அரைவேக்காடுகள் கூட தங்கள் நெஞ்சின் ஆழத்தில் பெரியார் இல்லாமல் தங்களுக்குத் தற்போதைய நிலை இல்லை என்பதை மிகவும் தீர்க்கமாக அறிந்துதான் வைத்திருக்கிறார்கள். ஆனால் இதுவே முழு வெற்றியல்ல.

தந்தை பெரியார் தம் 70 ஆண்டுத் தொண்டில் இவர்களைப் பொருத்தவரை பொருள் அளவில் லாபம் - மிக நல்ல லாபம்தான். குறைந்த பட்சம் பெரியார் தம் மேடையில் இவர்கள் பட்டையும் நாமமுமாக நின்று பல்லைக் காட்டவாவது வெட்கப்பட வேண்டாமா?"

14-11-1973ஆம் நாளிட்ட 'உண்மை'யில் இடம் பெற்ற ஆற்றல்மிகு படைப்பாளர் சங்கமித்ராவின் 'பண்டாரத்தமிழர்கள்' என்னும் பொருளாழமுற்ற கட்டுரைப் பகுதிகள் இவை.

ஆரல்வாய் மொழி சு. தமிழ்மறை "உண்மை'யில் வரைந்த 'அர்த்தமுள்ளதா இந்து மதம்?' என்னும் அரிய கட்டுரைத் தொடரின் ஒரு பகுதி சுட்டத் தக்கது. "கஜினி முகமது தலையில் சோமநாதபுர ஆலயத்தைக் கொள்ளையடித்து, பூசாரிகளைத் தங்களின் அடிமைகளாக்கி, பூசாரிகளின் மனைவிகளைத் தனது படையினரின் வைப்பாட்டிகளாகச் செய்யும்படி விதி எழுதப்பட்டிருந்ததா? அவுரங்கசீப் தலையில் 40க்கு மேற்பட்ட இந்துக் கோயில்களை இடித்து மசூதிகளாகக் கட்டும் படி விதிக்கப்பட்டதா? ஸ்ரீரெங்கம் ரெங்கநாதர் தீப்பிடித்து எரிய வேண்டுமென்று அதன் தலையிலும் குருவாயூர் கோவில் தீப்பிடிக்க வேண்டுமென்று அதன் தலையிலும் எழுதப்பட்டதா? திருச்செந்தூர் முருகன் நகைகள் திருடு போக வேண்டுமென்றும் அதற்குப் போலீஸ் துணை தேவையென்றும் அந்தக் கடற்கரையான் தலையில் விதித்து இருந்ததா?

காந்தியடிகள் கோட்சே கையால் சுடப்பட்டுச் சாகவேண்டுமென்று விதியிருந்தால் கோட்சே குற்றவாளியா? ஹிட்லரின் விதி ருஷியாவைக் கவருவது! ஸ்டாலினின் விதி ஹிட்லரை ஒழிப்பது!

ஒருவன் கொலையுற வேண்டுமென்பது அவன் தலைவிதி! அவனை ஒருவன் கொல்ல வேண்டுமென்பது அவன் தலைவிதி! வாதிக்கும் பிரதிவாதிக்கும் பிரதிவாதிக்கும் வாதாடுகிற வக்கீல்களுக்கும் தலைவிதி! தீர்ப்பளிக்கிற நீதிபதிகளுக்கும் அப்படியப்படி தலைவிதி! அட, தலைவிதியே!" ('உண்மை': 14-12-1973).

இவற்றைப் போல முழுக்க முழுக்கப் புரட்சிக் கருத்துகளையும் பகுத்தறிவுப் படைப்புகளையும் சுமந்து கொண்டு 'உண்மை' தமிழரிடையே சுற்றுலா வருமாறு செய்தார் பெரியார். தாம் மறையும்வரை தாம் நிறுவிய 'உண்மை'யைத் தமது காண்காணிப்பிலேயே இயங்கி வர வைத்தார் அவர். கேளிக்கைச் செய்திகளோ மலிவுச் சுவைப் படைப்புகளோ கவர்ச்சிப் படங்களோ இதழில் இடம்பெறப் பண்ண வேண்டும் என்னும் வணிகப் பண்பு அவரைத் தாக்கவில்லை!

நான்காண்டுக் காலம் அக்கறையோடு பெரியார் பேணி வளர்த்துவிட்டுச் சென்ற பிஞ்சுக் குழந்தையாகிய 'உண்மை' இன்று, பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனத்தின் செயலாளர் 'ஆசிரியர்' கி. வீரமணியின் பொறுப்பிலும் அவரின் அருமுயற்சியிலும் முப்பதாண்டு இளமைத் துடிப்புடன் பீடார்ந்த உலக உலா நிகழ்த்திக் கொண்டிருக்கிறது.

அய்ந்து ரூபாய் விலையில் அய்ம்பது பக்கங்களுடன் புதுப்பொலிவு தோய்ந்து 'உண்மை' இப்போது மாதமிருமுறை இதழாக - அய்யாவின் ஆர்வப்படி கிழமை இதழாக வளர்ச்சி எய்தும் இலக்கை நோக்கி - முன்னேறி யிருக்கிறது. உலகில் எங்கெல்லாம் தமிழர் வாழ்கின்றார்களோ, அங்கெல்லாம் 'உண்மை' தற்போது புழங்கிக் கொண்டிருக்கிறது! "என்னங்க, சென்ற 'உண்மை' படித்தீர்களா?" "இந்த 'உண்மை' பார்த்தீர்களா? என்பதாகப் பகுத்தறிவாளர்கள் பேசிக் கொள்ளுவது இன்றைக்கு இயல்பான காட்சி!

இந்தப் பெருமிதத்திற்கும் பாராட்டுக்கும் உரிய சிறப்பான நிலைக்கு அடிப்படை பெரியார் புகட்டிய ஊட்டச் சத்தே என்பதுதான் இதழாளர் பெரியாரின் மாட்சி! பகுத்தறிவு இதழொன்று முப்பது ஆண்டகவை எய்தியுள்ளது என்னும் நிறைவேற்றம் ஒரு வரலாற்றுப் புதுமை!

******

## மன்பதை போற்றும் 'மாடர்ன் ரேஷனலிஸ்ட்!'

## The Modern Rationalist

தன்னிகரில்லாத் தன்மான இயக்கப் பகுத்தறிவுக் கொள்கைகளை அயல் உலகிற்கும் பரப்பிட வேண்டும் எனும் முனைப்பு இதழாளர் பெரியாரிடம் தணியாமல் மூண்டிருந்தமையின் விளைவாக ரிவோல்ட், ஜஸ்டிசைட் ஆகிய இதழ்களைப் பின்பற்றி 'த மாடர்ன் ரேஷனலிஸ்ட்' எனும் மாதிகை முளைத்தது. எளிமையான தோற்றத்துடன் அதே போழ்து வலிமையான அறிவூற்றத்துடன் 24 பக்கங்களுடன் என்னும் அளவுள்ளதாய் அமைந்திருந்த அவ்வாங்கில இதழின் விலை 40 காசுகள்தாம். சென்னை திராவிடன் அச்சகத்திலிருந்து ஈ.வெ.ரா. மணியம்மையாரால் வெளியிடப் பெற்ற தம் ஆங்கில மாதிகைக்கு பெரியார் நல்ல ஆங்கில மொழிப்புலமையும் ஈர்ப்பாற்றலுடன் கருத்து வெளியிடும் பட்டறிவும் நிரம்பிய கி. வீரமணியவர்களை ஆசிரியராக்கினார்.

பெரியாரின் கட்டுரைகள், பெரியாரின் மீதான கட்டுரைகள், ஆசிரியவுரை, சாதி, பார்ப்பனியம், கடவுள், மதம், மூடநம்பிக்கைகள், சடங்குகள், பகுத்தறிவு, வாழ்க்கை ஓவியங்கள், பாக்கள், நேர்காணல்கள், இலக்கியம், சாமியார்கள், 'இது தான் ஹிந்தியா!', பெட்டிச் செய்திகள், உடன்பாட்டுக் குறிப்புகள், முரண்பாட்டுக் குறிப்புகள், இறுதிப்பக்கத் திறந்த மடல் முதலிய படைப்புகள் இடம் பெற்றன.

முகப்புப் பக்கத்தின் மேற்பகுதியில் இடம் பெற்ற 'THE MODERN RATIONALIST' என்னும் இதழ்ப் பெயரின் எழுத்துகள் சிவப்பு மையில் அச்சிடப்பட்டிருந்தமை குறிப்பிடத்தக்கது.

"Vol. 1 No. 1 September 1971 Price:40 P." என்பதைத் தவிர முகப்புப் பக்கத்தில் வேறெதுவும் இடம் பெறவில்லை.

தொடக்க இதழில் வெளியான பெரியாரின் விளக்கவுரையும் ஆசிரியரின் உரையும் இதழின் நோக்கத்தைத் துல்லியமாகத் தெளிவுறுத்தின.

முதற் பக்கத்தில் இதழாளர் பெரியாரின் படமும் அவர்தம் நற்செய்தியும் அச்சாகின. "The magazine 'The Modern Rationalist'"

is being run on the basis of rationalistic principles only to kindle rationalistic feeling among people. In our country there are no other papers with this policy except this one. That is why we are **being superstitious.**

Superstition and Superstitious propaganda are the reasons for social disparity and the ups and downs in our society. "The Modern Rationalist", The paper of ours, though a small one, will do away with the superstition and disparities that prevail in the society all alone without any help from others, like a small iron chisel that breaks huge bowlers. Hence I request that this magazine may adorn the hands of each and every one of ours in this modern society"

இதன் தமிழாக்கம் இப்படி அமையும். 'த மாடெர்ன் ரேஷனலிஸ்ட்' எனும் பெயரிய (மாதிகை) இதழ் பகுத்தறிவுக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு மக்களிடையே பகுத்தறிவு உணர்வுகளைத் தூண்டி விடுவதற்கென்று நடத்தப் படுகிறது. நம் நாட்டில் இதைத் தவிர இந்தக் கொள்கைகளுடன் வெளிவரும் வேறிதழ்கள் கிடையா. எனவேதான் நாம் மூடநம்பிக்கைப் பீடிப்புக்கு இலக்காகியுள்ளோம்.

நம்முடைய சமுதாயத்தின் சமனற்ற தன்மைகளுக்கும் நம்மிடையே நிலவும் உயர்வு - தாழ்வுகட்கும் மூடநம்பிக்கைகளும் மூடநம்பிக்கைப் பரப்பல்களுமே காரணங்களாகும்.

'த மாடர்ன் ரேஷனலிஸ்ட்' எனும் நமது இதழானது உருவத்தில் சிறியதாக இருந்தாலும் நம் சமுதாயத்தில் நிலவி வரும் மடமையையும் ஏற்ற - தாழ்வுகளையும் ஒழித்தே தீரும். எவ்வாறு ஒரு சின்ன உளி பென்னம் பெரும் கற்பாளங்களை உடைத்துத் தள்ளுகிறதோ அதைப் போலவே இங்கு நிலவும் சமுதாய முரண்பாடுகளையும் இச்சிற்றேடு தன்னந் தனியாகப் போராடி, வினைமுடிக்கும். எனவே புத்துலகில் ஒவ்வொருவரின் கைகளையும் இவ்விதழ் எய்தி எழிலூட்ட வேண்டுமென்பதே எனது விழைவு!"

இது பெரியாரின் வேண்டல். இதோ இதழாசிரியரின் தூண்டல்.

"In the agelong acrimonious fight between science and religions, it is proved beyond doubt that science alone could triumph. The whole world is astounded by the remarkable achievements of science!

But our people are unable to give up bigotry eventhough they know quite well that it is entirely contrary to science and to common sense. Superstitions die hard!

The Self-Respect movement founded by our Revered Periyar began to shake our people from the compliance. Ofcourse, it has paid good dividends. Unless and until our people are freed from the yoke of superstitions and tyrannies of these kinds they could not be redeemed. Hence the dire need for Rationalist Movement and its propaganda.

Thanthai Periyar is the only doughty warrior who fights fiercely and fearlessly against all these humbugs and shames. 'The Modern Rationalist' is the latest weapon in his armoury.

It is most ridiculous and fantastic to see the people who adorn their names with so many "Science Ph.D.'s" are entertaining baseless and unfounded beliefs quite contrary to common sense and science. To them education is only an ornament, not a weapon.

We would not rest our oars till we reach the shores. We would not keep quiet till the darkness is dispelled and the **day of light** is dawned!"

'OUR MISSION' எனத் தலைப்பிட்டு எழுதப்பட்டுள்ள ஆசிரியவுரையின் சில தலையாய பகுதிகளே இவை.

நெடுங்காலமாகவே அறிவியலுக்கும் மதத்திற்கும் இடையே நடந்து வரும் வெம்மை நிரம்பிய மல்லாடலில் அறிவியலே வாகை சூட முடியும் என்பது அய்யத்திற்கிடமேயின்றி மெய்ப்பிக்கப்பட்டு வந்துள்ளது. அறிவியலின் நிறைவேற்றங்களினால் அனைத்துலகும் திகைப்புக்கு இலக்காகியுள்ளது. என்றாலும் நம் மக்கள் அறிவியலுக்கும் பொதுவான புலனுணர்வுக்கும் முற்றிலும் முரண்பாடானது என்பதை நன்கு தெரிந்து கொண்டாலும் மதவெறியைக் கைவிட்டாரல்லர்.

1972ஆம் ஆண்டு ஜனவரி மாதத்திற்குரிய 'The Modern Rationalist' இதழின் ஆசிரியவுரை குறிக்கத் தக்கது. "வெல்ல முடியாத எல்லாம் வல்லவன்" எனும் தலைப்பின் கீழ் வெளியான ஆசிரியவுரை பாகிஸ்தான் ஆட்சித் தலைவர் யாஹியாகானின் கடவுள் - மத நம்பிக்கைக் கருத்தைச் சாடியது.

"கடவுள் உண்டு என்னும் கருத்தியல் எந்த மெய்மதத்தையோ சான்றுகளையோ அடிப்படையாகக் கொண்டதன்று. இந்த வெளிப்படையான உண்மையை உணர்த்துகின்ற சான்றினை அண்டைநாடான சண்டைக்காரப் பாகிஸ்தானின் குருதிக் கறைபடிந்த வரலாற்றின் பக்கங்களிலிருந்து நாம் எடுத்துக் காட்ட முடியும்.

படைப்புரட்சிக் குழுவால் ஆட்சிக் கட்டிலிலிருந்து வெளியெறியப்பட்ட யாஹியாகான் இத்துணைக்கண்டத்தின் இஸ்லாமியப் போராளியாகத் தன்னைப் பாவனை காட்டிக் கொண்டார். ஆனால் நடப்பில் அவர் தன் மதத்தைப் பின்பற்றிய உடன் பிறவிகளாகிய கிழக்குப் பாகிஸ்தான் மக்களையே துண்டுதுண்டாகச் சிதைத்தெறிந்த கொடியவனாக ஒழுகியவர்.

கிழக்குப் பாகிஸ்தான் எனப்பட்ட வங்காளதேசத்து மக்கள் யாஹியாவின் அடக்கு முறையையும் படுகொலையையும் எதிர்த்துக் கிளர்ந்தெழுந்தபோது, அதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க மறுத்த இந்தியாவின் மீது அவர் போர் தொடுத்தார். கொலை வெறியன் யாஹியா அப்போது கடவுள்–மத மூடநம்பிக்கையை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளக் கருதி, இந்தியாவின் மீதான 'புனிதப்' போரைப் 'புனிதக்' கடவுளின் பெயரால் நிகழ்த்துவதாகப் பறைசாற்றினார்.

தன் நாட்டினர்க்கு 4–12–1971 அன்று யாஹியா விடுத்த வானொலிச் செய்தியில், "நாம் நம்முடைய நாட்டின் மதிப்பிற்காகவும் நாணயத்திற்காகவும் போர் நடத்துகின்றோம். நமது அறச்செயலில் கடவுள் நம்மோடு இருக்கிறார். வெற்றி என்பது அதிக எண்ணிக்கையாளர்கட்குப் போய்ச் சேருவதில்லை; அது உயர்ந்த இஸ்லாமியக் குறிக்கோள்களை உடையவர்கட்கு உரியது!"

கிழக்கு பாகிஸ்தானின் தலைநகரான டாக்கா வீழ்ந்துபட, வங்காள தேசம் எனும் புதிய நாடு உருவானபோது, அதே யாஹியாகான், "ஏய்ப்பர்களான இந்திய எதிரிகளை வெல்லும் வரை நமது புனிதப் போர் தொடர்ந்து நடக்க வேண்டுமென்பது கடவுளின் விருப்பம். நம் நாட்டின் காப்புக்காகப் போரை நாம் தொடர வேண்டும். நாம் இறைவனின் உண்மையான ஊழியர்கள்; நமது குறிக்கோள் ஞாயமானது" என்று முழங்கினார்!

இப்பொழுது எல்லாம் வல்லவனான இறைவனின் தகுதியை உலகம் நன்கு பார்த்து விட்டது. 'புனிதப்'போர் தொடுத்த பாகிஸ்தான் தன் வளமான பகுதியை இழந்ததெப்படி? அவர் குறிப்பிட்ட கடவுள் எல்லா வல்லமையும் படைத்தவராயின் பாகிஸ்தானுக்கு ஏன் இத்துணை பெரும் தோல்வி? தங்களைக் காப்பாற்றுமாறு பாகிஸ்தான் கடவுளை நோக்கி விடுத்த வேண்டுகோள் எவ்வகைப் பயனையும் தரவில்லை. 'கடவுள்' தோற்றது. ஆம், எல்லாம் வல்ல (கடவுள்) அல்லா இரங்கத்தக்க முறையில் தோற்றது!

கடவுளை நம்புகின்ற மடமையும் மடிமையும்படைத்த மக்களின் கண்களை இந்நிகழ்ச்சி திறந்து விடட்டும்!

1971ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்திற்குரிய இதழின் 'இறுதிப் பக்கத் திறந்த மடல்' (An open Letter in the closing page) பகுதியில் "VICE" PRESIDENT தலைப்புடன் NONDESCRIPT (விளக்கப் பெறவியலாதவர்) என்னும் புனைபெயரால் இதழாசிரியர் வரைந்த மடல்:

"இந்தியக் குடியரசின் துணைத்தலைவர் ஜி.எஸ். பதக் அவர்கட்கு: மேதகையீர்! தாங்கள் பாரத் எனப்படும் இந்தியாவின் துணைத் தலைவரா? அன்றிக் காலத்திற் கொவ்வாததோர் அக்ரஹாரத்தின் துணைத்தலைவரா? இப்படி வினவும் என்னை மன்னியுங்கள். காமேஷ்வர்சிங் சமஸ்கிருதப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவிலும் திருப்பதி வேத பாடசாலையின் சான்றிதழ் வழங்கு விழாவிலும் கலந்து கொண்டு கருத்துகள் வெளியிட்டிருக்கிறீர்கள். இத்தெய்வீகக் கடமைகளை நிறைவேற்றுவதற்காகப் புதுத் தில்லியிலிருந்து வானூர்தியேறிப் பறந்து அத்துணை தொலைவு சென்றிருக்கிறீர்கள்.

அவ்விரு விடங்களிலும் தாங்கள் திருவாய் மலர்ந்து பொழிந்தது என்ன? வேத மரபினையும் சமஸ்கிருத மொழியையும் காத்துக் காப்பாற்றிப் பேணுவதே இந்தியக் குடிமகன் ஒவ்வொருவனுடைய கடமையாகும். இவைதாம் இந்தியரின் கருத்து ஊடகமாக இருந்து வருகின்றன. இதுதானே தாங்கள் அருளியது! இதற்காக நம்நாட்டின் இன்றைய கவலைக்குரிய பொருளியல் நிலையில் கருவூலத்திலிருந்து இலட்சக் கணக்கான பணத்தை விரயம் பண்ணுவதற்கு வெட்கப்படவில்லையா தாங்கள்? "ரோம் நகர் பற்றி எரிந்து கொண்டிருந்த போது நீரோ மன்னன் இசைக்கருவி இன்பத்தில் திளைத்திருந்தான்!" என்னும்

பழமொழியை, "இந்தியா கருகிக் கொண்டிருந்தபோது அதன் துணைத்தலைவர் அதன் மீது கல்லெண்ணெய் ஊற்றியதைப் போல" என்று புதுப்பிக்கப்பட வேண்டும். "வேத மரபைக் காக்க வேண்டும்!" எத்துணை பொருத்தக் கேடான கூற்று இது! அப்படியானால் கடுங்கொடிய வர்ணாசிரம தர்மம் கட்டுக்குலையாமல் காப்பாற்றப்பட வேண்டும் – அல்லவா?

இத்தகைய சிறுபிள்ளைத் தனமான வேண்டுகோள் விடுவதற்காகவும் கோமாளித்தனமான – கண்டனத்துக்குரிய வாய்க்கூற்றுகளுக்காகவும், கோபால் ஸ்வரூப் பதக் அவர்களே, நாட்டு மக்களின் பணத்தில் ஒரு காசுகூடச் செலவழிக்க அறநெறிப்படியோ சட்டப்படியோ – தங்களுக்கு உரிமை கிடையாது! கட்டுப்பாடின்றி இவ்வண்ணமே தாங்கள் செலவுபண்ணுவீர் களானால், அது நாட்டு நலனுக்கு முரணானது என்று அறிவிப்பதுடன் நாடாளுமன்றக் குற்றச் சாட்டு நடவடிக்கை (Impeachment) ஏற்பாடு செய்யும் நிலைக்கு நாடு தள்ளப்பட்டு விடும். அதுவே தங்கட்குத் தக்க பரிசாக அமையும். எனவே பண்பட்ட மனநிலையும் அறிவு நலமும் தங்களை ஆளட்டும்!"

இப்படிப்பட்டதொரு - பகுத்தறிவின் அடிப்படையிலான கண்டன மடலை அதுவும் நாட்டுக் குடியரசுத் துணைத்தலைவருக்கு இதழாளர் பெரியார் நடத்திய 'The Modern Rationalist' இதழின் ஆசிரியர் வீரமணி போன்றவர்களால்தான் துணிவாக எழுத முடியும்!

பெருமதிப்பிற்குரிய நம் பெரியாரவர்களால் நிறுவப் பெற்ற தன்மதிப்பு இயக்கம் மாறாத் தேக்க நிலையில் அசையாமல் கிடந்த நம் மக்களை ஆட்டி உலுக்கியது. அதற்குரிய நன்மைப் பங்கு கிட்டவே செய்தது. எனினும் நம் மக்கள் மூடநம்பிக்கைக் கொடுங்கோன்மைகள் என்னும் அடிமைச் சுமைகளிலிருந்து விடுவிக்கப்படாதவரையிலும் முழுமையான மீட்புக்கு வாய்ப்பே இல்லை.

எனவேதான் பகுத்தறிவு இயக்கத்திற்கும் அதன் பரப்புரைகட்கும் படு இன்றியமையாமை இன்று தோன்றியிருக்கிறது. தந்தை பெரியார் ஒருவர் மட்டுமே இவ்வேய்ப்புகளையும் ஏமாற்றுகளையும் எதிர்த்து அஞ்சாமையோடும் சீற்றத்தோடும் போராடிய உரம் படைத்த மல்லராவார்! 'த மாடர்ன் ரேஷனலிஸ்ட்' எனும் இவ்விதழ் அவர்தம் படைக்கலக் கொட்டிலிலிருந்து வெளியெடுக்கப்பட்டுப் பயன்படுத்தப் பெறும் படைக்கருவியாம்.

*"தங்களின் பெயர்களை அறிவியல் முனைவர் பட்டங்களால் ஒப்பனை பண்ணிக்கொள்ளும் எத்தனையோ கற்ற மக்கள் அடிப்படையே இல்லா - அறிவியலுக்கும் பொது அறிவுக்கும் எதிரான நம்பிக்கைகளை வரவேற்றுப் பாராட்டுகின்றனர் என்னும் கற்பனை தாண்டிய - எண்ணுதற்கரிய காட்சியை நாம் கவனிக்கிறோம். அப்படிப்பாளிகட்குக் கல்வி ஓர் அணிகலன் மட்டுமே; கருவியன்று.*

*கரை எய்தும் வரை துடுப்பு வழித்தலைத் தொடர்ந்து கொண்டுதான் இருப்போமே தவிர ஓய மாட்டோம். அப்பிக் கொண்ட இருள் களைந்தெறியப்படும் வரை பகற் பொழுது புலர்வுறும் வரை நாங்கள் அமைதி பெற மாட்டோம்!"*

பகுத்தறிவு பரப்புதல் எனும் ஒரே தொண்டுக்காகவென்று ஒப்படைக்கப்பட்டதுதான் 'The Modern Rationalist' என்பதை அய்யாவுரையும் ஆசிரியவுரையும் தெளிவுப்படுத்துகின்றன.

## 'Truth Seeker' வழங்கிய பாராட்டுகள்

பெரியாரின் முயற்சியினைப் பகுத்தறிவாளர் வரவேற்றுப் பாராட்டினர். அமெரிக்காவின் கலிஃபோர்னியாவிலிருந்து வெளியாகும் 'Truth Seeker' என்னும் பகுத்தறிவுத் தாளிகையின் ஆசிரியர் வரைந்த மடல் குறிக்கத்தக்கது.

*"இந்தியாவில் உரிமையுடன் கருத்து வெளிப்படுத்தும் ஒரு பகுத்தறிவுப் பருவ இதழ் மலருவதைக் கண்டு இன்புறுகிறோம்.*

*கடவுள் என்பது கிடையாது; இயற்கை இகந்தது என எதுவும் இல்லை. மன்பதையின் மதங்கள் அத்தனையும் மாபெரும் ஏய்ப்பு என்பது தோலுரித்துக் காட்டப்பட்டு, மூடநம்பிக்கைக்கு மாற்றாகப் பகுத்தறிவு ஆட்சி புரியுமாறு செய்யப்பட்டுவிட்டால் இவ்வுலகு அய்யாயிரம் ஆண்டுகளின் முன்னேற்றத்தை எய்தி விடும்.*

*இந்தியாவின் மக்கள் மூடநம்பிக்கை யென்னும் கொடுஞ்சுமை யிலிருந்து விடுவிக்கப் பெற்று, முற்றிலும் கற்பனையான மறுவுலக வாழ்க்கை பற்றிய சிந்தனையின் இடத்தில் இவ்வுலக இன்பம் குறித்த குறிக்கோள் அமர்ந்து விட்டால் இந்தியா வியக்கத்தகுந்த நன்மை எய்துவது உறுதி!"*

பெரியார் பற்றிய வெளிநாட்டு இதழ்களின் மதிப்பீடு என்ன? ஜேம்ஸ் ஹெர்வி ஜான்சன் எனும் பெயர் பூண்ட 'Truth Seeker'

ஆசிரியரின் நல்லுணர்வு மடல் 1971 ஆண்டு அக்டோபர் 'Modern Rationalist' இதழில் வெளியிடப் பெற்றது.

## 'Humanist' இதழின் மதிப்பீடு

இலண்டன் 'ஹ்யூமனிஸ்ட்' மாதிகையின் 1971 டிசம்பர் மாதப் பதிப்பில் வெளியான 'INDIAN ICONOCLAST' (இந்தியக் கடவுள் உருவ உடைப்பாளர்) என்னும் கட்டுரைத் தலைப்பே நல்ல விளக்கந் தருவது. பி. இராமநாதன் என்பவர் படைத்த அந்நீண்ட - செய்திகள் செறிந்த- கட்டுரையின் சில பகுதிகளை அறிவோம்.

> “பெரியாரின் திராவிடர் இயக்கம் என்பது வரவேற்பு அறைக்கூடல் வகையினைச் சேர்ந்ததன்று; அவர் மக்களிடம் தன் கருத்துகளைக் கொண்டு சென்றார்.
>
> பேரா. பி. சுந்தரனார், அயோத்தியதாசர், பா.வெ. மாணிக்க நாயக்கர், மறைமலையடிகள் போன்றவர்கள் பார்ப்பனியத்திற் கெதிரான குற்றச்சாட்டுகளை வெளியிட்டனர் எனினும் 'சிலையுடைப்பு'க் கருத்துகள் தெரிவித்தாரல்லர். 'தீண்டத்தகாதோர்' என்பாரின் தலைவர் அம்பேத்காரோ வடபுலத்தில் அய்யத்திற்கிடம் வையாத வகையில் இன்னும் உறுதியான சொற்கூறுகளில் பார்ப்பனியத்தைச் சாடினார். ஆயினும் அவற்றில் பெரும்பான்மை புலமைத் திறமும் கொள்கைப் போர்ப்பண்புமே நிரம்பியிருந்தன.
>
> பெரியார் பகுத்தறிவையும் நாத்திகத்தையும் குறைப் படிப்பாளிகளாகிய தமிழ் பாமரர்களிடையே தாம் திட்டமிட்டுப் பேணுகின்ற 'முதியோர் கல்வி'ப் பரப்பலின் ஒரு பகுதியாகவே ஆக்கிவிட்டார்; அதன் வழி – தங்களை ஒப்படைத்துக் கொண்ட – பின்பற்றாளர்களையும் செயல்வீரர்களையும் பெற்றுக் கொண்டுள்ளார்.
>
> பார்ப்பனிய உண்மைகள், மதம், கடவுள், மக்களாயம் ஆகியவை பற்றி எளிமையான – ஆனால் பெரும் உந்தாற்றல் வாய்ந்த வீட்டு மொழியில் மக்களிடம் பேசினார் பெரியார். மக்களின் தாழ்ந்துவிட்ட நிலைக்குக் காரணமான மரபுபேணும் வழக்கம் குறித்த விழிப்புணர்வை விளைவிக்க, அவர் இப்படிக் கேட்பார்.
>
> “கோவில் கட்டப் பணம் கொடுத்தவர்கள் உங்கள் அப்பனும் பாட்டனும் நீங்களுந்தான். ஒவ்வொரு கல்லாக எடுத்து வைத்துக் கோயிலைக் கட்டியது நீங்கள். ஆனால் காலையில் 'கீழ்ச்

சாதி'க்காரர்கள் கோவில் கருவறைக்குள் நுழைய முடியாது. பார்ப்பான் மட்டுமே செல்லலாம். நீங்கள் தொட்டால் தீட்டுக்குள்ளாகும் சாமி உங்களுக்குத் தேவையா? இப்படிப்பட்ட சாமிகளை உடைத்துப் போட்டுத் துணிதுவைக்க வேண்டாமா? அல்லது சாலை போடப் பயன்படுத்த வேண்டாமா?"

தீண்டாதார் என்பாரைத் தூண்டுவார் இவ்வாறு:

நீங்கள் உழுகிறீர்கள்; நீங்கள் விதைக்கிறீர்கள்; நீங்கள் நீர்பாய்ச்சுகிறீர்கள்; நீங்கள் களை பறிக்கிறீர்கள்; நீங்கள் அறுக்கிறீர்கள், இத்தனையும் செய்கின்ற நீங்கள் இழிசாதி மக்கள். ஆனால் எந்த வேலையும் செய்யாமல் பிறரைச் சுரண்டி வாழுகின்றவர்கள் உயர்ந்த சாதி! இதை ஒன்றும் பேசா ஊமைகளாய் அமைதியாக நீங்கள் ஏற்க வேண்டுமா?"

அய்யாவைப் பற்றிய இவ்வழகான படப்பிடிப்பில் புதைந்துள்ள பெரும் பொருளை மணிக்கணக்காக நாம் விரித்துரைக்க முடியும்.

கிட்டத்தட்ட ஒன்றரை நூற்றாண்டுகளுக்கு முன்பு அதாவது 1810களில் ஆங்கிலேயரின் இந்தியப் பேரரசின் சட்ட உறுப்பினராக இருந்த சர் ஹென்றி மெய்ன் என்பார் அப்போது நம் நாட்டில் நடப்பிலிருந்த 'இந்துச் சட்டம்' பற்றி எழுதியவற்றை விளக்கும் வகையில் பேராசிரியர் ஏ.எம். தர்மலிங்கம் அவர்கள் படைத்த கட்டுரை 'Sir Henry Maine on Hindu Law' என்னும் தலைப்பின் கீழ் 1972 அக்டோபர் மாடர்ன் ரேஷனலிஸ்ட் இடம் பெற்றது. அக்கட்டுரையிலிருந்து இன்றியமையாத் துண்டங்கள் சிலவற்றைத் தமிழில் தருகிறேன்.

"பெரும்பான்மையான மாந்தஇனவியல் ஆய்வறிஞர்கள் வரலாற்று அறிஞர்கள் ஆகியோர், ரோமானியர்களும் இந்துக்கள் என்பாரும் நடுவாசிய மேட்டு நிலத்திலிருந்து இடம் பெயர்ந்து சென்றோர் என்றே உறுதிப்படுத்துகின்றனர். மிகப் பழங்காலத்தில் மன்னராட்சிகள் உயர்குடிகள் ஆட்சிகளாக உருவெடுத்த போது, மேனாடுகளில் அரசியாளர் ஆட்சிகளாகவும் படைத்துறை ஆட்சிகளாக மாறின; ஆனால் கீழ்நாடுகளில் – குறிப்பாக, இந்தியாவில் – ஆட்சியதிகாரம் புரோகித உயர்குடிகளின் கைப்பிடிக்குள் சிக்கிக் கொண்டது. 'மனு'ச் சட்டத் தொகுப்பும் பிற 'சாஸ்திர'த் தொகுப்புகளும் இந்தப் புரோகிதக் குடிஞர்களாலேயே உருவாக்கப்பட்டன.

எனவே இந்து இந்தியாவில் இயற்கை நீதிக்கோ ஒப்புரவுப் பண்புக்கோ சற்றும் இடமில்லாமற் போய்விட்டது. சமநிலை என்னும் கருத்தை அறவே துறந்து விட்ட இந்து சாஸ்திரங்கள் என்பவை கடவுளால் படைக்கப்பட்டவை என மக்களை நம்பவைத்தமையே அந்நிலைக்குக் காரணம். ஆங்கிலேயர் அதிகாரம் முழுமைபெற்று விட்ட நிலையிலுங்கூட நடுவர் மன்றங்களில் இந்துப் பண்டிதர்களும் முஸ்லீம்களும் தீர்ப்பாளர்கட்கு மதச் சட்டங்கள் தொடர்பாக விளக்கங்கள் அளிப்பதற்காக அமர்த்தப்பட்டிருந்தனர். எந்த மன்னர்களாலும் 'கடவுளால் அருளப்பட்ட' மது முதலிய சாஸ்திரங்களில் கைவைக்க முடியவில்லை. அதன் விளைவாக, கூட்டுக் குடும்ப முறையின் கடுமையான பிடிப்பு, மகளிரின் மட்டமான நிலை, சாதிகளின் அடுக்குமுறை, தீண்டாமைப் பெருந்திமை ஆகியவை தொடர்ந்து பிடித்து நீடித்தன. ராஜாராம் மோகன்ராய், ஈஸ்வர் சந்திர வித்யாசாகர் ஆகியோரின் தனிக்குரலுக்குப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் போதிய நற்பயன்கள் கிட்டவில்லை.

வரலாற்று ஆவணங்கள் வித்யாசாகரின் பன்மண எதிர்ப்புக் குரலுக்கு எதிர்ப்பாகக் கல்கத்தாவில் அய்ம்பதினாயிரம் பேர் கூடிக் குரலெழுப்பிய நிகழ்ச்சியை நமக்கு விளக்குகின்றன. பல மனைவியரை அதுவும் பத்தாண்டகவைச் சிறுமிகளை மணந்திருந்த நூற்றுக்கணக்கான புரோகிதர்களின் பெயர்கள் வித்யாசாகரிடம் இருந்தன!

தொடக்க நிலை - காட்டு விலங்காண்டி நாகரிகம் என்பது மேற்கிலும் கிழக்கிலும் ஒன்று போலவே இருந்திருந்தாலும் சட்டத்திலும் வாழ்க்கையிலும் கிழக்கு முன்னேற்றம் கண்டது. மக்களின் மனமாற்றமும் குடியாட்சிப் பண்புகளுமே அதற்கு அடிப்படையாய் அமைந்தன. ஆனால் மேற்கின் இறந்த காலம் கிழக்கின் நிகழ்காலமாக வாழ்கிறது. இதுவே சட்ட அறிஞர் மேய்ன் வழங்கிச் சென்ற சான்றிதழாகும்.

விடுதலையுற்ற இந்தியாவில் இந்துச் சட்டம் மாற்றங்களுக்கு இலக்கானமை மெய்தான் என்றாலும் இந்துக்களின் நெஞ்சமும் மனமும் மாற்றமடைந்தாக வேண்டும். அது விரைந்து நடவாதவாறு, பாழ் பண்ணும் கேட்டினை நீடிக்கச் செய்து கொண்டிருப்போர் பார்ப்பன மாந்தரே. இவர்களின் தன்னலத் தன்மையை பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே கண்டு பிடித்து விட்டார் சட்ட அறிஞர் ஹென்றிமெய்ன்!"

"Two Muslim Judges எனும் தலைப்பின் கீழ் 1973- ஏப்ரல் மாத 'மாடர்ன் ரேஷனலிஸ்ட்' இதழில் வெளியாகியிருந்த கருத்துகள் குறிப்பிடத்தக்கவை. இந்திய மீவுயர் முறை மன்றத் தீர்ப்பாளர் மாண்பமை பேக் அவர்களும் கேரளா உயர்முறை மன்றத் தீர்ப்பாளர் மாண்பமை வி. காலித் அவர்களும் நாட்டிற்குப் பொதுவான மக்களாயச் சட்டத் தொகுப்பு படைக்கப் பெறுதலை வரவேற்றனர்.

திரு. பேக் அவர்களின் கருத்துகளின் பிழிவு இதோ:

"இந்தியாவின் ஒரு பகுதியினராகிய இஸ்லாத் நம்பிக்கை யாளர்கள் முற்போக்குச் சிந்தனைகளில் பின்தேங்கி நிற்பது கெட்ட வாய்ப்பே! தங்களின் 'இஸ்லாம்' மாந்தவியல் சட்டக் கருவூலங்களைப் பொது மக்களாயச் சட்டத் தொகுப்பில் இடம் பெறுமாறு செய்ய முயல்வதற்கு முஸ்லீம்கள் ஏன் தயக்கமும் எதிர்ப்பும் காட்ட வேண்டும்?

இந்தியாவில் முஸ்லீம்கள் பிற்படுத்தப்பட்டோராகக் கருதப்படும் நிலை கவலுதற்குரிய செய்தி யல்லவா? சற்று விளக்கம் பெற்ற முஸ்லீம்கள் – எண்ணிக்கையில் சிறுபான்மையோராயினும் பெரும்பான்மைப் பாமர முஸ்லீம்களைத் தங்கட்கென்று நடப்பிலுள்ள தனிமாந்தச் சட்டம் திருத்தம் பெறுதல் நன்மையே பயக்கும் என்று புரிந்து கொள்ளச் செய்து இணங்க வைத்தல் கடமை.

திரு. காலித் அவர்களின் கருத்துகளில் முகாமையானவை:

"இரண்டு பொருள்கள் குறித்த முஸ்லீம் தனிமாந்தச் சட்டத் திருத்தங்கள் இப்போது இன்றியமையாதவை. ஒன்று மணவிலக்குச் சிக்கல்; மற்றொன்று பன்மனை மணம்.

ஒன்றுமறியா இரங்கத் தக்க முஸ்லீம் பெண்களின் துயர் துடைக்க முஸ்லீம் குலத்தவர் மனங்கொள்ள வேண்டிய வேளை வந்து விட்டது! துருக்கியிலும் சைப்ரசிலும் ஒருதலையாக மணவிலக்கு மேற்கொள்ளும் உரிமை அகற்றப்பட்டு விட்டது. லெபனான், எகிப்து, சூடான், ஜோர்டான், அல்ஜீரியா, ஈராக் ஆகிய நாடுகளில் மணமுறிவுகோர மனைவிக்கு உரிமையுண்டு என்று ஏற்பிசைவு அளிக்கப்பட்டது. சிரியா, துருக்கி, துனீசியா, அல்ஜீரியா, ஈரான், மலேசியா ஆகிய நாடுகளில் நடுவர் மன்றத் தொடர்பின்றி நடக்கும் ஆடவரின் மணமுறிப்பு செல்லாது என்றாக்கப்பட்டு விட்டது. இந்தோனேசியா, பாகிஸ்தான், வங்காளதேசம் ஆகிய நாடுகளில் செயலதிகாரம் படைத்த

அமைப்புகளின் மூலமாக மணவிலக்குச் செய்து கொள்ளும் முறை நடப்புக்கு வந்து விட்டது. இந்த முஸ்லீம் நாடுகளெல்லாம் தங்களின் தனிமாந்தச் சட்டத்தில் சீர்திருத்தங்கள் செய்து கொள்ள முடியுமென்றால், இந்தியாவில் மட்டும் கூடாதா?

இங்கே முஸ்லீம்களின் குலத்தலைமை வெறும் உலேமாக்களிடம் மட்டும் இருக்குமாறு விட்டுவிடக்கூடாது. உலேமாக்கள் மட்டும் சிறந்த வழிகாட்டல் தந்துவிட முடியாது என்பதை வரலாறு காட்டிவிட்டது. இன்றைக்கு முஸ்லீம்கள் தொடர்பாக இங்கிருக்கும் சட்டம் ஆங்கிலோ-முகமதியச் சட்டம் என்பதே பொருத்தமாக விருக்க முடியும்; இது ஷரியத் சட்டம் அன்று என்பதுவே உண்மை!"

இவ்விரு பேரறிஞர்களின் கருத்துகள் சிந்தனைக்கு எவ்வளவு பெரிய விருந்தாக அமைந்துள்ளன! பொதுவாகச் சீரமைப்பு நாட்டங் கொண்டோருக்கும் குறிப்பாக முஸ்லீம் சான்றோர்களுக்கும் எத்தகைய கடமை காத்திருக்கிறது என்பதை உணர்த்தவல்ல உயர்ந்த செய்திகள் இவை.

"Touch me not!" என்னைத் தொடாதே எனும் தலைப்பில் சூரத் நகரிலமைந்த நில அளவீட்டு நடுவண் இயக்குநரின் அளவீட்டு ஆய்வறிக்கையின் ஒரு பகுதி 'த மாடர்ன் ரேஷனலிஸ்ட்'டின் 1973 ஜூன் மாத இதழில் வெளியிடப்பட்டது.

"தீண்டாமை என்பது குஜராத் மாநிலச் சிற்றூர்களில் இன்று உயிர்ப்புடன் தாண்டவமாடுகின்ற ஓர் ஆய்வுப் பொருளே. இச்சிற்றூர்களின் அறுபத்து நான்கு விழுக்காட்டு இடங்களில் தீண்டப்படாதோருக்கும் ஜாதி இந்துக்களுக்கும் தனித்தனிக் குடிநீர் வழங்கல் முறைதான் கடைப்பிடிக்கப் படுகிறது. நூற்றுக்கு ஏழே ஏழு சிற்றூர்களில்தாம் இப்பாகுபாடு நிலவவில்லை!

மதிப்பீட்டுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட 69 சிற்றூர்களில் மூன்று ஊர்களில்தாம் ஜாதி இந்துக்களின் இல்லங்களை அவர்கள் தீண்ட முடியும். எட்டு ஊர் கடைகளில் மட்டும் அவர்கள் நுழைய முடியும்.

51 சிற்றூர்களில் மூன்றே மூன்று முடிதிருத்துவோர்தாம் தீண்டப்படாதோரைத் தீண்டுவதற்கு முன் வருபவர்கள்! பிற

இடங்களில் அரிசனங்களே தங்களின் குலத்திலேயே முடிதிருத்துவோரை ஏற்பாடு செய்து கொள்ளுகின்றனர்.

37 சிற்றூரில் வாழும் தையற்காரர்கள் தீண்டாதாருக்கு உடைகள் தைத்துதவ முன்வந்தாலும், அளவெடுக்கும் நிகழ்ச்சி தையல்காரரின் இல்லத்திற்கோ கடைக்கோ வெளியில்தான் நடக்க வேண்டும்.

தீண்டப்படாதோர் எனப்படுவோர் தங்கள் இல்லங்களிலிருந்து கொண்டு வரும் பாலைப் பெற்றுக் கொள்ளக் கூட்டுறவு நிறுவனங்கள் மறுக்கின்ற நிலவரம் இருக்கிறது.

ஒன்பது சிற்றூர்களில் ஜாதி இந்துக்கள் தீண்டத்தகாதோரின் உழைப்புக்கு ஊதியம் வழங்குகையில் அவர்களைத் தொடுவது கிடையாது. 24 சிற்றூர்களின் ஆட்சி மன்றங்களில் (பஞ்சாயத்) இருக்கைகள் போடுவதில் பாகுபாடு காட்டப்படுகிறது. அவர்களுக்குத் தேநீர்கூட ஊராட்சி மன்ற அறைக்கு வெளியிலோ தனிக்குவளைகளிலோ வழங்கப்படுகிறது"

காந்தியாரின் மாநிலம் தீண்டாமை யொழிப்பில் எவ்வளவு பின் தங்கியுள்ளது என்பது குறித்துக் கண்ணீர் வடிக்கிறோம். இந்த அவலத்திற்கு முடிவு கட்டாமல் எவ்வளவு காலம் இருக்கப் போகிறோம்? பெரியார் கொள்கையே இதற்கான மாமருந்து!

## 'Thinkers Gallery'

"சிந்தனையாளர் மேடை" (Thinkers Gallery) எனும் பகுதியில் பல்வேறு நாடுகளின் சிந்தனையாளர்களைப் பற்றிய அரிய குறிப்புகள் அவர்தம் உருவப் படங்களுடன் இவ்விதழில் வெளியாகுமாறு செய்தார் இதழாளர் பெரியார். அவ்வகையில் டார்வின், லெனின், கலிலேயோ, கோப்பர் நிக்கஸ், ப்ரூனோ, வால்டேர், தாமஸ் ஜெஃப்பர்சன், ப்ராட்லா, கன்ஃபூசியஸ், ஹக்ஸ்லி போன்றவர்களின் சிறப்பான பட்டறிவுக் குறிப்புகள் படிப்பவர்களுக்குக் கிட்டின!

நெப்போலியனின் வீழ்ச்சிக்குப் பின் கத்தோலிக்க வெறியர் சிலர் புதைக்கப்பட்டிருந்த வால்டேரின் எலும்புகளைக் கல்லியெடுத்து, சுக்கலாகத் துண்டித்து, அவற்றைப் பாரிசின் எல்லைக்கப்பால் செலுத்தியமை, ஓர் இருக்கையை ப்ரூனோவுக்கு அளிக்க முன் வந்த பாரிஸ் பல்கலைக்கழகம், கிறித்துவ வழிபாடாகிய 'இறுதி உண'வை அவர் ஏற்றுக் கொள்ள வேண்டும் என வற்புறுத்தியபோது உறுதியுடன் அதை அவர் மறுத்து விட்டமை, இலத்தீன் மொழி

வழக்கின்படி கன்ஃபூஷியஸ் என அழைக்கப்படுபவரின் இயல்பான சீனப் பெயர் குங்-ஃபூ-ட்ஸீ எனும் உண்மை போன்ற புழக்கத்திலில்லா அருஞ் செய்திகள் 'மாடர்ன் ரேஷனலிஸ்ட்'டில் கிடைக்கின்றன.

உருப்படியான சொல்லாடல் ஒன்று கர்நாடக மாநிலச் சட்டப் பேரவையில் நடைபெற்றமை பற்றி 1973-அக்டோபருக்குரிய 'மாடர்ன் ரேஷனலிஸ்ட்'டில் வெளியான "Hinduism Encourages Beggary" எனும் கட்டுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

அதன் பிழிவு இதுதான்:

"கே. பிரபாகர் என்பவர், அரசின் சார்பாக மைசூர் சட்டப்பேரவை முன் இரத்தல் ஒழிப்பு'க்கான சட்ட வரைவு படைக்கப்பெற்ற நிலையில், 'பிச்சையேற்றல் என்பது குற்றம் நிரம்பிய செயல் என்பதாக இந்து மத நூல்களோ சமயத் தலைவர்களோ எங்கேயும் எவ்வகை அறிவிக்கையும் நிகழ்த்தக் கிடையாது. அவர்கள் அவ்வாறு செய்யாமைதான் இரத்தலை இறந்த காலமாக்கிவிடும் முயற்சி ஒரு பெரும்பாடாகி விட்டதற்குக் காரணம் என்றார்.

எம்.எஸ். கிருஷ்ணன் என்னும் பொதுவுடைமைக் கட்சி உறுப்பினர், எந்த மக்களாய அமைப்பில் சுரண்டல் பொருளியல் முறை நிலவுகிறதோ அதன் ஓர் இன்றியமையாத உறுப்பாக-உட்பொருளாக - இரத்தல் இருந்தே தீரும். எல்லா முதலாளிய -நிலவுடைமை மக்களாயங்களிலும் இரத்தலும் பரத்தமையும் இன்னும் உயிர்ப்புடன் நிலவி வருவதற்கு அதுவே காரணமாகும். பொதுவுடைமை நாடுகளில் தவிர உலகின் ஒவ்வொரு பகுதியிலும் இத்தொழில்கள் நீடித்திருக்கின்றன! என்றார்.

விடையளித்துப் பேசிய வளர்ச்சிக்கான அமைச்சர் மல்லிகார்ஜுன சுவாமியவர்கள் மக்களாய – பொருளிய நிலைமைகளே நம்நாட்டில் 'இரந்து வாழ்தல்' என்னும் கொடுமை நின்று நிலவக் காரணம் என்பதைத் தாம் ஒப்புக் கொள்ளுவதாக உரைத்தார். அது மட்டுமன்று. இரந்து உயிர் வாழும் பண்பு இந்து தர்மத்தின் ஒரு கூறு என்றும் உலகின் ஒவ்வொரு மதமும் இரக்கும் தொழிலுக்கு மறைமுக ஒத்துழைப்பு வழங்கியே வந்திருப்பது உண்மை என்றும் அவர் அறையத் தயங்கவில்லை. 'நம்முடைய மதத்தலைவர்கள் அத்தனைபேரும் பக்தி நாகரிகத்தைப் பரப்பியதன் மூலம் பிச்சையெடுப்பதை ஊக்கப் படுத்தவே செய்துள்ளனர்' என்றார் அமைச்சர் மல்லிகார்ஜுனசுவாமி"

படிப்பறிவில்லா மக்கட்கும் படித்தோர் என்பாருள் பெரும்பாலோருக்கும் தெரிந்திராததோர் அரிய செய்தியை 1972 மே மாதத்திற்குரிய 'மாடர்ன் ரேஷனலிஸ்ட்' நமக்குத் தருகிறது. அம்பேத்கர் அவர்கள் நிறைவேற்ற முயன்ற இந்துச் சட்டத் தொகுப்பு பற்றியது அது.

> "இந்தியச் சட்ட அமைச்சர் அம்பேத்கர் வரைந்த தொகுப்பு ஏற்கனவே நடைமுறையில் இருந்து வரும் இந்துச் சட்டத்திலுள்ள முரண்பாடுகளைக் களைந்து, அதில் ஒருமைப்பாட்டுச் சீர்மையை அறிமுகப் படுத்தியது. ஜவஹர்லால் நேரு முழுமையாக அதை ஏற்றாலும், அன்றையக் குடியரசுத் தலைவர் ராஜேந்திர பிரசாத் அதற்கு ஒப்புதல் அளிப்பதை விடத் தான் பதவியிலிருந்து விலகிவிடுவதையே விரும்புவதாக அறிவிக்கவே, அது திரும்பப் பெறப்பட்டது.
>
> எனினும் ஹிந்து மணச்சட்ட வரைவு, ஹிந்து வாரிசுரிமைச் சட்ட வரைவு, ஹிந்துச் சிறுபான்மையோர் - காப்புரிமைச் சட்டவரைவு, ஹிந்து தத்தெடுப்புச் சட்ட வரைவு என்னும் பெயர்களில் அம்பேத்கரின் வரைவுகள் யாவும் அறிமுகமாகி நாடாளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்டுச் சட்டங்களாகி விட்டன. அவர் வரைந்த ஹிந்துச் சட்டத் தொகுப்பின் ஒரேயொரு பகுதி மட்டுமே சட்டப் பொத்தகத்திற்குள் நுழைய முடியாமற் போயிற்று. புரோகிதர்க்கான பயிற்சி பற்றியதே அது! எந்த மதத்திற்கும் முறையான பயிற்சி பெற்ற புரோகிதர்களே இன்றியமையாதவர்கள் என்று அவர் கருதினார். ஒழுங்குமுறையற்ற - பயிற்சிதேறா - மதநூலறிவில்லா - புரோகிதர்கட்கு. முறையான பயிற்சியைக் கட்டாயப்படுத்திய அவ்வரைவு நிறைவேற்றம் பெற்றிருந்தால் மத நடவடிக்கைகளில் ஈடுபட, பிறவி ஜாதியுரிமை நடப்பிலிருக்கும் மரபினை முடிவுக்குக் கொண்டு வந்திருக்கும்!"

பார்ப்பனியத்தின் வல்லாண்மைக்கு இது பெருஞ் சான்று.

சோதிடம் என்னும் மடமை குறித்து அறிஞர் பெருமக்கள் தெரிவித்த நற்கருத்துகள் அடிக்கடி 'மாடர்ன் ரேஷனலிஸ்ட்' இதழில் இடம் பெற்றன. நோபேல் பரிசு வழங்கப் பெற்ற பேராசிரியர் ஹேன்ஸ் அல்போன் என்பவர் வெளியிட்ட அழகான கருத்தின் ஒரு பகுதி 1971 டிசம்பர் இதழில் அச்சேறியுள்ளது. "Why Astrology" எனும் அவ்விளக்கம் இதோ:

"சோதிடம் என்பது ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன் பிறப்பெடுத்தது. அக்காலத்தில் ஞாலமெனும் இந்நிலம் வானமெனும் ஓர் அரைக்கோளத்தால் மூடப்பட்ட தட்டையானதொரு வட்டத்தட்டு என்றும், அவ்வானத்தில் கடவுளர்களின் உறைவிடங்கள் உள்ளன வென்றும் கருதப் பட்டது. எனவே வானத்துக் கோள்களின் இயக்கம் கடவுளர்களாலே முறைப்படுத்தப் பெறுவதாக அக்கால மக்கள் எண்ணியதும் இயற்கையே. மக்களின் வாழ்வு கடவுளர்களால் அமைவுறுவதாக அப்போது கருதப்பட்டதால், கோள்களின் இருப்பிடங்களை ஆய்வதன் மூலம் மக்களின் ஊழ்நிலைகள் பற்றியும் கண்டறிய முடியுமென நம்பப்பட்டது!

சில நூற்றாண்டுகட்கு முன்பிருந்தே இக்கருத்தோட்டம் முழுக்கத் தவறானது என்பதை உலகம் உணரத் தலைப்பட்டது. நிலமானது தட்டையான தட்டு அன்று என்னும் உண்மை உறுதியாயிற்று. அது உருண்டை வடிவானதென்றும் அதன் மீது தற்காலத்திய வானூர்தித் தடங்கள் கற்பனையாய் உருவாக்கப் பட்டுள்ளமையும் புரிகிறது. விண்வெளிக் கலை விண்மீன்கள் என்பவை பல ஒளியாண்டுத் தொலைவுகட்கு அப்பால் அமைந்துள்ளன. கோள்களின் பயணங்கள் கடவுளர்களால் ஒழுங்குபடுத்தப் பெறவில்லை; அவை கெப்ளரும் நியூட்டனும் கண்டுபிடித்த இயற்கை நெறிகட்குக் கட்டுப்படுகின்றன.

மேலும் விண்வெளி வீரர்கள் நிலவுக்குப் பன்முறை பயணம் செய்து திரும்பிவிட்டனர்; ஆளில்லா விண்வெளி ஏவுகணைகள் 'வீனஸ்', 'மார்ஸ்' எனும் கோள்களை ஆய்வு செய்து வந்துள்ளன. நிலாவிலிருந்து பொருள்கள் கொண்டு வரப்பட்டு நுட்பமாக ஆய்வு செய்யப்பட்டு, நிலா என்பது மணலாலும் புழுதியாலும் சூழப்பட்டதொரு பெரும் பாறைக் குன்று எனும் உண்மை வெளியிடப்பட்டு விட்டது.

எனினும் அறிவியல் விளைவுகளை அறியா மக்கள் இன்னும் நம்மிடையே இருக்கத்தான் செய்கின்றனர்! அவர்களுக்குச் சோதிடம் என்பது பழைமையானதொரு மூடநம்பிக்கை தவிர வேறு அன்று என நிலை நாட்டப்பட்டு விட்டது என்னும் உண்மையினை அறியாதவர்களாய் அவர்கள் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர்.

இன்னும் சோதிடம் உயிர் வாழ்ந்து வருகின்றதென்றால் அதற்கு ஒரே காரணம் மக்களின் அறியாமையையும் மூடநம்பிக்கையையும் கூர்மதி படைத்த ஏய்ப்பவர்கள் பயன்படுத்திக் கொள்ள முடிகிறது என்பதே!

'ப்ளிட்ஸ்' ஆங்கில இதழின் துணையாசிரியர் கே.ஏ. அப்பாஸ் அவர்கள் "Are they serious about Rationalism" எனும் தலைப்பின் கீழ் வெளியிட்ட செய்தியின் ஒரு பகுதி ஒன்று 1971 நவம்பர் 'மாடர்ன் ரேஷனலிஸ்ட்' இதழில் இடம் பெற்றது. சோதிட நம்பிக்கையாளர் களை அது நேர்டியாகச் சாடியது.

"சோதிடக் குறிகூறல் நிகழ்ச்சிகளைத் தடை செய்யும் சட்டம் இயற்ற முயலும் இந்திய அரசின் செய்தியமைச்சரவை நடவடிக்கையினை நான் வரவேற்கிறேன்.

ஆனால் நாம் உண்மையாகவே பகுத்தறிவு பற்றியோ சமயச் சார்பின்மை குறித்தோ அக்கறையும் முனைப்பும் உள்ளவர்கள்தாமா? நம்முடைய குடியரசுத் தலைவர், துணைத்தலைவர், தலைமையமைச்சர், ஏனைய அரசு அலுவலர்கள் எல்லாம் புதுதில்லியில் பொதுமக்கள் கடைப்பிடிக்கும் தசரா விழா நடவடிக்கைகளில் பங்கு பெறுகின்றனர். அமைச்சர்களோ சாந்துகள், சாதுக்கள், ஆருடக்காரர்கள் பாபாக்கள், மாதாக்கள் ஆகியோரின் 'ஆசிர்வாதங்க'ளைப் பெற்று அவர்களின் அறிவுரைகளை ஏற்கின்றனர்.

தனிப்பட்டவர்கள் என்னும் முறையில் இவர்கள் இவ்வாறு நடந்து கொண்டால் நாம் பொருட்படுத்த மாட்டோம். ஆனால் இவர்கள் பெரிய பதவிகளைத் தாங்கி வரும் இருபாலர்களாக இருக்கும்போது, பகுத்தறிவு அல்லது மாந்த நேயம் அல்லது சமநிலை அல்லது சமயச் சார்பின்மை என்பதற்கு இது உகந்ததா?"

"இந்த 25 ஆண்டுகளில் அறிவியலின் பெயரால் மிகுதியான பொருள் செலவு பண்ணப்பட்டது. 22 கோடிப் பேர் இன்னும் வறுமைக் கோட்டிற்குக் கீழே உள்ளனர்! நம் நாட்டு அறிவியலாளர்களோ நம் மக்களிடையே அறிவியல் மனப்போக்கை உருவாக்கி வளர்த்தாரல்லர்.

அய்ரோப்பாவில் நடந்ததென்ன? அறிவியல் என்பது அங்கு மதம், இலக்கியம், வாழ்வியல் கோட்பாடுகள் ஆகியவற்றில் பெரும்பாதிப்பை விளைவித்தது! பகுத்தறிவு எழுச்சி என்பது அங்கே அறிவியலின் வெளிப்பாடாயிற்று. நாமோ இங்கு மரபின் அடிமைகளாகவே இப்போதும் இருக்கிறோம். ஏன்? மக்களை அறிவியல் மனப்போக்கில் பயிற்றுவிக்க வேண்டிய

அறிவியலாளர்களுக்கே அறிவியல் மனப்போக்கு கிடையாது. அவர்களே சோதிடர்களை அடிக்கடி நாடுகிறார்களே!" யூனிஸ் டி சூஸா என்பவரின் இக்கருத்து 1972 செப்டம்பர் 'மாடர்ன் ரேஷனலிஸ்ட்'டில் வெளியானது.

"சோதிடர்களின் கடும்பிடியிலிருந்து நம் மக்களை விடுவித்து அவர்களை அறிவியலாளர்களின் முன்னிலையில் நிறுத்த வேண்டியது நம் பெருங்கடமையாகும். மக்கள் உள்ளங்களிலிருந்து பொன் விளைக்கும் போலிக் கலைஞர்கள் வெளியேறி அங்கே அறிவியலாளர் குடியேற – புரோகிதனைப் புறந்தள்ளி விட்டு மாசு நீக்கும் ஆசிரியரை வரவிடுதற்கு – 'அற்புதம்' செய்வோனின் பாதிப்பை விரட்டி விட்டு, மருத்துவ அறிஞரை அமர்த்த – அறிவியல் மலரும் வண்ணம் மடமையுடன் போராடி வெல்வோம்!"

இது குவலயப் புகழ் மேவிய அறிஞர் அண்ணாவின் கூற்று. (மாடர்ன் ரேஷனலிஸ்ட்: 1972 ஏப்ரல்).

"பகுத்தறிவுக் குயில்" (The Rationalist Nightingale) என்னும் தலைப்பில் டார்ப்பீடோ ஏ.பி. ஜனார்த்தனம் அவர்கள் வரைந்த புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பற்றிய குறிப்புகள் 1972 ஜனவரி மாதத்திய 'த மாடர்ன் ரேஷனலிஸ்ட் இதழில் இடம் பெற்றன. அவற்றுள் சில:

"பாரதிதாசனின் புரட்சி வெறியார்வம் அவரைத் தந்தை பெரியாரின் தன்மான இயக்கத்தில் கொண்டு சேர்த்தது. அவரது புரட்சிப் பாக்கள் 'குடிஅரசு' ஏட்டிலும் 'விடுதலை' நாளிதழிலும் வெளியாயின. அவற்றிற்கு மக்களிடம் இருந்து நல்ல வரவேற்பு கிட்டியது. மாந்தப் பற்று பொங்கும் கிளர்ச்சிப் பாவலர் என்னும் முறையில் விட்மன், ஷெல்லி, மாயாகாவ்ஸ்கி, இக்பால் போன்றோரோடு வைத்து எண்ணப்பட்டார்' ஆங்கிலம், ஃப்ரெஞ்ச், ரஷிய மொழிகளில் அவரின் பாடல்கள் பெயர்க்கப்பட்டதால் உலக அறிஞர்களின் பாராட்டைப் பெற்றன. 'தமிழ் மறுமலர்ச்சியின் புரட்சிக் கவிஞர்' என அவர் நெடுங்காலம் நினைக்கப்படுவார்.

பெரியாரால் அவர் தன் மதிப்பு இயக்கத்தின் ஒப்பற்ற பாவலர் எனப் புகழப் பட்டார்! பன்னூறு பாக்களில் அவர் ஆரிய – திராவிட வாழ்வியல் வேறுபாடுகளை எடுத்துக் காட்டியதுடன், உயர்வுள்ளும் திருக்குறளும் கொலையைத் தூண்டும்

பகவத்கீதையும் எத்துணை முரண்பாடானவை என்பதைப் புலப்படுத்தினார். அவரின் படைப்புகளோ 'பொதுவுடைமை' யிலிருந்து கருத்தடை வரையிலுமான அத்தனை புதுப் பொருள்களையும் நம்முன் அவர் பொழிந்து தள்ளினார்.

அண்ணாவிலிருந்து அழகிரிசாமி வரையிலான அறிஞர்கள் மக்கட்கு எழுச்சியூட்டப் பாரதிதாசன் பாடல்களையே பயன்படுத்தினர். அவர் இன்று உயிர் வாழ்ந்திருப்பாரேயானால் அவர் தமிழகத்தின் அரசுப் புலவராக வீற்றிருப்பார்!

15-8-1973 அன்று இந்திய ஒன்றிய அரசின் தலைமையமைச்சர் இந்திராகாந்தி அம்மையாரால் இந்திய வரலாற்றின் முகாமையான செய்திகளின் பிரிவுகள் அடங்கிய காலப் பெட்டகம் ஒன்று புதைக்கப்பட்டது. அது பற்றிய அறிஞர் பத்ரிநாத் என்பவரின் கருத்துகள் 'மாடர்ன் ரேஷனலிஸ்ட்'டில் வெளியாயின. அவற்றுள் சில:

"காலப் பெட்டகத்தினுள் வைக்கப்பட்ட செய்திகளில் பெரும்பாலானவை மெய்யல்லாதவை. பஞ்சம் பற்றிய அச்சம் முற்றாக அகற்றப்பட்டு விட்டது எனும் பதிவு பொய்மின் ஓர் எடுத்துக்காட்டு.

பெரியார் எனப் பேரன்புடன் மக்களால் அழைக்கப்படும் திரு. இராமசாமி (நாயக்கர்) அவர்களின் மக்களாய இயக்கத்திற்குப் பெட்டகத்தில் இடங் கிடையாது. அவரையும் அவரின் பகுத்தறிவு இயக்கத்தையும் இருட்டடிப்புச் செய்தல் புதிய இந்தியாவின் தனிச்சிறப்புடைய வரலாற்றுக் கூறுகளில் ஒன்றை மறைப்பதேயாகும். குறிக்கத்தக்க செய்தியாதெனில் அவரின் இயக்கம் நாட்டின் எல்லாப் பகுதிகட்கும் பரவி, மக்களின் சிந்தனைப் போக்கில் ஆழமான பாதிப்பை விளைவித்து விட்டுள்ளது என்பதே.

அவரின் நடவடிக்கைகள் பற்றிக் கருத்து வேறுபாடுகள் இருக்க முடியுமென்றாலும், இருபதாம் நூற்றாண்டு இந்தியாவின் மாபெரும் செம்மையான கண்டனக் குரலாளர் என்பதில் அய்யமே இல்லை. எனவே காலப்பெட்டகம் வரலாறன்று; முன் முடிவான தவறிழைப்பு!" ('த மாடர்ன் ரேஷனலிஸ்ட்': 1973 நவம்பர்).

குடியாட்சி என்னும் பெயரில் நடக்கும் கட்சியாட்சி முறையில் எத்தகைய வரலாற்றுப் பிழை நடந்து விட வாய்ப்பிருக்கிறது என்பதற்கு இது சரியான சான்று.

**Book Review**

நூல் திறனாய்வு (Book Review) என்னும் பகுதியில் 'திருஞானசம்பந்தர்' எனும் திருவாரூர்த் தங்கராசு அவர்களின் நாடக நூல் பற்றிய 'பாலன்' என்பாரின் மதிப்பீடு 1973 டிசம்பர் மாத 'த மாடர்ன் ரேஷனலிஸ்:ட' இதழில் வெளியானது. "சிறு முதுக்குறைஞரின் மெய்யுரு திறந்து காட்டப்படுகிறது" (Child Prodigy Exposed) எனும் தலைப்பின் கீழ் அச்சேறியுள்ளவற்றில்,

> "முத்துப் பல்லக்கின் அறிமுகம், இளவரசியின் நோய் குணப்படுத்தப் பெறல், பாம்புக் கடியால் இறந்துபட்ட சடலத்திற்கு உயிரூட்டல், பொன் நிரம்பிய கிழிக்கொடை, கோவிற் கதவுகளைத் திறந்தமையும் மூடியமையும், பாண்டிய மன்னன் நோய்க்கு இலக்கானமையும் நோய் தீரப் பெற்றமையும், பனையோலைச் சுவடிகள் அனலாய்வுக்கும் புனலாய்வுக்கும் உட்படுத்தப்பட்டமை, புத்த நந்தி கொலையுண்ணல், திருவையாற்றுத் தெப்பக் குளத்தில் நிகழ்ந்த அப்பரின் கைலாயக் காட்சி, எலும்பு பெண்ணுருக் கொலை, சம்பந்தரே அனல்களம் புகுதல் முதலிய வியப்புகளும் விந்தைகளும் மிகவும் நுட்பமான முறையில் பொருத்தமாக வெளிக்காட்டப் பெறுகின்றன!" எனப் புகழ்கிறார் திறனாய்வாளர்.
>
> அத்துடன் "மிகவும் அரிய ஊடகத்தின் வழி அரும் முயற்சி மேற்கொண்ட நூலாசிரியரைப் பாராட்டும் வேளையில் இந்நூலை மேடை நாடகமாக்கிப் பரப்பி மேலும் உருப்படியான பயன் விளைவிக்க வேண்டும் என்னும் எம் விழைவினையும் புலப்படுத்துகின்றோம். கலையுலகுடன் நூலாசிரியர்க்கு உள்ள உறவும் பட்டறிவும் இத்தகைய துணிவான முயற்சிக்குத் துணை நிற்கும்"

என்பதாகத் திறனாய்வாளர் விருப்பம் தெரிவித்துள்ளார்.

அறிஞர் அம்பேத்கர் அவர்களின் கருத்துத் துளிகளைப் பெற்றிருந்தது 'த மாடர்ன் ரேஷனலிஸ்ட்'டின் முதலாம் இதழ். அதன் ஆழமான பொருள் கருதி, தமிழில் தருகிறேன்.

> "பார்ப்பனர்கள் ஏன் இதுவரை ஒரு வால்டேரை இங்கு உருவாக்கவில்லை? தனியொருவனுடைய தன்னல நாட்டம் நடப்பாகும் போது அவனது அறிவுத்திறனின் போக்கு அவன் சார்ந்துள்ள வகுப்பின் (அல்லது கொடிவழிக்குடி) ஓர் உள்ளார்ந்த வரையறைக்குட்பட்டே இயக்குவிக்கப்படுகிறது என்பது ஏற்றுக் கொள்ளப்பட வேண்டிய ஒன்றாகும்.

பார்ப்பனர் உடைமையாக்கிக் கொண்டுள்ள அதிகாரமும் மதிப்பு நிலையும் முழுக்க முழுக்க ஹிந்து நாகரிகம் அவர்களுக்காகப் படைத்துத் தந்தவையே. அந்த ஹிந்துப் பண்பாடுதான் அவர்களை மேன்மக்களாக்கி வைத்தது. அதே ஹிந்துக் கொள்கைகள்தாம் கீழ் வகுப்பினர் என்பார்க்கு எத்தனை முடியுமோ அத்தனை இயலாமைகளைப் பரிசளித்தவையாகும். எனவேதான் கீழோர் என்பார் மேலோர் என்பார்க்கு எதிர்ப்பாக எழுந்து பார்ப்பனர் தம் மேலாண்மைக்கு அச்சுறுத்தலோ அறைகூவலோ விடமுடியாத வண்ணம் அடக்கி வைக்க முடிந்தது.

பிறகெப்படி பார்ப்பனர் தங்களை வால்டேராக்கிக் கொள்ள மனந்துணிவர்? பார்ப்பனரிடமே வால்டேர் ஒருவர் முளைத்து விட்டால் தங்களின் மேலாண்மையை உறுதிப்படுத்தும் ஓர் அருமையான நாகரிகத்தை யொழிக்கவல்ல பேரிடராக வாய்த்து விடும் என்பதை அவர்கள் புரிந்து வைத்திருப்பவர்கள். குறிப்பான செய்தி யாதெனில் பார்ப்பனக் கல்விமான் ஒருவனின் அறிவுப் புலன் தன்னுடைய நலன்களைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்னும் அளவிற்குக் கடுமையாகக் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது என்பதே. தன்னுடைய வகுப்பின் நலன்கள் பாதிக்கப்பட்டு அதன் விளைவாகத் தன்னுடைய நலன்களே பாதிப்பிற்குள்ளாகி விடும் எனப் பார்ப்பனன் அஞ்சுகிறான்"

அம்பேத்கரின் பகுத்தாய்வு எத்துணை ஆழமானது!

ஆங்கிலப் புலமை நிரம்பிய தூயதமிழ்ப் பாவலர் ம. இ. லெனின் தங்கப்பா யாத்த 'The Acharya' எனும் தலைப்பில் சங்கராச்சாரி பற்றிய ஆங்கிலப் பாடலொன்று 'த மாடர்ன் ரேஷனலிஸ்ட்' (1973 ஃபெப்ருவரி) இதழில் இடம் பெற்றது. இதோ அதன் தமிழாக்கம்:

" மெய்மம் மெய்மமாய்ப் புகட்டும் மேதகை!
அனைத்தும் கடந்த உண்மைகளை அடடா,
அள்ளி வழங்கிடும் அருள்மிகு ஆசார்யன்!
கோவில் எழுந்த தெப்படி? ஆங்கு
எண்ணத் தொலையா வெண்கலக் கடவுளர்
பொன்னும் வைரமும் பலகோடி மதிப்பில்
பூணலேன்? என்றிவை புரிய விரிப்பவர்!
பலகோடிக் கணக்கில் பஞ்சையர் அரைகுறைப்
பட்டினி வாழ்வைச் சுவைக்க – அவர்கள்
ஈன நேர்ந்த குழவிகள், தாய்மார்

*வற்றிய மார்புகள் பற்றியே வெற்றாய்*
*உறிஞ்சி யுறிஞ்சி ஓய்ந்திடும் நாட்டில்*
*வான்மழை பொய்க்க, உடற்றும் உறுபசி*
*சுற்றுலா மேற்கொளும் சூழ்நிலை இருக்கையில்,*
*அதோ நோக்குமின், ஆசார் யாவை!*
*போலிப் பிரிவைப் பொழிந்து மக்களை*
*உடன் வரு மாறு ஓங்கி அழைக்கிறார்.*
*உடல்வளைந் தவரின் தாள்களைத் தொழுது*
*வேள்விப் பொருள்கள் உதவிட வேண்டுமாம்.*
*உண்ணற் குரிய எண்ணெய் நெய்வகை*
*இன்னும் அரிசி கொட்டித் தீர்த்தால்*
*கடவுட் குடும்பம் கடுகியே இறங்கி*
*மாந்தரின் பசியை ஓட்டுமாம் விரட்டியே!"*

தமிழாக்கம் செய்து தரப்பட்ட இப்பாடலின் ஆங்கில மூலம் அறிவுக்கும் உணர்ச்சிக்கும் சிறந்த விருந்து! இதைப் போன்ற தேவைமிக்க பல பாடல்கள் பலராலும் படைக்கப்பட்டு, 'த மாடர்ன் ரேஷனலிஸ்ட்'டின் ஏற்பிசைவைப் பெற்றுள்ளன.

### கருத்துப்படங்கள்

இவ்வேட்டின் தனித்தன்மை யொன்று இங்கு குறிக்கப்படல் வேண்டும். ஒவ்வோர் இதழிலும் ஆங்காங்கே கருத்துப் படங்கள் (Cartoons) அச்சேறியுள்ளன. அத்தனையும் பகுத்தறிவுக் கண்ணோட்டங் கொண்டவை. ஆங்கில ஏடு எதிலும் இத்தனை கருத்து விளக்க - அங்கதப் படங்கள் இடம் பெறுவதில்லை. இதழாளர் பெரியார் இதில் அத்துணை அக்கறை செலுத்தியுள்ளார். அய்யா அவர்கள் மறையும் வரையிலும் - அதாவது இதழ் தொடங்கிய 1971 செம்படம்பரிலிருந்து 1973 டிசம்பர் வரையிலான மாதங்களில் - வெளியான 'த மாடர்ன் ரேஷனலிஸ்ட்' இதழ்களில் மட்டும் 111 கருத்து விளக்கப் படங்கள் இடம் பெற்றன எனும் உண்மை வியப்பூட்டுவதே! படங்கள் கிறுக்கல் முறையில் அமைந்திருந்தாலும் மதவெறியர்களை கிறுகிறுக்க வைப்பவை!

இத்தகைய சிறப்புக்குரிய இவ்விதழ் இன்று வரையிலும் தொடர்ந்து உலைவின்றி உருற்றும் அதே வீரமணியவர்களை ஆசிரியராகக் கொண்டு, பெரிய அளவில் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாக, மன்பதையெங்கும் பெரியாரியல் பரப்பி இசைமேவி வருகின்றது.

# அறிந்து கொள்ளத் தகும் செய்திகள்

பெரியாரால் நடத்தப் பெற்ற இதழ்களின் வாயிலாக நாம் அறிந்து கொள்ளத் தக்க அருமையும் சுவையும் ஆர்வத் தூண்டலும் வாய்ந்த செய்திகள் நூற்றுக் கணக்கில் இருக்கின்றன. பயன்பாட்டுக் கண்ணோட்டத்தில் அவற்றில் ஒரு சிலவற்றை மட்டும் பதிவு செய்கிறேன்.

செங்கற்பட்டில் முதலாம் (மாநில) சுயமரியாதை மாநாடு விடிய விடிய நடந்து புதிய வரலாறு படைத்தது. இரண்டு நாள்கள் நிகழ்ந்த மாநாட்டு நடவடிக்கைகள் இரவிலும் தொடர்ந்து நீடிக்க நேர்ந்த நிலையில், மூன்றாம் நாள் காலை 5.00 மணிக்குப் பட்டுக்கோட்டை அழகிரியவர்கள் இறுதியாகப் பொழிவாற்றினார்! (குடி அரசு: 24-2-1929).

சென்னைக் கடற்கரையில் இந்தி எதிர்ப்புப் படைகளை வரவேற்பதற்கென நடந்த கூட்டம் இரவு 1 மணிக்கு அப்பாலும் நீடித்து, நாட்டிலேயே முதன் முறையாக நிகழ்ந்த நெடுநேரப் பொதுக்கூட்டம் என்னும் வரலாற்றுச் சிறப்பினைப் பதிவு பண்ணிக் கொண்டது. (விடுதலை: 12-9-1938).

ஆயிரம் விளக்குப் பகுதியில் நடைபெற்ற இயக்கப் பொதுக்கூட்டத்தின் போது குறிப்பிட்ட நேரத்திற்குப் பின்னர் ஒலிபெருக்கியைப் பயன்படுத்தக் காவல்துறை தடைபோட, பெரியார் தம் உரையை நிறுத்த மறுத்து, தொண்டையும் வயிறும் வலிக்க வலிக்க இரண்டு மணிநேரம் இராமாயணக் கண்டனப் பொழிவு நிகழ்த்தினார். (விடுதலை: 1954).

ஏனைய உரைப்பொழிவாளர்களைக் காட்டிலும் நீண்ட நேரம் மக்களிடையே பேசும் ஆற்றல் படைத்திருந்த பெரியார் ஒரு முறை 4½ மணி நேரம் பேச நேரிட்டது. 8-9-1956 அன்று மயிலாடுதுறையில் நடந்த கழகக் கூட்டத்தில் இரவு 7 மணிக்குப் பேசத் தொடங்கிய அய்யா இரவு 11.30 மணிக்குத்தான் தம் உரையை நிறைவு செய்தார்! (விடுதலை பொன்விழா மலர்: பக்கம் 7).

காஞ்சிபுரத்தில் தந்தை பெரியாரின் மேற்பார்வையில் 3 மணிநேரத்திற்கும் அதிகமாக நீடித்த 'சந்திரோதயம்' (பேரறிஞர் அண்ணாவின் படைப்பு) நாடக ஒத்திகையில் அண்ணா ஈழத்தடிகள் முதலியோர் பங்கு பெற்றனர். (விடுதலை: 27-4-1943)

காரைக்குடியில் 19-3-1972 அன்றிரவு முனைவர் பெ. செகதீசன் அவர்களின் படைப்பாகிய 'தீ பரவட்டும்!' என்னும் கொள்கை விளக்க நாடகம் கழக முன்னோடிகளால் நடிக்கப்பட்டபோது, திறந்த வெளியில் பொதுமக்களிடையே 3 மணிநேரம் அமர்ந்து அதைக் கண்டு சுவைத்தார் பெரியார். (விடுதலை: 24-4-1972).

1930இல் ஈரோட்டில் நடந்த இரண்டாம் (மாநில) சுயமரியாதை மாநாட்டின் போது சங்கீத மாநாடு என்று ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டு, பார்ப்பனரல்லா இசைக்கலைஞர்கள் பெருமைப்படுத்தப் பெற்றனர். (குடிஅரசு: 25-5-1930)

'பிராமணரல்லாத சங்கீத வித்வான்கள்' எனும் தலைப்பின் கீழ், 'குடியரசு' ஏட்டில் பார்ப்பனரல்லா இசைக்கலைஞர்களின் நீண்ட பட்டியல் வெளியிடப்பட்டது. (குடிஅரசு: 20-4-1930).

13-9-1942 அன்று எம்.என். வேலுசாமி எனும் இசைக்கலைஞரின் தமிழிசை வாய்ப்பாட்டு நிகழ்ச்சி யொன்று ஏற்பாடு செய்யப்பட்டு, முற்றிலும் சுயமரியாதை - தமிழுணர்வுப் பாடல்களே இடம் பெற்ற உருப்படியான எடுத்துக்காட்டான தமிழிசைக் கச்சேரியாக அது நிறைவேற்றம் பெற்றது. (குடிஅரசு: 26-9-1942).

திராவிட நடிகர் கழகம் எனும் ஓர் அமைப்பு பெரியார் முயற்சியில் ஈரோட்டில் நிறுவப்பட்டது. (குடிஅரசு: 24-1-1939).

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் அரசியல் தலைவர்கள் பொதுக்கூட்டங்களுக்கோ மாநாடுகளுக்கோ தத்தம் மனைவிமார்களை அழைத்துச் செல்லக் கூடிய அளவிற்கு மனப்பாங்கு கொண்டவர்களாகப் பெரும்பாலும் இருக்கவில்லை. அக்கட்டத்தில் பெரியார் தம் துணைவி நாகம்மையாரை வடபுலப்பகுதிகளிலே நடந்த 'காங்ரஸ்' மாநாடுகளுக்கு அழைத்துப் போகும் பண்பாட்டைப் பெற்றிருந்தார். அதன் பயனாய் அனைத்திந்தியப் பேராயத்தின் செயற்குழு உறுப்பினராக நாகம்மையார் தெரிந்தெடுக்கப்பட்டார்! (கவிஞர் கருணானந்தத்தின் "தந்தை பெரியார்" வாழ்க்கை வரலாறு பக். 61) பெரியாரின் உள்ள உறுதிப்பாட்டிற்கு அவர் பேராயத்தில் (காங்கிரசில்) தம்மை இணைத்துக் கொண்டவுடன் வெற்றிலை மெல்லுதல், புகைப்பிடித்தல் முதலிய தேவையற்ற - தீங்கு பயக்கின்ற - பழக்கங்களை ஒரே நொடியில் துறந்து விட்டமை தக்க சான்றாய் நிற்கிறது! (சாமி சிதம்பரனாரின் 'தமிழர் தலைவர் நூல் - பக். 83)

சுயமரியாதை இயக்கத் தோற்றத்திற்கு முன்னரெல்லாம் கப்பலோட்டிய தமிழர் வ.உ.சி. அவர்களை, "வாடா சிதம்பரம்!" என விளித்துப் பேசிக்கொண்டிருந்த 'இந்து' இதழ் - கஸ்தூரிரங்க அய்யங்கார், தன் மதிப்பு (சுயமரியாதை) இயக்க நடவடிக்கைகளுக்குப் பின்னர் "வாங்கோ சிதம்பரம் பிள்ளைவாள்!" என அழைக்கும் பழக்கத்தை மேற்கொண்டார்!

ஆதி திராவிடர் குழந்தைகளைச் சேர்க்காமலேயே நடத்தப் பட்டு வந்த காஞ்சிபுரம் சங்கர மடத்துப் பள்ளியின் ஏற்பிசைவைத் (Recognition) திரும்பப் பெற்ற தமிழக அரசு பள்ளியை மூடுமாறு செய்தது! (குடிஅரசு: 3-11-1929).

அய்யாவின் பொய்யாமைக்கும் நேர்மைக்கும் சான்று கூறும் சுவையான நிகழ்வு ஒன்று. அவரின் இளமைக்காலத்தில் போலிக் கையொப்பமிட்டு (Forgery) ஏமாற்றினார் என்னும் குற்றத்திற்கு இலக்காகி வெள்ளைக்கார நடுவர்முன் நிறுத்தப்பட்ட போது, தம் தந்தையின் கையொப்பத்தைத் தாமே கையொப்பமிட்டிருப்பதாகவும் தீர்ப்பு மன்றத்தில் அவர் வெளிப்படுத்தியமை அனைவரையும் தூக்கிவாரிப் போட்டது! வியப்பு மேலிட்ட வெள்ளைக்காரத் தீர்ப்பாளர் காரணம் கேட்க, படிப்பறிவற்ற தம் தந்தை நடுங்கும் விரல்களால் கையொப்பமிட நெடுநேரம் பிடிக்கும் எனவும், அச்சூழ்நிலையில் அவரின் கையொப்பத்தைத் தாம் போடப் பயின்று தந்தையின் விருப்பப்படியே அவரின் இசைவோடு யாவரும் அறியத் தாம் அவரின் கையொப்பத்தை இட்டு வருவதாயும் எவ்வகைத் தயக்கமுமின்றி விளக்கினார் பெரியார்.

இவரின் கூற்றில் புதைந்திருந்த கரவற்ற நேர்மையையும் அவரின் செயலால் தீங்கெதுவும் விளையாத நிலவரத்தையும் ஆழமாய்க் கருதிப் பார்த்த வெள்ளைக்கார நடுவர் சட்டச் சொற்களையே சார்ந்து தீர்ப்பளியாது, சட்டத்தின் அடிப்படையான உட்பொருளை நுணுகியுணர்ந்தவராய் வழக்கைத் தள்ளுபடி செய்தார். (கருணானந்தத்தின் தந்தை பெரியார்: ப. 23)

சென்னை - சட்டக்கல்லூரித் தமிழ்ப் பேரவையில் அறிவுரை யாற்றுமாறு பெரியார் அழைக்கப்பட்டார். அந்த நிகழ்ச்சிக்குத் தலைமையேற்று, அய்யாவை வியந்து பாராட்டிப் பேசிய பெருமகன் யார் தெரியுமா? 'உயர்நீதிமன்ற அவமதிப்பு' வழக்கில் பெரியாருக்குத் தண்டனை வழங்கித் தீர்ப்பளித்த ஏ.எஸ்.பி. அய்யர் தான்! (விடுதலை: 1-2-1966).

"குடிக்கணக்குப் பதிவின்போது நாத்திகர் என்றே சொல்லுங்கள்" எனப் பெரியார் அறிக்கையிட்டமைக்குப் பலன் இருந்தது. தமிழகத்தில் 14, 358 பேர் தங்களை நாத்திகர் எனப் பதிவு செய்திருந்தனர்!

கடவுள், சாதிமதம், ஜனநாயகம் ஆகிய மூன்று 'பேய்கள்' விரட்டியடிக்கப்பட வேண்டும் என்றும், பார்ப்பான், பத்திரிகை, அரசியல் கட்சி, தேர்தல், சினிமா ஆகிய அய்ந்து நோய்கள் ஒழிக்கப்பட வேண்டுமென்றும் பெரியார் அறிவித்தார். (விடுதலை: 19-5-1962).

இந்திய யூனியன் பட எரிப்பில் பங்காற்றி, மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வாய்ப்பளிக்கப்பட்டதை மறுத்து, இரண்டாண்டுச் சிறைத்தண்டனையை ஏற்று, சிறுவர் சீர்திருத்தப் பள்ளியில் பயின்று, விடுதலை அளிக்கப்பட்டு வெளிவந்த வீர விடலை நாகராசனுக்கு மாபெரும் வரவேற்பு விழா எடுத்து, அப்பூட்கையனின் மன்னிப்புக் கோராத மாண்பினைப் பாராட்டிப் புகழ்ந்தார் அய்யா! (விடுதலை: 13-8-1962).

சென்னை உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி இராமச்சந்திர அய்யர் தனது பிறந்த நாளாகப் பொய்யான நாள் தாக்கல் செய்து தன் பதவி நீட்டிப்புக்கு வழி செய்து கொண்ட நாணயக் கேடான -நாணமிழந்த - புரட்டினைப் பெரியார் வெளியாக்கி அரசிடம் ஞாயம் கேட்டார்! (விடுதலை: 19-4-1964)

'வைக்கம் வீரர்' பெரியாரைக் கேரள நாடு அழைத்து, டி.கே. மாதவன் நினைவுக் கல்லூரிக் கட்டடத்திற்கான அடிக்கல் நாட்டுமாறு செய்து நன்றி பாராட்டிக் கொண்டாடியது! (விடுதலை: 1965).

நெல்லை நகரமன்றம் பெரியாரைப் பெருமைப்படுத்தும் முறையில் அவருக்கு வரவேற்பு நிகழ்ச்சி நடத்தியபோது, குடியாட்சி முறையின் சின்னமான நகர மன்றத்திலேயே, "நம் மக்கள் இன்னும் ஜனநாயகத்திற்குத் தயாராக வில்லை" என அறைந்தார்! (விடுதலை: 16-5-1965).

கடவுள் மறுப்பு இலக்கணமான, "கடவுள் இல்லை; கடவுள் இல்லை; கடவுள் இல்லவே இல்லை. கடவுளைக் கற்பித்தவன் முட்டாள். கடவுளைப் பரப்பியவன் அயோக்கியன். கடவுளை வணங்குகிறவன் காட்டுமிராண்டி" என்னும் சொற்றொடர்களை விடையபுரம் எனும் ஊரில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பயிற்சி வகுப்பில் அறிமுகம் செய்தார் அய்யா (விடுதலை: 6-6-1967).

ஒரே நாளில் 28 நிகழ்ச்சிகளில் பங்கேற்றுப் பெரியார் கடமையாற்றினார். (விடுதலை: 29-8-1958)

சுயமரியாதை இயக்கக் கொள்கைகளின் ஞாயத்தின் தாக்கத்தினால் பக்கத்து மாநிலமாகிய கேரளாவைச் சேர்ந்த சிந்திக்கும் திறன் படைத்த சீர்திருத்த நோக்கங் கொண்ட நம்பூதிரி இளைஞர்கள் பலர் ஒன்று கூடி யாவரும் அறியும் வண்ணம் தங்களின் பூணூல்களை அறுத்தெறிந்தனர் (குடிஅரசு: 6-4-1930).

தந்தை பெரியாருடன் முதன் முறையாக மலேசிய நாட்டுச் சுற்றுப் பயணம் மேற்கொண்ட அன்னை நாகம்மையாரிடம் நினைவுப் பொருள்கள் அன்புப் பரிசாக அளிக்க இயக்கத்தினர் விரும்பியபோது "உங்கள் மதிப்பற்ற அன்பே சிறந்த பரிசு" எனக் கூறிவிட்டார்! (குடிஅரசு: 11-2-1933).

எட்டணாவுக்குத் திருக்குறள் (மூலநூல்) 'திராவிடன் பதிப்பகம், 14, மவுண்ட் ரோட், சென்னை' என்னும் முகவரியில் கிடைக்குமாறு ஏற்பாடு செய்யப்பட்டது. (குடிஅரசு: 24-12-1929).

அதுபோன்றே "1953 சனவரி வாக்கில் திருக்குறள் மலிவுப் பதிப்புக் கிடைக்கும்" என்று விளம்பரம் செய்தார் பெரியார்.

1953 இல் "170 பக்கமுள்ள "பாக்கெட் சைஸ்' திருக்குறள் புத்தகம் திராவிடன் அச்சகத்தில் பதிப்பித்தது. விலை அணா 6. தேவை உள்ளோர் முந்திக் கொள்ளவும்" என்னும் விளம்பரம் விடுதலை செயலகம் எனும் பெயரில் வெளியானது. (விட. 7-1-1953). பத்து நாள் சென்று 'குறிப்பு' எனப் போட்டு 'விடுதலை'யில் வெளிவந்த விளம்பரம் புதிய செய்தியொன்றை அறிவித்தது. "நேற்று வரையில் விளம்பரத்தில் 'குறள்' விலை 6 அணா என்று போடப்பட்டிருந்தது. பிறகு கொள்முதல் பார்த்ததில் விலையில் சிறிது குறைக்கலாம் என்று தெரிய வந்தது. ஆகவே விலையை இப்போது 5 அணாவாகக் குறைத்திருக்றோம். 5 அணாவுக்குத்தான் ஏஜண்டுகள் விற்க வேண்டும்" என்பதே அது. சான்றாண்மை நிரம்பிய இவ்விந்தைச் செய்தி, பெரியார் எத்துணை சிறந்த இதழாளர் என்பதாக நம்மை மலைக்க வைக்கிறது!

திருக்குறள் நூலில் எண்பத்தியிரண்டு மூடநம்பிக்கைச் சொற்கள் இருப்பதாகப் பட்டியலிட்டுக் காட்டினார் அய்யா! (விடுதலை: 4-10-1967).

வைக்கம் போட்டத்தின் போது சிறையில் கால்விலங்கு போடப்பட்ட நிலையில் கல் உடைக்கும் கடுங்காவல் கடமையைச்

செய்தார் என்பதுடன், திருவாங்கூர் அரசின் ஏற்பாட்டின்படி அருவிக்குத்திச் சிறைக்குக் கொண்டு செல்லப்பட்ட போது புயல் தாக்கத்திற்கு அவர் பயணம் செய்த படகு இலக்காகித் தத்தளிக்க, உறுதியோடு அதை எதிர் கொண்டு உயிர் தப்பினார்! ('தமிழர் தலைவர்' - பக்கம் 51).

"தாளமுத்துவும் நடராசனும் இறந்து பட்டது ஏன்?" எனச் சட்டப் பேரவையில் வினா எழுப்பட்ட போது, "இருவரும் படிப்பறிவில்லாப் பாமரர்கள்; எனவே செத்தார்கள்" என விடையிறுத்த முதல்வர் இராஜகோபாலாச்சாரி, "தற்குறிகளாக இருந்தமையால்தான் அவர்கள் இந்தி எதிர்ப்பு மறியலில் ஈடுபட்டு, சிறையில் தள்ளப்பட்டு, அங்கு இறக்க நேரிட்டது" என விளக்கம் தந்தார். ஆனால் நடராசன் படித்தமைக்கான பள்ளிச் சான்றிதழை அவரின் தந்தை உடனே வெளியாக்கினார்.

முதலாம் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் போது காலை மறியலில் பங்கு பற்றி, தளை செய்யப்பட்டு, சென்னை மாநகரத் தீர்ப்பாளரால் அபராதங் கட்டுமாறு ஆணையிடப்பட்ட ராமதாஸ், இராமசாமி, குஞ்சிதபாதம் ஆகிய மூன்று பட்டுக்கோட்டைத் தோழர்களும் ஒறுப்புத் தொகைகளை (ரூ. 150; ரூ. 50) உடனே கட்டிவிட்டு, அன்று மாலையில் நடந்த மறியலில் மீண்டும் கலந்து கொண்டு சிறைப்பட்டனர்! (விடுதலை: 29-10-1939).

ஈரோடு நகராட்சித் தலைவர் எனும் நிலையில் பிராமணாள்-சூத்திராள் வேறுபாடு காட்டும் உணவுக் கடைகளுக்கு உரிமம் கிடையாது என்பதாகப் பெரியார் சுற்றறிக்கை அனுப்பியபோது அவ்வாறு ஆணையிட நகராட்சிக்கு உரிமையில்லை என அன்று ஆண்ட அரசு கூறிவிட்டது! (விடுதலை: 28-4-1957).

போராட்டத்தில் பங்கேற்ற எனும் கழக வீரருக்கு அவரின் தந்தை கொடுத்த ஊக்கவுரை என்ன, தெரியுமா? "எந்தச் சூழ்நிலையிலும் மன்னிப்புக் கோரி மடல் தரும் கோழைத் தனம் நம் இயக்க வரலாற்றில் என்றும் கிடையாது!" என்பதே.

தேவநேயப் பாவாணரின் 'ஒப்பியன் மொழி நூல்' வெளிவந்த போது மொத்தமாக அப்படிகள் பலவற்றை வாங்கி, சந்தாதாரர்களுக்குப் பாதி விலையில் (ரூ. 1.80) கொடுத்துப் படிக்கத் தூண்டினார் அய்யா! (விடுதலை: 30-4-1943).

தெலுங்கானா தனிமாநிலக்கோரிக்கைப் போராட்டத்தில் 12 இளைஞர்களைத் தூக்கிவிடுமாறு தீர்ப்பு மன்றம் இட்ட

கட்டளையைக் கைவிடுமாறு 'விடுதலை' ஆசிரியவுரை எழுதி வேண்டுகோள் வைக்க, சில காலஞ் சென்று தூக்கு நிறுத்தப்பட்டு, இளைஞர் உயிர் பிழைத்தனர்!

சோவியத் தலைவர் ஜோசப் ஸ்டாலின் மறைவுச் செய்தி அறிந்த பெரியார் 'இமயமலை சாய்ந்ததா?' என்றெழுதித் தம் ஆழ்ந்த இரங்கலைப் புலப்படுத்தினார் (விடுதலை: *6-3-1953*)

அனைத்திந்தியப் பேராயச் (காங்கிரசு) செயற்குழு உறுப்பினராகக் காமராசரை அமர்த்தத் தவறிய அக்கட்சி மேலிடத்தை 'விடுதலை' கண்டனம் செய்தது (விடுதலை: *17-2-1953*)

'பிள்ளையார்' உடைப்புக் கிளர்ச்சியின் போது பெரியாரின் கொடும்பாவியைக் கொளுத்தவும் அவரின் உருவத்தை உடைக்கவும் மாற்றார் சிலர் அறிவித்தபோது, "என் படமும் அதைக் கொளுத்தப் பணமும் நானே தருகிறேன், வாருங்கள்" எனப் பெரியார் அழைப்பு விடுத்தார்! (விடுதலை: *27-5-1953*).

ஒரு முறை கரந்தை இடுகாட்டிற்கு அய்யா சென்றபோது அங்கு 'சூத்திரர்கள் இடம்' என்பதாகக் கல்லொன்று நட்டு வைக்கப்பட்டிருந்ததைக் கண்ணுற்று, முறையான நடவடிக்கை மேற்கொண்டு அதை அகற்றினார். (விடுதலை: *28-3-1955*).

தமிழ்நாட்டுக் கோவில்களில் தமிழில் வழிபாடுகள் இருக்க வேண்டுமெனப் பெரியார் கிளர்ந்தெழுந்தபோது, "நாத்திகர்கள் இது தொடர்பாக நடவடிக்கை மேற்கொள்ளுதல் பொருந்துமா?" எனக் குன்றக்குடி அடிகளார் அய்யம் வெளியிட, தமிழனின் தன்மானம் தமிழ்மொழியின் தன்மானம்" காக்கப்பட வேண்டுமென்பதே தம் குறிக்கோள் எனத் தெளிவுபடுத்தினார் பெரியார். (விடுதலை: *26-12-1956*).

'தட்சிணப்பிரதேசம்' எனும் தென்னிந்திய ஆட்சி முறை யொன்றனை அமைக்கத் திட்டமிட்ட இந்திய அரசியல் முன்னோடிகள், அதுபற்றி இறுதி முடிவெடுக்க *1,2-2-1956*ஆம் நாள்களில் பெங்களூரில் கூடியபோது அத்திட்டத்தில் அடங்கிய சூதினையும் சூழ்ச்சியையும் ஆழமாகப் புரிந்து கொண்ட பெரியார், *"தமிழர்க்கு வாழ்வா? சாவா? உங்கட்குத் தற்கொலை! முன்கண்டிராத கிளர்ச்சி நேரிடும்! தமிழ்நாட்டைக் காப்பாற்ற வேண்டுகிறேன்!"* எனத் தமிழக முதல்வர் காமராசருக்குத் தொலைவரி யொன்று கொடுத்தார். அதன் படியொன்று நேருவுக்கு அனுப்பப்பட்டது. திட்டம் கைவிடப்பட்டது. (விடுதலை: *1-2-1956*)

அரசமைப்புச் சட்டத்தை எரிக்கும் கிளர்ச்சிமுறை "Childish Non-sense" எனப் பெரியாரைக் கொச்சைப் படுத்திய இந்தியத் தலைமையமைச்சர் நேரு 6-1-1958 அன்று சென்னை வந்த போது, நேருவே கலக்கம் கொள்ளும் அளவிற்கு, "Go back Nehru!" என்னும் கருப்புக்கொடி ஆர்ப்பாட்டம் நடத்திய திராவிட முன்னேற்றக் கழகம் இரண்டு தொண்டர்களைக் களச்சாவுக்கு இலக்கு ஆக்கியது! (விடுதலை: 7-1-1958).

பெரியாரின் 'இராமாயணப் பாத்திரங்கள்' என்னும் ஆய்வு நூலின் இந்தி மொழிபெயர்ப்பின் படிகளை உத்தரப்பிரதேச மாநில அரசு பறிமுதல் செய்த நடவடிக்கை செல்லாது என உத்தரப்பிரதேச உயர்முறைமன்றம் தீர்ப்பளித்தது.

கருநாடக மாநிலத்தில் குடுமி வைத்துக் கொள்ள மறுத்து விட்ட மாணவர் ஒருவர் உணவு விடுதிக்குள் நுழைவு கிட்டவில்லை எனும் நிகழ்ச்சியைக் கருநாடகச் சட்டப் பேரவையில் குறிப்பிட்ட எஸ்.எம். சந்திரசேகர் எனும் உறுப்பினர், "தமிழ்நாட்டுப் பெரியார் இங்கேயும் தோன்றவேண்டும். நம் மாநிலத்தின் ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு பெரியார் தேவை!" என்பதாக ஆரவாரித்தார். (விடுதலை: 23-7-1972).

"பெரியார் சிலைகளின் பீடங்களில் இடம் பெறும் கடவுள் மறுப்புச் சொற்றொடர்கள் நம்பிக்கையாளர்களின் உணர்வுகளைப் புண்படுத்துவதால் அவை நீக்கப் பெறும் வண்ணம் ஆணையிடப் படவேண்டும்" எனச் சென்னை உயர்முறை மன்றத்தில் முறையீடு செய்யப்பட்ட போது, நயன்மையாளர் மாண்புமிகு எம்.எம். இஸ்மாயில், "எழுப்பப்படும் படிமத்திற்குரிவரின் கருத்துகள் பொறிக்கப்படுவதில் தவறேதும் இல்லை" எனக் கருத்து வெளியிட்டு, வழக்கைத் தள்ளுபடி செய்தார். (விடுதலை: 11-10-1973).

'மெட்ராஸ் ஸ்டேட்' என நம் தாயகம் அழைக்கப்பட்டு வந்த விந்தைநிலை ஒழிந்து போகும் வண்ணம் 18-7-1967 அன்று அண்ணா அவர்கள் "இனி இம்மாநிலம் தமிழிலும் ஆங்கிலத்திலும் 'தமிழ்நாடு' என்றே அழைக்கப்படும்" என்னும் தீர்மானத்தைச் சட்டப் பேரவையில் நிறைவேற்றினார். ஆங்கிலப் பெயர்ப்பில் 'U' எனும் எழுத்து விட்டுவிடப் படாமல், 'NADU' எனத் தீர்மானத்தில் பொறிக்கப்பட்டு விட்டதால் இன்று உலகம் முழுவதிலும் தமிழ்நாடு என்றே பலுக்கப்படுகிறது! (விடுதலை: 17-8-1967).

28-11-1967 அன்று இந்து திருமண (தமிழ்நாடு திருத்தச்) சட்டத்தை நிறைவேற்றிய தன் மூலம் அண்ணா அவர்கள் நாட்டில்

நடந்த சுயமரியாதை மணங்கள் அத்தனையையும் சட்டப்படி செல்லும் என உறுதிப் படுத்தினார்! (விடுதலை: 20-11-1967).

பள்ளி இறுதிப் பொதுத் தேர்வுக்கான தமிழகத் தமிழ்ப் பாடநூலில் மறைமலையடிகளாரின் 'தமிழ்த்தாய்' எனும் பாடல் இடம் பெற்றதை எதிர்த்து ஆரிய இனமே ஒருங்கு திரண்டபோது, பெரியார் தொடர்ந்து இருநாள்கள் ஆரியத்தைக் கண்டித்தும், தமிழக அரசை ஊக்குவித்தும் ஆசிரியவுரை வெளியிட்டார். (விடுதலை: 10, 11-7-1968).

'SECULAR' என்பது ஆங்கிலச் சொல். ஆங்கில அகர முதலிகள் மதச் சார்போ, மத உறவோ இல்லாத மதத்தை ஏலாத, மதத்தை மறுக்கின்ற என்றே பொருள் தருகின்றன. எனவே 'SECULAR STATE' என்பது மதத் தொடர்பற்ற ஆட்சிமுறை கொண்ட நாடு என்பதே சரியான விளக்கம். அவ்வாறுதான் உலகெங்கிலும் நடப்பு இருந்து வருகிறது. ஆனால் இந்தியாவிலோ வேடிக்கையான விளக்கம் தரப்படும் நிலை! அதுபற்றி பெரியார் ஏவிய கணை குறிப்பிடத்தக்கது.

'SECULAR' என்ற வார்த்தை இங்கிலீஷ் வார்த்தை. இதற்கு இங்கிலீஷ்காரன் சொல்லுகின்ற அர்த்தம்தானே சரியானது. மதசார்பற்ற என்றால் எல்லா மதத்தையும் அனுமதிப்பது என்றா பொருள்? ஒரு பெண் கன்னி என்றால் ஆண் சம்பந்தமே இல்லாதவள் என்பதல்ல; எல்லா ஆண்களையும் சமமாய் பாவிக்கிறவள் தான் என்று அர்த்தம் சொல்வது போல, செக்கூலர் ஸ்டேட்டுக்கு அர்த்தம் சொல்கிறார்களே" (விடுதலை: 29-7-1968)

இந்திய அரசின் அமைச்சர் வி.கே.ஆர்.வி.ராவ், தான் காஞ்சிபுரம் வரதராஜபெருமாள் கோவிலுக்குச் சென்றபோது தமிழக முதல்வர் அண்ணா அவர்களை உடன் வருமாறு அழைக்க, அண்ணா மறுத்துவிட்டார் என்னும் செய்தியை வெளியிட்டு அண்ணாவின் உறுதியினைப் பாராட்டினார்! (விடுதலை: 20-9-1967).

அறநிலையத்துறை பொறுப்பிலிருந்து நாவலர் நெடுஞ்செழியன் சிதம்பரம் நடராசர் கோயிலைப் பார்வையிடச் சென்ற போது தன்னிடம் வழங்கப்பட்ட திருநீற்றை இட்டுக்கொள்ளாது தவிர்த்து விட்ட செய்தியை அறிந்த பெரியார், 'பலே! நெடுஞ்செழியன்! பலே பலே நெடுஞ்செழியன்! எனப் பாராட்டி பெட்டிச் செய்தி வெளியிட்டார் (விடுதலை: 16-4-1967).

அரசு அலுவலகங்களில் எவ்வகை அதிகார இசைவுமின்றி மாட்டப்பட்டிருந்த கடவுளர் படங்கள் எல்லாவற்றையும்

அமைதியான முறையில் அகற்றிவிடுமாறு அரசு சுற்றறிக்கை அனுப்படுவதற்கு முதல்வர் அண்ணா ஏற்பாடு செய்த போது விளைந்த எதிர்ப்புகளை எதிர்கொள்ள 'அலுவலகங்களில் சாமிப்படம் வைத்தது யார்? கீழ்மட்ட சிப்பந்தி தானே?' எனப் பெரியார் எழுப்பிய அடிப்படையான கேள்வி நன்கு துணை நின்றது (விடுதலை: 29-4-1967).

சோவியத் ஒன்றியத்தின் கல்வி அமைச்சராகவிருந்த தோழர் காலின்ஸ், தான் எழுதிய நூல் ஒன்றினுயுடைய முன்னுரையில் 'தமிழ்நாட்டிலிருந்து வந்த ஒரு பெரிய தத்துவமேதை ஈ.வெ. ராமசாமி அவர்கள் சொல்லிய கருத்தின் அடிப்படையில் எழுதப்பட்ட நூல் இது' என்பதாகக் குறித்துள்ளார் (விடுதலை: 5-10-1984).

"ஏன்டி கீரை என்ன விலை?" என உயர் சாதி மக்கள் கேட்டகாட்சி, "ஏனம்மா கீரை விலை என்னம்மா?" என அதே உயர்ந்த சாதிக்காரர்கள் கேட்கும் காட்சி ஆகிய இரண்டு காட்சிகளையும் பார்த்துவிட்டதாகக் குறிப்பிட்ட தமிழறிஞர் முனைவர் இராசமாணிக்கனார் இம்மாற்றத்திற்குப் பெரியார்தான் காரணம் வெளிப்படையாகவே மேடையில் முழங்கினார்! (விடுதலை: 6-4-1958).

1940, 1942 ஆகிய இரண்டு ஆண்டுகளிலும் சென்னை ஆளுநரும், இந்தியத் துணைக்கண்டம் முழுவதையும் பிரித்தானிய அரசின் சார்பாக ஆண்டுகொண்டிருந்த அரச நிகராளரும் தமிழ் படைத்த பெரிய அரசியல் தலைவராகத் தாங்கள் கணித்த பெரியாரை இம்மாநில ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளுமாறு வற்புறுத்தியும், அவ்வாய்ப்புகளை மறுத்தொதுக்குவதில் உறுதியாக நின்றார் அவர்" (விடுதலை: 30-7-1940)

"மன்னார்குடி நகரவைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கிருஷ்ணன் சாம்பான் என்பாரைத் தோழர்கள் தங்கள் தோள்களின் மேல் ஏற்றிக் கொண்டு நகர்வலமாக வந்து அவர்களின் இருக்கையில் அமர்த்தினர்" (குடியரசு:)

காந்தியார் மதவெறியர்களால் கொலையுண்டபோது பெருங்கலக்கத்திற்கு இலக்கான பெரியார், இந்நாட்டிற்கு 'காந்திதேசம்' எனப் பெயர் சூட்டுமாறு அறிக்கையிட்டார் (விடுதலை:9-2-1948).

"12-4-1949 ஆம் நாளை குறள் நாளாகக் கொண்டாடுங்கள்!" என்பதாகப் பெரியார் அறிக்கையிட்டார் (குடியரசு: 9-4-1949).

பெரியார்-மணியம்மையார் திருமண ஏற்பாட்டின் போது, தம்மைக் கொன்றுவிடச் சூழ்ச்சிகள் நடப்பதாகப் பெரியார் அறிக்கை விட, அவ்வறிக்கை தங்களைக் குறிப்பதன்று என்பதைத் தெளிவுப்படுத்த வேண்டும் என அண்ணாவும் சம்பத்தும் பெரியாரின் மீது வழக்குத் தொடுக்க, அவ்வண்ணமே பெரியார் வழக்கு மன்றத்தில் நேரில் தெளிவுறுத்தினார்! (விடுதலை: 13-7-1949).

டி.எம். நாயர் பெருமானைத் 'திராவிடத்து லெனின்" என்றுப் புகழ்ந்துபோற்றினார் பிறரைப் பாராட்டுவதில் எடுத்துக்காட்டாய் வாழ்ந்து காட்டியவர் பெரியார்.

31-1-1969 நள்ளிரவு தாண்டி 12.40 மணிக்கு அண்ணாவின் மறைவுச் செய்தி பெரியாருக்குத் தெரிவிக்கப்பட, உறக்கம் இழந்த நிலையில் தம் வலக்கையால் சுவரில் அறைந்து அறைந்து 'போச்சு, போச்சு; எல்லாம் போச்சு!'' எனக் கதறினார். (கவிஞர் கருணானந்தத்தின் 'தந்தை பெரியார்' வரலாற்று நூல்: பக்கம் 579).

"இதுவரை தமிழர் ஒருவராவது உச்ச நீதிமன்றத்தில் அமர்ந்ததுண்டா?" (விடுதலை: 1960) என்றும், "சென்னை உயர்நீதி மன்றத்தில் ஆதிதிராவிடர் ஒருவரேனும் நீதிபதியாய் ஆக்கப் பட்டிருக்கிறாரா இன்று வரை? எனவும் (விடுதலை: 1968) பெரியார் கிளர்ந்தெழுந்து பெரியார் உரிமைக்குரல் எழுப்பிய பிறகுதான் அவ்வண்ணமே நிறைவேறின.

பிற்படுத்தப்பட்டோர் நல ஆய்வுக் குழுவினரிடம் பெரியார், "ஆதிதிராவிடர்களுக்கு அக்ரகாரத்தினுள் சொந்த வீடு கட்டித் தந்து குடியமர்த்த வேண்டும், சட்டமன்றத்தில் 25 சதவீத இடங்களைத் தேர்தலின் மூலம் நிரப்பாமல் போட்டியிட்டு வரமுடியாத ஜாதிகளிலிருந்து அரசே நாமினேஷன் செய்ய வேண்டும். எந்தப் பதவியிலும் எவரும் இருமுறைக்கு மேல் இருக்கக்கூடாது" என்னும் உருப்படியான கருத்துகளை வெளியிட்டார்! (விடுதலை: 23-1-1970).

அழைப்பின் பேரில் சலவைத் தொழிலாளர் மாநாட்டில் பங்குபற்றிய பெரியார், "சாதி அடிப்படையில் இருப்பதால் இந்தச் சங்கம் ஒழிய வேண்டும் என்று தான் சொல்வேன்'' என அவர்களிடமே அறிவித்தார் (விடுதலை: 24-9-1971).

"நான் மந்திரிகளிலும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் ஆகித் தீரவேண்டும் என்பவன்!" என ஓர் அறிக்கையில் பெரியார் அறைந்தார்! (விடுதலை: 17-7-1972).

எந்த ஆளுநருக்கும் பார்ப்பனர்தான் தனிச்செயலாளராக இருந்து வந்திருக்கிறார் எனும் பேருண்மையைப் பாருலகிற்கே பறையைந்து வெளியிட்டார் திராவிடர் கழகப் பொதுச் செயலாளர் கி. வீரமணி! (விடுதலை: 7-8-1972).

மொழி உணர்ச்சி இல்லாதவர்களுக்கு நாட்டு உணர்ச்சியோ நாட்டு நினைவோ எப்படி வரும்? நம் பிற்காலச் சந்ததிக்காவது சிறிது நாட்டு உணர்ச்சி ஏற்படும்படிச் செய்ய வேண்டுமானாலும் மொழி உணர்ச்சி சிறிதாவது இருந்தால்தான் முடியும். சமுதாய - இனவுணர்ச்சி சிறிதாவது இருக்க வேண்டுமானாலும் மொழி உணர்ச்சி இருந்தால்தான் முடியும்!" என்னும் ஆழ்ந்த கருத்தினை வெளியிட்டார்!" (விடுதலை: 28-7-1972).

"செயலும் சிந்தனையும் இணைந்த ஒரே உலகத் தலைவர் பெரியார்தான். அவர் உலக அரங்கிலே நிறுத்தப்பட்டு அதனால் தமிழகம் புகழடையும் காலம் ஒன்று வரும்!" - இது அமைச்சர் பண்ணுருட்டி இராமச்சந்திரன் அவர்களின் முன்னோக்குப் பொய்யா மொழி (விடுதலை: 18-9-1973).

பல புனைபெயர்களில் பெரியார் எழுதியிருக்கிறார். "நேரில் **கண்டவன், ஒரு நிருபர், கவனித்தவன், எவனெழுதினாலென்ன? அணுகுண்டு, ஈட்டி, ஊர்சுத்தி, யார் கூறினாலென்ன? ஸ்குரு லூஸ், புளுகுமூட்டை, தேசத்துரோகி, ஒரு சந்தேகி, வந்தேமாதரம்** என்பவை அவற்றுள் சில. **சித்திரபுத்திரன்** எனும் பெயரால் அவரால் நிறையப் படைப்புகள் உருவாக்கப்பட்டன. அவை இன்றும் சுவை பயக்க வல்லவை!

இவை போன்று, மேற்கோளாகக் காட்டத் தகுந்த செய்திகள் பல நூறு இருப்பினும் இதழாளர் பெரியாரின் வெளியீடுகளிலிருந்து ஒரு சிலவற்றை மட்டுமே தேர்ந்து இங்கு தொகுத்துள்ளேன்.

## ஈட்டப் பெற்ற நன்மைகளும் நாட்டப் பெற வேண்டியவையும்

தந்தை பெரியாரவர்களின் விடாப்பிடியான - ஒப்புவமை-காட்டவியலாத - உழைப்பின் வழி ஈட்டப்பெற்ற வெற்றிகளும் அதனால் நாட்டு மக்கள் குறிப்பாகத் தமிழின மக்கள் துய்க்க வாய்த்த நன்மைகளும் எண்ணிறந்தவை. அனைத்தையும் விரித்துப் பேசிட வொண்ணாத சூழ்நிலையில் சிலவற்றை மட்டும் இங்கு கருதுவோம்.

பெரியாரியக்கத்தின் முழுமுதற்கொள்கை சாதி என்னும் சழக்கினைச் சாய்த்தழிப்பதுவே ஆகும்.

1899ஆம் ஆண்டில் சென்னை மாநகரின் ஒற்றைவாடைக் கொட்டகையில் நடந்த 'அபிராமசுந்தரி' என்னும் நாடக விளம்பர அறிவிக்கையில் "பஞ்சமர்கட்கு இடமில்லை" என்பதாக அச்சடிக்கவே செய்திருந்தனர் நாடு அப்போது அப்படியிருந்தது. பெரியார் நாட்டின் தட்ப வெப்ப இயற்கையையே அடியோடு மாற்றுவதில் வெற்றி கண்டுவிட்டார் என்பதால் அபிராமசுந்தரி நாடக அறிவிக்கை போன்று இப்போது வெளியிட முடியாது. இது எவ்வளவு பெரிய வெற்றி!

அவ்வண்ணமே வடபுலத்துக் காசி (இந்து) பல்கலைக் கழகத்தில் சில ஆண்டுகளுக்கு முன்னர் 'சம்பூர்ணானந்த்' என்பாரின் உருவப் படிமத்தினைத் திறந்து வைக்குமாறு முறைப்படி அழைக்கப்பட்டிருந்த அப்போதைய இந்திய முப்படை அமைச்சர் பாபு ஜெகஜீவன்ராம் கடமையாற்ற வந்த பொழுது, "சாமர் குலத்தில் பிறந்தவரே, திரும்பிப்போ! நீயெல்லாம் காப்பு அமைச்சர் நிலை எய்தி, படிமம் திறப்பதென்றால், பிறகு எங்கள் காலணிகளைப் பளபளப்பாக்குதவற்கு வேறு யார் வருவார்?" என ஒலி முழக்கம் செய்த சமஸ்கிருதக்கல்லூரிச் சிண்டுப் பையன்கள், தீண்டத் தகாத ஜெகஜீவன் எனும் அமைச்சர் திறந்து வைத்துத் தீட்டாக்கிவிட்ட படிமத்தை கங்கை நீர் கொண்டு வந்து தீட்டுக் கழித்தார்களே, அது போன்றதொரு காட்சி தமிழகத்தில் நிகழ்த்திக் காட்டப்படவியலுமா? அதைக் கற்பனைகூடப் பண்ணிப் பார்க்க இங்கு முடியாது! தீட்டு, தோஷம் முதலிய சொற்கள் தமிழர்தம் அன்றாடப் புழக்கத்தில் இடம் பெறாது ஒழிந்தன!

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தமிழகத்தில் நிகழ்ந்த மேடைக்கூத்துகளின் தொடக்கத்தில் மன்னர் வேடந்தாங்கியோர்,

"மந்திரி! நமது நாட்டில் பிராமணர்கள் ஜப-தபம், ஓமம், யக்கியம், யாகம் முதலியவைகளைச் செய்து சுகமாக வாழ்கின்றார்களா? சூத்திரர்கள் அடங்கி ஒடுங்கி, ஒழுங்காகத் தொண்டு செய்து வருகின்றார்களா?" என்பதாக 'ராஜ்ய பரிபாலனக் கேள்வி தொடுத்து வந்த காட்சிகளெல்லாம் இன்றைக்கு முற்றிலும் அற்றுப் போய்விட்டன!

ஒவ்வோர் ஆணின் பெயருக்குப் பின்னொட்டாக சாதிப் பெயர் இடம் பெற்று வந்த முறை 1929ஆம் ஆண்டிலிருந்து நீங்கத் தொடங்கி, இப்போது ஒழிந்து விட்டது.

தமிழகத்தில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வாழ்ந்து வந்த பரத்தையர் என்று பண்டைக் காலத்திலும் தேவரடியார் எனப் பிற்காலத்திலும் அழைக்கப்பட்ட பொருட் பெண்டிர் குடி எவ்வகை அடையாளமும் தெரியாத அளவிற்கு அழிப்புண்டமை ஆராய்ச்சியாளர் வியக்கும் விந்தை!

ஆண்இசைக் கலைஞர்கள் மேலாடை அணியாமல் இசைப் பணியாற்றி வந்த அநாகரிகத்திற்குக் கட்டாய ஓய்வு கொடுக்கப்பட்டு விட்டது.

செய்தியிதழ்களில் வெளியிடப்படும் அளவற்ற மண விளம்பரங்களில் "சாதி தடையில்லை" "Caste no bar" எனக் குறிப்பிடப்படும் பெருமித நிலை பிறந்து விட்டது!

அவ்வப்போது சாதியின் பெயரால் கட்சிகள் இக்காலத்திலும் முளைக்கின்றமை ஒரு தற்காலிகத் தோற்றமே. அதற்கு அரசியல் சூழ்நிலைகள் தாம் அடிப்படை. அரசியல் சூழ்நிலைகளே தற்காலிகமானவைதாமே? மேலும் பிறவியின் பெயரால் உயர்தாழ்வு கற்பிக்கும் அடிப்படையைக் கொண்டவையல்ல இச்சாதிக் கட்சிகள்.

'தமிழ்நாடு' என்னும் இனிய திருப்பெயரை நம்முடைய மண் நிலைத்த நிலப் பெயராக எய்தியமை, "தாய்த்திருநாட்டிற்குத் 'தமிழ்நாடு' என்று பெயரில்லையே என்று கொதிக்கும் உள்ளங் கொண்ட இளைஞர்களே, தோழர்களே, புலவர்களே, பெருமக்களே, எழுத்தாளர்களே, பேச்சாளர்களே, டெல்லி ஆதிக்க ஆட்சிக்குத் தீ மூட்டுங்கள்!" என்று அறைகூவிய பெரியாருக்கு அண்ணா படைத்த வரலாற்றுப் பரிசு!

"வகுப்புரிமை என்றால் பெரியார்; பெரியார் என்றால் வகுப்புரிமை" என்பதாக வரையறுக்கும் அளவிற்கு வகுப்புரிமைக்காகக் கடுமையாக உழைத்த அய்யா, தம் வாழ்நாளிலேயே, இடஒதுக்கீட்டு

முறை செல்லத்தக்கதே என இந்திய அரசமைப்புச் சட்டமே ஏற்பிசைவு தரும் சூழ்நிலையை உருவாக்கி, இடஒதுக்கீட்டுக் கொள்கைக்கு நிலையான அரசியற் சட்டக் காப்பினைப் படைத்தார்!

"என் பிள்ளைக்குப் படிப்பு வராது என்று எவனடா சொல்பவன்?" என்பதாகப் பொது மேடைகளிலேயே அதட்டிக் கேட்டு அறைகூவல் விடுத்த பெரியார் அழுத்தப்பட்டுக் கிடந்த 'பஞ்சம-சூத்திரப் பிறவிகள்' அழகழகான சீருடைகளுடன் இன்றைக்கும் கோடிக்கணக்கில் கல்வியகங்களுக்குச் சென்றுவரும் காட்சிகளையும் பல்கலைக்கழகத் தேர்வுகளிலும் தொழில் முறையிலான நேர்காணல் தெரிவுகளிலும் ஒடுக்கப்பட்ட குடிகளைச் சேர்ந்த இருபால் இளைஞர்கள் முன்னிலையில் நிற்கின்ற நிலவரங்களையும், வாய்ப்பிழந்து வாடிக்கொண்டிருந்த கடைக்குடி இல்லப்பிள்ளைகள் பிழைப்பிற்காகத் திரைகடல் தாண்டிச் சென்று தொழில்புரியும் பகுதிகளில் சிறந்த வல்லுநர்கள் என்னும் பெயரும் புகழும் படைத்துக் கொண்டிருக்கும் விந்தைகளையும் கண்டு கேட்டுப் பெருமிதம் எய்தி இன்புறுவதற்குப் பெரியார் இல்லை; எனினும் இன்று நாம் இருக்கிறோம் இவற்றையெல்லாம் துய்ப்பதற்கு!

ஒரு காலத்தில் நம் முன்னோடிகள், தலைவர்கள் என்போர் பெரும்பாலும் பார்ப்பனர் குலத்து மக்களாகவே இருந்த அடிப்படை பெரும் புரட்சிக்கு இலக்காகி, இன்று நாட்டில் நிலவும் எண்ணற்ற மக்களமைப்புகளின் தலைவர்களெல்லாம் பெரும்பாலும் பார்ப்பனரல்லாக் குடிகளைச் சார்ந்தோராகவே இருக்கின்றனர் என்பது இயல்பாகத் தோன்றிய நிலையன்று. பெரியாரியலின் வெற்றியே இது!

தொழிலாளர் பற்றிப் பெரியார் வலியுறுத்திய கொள்கை பெரும்பாலும் வெற்றி பெற்று நல்ல விளைவுகளை ஏற்படுத்தி விட்டது எனலாம். "பரம்பரைத் தொழிலாளி முறை அழிய வேண்டும். அதாவது தொழிலாளியின் மக்கள் அதே மரபு வழித் தொழில் செய்வோராய் இருக்கக் கூடாது" என்பது அவரின் அடிப்படையான கொள்கைகளில் ஒன்று. அவ்வண்ணம் நிறைவேற்றிவிட்டால் அது வர்ணதர்மக் கொள்கைக்கு அருமையான அறைகூவலாக அமையும் என உறுதியாக நம்பினார் பெரியார். அவரின் நம்பிக்கை இங்கு நடப்பாகிவிட்டது என்பது பெரிய செய்தி.

'ஜாதி'யின் அடிப்படையிலான மரபுத் தொழிலையே பயின்று அதையே தங்கள் வாழ்க்கைப் பாட்டிற்கான தொழிலாக ஏற்றுக் கொள்ளும் மனப்போக்கு இன்றைய மக்களுக்கு இல்லை.

'ஜாதித் தொழி'லுக்கு அப்பாற்பட்டு - ஏனைய நாடுகளில் நடப்பது போன்று - ஒரே குடும்பத்து உறுப்பினர்கள் வெவ்வேறு தொழில்கள் செய்கின்ற நடைமுறை இப்போது இங்கு பொதுவாகிவிட்டது! இச்சூழ்நிலை உருவாகாமல் தடுக்கும் பெருமுயற்சிதான் சென்னை மாநில முதல்வர் சி. இராஜகோபாலாச்சாரியாரின் புதிய கல்வித் திட்டம். மாணாக்கர் ஒவ்வொரு பாதி நாளும் ஏதேனுமொரு தொழில் கற்றுக் கொள்ள வேண்டுமெனப் பொதுவாக இல்லாமல், அவரவரின் குடும்பத்தொழிலைப் பயில வேண்டுமென்பதாக ஆச்சாரியார் அறிமுகப்படுத்திய கல்வித் திட்டம் வற்புறுத்த, அதில் புதைந்து கிடந்த சூழ்ச்சியைப் புரிந்து கொண்ட பெரியார் கிளர்ந்தெழுந்து அதை முறியடித்ததாலேயே தொழிலாளர் குடும்பங்களின் அமைப்பில் பெரும் புரட்சி நிகழ வாய்த்தது.

தொழிலகங்களில் தொழிலாளர்கள் இன்று சட்டப்படி துய்த்துவரும் உரிமைகளும் நலன்களும் ஏந்துகளும் மாநாடுகளில் பெரியார் நிறைவேற்றிய பல்வேறு தீர்மானங்களின் செயல் வடிவங்களே. ''நம்முடைய நாட்டின் முன்னேற்றத்திற்குத் தொழிலாளர்களுடைய முன்னேற்றம் அவசியம்" என்பது முதலாம் சுயமரியாதை மாநாட்டிலேயே (1929) இடம் பெற்ற தீர்மானம். தொடர்ந்து பல மக்கள் கூடல்களின் போது தொழிலாளர் மேம்பாட்டுக்காகப் பெரியார் போட்ட பல புரட்சியான தீர்மானங்கள் - சுரண்டல்காரர்களின் கடும் எதிர்ப்புகளுக்குடையே - நடப்புகளாகி வருகின்றன.

சான்றுக்கு ஒன்று. "தரகர்கள், லேவாதேவிக்காரர்களுக்கு இடமில்லாதபடி கூட்டுறவு ஸ்தாபனங்கள் ஏற்படுத்தி அதன் மூலம் விவசாயிகளின் கஷ்டத்தையும் சாமான் வாங்குவோரின் கஷ்டத்தையும் ஒழிக்க ஏற்பாடு செய்ய வேண்டும்" என்பது 1934ஆம் ஆண்டிலேயே அய்யா வெளியிட்ட வேலைத்திட்டம். அதுவே பிற்காலத்திய அரசுகளால் முனைப்பாக நடைமுறைப்படுத்தப் பெற்றது!

தமிழக அரசுப் பணியாளர்கட்கு மாபெரும் பாதிப்புகளை உண்டாக்கி அச்சுறுத்தி வந்த கமுக்க அறிக்கை முறை (Confidential Report System) ஒழிக்கப்பட்டு விட்டதென்றால், அதற்கு பெரியாரும் 'விடுதலை' இதழுமே அடிப்படை

தமிழ்மொழியின் வளர்ச்சியின் பொருட்டு அய்யா அவர்கள் அளவிறந்த துணிவுடன் தம் 'குடிஅரசு' இதழில் அறிமுகம் செய்து, தம் நாளேடான 'விடுதலை'யிலும் நடைமுறைப்படுத்திய

தமிழெழுத்துச் சீரமைப்பு, இன்று உலகெங்கிலும் கடைப்பிடிக்கப் படுகிறது. இது எளிய செய்தி யன்று; மாபெரும் மொழியியற் புரட்சி யென்றே ஆராய்ச்சியாளர்களால் கருதப்படுகின்றது.

தட்டச்சு, கணினியச்சு போன்ற பொறிகளில் பெரியாரின் எழுத்துப் புதுமைகள் புகுந்து கொண்டு விட்ட நிலையில், இன்னும் பெரிய எழுத்துச் சீரமைப்புப் புரட்சி நிகழும் வரை இவை நீடித்திருக்கவே செய்யும்!

நம் தண்டமிழ் வெறும் பண்டையப் பெருமைகள் கொண்ட செம்மொழியாக இருப்பது மட்டும் இன்றைய உலகப் போட்டிக்கும் போதாது. அது தற்கால அறைகூவல்களை எதிர்கொள்ளும் தகுதி படைத்த அறிவியல் மொழியாக மிளிர வேண்டும் என்பது பெரியாரின் பேராசை. அது இப்போது மெய்யாகிக் கொண்டு வருகிறது!

தமிழர்கள் அய்யா காலத்தில் வாழ்வில் அன்றாடம் பயன்படுத்த நேர்ந்த வட சொற்கள் வரவர வழக்கொழிந்தன. அக்ராசனம், அபிமானம், அபிலாஷை, ஆஸ்தி, ஆயுஸ், ஆட்சேபம், ஏகதேசம், காரியதரிசி, சிரஸ், ஸ்திரி - புருஷர், க்ஷேமம், க்ஷவரம், சிரமபரிகாரம், சுபாவம், சர்வம், ஜனன-மரணம், ஜாலம், ஜலதாரை, பஸ்பம், பூர்ணம், பிரஜைகள், தாட்சண்யம், பிரசங்கம், ராஜ்யம், ரோகங்கள், வியாக்யானம் போன்ற வடசொற்கள் இந்தத் தலைமுறை இளைஞர்களின் வாய்களிலிருந்து வெளிவருவதில்லையே, இது பெரியாரியல் அலைகள் ஏற்படுத்திய மொழியுணர்வினாலன்றோ?

பாடநூல்களை அரசே அச்சிட்டு வழங்க வேண்டுமென்றே பெரியார் வற்புறுத்தி வந்தார். அது இப்போது அழகாக நடந்து கொண்டு வருகிறது.

புலவர்களிடம் மட்டுமே உறவாடிக் கொண்டிருந்த தமிழ்ப் பேரறிவு நூலாகிய திருக்குறளை - குறள் மாநாடுகள் நடத்தியும், தாமே விலை மதிப்பற்ற விந்தைப் படைப்பான அக்குறள் நூலைப் பலமுறை பதிப்பித்து, மலிவு விலையில் பரப்பியும் - மக்கள் அனைவரின் கைகளிலும் தவழ்கின்ற நிலையைப் படைத்துக் காட்டினார் பெரியார்.

தமிழ்ப் புலவர்களின் தாழ்த்தப்பட்ட நிலையினை உயர்த்தி, ஏனைய செம்மொழிப் புலவர்களின் நிலைக்கு இணையாக நிறுத்தி அவர்களின் தகுதியை மேம்படுத்த வழி செய்து தமிழின் மானங்காத்தார் பெரியார்.

தமிழர்க்கெனத் தமிழர்களே நடத்தும் ஏடுகள் இங்கு தோன்றவில்லையே என ஏங்கியவர் அய்யா. இப்போது தமிழர்களால் நடத்தப் பெறும் இதழ்கள் நிறையத் தோன்றிவிட்டன என்பது பெருமிதத்திற்குரிய செய்தி.

இனி, அறிவியல் முன்னேற்றம் வருங்காலத்தில் எப்படி யிருக்கும் என்பது குறித்து அறிவின் எல்லையாம் பெரியாரின் எதிர்பார்ப்புகளும் கற்பனைகளும் எந்த அளவிற்குச் சென்றன என்பதை இன்றைய மக்களும் அறிவியல் அறிஞர்களும் அறியும் போது மலைப்பும் வியப்பும் எய்துகின்றனர்.

அவரின் எத்தனையோ எதிர்பார்ப்புகளில் ஆண்-பெண் சேர்க்கையின்றி மகப்பேறு, சட்டைப் பைக்குள் கம்பியில்லாத் தொடர்புக் கருவி, உருவக் காட்சியுடன் ஒருவருக்கொருவர் 'பேசி' வழி உரையாடும் வாய்ப்பு, மாந்தரின் சராசரி வாழ்நாள் கூடுதல் போன்றவை நடப்புக்கு வந்து விட்டன. வரும் பொருள் உரைக்கும் பேராற்றல் பெரியாருக்குத் தனிப்பெருமை சேர்ப்பது.

இன்று சென்னை உயர்முறை மன்றத்திலும், தில்லி மீவுயர்முறை மன்றத்திலும் (உச்ச நீதி மன்றத்திலும்) ஆதி திராவிடர் குடிகளைச் சேர்ந்த பெருமக்கள் தீர்ப்பாளர்களாக அமர்ந்து உடமையாற்றும் கண்கொள்ளாக்காட்சிகள், பெரியார் சீற்றத்துடன் வீசிய உரிமை வினாக்களின் விளைவுகளே! ஒரு புதிய வரலாறு இது.

தமிழ்நாட்டுத் தாய்க்குலத்தின் இறும்பூது பயக்கும் இன்றைய முன்னேற்ற நிலை பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் கொண்டு ஒரு மாபெரும் காப்பியமே படைக்கலாம். அரை நூற்றாண்டுக்கும் மேற்பட்ட அகவையுள்ளோர்க்கு இதன் அருமை விரிவாகத் தெரியும்.

"அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பு எதற்கு?" என்னும் எள்ளலும் கொடுமையும் நிரம்பிய சொல்லியம் இப்போது எவர் வாயிலிருந்தும் வெளிப்படுவதில்லை.

அழகழகான சீருடைகள் அணிந்து பெண்பாலர்கள் பள்ளிகளுக்கும் கல்லூரிகளுக்கும் இன்று கோடிக்கணக்கில் செல்லும் காட்சியும், பல்வகைத் தொழில்நுட்பக் கல்விகளை ஆயிரமாயிரம் பெண்கள் பயிலும் காட்சியும், ஆசிரியைகளாகவும் அலுவலர் களாகவும் மேலாளர்களாகவும் இயக்குநர்களாகவும் தொழில் நுட்பக் கலைஞர்களாகவும் தொழிற்றுறை உரிமையாளர்களாகவும் எண்ணிக்கையில் அடங்காப் பெண்கள் வினைவலர்களாய் மிளிரும் மாட்சியும், நம்மைப் புரட்சிக் கவிஞரின் "பெண்களால் முன்னேறக்

கூடும்; நம் வண்டமிழ் நாடும் எந்நாடும்" எனும் வரிகளைப் பாட வைக்கின்றன!

'விவாஹ சுப முகூர்த்தம்', 'பாணிக்கிரஹனம்', 'கன்னிகாதானம்', 'தாரா முகூர்த்தம்' என்ற ஆரியப் பார்ப்பனரால் அறிமுகம் செய்யப்பட்டுப் புழக்கத்தில் இருந்த மணவினைச் சொற்கள் மதிப்பிழந்து போக, பெண்ணடிமை ஒழிக்கும் தமிழ்மொழி தற்போது ஆட்சி செலுத்துகின்றது.

'சுயமரியாதைத் திருமணம்' என்பதாகத் தந்தை பெரியாரால் அறிமுகம் செய்யப்பட்ட தன்மானமுறை வாழ்க்கை ஒப்பந்தவிழா இன்றைக்கு மிகமிக இயல்பான - சட்டப்படி செல்லுபடியாகும் மணவினையாக நிலையூன்றப் பட்டு விட்டது!

எழுபது ஆண்டுகளுக்கு முன்னரே பெரியாரால் பரிந்துரைக்கப்பட்ட 'கர்ப்ப ஆட்சி' என்னும் கருத்து இன்று நடுவண் - மாநில அரசுகளால் முழுமையாய் ஏற்றுக் கொள்ளப்பட்டு, அதன் தொடர்பான நடவடிக்கைகளால் பெண்ணினத்திற்குக் கிட்டிய நலவாழ்வுச் சிறப்பை எந்தச் சொற்களால் வடித்துக் காட்ட வொண்ணும்!

நோய்களை உண்டாக்குவதோ தீர்த்துவைப்பதோ கடவுள் அல்லவே அல்லர் எனும் எளிய உண்மையினைத் தெளிவுடன் புரிந்து கொண்டுவிட்டதால், தற்போது மக்கள் உடனடியாக நாடும் இடம் மருத்துவமனை என்பது கண்கூடு.

விரதம், நோன்பு போன்ற மூட நடவடிக்கைகள் இன்று குன்றிய நிலையில் உள்ளன. விழுக்காட்டுக் கணக்கெடுத்தால் இவை வீழ்ந்து விட்ட உண்மை புலப்படும்.

"அந்தக் காலத்துப் பஜனைமடங்கள் எங்கே? எனும் ஒரு சின்னக் கேள்வி போதும், பெரியாரின் பகுத்தறிவுப் புரட்சியினை மதிப்பீடு செய்ய.

எனவே இன்று விளம்பரமாக அவ்வப்போது காட்சியளிக்கும் குடமுழுக்குகளும் திருவிழாக்களும் செயற்கையான வெறும் போலித் தோற்றங்களே. மக்கட் கூட்டங்கள் ஆன்மீகத்தைக் குறிப்பவையல்ல; வேடிக்கை - கேளிக்கைகளை நாடி வருவோரே!

இறுதியாக - பெரியாரியலின் தாக்கம் தமிழ்நாட்டளவோடு மட்டும் நின்று விடவில்லை. அது பிழைப்பிற்காகப் பிற நாடுகளுக்கு குறிப்பாகக் கீழைநாடுகட்குச் சென்று வாழ்ந்த தமிழரையும்

பாதித்தது! மலேயா, சிங்கப்பூர், பர்மா முதலிய நாடுகளுக்குப் பெரியார் நேரில் சென்று அங்கு சாதிவுணர்வுகளோடும் மூடநம்பிக்கைகளுடனும் அநாகரிக வாழ்க்கையினைச் சுவைத்துக் கொண்டிருந்த நிலையைப் பெருமளவுக்கு மாற்றிக் காட்டியப் பெரியாருடைய தனி வரலாற்றுக்கு ஒப்பு நிலையில் வைக்க, வேறெதையும் சுட்டுவதற்கில்லை! எனவே தான் தந்தை பெரியாரை, 'தமிழினத்தின் காவல் மலையரண்' எனக் குறிப்பிட்டது சிங்கப்பூர் தமிழ் ஏடான தமிழ் முரசு.

இத்தகைய அரிய வெற்றிகளைப் பெரியார் குவித்து எவரும் கற்பனை பண்ணவொண்ணாத புதிய வரலாறு படைத்து, தமிழ் மண்ணின் மக்காளயத் தட்ப வெட்ப இயற்கையையே திருத்திவிட்டவர் எனும் பெருமைக்குரியவரானார். இத்தனைக்கும் ஓர் அரசியல் கட்சித் தலைவர் என்னும் வாய்ப்பால் பெரியார் இந்நன்மைகளை எல்லாம் ஈட்டினாரா என்றால், அன்று. ஓர் அமைச்சர் நாற்காலியின் மீதேனும் அவர் குந்தியதுண்டா வெனில் அன்றன்று. இதழ்களின் துணைக்கொண்டு ஓர் இயக்கம் நடத்தியே இவற்றை அவரால் ஈட்ட முடிந்தது என்பது ஒரு மாபெரும் விந்தை!

## நாட்டப்பெற வேண்டியவை

பெரியாரின் விருப்பங்களில் முழுமையாக நிறைவேற்றப் படாமல் - நிலைநாட்டப் பெறாத நிலையில் - சிலவுண்டு.

அடிப்படையாகப் பெரியார் நம்நாடு சமநிலை மன்பதையாக உயர்வு எய்த வேண்டும் என்னும் வேணவாக் கொண்டவர். கொள்கையளவில் அது பெரும்பான்மை மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டதே. ஆயினும் அத்தகைய மக்களாயம் உடனடியாக அமைவதற்கில்லை. அதற்கான சூழ்நிலை உருவாக்கப்பட வேண்டும்.

'ஜாதி' முறை கூடாது என்பதை அனைவரும் தயங்காமல் ஒப்புக் கொள்ளுகின்றனர். பிற வகுப்பு - மதச் சார்புடையவர்களுடன் உரிமையுடன் முறை செப்பி உறவாடவும் செய்கின்றனர். ஆனால் திருமணம் எனும் கட்டம் வரும்போது தங்கள் தங்களின் ஜாதிக்குள்ளேதான் 'தேடல்' நடத்துகின்றனர். இந்தத் துறையில் பெரும் புரட்சி நடந்தாக வேண்டும்.

இன்றைக்கும் போலித்தனமாய் 'ஜாதி'யின் பெயரால் கலவரங்களை உருவாக்கிடக் கயவர்களால் முடிகிறது. மக்களிடையே இதுபற்றி நிறைய விளக்கங்கள் தந்து நல்லவண்ணம் விழிப்பறிவும் குமுகாய உணர்வும் ஊட்டப்படவேண்டும்.

ஆயிரக்கணக்கில் தன்மானமுறை வாழ்க்கை ஒப்பந்தங்கள் நடைபெற்றுக் கொண்டிருந்தாலும், தாலி கட்டும் புரோகித மணங்களும் நிகழ்ந்து கொண்டு வருவது கண்கூடு. இப்பிற்போக்குப் புரோகித மணங்கள் ஒழிக்கப்பட்டே ஆக வேண்டும்.

ஆதிதிராவிட முதன்மைக் குடிமக்களை 'ஜாதி இந்துக்கள்' என்போரின் குடும்பங்களுக்கிடையில் குடியமர்த்தி அவர்களின் சேரி வாழ்க்கை முறையை ஒழித்துக் கட்ட வேண்டும் என்பது பெரியாரின் விடாப்பிடியான நிலை. நகரங்களின் குடியிருப்புகளில் அனைவரும் கலந்து வாழும் சூழ்நிலை இயல்பாகிவிட்டது. ஆனால், சிற்றூர்களிலோ 'ஜாதி இந்துக்கள்' என்பாரைக் காட்டிலும் படிப்பிலும் பண்பாட்டிலும் நாகரிகத்திலும் நூறு மடங்கு உயர்ந்து ஒழுகும் ஆதிதிராவிடப் பெருமக்களுக்கு இன்னும் 'காலனி' (சேரி) வாழ்க்கைதான். இதன் தொடர்பாக அடிப்படைப் புரட்சியே நடந்தாக வேண்டும்.

'இந்துச்சட்டம்' என்னும் கொடிய சட்ட நூலின் அடிப்படைகளில் ஒன்றான 'ஸ்மிருதிகள்' என்பவற்றைப் பெரியார் 1920களிலிருந்தே ஆய்வுபண்ணிக் கொண்டு வந்திருக்கிறார். குறிப்பாக 'மனுஸ்மிருதி' எனும் ஆரிய தர்ம சாஸ்திரத்தை மிகக் கடுமையாக எதிர்த்தும் எரித்தும் வந்தவர் அவர். எனினும் முறைமன்றங்கள் இன்றும் 'ஸ்மிருதிக'ளை மேற்கோள் காட்டியே தீர்ப்புகள் எழுதுகின்றன. ஸ்மிருதிகளைச் சிந்தனை(யாள)களும் நடுநிலையாளர் களும் சட்டத் திறனாய்வாளர்களும் பாகுபாடு காட்டுபவை என்பதாகச் சாடியே வந்துள்ளனர். ஆனால் நடப்பில் ஸ்மிருதிகளே நாடாளுகின்றன. இனியும் இந்நிலை கூடாது!

தற்போது ஆதி திராவிடர்க்கும் பிற்படுத்தப்பட்ட வ்குப்பினர்க்கும் இடஒதுக்கீடு எனும் முறை தொழிற்கல்வி, அரசுப் பணிகள் இரண்டு துறைகளிலும் நடப்பில் இருந்து வருகிறது;அதுவும் பல கட்டுப்பாடுகட்கு உட்பட்டுத்தான் நடந்து வருகிறது. பெரியார் வலியுறுத்திய வகுப்புரிமை என்பது ஒவ்வொரு வகுப்பினர்க்கும் பங்குரிமை கொடுப்பது. அதாவது பார்ப்பனர்க்கு 3 விழுக்காடு உரிமை தந்தது போக, மிச்சம் 97 விழுக்காட்டு இடங்களை ஆதி திராவிட - பிற்படுத்தப்பட்ட - முன்னேறிய வகுப்பினரிடையே பங்கிட்டு வழங்கும் முறையாகும். அதன்படி எல்லா வகுப்பினர்க்கும், உட்பிரிவினர்க்கும் சட்டப்படியான பங்கு கிட்டும். ஏற்கெனவே சென்னை மாநிலத்தில் கடைப்பிடிக்கப்பட்டு வந்த இவ்வகுப்புரிமை என்னும் உருப்படியான முறை இந்திய அரசமைப்புச் சட்டத்திற்கு முரணானது எனத் தீர்ப்பு மன்றங்களால் அறிவிக்கப்பட்டு விட்டது.

எனவே பெரியாரின் வகுப்புரிமைக் கோட்பாடு முழுமையாக நிறைவேற்றம் பெற மிகக் கடுமையான முயற்சி தேவை.

தமிழ்நாடு எனப் பெயர்கொண்ட நம் மண்ணில் தமிழர்களாலேயே கட்டப்பட்ட இந்துக் கோவில்களில் தமிழ் மொழியில் வழிபாடு நடப்பதில்லை; பெரும்பாலும் வடமொழியின் ஆட்சியே நிகழ்கிறது. வேறெந்த நாட்டிலும் நிலவாத வெட்கக் கேடான இத்தகைய அவலம் நீடிக்கலாமா?

மேலும் அருவருக்கத்தக்க பின்னணி படைத்த வடமொழிப் பெயர்களைத் தாங்கிய ஆண்டுகளைத் தமிழாண்டுகள் என ஏற்று, விழாக்கொண்டாடி வரும் தமிழர் மானமும் அறிவும் பெற வேண்டுமென்பது பெரியாரின் பெருங் கவலையாய் இருந்தது. தமிழினத்தின் மீட்பரான அவரின் கவலை நியாயம் நிரம்பிய கவலைதானே? பெரியார் பட்ட கவலை குறித்து இன்றையத் தமிழினத் தலைமுறையினர் கவலைப் படுவார்களானால் நற்பலன் கிட்டாமற் போகாது.

தமிழர் திருநாளாகிய பொங்கல் விழாவைத் தங்களின் குடும்ப விழாவாகக் கொண்டாடி இன்புறும் தமிழ் மக்கள், அதே ஊக்கத்துடன் ஆரியப் பண்டிகையாம் தீபாவளியையும் கொண்டாடி மகிழ்கின்றனர் என்பது நாணத்திற்குரிய நாகரிகக் கேடாகும். நம் இனத்தை நாமே இழிவு படுத்திக்கொள்ளும் மடமை முற்றாக அழிக்கப்பட்டாக வேண்டும்.

ஆண்-பெண் வேறுபாட்டைப் புலப்படுத்தும் ஆடை அணிகலன்கள் வழக்கொழிந்து, பாலினங் காட்டாத வகையில் ஆடையணியும் முறை முழுமையாக நடப்பாக நிலை பெற வேண்டும்.

நகைகளின் மீது நம் பெண்மக்களுக்கு இருக்கும் பெரும் பித்து அடியோடு அழிக்கப்படவேண்டும்.

நம் நாட்டில் சமநிலை மக்களாயம் அமையும் வரை, தொழிற்சாலைகள், வணிக நிலையங்கள் பொருளீட்டும் அரசு நிறுவனங்கள் போன்றவற்றில் பணியாற்றும் பாட்டாளிகள் அவ்வமைப்புகளின் பங்காளிகளாகப் பொறுப்பேற்றுக் கடமை யாற்றும் வண்ணம் திட்டங்கள் வகுக்கப்படவேண்டும்.

தமிழ் எழுத்துச் சீரமைப்புப் புரட்சியை அய்யா தொடக்கி வைத்து விட்டாலும், தமிழ் அறிவியல் மொழியாக உலகவுலா வரவேண்டுமானால் எழுத்துச் சீரமைப்பு இன்னும் பெரிய அளவிற்கு நடைபெற்றாக வேண்டும்.

# காலம் வென்ற ஞாலப் பெரியார்

"மண்டைச் சுரப்பை உலகுதொழும்!" - புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் தொலை முன்னோக்கில் வடிக்கப்பட்ட பா வரி இது. வாலறிவன் பெரியாரவர்களின் சாலப் பயன் குவிக்கும் சிந்தனையூற்றைக் குறித்துப் புரட்சிப் பாவலர் தம் எதிர்பார்ப்பையும் நம்பிக்கையையும் இந்நான்கு சொற்களால் உரக்கக் கூவினார். அவரின் அன்றைய வரும்பொருள் அறிவிப்பு இன்று மெய்யான காட்சிகளாக தோன்றும் நிலை!

"நம் நாட்டில் உள்ள எல்லாப் பார்ப்பனராலும் வெறுக்கப்பட்டிருக்கிறேன். மேல் ஜாதியார் என்று பார்ப்பனரைப் போல் தங்களைக் கருதிக்கொண்டிருக்கும் எல்லாச் சைவர்களாலும் பெரிதும் வெறுக்கப்படுகிறேன். இவை மாத்திரமா? 100க்கு 90 கிறித்துவர்களாலும் வெறுக்கப்படுகிறேன். இஸ்லாமியர்களாலும் வெளிப்படையாய் வெறுக்கப்படவில்லை என்று தான் கருதுகிறேன். இவற்றுள் அதிசயமென்ன வென்றால் ஆதிதிராவிட மக்களுக்குள் சிலர் எதிரிகளாகவே - அலட்சியப்படுத்துபவர்களாகவே ஆகிவிட்டார்கள்!" என்பதாகத் தந்தை பெரியார் நொந்த உள்ளத்துடன் ஒரு கட்டத்தில் கருத்து வெளியிட்டமை உண்மையே! (உண்மை - 1:1).

அத்தூற்றல் நிலவரம் முற்றிலும் மாற்றமுற்றது என்பதுவே வரலாறு. "எங்கட்கெல்லாம் தோன்றாக் கருத்துகள் பெரியாரின் இயற்கை அறிவில் ஊறிடக் காண்கிறேன்" எனும் தமிழ்த் தென்றல் திரு.வி.கலியாணசுந்தரனாரின் கூற்றுக்கேற்ப, பெரியாரின் இயற்கை அறிவு தமிழ்த் தரணியில் தாக்கம் படைத்தது; துணைக்கண்டத்தைத் துலங்கச் செய்தது. ஏன், இருநிலம் முழுவதையுமே இறும்பூதெய்தச் செய்தது!

இனவுணர்வற்ற 'கோடரிக்காம்புகளால்' பெரியார் தம் தொண்டறத்தின் அடிநாள்களில் பெருங்கொடுமைகளுக்கும் மானக்கேடுகளுக்கும் இலக்கானார் என்பது மெய்யே.

சொல்லால் மட்டும் கீழ்மக்கள் பெரியாரைத் தாக்கவில்லை. அப்பெருமகனைக் கல்லால் எறிந்தும் காயப்படுத்தினர் சிலர்.

"அவரை எப்படியெல்லாம் வரவேற்கிறோம் பாருங்கள்" எனக் கிண்டல் செய்யும் முறையில் பழஞ் செருப்பு முதலிய

காலணிகளையும் விளக்குமாறு - துடைப்பம் போன்ற அருவருப்பூட்டும் பொருட்களையும் கயிற்றால் கட்டி, அவர் ஊர்வலமாக அழைத்து வரப்பட்ட தெருக்களினூடே தொங்கவிட்டு, தோரண வரவேற்பு நல்கினர் நல்லுணர்வாளர் சிலர். சிந்தனையைத் துறந்து விட்ட சிலர் தத்தம் கால்களில் மாட்டியிருந்த மிதியடிகளைக் கழற்றி அவரின் மீதே, எறிந்து தங்களின் நாகரிக(?)ச் சிறப்பை வெளிச்சமிட்டுக் காட்டினர்!

சிலரோ பெரியார் உரையாற்றிக் கொண்டிருக்கையிலே பன்றிகளைக் கூட்டத்தினூடே ஓட்டி விட்டுத் தங்களின் தரத்தைப் பறை சாற்றிக் கொண்டனர்.

பாம்புகளைக் கொணர்ந்து தூக்கியெறிந்து கூட்டத்தைக் கலைத்து விட வேண்டுமென்று முயன்ற நல்லோரும் உண்டு! யாவற்றையும் விட அருவருப்பான முகச்சுளிப்புக்குரிய - இழி செயலும் சிலரால் வெட்கமில்லாமல் செய்யப்பட்டது. அதாவது மலத்தால் நிரப்பட்டப்பட்ட ஏனங்கள் அவரின் முகம் நோக்கி வீசப்பட்டன! அதையும் வழித்தெறிந்து விட்டு முகம் துடைத்துக் கொண்டு மக்கட்கு அறிவுரையாற்றிய அவரின் தண்ணளியையும் தன்னம்பிக்கையும் நாம் என்ன கூறி வியப்பது! எனினும் வியக்க வேண்டியன விளையவே செய்தன!

பெரியார் வாழ்ந்த தமிழ்நாட்டின் தமிழிதழ்களும் ஆங்கில ஏடுகளும் அவர் பற்றிய செய்திகளையும் திறனாய்வுக் கட்டுரைகளும் வெளியிட நேர்ந்தமை இயற்கையானதே. அவையன்றி இந்தியாவின் பிற பகுதிகளில் அச்சான இதழ்களும் பெரியார் குறித்த செய்திகளை நிறைய வெளியிட்டன என்பது குறிப்பிட வேண்டிய ஒன்று.

Malayala Manorama, Mysindia, Deccan Herald, Times of India, Hindustan Times, Illustrated Weekly, Shankar's Weekly, Blitz, Current Caravan, Pioneer, National Herald, Statesman, Advance, Mainstream, Modern Review, Link முதலிய ஆங்கில இதழ்களும்,

ஜியா சத், அல்ஜமயத் போன்ற உருது ஏடுகளும், தம்யுக் போன்ற இந்தி ஏடுகளும், Newyork Times, Free Thinker, New Humanist முதலிய அயல் நாட்டு இதழ்களும் பெரியாரின் கொள்கைகள் குறித்து மிகுந்த அளவில் எழுதின.

பெரியாரைத் தங்களின் இனப் பகைவராகக் கருதிய வட்டாரத்தைச் சேர்ந்த பலரும் பெரியாரைப் பாராட்ட நேர்ந்தமை முரண்சுவை கொண்டதென்றுதான் குறிக்க வேண்டும்.

அவரை அக்ரகாரத்து அதிசய மனிதர் என்பதாக அண்ணாவால் போற்றப்பட்ட எழுத்தாளர் வ. ராமசாமியவர்கள் 1933இல் 'காந்தி' இதழில் "நாயக்கர் அவர்கள் தமிழ்நாட்டின் வருங்காலப் பெருமைக்கு முன்னோடும் பிள்ளை - தூதுவன்! மலைகளையும் மரங்களையும் வேரோடு பிடுங்கி யுத்தம் செய்த மாருதியைப் போல, அவர் தமிழ்நாட்டின் தேக்கமுற்ற வாழ்வோடு போர்புரியும் வகையைக் கண்டு, நாம் வியப்படையாமல் இருக்க முடியாது. சொரணையற்றுக் கிடந்த தமிழர்களின் உள்ளத்தை அடி தெரியும்படி கலக்கிய பிரம்மாண்ட பாக்கியம் நாயக்கரைப் பெரிதும் சேர்ந்தது. அவர் இயற்கையின் புதல்வர். மண்ணை மணந்த மணாளர்! மண்ணோடு மண்ணாய் உழலும் மாந்தர்களுக்கு அவரின் பிரசங்கம் ஆகாய கங்கையின் பிரவாகம்!" (அவரது பவுராணிகச் சொற்களில் நான் உடன்பட்டவல்லன்).

புதினப் படைப்பில் புகழ் எய்திய 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி அவர்கள், "அவர் உலகானுபவம் என்னும் கலாசாலையில் முற்றுமுணர்ந்த பேராசிரியர், என்பதில் சந்தேகமில்லை. பாமர ஜனங்களை வசப்படுத்தும் ஆற்றல் தமிழ்நாட்டில் வேறெவரையும் விட அவருக்கு அதிகம் உண்டு. எங்கிருந்துதான் அவருக்கு அந்தப் பழமொழிகளும், உபமானங்களும், கதைகளும், கற்பனைகளும் கிடைக்கின்றவோ! தமிழ்நாட்டில் இராமசாமியாரின் பிரசங்கம் ஒன்றை மட்டுந்தான் மூன்று மணி நேரம் உட்கார்ந்து கேட்க முடியும் என்று தயங்காமல் கூறுவேன்" என ஒளிவுமறைவு செய்யாமல் 1931இல் 'ஆனந்த விகடன்' வழி உலகிற்குப் பறையறைந்தார்.

"பெண்ணுரிமை பற்றிச் சிந்திப்போர் - பேசுவோர் - எழுதுவோர் எவரும் பெரியார் அவர்களை விட்டுவிட்டு எவ்வகை முயற்சியிலும் ஈடுபடமுடியாது" எனவும், "பெரியாரின் பெண் விடுதலைக் கருத்துகளால் பாதிக்கப்பட்டுத்தான் முற்போக்காகச் சிந்தித்து எழுதத் தொடங்கினேன்" எனவும் எழுத்தாளர்கள் மாலன் உஷா சுப்பிரமணியம் போன்றவர்கள் ஊடகங்களின் வாயிலாக மெய்யுரைப்பதை நாம் காண்கிறோம்.

ஏ.எஸ்.கே. அய்யங்கார் (பிற்காலத்தில் அய்யங்கார் எனும் சாதிப் பெயரை நீக்கிக் கொண்டவர்) என்பார் பெரியாரை முழுமையாகப் படம் பிடித்துக் காட்டும் வகையில், "பகுத்தறிவின் சிகரம் பெரியார்" என்னும் பெயரில் ஒரு நூலையே யாத்து வையத்திற்கு வழங்கினார்!

தமிழக மக்கள் மட்டும் அல்லர்; கிட்டத்தட்ட இந்திய மாநிலங்கள் அனைத்திலும் வாழ்ந்த பொது வாழ்வுத்தலைவர்களெல்லாரும் வாயாரப் பெரியாரைப் பாராட்டினர்; இன்று வாழ்ந்து கொண்டிருக்கும் தலைவர்கள் மனந்திறந்து புகழ்வதை நாம் நேரடியாகத் துய்த்துக் கொண்டிருக்கிறோம்.

பெரியாரின் ஒரு நாள் நடவடிக்கைகளைத் திரைப் படமாக்கும் நோக்குடன் கேரளப் படைப்பாளர் ராமுகாரியத் எனும் அறிஞர், "பெரியார் வைக்கத்தில் நடத்தி வெற்றி பெற்ற போராட்டத்தின் பின்விளைவுதான் தீண்டத் தகாதோர் என ஒதுக்கி ஒடுக்கப்பட்ட ஈழவக் குடியில் பிறந்த நான் இன்று புகழ் தோய்ந்த கலைப்புலமையாளராகப் போற்றப்படும் சூழ்நிலை! அதன் பொருட்டு என் நன்றியுணர்வினை வெளிக்காட்டும் முறையிலேயே அவரின் ஒரு நாள் வாழ்க்கைப் படப்பிடிப்பு முயற்சி" எனச் செய்தியாளரிடையே அறிவித்து, அனைவரையும் வியப்பில் ஆழ்த்தினார்.

1970களில் மராட்டிய தலித் இயக்கத்தின் அடிநாள்களில், அவ்வியக்கத் தலைவர் செய்தியாளர்களிடம் அவ்வியக்கத்தின் கட்டுக்கோப்பான ஒற்றுமையுணர்வுக்கும் துணிச்சலான நடவடிக்கைகளுக்கும் அடிப்படைக் காரணமாகப் பெரியாரின் வடபுலச் சுற்றுப் பயணவுரைகளையும் அவர் நேருரையாக உணர்த்திய அறிவுரைகளையும் குறிப்பிட்டமை எத்துணை அரிய செய்தி!

கருநாடக மாநில முதல்வர் தேவராஜ் அர்ஸ், அமைச்சர் பசவலிங்கப்பா, சட்டப்பேரவை உறுப்பினர்கள் சிறீராமுலு, எஸ்.எம். சந்திரசேகர், இதழாளர் வி.டி. இராஜசேகர், பல்கலைக்கழகப் பேராசிரியர் நரசிம்மையா போன்றோர் பெரியாரின் தொண்டறம் பற்றி - அடடா, எவ்வாறெல்லாம் பாராட்டினர்!

பஞ்சாப் மாநிலச் சிந்தனையாளர் சந்த்ராம் என்பார், பெரியாரின் 1972ஆம் ஆண்டு பிறந்த நாளின் போது அனுப்பிய வாழ்த்துச் செய்தியில், "பெரியாரும் அண்ணாவும் எங்கள் கண்களிலேயே இருக்கிறார்கள். தாழ்ந்தோரின் ஏற்றத்திற்காகவும் பார்ப்பனியத்தின் வீழ்ச்சிக்காகவும் பாடுபடும் பெரியாரின் சேவை மகத்தான சேவையாகும் எனக் குறித்திருந்தார். (விடுதலை: 29-9-1972).

வங்கத்துச் சிந்தனையாளர் புகழ்தோய்ந்த எம்.என்.ராய் அவர்கள் கல்கத்தாவில் ஏற்பாடு செய்த மாநாட்டிற்குப் பெரியாரை அழைத்து, "இவர் என்னுடைய நாத்திக ஆசான்" என மக்களிடம் அறிமுகம் செய்த நிகழ்ச்சி ஆழமான பொருள் புதைந்த ஒன்றாகும். (குடிஅரசு: 27-12-1944).

கர்ப்பூரி தாகூர், லாலுபிரசாத், ராம்விலாஸ் பஸ்வான் போன்ற பீகார் மாநிலத்தலைவர்கள் பெரியாரின் இடஒதுக்கீட்டுக் கொள்கைதான் மக்களின் வாழ்க்கையை உயர்த்த வல்ல மாமருந்து என ஏற்றுப் போற்றியவர்கள்.

சரண்சிங், முலாயம்சிங், மாயாவதி, வி.பி.சிங் முதலிய உத்தரப்பிரதேசத் தலைவர்கள் பெரியாரின் நெறியே நாட்டைப் பிழைக்க வைக்க வல்லது என நம்பினர். அதை எவ்வகைத் தயக்கமுமில்லாமல் வெளிப்படுத்தவும் செய்தனர். அய்யாவின் 'சமூகநீதி'க் கொள்கையை நடைமுறைப்படுத்த வி.பி.சிங் இந்திய அரசின் தலைமையமைச்சர் பொறுப்பையே துறக்கத் துணிந்தார்!

## இந்தியப் பெருந்தலைவர்கள் – சிந்தை கவர்ந்த பெரியார்

ஹிரேன் முகர்ஜி, ஜெகஜீவன் ராம், அசோக் மேத்தா, ராம் மனோகர் லோகியா, ஜெயப்பிரகாஷ் நாராயணன் பேராசிரியர் ரங்கா முதலிய முன்னோடித் தலைவர்களெல்லாம் பெரியார் தன்னலம் துறந்து ஆற்றிய மக்கள் தொண்டறம் பற்றி மிக உயர்ந்த சொற்களில் பாராட்டியவர்! இன்னும் மாண்புமிகு தீர்ப்பாளர்களாகப் பணியாற்றிய பலரும் பெரியாரின் பொதுநலத் தொண்டு பற்றி வியந்து புகழ்ந்தமை தனித்தன்மை வாய்ந்ததாகும்!

இந்திய நாடாளுமன்றத்திலேயே "பெரியார் ராமசாமி ஜிந்தாபாத்!" என நாடாளுமன்ற உறுப்பினர்களே கூவும் விந்தை நடந்தது!

பெரியாரின் மறைவுக்குப் பின்னர், அவரின் நூற்றாண்டு விழாவின் போது இந்திய அரசு 50,00000 (அய்ம்பது இலட்சம்) பெரியாரின் உருவம் பொறித்த அஞ்சல் தலைகள் அச்சிட்டுப் புழக்கத்தில் விட்டுப் பெருமைப்படுத்தியது!

பெரியார் மறைந்து பல ஆண்டுகள் ஓடிவிட்ட நிலையிலும் The Hindu எனும் பார்ப்பன நாளேடும் Indian Express எனும் பார்ப்பனியத் தாக்கத்திற்கு உட்பட்ட நாளேடும் இன்றளவுங்கூட நினைவுக் கட்டுரைகள் வெளியிடுகின்றன என்னும் நிலவரம், பெரியார் காலத்தை வென்று கருத்து நிலையில் மக்களிடையே தொடர்ந்து வாழ்ந்து கொண்டிருக்கிறார் எனும் பேருண்மையை உணர்த்தவல்லது. வெளிநாட்டு இதழ்களாகிய Free Thinker, The New Humanist போன்றவை பெரியார் பற்றி கட்டுரைகள் வெளியிடுகின்றன என்னும் நடப்பு பெரியாரின் பேரறிவும் பெருந்தொண்டும் ஞாலத்தால் ஏற்றுப் போற்றப்படும் உண்மையை உறுதிப்படுத்துகின்றது. இன்றைக்குப்

பெரியார் தொண்டறத்தின் பல்வேறு கூறுகளைத் தலைப்புகளாக்கிக் கொண்டு ஆய்வுக் கட்டுரைகள் படைத்து, ஆய்வியல் நிறைஞர் (M.Phil) , முனைவர் (Ph.D) ஆகிய பெருமைக்குரிய பட்டங்களை நூற்றுக்கணக்கான பேர் எய்தியுள்ளனர். இத்தகைய ஆய்வறிஞர்கள் இந்நாட்டில் மட்டுமல்லாது வெளிநாடுகளிலும் உருவாகியுள்ளனர் என்பது பெருமிதத்துடன் குறிப்பிட வேண்டிய செய்தி.

மேலும் பெரியாரின் கருத்துகளை மேற்கோளாகக் காட்டும் கணக்கற்ற நூல்கள் வெளியிடப்பட்டுள்ளமை - ஒப்பீட்டு முறையில் உயர்ந்த பொருள் படைத்தது!

## யுனெஸ்கோ' - உலக மன்றத்தின் பாராட்டு விருதுப் பட்டயம்

அமெரிக்க வரலாற்றறிஞர் ஜான் ரெய்லி என்பார் "கழிந்த இரண்டாயிரத்து அய்நூறு ஆண்டுகளில் தென்னிந்தியாவில் ஒரு பெரும் சமுதாயப்புரட்சி நிகழ்ந்துள்ளது. அதை நிறைவேற்றிக் காட்டியவர் பெரியார் இராமசாமி. இதுவே இந்நாட்டின் மூத்த பேராசிரியர்கள் அனைவரின் ஒட்டு மொத்த கருத்து" ("The one and only opinion of all the senior Professors of the United State of America") என 'ஆனந்த விகடன்' துணையாசிரியர் மணியன் அவர்களிடம் நேருரை நிகழ்த்தியமை, எந்த அளவிற்குப் பெரியார் ஞாலப் புகழெய்தினார் என்பதற்கோர் அசைக்க வொண்ணாத சான்று.

இங்கிலாந்து நாட்டு ஃபிலிப்ஸ் ஸ்ப்ராட் என்னும் பயணப் பட்டறிவாளர், "பேரறிவாளர்கள் பெரும்புலவர்கள் என்போர் தோல்வியுற்ற இடத்தில் பெரியார் வெற்றி நாட்டினார். அதற்காக அவர் வற்புறுத்திய அடிப்படைக் கோட்பாடுகள் பகுத்தறிவு, தமிழினம் என்பவையாகும்" என அவர் அறுதியிட்டிருப்பது ஆழ்ந்த தீர்ப்பு என்றே கருதத்தக்கது". (The D.M.K. in power" by Philip Spratt).

பல்வேறு நாடுகளைச் சார்ந்த ஆழ்ந்த சிந்தனையாளர்கள் இவ்வாறு பெரியாரவர்களைப் படம் பிடித்துக் காட்டினர் என்றால், அனைத்து நாட்டுக் கல்வி - அறிவியல் - பண்பாட்டுப் பேரவையை அணி செய்யும் (UNESCO) பல்துறைப் பெரும்புலவர்கள் பெரியாரைப் பாராட்டி வழங்கிய பட்டயம் என்ன பறைசாற்றியது, தெரியுமா?

"The Prophet of the New Age,
The Socrates of South East Asia;
Father of the Social Reform Movement -

And Arch enemy of ignorance, superstitions,
Meaningless customs and base manners"

(தமி) "புதியதோர் உலகின் தொலைநோக்கர்;
தென்கிழக்கு ஆசியாவின் சாக்ரட்டீஸ்;
மக்களாயச் சீர்திருத்த இயக்கத் தந்தை;
அறியாமை, மூடநம்பிக்கைகள், பொருளற்ற
மரபுகள், கீழ்த்தரப் பான்மைகள் ஆகியவற்றின்
முதற் பகைவன்" (27-6-1970)

இப்பட்டம் பெரியாருக்கு வழங்கப்பட்டபோது, "ஏனைய பாராட்டுகளுக்கெல்லாம் நான் தகுதியுடையேன் அல்லன்; ஆனால் முதல் பகைவன் எனக் குறிப்பிடப்பட்டிருப்பதை ஒப்புக் கொள்ளுகிறேன்" என அவர் அறைந்தார் எனும் செய்தி நமக்கு மெய்ச்சிலிர்ப்பை விளைக்கிறதன்றோ?" வாய்மைப் போருக்கென்றும் இளையார்" எனும் புரட்சிக் கவிஞரின் பாராட்டு வரி முழுக்கச் சரி என்பதை எவரும் ஏற்பர்.

'ஞாலப் பெரியார்" எனும் சொல்லாட்சி வெற்றுப் புகழ்ச்சி மொழியன்று. கோவையைச் சார்ந்த தமிழக அறிவியலாளர் முனைவர் சுந்தரராசுலு என்பாரைத் தமிழினம் போதிய அளவிற்குத் தெரிந்து வைத்திருக்க வில்லை. அவர் ஓர் உயிரியல் புலவர். அவர் தனது ஆய்வுச் சுற்றுப் பயணங்களின் போது காண நேர்ந்த ஒருவகைப் புழு பற்றித் தன் உடன் ஆய்வுச் சுற்றத்தினருடன் கூடிக் கலந்தாய்வு நடத்தினார். இறுதியில் கூர்தலறக் கோட்பாட்டின் உயிரியல் வரலாற்று வளர்ச்சிப்படிகளின் வரைவின்படி முனைவர் சுந்ததராசுலு அவர்கள் கண்டுபிடித்த புழுவகையே உயிரியலின் மூலப்புழுவகையாக இருக்க முடியும் என்பதாக அவ்வறிவியலாளர்ப் பெரும் புலவர்கள் அறுதியிட்டனர்.

அறிவியல் உலகே மலைக்கும் வண்ணம் ஓர் அருஞ் செயலைப் பூட்கைப் புலவர் முனைவர் சுந்தரராசுலு அவர்கள் நிறைவேற்றினார். அவர் கண்டுபிடித்த அந்தப் புகழார்ந்த புழுவிற்கு - உயிரியல் கலைவல்லார் ஏற்றுக் கொண்ட அம்மூலப் புழுவிற்கு - 'உயரெண்ணங்கள் மலருஞ் சோலை'யாம் பெரியாரின் பெயரைச் சூட்டிவிட்டார்!

ஆம்; உயிரியல் கலை நுண்ணறிவாளர்களால் ஏற்பிசைவு அளிக்கப்பட்டுள்ள அம்மூலப்புழுவின் அறிவியல் பெயர் 'லோபோ போடஸ் பெரியார்' (LOBO PODUS PERIYAR). அறிவியற் புலவர்களால் இன்று அப்புழு 'பெரியார்' என்றே அழைக்கப்படுகிறது.

அம்முறையில் உயிரியல் எனும் கலை உலகெங்கும் பயிலப்படு மட்டும் 'லோபோ போடஸ் பெரியார்' எனும் பெயர் ஆய்வறிஞர்களாலும் மாணாக்கர்களாலும் பலுக்கப்பட்டுக்கொண்டே இருக்கும்.

இவ்வண்ணமாக - நம் 'இதழாளர் பெரியார்' அவர்கள் காலம் வென்ற ஞாலப் பெரியார் எனப் போற்றப்படுதற்குரியவரே எனும் கருத்துக்கு இரண்டாம் கருத்தோ அட்டியோ இருக்க முடியுமா?

## மதிப்பாய்வு

இவ்வளவு பெருமையும் புகழும் தம்மை வந்து எய்தும் வண்ணம் இதழ்களின் துணை கொண்டு மக்களினத் தொண்டாற்றியவர் இதழாளர் பெரியார்.

"சரியான கட்டடம் எழுப்பப்படுவதற்கு மேல்விட்டங்கள் உத்திரங்கள் எவ்வளவு தேவையோ. அதைவிட இன்றியமையாதவை சரியான சமூகத்தைச் சமைப்பதற்குத் தாளிகைகள் பத்திரிகைகள் ஆகும்.

ஒரு சரியான சமுதாயம் எந்த வகையாக அமைக்கப்பட வேண்டுமென்பதை எடுத்துரைத்து, மக்கள் மனத்தை மாற்றிக் கொண்டே இருக்க வேண்டியது இன்றியமையாத வேலையாகும். 18 கோடி பாமரர்களைப் பாழான 'ட்ஸார்' ஆட்சியிலிருந்து பெற்றோம்.

அந்த மக்களின் பெரும்பகுதி படிப்பென்பதையே அறியாதவர்கள். மற்றைய நாடுகளின் நாகரிகத்தில் நான்கில் ஒரு பங்கைக் கூடப் பார்க்காதவர்கள். அவர்களைக் கொண்டு ஆக்க வேலையின் அடிப்படையை அசையாது அமைக்க வேண்டியது நம் பத்திரிகைகளின் கடமை. தங்களின் பொறுப்பு எத்தகையது என்பதை உணர மக்களுக்கு மதியூட்ட வேண்டும். புதிய சமுதாயத்தின் முறைகளை அவர்கட்குக் கற்பிக்க வேண்டும்.

வானத்தை நோக்கி வரம் வாங்கி வாழ்வு நடத்துவதில் வைத்திருக்கும் பாழான நோக்கம் பட்டு வீழ, பகுத்தறிவுச் சுடர் பற்றி எரியப் பத்திரிகைகள் பாடுபட வேண்டும். சுருங்கச் சொன்னால், மக்களின் புதிய வாழ்க்கையின் ஒவ்வொரு கூறும் தாளிகைகளின் மூலம் காக்கப்பட வேண்டும்; கண்காணிக்கப்பட வேண்டும்!" புதியதோர் உலகு செய்யப் புறப்பட்ட புரட்சிக்காரர் இலெனின் அவர்கள் வழங்கிய கருத்துரை இது. (குடிஅரசு: 28-2-1948).

"ஏற்றமுறச் செய்வதும் மாற்றமுறச் செய்வதும் ஏடேயாகும்!" என்பது புரட்சிப் பாவேந்தர் பாரதிதாசனாரின் வரும் பொருள் காட்டும் பாட்டு.

இதழாளர் பெரியாரின் தொண்டறச் சிறப்பை எடை போட்டு மதிப்பாய்வு செய்ய ஆர்வப்படும் எவருக்கும் மேற்சுட்டிய

இரு பெருமக்களின் ஆழமான உயர்மொழிகளும் உதவி பண்ண வல்லவை.

மேற்குறித்த நிறைவேற்றங்களையும், தனித்தன்மைகள் நிரம்பிய நம் 'தெய்வீகத் திருநாட்'டின் தட்ப-வெப்ப நிலைகளைச் செம்மைப் படுத்த இன்றியமையா நிறைவேற்றங்களையும் முடித்து காட்டப் பெரியார் எடுத்துக் கொண்ட முயற்சிகளும் மேற்கொண்ட நடவடிக்கைகளும் உறுதி குலையா உழைப்பும் மதிப்பாய்வில் கணக்கில் கொள்ளப்படுவது இயல்பானதே.

ஆயினும், அவர் எவருடன் வாய்மைப்போர் நிகழ்த்த வேண்டியிருந்தது என்னும் பேருண்மையை ஆழமாகக் கருதாமல், அரை குறையாக - ஏனோ தானோ வென்று பயன்படுத்தித் தள்ளிவிட்டால், மதிப்பாய்வு செம்மையும் முழுமையும் பெற்றதாய் ஆகிவிடாது.

அய்யாவின் அரு முயற்சிகட்கு முட்டுக்கட்டையாக வாய்த்தவர்கள், அவரை ஒழித்துக்கட்டியே ஆக வேண்டும் எனச் சூழ்ச்சிகள் புரிந்தோர். "கட்டையிலே போக!" எனச் 'சாபம்' வீசியோர், ஊடக வகைகள் அத்தனையையும் பெரியாருக்கு எதிர்ப்பாகப் பயன்படுத்தியோர் ஆகிய பார்ப்பனர் என்னும் சிறுபான்மையினரே.

அவர்களின் வலு எத்தகையது? இதோ S. ELIOT எனுமோர் ஆய்வறிஞரின் பொருத்தமான திறனாய்வு:

"Brahmins are not an imperium in imperio; but an imperium super imperio".

பார்ப்பனர் வல்லாட்சிகளுக்குக் கட்டுப்பட்ட வல்லாட்சியாளர்கள் அல்லர்; அவர்கள் வல்லாட்சிகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட வல்லதிகாரிகளாவர் என்னும் எலியட் அவர்களின் ஆய்வுக் கருத்துதான் என்னே!

அப்படிப்பட்ட வல்லதிகாரம் படைத்த அக்காலப் பார்ப்பனர் தாங்கள் இலக்கணப் படுத்தியிருந்த ஸரஸ - ஸாம - தான - பேத - தண்ட உத்திகள் அத்தனையும் கையாண்டு பெரியாரின் புரட்சி இயக்கத்தைச் சாய்த்து விடலாம் என நம்பினர். தங்களின் ரத - கஜ - துரக - பதாதிகள் என்னும் படைகளின் துணை கொண்டு இயக்கத்தை மாய்த்து விட அரும்பாடுபட்டனர். எனினும் என்ன? வாய்மைப் போர் மறவர் அய்யா அவர்கள்தாம் காலம் வென்ற ஞாலப் பெரியாராக மிளிரும் நிலை வாய்த்தது எனும் மன்பதை முழுதும் ஒப்பும் அழியாத வரலாறு நிகழ்ந்து விட்டது!

இனி, நூற் செய்திகளைக் கருதிப் பார்த்து, தமிழினக் காத்தருளி தந்தை பெரியாரின் இதழியல் தொண்டுகளை மதிப்பாய்வு பண்ணி, தீர்மானம் வரையும் உரிமை உங்களுக்கே!

******

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600 113
## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| பாரதியின் சமுதாயச் சிந்தனைகள் | 25.00 |
| இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் சித்திரிக்கும் அறியப்படாத வாழ்வும் பண்பாடும் | 40.00 |
| பண்டைத் தமிழக வரைவுகளும் குறியீடுகளும் | 80.00 |
| சங்கத் தமிழர் வாழ்வியல் | 100.00 |
| தமிமெனப்படுவது | 115.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கணம் & மொழியியல் | 105.00 |
| வலங்கைமாலையும் சான்றோர் சமூகச் செப்பேடுகளும் | 70.00 |
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| Agreement in Dravidian Languages | 100.00 |
| சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கியம் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| கருவூரார் பல திரட்டு | 70.00 |
| தமிழ் மொழியின் வரலாறு | 30.00 |
| சங்ககாலக் காசு இயல் | 30.00 |
| பாரதி இந்தியா | 40.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |
| மபொசியின் பார்வையில் தமிழ்மொழி இலக்கியம் பண்பாடு | 30.00 |
| தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளை | 50.00 |
| அருந்தமிழ் நூற் காவலர் அடிகளார் | 50.00 |
| விவிலியத் தமிழ் | 40.00 |
| ஆராய்ச்சிப் பேரறிஞர் திவை. சதாசிவ பண்டாரத்தார் | 45.00 |
| பாரத வெண்பா | 80.00 |
| நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் | 50.00 |
| அருந்தமிழ் அறிஞர் அ.ச.ஞா | 50.00 |
| தட்சிணாமூர்த்தி குருமுகம் 100 | 50.00 |
| Studies in Manimekalai | 70.00 |
| தமிழெழுத்தின் வரிவடிவம் | 30.00 |
| திராவிடமொழி இலக்கியங்கள் | 180.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| நாவல் கலையியல் | 50.00 |
| நாடகவியல் | 70.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் - 3 தொகுதிகள் | 260.00 |
| குமரமலைப் பிள்ளைத் தமிழ் | 75.00 |
| தென்னிந்திய மருத்துவ வரலாறு | 115.00 |

**542. இதழாளர் பெரியார் 160.00**